# சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு

## (பாகம்—I)

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்

மா. பாலசுப்ரமணியன், எம். ஏ. (வரலாறு),
எம். ஏ. (ஆங்கிலம்), D. G. T.
விரிவுரையாளர். வரலாற்றுத்துறை,
வ. உ. சிதம்பரம் கல்லூரி,
தூத்துக்குடி.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த். பா. நி. (க. வெ.) வரிசை எண்—787

# சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு

## (பாகம்—1)

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்

மா. பாலசுப்ரமணியன், எம். ஏ. (வரலாறு),

எம். ஏ. (ஆங்கிலம்), D. G. T.

விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,

வ. உ. சிதம்பரம் கல்லூரி,

தூத்துக்குடி.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1978
Number of Copies—2000

T.N.T.B.S. (C. P.) No. 787



A POLITICAL AND CULTURAL HISTORY OF CHOLAS

Part-I

M. BALASUBRAMANIAN

Price Rs. 12-95

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
MUTHUKUMARAN PRESS
14—A, Kuppier Street,
Madras—1.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினேழாண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய் துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்று விப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளி யியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறு வனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு-பாகம் I என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறு வனத்தின் 787 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 822 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற்பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில் நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியர் பெருமக்களையும் மாண வர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக.

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

# 1. சோழர்—பெயர்க் காரணமும் வரலாற்றுச் சான்றுகளும்

தமிழகம் வளர்த்த பழம்பெரும் நாகரிகத்தின் உயிராக்கமாகச் சேரர், சோழர், பாண்டியர் விளங்கினர். சேரன், சோழன், பாண்டியன் என்ற பெயர்களைத் தாங்கிய மூன்று சகோதரர்களுடைய வழிவந்த குலங்களை அவரவர்கள் பெயர்களையிட்டு அழைத்ததையே அவை குறிக்கும் என அறிஞர் கால்டுவெல் குறிப்பிடுகின்றார். வள்ளுவத்திற்கு உரை கண்ட பரிமேலழகர் "சோழன்' என்பது ஆதிகாலத்திலிருந்து தொன்றுதொட்டு வருகின்ற ஒரு 'பழங்குடி' என்ற அளவில் கூறி அமைகிறார் (குறள் -955).

நிலத்தை அகழ்தலைக் கிள்ளுதல் என்று கொண்டால், அவ்வாறு நிலம் அகழ்ந்து வேளாண்மை செய்து வளம் கொண்ட செய்தொழில் சிறப்பை ஏற்று நிற்கின்ற கிள்ளி என்ற பொதுமைப் பெயரைச் சூடிக்கொண்ட மன்னர்கள் சோழராவர். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி போன்ற மன்னர்களின் இயற்பெயர்கள் இக் கருத்தினை வலியுறுத்தும். கிள்ளிவளவன் என்ற இயற்பெயரோடு விளங்குகின்ற சோழ மன்னனுக்கு அமைந்த 'கிள்ளி' என்ற பெயரோடு காவிரியின் வளத்தைச் சுட்டிக் காட்டுகின்ற 'வளவன்' என்ற பெயரும் வழங்கி வந்ததைக் காண்கிறோம். புத்தமத ஜாதகக் (Jataka) கதைகளில் குறிக்கப்பெறும் சிபிச் சக்கரவர்த்தியின் வழித்தோன்றல்கள் இச் சோழர்கள் என்பதற்கு இலக்காகச் 'செம்பியன்' பட்டத்தைச் சோழ மன்னர்கள் பெருமையோடு ஏற்றிருந்தார்கள்; செம்பியன் என்று அழைக்கப் பட்ட புராணச் சிறப்பை மேற்கொண்டார்கள். பாண்டியரின் "செழியன்' என்ற அடைமொழி உலகியலைச் சார்ந்ததாகும்.

மொழி வல்லுநரின் குறிப்புப்படி சோழன் என்ற பெயருக்குச் சமஸ்கிருதச் சொல்லான காலா (பின்பு கோலா) என்பது தென்னாட்டவரைக் குறிக்கின்ற முறையில் அமைந்திருந்தது. ஜெரினி என்ற ஆராய்ச்சியாளர் இந்தக் கருத்தைக் கூறி, ஆரியர் வருகைக்கு முன்பே இருந்த தென்னிந்தியர்கள் 'கருநிறக்

கோலர்கள் ' என்றும், பின்னர் அவர்களே ' சோழர்கள் ' என அழைக்கப்பட்டார்கள் என்றும் கூறுவார். தானிய வகையான சோளத்தையோ, வடமொழியில் ' கள்வன் ' என்ற சொல்லுக்குச் சமமான ' சோரா ' (Cora) என்பதையோ சோழர் என்ற சொல் குறிக்கும் என்ற இரண்டு கருத்துகள் வழங்கப் பெறுகின்றன.

சோழர்களின் அரச இலச்சினை புலியாகும். வயல் வெளிப் பரப்பு பெருமளவிற்கு அமைந்த காடற்ற சோழநாட்டுக்குக் கானகத்துப்புலி அந்நாட்டின் அடையாளக் குறிப்பாக அமைந்து போனது வியப்புக்குரிய செய்தியாகும். இப் புலி இலச்சினையின் தோற்றம் பற்றித் தமிழ் இலக்கியம் விளக்கம் ஏதும் கூறவில்லை. தெலுங்கு நாட்டில் சில குறுநில மன்னர்கள் தங்களைக் கரிகாலனின் வழித்தோன்றல்கள் என்று கூறிக்கொண்டு சிங்க இலச்சினையைப் பிற்காலத்தில் பயன்படுத்தி வந்தார்கள். மகாபாஷ்யத்தில் அதன் ஆசிரியரான இலக்கிய நிபுணன் காத்தியாயனர் சோழர் பற்றிக் குறிப்பிட்டுச் செல்கிறான்.

மௌரியப் பேரரசன் அசோகன் (கி.மு. 273—230) காலத்திய கல்வெட்டுகளில் பாண்டியர்களோடு சோழர்களும் குறிப்பிடப் படுகின்றார்கள் மௌரியரிடம் பகைமை பாராட்டாதவர்கள் என்று குறிக்கப்பெறும் தமிழக மன்னர்களைப் பற்றிய இந்த நேரடிக் குறிப்பு கிறிஸ்து சகாப்தத்திற்கு முந்தைய வரலாற்றுத் தடயம் என்ற முறையில் முக்கியமானதாகும். இந்த மௌரியர்களைப் பற்றிச் சங்க காலத்திய புலவரான மாமூலனார் தமது பாடலில் (அகம்-281) வடபுலத்திலிருந்து தமிழகத்தின் வட பகுதிக்குத் தங்கள் தேர்களோடு வந்து சேர்ந்த 'வம்ப மௌரிய'ப் படைஞரைக் கடிந்து கூறுகிறார். இப் படையெழுச்சி அசோகனின் காலத்திற்கு முந்தியது ; அவன் தந்தை பிந்துசாரன் தென்னிந்தியாவில் மேற்கொண்ட படையெழுச்சியின் தொடர்பாகத்தான் இத்தகைய வம்ப மௌரியர் வருகை நிகழ்கிறது. மௌரியப்பேரரசின் தென்பகுதிக் காவலரான ' சொன்ன சொல் காப்பவர் ' என்று பெயர் பெற்றிருந்த ' வாய்மொழிக் கோசர் ' களின் துடுக்குத்தனத்தை எதிர்த்து நின்ற வடஆர்க்காடு மோகூர்ப்பகுதி மன்னனுடைய போர்த்திறனைப் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன. போரிடுவதில் பெருவிருப்பமுள்ள கோசர்களுக்கு வழிகாட்டி வந்த படைவினைஞரான வடுகரைப் பற்றிய செய்தியும், மோகரின் இராணுவ வெற்றியும் பின் குறிப்புகளாக வருகின்றன. இவ்வாறு தமிழகத்தைத் தெரிந்து வைத்திருந்த மௌரியரின் வழிவந்த அசோகன் காவிரி மைந்தர்க

ளான சோழரை அப் பெயரிட்டு அழைத்த நிகழ்ச்சி நிகழ்ந்து 2300 ஆண்டுகள் கடந்துவிட்டன என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

பௌத்த சமயத்தின் பயிற்சி மொழி பாலி (வடபுலத்து மொழி) ஆகும். இதிலுள்ள இலக்கியச் சான்றுகளின்படி காவேரிப்பட்டினம் வரலாற்றுத் தெளிவோடு விளக்கமுறுகிறது. 'மாலிந்தன் என்ற அரசனின் வினாக்கள்' (புத்த மதச் சார்புடையது) என்ற கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் எழுதப்பட்ட நூலில் 'கோலப்பட்டணம்' என்ற குறிப்பு வருகிறது. ரைஸ் டேவிட்ஸ் என்ற இந்திய வரலாற்றை எழுதிய ஆசிரியர் இந்த நகரமானது சோழ மண்டலத்தைச் சேர்ந்ததன்றுமாகுக, மன்னார் வளைகுடாவிலுள்ள கோர மண்டலம் (Cora-mandal) என்று அழைக்கப்பெறும் பவளக்கரையில் (நெல்லை மாவட்டம்) அமைந்திருந்தது என்று அபிப்பிராயப்படுகிறார்.

புத்த சமய ஜாதகக் கதைகளில் வருகின்ற ஆகித்தி எனப் படுபவர் காசி நகரத்தின் அண்மையில் வசித்த நாளையில் அவர்தம் அன்பர்களினால் ஏற்பட்ட அன்புத் தொல்லைகளிலிருந்து தப்புவதற்காகத் தமிழ்நாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தின் அருகிலுள்ள ஒரு சோலையில் தங்கியிருந்தார் என்ற செய்தி குறிப்பிடப்படுகிறது. ஜாதகக் கதையில் வருகின்ற இக் காவிரிப்பட்டினமும் பாலிமொழி இலக்கியத்தில் குறிக்கப்பெறும் காவிரிப்பூம்பட்டினமும் ஒன்றாக இருப்பதற்கு வாய்ப்பு உண்டென்றால், சோழ நாட்டைப் பற்றிய குறிப்பு கி.பி. முதல் நூற்றாண்டிலேயே இந்தியக் குறிப்பாசிரியர்களால் உணரப் பட்டது என்று கொள்ளல் வேண்டும். கோவூர்கிழார், பொத்தி யார் போன்ற முதுபெரும் புலவர்களின் பாடல்கள் அடங்கிய அகநானூறு, புறநானூறு பாடல் தொகுப்புகளில் காணப்படு கின்ற சோழ மன்னரைப் பற்றிய குறிப்புகள் வரலாற்றுப் படைப்புக்குப் பெரிதும் துணை செய்கின்றன. உருத்திரங் கண்ணனார் எழுதிய பட்டினப்பாலையிலும், மணிமேகலையிலும், சிலப்பதிகாரத்திலும் சோழர் கால மக்கள் வாழ்வு பரவலாகக் காணப்படுகிறது. சங்க காலத்திற்கு அப்பால் களப்பிரர் என்ற போரார்வக் கூட்டத்தினர் தமிழகத்தைக் கி.பி.300 அளவில் கைக் கொண்டபோது தமிழக வரலாற்றின் இருண்ட காலம் தொடங்கு கிறது. ஆனாலும், புத்ததத்தர் என்பவர் காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றி 'அபிதம்ம அவதாரம்' என்ற நூலில் விரிவாகக் கூறுகின்றார். காவிரிப் படுகையில் உள்ள பூதமங்கலம் சோழ நாட்டின் அச்சாணியாக விளங்கிய நகரம் ஆகும். இந் நகரத்தில்

உள்ள வெங்குதாசா என்ற புத்த மடத்தில் தங்கியிருந்தபோது 'விநய வினிச்சயம்' என்ற நூலை எழுதியதாகப் புத்ததத்தர் குறிப்பிடுகிறார். இந் நூலைச் சேர, சோழ, பாண்டிய வேந்தர்களைச் சிறைப்பிடித்து வைத்திருந்த 'அச்சுத விக்கந்தன்' என்ற களப்பிர குல அரசன் தமிழகத்தை ஆண்ட நாளில் தன்னளவில் எழுதி முடித்ததாக அவர் குறிப்பிடுகிறார். கி.பி. 639-லிருந்து 640-வரை அமராவதியிலும் காஞ்சிபுரத்திலும் சில மாதங்கள் தங்கியிருந்த சீன நாட்டுப் புத்த யாத்திரிகர் யுவான் சுவாங் 'சோழியா' (சோழன்) என்பவனுக்கு உரிய நாட்டைக் கடந்து சென்றதாகக் குறிப்பிடுகிறார். கி. பி. 222-ல் எழுதப்பட்ட பாடிங்கேரியன் அட்டவணை (Peutingerian tables) தமிழகத்தின் மேற்குக் கடற்கரையில் உரோமப் பேரரசன் அகஸ்டசுக்கு எழுப்பப்பட்ட கோவிலைக் குறிப்பிடுகின்ற முறையில் தமிழகத்தைப் பற்றி அறிவிக்கின்றது.

## வெளி நாட்டவர் குறிப்புகள்

இலங்கையின் வரலாற்று ஏடான புத்தமத மகாவம்சத்தில் கி. பி. 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மகாநாமன் என்ற வரலாற்றாசிரியர் எழுதிய பகுதியில் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த சோழரின் இலங்கைப் படையெடுப்பும், அதன் பயனாக ஏற்பட்ட ஆட்சியும் குறிப்பிடப்படுகின்றன. நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த இந் நிகழ்ச்சிகளைக் கூற வருகின்ற இவரிடம், பல நூற்றாண்டுகளாகப் பரவலாகக் காணப்பெற்ற செய்திகளை ஒருமுகப்படுத்தி இரண்டாம் நூற்றாண்டிற்கு ஏற்றிச் சொல்கின்ற வரலாற்றுப் பிழையை நாம் கண்டுகொள்ள முடிகிறது. ஏனென்றால், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் தமிழகத்திலிருந்து இலங்கையில் தனது படைத்திறனின் உதவியால் அரசனாக மாறி நின்ற ஏழாரன் என்ற மேற்குடிச் சோழத் தமிழ் மகனின் அரசியல் சாதனைகளில் மனுநீதிச் சோழனின் 'மகனை முறை செய்த' நீதி நிறை உணர்ச்சியை உள்ளிட்டுக் காட்டுகிறார். படைக்கலம் கொண்டு இலங்கைத் தீவின் வடபகுதியை வென்று நண்பனுக்கும் பகைவனுக்கும் சமன் செய்து சீர்தூக்கிய நீதியை வழங்கி நின்ற அரசை 46 ஆண்டுகள் கட்டிக்காத்த பெருமை ஏழாரன் என்ற வினைத்திறன் மிக்க இச் சோழனைச் சாரும். தந்தை சொல் கேளாத மகனை துத்தகாமணி என்ற இலங்கை இளவரசன் ஏழாரனின் அரசியல் ஆக்கத்திற்கு இராணுவ எதிர்ப்புத் தெரிவிக்கின்றான். அன்னியரின் பிடிப்பிலிருந்து அரசியல் விடுதலை பெற, புத்த சமயத்திற்குப் புறம்பான சமயச் சார்புடைய சோழரின் பிடிப்பிலிருந்து மீட்சி அடையத் துத்தகாமணி, சோழர்

தலைமையில் செயல்பட்டு நின்ற தமிழர்களை அனுராதபுரம் கோட்டை மதிற்சுவர்வரை விரட்டிச் செல்கிறான்.

ஆங்கு நிகழ்ந்த மோதலில் ஏழாரன் இறந்துபடுகின்றான். இவன் வீழ்ந்துபட்ட இடத்தில் மண்டபம் ஒன்றை நிறுவி, அதற்கான விழா நிகழ்ச்சிக்குச் சுற்றுவட்டார மக்களை ஈடுபடுத்திப் பகைவனுக்கும் சிறப்பு செய்த துத்தகாமணி உள்ளப் பாங்கில் உயர்ந்து நிற்கின்றான். தமிழகத்தின் சோழப் பகுதியிலிருந்து ஈழம் வந்து வன்முறை வழியில் அரசு கவர்ந்துதன் ஆட்சியையும் உயிரையும் இழந்துபோன ஏழாரனை 'வானுறையும் தெய்வத்துள் வைக்கப்பெற்ற' நிலைக்கு உயர்த்தி மக்களால் வழிபடவும் வைத்தான் துத்தகாமணி. தன்னைப் போன்ற அரசிளங்குமாரர்கள் ஏழாரனின் கல்லறையை அணுகுகின்ற போது தங்களது பல்லியங்களை அமைதியுறச் செய்து கௌரவம் வழங்க வேண்டும் என்ற நெறிமுறையை அவன் உருவாக்குகின்றான். மகாவம்சம் குறிப்படுகின்ற இச்சோழப் படையெழுச்சியும் அரச அமைப்பும் சோழக் குலத்தவரின் பண்டைக் கால எழுச்சிக்கும், வினைத்திட்பத்திற்கும் எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. சோழர் என்ற நேரடியான பெயர்க் குறிப்போடு வருகின்ற இக்குறிப்புகள் சோழ வரலாற்றிற்குரிய அரிய செய்திகளை வழங்குகின்றன.

## 1. பெரிப்ளூஸ் (Periplus Maris Erythraei) 80 A. D.

கி பி. 81—96 காலத்தே வாழ்ந்த எகிப்து நாட்டு அலெக்சாந்திரிய நகரத்தான் ஒருவன் (பெயர் தெரியவில்லை) பெரிப்ளூஸ் என்ற தன் நூலில் தமிழகத்தைப் பற்றிய பல செய்திகளைச் சொல்லிச் செல்கிறான். கோல்சக்கு அப்பால் கடலைச் சார்ந்த கோட்டம் ஒன்றும், ஆற்கா என்ற உள்நாட்டுக் கோட்டம் ஒன்றும் இருந்தன என்று அவன் கூறுகின்றான். இவற்றையே புகார்க் கோட்டமாகவும், உறையூர்க் கோட்டமாகவும் கொள்ளலாம். 'சேர புத்திரன்', 'பாண்டியன்' என்ற இரு குறிப்புகள் மட்டும் இந்நூலில் உண்டு; 'சோழன்' என்ற பெயரிட்டு அழைக்கின்ற செய்தி இல்லை. கமாரா, குலோத்துகா, சோலோத்மா என்ற துறைமுகங்களைப் பற்றிய குறிப்பில் சோலோத்மா என்பது ஒரு சோழப் பட்டினமாகும். இதனையே தமிழ் இலக்கியம் மரக்காணம் என்று சுட்டிக்காட்டும் என்று பேராசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி தம்முடைய 'சோழர்கள்' என்ற அறிவாய்ந்த நூலில் குறிப்பிடுகிறார்.[1]

[1] 'Cholas'—1955, p.22

**2. தாலமி (Ptolemy) 130 A. D. பிளினி (Pliny) 77 A.D.**

இவ் வரலாற்றுசிரியன் உரோம் நகரத்தைச் சார்ந்தவன். காலம் கி. பி. 130. கப்பாரிஸ் என்று காவிரிப்பூம்பட்டினத்தையும், நிகாரி என்று நாகப்பட்டினத்தையும் இவன் குறிப்பிடுகின்றான். சோரா என்ற நாடோடி மக்களின் 'சோரா' என்ற தலைநகர் 'ஆர்க்கட்டாஸ்' என்றும் அழைக்கப்பெற்று இருந்ததைப் பற்றிய குறிப்பும் வருகின்றது. அழிசி என்ற சோழ இளவரசனுடைய ஆர்க்காடு என்ற குடியிருப்பு நெல்வயலால் சூழப் பெற்று இருந்தது என்பதை நற்றிணை (பாடல் 190) கூறும். 'ஆர்' அல்லது 'ஆர்த்தி' என்பது சோழனுக்கு உரியது. (சோழ மரபினர் ஆத்தி மாலை அணியவர்தாமே!) 'ஆர்' செறிந்த கானகம் ஆர்க்காடு என்று வரும். தற்காலத்திய ஆர்க்காடு நகரமாக இதைக் கொள்ளுவதற்குரிய வாய்ப்பு அவ்வளவாக இல்லை. 'சோரை' என்ற நாடோடி மக்கள் சோழர் என்று வழங்கப்பெற்றால், தாலமியின் குறிப்பு வரலாற்றுக்கு ஒரு வடிவம் கொடுக்க முற்படும். கரிகால் சோழன் ஆர்க்காட்டுப் பகுதியில் ஆதிவாசி மக்களைக் குடியிருத்தி வேளாண்மையில் ஈடுபடுத்தினான் என்ற வரலாற்றுச் செய்தியோடு தாலமியின் குறிப்பை இணைத்துப் பார்க்க வேண்டும். உரோம் நகரைச் சேர்ந்த மற்றோர் ஆசிரியன் பிளினி ஆவான். 'நமது ஆடம்பரத்திற்காகவும் நமது பெண்களுக்காகவும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களுக்காக ஏராளமான செல்வம் உரோம் நாட்டை விட்டுச் செல்கிறதே' என அவன் தனது நூலில் சொல்லி, பல குறிப்புகளை வழங்குகிறான். கி. மு. 30-லிருந்து கி. பி. 550 வரையுள்ள கீழைநாட்டுத் தொடர்புகளைப் பற்றிய செய்திகளில் தாலமியும் பிளினியும் தருகின்ற வரலாற்றுப் பார்வைச் செய்திகள் பல உண்டு.

**3. திறனாய்வு**

வெளி நாட்டவரோடு சோழ மக்கள் கொண்ட அரசியல், வாணிபத் தொடர்புகளைப் பற்றிய பல செய்திகளைச் சங்க கால நூல்களில் நாம் ஒப்புமை உணர்வோடு கணிக்கின்ற அளவில் பரவலாகக் காண்கிறோம். காவிரிப்பூம்பட்டினத்திலும், பாண்டிச்சேரி பக்கமுள்ள அரிக்காமேட்டிலும்[2], பாண்டிய நாட்டுக் கடற்கரைத் தலைநகரான கொற்கையிலும் கிடைக்கப் பெற்ற வெளிநாட்டு நாணயங்கள் தமிழகம் பிற நாட்டோடு கொண்டிருந்த தொடர்பைக் குறிப்பிடுகின்றன. தமிழ் மன்னர்களின் அரண்மனைகளில் வெளி நாட்டவர்களான ஐரோப்பிய

[2] K. Mukerjee — 'Ancient India'. 1956, p. 451

யவனர்கள் காவல் காத்தார்கள். அதோடு அல்லாமல் போர்க்களத்தின் அருகே தங்கியிருந்த அவ்வரசர்களின் பாசறைகளில் இத்தகைய யவனர்கள் அவ்வரசர்களைப் பாதுகாத்து அரசாங்கக் கடமை ஆற்றிய பெருமை பற்றி முல்லைப் பாட்டுக் கூறுகிறது: 'மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை—மெய்ப்பைபுக்கு வெருவரும் தோற்றத்து—வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்—புலித் தொடர்விட்ட புனைமாணல்லில்—திருமணி விளக்கங் காட்டித் திருஞாண்—எழினி வாங்கிய வீரறைப் பள்ளியுள்' உறங்கிய மன்னனைப் பாதுகாத்தனர். இவ்வளவு நெருக்கத்துடன் அரண்மனையிலும் போர்க்களத்திலும் கூட மன்னனோடு ஒட்டியிருக்கின்ற பற்றுதலை வளர்த்துக் கொண்ட யவனர்கள் தங்களுடைய அனுபவங்களைப் பற்றிய குறிப்புரைகளை உருப்படியான முறையில் நமக்கு வழங்கியிருக்கவில்லை. வெளிநாட்டுக்குப் படைநடத்திச் சென்ற ஜூலியஸ் சீஸர் தனது வாழ்க்கை வரலாற்றை எழுதுகின்ற அளவிற்கு வரலாற்று உணர்வைக் (sense of history) கொண்டிருந்தவன் ஆவான். அவன் பிறந்த உரோம நாட்டையும், அவனுடைய ஐரோப்பிய இனத்தையும் சேர்ந்த யவனர்கள் 'படம்புகு யவனர்கள்' என்றபடி சட்டையணிந்த அன்னியர்களாகத் தமிழ்நாட்டில் தாங்கள் மேற்கொண்ட வாழ்வைப் பற்றிய செய்திகளைத் தமிழக வரலாற்றுக்கு வகையான முறையில் நமக்கு வழங்காதது தமிழக வரலாற்றின் உருவாக்கத்திற்கு ஏற்பட்ட குறைபாடு என நாம் கொள்ளலாம்.

அக் கால அரசியல் நிலைமையின்படி அன்னியர்களாகவே கருதப்பட்ட வடபுலத்து மகத சாம்ராஜ்யத்தின் தனிப் பெரும் மாமன்னனான அசோகன் தன்னுடைய இரண்டு, எட்டாம் கல்வெட்டுப் பிரகடனங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட பாண்டியர்களையும் சோழர்களையும் தன் நேசத்திற்கு உரியவர்கள் என்று பன்மையில் குறிப்பிடுகின்றான். அசோகன் காலத்திற்கு முன்பு தமிழகத்தின்மேல் படையெடுத்து வந்த 'வம்ப மௌரியரை'ப் பற்றிப் புறநானூற்றில் குறிப்பிடப்பட்டிருப்பது போல, மௌரிய நாட்டில் காணப்பெறுகின்ற வரலாற்றுக் குறிப்புகளில் அவர்கள் படையெடுத்துவந்து புகுந்த தமிழகத்தைப் பற்றிய செய்திகள் குறிப்பிடத்தக்க அளவில் தென்படவில்லை. கிரேக்கத்து ஏதென்ஸில் முகாம் இட்டிருந்த உரோமப் பேரரசன் அகஸ்டஸ் சீஸருக்குக் கி.மு. 22ஆம் ஆண்டில்[3] பாண்டிய மன்னன் அனுப்பி வைத்த தூதுக் குழுவிலுள்ள தமிழர்களைக் 'குறை ஆடை'

3 Robert Sewell — 'Historical Inscriptions of South India' .. (HISI.) 1932, p. 9

உடையவர்கள் என்று சொல்லியதோடு சந்தனம் போன்ற அழகு சாதனங்களை அணிந்து தோற்றப்பொலிவுடன் காணப் பட்டதாகக் குறிக்கின்ற ஸ்ட்ராபோ (Strabo) என்ற உரோம நகரத்து ஆசிரியர் தமிழ்நாட்டைப் பற்றிக் கொடுக்கின்ற குறிப்பு சோழர்களுக்கும் பொருந்தும். வெளிநாடுகளின் வரலாற்று மூலங்களான மகாவம்சம், பெரிப்ளுஸ் போன்ற நூல்களும், தாலமி, ஸ்ட்ராபோ போன்ற வரலாற்று ஆசிரியர்களும் தருகின்ற செய்திகள் எல்லாமே முழுமையான அளவிற்கு அமைந்திருக்க வில்லை. தமிழர்களைப் பற்றிய துணுக்குச் செய்திகளாக அவை யாவும் காணப்படுகின்றன.

கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்பிருந்து தொடங்கி, கி.பி. 300 அளவில் முடிவடைந்த சங்க காலத்தினுடைய பட்டினப்பாலை போன்ற நூல்கள் (1600 ஆண்டுகள் மறக்கடிக்கப்பட்ட வரலாற்று அவலம் முடிவடைந்த பின்பு 19 ஆவது நூற்றாண்டில்) நமக்குக் கிடைத்திராவிட்டால் கி பி முதலாம், இரண்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஸ்ட்ராபோ (கி.பி. 20) கி.பி. 130-க்கு உரிய தாலமி[4] போன்ற வெளி நாட்டவரின் குறிப்புகளைக் கொண்டுதான் சங்ககாலச் சோழ மன்னர்களையும், மக்களையும் பற்றிய வரலாற்றை நாம் உருவாக்க வேண்டியவர்களாக இருப்போம். இந் நிலையில் தமிழகம் பற்றிய வெளி நாட்டவரின் வரலாற்றுச் செய்திகள், தமிழருடைய சொந்த இலக்கியச் சார்புடைய குறிப்புகளோடு இசைகின்ற ஒப்பிடுதிறன் (corroborativeness) கொண்டு விளங்குகின்றன. வரலாற்றுச் சார்பான உண்மையின் ஏற்றம் பெற்ற அளவில் அச் செய்திகள் சோழரைப் பற்றிய பிற நாட்டாரின் பாராட்டாகச் சோழருடைய 2000 ஆண்டுக் காலத்திற்கும் மேம்பட்ட கலாசாரத் தொன் மையை முழக்கமிட்டு நிற்கின்றன என்று சொல்வது பொருந்தும்.

தமிழுக்கு முதல் நூல் எனப்படும் தொல்காப்பியம் இலக்கண நூல் என்றளவிலும் இறையனார் களவியல் உரை அதே போன்ற ஆனால் அதற்குப் பிந்திய நூல் என்ற முறையிலும் சங்க காலத்து மக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிய அடிப்படை யான பல செய்திகளைத் தருகின்றன. கற்பனைக் கதைகளைக் கொண்ட மகாபாரதம் போன்ற இதிகாசங்களிலும் புராணங் களிலுங்கூட வரலாற்றுத் தடயங்களைச் சேகரித்துப் பயன்படுத்த வேண்டும் என்பது ஆங்கில வரலாற்றாசிரியர் வின்சென்ட் ஸ்மித் கருத்து ஆகும்.[5] மனிதர்களையும் அமரர்களாகப் புகழ்ந்தேத்தி

4 Robert Sewell — HISI — 1932, p.9.

5 K.A.N. Sastri — 'A Historical Survey', 1966, p.10

எழுதுகின்ற மனப்பழக்கமுள்ள இந்தியாவில் கடவுளைப்பற்றி அறியாத சாக்ரட்டிஸ் போன்றோரின் சிந்தனைப் போக்கு பயன் தராது.[6] ஆகவே, கரிகாலனைப் பற்றிய புராணச் செய்திகள் (puranic traditions) போன்றவை ஓரளவு பயனுள்ளவைதாம். புரூஸ் ஃபுட் (Bruce Foote) என்பவர் 33 ஆண்டுகளாகச் செய்த அகழ்வாராய்ச்சிகளும், 1916-ல் எழுதி முடித்த அவற்றின் குறிப்புகளும் உலோகக் காலத்துத் தமிழகத்தை மட்டுமல்ல, பிந்திய காலத்தின் செய்திகளையும் கொடுக்க வல்லவை எனப் பேராசிரியர் சாஸ்திரி கூறுகிறார்.[7]

6 K. A. N. Sastri — 'Sources of Inadian History', 1961, p. 14

7 Ibid, p. 50.

# 2. சங்க காலச் சோழ மன்னர்கள் — கோச்செங்கணன் வரை

சோழ மன்னர்களின் வரலாற்றில் முதல் வரிசை மன்னர்களாகச் சிபியும், காந்தனும், செம்பியனும் வருகிறார்கள். இவர்களைப் பற்றிய செய்திகள் அனைத்தும் இலக்கியச் சான்றுகளோடு பின்னிக் கிடக்கின்றன. சிபி ஒரு சோழ மன்னன் ; அவனுடைய இரக்க சிந்தை இதிகாச மதிப்பிற்குரியது என்று பல நிலைகளில் சிபியைச் சிலம்பும் கலிங்கத்துப்பரணியும் புகழ்ந்து பாராட்டுகின்றன. 'துறவு நிறைபுக்குப் பொன்னுலகம் ஏத்தக் குறைவில் உடம்பரிந்த கொற்றவன்' என்று சிலம்பும், 'துலையிற் புறவின் நிறையளித்த சோழர் உரிமைச் சோணாடு' என்று பெரிய புராணமும் சொல்கின்றன. மகாகவி தண்டி (கி.பி. 7 ஆம் நூற்றாண்டு) காவிரி வளம் கொண்ட சோழ நாட்டைச் 'சிபி தேசம்' என்று தாம் இயற்றிய 'தசகுமார வரலாற்றில்' அழைக்கிறார். இலக்கியச் சான்றுகள் அல்லாத நிலையில் சிபியின் மேல் ஏற்றிச் சொல்லப்படும் சோழருடைய பாரம்பரியம் நிலைத்து நிற்பதற்கில்லை.

## 1. முசுகுந்தன்

கருவூரில் சோழ அரசனாக இருந்தவன் முசுகுந்தன். ஆதிசிவனிடம் பற்றுக்கொண்டிருந்த இவன் ஏழு இலிங்கங்களை இந்திரனிடம் பெற்று வந்தான்; அவற்றையே திருவாரூர், திருமறைக்காடு போன்ற ஏழு பதிகளில் நிலைகொள்ளச் செய்தான். அவையே சப்தவிடங்கத் தலங்களாகும். சோழ நாட்டில் சேரரின் கருவூரைச் சேர்ப்பதும், ஏழு இலிங்கங்களை ஏழு இடங்களில் நிறுவியதும் புராண நிலையில் உண்மைகளாக இருக்கலாம். மணிமேகலையும் சிலப்பதிகாரமும், ஒரு துறைக்கோவையும் முசுகுந்தனைப் பூம்புகார் நகரத்தின் வணிகச் சிறப்போடு சேர்த்துப் பார்க்கின்றன. சிபிச் சக்கரவர்த்தி போன்று முசுகுந்தனும் (மனித உடலோடு கூடிய குரங்கு முகத்தோன்) புராணத் தலைவனாகத்தான் தோற்றம் அளிக்கின்றான்.

## 2. காந்தன்

'காந்தன் காவிரி கொணர்ந்தவன்' என்பார் சீத்தலைச் சாத்தனுர். பூம்புகார் நகரத்திற்குக் காகந்தி என்ற பெயருண்டு என்று மணிமேகலை அறிவிக்கின்றது. இவ்வாருக, சோழ நாட்டின் உயிர்நாடிகளான காவிரியையும் காவிரிப்பூம்பட்டினத்தையும் உருவாக்கியவன் என்ற ஒப்பரிய பெருமையைக் காந்தனுக்கு இரண்டாம் நூற்ருண்டுச் சோழ மக்கள் வழங்கினுர்கள்.

## 3. தூங்கெயில் எறிந்த செம்பியன்

வானத்தில் தொங்கிக்கிடந்த மூன்று அரண்களை அழித்த பெரும்வீரன் இச் செம்பியன் என்ற சிலப்பதிகாரச் செய்தி, மாறோக்கத்து நப்பசலையார் என்ற பெண்பாற்புலவரால் மீண்டும் வலியுறுத்தப்படுகிறது (புறம் 31). சிறுபாணுற்றுப்படை போன்ற சங்க நூல்களில் இவனுடைய வானவெளிப் போர் எடுத்துக்காட்டப்படுகிறது. 'தூங்கும் எயில் எறிந்த சோழனும்' என்று பேசும் மூவருலா உள்ளிட்ட மற்றைய இலக்கியக் குறிப்புகளிலிருந்து, மனித சக்திக்கு அப்பாற்பட்ட பேராற்றலோடு வான்வெளியில் போராடி அரண்களை உடைத்தவன் ஒரு சோழன் என்பதில் ஒரு தனிப்பெருமை உருக்கொள்வது உண்மைதான். இச் சோழனுக்குரிய விணத்திட்ப இராணுவப் பேராற்றல் இவனுக்குப்பின் தொடர்ந்துவந்த ஏனைய சோழ மன்னவர்க்குச் சிறந்த ஊக்குதலாக வழிவழியாக நின்று சோழ நாட்டின் விரிவுக்கும் பொலிவிற்கும் காரணமாக அமைந்தது. இது சோழ மன்னரின் மனத்திண்மைக்கு உகந்த செய்தியாகப் பயன்பட்ட நிலையில், முழுமையான வீரவுணர்ச்சிக்குப் பௌதிக வரம்பு கிடையாது என்ற உணர்வாகச் சோழர்களின் போராட்ட நெஞ்சங்களுக்கு உரமேற்றி நின்றது.

## 4. மனுநீதி கண்ட சோழன்

சோழ நாட்டு மன்னன் 'மனு' என்னும் அறவாணன் திருவாரூரில் செங்கோல் ஆட்சி செய்தான். வீதிவிடங்கன் என்ற தன்னுடைய ஒரே மகன் தன்னைப்போன்று சிவநெறியில் ஈடுபட்ட நிலையில் கோவிலுக்குத் தேரில் சென்றபோது, ஒரு பசுவின் கன்று தேர்க்காலில் அகப்பட்டுக்கொண்டது. அது உயிரிழந்தபோது ஒப்பரிய நிலையில், மனுச்சோழன் நீதி வழங்கினுன்; 'மனுநீதி தந்த சோழன்' என்ற பெருஞ்சிறப்புக் குரியவனுனன். மனுவின் ஏற்பாடான அரண்மனை வாயில் ஆராய்ச்சி மணியை, கன்றை இழந்த அப் பசு தன் கொம்பினுல்

அசைத்து அரச நீதிக்கு முறையிட்டது எனவும், 'உயிருக்கும் பதில் உயிர்' என்ற நீதிமுறைமையின்படி தன் 'அரும்பெறற் புதல்வனை ஆழியில் மடித்தோன்' என்ற புகழுக்கு உரியவனாக மனு மாறினான் எனவும் சிலப்பதிகாரமும் பெரிய புராணமும் புராணச் சிறப்புடன்கூடிய இந் நீதியாளனைப் பற்றிச் சொல்லு கின்றன. இதனையே 'மகனை முறை செய்த மன்னன்' என்று மணிமேகலை போற்றுகிறது.

கி.பி. 6ஆம் நூற்றாண்டில் ஈழத்தில் எழுதப்பட்ட மகாவம்சம் என்ற வரலாற்றுத் தொகுப்பில் ஏழாரன் என்ற சோழ மேற்குடி மகனுடைய இலங்கை ஆட்சி பற்றியும், அவனுக்குரிய தலையாய சிறப்பான அறவுணர்வின் காரணமாக, 'தன் மகனையே தேர்க் காலில் இட்டு மடித்தோன்' என்பது பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன. (திரு) ஆரூரான் என்பதன் திரிபுதான் 'ஏழாரன்' என்று கூறுவதும், அவன் அணிந்த ஏழு ஆரங்களை அவன் வெற்றிகொண்ட ஏழு அரசர்களுக்கு அடையாளமாகக் கொள்ளலாம் எனக் கூறுவதும் வரலாற்றுச் சிந்தனைப் போக்கில் வடிவமற்று நிற்கின்ற கற்பனைகளாகத்தாம் நாம் கொள்ள முடியும். வேட்டைப் பொருளான தனக்குரிய புறாவை விரட்டி வந்த பருந்தினுக்கு அப் புறாவின் எடைக்குரிய தன் உடல் சதையினை அரிந்து கொடுக்கின்ற அசாதாரணமான நீதி உணர்ச்சியைச் சிபிச் சக்கரவர்த்திக்கு ஏற்றிச் சொன்னார்கள்; அவனையே சோழ மன்னர் மரபின் தலையாய அரசனாக வரித்தார்கள். இது போன்ற மனித நிலைக்கு அப்பாற்பட்ட உணர்வு வழியில் மனு நீதிச் சோழனுடைய வரலாறும் கற்பனைக் காவியமாக அமைந்திருந்தது.

சுருங்கக் கூறின், சிபியும் மனுவும் சோழ அரசர்களுடைய அரச முறைமைக்கு அடிப்படை மனப் பயிற்சியை வழங்குகின்ற 'உத்தமர்தப் உறவாகக்' காட்சி அளிக்கிறார்கள். அரச முறைமை யில் இலட்சியக் குன்றுகளாக இவர்களைப் படைத்துப் பார்த்துப் பெருமை கொள்வதன் மூலம், சிபிக்கும் மனுவிற்கும் பின்வந்த சோழ மன்னர்கள் அரசியல் நெறிமுறைகளை வானுயர உயர்த்தி, அவற்றையே தங்கள் உள்ளப்பாங்காக மாற்றிக்கொள்ள முற்பட்டார்கள்.

## 5. செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி

சோழர் வரலாற்றில் கால வரையறைக்கு உட்பட்ட நிலையில் காட்சிக்கு எளியவனாக விளங்குகின்ற முதல் மன்னன் இவனே. வரலாற்றுத் தடயங்களோடு இவனுடைய ஆட்சிக் காலத்தில்

நிகழ்ந்த வடக்கத்தியரின் படையெழுச்சி தெளிவுறக் காணப் படுகிறது. இவன் காலத்தில் வந்த வடவர் பாடலிபுத்திரத்தின் மௌரியர் ஆவர். இம் மௌரியர் தென்னிந்தியப் படையெடுப்பில் நேரடியாக முன்னணியில் நிற்காமல் கோசர் என்ற சொன்ன சொல் காக்கும் 'சத்திய புத்திரரை' முன் அனுப்பி இவர்கள் பின்வந்தார்கள். இந் நிலையில் தமிழகத்தில் நிகழ்ந்த மௌரியரின் படை நடவடிக்கைகள் அனைத்தும் கோசர்பால் ஏற்றிச் சொல்லப் படுகின்றன. இக் கோசரை வடவடுகர் என்று புறநானூறு அழைக்கிறது. இவர்கள் கிழக்கு வங்கத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தும் உண்டு. நீலகிரிப் பகுதி அடங்கிய துளுவ நாட்டின் அரசன் நன்னன் என்பான் இவர்களிடம் தோல்வி யுற்றுக் காட்டிற்கு உயிர் தப்பிச் சென்றான்.

தமிழகத்தின் கொடுமுடியாக இருந்த அப் பகுதியில் பாழி என்ற இடத்தில் இந்த கோசர் (வடவடுகர்) அரண்களை வலுப் படுத்திக்கொண்டு அங்கிருந்து தமிழ்நாட்டுக்குள் பாயத் தலைப் பட்டனர். அடுத்து முதிர மலைத் தலைவனான பிட்டன் கொற்றன் என்பவன் அவர்களுடைய அசுரத் தாக்குதலுக்குட்பட்டான். வட்டாறு, செல்லூர் என்ற ஊர்களினுடைய அதிபதியான எழினி ஆதன் கோசரை எதிர்த்து மார்பிலே வேல் தாங்கி இறந்து பட்டான். திதியன் என்பவன் அழுந்தூர் என்ற பகுதியில் ஆண்ட ஒரு வீரம் செறிந்த வேள் ஆவான். இவனிடம் கோசர் தோல்வியுற்றனர். தென் ஆர்க்காட்டுப் பகுதியிலுள்ள ஆத்தூர்க்கணவாயின் அருகிலுள்ள மோகூரை நோக்கி இந்த வடுகக்கோசர் இறங்கிப் பாய்ந்தனர். இவர்களுக்குப் பின்னால் 'வம்ப மௌரியர்' தங்கள் தேர்க் கலங்களைச் செலுத்தி வந்தனர். தேரோட்டத்துக்குத் தக்கநிலையில் மலைகளை வெட்டிப் பாதைகள் சமைத்தனர் என்ற குறிப்பு சங்க நூல்களில் காணப்படு கிறது. இந் நிலையில், சோழ மன்னன் இளஞ்சேட்சென்னி கோசரின் படையெடுப்பை முறியடித்தான்.

தோற்றோடிய கோசரைப் பின்தொடர்ந்து சென்று, அவர்தம் மூலபலமான பாழியையும் வென்றான்; அதன் அரண்களைத் தகர்த்தான்; இதனால்தான் செரு (போர்) பாழி (பாழி என்ற இடத்தை) எறிந்த (வென்ற) இளஞ்சேட்சென்னி என்றழைக்கப் பெறும் பெருமைக்குரியவன் ஆனான். இச் சோழனின் வெற்றி தமிழகத்தின் தலைவிதியை மாற்றியமைத்தது. இவன் தோல்வி அடைந்திருந்தால் மௌரியரின் ஆட்சிக்குத் தமிழகம் உட்பட் டிருக்கக் கூடும். மௌரியரை எதிர்க்கின்ற பணியில் சேரரும் பாண்டியரும் ஈடுபட்டதைப் பற்றித் தமிழிலக்கியச் சான்றுகள்

எதுவும் இல்லை. இதனால் சேர, பாண்டியர் இல்லாது போய் விட்டனர் என்பதற்கு ஆதாரம் இல்லை. ஏனென்றால், மௌரியப் படையெழுச்சி நிகழ்ந்தது கி. மு. 3ஆம் நூற்றாண்டின் காலத்தில் தான். அதன் பின்பு இறங்குமுகமாகக் கணிக்கப் பெறுகின்ற இரண்டாம் நூற்றாண்டில் கலிங்க நாட்டை ஆண்ட காரவேலன் என்ற மன்னன் 113 ஆண்டுகள் ஒருமித்து நின்ற தமிழக அரசர் கூட்டணி ஒன்றைத் தான் சிதைத்ததாகத் தன்னுடைய ஹதிகும்பா கல்வெட்டில் கூறிக்கொள்கிறான். ஆகவே சேர, சோழ, பாண்டியரின் ஒருமித்த எதிர்ப்புக்குத் தலைமை வகித்து நின்ற சோழன் இளஞ்சேட்சென்னி இலக்கிய மரபின்படி தலையாய தன்மை வழங்கப் பெற்றான்.

இவ்வாறு வரலாற்றுப் பார்வைக்கு உட்பட்ட நிலையில் இளஞ்சேட்சென்னி ஆட்சிதான் இலக்கியச் சான்றின் வழி காணக் கிடைக்கின்றது எனலாம். மௌரியப் பேரரசரோடு சம்பந்தப் படுத்தி இவனைப் பற்றி ஏற்படுகின்ற கணிப்பில் சோழ வரலாற்றின் ஆரம்பக்கட்டம் உண்மைத் தன்மையோடு உருவாகி நிற்கிறது. அடுத்து வருகின்றது கரிகால்பெருவளத்தான் ஆட்சி. இதற்கு முந்தைய வரலாற்றுப் பகுதிகளில் காணப்பெறும் மௌரியர் என்ற வடபுலத்து மன்னரைப் பற்றிய குறிப்பு தமிழகத்தில் மட்டும் காணப்பெறுகின்ற இலக்கிய வழிவந்த வரலாற்றுச் செய்தியாகும். தோல்வி அனுபவங்களை வரலாற்றுப் பாதையிலிருந்து விலக்கிச் செல்லும் சாதாரண மனப்போக்கு எங்கும் உண்டு.

எல்லா நாட்டவரையும் போல வடவரும் தங்களுடைய தமிழகப் படையெழுச்சியின் கசப்பான பகுதிகளைக் குறிக்கத் தவறிய நிலையில், சங்க நூல்கள்தாம் நமக்கு வழிகாட்டுகின்றன. இவற்றை ஒருதலைப் பக்கச் செய்தியாகக் கண்டுகொள்ள வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. ஏனென்றால், சங்ககாலத் தமிழக வரலாற்றின் பெரும்பகுதி இலக்கிய ஆதாரங்களில்தாம் பிணைந்து கிடக்கின்றது. இந் நிலையில் வரலாற்றுச் செய்திகளை இலக்கிய மரபுகளான உலோக மூலகங்களிலிருந்து உரித்து எடுத்துத் தனிமைப் படுத்திப் பார்க்க வேண்டிய அவசியம் சங்ககால வரலாற்றில் ஊடுபாவாக வருகின்றது. தேர்கொண்டு படை நடத்துகின்ற புதுமையை முதன்முறையாகப் பெருமளவிற்குக் கொண்டுவந்தவன் இச் சோழனே. கடல் வணிகம் தொடக்க நிலையில் இருந்த அந் நாளையில் (கரிகாலன் காலத்திற்கு முந்தியது) இச் சோழனுக்கு எப்படிக் குதிரைகள் மேற்கேயிருந்து கடல் வழியாகக் கிடைத்தன என்பது ஒரு விந்தைதான். தமிழகத்தில் கிடைக்காத

குதிரைகளை வெளியிடத்திலிருந்து கொணர்ந்ததை அவனுடைய படை நடத்தும் செயற்றிறனுக்கு அழியாதச் சான்றாகக் கொள்ளலாம்.

பகைவரை எதிர்க்க, அவர்களுடைய போர் முறையைப் பயில்வதில் இந்தியர்கள் முன் வராததால்தான் இந்திய நாடே அன்னியரின் அரசியல், கலாசாரப் பிடிப்புக்கு உட்பட்டது எனலாம். அதுவே 'இந்திய வரலாற்றின் அவலம்' என வழங்கப் படும் கசப்பான கருத்தை இங்கே மறந்துவிடலாகாது. மௌரி யரின் தேர்ப் படைக்குச் சமமான தேர்களைக் கொண்டு, அவர் களைத் தோற்றோடச் செய்ததோடு நிற்காமல், அவர்களுடைய இராணுவக் கேந்திரமான பாழியையும் துடைத்து எறிந்த இராணுவத் தொலைநோக்கு இளஞ்சேட்சென்னிக்கு இருந்த தென்பது அந் நாளைய வரலாற்றில் காணப்பெறும் வியக்கத்தக்க செய்திகளில் ஒன்றாகும். காலத்தின் போக்கில் கருத்தை ஒன்றி விட்ட நிலையில், நடைமுறைப் பயனான சிந்தனையோடு அரசியலை மேற்கொண்ட சோழ மன்னவரின் பொதுமைச் சிறப்புகளின் பெட்டகமான சோழன் இளஞ்சேட்சென்னி முழுமுதல் தனித் திறன் (originality) பெற்று விளங்குகிறான்.

## கரிகாற்பெருவளத்தான்

சோழ மன்னர்களுக்குள் கரிகாலன் மாமன்னனாக விளங்கி கினான். சங்க காலத்தில் முடியுடை மூவேந்தர்களில் சோழ அரசைப் பேரரசாக நெறிப்படுத்தும் பேராற்றல் அவனிடம் காணப்பட்டது. பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை முதலிய சங்க இலக்கிய நூல்கள் அவனைப்பற்றித் தருகின்ற செய்திகளில் அவனுடைய நாள்களில் தமிழகம் பெற்றிருந்த வளத்தையும் சேர்த்து நாம் காண்கிறோம். காவிரியின் வள்ளன்மையால் விளங்கிய சோழ நாட்டை மேலும் வளமுள்ளதாக்கக் காவிரிக்குக் கரை கட்டி, இவன் அதன் நீரைக் கல்லணையில் தேக்கி, சோழ நாட்டின் வேளாண்மைப் பொருளாதாரத்தின் மேலாக்கத்திற்கு வழி வகுத்தான்; சோழரின் மேழிச் செல்வத் திற்கு இவ்வாறு வகை செய்தான். இதன் காரணமாகப் பெரு வளத்தான் (Lord of Wealth) என்ற பெருமைக்கும் அவன் உரியவனானான்.

**வாரிசுரிமைப் போர் :** சோழ நாட்டரசியல் ஒழுகலாற்றில் திறமை உள்ளவர்களுக்கு அரசுரிமை வாய்த்தது என்பதைவிடத் திறமை உள்ளவர்கள் அரசுரிமைபெற அரசக் குடும்பத்தினர்

வழிவிட்டனர் என்று சொன்னால் பொருத்தமாகும் பிற்காலத்தில் விஜயாலய சோழர்கள் காலத்திலும் அரசர் குலத்தின் தலைமகன் அரச பட்டத்திற்கு வர வேண்டுமென்ற ஐரோப்பிய முறை பின் பற்றப்படவில்லை. ஆகவே, கரிகாலன் சோழ அரியணையில் அமர்ந்த விதம் அவனுடைய ஆற்றலுக்கும் அதிர்ஷ்டத்திற்கும் விளக்கம் சொன்னது எனக் கொள்ளவேண்டும். உறையூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்ட சோழ மன்னனின் தம்பி இளஞ்சேட்சென்னியின் மைந்தனான கரிகாலன் தனது பெரிய தந்தையின் மறைவிற்குப்பின்பு சோழ அரசுரிமை பெறுவதற்காகப் போராட வேண்டியதாயிற்று. அவனுக்கு எதிர்ப்புத் தெரிவித்த தாயாதிகள் செய்த சூழ்ச்சியின் காரணமாக அவன் சோழ நாடு நீங்கிக் கருவூரில் வாழத் தலைப்பட்டான்.

கழுமலம் என்றழைக்கப்பட்ட சீகாழியிலிருந்து புறப்பட்ட யானையால் கழுத்தில் மாலையிடப்பட்டு உறையூருக்கு அரசனாக்கப் பட்டான்[1] என்பது இலக்கிய வழிமுறையில் நமக்குக் கிடைக்கும் கதைநலச் செய்தி ஆகும். இதற்குப் பின்பும் இவனுக்குரிய எதிர்ப்பு மடங்கிவிடவில்லை. இவன் இருந்த மாளிகைக்கு இவனுடைய தாயாதிகள் தீயிட்டார்கள் அத் தீயிலிருந்து தப்புகின்ற முயற்சியில் இவனுடைய ஒரு கால் தீப்பட்டுப் போனதால், கரிகாலன் என்ற பெயர் இவனுக்கு ஏற்பட்டது என்று சிலர் கூறுவர். போர்ப்படையில் காணப்பட்ட வலிமை சான்ற யானைக்கு (கரி) எமனைப் போன்றவன் (காலன்) என்றவளவிலே இவன் பெயர் வழங்கிற்று என்ற கருத்தும் உண்டு. போராடிப் பெற்ற அரசுரிமையைத் தக்க வைத்துக்கொள்ள எப்போதுமே விழிப்புடன் இருந்த கரிகாலன் சோழ அரசைப் பேரரசாக மாற்றுவதற்கு முடிவு எடுத்தான்.

**அயல் நாட்டுக் கொள்கை :** சங்க காலத்தில் பேரரசு தத்துவத்தை நிறைவாகச் செயல்படுத்தியவன் கரிகால் சோழனே ஆவான். பேரரசனாக ஆவதற்கு இவன் கொண்ட முயற்சி எல்லோருடைய எதிர்ப்பையும் ஈர்த்தது. பாண்டியனும் சேரனும் மட்டும் இவனை எதிர்க்கவில்லை. அவர்களோடு சேர்ந்து பதினொரு வேளிர்களும் இவனை எதிர்த்துப் போரிட்டனர். இவர்களோடு சேர்ந்து போரிட்ட சேரனும் பாண்டியனும் கரிகாலனுடைய நேரடியான எதிர்ப்பாளர்களாக விளங்கியதில் வியப்பில்லை. ஆனால் இவர்கள் அனைவரும் கரிகாலனிடம் தஞ்சைக்கு அடுத்த வெண்ணி என்ற பகுதியில் நடந்த போரில் தோற்றது

1 பழமொழி – 62

சிறப்புச் செய்தியாகும். வாரிசுரிமைப் போரில் வெற்றி பெற்ற கரிகாலனுக்குச் சோழ நாட்டிலேயே எதிர்ப்பு இருந்த சூழ் நிலையில் வெண்ணிப் போரின் வெற்றி சங்க காலச் சோழர் வரலாற்றில் ஒரு திருப்பு முனையாகக் கணிக்கப்பெற வேண்டும். இவ்வெண்ணிப் போரில் முதுகில் காயம் பட்டதால், பெருஞ் சேரலாதன் என்ற சேர மன்னன் வடக்கிருந்து உயிர் விட்டான். 'புறப்புண் நாணி வடக்கிருந்தோனே' என்று வெண்ணிக் குயத்தியார் என்ற சங்க காலப் புலவர் பெருமாட்டி இவனைப் பற்றிப் பாடுகின்றபோது கரிகாலனுடைய படையாற்றலைப் புகழ்ந்தேத்துகிறார்.

முடியுடை வேந்தனாகவும், பேரரசனாகவும் மாறிய கரிகாலனை ஒன்பது வேளிர்கள் திரும்பவும் எதிர்த்தார்கள். வெண்ணிப் போரில் தமிழ் மன்னர்களின் கூட்டணியைச் சிதறடித்த கரிகால னுக்கு இவ் வேளிர்களை வாகைப் பறந்தலையில் வெற்றி பெறுவது எளிதான செயலாகத்தான் காணப்பட்டது. இந்த வாகைப் பறந்தலை வெற்றியைச் சங்க காலத்துப் பரணரும் பட்டினப் பாலையை இயற்றிய உருத்திரங்கண்ணனாரும் போற்றிப் பாடுகின்றனர். நாகப்பட்டினப் பகுதியில் நாகர்கள் வாழ்ந் தார்கள். அப் பகுதி பன்றி நாடு எனப்பட்டது. இதை வென்ற பின்பு கரிகாலன் சேர நாடான கேரளப் பகுதிக்குத் தனது படையோடு சென்றான். அந் நாட்டின் உட்பிரிவுகளான வேள் நாடு என்ற திருவாங்கூரையும், குட்டம் என்ற கொச்சி யையும், குடம் என்ற தென்பகுதியையும், பூழி என்ற வடபுலத் தையும், கற்கா என்ற பாலக்காட்டுப் பகுதியையும் சோழர் படை வென்றது. பின்பு பாண்டிய நாட்டையும் அடக்கிய நிலையில் வட திசை நோக்கிக் கரிகாலன் தனது படைகளோடு புது வெற்றி களைத் தேடிப் புறப்பட்டான். பெண்ணை ஆற்றங்கரையில் காணப்பட்ட குறும்பர்கள் கரிகாலனால் வெல்லப்பட்டார்கள். ஆயர் தலைவன் இளங்கோ வேள் சோழருக்கு அடங்கி வாழச் சம்மதித்தான். பின்பு கீழ்த்திசை நோக்கித் திரும்பிய கரிகாலன் தொண்டை நாட்டை வென்று அடிப்படுத்தினான். அங்குள்ள காடுகள் அழிக்கப்பட்டன; அவை விளைநிலங்களாக ஆக்கப் பட்டன. இவ்வாறு 24 கோட்டங்களைக் கரிகாலனுடைய நிர்வாகத் திறனுக்குச் சான்று கூறுகின்ற அளவில் தோன்றின. குறும்பர்கள் இந்தப் பகுதியில் குடியேற்றப்பட்டார்கள் என்றும், ஒளியர்தான் குடியேறினார்கள் என்றும் இரண்டு கருத்துகள் காணப்படு கின்றன.

வேளாண்மை சிறக்க இவ்வாறு ஏற்பட்ட குடியேற்றங்கள் கரிகாலனுக்குப் போதிய வருவாயையும் கொடுத்தது. இதில் ஒரு பகுதியைக் காஞ்சிபுரத்து ஏகாம்பர நாதர் கோவிலைத் திருத்தி அமைத்துக் கட்டுவதற்காகக் கரிகாலன் செலவிட்டான். இச் செய்தி முக்கியமான ஒரு விஷயத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது. கரிகாலன் அரசினர்க்குரிய வருவாயைக் காஞ்சியின் கோயிலுக்குச் செலவிட்டது போல விஜயாலய சோழர்களும் அவ்வாறு கோவில் கட்டுவதைத் தங்களுடைய அரசியல் ஒழுகலாற்றுக்குரிய ஒரு பகுதியாக ஏற்றுக்கொண்டார்கள். இவ்வாறு கோவில் கட்டுகின்ற பணியானது கரிகாலனைப் போலத் திறமை மிக்க கோச்செங்கணான் என்ற சங்க காலத்தைச் சேர்ந்த கடைசி மன்னனால் நன்கு ஆதரிக்கப்பெற்றது. இதுவே சங்க காலச் சோழர்களின் சோழர்குலப் பாரம்பரியமாகப் பிற்காலச் சோழரைச் சென்றடைந்தது. இளந்திரையன் என்ற சிற்றரசனைத் தொண்டை மண்டலத்தின் ஆட்சியில் அமர்த்திய பின்பு[2] கரிகாலன் தமிழகத்தில் மேற்கொண்ட திக் விஜயம் முடிவு எய்தியது எனலாம். தொண்டை மண்டலத்தின் காஞ்சி நகருக்குத் தெற்கேயே கரிகாலனின் சோழப் பேரரசு தனது எல்லையைக் கொண்டிருந்தது என்ற கருத்தும் உண்டு[3]. காஞ்சியையும் சேர்த்து ஆண்ட கரிகாலன் தொண்டை மண்டலப் பகுதியில் கடல் தூர்த்துக் காவிரிப்பூம் பட்டினத்தைக் கட்டினான் என்றளவில் பிறிதொரு கருத்தும் நிலவுகிறது.[4]

1. வட இந்தியப் படையெடுப்பு : அந் நாளையத் தமிழ் மகனின் வீரத்தை அளவிடுகின்ற பாணியில், அவனுடைய வீரம் இமயத்தையும் அசைத்தது என்று சொல்லுகின்ற வழிமுறை தமிழ் கூறும் நல்லுலகத்தாருக்கு அந் நாளில் ஏற்பட்டிருந்ததை 'இமயமும் துளக்கும் பண்பினை' என்று குறுந்தொகை கூறும் உவமையிலிருந்து நாம் அறியலாம் (குறுந்தொகை 158). வடபுலத்து இமயத்தின் வரம்பு தமிழரின் வீரத்திற்கு விளிம்பு என ஆன அந் நிலையில் கரிகாலனும் வட பகுதிக்குப் படை எடுத்துச் சென்றான். பாண்டியன் நெடுஞ்செழியன், சோழன் கரிகாலன், சேரன் செங்குட்டுவன் என்ற மூன்று பேரரசர்களின் வட இந்தியப் படையெழுச்சியைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகிறது. கரிகாலனும் இமயத்தில் தனது புலிக் கொடியை நாட்டினான். வடவரசரை இவன் வென்றபோது

2 P. T. Srinivasa Iyengar—' History of the Tamils' 1922, p.398-99.

3 K. A. Neelakanta Sastri—' Studies in Chola History and Administration'—1932, p. 56

4 T.V. Mahalingam—' Kanchipuram in Early South Indian Policy,—1969, p. 17

பல பரிசில்கள் இவனுக்குக் கிடைத்தன. 'கோசாம்பியைத் தலைநகராகக் கொண்ட வஜ்ர நாட்டின் கொற்றைப்பந்தரும், பாடலிபுரத்து மகத நாட்டில் பட்டி மண்டபமும், உஜ்ஜெயினியை நிலைக்களனாகக் கொண்ட அவந்தி நாட்டில் தோரண வாயிலும் கரிகாலனுக்கு அளிக்கப்பட்டன (சிலப்பதிகாரம் V; II-89,110). கரிகாலன் பெற்ற வெற்றிகள் அனைத்தும் அவனுடைய படை நடத்தும் திறனைக் காட்டின. பெரும்படையைச் சேகரித்து வேளிர்களையும், சேர பாண்டியரையும் அவன் வென்றது திக் விஜயம் என்ற வரையறைக்கு உட்படும் எனச் சொல்லலாம். தோற்ற நாடுகளை இவன் பேரரசின் பகுதிகளாக மாற்றி, அவனுக்குரிய நேரடி ஆட்சியை நிறுவக்கூடிய அளவில் நிர்வாக இயந்திரம் தமிழக அரசு இயக்கத்தின் (Tamil Polity) முதிர்ச்சி பெறவில்லை. கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே வட இந்தியாவில் மகத நாட்டின் பேரரசுப் பாணிக்குரிய எழுச்சி ஏற்பட்டுவிட்டது. அர்த்த சாஸ்திரம் சொல்லுவதைப் போல் மகதப் பேரரசன் அறம், மறம் என்ற இரண்டு வழிகளிலும் தனது அரசியலை நடத்துவதற்கு ஆயத்தமாக இருந்ததைப் போல, மகத சாம்ராஜ்யம் நிறுவப்பட்டு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்பு கூடத் தமிழகத்தை ஆண்ட கரிகாலன் (கி.பி.175 அளவில்) தன்னை மாற்றிக்கொண்டிருக்க வாய்ப்பில்லை. ஏனெனில், அறவுணர்வைச் சமுதாயச் சிந்தனையாகப் பெற்றிருந்த தமிழ்ப் புலவர்களின் நேரடியான கண்காணிப்பில் கரிகாலனுடைய அரசியல் நடந்தேறியது. அச் சூழ்நிலையில் ஒற்றர்களின் துணை கொண்டு சாம்ராஜ்ய அரசியலின் நுட்பமான காரியங்களைக்கூட நிர்வகித்த மகத மன்னன் போலக் கரிகாலன் ஒற்றர்களை மட்டுமே அண்டித் தன்னுடைய அரசாட்சியை நடத்தி இருக்க முடியாததுதான். ஒரு நாள் தூங்கிய அறையில் மறுநாள் தூங்காத அளவிற்கு முன்னெச்சரிக்கையோடு வாழ்ந்த மகத மன்னன் போன்றல்லாமல் புலவர்களும், பாணரும் எப்போதும் பார்க்கக்கூடிய அளவில் காட்சிக்கு எளியனாகக் கரிகாலன் தமிழக நாகரிகப்படி நடந்துகொள்ள வேண்டிய அவசியம் அக் காலத்தில் உண்டு.

இரத, கஜ, துரக, பதாதி என்றளவில் தேர், யானை, குதிரை, காலாட்கள் போன்ற நால்வகைப் படைகளை நான்கு இலட்சம் அளவில் நிலைப்படையாக (standing army) கொண்டிருந்த மகத சாம்ராஜ்யத்தின் இராணுவ வலிமை கரிகாலனுக்கு வாய்த்திருக்க வழியில்லை. சங்க காலத்திய மக்கட்தொகையின் எண்ணிக்கை தொடக்க நாளில் 3·583 மில்லியன் என்றும், முடிவு

காலத்தில் 4·951 மில்லியன் என்றும் கணிக்கப் பெறுகிறது.[5] சங்க காலத்தின் மத்தியப்பகுதிக்கு உரிய கரிகாலன் காலத்தில் 40 இலட்சம் மக்கள்தான் காணப்பட்டிருப்பர். இந்த நிலையில் மகத சாம்ராஜ்யத்தினர் கொண்டிருந்தது போல 4 இலட்சம் படைகளைக் கரிகாலன் பெற்றிருக்க வேண்டும் என்று சொல்வது முறையாகாது. தர்க்க முறையில் இதிலிருந்து பெறப்படும் முடிவு என்ன? இத்தகைய பெருஞ்சிறப்புகளைக் கொண்டு பெருமிதத்தில் சிறந்தோங்கி இருந்த மகதப்பேரரசைக் கரிகாலன் வென்று பட்டி மண்டபத்தைப் பெற்று வந்தான் என்பது அவனுடைய படைத்திறனுக்கு ஏற்பட்டிருந்த சாதனை என்று நாம் கொள்வதற்கில்லை. வட இந்தியாவிற்கு வந்த தமிழக அரசனுக்கு மகத சாம்ராஜ்யத்தினர் அளித்த பரிசில் அது என்று தான் நாம் அதை எடுத்துக்கொள்ளலாம். கரிகாலனுடைய பேரரசிற்குரிய மற்றையச் செய்திகளைச் சோழ அரசிற்குரிய சித்தரிப்பைத் தரும் அடுத்த பகுதியில் காணலாம்.

### III. உள்நாட்டு நிர்வாகம்

வேளிர்களை அடக்கிச் சோழ நாட்டைத் தன்னுடைய நேரடியான அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவந்த கரிகாலன் எவ்வாறு தனது நிர்வாகத்தை அமைத்திருந்தான் என்பது பற்றிய தெளிவான செய்திகள் நமக்குக் கிடைக்கவில்லை. யவனர்களைக் கண்காணிக்கச் சோழ அரசு எடுத்துக்கொண்ட முயற்சி அதனுடைய அரசியல் நிர்வாகம் தற்கால முறையில் துறைச் சார்பாக இயங்கி இருக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. மக்களுக்குரிய அறவுணர்வு செயலாக்கம் பெற்றிருந்த அந்நாளில் சோழ நாட்டரசியலின் உள்துறை ஆட்சி கெடுபிடியோடு நடந்துகொள்கின்ற சூழ்நிலை காணப்படவில்லை.

#### 1. நீதி நிர்வாகம்

கரிகாலனுக்குரிய நீதி வழங்குந்திறன் இலக்கியக் கதையாகப் போற்றப்படுகிறது. முதியவர் போன்ற ஒப்பனையுடன் தனது அவைக்களத்தில் தோன்றி நீதி வழங்கிய அவனுடைய சிந்தனைத் திறன் இளவயதினனாக இருந்த அவனுக்கு முதிர்ச்சியான உலகியலறிவு அமைந்திருந்ததை எடுத்துக்காட்டும். 'பிணக்கறுக்கும் மூத்தோரை இல்லா அவைக்களம்' என்ற நிலையில் கரிகாலன் காணப்படாத உறையூர் மன்றம் பொலிவிழந்து போனதை எண்ணிப் பொத்தியார் என்ற புலவர் அயர்வுறுவதை

5 M. E. மாணிக்கவாசகம் பிள்ளையின் கட்டுரை—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர் I—பக்கம் 349

அவருடைய பொருநராற்றுப்படைப் பாடல் எடுத்தியம்புகிறது. நரை முடித்து முறை செய்த மன்னனுன கரிகாலன் இல்லாத நீதிமன்றம் நிலவில்லாத வானமாக வெறிச்சோடிக் காணப் பட்டது என்ற இலக்கியச் செய்தி கரிகாலனின் நீதி நிர்வாகத் தைச் சுட்டிக் காட்டும்.

## 2. பொருளாதாரச் சேவைகள்

சோழ நாட்டுக்குரிய மன்னன் என்ற அளவில் பெருஞ் செல்வத்தின் அதிபதியாகவும் கரிகாலன் விளங்கியதால், பெரு வளத்தான் என்ற விருதினைப் பெற்றிருந்தான் என்ற செய்தியோடு சோழ நாட்டின் வேளாண்மையைச் சிறக்கச் செய்த மாமன்னன் என்ற கருத்தையும் சேர்த்துப் பார்க்க வேண்டும்.

## 3. வேளாண்மைக் குடியேற்றங்கள்

தொண்டை மண்டலத்திலுள்ள காடுகளை அழித்து 24 கோட்டங்களுக்குரிய விளைநிலக் குடியேற்றங்களைக் கரிகாலன் உருவாக்கினுன் என்ற செய்தி தஞ்சைப் பகுதியைப் போல ஏனைய நாடுகளும் வளமுள்ளதாக விளங்க வேண்டும் என்ற ஆக்க பூர்வமான சிந்தனையும் செயலும் கரிகாலனிடம் காணப் பட்டது என்பதைத்தான் நிரூபிக்கும். தொழிலியச் சமூக வாழ்வு முறை மலர்கின்ற பதினெட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்த மகா பிரெடரிக் என்ற பிரஷ்ய நாட்டு மன்னன் சதுப்பு நிலக்காடுகளை மீட்டு விளைநிலமாக ஆக்கியதை வெளிநாட்டு வரலாற்றறிஞர் பெரிதும் போற்றுகின்றனர். சங்க காலத்தில் சோழ நாட்டின் பொருளாதாரத்தின் நேரடி நிலைக்களனுக விளங்கிய வேளாண் மையை விரிவு செய்யக் கரிகாலன் மேற்கொண்ட தொண்டை மண்டலக் காட்டுப்பகுதி சீரமைப்புத்திட்டம் செயற்கரிய செய லாகக் கணிக்கப் பெறல் வேண்டும்.

## 4. பொதுப்பணி—(அ) நீர்ப்பாசனம்

**1. காவிரிக்குக் கரை எடுத்தல்:** காவிரி ஆற்றின் இரு பக்கங்களிலும் காணப்பட்ட கரைகளை உயர்த்திக் கட்டிய கரிகாலன் ஈழத்திலிருந்து கொண்டு வந்த 12,000 போர் அடிமைகளைப் பயன்படுத்தினுன். இதைப் பதின்மூன்ரும் நூற்ருண்டில் தோன்றிய சோழர்கால இலக்கியமான கலிங்கத்துப் பரணி சொல்லுகிறது. முதுவயது கொண்ட ஈழத்தாய் ஒருத்தி தனது ஒரே மகனைக் கரிகாலன் ஈழநாட்டிலிருந்து 12,000 அடிமை களோடு அடிமையாக்கி, (தமிழ் நாட்டிலுள்ள காவிரிக்குக் கரை எழுப்புகின்ற பணியில் ஈடுபடுத்துவதற்காகக்) கொண்டு

சென்று விட்டதாக ஈழமன்னன் கஜபாகுவிடம் முறை இடுகிருள். இச் செய்தியை ஈழத்தின் வரலாற்று நூலான மகா வம்சம் சொல்லுகிறது. காவிரியில் வெள்ளம் காவிரிக்கரையை உடைப்பெடுத்துக் கொண்டு ஓடியது. அதன் வெள்ளத்தைக் கண்டு சோழ நாட்டு உழவர்கள் உவகை கொண்டார்கள். இதைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோ பின்வருமாறு சித்தரிக் கின்ருர்: "உழவரோதை மதகோதை உடை நீரோதை தண்ப தங்கொள் விழவரோதை இறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி". இவ்வாறு ஆர்ப்பரிப்பாக வந்த காவிரியின் வெள்ளத்தை அடக்கியதால்தான் கரிகாலனுக்குக் 'காவிரி நாடன்' என்ற பெயர் ஏற்பட்டது. ஏழாம்-எட்டாம் நூற்ருண்டுக்குரிய தெலுங்குச் சோழன் புண்யகுமாரன் என்பவன் செதுக்கிய மேலப்பாடு என்ற கல்வெட்டு காவிரிக்குக் கரிகாலன் கரை எடுப்பித்ததைக் குறிக்கிறது. 'காவேரி தானய விலோலங்கான ப்ரஸமான பிரமுகத்யானி காட்டிஸாய கரிஞ கரிகாலஸ்ய' என்ற சமஸ் கிருதச் சொற்களில் அக் குறிப்பு காவிரி கரை எடுப்பைப் பற்றிக் கூறுகிறது.

பிற நாட்டு அடிமைகளைக் கொண்டு வந்து தன்னுட்டில் இத்தகைய வேலைகளைச் செய்தல் என்பது முற்காலத்திய பேரரசு வழக்கம். இஸ்ரேலியர் என்ற ஓர் இனத்தையே எகிப்தியர்கள் அடிமைகளாக்கி வாழ்வுக்குப் பயன்படாத பிரமிடுகளைக் கட்டி ஞர்கள். உரோமர்கள் கொண்டு வந்த அடிமைகள் அவர் களுடைய உல்லாச வாழ்வுக்குத் துணை செய்கின்ற அளவில் வீட்டுப்பணி, வயல் வேலை, கேளிக்கைகளில் பலியாதல் போன்ற வற்றில் கடூரமாக ஈடுபடுத்தப்பட்டார்கள். சோழன் கரிகாலனுல் கொண்டு வரப்பட்ட ஈழ நாட்டு அடிமைகள் எல்லா மக்களுக்கும் உதவுகின்ற ஆற்றுக்குக் கரை எடுப்பதில் பணிக்கப்பட்டார்கள். அடிமைகளைக் கொண்டு வருவதும் வேலை வாங்குவதும் அநாகரிக மான பழக்கம்; பேரரசுப்பாணியில் அதைச் செயல்படுத்துவதில் அநீதிகூட இழைக்கப்படுகிறது. கரிகாலன் மேற்கொண்ட கரை எடுப்புப் பணியில் காணப்படும் சமுதாய நலம் பயக்கும் தன்மை அடிமை முறையின் கடுமையைக் குறைக்கிறது என்று சொல்லிக் கொள்ளலாம். உரோமர்களைப்போல வாழ்வை இன்ப மயமாக்கும் மனப்போக்குடைய தமிழர்களும் இத்தகைய முறையில் வேற்று நாட்டு அடிமைகளை இவ்வாறு பயன்படுத்தி நிரந்தரமான நன்மையைத் தமிழ் நாட்டுக்குப் பெற்றுத் தந்த முதலும் கடைசி யுமான நிகழ்ச்சி இது ஒன்றுதான் என்பது ஆறுதல் செய்தியாக அமைந்து தமிழ் நாகரிகத்தின் மனிதாபிமானப் போக்குக்கு வழி இடுகிறது.

**2. கல்லணை கட்டல் :** 'சோழ மண்டலச் சதகம்' என்ற நூல் கல்லணை கட்டப்பட்டதைப் பற்றிக் குறிக்கிறது. இலக்கியம், கர்ண பரம்பரைச் செய்தி ஆகிய இரண்டின் துணை கொண்டு இக் கல்லணையைக் கரிகாலன்தான் கட்டினுன் எனக் கொள்ள லாம். காவிரிக் கரையைக் கரிகாலன் உயர்த்தியது காவிரியின் வெள்ளத்தை எதிர்த்துப் போராடுவதற்குத்தான். அவ்வாறு வந்த வெள்ளத்தைப் பயன்படுத்துகின்ற பெரும் பணியின் ஆக்க மாகத்தான் கல்லணையை அவன் கட்டினுன். காவிரியின் கரை புரண்ட வெள்ளம் கொள்ளிட ஆற்றுக்குள் கொட்டிப்போய் விட்ட நிலையில் காவிரியின் கழிநிலப் பகுதியில் வேண்டிய அளவிற்கு ஆற்று நீர் வராமற்போனது; இதைத் தடுத்துக் கழிநிலப் பகுதிக்கு நீரைப் புகட்டி விடுவதற்காகக் கல்லணை கட்டப்பட்டது.

தஞ்சை பூமியின் செழிப்புக்கு மூலாதாரமாக இன்றுவரை விளங்குகின்ற இக் கல்லணை களிமண்ணுல் செய்யப்பட்ட முரட் டுக் கற்களைக் கொண்டு, ஆர்ப்பரிப்பாக வந்த வெள்ளத்தைத் தடுத்துத் திருப்புகின்ற வகையில், 1080 அடி நீளத்தில் கட்டப் பட்டது. ஆற்றின் படுகையில் வளர்ந்திருந்த பாறையின்மேல் கட்டப்பட்ட இந்த அணை நாற்பதிலிருந்து அறுபது அடி அகல மும், பதினைந்திலிருந்து பதினெட்டு அடி உயரமும் கொண்டது. பாம்பு வளைவது போல (கொள்ளிட நதியினை எட்டிய நிலையில்) இது அமைந்திருப்பது பொறியியலின்படி வேண்டுமென்றே அமைக்கப்பட்டது என்பர். நிலத்தில் பாறை அமைப்பைப் பின் பற்றி அமைந்துள்ள நிலை என்றும் ஒரு கருத்து உண்டு. களி மண்ணுல் செய்யப்பட்ட கற்களைக் காவிரியின் பெருவெள் ளத்தைத் திசை திருப்புவதற்குப் பயன்படுத்திய தமிழர்களின் சிந்தனையில் இருந்த அளப்பரிய வீரத்திற்கு ஒப்புமை காண்ப தரிது. கடந்த 1600 ஆண்டுகளாக நிலை பிறழாமல் இக் கல்லணை அப்படியே காணப்படுவதோடு அதனுடைய பயன்பாடும் குறை வில்லாமல் தொடர்ந்து வருவது கி. பி. முதலாம் நூற்றுண்டின் தமிழ்ப் பொறியியலாளரின் தனிப் பெரும் அறிவாற்றலைக் காட்டு கின்றது. களிமண் கல்லில் கட்டப்பட்ட அணை—அதுவும் ஆண்டுதோறும் வெள்ளத்தைத் தடுத்து திசைமாற்றி அனுப்பு கின்ற சோதனை நிறைந்த அலுவலைச் செய்கின்ற அணை—இத்தகைய இடையருதப் பயன்பாட்டு நிலையில் உலகில் வெறெங்கும் காணப்படவில்லை. கி. பி. 1003-ல் பெருமளவிற்கு முடிவடைந்த தஞ்சைப் பெரிய கோவிலின் விமானக் கட்டு மானத்தை வியந்து பாராட்டுவதற்கு இணையாக முதலாம்

நூற்றுண்டுக்குரிய கல்லணையின் தொடர்நிலைப் பயன் பாட்டையும், பொறியியல் அற்புதத்தையும் கணிக்க வேண்டும். கரிகாலனுக்குரிய பொருளியற்சிந்தனை வளங்கொண்ட சிறப்பை அளக்கின்ற பாங்காக அது அமையும் என்பது திண்ணம்.

## (ஆ) ஆதிவாசிகள் புணரமைப்புத் திட்டம்

ஒளியரையும் குறும்பர்களையும் வேளாண்மைக் குடியேற்றங் களைச் சென்றடையச் செய்த கரிகாலன் அவர்களுடைய ஆதி வாசி வாழ்வுக்குரிய பழக்க வழக்கங்களைக் களைய முற்பட்டான். தமிழக நாகரிக வளர்ச்சியில் தமிழகப் பகுதியிலேயே தனித்த முறையில் ஒதுங்கி நின்ற அந்த ஆதிவாசிகளை நாடும் வீடுமாகக் குடியேற்றிய இம் மன்னனுடைய தொலைநோக்கு அரசியற்புலமை வியப்புக்கு உரியது. மேனாட்டு யவனர்களை வரவேற்று அவர் களிடம் உறவாடுகின்ற நாகரிகத் திறனை வரித்துக்கொண்ட பூம்புகார் மக்கள் வாழ்கின்ற தமிழகத்தில் ஆதிவாசிகளாகத் திரிந்த ஒளியரையும் குறும்பர்களையும் தமிழகக் கலாசார நதி யோட்டத்தில் (Mainstream of Tamil Culture) இணைத்து வைத்த கரிகாலன் தமிழகத்தில் காணப்படும் ஒரு முதன்மையான ஒருமிப்பாளன் (Integrationist) என்ற பெருமைக்கு உரியவனு கின்றுன். வள்ளன்மையை இனங்காட்டிப் பரிசில் வாழ்ப்பாணரை ஆற்றுப்படுத்திய புலவர்களைக் கொண்ட 'அறங் கூறும் வையம்' தழைத்த அவைக்களத்துக் கரிகாலன் ஆதிவாசிகளுக்கு வாழும் முறையைக் கற்றுக்கொடுத்து நாகரிகத்திற்கு அவர்களை ஆற்றுப் படுத்திய தனித்திறன் இந்திய வரலாற்றில் வேறு எந்த மன்னனிடமும் நாம் காண்பதற்கில்லை. கரிகாலனுக்கு 1200 ஆண்டுகளுக்குப் பின்பு வாழ்ந்த முகமது துக்ளக் யமுனை-கங்கை இடைக்கழி நாட்டிலுள்ளோரை 'வேட்டையாடிய' அவலத்தோடு கரிகாலன் ஆதிவாசிகளுக்கு அளித்த சேவையை ஒப்பிட்டு நோக்கினுல், அச் சோழன் வழங்கிய நல்வாழ்வு நீதி தெளிவாகப் புலப்படும்.

## 5. பூம்புகாரும் வாணிபமும்

ஈழப் படையெடுப்பின்போது பிடிபட்டவர்களைக் கொண்டு காவிரியின் முகத்துவாரத்தில் செயற்கையானதொரு துறை முகத்தைக் கரிகாலன் கட்டினுன் என ஈழத்து வரலாறு கூறு கிறது[6]. பூம்புகாரின் துறைமுகத்தில் காணப்பட்ட கப்பல்களின் எண்ணிக்கை, அமைப்பு, அவை கொண்டுவந்த செய் பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய சித்தரிப்பு கரிகாற்பெரு

[6] A. L. Basham 'The wonder that was India'—1963, p. 228

வளத்தான் காலத்தியப் பட்டினப்பாலையில் காணப்பெறுகிறது. வணிகத்தின் வளர்ச்சி சோழ அரசினுடைய வருவாய்த் திறனுகப் பரிணமித்தது. யவனர்களின் இருக்கைகள், அல்லங்காடி, நாளங்காடி, மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்ற கீழ் மேல் பகுதிகள், பண்டகசாலைகள், கண்காணிப்புத் துறையினரின் நடமாட்டம் போன்றவை காணப்பட்ட இந் நகரம் கரிகாற் சோழன் காலத்திய வணிகத்தின் மேலான வளர்ச்சியைச் சுட்டிக் காட்டுகின்றது. பூம்புகாரைப் போன்ற அளவில் வணிகமும் அது அமைந்திருந்த நாட்டின் கலாசாரமும் பின்னிய பொது நிலை நகரம் (Cosmopolitan City) உலக வரலாற்றின் அக் காலப் பகுதியில் வேறு எங்கும் காணப்பெறவில்லை. கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் ஐரோப்பாவில் உரோம் நகரம் மட்டும் இராணுவ முறையில் மேலாக்கம் பெற்றிருந்தது. ஆப்பிரிக்காவின் எகிப்துப் பகுதியிலுள்ள அலெக்சாந்திரியாப் பட்டினம் பண்டமாற்று நிலையம் (Clearance House) என்ற மட்டிலுமே வளர்ந்திருந்தது. பூம்புகார் பண்டகசாலைகள் கொண்ட பொருட்குவிப்புச்சாலை (emporium) என்ற நிலையில் உயிராக்கமான வாணிபத்திற்குரிய கேந்திரமாகச் செயல்பட்டது. அலெக்சாந்திரியாவிற்கு மேற்கே பூம்புகார் போன்று வளர்ச்சியுற்றிருந்த கார்தேஜ் பட்டினம் உரோமர்களின் எதிர்ப்புக்கனலில் உழன்று கிடந்தது. இவ்வாறு உலக வரலாற்றுக் கடலோடி வாணிபத்தின் வளர்ச்சியில் பூம்புகார் ஒப்பற்ற பெருநிலையை எய்திய காலம் கரிகாலனுடைய ஆட்சிக் காலம் எனச் சொல்லலாம். சோழ நாட்டின் தலைநகர் என்ற பெருமையோடு அதன் வணிகமும் பெருகிச் சோழர்களின் செல்வத்தின் கருவூலமாக மட்டும் பூம்புகார் விளங்கவில்லை. இந்திர விழா போன்ற மன்னன்—மக்கள் தொடர்பு நிகழ்ச்சிகள்; நடைபெறவிருக்கும் மணவிழாவினை யானையின்மேல் அமர்ந்த பெண்களைக் கொண்டு ஊருக்கு மொழிய வைக்கின்ற செல்வச் செழிப்புடைய வணிகர்களின் பெருவாழ்வு உயர்வுகள்—இவை கொண்டிருந்த பூம்புகார் தமிழ் நாகரிகத்தின் நன்னிலை வளர்ச்சியை நகர வாழ்வியலாக எடுத்துக் காட்டியது.

## 6. கலை வளர்ச்சி

கலை உணர்வு நிறைந்த வாழ்வியலை மன்னன் உட்பட எல்லா மக்களும் பின்பற்றினர். சங்க காலத்தில் காணப்பட்ட பெருஞ்செல்வந்தனுன சோழ மன்னன் தனது வாழ்வை இன்ப மயமாகச் செய்துகொண்டான். கரிகாலன் இதற்கு விதி விலக் கல்ல. விஜயாலய சோழனுடைய காலத்தில் சோழ மன்னர் களின் செல்வமெல்லாம் கோவிலறத்தைப் பேணுவதில் செலவிட

அவர்கள் முனைந்ததுபோலக் கரிகாலன் சமுதாய நல்லறம் பேணிய தமிழ்ப் புலவர்களையும், கலைவாழ்வுக்குரிய பாணரையும் ஆதரிப்பதில் தனது செல்வத்தையும் செல்வாக்கையும் பயன் படுத்தினான். இவனுடைய தாய்மாமனார் இரும்பிடர்தலையார் என்ற புலவரின் துணையோடு இவன் தன்னுடைய செல்வாக்கைப் புலவர்கள் மத்தியிலும், ஆன்றோர் மத்தியிலும் நிறுவினான். பட்டினப்பாலையை இயற்றிய உருத்திரங்கண்ணனாரின் பாடல் களுக்கு 16 இலட்சம் பொன் கொடுத்து அப் புலவரை அவன் சிறப் பித்ததாகக் கலிங்கத்துப்பரணி சொல்லுகிறது. பாணருக்கும் அவர்தம் துணைவியரான விறலியருக்கும் காட்சிக்கு எளியனாக விளங்கிய கரிகாலன் அவர்களுக்குப் பரிசில் கொடுத்துத் தானும் அவர்களால் மகிழ்விக்கப்பட்டு, கலைவாழ்வின் நலந்துய்த்தான். அப் பாணர்த் தம்பதிகளுக்கு மதுவை வரையாது வழங்கிய அவனுடைய இல்லம் ஆடலுக்கும் பாடலுக்கும் உரிய மனமகிழ் மன்றமாக விளங்கியது. தன்னிடம் வந்த புலவர்களை மதிக் கின்ற முறையில் தனது இல்லம் விட்டு ஏழடி நடந்து சென்று அவர்களுக்கு விடை கொடுத்த கரிகாலன் இசையில் வல்லு நனாகவும் விளங்கினான். இதற்கு 'ஏழிசை வல்லவன்' என்ற அவனுடைய அடைமொழி[7] சான்று சொல்லும்.

அக் காலச் சோழ மன்னர்களில் நலங்கிள்ளி போன்றோர் கவித்திறன் கொண்டு பாடல்களைப் பாடியது போலக் கரிகாலன் இயற்றிய பாடல்கள் காணக்கிடைக்காத காரணத்தால் இலக்கிய படைப்புத்திறனை இவன் கொண்டிருந்ததற்கு ஆதாரம் இல்லை. இசைக்கலையில் சிறந்த இவனுடைய மகள் ஆதிமந்தி ஆடல் கலையில் வல்லுநள் ஆவாள். ஆடவல்லானாக விளங்கிய சேரமான் ஆட்டனத்தியை மணந்திருந்தாள். இவ்வாறு பாட்டும் பரதமும் பயின்ற கலையுணர்வுக் கோட்டமாகக் கரிகாலனுடைய இல்லம் விளங்கியது. கலைக்கு வழங்கப்பட்ட அரச கௌரவம் பற்றிய செய்திகள் மலிந்த சங்ககால வரலாற்றில் அக் கலையைத் தனக்கே உரிமையாக்கிக் கொண்ட கலைபயில் குடும்பமாகக் கரிகாலனின் சுற்றம் தமிழ்க் கலாசாரத்தின் படிவமாகக் காணப் பட்டது.

கரிகாலன் கல்விக்கு அளித்த சிறப்பினைப் பூம்புகார்ப் பட்டினத்தில் காணப்பட்ட பட்டிமன்றங்கள் தெரிவிக்கும். இது பற்றித் தெரிவிக்கின்ற பட்டினப்பாலை கல்விகேள்வியில் சிறந் தோர் தங்களோடு வாதிடுவதற்குப் பிறரை அழைத்த முறையில்

7 K. A. N. Sastri — 'History of South India' — 1958. P. 132

தங்கள் இருக்கைகளில் கொடி கட்டி வைத்திருந்ததை விவரிக்கிறது. தனது வட இந்திய திக்விஜயத்தின் போது மகத நாட்டாரிடமிருந்து இவன் பெற்று வந்தது பட்டிமண்டபமே என்பது நினைவிலிறுத்தப்பட வேண்டும். சுமார் 1100 ஆண்டுகளுக்குப் பின்பு 1216 அளவில் உறையூரை எரிகொளுவி அழித்த பாண்டியர் படைகள் கரிகாலன் புலவர் உருத்திரங்கண்ணனாரைக் கௌரவிக்கின்ற முறையில் அவ்வூரில் கட்டிக் கொடுத்திருந்த மண்டபத்தை அழிக்காமல் விட்டுச் சென்றதாக 13ஆம் நூற்றாண்டுக்குரிய திருநள்ளாறு கல்வெட்டு கூறுகிறது. தமிழகத்தின் பொருளாதார மேம்பாட்டுக்காகக் கரிகாலன் கட்டிய கல்லணை இரண்டாயிரம் ஆண்டுகள் வாழ்கின்ற சிறப்போடு நம்மிடையே காணப்படுவது போலத் தமிழ்ப் புலமைக்கு இவன் அளித்த சன்மானம் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்புகூடத் தமிழகத்தில், தமிழரின் பெயரால் பகைவராலேயே போற்றிப் பாதுகாக்கப்பட்டது என்பது கரிகாலனுடைய தமிழ்ச்சேவைக்கு அரியதொரு பாராட்டாக அமைந்தது எனலாம்.

## 7. சமயப் பணிகள்

சங்க காலத்தின் பிற்பாதியின் தொடக்கத்தில் வாழ்ந்த கரிகாலனின் காலத்திற்குரிய சமயமாக அந்தணர் வழி இந்து மதம் வேரூன்றி வந்ததைக் காண்கின்றோம். கோவில் கட்டுகின்ற மனப்போக்கு கரிகாலனுக்கு ஏற்பட்டிருந்ததைத் தொண்டை மண்டலத்தின் நில வருவாயைக் காஞ்சியிலுள்ள பழைய கோவிலைத் திருத்திக் கட்டுவதில் செலவிட்ட செய்தியில் நாம் காணலாம். வேதங்களின்படி மேற்கொள்ளப்பட்ட யாகங்களின் சமயச்சார்பான மனஈர்ப்பு தமிழகத்தில் சிறுகச் சிறுக ஏற்பட்டு வந்ததற்குச் சான்றாகக் கரிகாலன் ஆற்றிய வேத வேள்விகளைப் பற்றிக் கருங்குழல் ஆதனார் தமது பாடலில் (புறம்-224) விவரித்துக் கூறுகிறார். கருடாசனத்தில் தலை நிமிர்ந்து நின்ற வேத வேள்வித் தூண் நின்ற இடத்தில் கரிகாலனும் அவன் மனைவியும் வேள்வித் தீயைப் பாராட்டி நின்றனர் என அப் புலவர் கூறுகிறார். சோழ அரசர்கள் புதிதாகத் தமிழகத்திற்கு வந்த அந்தணர்வழி இந்து சமய வாழ்வின் கோட்பாடுகளைக் கைக்கொள்வதைத் தங்களுடைய உயர்குடிப்பிறப்புக்கு ஆக்கஞ் செய்கின்ற பாணியில் மேற்கொண்டார்கள். அரசர் அனைய செல்வச் செருக்கு பெற்ற வணிகர்கள் தாங்களும் உயர்குடிப் பிறப்பாளராகச் சமூக நிலையில் கருதப்பட வேண்டிய அவசியத்தை எண்ணிக் காலத்தின் கோலப்படி வேள்வி முறையையும் சடங்காசார நிகழ்ச்சிகளையும் தங்கள் வாழ்விலும் கைக்கொள்ளத்

தொடங்கினுர்கள். கரிகாலனுடைய மகள் நற்சோணை ஆவாள். அவளுடைய இளைய மகன் இளங்கோ அடிகள் கண்ணகி பற்றிக் காவியம் எழுதக்கூடிய அளவில் கண்ணகியின் கதை தமிழ் நாட்டில் அறிமுகமாகிவிட்டது. அவளைத் தெய்வமாக்கிப் போற்றிய செங்குட்டுவன் ஆதித்தமிழ் நெறியான பெண் தெய்வ வழிபாட்டுக்கு ஆக்கங் கண்டான். கரிகாலனுக்கும் செங்குட்டு வனுக்கும் இடைப்பட்ட காலத்திற்குரிய கண்ணகி காலத்தில் அவளுடைய திருமணம் அந்தணர்வழி முறையின்படிதான் நிகழ்ந்தது. அவ் வணிக மாந்தர் புதிதாக வந்த கலாசாரத்தை மனமார ஏற்றுக்கொண்டதைத்தான் இது காட்டுகிறது. இவ்வாறு தீவிரமான பிடிப்பை அந்தணர்வழி சமயக் கோட் பாடுகள் அடைவதற்கு முன்பு கரிகாலன் காலத்தில் அதற்கான பிடிமானங்கள் ஏற்பட்டிருந்ததால், அந்த நாள்களைச் சடங்காசார வாழ்வு முறைக்கு ஏற்பட்ட 'பிடிமானக் காலம்' (formative period) என நாம் சொல்லலாம்.

## IV. குடும்பம்

கரிகாலனுடைய மனைவி நாங்கூர் வேளிர் குடும்பத்தைச் சேர்ந்தவள் ஆவாள். வீர பரம்பரையைத் தோற்றுவித்த வேளிர் குடும்பம் அது. திறமை கொண்ட நலங்கிள்ளி, அவனுடைய இணை சகோதரர்களான (half-brothers) நெடுங்கிள்ளி, மாவிலாட்டான் ஆகிய மூவரும் கரிகாலனுடைய மைந்தர்கள் ஆவார்கள்[8]. காரியாற்றில் வாரிசுரிமைப் போர்செய்து நலங்கிள்ளி நெடுங்கிள்ளியைக் கொன்றுன். கரிகாலன் தன் வாழ்வில் தாயாதிகளோடு மேற்கொண்ட போரினைப் போல அவனுடைய மக்களும் போரிட்டுத்தான் சோழ அரசை ஒருமித்த அரசாக (unitary state) ஆக்க முடிந்தது. உருத்திரங்கண்ணனுர் கூறுகிறபடி, கரிகாலன் தனது பெண்டுகள் பிள்ளைகள் கொண்ட சுற்றத்தாரோடு இனிது இருந்தான்[9]. கரிகாலன் செய்த வேள்வியைப் பற்றிச் சொல்லும் கருங்குழல் ஆதனுர் தம்முடைய கையறுநிலைப் பாடலில் கரிகாலனுடைய மனைவி யரைப் பற்றிக் குறிப்பிடுகிருர். கடுங்கோடையில் ஆட்டிடையர் தங்கள் ஆடுகளுக்குப் போடுவதற்காக அரிந்தெடுத்த குழைகளை இழந்த வேங்கை மரத்துக் கொம்புகளைப் போல அம் மனைவியர் தங்கள் நகைகளைத் துறந்து கரிகாலனுடைய இறப்பை நினைத்து மறுகினர் என்று அந்தப் புலவர் கூறுகிற செய்தியிலிருந்து கரிகாலனுடைய மனைவியர் அவனுடைய இறப்பால் பட்ட

8 K. A. N. Sastri—'Cholas' 1955,-P. 37

9 பட்டினப்பாலை—வரி 295—299

துன்பம் நமக்குத் தெரிய வருகிறது. கரிகாலனுடைய மகள் நற்சோணையைப் பற்றி முன்பு குறிப்பிட்டோம். மற்றொரு மகள் ஆதிமந்தி ஆவாள். நடனக் கலையில் சிறந்த இவளுடைய கணவன் சேர மன்னன் ஆட்டனத்தியோடு அவள் காவிரியில் நீந்தி நீராடியபோது ஆற்றுவெள்ளத்தில் அவன் அடித்துச் செல்லப்பட்ட அவலம் (அகப்பாட்டில் தனிநபர் வரலாறு வரக்கூடாது என்ற பொது நியதியைக்கூட மீறுகின்ற வகையில்) மிகுந்து நின்ற காரணத்தால் அகநானூறில் 'ஆதிமந்தி போலப் பேதுற்று' எனக் குறிக்கப் பெறுகின்றது. (அகநானூறு—454; 76; 236). பூம்புகாரின் முகப்புக் 'கடல் வந்து முன்னுருத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு பொன்னங்கொடி போலப் போந்தாள்' எனத் தனது சித்தி அவளுடைய கணவனை மீட்ட கதையை இளங்கோ கூறுகிறார் (சிலப்பு XXI : 10—15).

## V. மதிப்பீடு (Estimate)

வடக்கே இமயம் சென்ற போர்ப்படையின் தலைவனான கரிகாலன், தெற்கே பாண்டியரையும் சேரரையும் வெற்றி பெற்று, சோழப் பேரரசை உருவாக்கிய நிலையில் ஈழத்தையும் வெற்றி பெறக் கடற்படை கொண்டிருந்தான். இத்தகைய இராணுவச் சிறப்புகளைக் கொண்ட கரிகாலன் சோழ நாட்டின் பொருளாதார ஆக்கத்திற்காகக் காவிரிக்குக் கரை எடுப்பித்தும், கல்லணையைக் கட்டியும், தொண்டை மண்டலத்தில் வேளாண்மைக் குடியேற்றங்களை உருவாக்கியும் 'பெருவளத்தான்' என்ற பட்டத்திற்கு உரிய அருகதையைப் பெற்றான்; பூம்புகாரில் வெளிநாட்டு வணிகத்தை வளர்த்தான். பொருளாதார ஆக்கத்தைச் சமுதாயக் கலாசார வளர்ச்சியோடு இணைத்து வைத்தவன் கரிகாலனே ஆவான். ஏழிசை வல்லவனாக விளங்கிய அவனுடைய குடும்பம் கலை உணர்வுடன் இனிது வாழ்ந்தது. கரிகாலனுடைய அரசின் உயர்வுகளைப் பற்றிய உருத்திரங் கண்ணனார், பொத்தியார் போன்ற புலவர்களின் புகழுரைகள் சங்க இலக்கியத்தில் கரிகாலனைக் 'காவிரி நாடன்' என்ற பேரரசனாகச் சித்தரிக்கின்றன. அவனுடைய அளப்பரிய செல்வத்தை 'விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு' அவன் செலவிட்டான். கழுத்து வரை, முல்லைப்பூப் போன்ற அரிசி உணவைப் புலாலோடு சுவைத்துச் சுவைத்து அல்லும் பகலும் உண்டதன் காரணமாகப் புன்செய் நிலத்தை உழுத ஏர் கூர் மங்கிப்போய்த் தேய்ந்து விட்டதைப் போலத் தன்னுடைய பற்கள் தேய்ந்து போயின என்றும், குறைவில்லாத

கரிகாலனுடைய விருந்தோம்பலைத் துய்த்த நிலையில் உணவருந்துவதில் அயர்வுற்றுப் போனதால்தான் தன் சொந்த நகரத்திற்குப் போக வேண்டும் என்றும் சொல்கின்ற பரிசில் வாழ்வுப் புலவனுடைய பாடல் (சிறுபாணாற்றுப்படை II 84—89) உண்டு. இது கரிகாலனுக்கு என அமைந்திருந்த அரசமாண்பையும், செல்வச் சீர்மையுடன் கூடிய 'வேள்வி தலைப் பட்ட' வள்ளன்மையையும், நல்லறந்தேர்ந்த கலையில் புலவர்களின் உளமார்ந்த பாராட்டுதலையும் கரிகாலனுக்குரிய முப்பெருஞ் சாதனைகளாகக் குறிப்பால் உணர்த்துகிறது. ஆகவே, கரிகாலனுக்கு ஒப்பாரும் மிக்காரும் சங்க காலத்தில் யாருமில்லை என்பது வரலாற்று உண்மை ஆகும்.

### கரிகாலன் வாழ்ந்த காலம்

சோழன் கரிகாலனுடைய மகள் நற்சோணை, அவளுடைய மகன் சேரன் செங்குட்டுவன் ஆவான். இவன் கண்ணகிக் கோவிலைக் கட்டி முடித்து விழாக் கொண்டாடிய போது, இலங்கையிலிருந்து கஜபாகு என்ற மன்னன் அவ் விழாவிற்குச் சேரனுடைய அழைப்பின்பேரில் வந்து கலந்துகொண்டதாகச் சிலப்பதிகாரம் சொல்லுகிறது (XXX—160). ஈழத்து வரலாற்று நூல்களில் இரண்டு கஜபாகுகள் காணப்படுகிறார்கள். கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்கும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டுக்கும் உரியவர்கள் அவர்கள். சிலப்பதிகாரம் கி.பி. 3ஆம் நூற்றாண்டில் முடிவுற்ற சங்க காலத்தில் எழுதப்பட்டது; குறிப்பாக, கி. பி. 12ஆம் நூற்றாண்டில் எழுதப்பெறாதது. ஆகவே, கி. பி. 2ஆம் நூற்றாண்டுக்குரிய கஜபாகுதான் 'கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்' என்று இளங்கோ கூறுவது போலப் பத்தினிக் கோட்ட அமைப்பு விழாவில் கலந்துகொண்டான். வின்சென்ட் ஸ்மித் கூறுவது போல[10] இக் கயவாகு மன்னன் A.D. 173 லிருந்து 191-க்குள் வாழ்ந்தவனாவான். கயவாகுவை அழைத்த அச் சேரனின் பாட்டன் கரிகாலன் கி. பி. 150 அளவில் வாழ்ந்திருக்க வேண்டும் என முடிவெடுக்கலாம்.

## (இ) சோழன் நலங்கிள்ளி

சோழன் கரிகாலனின் மகன் நலங்கிள்ளி என ஏற்றுக் கொண்ட நிலையில் பத்து புறநானூற்றுப் பாடல்கள் இவனைப் பற்றிய முழுச் செய்திகளை இலக்கிய இனிமையோடு வழங்குகின்றன. தன் தந்தை சோழ அரசுரிமைக்காகத் தனது தாயத்

10 'Early History of India'—III Edn.—1914, p. 452

தாரோடு போராடி வெற்றிபெற்றது போலக் குடும்பத்தாரின் உறவு முறிவு இவன் வாழ்விலும் காணப்பட்டது. நெடுங்கிள்ளி என்பவன் இவனுடைய தமையன் ஆவான். மற்ருெரு தம்பி யான மாவிலாட்டான் பற்றி ஒரு புலவரோடு சதுரங்கம் ஆடிய செய்தியைத் தவிர, வேறு விவரம் காணக் கிடைக்கவில்லை (புறம்-43). ஆவூர் அரசன் இவனோடு சோழ அரசுரிமைக்காக மோதி நின்ருன். ஆவூர்க் கோட்டையை நலங்கிள்ளி முற்றுகை யிட்டான். பின்பு கோவூர்க் கிழாரின் அறிவுரையின்படி நெடுங் கிள்ளி உறையூர் சென்றவுடன் உறையூரையும் முற்றுகையிட்டு, கடைசியாகக் காரியாற்றுப் போரில் நெடுங்கிள்ளியை மாய்த்தான். இவ்வாறு காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, நலங்கிள்ளியி னுடைய போர்க் குணத்துக்கு ஆளாகித் தன்னுயிரையும் இழந் தான். காரியாற்றுப் போர் சேர, பாண்டியரோடு நலங்கிள்ளி நிகழ்த்தியதாகும் என மணிமேகலை சொல்லுகிறது[11]. பாண்டி யனின் கோட்டைகள் நலங்கிள்ளியினுடைய போர்த்திறனுக்குக் களபலி ஆயின. வினைத்திட்பம் மிக்க இவனுடைய படைத்திறன், தேரோடு கூடிய காலாட்படை, குதிரைப்படை, கடற்படை ஆகிய மூன்றையும் வலிமை மிக்கதாக ஆக்குவதில் முழுமை பெற்று விளங்கியது[12]. இவனுடைய வள்ளன்மை, போர்க் குணம், கவித்திறன், சான்ருண்மை, நல்லினம் சேர்தல் போன்ற குணச் சிறப்புகளைக் கோவூர்க் கிழார், முடத்தாமக் கண்ணனுர் போன்ற சங்கப் புலவர்கள் அளப்பரிய உவகையுடனும் உள் ளார்ந்த இசைவுடனும் புகழ்ந்து பாராட்டுகின்றனர்.

கடல் வணிகம், இசையும் நாடகமும் ஒருசேர்ந்த நிலையில் கொண்ட மேம்பாடு; பாணர், கூத்தர், விறலியர் போன்ற பரிசிலரைப் புரந்து நின்ற அரசப் பெருமிதம்; இளஞ்சேட் சென்னிக்குப் பின்பு தமிழ்ப் போர் முறையில் வடவரின் போர் முறையான தேர் ஓட்டும் படைமுறைக்கு வழங்கப்பட்ட முக்கியத் துவம்—இச் சாதனைகள் யாவும் மேம்பட்டவை என்ற அளவில் இவனுடைய ஆட்சி முறையினுடைய தேற்றம் புதுமையும், ஈர்ப்பும் கொண்டு விளங்கியது. கரிகாலனின் தனியாணைச் சிறப்பிற்கு அழகுக்கு அழகு சேர்த்தாற்போன்று மேலும் சிறப் பூட்டிய நலங்கிள்ளியின் ஆட்சி சோழர் வரலாற்றின் கலாசாரச் செறிவிற்கு உரமேற்றி அமைந்திருந்தது. இவனுக்குப் பின் வந்த கிள்ளிவளவனுடைய ஆட்சியினோடு ஒப்புமை நிலையில் இவனுடைய ஆட்சி ஆராயப்படும்போது சோழர் வரலாற்றில் இவனுக்குரிய பகுதி தனிநபர்ச் சாதனையாகத் தோற்றமளிக்கிறது.

11 மணிமேகலை—XIX, வரி 125—127

12 புறம். 31

இது தமிழக வரலாற்றில் தனிச் சிறப்பிற்குரிய பகுதியாகும். இவனைப் பற்றிச் செய்திகள் அனைத்தும் ஐயமற்ற முறையில் புலவர் பலரால் வழங்கப்படுகின்றன. இச் சிறப்பின் பயனாக இவனுடைய வரலாற்றிற்கு உண்மைத் தன்மையின் ஏற்றம் இயல்பாகவே கனிந்து நிற்கிறது. இலவந்திகைப் பள்ளியில் இறந்த இவனுடைய காலத்தில்தான் சோழ நாட்டின் பேரரசுத் தத்துவம் பொருளாதாரப் பின்னல்களோடு அந் நாட்டின் வணிக வளர்ச்சியில் அடங்கி இருந்தது. இதனைப் புரிந்துகொண்டு செயலாற்றிய மதிநுட்பம் இவனுக்குரிய சிறப்பு ஆகும். இது பற்றிய விரிவான விளக்கவுரையை வணிகப் பகுதியில் பார்க்கலாம்.

## (ஈ). கிள்ளிவளவன்

சோழன் கிள்ளிவளவன் நலங்கிள்ளிக்குப் பின்வந்த அரசர்களுள் முக்கியமானவன் மட்டுமல்ல; வரலாற்று ஆராய்ச்சிக்குரிய பலவிதமான முரண்பட்ட செயல்களை நடத்திக் காட்டிய மன்னவனுங்கூட. பரிசில் வாழ்க்கை பாணருக்கும் புலவருக்கும் அவன் காட்டிய வள்ளன்மை அவனுடைய அரண்மனைக் கதவுகளை எப்போதும் திறந்து வைத்திருக்கச் செய்தது. புலவர் பெருமக்களின் நல்லிணக்கமும் இலக்கிய வளங்கொழிக்கும் படைப்புத் திறனின் பயனாக அவனுள் தோன்றிய கவி உள்ளமும் அவனுக்கு உரிய அழியாச் சொத்துகள். இது ஒரு பக்கம். இவனுடைய பகைவனும் கடை ஏழு வள்ளல்களில் ஒருவனுமாகிய அதியமானின் இரண்டு இளஞ்சிறுர்களைக் கழுத்தளவிற்குக் குழிதோண்டிப் புதைத்து யானையின் காலால் இடற வைக்க எத்தனிக்கக்கூடிய கடின உள்ளமும் இவனுக்கு உண்டு. இது மற்றொரு பக்கம். இவ்வாறு முரண்பட்ட உணர்வுகளைப் பிரதிபலித்து நிற்கக்கூடிய இவனது வாழ்க்கை வரலாறு அதிகமான பாடல் பெற்ற காரணத்தினால் யாவருக்கும் தெரிந்த சொற்சித்திரமாகவும், உணர்ச்சிக் கொந்தளிப்பின் நேரடி வெளிப்பாடாகவும் சங்க இலக்கியத்தில் காணக் கிடைக்கிறது.

கரிகாலன், அவன் மகன் நலங்கிள்ளி ஆகிய இருவரும் கட்டிக்காத்த சோழப் பேரரசு கிள்ளிவளவன் காலத்தில் அருகி நின்றது. சோழரின் முதன்மையைத் தமிழகத்தில் வரலாற்று நடைமுறையாக நிறுவுவதற்கான கடமையை ஆற்றுகின்ற தொடர்ப் போராட்டத்தில் இவன் பாண்டியனிடம் தோற்றுப் போனான்; பின்பு சேரனிடம் குளமுற்றம் என்ற இடத்தில் மோதி நின்ற நிலையில் தன் உயிரையும் இழந்து போனான். ஆக, கரிகாலன் கண்ட சோழப் பேரரசுத் தத்துவம் நலங்கிள்ளி காலத்தில்

ஏற்பட்ட ஊனங்களோடு வலிவிழக்கின்ற தொடக்க நிலை கிள்ளி வளவன் காலத்தில்தான் உருவானது. புலவரைப் போற்றித் தானும் புலவராக வாழ்ந்த நிலையில் தன்ஞல் இயன்ற அளவு போர் வீரஞகவும் காட்சி அளித்தான் கிள்ளிவளவன். அவனைப் பற்றிப் பாடிய ஒன்பது சங்கப் புலவர்கள் தங்களுடைய பதினெட்டுப் பாடல்களில் அவனை அறங்காக்கும் வீரஞகவும், அரசியல் திறன் காணத்துடிக்கும் அரசஞகவும் காட்டி அவனை இன்றும் நம்மிடையே உயிர்க்க விடுகிருர்கள்.

கருவூர் அரணின் பாதுகாப்பை நம்பி அதன் உள்ளே இன்னலற்று இருந்தான் சேர மன்னன். அவனை வீழ்த்துவதற்காகக் கிள்ளிவளவன் கொண்ட முற்றுகை முடிவற்று நீண்டது. ஆலந்தூர்க் கிழார் என்பவர் அரசியலில் மனிதாபிமானம் காண விழைந்த சிந்தனைச் சிறப்பிற்கு உரிய தமிழ் நெஞ்சப் புலவராவார். வெளி வந்து போராட வீரமும், மானமும் இல்லாது இனிது இருந்த சேரனிடம் போருக்கு நிற்றல் சோழனுக்குப் பெருமை ஆகாது என்ற இவரது அறிவுரை கிள்ளிவளவனுக்கு ஓர் அரசியல் உண்மையாகத் தோற்றமளித்திருக்க வேண்டும். போர்த்திறம் காட்டுவது மன்னர்க்கு அழகு என்ற முறையில் ஒரு நாளேனும் ஓயாத போர்வாழ்வு முறையில் படைக்கலம் ஏந்திப் போர் முகத்தே அலைந்தவன் கிள்ளிவளவன். இவனது உள்ளப் பாங்கைப் புரிந்துகொண்ட நிலையில் போர் செய்யும் முறைமையில் கைக்கொள்ள வேண்டிய அடிப்படை நியாயங்களை ஆலந்தூர்க் கிழார் வலியுறுத்திச் சொல்லுகிருர்; அப்போது அரசியலுக்கு அறத்தின்பால் உள்ளபிடிப்பை நல்வீரம் செயலாவதற்கு உறுதிப்பாடுள்ள எதிரியைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற உண்மையைக் கோடிட்டுக் காட்டுகிருர் (புறம்—36).

கருவூர் வீழ்ச்சியுற்றது; இதன் பின்பு திருக்கோவலூர் அதிபதியான வள்ளல் மலையமானேடு பகைமை பாராட்டி நின்ருன் கிள்ளிவளவன்; வீழ்ச்சியுற்ற மலையமானின் இரண்டு மக்களை யானையின் காலால் இடறச் செய்யும் ஏற்பாட்டில் கிள்ளிவளவன் ஈடுபட்டு முனைந்து நின்ற அவ் வேளையில் கோவூர்க்கிழார் என்ற புலவர் அங்கு பதைத்தோடி வருகிருர்; 'புருவைக் காப்பாற்றுவதற்காகத் தன்னுடைய சதையைத் தானே அரிந்து கொடுத்த சிபியின் வழித்தோன்றலே என்று அச் சோழனின் முன்னைப் பழம் பொருளான அற உணர்ச்சிக்கும், அதைச் சோழர் மரபில் பெய்து நின்ற வரலாற்றுப் பாரம்பரியத்திற்கும் ஓர் அழுத்தம் கொடுத்த நிலையில் தமது அறவுரையைத் தொடங்குகிருர். 'பகைவனுக்கும்

அருள்கின்ற நன்னெஞ்சின்' பெருமையை அச் சிறுரின் ஏதும் மறியாத் தன்மையில் இசையவிட்டுப் பரிவு உணர்ச்சியின் சிறப்பினை இக் கவிஞர் எடுத்துக் காட்டுகின்றார் (புறம்-46). இச் சிறுரின் கடைசி முடிவு இலக்கியச் செய்தியாகக்கூட நமக்குக் காணக் கிடைக்கவில்லை. 'அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்ற மாகும்' என்ற பேருண்மையைக் கிள்ளிவளவனுடைய தமிழார்ந்த உள்ளத்தை விட்டு ஒதுங்கி நின்ற நிலை அந் நாளைய அரசியலின் பேதலிப்பை எடுத்துக் காட்டுகிறது.

தனது இனிய நண்பன் பண்ணனின் வள்ளன்மையைத் தனது புறநானூற்றுப் பாடலில் பொருமை உணர்ச்சி இன்றிப் புகழ்ந்துரைக்க வருகிருன் கிள்ளிவளவன். பண்ணனின் இல்லம் நீங்கி, எறும்பு ஊர்தலைப் போன்று தெரு வழி நடக்கும் இளஞ் சிறுர்களின் கைகளில் ஏந்தப்பட்டுள்ள உணவுக் கவளங்களை அளித்த பண்ணனின் வள்ளன்மையைப் பார்க்கின்ற இலக்கிய உள்ளத் தோய்வு இச் சோழனுக்கு உண்டு (புறம்—173). ஆனல் அதே நேரத்தில் தங்கள் உயிர் பறிக்கப்படப் போவதை அறியாத தங்கள் உயிருக்காகக் கையேந்தத் தெரியாத அதியமானின் இரு மக்களை யானையின் காலால் கொடுமையான முறையில் கொல்விக்கத் துணிந்த அரசியல் மனமயக்கமும் அவனுக்கு உண்டு.

இவ்வாறு சமூக வாழ்வியலுக்கு ஓர் உள்ளமும், அரசியலுக்கு மற்ருேர் உள்ளமும் என்ற அளவில் ஒரே மனிதன் இரண்டாகப் பிரிந்து நின்று செயல்படுகின்ற விந்தையான முரண்பாட்டைக் கிள்ளிவளவனிடம் நாம் பார்க்கின்ருேம். அந் நாளைய அரசியல் நெறி முறைகளால் (Conventions) தடிப்பேறிப் போன அவனுடைய உள்ளத்தின் செயலாக்கமாக ஓயாத போரும் உள்ளத்தைக் கவ்வி நின்ற பகையுணர்ச்சியும் அவன் வாழ்வின் பெரும்பகுதியை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தன. கரிகாலனின் காலம் முதல் வளர்ந்த சோழப் பேரரசின் சரிவிற்கு இவனுடைய காலந்தான் தொடக்க நிலையாக அமைந்தது எனலாம். போராற்றலுக்குரிய நேரடியான நன்மைகள் அவனுக்குக் கிடைக்காவிட்டாலும் ஒன்பது தமிழ்ப் புலவர்களின் வாழ்த்துகளிலும் தன்னுடைய இலக்கிய சேவைகளின் பெருமிதத்திலும் இவனுடைய வரலாற்றின் சிறப்பு உயிர்த்துடிப்பாக நம்மிடையே இன்றும் வாழ்கிறது.

## (உ) கோப்பெருஞ்சோழன்

இச் சோழன் காலத்தில் அரச குலத்தில் உண்டான பிளவுகளைப்பற்றிய செய்தி காணப்படுகிறது. கரிகாலன் காலத்தில்

அரசுரிமைக்காகத் தன்னுடைய தாயாதிகளை எதிர்த்துப் போராட வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்பட்டது. கோப்பெருஞ் சோழன் தன்னுடைய மைந்தர்களின் இராணுவப்போட்டியை எதிர்த்து நின்றான். தந்தைக்கும் மைந்தர்களுக்கும் இப்படிப் பட்ட இராணுவப் போராட்டம் தோன்றுவதற்கான காரணம் பற்றித் தெளிவான செய்தி காணப்படவில்லை. போர்க்களத்தில் மோதி நின்ற சோழ அரசகுலத்தார்களைச் சமாதானப்படுத்துவ தற்காகப் புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர் முயற்சி செய்து வெற்றியும் பெற்றார். இச் சோழன் தனது மைந்தர்களைத் தோற்கடித்துக் கொன்றால் சோழ அரசகுலத்துக்கு மட்டுமல்ல, சோழ அரசுக்கும் அது ஓர் இழப்பாகும்; மேலும், சோழ அரச குலத்திற்கு நீங்காத இழிவும் ஏற்படும். ஆகவே, போரைத் தவிர்த்து அறப்பணிகளைச் செய்து தனது வாழ்வைச் சிறக்கச் செய்யுமாறு கோப்பெருஞ்சோழனை அவர் தூண்டினார்.

தனது மைந்தர்களின் எதிர்ப்பினால் மனம் நொந்துபோன இச் சோழன் போரைத் தவிர்த்த பின்பு வடக்கிருக்கச் சென்றான். தன்னையே அழித்துக்கொள்கின்ற, வடக்கிருக்கின்ற நோன்பினை அவன் முடி துறக்கும் பாணியில் மேற்கொண்டான். தனது மைந்தர்களிடம் தந்தமைக்குரிய கடமை உணர்வோடு அன்பு பாராட்டி அவர்தம் மதிப்பைப் பெறமுடியாத அவன் பிசிராந்தை யார், பொத்தியார் போன்ற புலவர்களிடம் கொண்டிருந்த நட்புரிமை இலக்கியச்சுவை மிகுந்த செய்தியாக அப் புலவர்களால் போற்றப்படுகிறது. நேரில் பார்த்துப் பழகியறியாத பிசிராந் தையார் தன்னை நாடி உழுவலன்போடு ஓடோடி வருவார் என்ற நம்பிக்கையில் அவருக்கும் புதைகுழியைத் தோண்டி வைத்திருக்கப் பணித்தான். அச் சோழனுடைய அரசியல் வாழ்வு சுவை வற்றிப் போனாலும் கல்வி உலகத்தில் அவனுக்குக் காணப்பட்ட கவி நண்பர்கள் அவனைக் கடைசிக் காலத்திலும் கைவிடவில்லை. சோழ மன்னர்களின் வாழ்வில் ஏற்பட்டிருந்த கலைவாழ்வுத் தொடர்பு எவ்வாறு அவர்களை மேம்படுத்தியது என்பது இதிலிருந்து தெரிய வரும்.

இச் சோழனுக்கு நண்பராய் வாய்த்த பிசிராந்தையார் கல்விக் குரிய இலக்கணத்தை வரையறுத்த பாண்டியன் அறிவுடைநம்பி ஆண்ட பாண்டிய நாட்டிலிருந்து வந்த பெரியார் ஆவார். நட்புரிமை கொள்வதில் அரசியலைக் கடந்து நிற்கின்ற பிசிராந்தையார் போன்றவர்களைக் கவர்ந்திழுக்கின்ற வாய்மைத் திறன் கொண்ட கோப்பெருஞ்சோழன் சோழ அரசியலை நடத்து வதில் தன்னுடைய மைந்தர்களிடமே இலக்கணத்தைப் பெற

முடியாமற்போனது விந்தையான நிகழ்ச்சிதான். அதே போல இந்த வகையில் தங்களுடைய தந்தையைப் போரில் எதிர்த்து நிற்கத் துணிந்த இச் சோழ இளவல்களின் மனப்போக்கும் சோழ வரலாற்றில் ஏற்பட்ட நெகிழ்ச்சி என்றுதான் கணிக்கப் பெற வேண்டும். இதே சோழர் குலத்தில் உதித்த பிற்காலச் சோழர் களில் ராஜராஜன் I போன்றோர் தம்முடைய தந்தையர்க்குப் பள்ளிப்படை என்ற சமாதிக்கோவில் கட்டிவைத்து வழிபாடு செய்கின்ற பேரன்பைப் பெருமிதத்துடன் கொண்டிருந்தனர். பிற்காலச் சோழர் வரலாற்றில் தந்தையை எதிர்த்துப் போர்க் களம் சென்ற சோழ இளவரசனை நாம் காண்பதற்கில்லை. இந்த நிலையில் கோப்பெருஞ்சோழன் காலத்திய நிகழ்ச்சிகள் சோழரின் வரலாற்றில் பொதுமைப்படுத்தப்பட வேண்டாதவையாகக் காணப்படுகின்றன.

தனி வாழ்வில் ஏற்பட்ட அரசியற்குறைபாடான இராணுவ மோதலை எண்ணிக் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த முறை யை வேறு எந்த சோழ மன்னனும் சங்க காலத்தில் கைக்கொள்ள வில்லை. சங்க காலத்தின் தொடக்க நாட்களில் வட இந்தியாவின் பேரரசு எல்லைகளைப் பாரசீகம் முதல் நெல்லை மாவட்டம்வரை விரிவுபடுத்திய சந்திரகுப்த மௌரியன் (கி.மு. 4 ஆம் நூற்றாண்டு) தென் பகுதியில் மைசூர் பக்கம் சமண சமய முறையில் மெய் யொடுங்கி உயிர் துறக்க வந்தான். சோழ அரசக் குடும்பத்திற்கு வாய்த்த ஒற்றுமையின்மை என்ற குறைபாட்டினைப்பற்றிய எண்ணத்தோடு காஞ்சிக்குச் சென்றமர்ந்த நிலையில் 'பொன் மாளிகையிற் துஞ்சிய சுந்தரத் தேவர்' சங்க காலக் கோப்பெருஞ் சோழனைப் போன்றே மனம் உடைந்து போனவன் ஆவான். சுந்தர சோழனுடைய இறப்பு நமக்குத் தெளிவாகப் புலப்பட வில்லை. சங்க காலத்திலும் பிற்காலத்திலும் பாண்டியருள்ளும் சேரருள்ளும் கோப்பெருஞ்சோழன், சுந்தர சோழன் ஆகிய இருவரைப் போலச் சொந்த வாழ்க்கையில் வெறுப்புற்று உயிர் ஒடுக்கங்கொள்வதற்கு விழைவு கொண்டவர்கள் காணப் பெற வில்லை தனி நபர் வாழ்க்கையின் தோல்வியின் காரணமாகத் தன் னுயிரை மாய்த்துக்கொள்கின்ற மனப்போக்கு பிற்காலச் சோழ னான சுந்தர சோழனுக்கு ஏற்பட்டிருந்த அவலமானது சங்க காலச் சோழ மன்னனான கோப்பெருஞ்சோழனுக்கே அமைந் திருந்தது என்பது சிந்தனைக்கு உரியதாகும். புலவர்களின் நல்லெண்ணத்தைப் பெறுகின்ற அளவிற்கு இச் சோழன் நல்லியல்புகளைக் கொண்டு விளங்கினான். இச் சோழன் காணப் படாத உறையூர் மன்றம் களையிழந்து காணப்பட்டது என அமைந்த பொத்தியார் என்ற புலவரின் ஆற்றாமை (புறம்-220)

காவலனில்லாத நாடாகச் சோழ நாடு மாறியதைத் தெரிவிக்கிறது. அந்த அளவிற்கு அவ்வரசனுடைய இறப்பு ஈடு செய்ய முடியாத தாக (irreparable loss) விளங்கியது.

## (ஊ) ராஜ சூயம் வேட்ட பெருநற்கிள்ளி

இறை உணர்ச்சிக்குச் சடங்காசாரமான வடிவம் கொடுத்து அந்தணர் பலருக்குப் பொன்னும், முற்றூட்டுகளும் வழங்கியதைத் தனி ஓர் அரச கடமையாக எண்ணிச் செயல்பட்ட முதல் சோழ அரசன் பெருநற்கிள்ளி ஆவான். சங்க கால வரலாற்றுப் போக்கில் இதுவரை எதிரெதிராக நின்ற தூய தமிழ்க் கலாசாரமும் வடக்கத்திய சடங்காசார கலாசாரமும் ஒன்றையொன்று தழுவிக்கொண்ட பரிணாம வளர்ச்சி பெருநற்கிள்ளி காலத்தில் தன்னை முழுவதும் இனம் காட்டுகிறது. இந் நிலையில் பெருநற்கிள்ளியினுடைய ஆட்சிக் காலம் தமிழகத்தின் கலாசார மறு உயிர்ப்புக்குக் கட்டியம் கூறி நின்றது. இந்து சமயத்தின் இயல்புக்கு உரிய சடங்காசாரப் போக்கை எதிர்த்துக்கொண்டு வளர்ந்த புத்தமதம் அசோகனுடைய காலத்தில் அரச அந்தஸ்தைப் பெற்று மௌரிய நாட்டில் நிலைபெற்றது. இதன் பின்பு புஷ்யமித்திர சுங்கர் என்ற வேதியர் குலத்துச் சேனாபதி மன்னன் (கி. மு. 187-151) தான் கொண்டுவந்த எதிர்மறைப் புரட்சிக்கு முத்தாய்ப்பாக 'அசுவமேத யாகம்' செய்து சடங்காசார சமயத்திற்குத் தான் அளித்த ஆதரவை நிலைநாட்டினான். இதே போன்று பெருநற்கிள்ளி தன்னுடைய அரச போகத்தின் உயர்வினை உலகிற்கு உணர்த்தும் போக்கில் 'ராஜசூயம்' என்ற சடங்காசார யாகத்தை அந்தணர் துணை கொண்டு நடத்தி வைத்தான். வடக்கத்திய மதக் கலாசாரத்தின் தமிழக ஊடுருவலுடைய வெற்றியின் சின்னமாகத்தான் இதனைக் கருத வேண்டும்.

இத்தகைய யாகங்களை விரும்பிய பெருநற்கிள்ளி, பௌத்த மதச் சார்பான இளங்கோவடிகள், பத்தினித் தெய்வத்திற்குக் கோவில் எடுத்த செங்குட்டுவன் ஆகியோருடைய மன ஈர்ப்புகளை ஆராய்ந்து பார்த்தால், சங்க காலத்தில் இறை உணர்ச்சி யாகங்களையும், மனிதரைக் கடவுளாக்குகின்ற சடங்குகளையும் நோக்கித் திரும்பிவிட்ட புதுமை நிலையை உய்த்து உணரத் தலைபட வேண்டியிருக்கிறது. கடை ஏழு வள்ளல்களில் ஒருவனும், கொல்லிமலை ஓரியைக் கொன்றவனுமாகிய கோவலூர் மலையமான் பெருநற்கிள்ளிக்குத் தனது பரம்பரை வழக்கப்படி உறுதுணையாக நின்று, அச் சோழனை எதிர்த்த சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைத் தோற்கடித்தான். அரச

போக வேள்வியை இவன் செய்ததையொட்டி இரண்டாவது முக்கிய நிகழ்ச்சியாக இவன் ஆட்சியில் காணக்கிடப்பது முடியுடை மூவேந்தரும் ஒன்று சேர்ந்து இச் சோழன் இல்லத்தில் காட்சி அளித்ததுதான். இவ்வாறு இவனுடைய இல்லம் வந்து சிலநாள் தங்கிச் சென்ற மன்னர்கள் சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்போர் தந்த உக்கிரப் பெருவழுதி ஆவார்கள். வரலாறு படைத்த இந்த அருமையான ஒற்றுமைக் காட்சியினைப் பொதுமைத் தமிழ் நல உணர்வோடு தமிழ் மூதாட்டி ஔவையார் மனம் மகிழ்ந்து போற்றுகிறார் (புறம்-367).

பெருநற்கிள்ளி போர்த்திறனில் ஏனைய சோழர்கள் போன்ற வளர்ச்சி உள்ளவன். பண்டாரங் கண்ணனார் என்பவர் போர்முகத்து யானைகள் இவன் ஆணைக்குக் கட்டுப் பட்டு, போரில் பங்கு பெற்றதைப் பாராட்டி மகிழ்கிறார். வள்ளன் மையிலும் மற்றைய சோழ மன்னர்போல் நடந்துகொண்ட இவனை உலோச்சனார் என்ற புலவர் 'கனவு கண்டாற்போன்று பெருமளவிற்கு வாரி வழங்குவோன்' என்று வியந்து கூறுகிறார். இவ்வாறாக வேத வேள்வி என்றமைந்த வரையறைக்கு உட்பட்ட இறை உணர்ச்சியும், ஏனைய முடியுடை வேந்தரைத் தன் இல்லம் வரவழைக்கும் ஒற்றுமை உணர்வும், போர்த்திறனோடு படைகளைத் திறமையுடன் இயக்குகின்ற செயல் திறமையும், 'ஊருணி நீர் நிறைந்தற்றே' என்ற வளம் கொண்ட அவனுடைய சோழ நாட்டுச் செல்வத்தைப் புலவருக்கும் பாணருக்கும் வரையாது வழங்கி நின்ற வள்ளன்மையும் அடங்கிய இந் நான்கும் நிரந்தரமான பெருமை பெற்றவை ஆகும். இவை விண்மீன்களின் எண்ணிக்கையைவிட அதிகமான எண்ணிக்கையுள்ள ஆண்டுகள் காலம்வரை காணப்பட வேண்டிய பெருஞ்சிறப்புக்குரியன. இவ்வாறு வாழ்த்துகின்ற ஔவையாரின் கவிமனம் கனிகின்ற அளவிற்கு வாழ்வறங்கொண்டிருந்த இச் சோழனுக்குப் பின்னால் இவனைப் போன்று எல்லா நல்லியல்புகளையும் சரிவிகித நிலையில் பெற்றவர்கள் காணக் கிடைப்பதற்கில்லை. ஆனாலும் இவனுக்குப் பின்பு வந்த மற்றைய சோழ மன்னர்களின் வாழ்விலும் சோழர் பரம்பரையின் பெருமையினைக் காத்த செயற்திறனை நாம் காண்கிறோம். அத்தகைய சோழ மன்னர்களைப் பின் வருமாறு நிரல்படுத்திப் பார்க்கலாம்:

## (எ) I தித்தன்

நக்கீரர் சான்று பகர்வது போல உறையூர் மதில் அரணும், காட்டு அரணும் வலுவேறச் செய்து வடுக

வேந்தன் கட்டி என்பானையும், அவனோடு வந்த பாண அரசன் ஒருவனையும் தன் அவைக்களத்தின் ஆர்ப்பரிப்பிலேயே அஞ்சி ஓடச் செய்தவன் தித்தன் என்னும் சோழன். இவன் கொடைத் திறனும் கவித்திறனும் உடையவனாக இருந்தான்.

II. **அவைக்கோ பெருநற்கிள்ளி :** இவன் மகன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி, இவனோடு பிணக்குற்று வறிய வாழ்வை மேற்கொண்டவன்; புல்லரிசிக் கூழை உண்கின்ற அளவில் தான் கொண்ட கொள்கையில் மாறுதப் பிடிப்பைக் காட்டியவன்; உள்ள வலிமையோடு உடற்திறனையும் பெற்றிருந்தான்; ஆமூர் என்ற ஊரிலிருந்து வந்த மற்போர் வீரனொருவனை நேருக்கு நேர் சந்தித்து வெற்றி கண்டவன்; இந்த அளவில் வலிவும், வனப்பும் உடைய ஓர் ஆணழகன். இத்தகு வீரத்திற்சிறந்த மல்யுத்தப் பயிற்சி செறிந்த மாமல்லனைப் பொருது வென்ற காரணத்தினால்தான் பெண்பாற்புலவர் நக்கண்ணையார் இவனை வீரத்தின் எழுச்சியாகக் கண்டு மகிழ்ந்து இவன்மீது பற்றுக் கொண்டார். இவன்பால் கொண்ட காதலின் காரணமாக மெய் சோர்ந்த நிலையில் ஒரு தலைவி பாடுவது போல நக்கண்ணையார் இவனுடைய ஆண்மையைப் போற்றுகின்றார். சாத்தந்தையார் என்ற புலவரும் இவனைப் புகழ்ந்துரைக்கின்றார் (புறம் 80—82).

மேம்பாடுடைய உடல் வலிமையையும் சிந்தனை ஆழத்தையும் இப் பெருநற்கிள்ளி பெற்றிருந்த போதிலும் ஆலோசனையாளர் அமைந்த அவையைக் கலந்த நிலையில் போர்முகத்துக்குச் சென்ற காரணத்தால் இவனுக்குப் ‘போரவைக்கோ’ என்ற சிறப்புப் பெயர் வாய்த்தது.

III. **தடக்கைப் பெருநற்கிள்ளி :** குடக்கூர் நெடுஞ்சேரலாதனுடன் போர் செய்த நிலையில் சேரனோடு தானும் மாண்டவன் ‘வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளி’ ஆவான். வீழ்ந்து பட்ட இவ்விரு மன்னர்களின் இல்லக்கிழத்தியர் உடன்கட்டை ஏறினர். அவ்வளவில் நாட்டுக்குச் சிறந்த வீரராகவும், வீட்டுக்கு உரிய கணவராகவும் அவ்விருவரும் இருந்தனர். தானும், எதிரியும் மாளும்வரைத் தன்னுடையவரும் மாற்றாரும் யானையொடும் குதிரையொடும் செத்தொழியும்வரை போர் செய்கின்ற இப் பெருநற்கிள்ளி வேல் பல தாங்கிய வலிமை சான்ற கைகளைப் பெற்றிருந்தவன் என்ற பெருமைக்குரியவன்.

**IV. முடித்தலைப்பெருநற்கிள்ளி :** அந்துவஞ்சேரல் இரும்பொறை என்ற சேரமானின் கருவூருக்கு மதம் கொண்ட யானையின் வெறியாட்டத்தினால் சென்றடைந்த முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியை உற்றுப் பார்த்த சேரமானுக்கு அவன் அருகே நின்ற முடமோசியார் இவனை இன்னான் என இனங் காட்டுகின்றார்.

**V. நல்லுருத்திரன் :** பெருநற்கிள்ளி வெகுண்டு செல்லும் யானையினின்று கீழே இறங்காத மனத்திட்பம் உடையவன் என்று சொன்னால், அதே மனத்திட்பத்தை இவனுக்கு அடுத்து வருகின்ற சோழன் நல்லுருத்திரன் என்பவன் பெற்றிருந்தான். அவ் வகை மனத்திண்மையை அவன் தான் தெரிந்தெடுத்த நண்பர்களுக்கு அளிக்கின்ற விருந்தோம்பலிலும், முல்லைக்கலி பாடுகின்ற கவி உள்ள முனைப்பிலும் காட்டுகின்றான்.

**VI. நெடுமுடிக்கிள்ளி :** இவன் தந்தை கரிகாலன் இறந்த பின்பு கி. பி. 180-ல் இவன் அரசனானான்.[13] இவன் ஆட்சிக்கு வந்தபோது இவனுடைய தாயாதியர் ஒன்பது பேர் இவனுடைய அரசுரிமையைப்பற்றிய பூசலில் இறங்கினர்; படைக்கலம் தாங்கிப் போரிட்டபோது ஏற்பட்ட உள்நாட்டுப் போர் இவனுக்குப் பாதகமாக மாறியது. இச் சோழன் தனக்கு அடங்கிப் பல காலம் இருந்த திருக்கோவலூர் அதிபதி மலையமான் மகனிடம் அடைக்கலம் புகுந்தான். இவனைப் பின் தொடர்ந்து வந்து இவனுடைய பங்காளிகள் தாக்கினார்கள். இதனால் இவனுடைய நிலைமை மேலும் நெருக்கடி ஆயிற்று. இவனுடைய தந்தையின் உடன்பிறப்பினளான நற்சோணையின் மகன் சேரன் செங்குட்டுவன் ஆவான். மைத்துனனான நெடுமுடிக்கிள்ளிக்குச் சேரனுடைய உதவி கிட்டியது. நேரிவாயில் என்ற களத்தில் நிகழ்ந்த நேரடிப் போரில் நெடுமுடிக்கிள்ளி வெற்றி பெற்றான். இதன் பயனாகத் தனது அரசுரிமையை இவன் தக்க வைத்துக்கொண்டான்.[14] ஆனால் இதை அடுத்து வந்த காரியாற்றுப் போரில் கொல்லப்பட்டு, காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்றழைக்கப்படுவானாயினான் (புறம்—47). நெடுமுடிக்கிள்ளியின் தம்பி நலங்கிள்ளி புகார் நகரிலிருந்துகொண்டு சோழ மண்டலத்திலுள்ள தனக்கடங்கிய பகுதியை ஆண்டு வந்தான். பாண்டியனும் சேரனும் வஞ்சி மாநகர் நீங்கிச் சோழ நாட்டினுள் வடமேற்கிலுள்ள காரியாறு என்ற இடத்தில் இளங்கிள்ளியை எதிர்த்துப் போராடித் தோற்றனர்.

13 Robert Sewell—Hisi—p.15
14 Ibid— p.15

பாண அரச மரபிற்குரிய 'சீர்த்தி' என்பவளை மணந்த நெடு முடிக்கிள்ளிக்குப் பிறந்த மகன் உதயகுமரன் ஆவான். மாதவியின் மகள் மணிமேகலை இளவயதிலேயே துறவு நோன்பு கொண்ட நிலையில் தன் உருவத்தைக் காயசண்டிகை என்பவளாக மாற்றிக்கொண்டு ' உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' என்ற சமணக் கோட்பாட்டின் வழி நின்று பசிப்பிணி அகற்றி வந்தாள். இம் மணிமேகலையைக் காமுற்ற உதய குமரன் காயச்சண்டிகையின் கணவன் வித்யாதரன் கையில் கொலை யுண்டு போனான். உதயகுமரனின் தவறினைத் தவருகவே ஒப்புக்கொண்டு தன்னுடைய மகனின் சாவைச் சோழன் நெடு முடிக்கிள்ளி அங்கீகரித்தான். இதன்மூலம் மனுநீதிச் சோழனின் மறு பதிப்பாக உயர் தனிச் சிறப்புடன் அற உணர்வில் இச் சோழன் உயர்ந்து நிற்கிறான்.

நெடுமுடிக்கிள்ளியின் மனைவி சீர்த்தி தன் கணவன் சிறை செய்த மணிமேகலையை விடுவித்தபோது இளம் கிள்ளி கச்சிமா நகரில் மணிமேகலைக்கு அறச்செயல் புரிய உறுதுணை புரிந்தான். நெடுமுடிக் கிள்ளிக்குத் திரையன் என்ற மகன் பிறந்தது தமிழக வரலாற்றுக்கு உரிய முக்கியச் செய்தியாகும். நாக நாட்டு மன்னன் வளைவணன் மகள் பீலிவளை என்பவள் புகார் நகரத்துக் கடற்கரை ஓரத்துப் புன்னைமரச் சோலையில் நெடு முடிக்கிள்ளியுடன் கூடி இனிது இருந்தாள். பின்பு அங்கிருந்து அச் சோழன் அறியாத நிலையில், அவள் பெற்றெடுத்த பிள்ளை இளந்திரையன் ஆவான். இத் திரையனே தொண்டை மண்ட லத்தில் உருவான பல்லவப் பேரரசை ஆரும் நூற்ருண்டில் கட்டிய பல்லவர்களின் தலைமகன் என்பது ஆராய்ச்சிக் கருத் தாகும். இத் திரையன் தன் தந்தையை வந்தடைகின்ற வழியில் கப்பல் சிதைவினால் காணமல் போய் விட்டான் என்ற அவலம் சோழன் நெடுமுடிக்கிள்ளியின் உள்ளத்தில் நிறைந்திருந்த வேளையில் இந்திரவிழா எடுக்க மறந்தான். இதன் காரணமாக இந்திரன், மணிமேகலா போன்ற தெய்வங்களின் சாபம் ஏற்பட்டது என்றும், அதனடியாகத்தான் புகார் நகரத்தின் ஒரு பகுதி கொடுங்கடலால் கொள்ளப்பட்டது என்றும் மணிமேகலை கூறுகிறது.

## (ஏ) கோச்செங்கணன்

முற்காலச் சோழர்களில் கடைசி அரசன் கோச் செங்கணன் என்று கருதப்படுவதில் வரலாற்று ஆராய்ச் சியாளருக்குள் கருத்து வேறுபாடு உண்டு. சேரமான் கணைக்கால் இரும்பொறையைக் கொங்கு நாட்டின் கருவூர்ப் பக்கமுள்ள கழுமலம் என்ற இடத்தில் இக் கோச்செங்கணன்

தோற்கடித்தான். இவனைப்பற்றிய இலக்கியச் செய்திகள் புறநானூறு 74-ஆம் பாடலிலும், சேரமானின் நண்பரான பொய்கையார் என்ற புலவர் பாடிய 40 பாடல்களடங்கிய களவழி என்ற நூலிலும் காணப்பெறும்.

கழுமலம் என்ற ஊரில் தோற்றுப்போன சேரமான் குட (கிழக்கு) வாயில் கோட்டத்தில் சிறை வைக்கப்பட்டான் எனவும், தாகத்திற்கு நீர் கேட்டபோது அது மறுக்கப்பட்ட நிலையில் தண்ணீர் அருந்தாமல் மான உணர்ச்சியுடன் அச் சேரன் உயிர்விடத் துணிந்தான் எனவும், அப்படியே அவ் வழியில் உயிரிழந்தான் என்றும் எழுபத்து நாலாவது புறப் பாட்டின் அடிக்குறிப்புச் செய்திகள் சொல்லுகின்றன. ஆனால் சோழன் கோச்செங்கணானின் பெயர் புறம்—74-ல் காணப்பெற வில்லை. இதை வலியுறுத்துகின்ற டாக்டர் மா. இராசமாணிக் கனாரின் கருத்துப்படி புறம்—74-ன் அடிக்குறிப்பு தவறான செய்திகளையுங் கூடக் கொடுக்கலாம்.

'சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் கோச் செங்கணானோடு போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையில் கிடந்து தண்ணீர் தா என்று பெயராது பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து 'உண்ணான் சொல்லித் துஞ்சியப் பாட்டு' என்ற புறம் 74-ன் அடிக்குறிப்பில் உள்ள 'உண்ணான் சொல்லித் துஞ்சியப் பாட்டு' என்ற செய்தியின்படி சேரன் கணைக்கால் இரும் பொறை இறந்துபடுகின்றான். பேராசிரியர் K. A. நீலகண்ட சாஸ்திரியார் 'துஞ்சினான்' என்பதை 'உறங்கினான்' என்றும், அவ்வாறு உறங்கித் தன் தாகத்தைத் தணித்துக்கொண்டான் என்றும் கூறுகிறார். சேரமானைச் சோழன் விடுதலை செய்த குறிப்புக்குப் பேராசிரியரின் இந்த விளக்கம் துணை நிற்கிறது.

தன்னுடைய மானவுணர்ச்சிப் பங்கப்பட்ட பிறகு தன்னுயிரை மாய்த்துக் கொள்வது அந் நாளைய சமூக வாழ்விய லோடு ஒட்டி நின்ற பழக்கந்தான்; படைஞர் வாழ்வுக்கு அது புறம்பானது அல்ல. ஆனால், 'சவுக்கடியில் துவளுகின்ற நாயினைப் போல் தாகத்திற்கு நீர் கேட்ட நிலையில் அல்ல லுற்றேனே' எனச் சேரமான் புறநானூற்றுப் பாடலில் அரற்றுவது அவனுடைய மனநிலையைத் தனிப்பட்ட முறையில் காட்டுவதாகக் கொள்ளப்பட வேண்டியதில்லை. போரிற் தோற்றுப் போன பின்பு ஏற்பட்ட அவனுடைய அவலநிலைக்கு உரித்தான தமிழ் நாகரிக மரபு வழிச் சிந்தனையின்படி அவன்

தன்னையே நொந்து கொள்கிருன் (புறம் 74). கோச் செங்கணுன் கொங்கரையும் வஞ்சிக்கோவையும் (இரும்பொறை) போர்க்களத்தில் வென்று கொன்ருன் எனக் களவழி கூறுகிறது. ஆகவே, சேரமானின் வாழ்வு போர்க்களத்திலேயே முடிவுற்றது என்ற செய்தியின் அடிப்படையில் பார்க்கின்றபோது சேர மானின் தன்மானச் சிதைவுக்கான சிறையிருப்பும், 'உயிர் வாழாக் கவரிமான் அன்ஞர்' என்றளவில் மேற்கொண்ட உயிர்த்துறப்பும் வரலாற்று உண்மைகளாகத் தோற்றம் அளிக்கவில்லை.

மேலும், களவழி பாடி அச் சேரனைச் சோழனுடைய சிறை யிலிருந்து பொய்கையார் விடுவித்தார் என்ற செய்தியும் வெறுங் கதையாகப் போய்விடும். சேரமான் போரில் இறந்து பட்டதாகக் கூறுகின்ற களவழி தோன்றியதே அச் சேரனைச் சிறைக்கோட்டத்திலிருந்து மீட்கத்தான் என்ற கருத்து அடிப்படையான முரண்பாட்டில் அடிபட்டுப் போய்விடுகிறது.

செங்கணுனின் கைதியாக இருந்த சேரமானுக்கு உதவப் பொய்கையார் வருவதானது சேரமானின் விடுதலைக்கு வழி காட்டுகிறது. 'தமிழ் நாவலர் சரிதை'யில் 'இது கேட்டுப் பொய்கையார் களவழி நாற்பது பாட, செங்கணுன் சிறைவிட்டு அரசளித்தான்' என்ற குறிப்பு காணப்படுகிறது. சேரமானைச் சிறை வைத்த செங்கணுனின் அரசியல் நடவடிக்கைகளை அந் நாளைய தமிழ்ச் சமுதாயத்தின் இயல்புகளின் பின்னணியில் ஆராய்வது இவ்விடத்தில் பொருத்தமாகும். அரசனுக்குரிய தகுதியையோ போர்க் கைதிக்குரிய அந்தஸ்தையோ அந் நாளைய தமிழ்ச் சமுதாயத்தின் அரசியல் அமைப்பில் போர்க் கைதிகளாக இருந்த அரசர்கூடப் பெற்றிருக்கவில்லை. போர்க் கைதிகள் வெற்றியாளனுடைய தனி நபர்ச் சுதந்தரமுள்ள விருப்பு வெறுப்புகளுக்கு உட்பட்டுப் போனுர்கள். தோல்வி யைத் தாங்கி நின்ற அவமானச் சின்னங்களாக அவர்கள் வெற்றியாளரின் சிறைகளில் கிடந்து உழன்ருர்கள். சிறை பிடிக்கப்பட்ட சேரமான் இத்தகைய நிலைக்கு உட்பட்ட முறையில் மிகமிக வாடி, வாழ்வின் பிடிப்பை இழந்து, உள்ளம் நலிந்த வேளையில் பரிசில் வாழ்க்கை கவிநலப்பாணர் பொய்கை யார் அங்கே வருகிருர்.

போரிடுவதானது உடலுக்கும் உள்ளத்துக்கும் உரிய ஆற்றல்களுக்கு ஒரு வடிகால் எனவும், அப் போரில் ஏற்படு கின்ற வெற்றி தோல்வி ஒரு கூட்டுப் பந்தயத்தின் (Tournament) பிரிக்கப்பட முடியாத கூறுபாடுகள் எனவும் அமைகின்ற

பொதுவான போர்நெறிக் கோட்பாடு சங்கத் தமிழர் அறியாதது. ஐரோப்பிய வரலாற்றில் இந்தக் கோட்பாடு பெருமளவிற்கு மதிக்கப்பட்டது. சிறைக் கோட்டத்தில் சேரனும், வெற்றி எக்களிப்பில் சோழனும்—என்ற நிலையை ஆராயத் தலைப்படல் வேண்டும். தாகம் தீர்க்கத் தண்ணீரைத் தானாகக் கேட்டும், அச் சேரனுக்கு அது கிடைக்கவில்லை; போரில் ஏற்கெனவே மானத்தை இழந்தவன் அவன்; அவன் ஒரு மன்னன். தோல்வி என்பதே ஓர் இழுக்கு; குடிநீர் பெறுவதற்குக்கூட அவனுக்கு அருகதை இல்லை என்ற இழிவு மற்றொருபுறம். இவ்விரண்டு துன்பியல் உணர்வுகளும் சேரனின் உள்ளத்தைக் கவ்விய போது, தன்னிரக்கம் நேரடியாக அவனைப் பாதித்த அவ் வேளையில், தன்மானம் என்ற உயர்வுணர்வின் தகிப்பில், முழுமையான ஆன்ம சிலிர்ப்பில் அவன் ஈடுபட்டான். இந் நிலையில் காலந்தாழ்த்தி அளிக்கப்பட்ட தண்ணீரை அவன் அருந்த மறுத்து விடுகிறான். தாகத்தினால் மெல்லக் கவியும் சாவின் வரவில் தன் வாழ்வின் இழிவு துடைக்கப்பட வேண்டிய அவசியத்தை உணர்ந்துகொண்ட உள்ளப்பாங்கு அவனிடம் ஓர் அசாதாரணமான மன அமைதியைக் கொண்டுவந்து சேர்த்துவிடுகின்றது. இதில் சேரனுக்குரிய வெற்றி அவ னுடைய தன்மானம் உயர்ந்திருந்த தனிவழி மேம்பாடு ஆகும்.

சோழன் செங்கணான் இதை உணர்ந்த முறையில்தான் சேரனை விடுவிக்கிறான். அதோடுகூட நல்லியல்புப் பொய்கை யார் எடுத்துக் கூறிய அறவுணர்வு அவனைச் சிந்திக்கவும் அதன்வழி செயல்படவும் செய்கிறது. புலவர் சொல் கேட்கின்ற சோழ மன்னவர் பரம்பரையில் வந்த அவன், பரிவுணர்ச்சி பற்றி எடுத்துக் கூறும் பொய்கையாரின் நல்மனத்தைப் புரிந்து கொண்டு அதன்படி சேரனை விடுவிக்கின்றான். மேலும், பல நாட்கள் சேரனைச் சிறை வைக்கவோ, தாகத்திற்கு இனிமேல் நீரருந்துவதற்கில்லை என்ற சூளுரையின் விளைவாக அச் சேரன் இறந்துபட்டால் அதனால் வருகின்ற அவச் சொல்லைத் தாங்கிக் கொள்ளவோ கோச்செங்கணானுக்கு மனம் இல்லை. ஆகவே, சேரனுக்கு விடுதலை கிட்டியது. இப்படிச் சொல்வதன்மூலம் சம்பந்தப்பட்ட அரசர்களின் உயர் மன நிலைகளை அந் நாளைய அரசியல் பலகணியில் பதித்துப் பார்த்து அக் காலச் சமூக நியதிகளுக்கு உட்பட்டு இயங்கிய அவர்க ளுடைய தனி மனித மனவோட்டங்களைத் தமிழ் நெஞ்சத்தினூடே செல்லவிட்டுக் கணிக்கின்ற திறனாய்வு நமக்குக் கிட்டும். பொய்கையாரின் 'களவழி' என்ற கையூட்டின் மயக்கத்தில் கோச்செங்கணானைச் செயல்பட வைப்பது அச் சோழனின் அரசத்

தகுதியை அசாதாரணமான முறையில் குறைத்துப் பார்க்கின்ற மதிப்பீடாகத்தான் கொள்ள முடியும்.

புலவர்களால் பாடப்பெறுவது அரசனுடைய பொது வாழ்க்கையின் சிறப்பைக் காட்டும். இத்தகைய எண்ணத்தின் வழிநின்ற நிலையில்தான் சோழன் கோச்செங்கணான் களவழியை ஏற்றுக்கொண்டிருத்தல் வேண்டும். பொய்கையாரின் புகழ் மொழியான களவழி செங்கணானின் வெற்றி மமதைக்கு வேண்டிய திருப்தியை அளித்த நிலையில், சேரனுக்கு விடுதலையும் கிட்டியது என்ற செய்தியோடு அதே சோழன் பின்பு ஒரு சைவ நாயனாராக மாறியதையும், எழுபது சிவாலயங்களைக் கட்டியதையும் இணைத்துப் பார்க்கவேண்டும். முதலில் சாதாரண மனித மனநிலையிலுள்ள சோழ மன்னனாகவும், பின்பு அப்பர் போன்ற சமய ஞானிகள் போற்றுகின்ற அருளாளராகவும் செங்கணான் தோற்றமளிக்கிறான். இந்த இரண்டு பகுதிகளும் அடங்கிய இவனுடைய வாழ்வுச் செய்திகள் இவனைச் சங்க காலத்திற்கே உரியவன் அல்லன் எனச் சில அறிஞர்களைச் சொல்ல வைத்துவிட்டன.[15] இவ்வறிஞர்கள் கோச்செங்கணானைச் சங்க காலத்திலிருந்து அப்புறப்படுத்திப் பார்க்க வைக்கின்ற இச் செய்திகளில் ஒன்று அவனுடைய சைவ சமயச் சேவை ஆகும். மற்றொன்று அவனுடைய சேனையில் யானைகளும், குதிரைகளும் மிகுந்து இருந்த நிலையில் விறல் மன்னர் போன்றவரை வென்றவன் என்று திருமங்கையாழ்வார் தரும் குறிப்பு ஆகும்.

### I. சமய நிலை

சங்க காலத்தில் சமயங்களின் நிலை என்ன ? அவை தெளிவான அளவில் தனிமைச் சிறப்போடு கூடிய தனி வளர்ச்சி பெறவில்லை. இந்து சமயத்தின் பொதுமைப் போக்குக்கு எதிர்ப்பாகத் தோன்றித் தமிழ்மண்ணில் வேரூன்றிய சமணமும், பௌத்தமும், சிலம்பு, மணிமேகலை எழுந்த காலத்திற்கு முந்திய சங்க காலம் என்றாலும் இந்து சமயத்தோடு போராடுகின்ற அளவிற்கு அவற்றிற்கு வலிமை இன்னும் வாய்த்துவிடவில்லை. அப்படிப்பட்ட போராட்டம் நிகழ்கின்ற காலம் களப்பிரர் வந்த பின்பே வருகிறது. தண்டியடிகள், நமிநந்தியடிகள் போன்றவர்களின் சிவவழி, சமணவழி வாதங்கள் சோழநாட்டில் களப்பிரரின் வருகைக்குப் பின்பு ஏற்படுகின்றன. இந் நிலையில்தான் சோழமன்னன் செங்கணான் எழுபத்தெட்டுச் சிவன் கோயில்களைக் கட்டினான். இக் கோவில்களின் மேலான அமைப்புப்பற்றி

15 டாக்டர் T. V. மகாலிங்கம், டாக்டர் மா. இராசமாணிக்கனார்

அப்பரடிகள் தாம் பாடிய அடைவுத் திருத்தாண்டகத்தில் பாராட்டிக் குறிப்பிடுகிறார்.

சிவநெறியில் சென்ற கோச்செங்கணான் திருநாறையூரின் விஷ்ணு தெய்வத்தை இந்து சமய ஒருமை நெறி உணர்வோடு வழிபாடு செய்திருக்க வேண்டும். இவனைப்பற்றிப் பாடிய பொய்கையார் பொய்கையாழ்வாராகவும், இவன் சிவனடியாரான நாயனாராகவும் மாறுகின்ற அளவில் சிவநெறி வைணவப் போக்கு என்ற இரண்டு தடங்கள் இந்துமதம் என்ற ஒருமைப்பாட்டுப் பாதையில் ' இரண்டும் ஒன்றே ' என்ற பொதுமைப் போக்காகப் பதிந்து நின்றன. இவ்விரு பாகுபாடுகளும் தனிமை உணர்ச்சி கொண்டு இயங்கத் தக்க அளவில் ஆரவாரமான தனிப்பட்ட வளர்ச்சியை அன்று பெற்றிருக்கவில்லை. சேக்கிழாரின் பெரிய புராணம் இந்தக் குறிப்பைத் தருகிறது. ஆகவே, தில்லையில் சிவசேவை செய்கின்ற அதே கோச்செங்கணான் திருநாறையூரில் வைணவக் கடவுளை வணங்கி நிற்கிறான். இதைத் திருமங்கை யாழ்வார் கூறுகிறார். எழுபது கோயில்களைக் கட்டுகின்ற முனைப்பு அச் சோழனுக்கு ஏற்பட வேண்டுமானால், அன்றைய சங்கத் தமிழகத்தில் சமயச் சார்பான எண்ணங்களுக்குப் பின் ஏற்பட்ட எழுச்சியே இவ்வாறு உருவாக்கம் பெற்றிருக்க வேண்டும். இந்த வாதம் சங்க காலத்தில் நிலவிய சமய நிலைக்குரிய பொதுமைப் பார்வைக்குப் புறம்பான செய்தியின் அடிப்படையில் எழுந்தது எனலாம்.

' தில்லைவாழ் அந்தணர் ' என்ற சிறப்பு வந்தடைகின்ற வகையில் வேதியர் பலருக்குச் சிதம்பரத்தில் மாளிகைகளும் முற்றூட்டுகளும் அளித்தான் இக் கோச்செங்கணான் என்று சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் கூறுவதிலிருந்து இச் சோழனைச் சங்க காலத்தவன் அல்லன் என்று கூற முடியாது. கோச்செங்கணானுக்குப் பல சந்ததிகளுக்கு முந்திய சோழன் ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆவான். இவன் சங்க காலத்தவன் என்பதில் முழுமையான கருத்து ஒற்றுமை உண்டு. இவனுக்குரிய சிறப்பு இவன் ராஜசூயம் என்ற அரச யாகத்தை அந்தணர் பலர் துணை நிற்க நிறைவேற்றியதுதான். அவ் வந்தணர்களுக்கு முற்றூட்டுகளும் அவன் அப்போது வழங்கினான். இதே சமயச் சார்புடைமையைக் கொண்டிருந்த பெருநற்கிள்ளியின் வழிவந்தவனாக நடந்துகொண்டவன் கோச் சோழன் என்று கொள்ளலாம்.

கோச்செங்கணானின் தாய்தந்தையர் கமலவதி, சுபதேவன் என்பவராவர். இப்படிக் கூறுபவர் பதினோராம் நூற்றாண்டைச் சார்ந்த சேக்கிழார் ஆவார். இவர்களுடைய வடமொழிப்

பெயர்கள் சங்க காலத்தவை அல்ல என்றும், ஆகவே கோச் சோழன் சங்க காலத்திற்குப் பிற்பட்டவன் என்பதும் ஒரு கூற்று. உதயகுமரன் என்ற வடமொழிப் பெயர் கொண்ட சோழ இளவல், சோழன் நெடுமுடிக்கிள்ளிக்கும் அவன் மனைவி சீர்த்திக்கும் பிறந்தவன். சங்க காலத்தைச் சேர்ந்த மாதவியின் தோழியின் பெயர் வயந்த மாலை (வசந்த மாலை என்ற வடமொழி கலந்த பெயர்). புனிதவதி என்ற வடமொழிப் பெயருடைய சோழ நாட்டவரான காரைக்காலம்மையார் என்பவர், கி.பி. ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்தவர். வடமொழிப் பெயர்கள் தமிழகத்தில் தோன்றுகின்ற முறைமையைக் கொண்டு காலத்தைக் கணிப்பது பழுதற்று விளங்க முடியாது என்பது பொருந்தும். அவ்விதமான கணிப்பில் பொதிந்து கிடக்கும் வரலாற்றுத் திரிபுகளை நோக்கினால். அந்த வழியில் உருவாக்கப் பெறும் காலக் கணக்கீடுகள் எல்லாம் வலிமையோடு ஒரே சீராக விளங்க முடியாது என்பதும் தெளிவு.

II. போர்த்திறன்

கோச்செங்கணானுடைய போர்த்திறனின் காரணமாகச் சோழநாட்டின் எல்லைகள் தொண்டை மண்டலம் பாண்டிய நாடு என்றளவில் விரிந்து கிடந்தன. கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவனான இரண்டாம் நந்திவர்ம பல்லவன் காலத்திய திருமங்கையாழ்வாரின் குறிப்புப்படி இக் கோச்சோழன் அழுந்தூர், வெண்ணி போன்ற இடங்களில் போர்கள் செய்து வெற்றி பெற்ற சிறப்புடையவன்; யானை, குதிரை, போர்வீரர் அடங்கிய 'கடல் போன்ற' பெரும்படையோன். 'தென்னவனால் உலகாண்ட செங்கணான்' என்று சிவனடியார் சுந்தரர் கூறுவது போல, பெருநிலம் வென்ற போர்த்திறன் அவனுக்குரியது. இவ்வாறு போர்வீரனாக விளங்கிய பின்பு அருளாளராகவும் ஆன பெருமை இவனுக்கு உண்டான காரணத்தால் இவனைப் பாடிய பிற்காலப் புலவர்கள் 'கழல் மன்னர், விறல் மன்னர், படை மன்னர்' போன்றவரை 'தெய்வவாள்' கொண்டு வென்றவன் இச் சோழன் என்ற தெய்வீகத் தன்மையை இவனுக்கு வழங்கினர்.

## (ஐ) நல்லடிக்கோன்

நல்லடிக்கோன் என்பவன் கோச்சோழனின் மகனாவான் என்று சுந்தர சோழன் (கி. பி. 10ஆம் நூற்றாண்டு) காலத்திய அன்பில் பட்டயம் கூறுகிறது. அப்படியானால் நல்லடிக்கோன் சங்கச் சோழருள் கடைசி மன்னனா? அன்பில் சான்று தவிர, அகநானூறும் (பாடல்-356) இவனைப்பற்றிய செய்தியைத் தருகிறது. அவ்வளவே இந் நிலையில் கோச்செங்கணானையே கடைசிச் சங்கச் சோழன் என்று கூறலாம்.

# 3. சங்கச் சோழர் அரசியல் - சமூக வரலாறு

## (அ) தமிழக வரலாற்றில் சோழர்கள்

சங்க காலத்தில் வேளாண்மையைச் சிறக்கச் செய்த காவிரியின் வளத்தை அனுபவித்த சோழர்களுடைய நாட்டில் வணிகமும் ஒரே சீராக வளர்ச்சியுற்றது. பண்டங்களைச் சேகரித்து வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கின்ற பொருளாதாரப் பணியில் ஈடுபட்ட சோழ வணிகர்களின் வளர்ச்சியைப் போலச் சேர பாண்டிய நாடுகளிலுள்ள சமகாலத்திய வணிகர்கள் பெரும் ஆக்கத்தைப் பெறவில்லை. ஏனென்றால், சோழநாட்டு வணிகர்களான மாநாய்க்கர்கள் என்ற கடல்வழி வணிகரும், மாசாத்துவர் என்ற பெருநிதியாளரும் அரசர்கள் போலச் சமூக அந்தஸ்தையும், வாழ்வின் நலன்களையும் அனுபவித்தார்கள். சோழநாட்டுக்கு அதிபதி (Overlord) என்றமைந்திருந்த சோழ மன்னனுக்கு இணையாளர்களாக வணிகர்கள் விளங்கிய காலம் வந்துவிட்டது. அத்தகைய அளவில் சமூக அடுக்கமைப்பில் (stratification of society) வணிகரையும் தனிச்சக்தியுடைய சமூக வகுப்பாகக் கொண்ட சோழ சமுதாயம் தோன்றிவிட்டது. தன்னிறைவு கொண்ட கிராமப்பொருளாதார வேளாண்மை யோடு தனியார்வத்துடிப்பு உடைய வணிகமும் சிறந்த சமூகயியல் சேர பாண்டிய நாடுகளில் காணப்பெறவில்லை. இந் நிலையில் சோழர்கள் தமிழக வரலாற்றில் புதுமைக்கு இடங் கொடுத்தவர்கள் ஆவார்கள். இவ்வாறு தொடங்கிய சோழ சமுதாயத்தின் பரிணும வளர்ச்சி களப்பிரரின் படையெடுப்புக்குப் பின்பு பேதலித்துப் போய்விட்டது எனலாம். கி. பி. 300-லிருந்து 600 வரை நீடித்த களப்பிரரின் ஆட்சிக்காலத்தில் சோழ நாட்டின் நிலைமைபற்றித் தெளிவாகத் தெரிவதற்கு இல்லை.

களப்பிர நாயனர் என்ற சைவநெறி மெய்யடியாராக ஆன்மீய மலர்ச்சியுற்ற களப்பிர ஆட்சியாளர் தில்லைவாழ் அந்தணரின் ஒப்புதல் கிடைக்காத காரணத்தால் சோழ மன்னனுக முடி சூட்டிக்கொள்ள இயலாமற்போய்விட்டது. இவ்வாறு களப்பிரரின் காலத்தில் சோழநாட்டின் பாரம்பரியங்கள்

வலுவோடுதான் பெரிதும் காணப்பட்டன. எனக் கூறலாம். பல்லவரும் பாண்டியரும் சங்கத் தமிழகத்தின் உயிரார்ந்த கலாசாரத்தைத் திரும்பவும் துலக்கினார்கள். ஆதித்தமிழ் இறை வழிபாடும், அந்தணர்வழி சடங்காசாரமும் பின்னிப்பிணைந்த ஒருங்கிணைவில் (Synthetic Evolution) தமிழகத்தின் சமய வாழ்வையும் கிராமக்குடியரசு என்றளவில் கிராம மன்றங்களையும் அவர்களுடைய பேரரசுகள் வளர்த்தன. கி. பி. 600-லிருந்து கி. பி. 880 வரை தமிழகத்தில் நிலவிய அப் பேரரசுகளின் பாரம்பரியங்களைச் செம்மைப்படுத்துகின்ற பணியை மேற்கொண்ட பிற்கால விஜயாலய சோழனுடைய வழிவந்த சோழர்கள் சங்ககாலத்திய சோழர்களின் வாரிசுகளாக விளங்கினார்கள். பல்லவர்—பாண்டியர் பேரரசுகளின் அழிவில் தடைபட்டுப் போகாத தமிழகத்தின் கலாசார வளர்ச்சி இச் சோழர்களின் காலத்தில் தனது பரிணும வளர்ச்சிக்கு உரிய மேம்பாடுகளைப் பெற்றது. இவ்வாறு அமைந்த சோழ அரசின் ஆக்க சக்தியின் உறுதுணைகளாகச் சங்ககாலச் சோழர்களின் அரசியல், இலக்கியக் கலை, சமயவாழ்வுச் சாதனைகள் விளங்கின. ஆகவே, சோழப் பரம்பரையினர்தான் தமிழ்க்கலாசாரத்தின் தொடர் வளர்ச்சிக்கு உரிய நேர்வழித் தடத்தைக் காட்டியவர்கள் ஆவர்.

சங்ககாலப் பாண்டியர்களின் வாரிசுகளாகக் களப்பிரரின் காலத்திற்குப் பின்பு கி. பி. 600-லிருந்து 880 வரை தமிழகத்தை ஆண்ட முதலாம் பேரரசுக்குரிய பாண்டியர்கள் கி. பி. 1205-ல் தங்களுடைய இரண்டாவது பேரரசின் தமிழக முழுமைக்கும் உரிமையான வளர்ச்சியைப் பெற்றார்கள். கி. பி. 985-ல் சோழ அரசபதவி ஏற்ற ராஜராஜன் I காலத்திலிருந்து 1205 வரையுள்ள 120 ஆண்டுக் காலத்தில் தென்னிந்தியாவின் அரசியலைச் சோழர்கள் தங்களுக்கென அமைந்த சோழ அரசியல் கலாசார தாளகதி (Rhythm of Chola Polity and Culture) இட்ட வழியில் ஓட்டத் தொடங்கினார்கள்.

I. சோழ வரலாற்றுத் தாளகதி (Rhythm of Chola Polity) என்றால் என்ன ?

சங்ககாலச் சோழர்கள் சங்கத் தமிழகம் முழுமைக்கும் சொந்தமானவர்கள்தாம். ஆனாலும் சோழர்களுக்கென்று சோழ அரசியல் தாளகதி உருவாக்கப்பட்டது. இத் தாளகதியைச் சோழர்க்குரிய தனித்தன்மையோடு உருவாக்கியவர்களில் தலையாய மன்னனாகக் கரிகால் பெருவளத்தான் காணப்பெற்றான். இவன்தான் தமிழக வரலாற்றில் ஏகாதிபத்திய ஆட்சிமுறைக்கு ஒப்புமையில்லாத இலக்கணம் அமைத்தவன். ஆரியப்படை

கடந்த நெடுஞ்செழியன் என்ற சங்ககாலப் பாண்டியன் தன்னுடைய ஏகாதிபத்திய திக்விஜயப் போரில் வட இந்திய மன்னர்களை வெற்றி கண்டது இலக்கிய வழிவந்த வரலாற்றுச் செய்தியாக நாம் கொள்ளலாம். சேரன் செங்குட்டுவன் கங்கை நீரை, அவனுல் வடபுலத்தில் வெல்லப்பட்ட வடநாட்டு மன்னர்களின் தலைமேல் ஏற்றித் தமிழ்நாடு கொண்டு வந்தான். சோழ நாட்டின் நங்கை நல்லாள் கண்ணகி பாண்டிய நாட்டில் தனது வாழ்வு நலமான கணவனை இழந்த பின்பு சேரநாட்டில் பத்தினித் தெய்வமாக்கப்படுகின்ற தமிழ்க்கலாசார ஒருமைப்பாடு இயல்பாகவே தமிழகத்தில் காணப்பட்டதுதான்; ஆனுல் இதைச் செயலாக்கத்தில் கொண்டு வந்தவன் சேரன் செங்குட்டுவன் ஆவான். அச் செங்குட்டுவன் காலத்தால் கரிகாலனுக்குப் பிந்தியவன். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைவிடப் பெருஞ்சிறப்புக்கு உரிய கரிகாலன் தனது ஏகாதிபத்தியத்தையும் அதிகாரத்தையும் பின்வரும் வழிகளில் நிலைப்படுத்தினுன். கரிகாலன் மேற்கொண்ட அரசியல் ஒழுகலாற்றின் அடிப்படைத் தத்துவங்களைப் பிற்காலச் சோழர்கள் தங்கள் ஆட்சிக்காலங்களிலும் வழிமுறைப்படுத்தினுர்கள். இவ்வாறு சோழ அரசியலின் ஒழுகலாறு தனக்கென அமைந்த தாளகதியில் தனது வரலாற்றுப் பூர்வமான வளர்ச்சியில் கரிகாலனைத் தொடக்க நிலையாகக் கொண்டிருந்தது.

1. இராணுவ ஏகாதிபத்தியம் (Military Imperialism)

இமயத்தில் புலிக்கொடி நாட்டிச் சோழரின் வீரத்திற்கு விளக்கம் தந்தவன் கரிகாலன் ஆவான். பிற்காலச் சோழர்கள் இதே போன்ற பேரரசுப் பாணியில் படை நடத்திச் சாளுக்கியரின் துங்கபத்திரை, கோதாவரி ஆகிய ஆறுகள் கொண்ட நாடுகளைப் பிடித்தார்கள்.

2 கடற்படை ஏகாதிபத்தியம் (Naval Imperialism)

சங்க காலத்தில் சேரரும் பாண்டியரும் கடற்படை கொண்டு வெளிநாட்டை வென்றது கிடையாது. சோழன் கரிகாலன்தான் ஈழத்தைக் கடற்படையின் உதவியோடு கைப்பற்றினுன்.[1] இதே பாரம்பரியத்தின் வாரிசுகளாக விஜயாலய சோழர்களில் ராஜராஜன் I, ராஜேந்திரன் I, வீரராஜேந்திரன் I ஆகிய மூவரும் கடற்படை கொண்டு ஈழத்தையும், கீழைநாடான கடாரத்தையும் வென்றனர்.

1 N. Subramanian —' History of Tamil Nadu ', 1972, p.75

### 3 பொருளாதாரப் பேராதிக்கம் (Economic Imperialism)

கரிகாற்சோழன் காவிரி நாடனாகவும் விளங்கியதால், பெரு வளத்தான் என்ற முறையில் பெருமை பெற்று (Lord of Wealth), இந்த வகை விருதுக்கு அமைந்திருந்த பெருஞ்சிறப்புக்கு உரம் சேர்க்கின்ற வகையில் இராணுவ வெற்றியால் கைக்கொண்ட நாடுகளைச் சோழ நாட்டின் பொருளாதார மேம்பாட்டுக்கு அவன் பயன்படுத்தினான். தொண்டை நாட்டை அவன் வென்றபோது அங்குள்ள காடுகளை அழித்து விளைநிலப் பகுதிகளாக்கி 24 கோட்டங்களை உண்டாக்கினான். இதே போல விஜயாலய சோழர்கள் கடாரத்தின்மீது படையெடுத்துச் சென்றதற்குக் காரணம் சோழ நாட்டின் பொருளாதார மேம்பாட்டுக்குத் துணை நின்ற கடல்வழி வணிகத்தைக் காத்து ஒழுங்குபடுத்துவதற்குத் தான். கரிகாலன் ஈழத்திலிருந்து கொண்டுவந்த 12,000 அடிமைகளைக் கொண்டு காவிரிக்குக் கரை கட்டினான். ஒன்பது இலட்சம் போர் வீரர்களைக் கொண்ட சோழர்படையை நடத்திச் சாளுக்கிய நாட்டுக்குச் சென்ற ராஜேந்திரன் I ஏராளமான அடிமைகளைப் பிடித்துக்கொண்டு சோழநாட்டுக்குத் திரும்பினான் என சாளுக்கிய நாட்டின் ஹோட்டூர் கல்வெட்டு கூறுகிறது. சோழநாட்டின் பொருளாதார மேம்பாட்டுக்குக் காவிரியின் குறுக்கே கல்லணை கட்டிய கரிகாலனைப் பின்பற்றிப் பிற்காலச் சோழர்களில் பலர் வீராணம் ஏரி போன்ற நீர்ப்பாசன ஏற்பாடுகளைச் செய்தனர். வட இந்திய வெற்றிகளின் பயனாகக் கோசாம்பி வஜ்ர நாட்டிலிருந்து கொற்றப்பந்தர் பெற்ற கரிகாலனைப் பின்பற்றி, பிற்காலச் சோழ மன்னர்களில் ஆதித்த சோழன் கொங்கு நாட்டில் போர்ப் படை நடத்தி, அந் நாட்டை வென்றபோது தங்கம் கவர்ந்து வந்து தில்லைக் கோவிலுக்கு அளித்தான். சாளுக்கிய நாட்டில் ராஜராஜன் I போரிட்டுப் பெற்ற பெருநிதியமான 222 கிலோ தங்கத்தையும், 266 கிலோ வெள்ளியையும் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வழங்கினான்.

### 4. கலாசாரப் பேராளுமை (Cultural Imperialism)

தான் கைப்பற்றிய தொண்டை நாட்டைச் சீர்படுத்திக் குறும்பர்களைக் கரிகாலன் குடியேற்றியபோது அவர்களை நாகரிகப்படுத்திய நிலையில் தமிழ்க் கலாசாரத்தை நிலை நாட்டினான். ஒளியரையும் இவன் குடியேற்றம் செய்தான். ராஜராஜன் I காலத்தில் தமிழர்கள் ஈழத்தில் குடியேறினார்கள். இவ்வாறு அந் நாட்டில் தமிழ்க் கலாசாரம் வேரூன்றியது. தொண்டை நாட்டில் பெற்ற வருவாயின் ஒரு பகுதியைத் தொண்டை நாட்டுக் காஞ்சியின் ஏகாம்பரநாதர் கோவிலை

எடுத்துக் கட்டுவதற்குக் கரிகாலன் பயன்படுத்தினன். சங்க காலச் சோழர்கள் சமயச் சார்பான தமிழ்க் கலாசாரத்தை அரசியல் ஆயுதமாகப் பயன்படுத்திய வழிமுறையைப் பின்பற்றி ராஜராஜன் I பௌத்த பிடிப்புள்ள ஈழநாட்டில் பொல்லனுருவாயைச் சுற்றிச் சைவநெறி இந்துசமயக் கோவில்களைக் கட்டிக் கலாசாரப் படையெடுப்பை (Cultural Offensive) நிகழ்த்தினன்.

### 5. தனியாள் அரசும் வாரிசுரிமைப் பூசலும்

சங்க காலத்தில் இயங்கிய சோழர்களுடைய அரசின் அதிகாரம் சோழ மன்னன் என்ற தனி நபர்க்குரியதாகத்தான் அமைய வேண்டும் என்பது சோழ அரசியல் ஒழுகலாற்றுக்குரிய தலையாய கூறுபாடு ஆகும். இதை நிலைநாட்ட சோழர் மன்னர் குலத்தாருள் பூசல்கள்கூட ஏற்பட வழியுண்டு. கரிகாலன் தன்னுடைய தாயாதிகளைப் போரில் வென்று, தன்னுடைய அதிகாரத்தைத் தனிநபர்க்குரியதாக ஆக்கிக்கொண்டான் என்பது சங்ககால வரலாறு ஆகும். சோழர்கள் நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் அரசுரிமைக்குப் போட்டி போட்டுத் தங்களுக்குள் போரிட்டுக்கொண்டார்கள். இதே போலப் பிற்காலச் சோழர்களில் உத்தமசோழன், குலோத்துங்கன், ராஜாதிராஜன் II போன்றோர் தங்கள் அரசுரிமைகளைப் போட்டியினூடே தாமாகவும், பிறருடைய உதவியோடும் போராடித்தான் தக்க வைத்துக்கொண்டார்கள். மேற்சொன்ன காரணங்களினால் கரிகாலனும் மற்றைய சோழர்களும் அமைத்த அரசியலில் காணப்பட்ட கூறுபாடுகளை 400 ஆண்டுகளுக்குப் பின்பு வருகின்ற விஜயாலய மரபினர் தங்களுடைய அரசின் இயக்கத்தில் கைக்கொண்டனர்.

சங்க காலத்தில் வேளாண்மையோடு வணிகம் வளர்த்த முறையையும், கரிகாலன் காட்டிய அரசியல் அறத்தையும் இவ்வாறு பிற்காலச் சோழர் வரலாற்றின் வளர்ச்சித் தடங்களில் நாம் பரவலாகக் காண்கிறோம். இதிலிருந்து தெரிவதென்ன ? தமிழ் நாகரிகம் என்ற ஒரே மூச்சைக் கொண்ட இரண்டு சுவாச கோசங்கள் போலத் தமிழ்க்கலாசார ஒருமிப்புக்குள்ளே சோழர்களுக்கென்ற தனியொரு நாகரிக தாளகதி ஏற்பட்டிருந்தது என்பது தெளிவு. இதோடு ஒட்டித் தமிழகத்தில் பொதுவான அரசியல் பூர்வமான கலாசார வளர்ச்சியும் ஏற்பட்டிருந்தது. ஆனால் சோழர்களின் தனி வளர்ச்சித் தாளகதியானது பிற்காலச் சோழர் காலத்தில் சோழநாட்டின் ஏகாதிபத்தியப் பெருக்கத்தின் முதிர்ச்சியாக மாறிக்கொண்டது. அவ்வாறு அதை மாற்று

வதற்கு வேண்டிய ஆக்க சக்தியினை (creative energy) அதே சங்க காலச் சோழருலகம் உருவாக்கித் தந்தது என்பதும் வரலாற்று உண்மையாகும். தனியாளை செலுத்துகின்ற பெண்ணரசிகளை அரசிருக்கையில் சங்க காலத்தில் காண்பதற்கில்லை. இதற்குக் காரணமென்ன ?

தாயாதிகளுக்குள் வாரிசுரிமைப் போர்களை நிகழ்த்த வேண்டிய அரசியலவசியமும், மகுடவுரிமை பாராட்டுவதில் இராணுவத் தீர்வும் (military conclusion) அக்கால அரசியற் பழக்கங்களாக இருந்த நிலையில் பெண்கள் படைக்கலம் ஏந்திப் போர்க்களத்தில் போரிடுகின்ற வழக்கமில்லாததால் சங்க காலப் பெண்களுக்கு அரசுரிமை வாய்க்கவில்லை. தாய்வழிச் சமுதாயமாக (matriarchal society) சங்ககாலச் சமூகம் விளங்கிய நிலையில் பெண்களும் அரசுரிமை கொண்டு சமூகத்து அரசியற் செயல்திறனை மேம்படுத்துகின்ற பணியில் ஈடுபடாமல் போனது சங்ககால நாகரிகத்தின் இழப்பு என்றுதான் சொல்ல வேண்டும். கூட்ட வாழ்வு முறையிலிருந்து நகர்ந்து மன்னராட்சியின் தொடக்கநிலை — வளர்ச்சிக்குத் தாவி, சங்க காலத்திய சமூகம் வேகமாக வளர்ந்துவந்த காலம் அது (from tribal units to monarchical state). அந்தக் காலத்தின் கடைசிப் பகுதியில் வாரிசுரிமைப் பற்றிய கருத்துகளில் மாற்றம் ஏற்பட்டது. பொதுமையான மக்கள் வழிச் சிந்தனை, முயற்சி (collective mind and effort) என்பவற்றைக் கொண்டு இதுவரை வரையறை செய்யப்பட்ட வாரிசுரிமையானது தனி மனித (personality cult) என்ற கொள்கையைக் கைக்கொள்ளலாயிற்று. இத் தனிமனித ஆராதனையானது மன்னராட்சி இயலுக்குரிய சிந்தனையைத் தூண்டுகின்ற இதிகாசக் கருத்துகளால் ஏற்றங்கண்டது. இத்தகைய இதிகாசங்களின் செல்வாக்கு தமிழகத்தில் வேகமாக படிந்து வந்த காலம் அதுவாகும். மன்னராட்சி கருத்துகளின் பரிமாணப் பெட்டகமாக உருவாக்கப்பட்ட ஆரிய கலாசாரம் தமிழகத்தில் பண்டைய நாளில் வேரூன்றி நிலைபெறத் தொடங்கியபோது, தனியாள் அரசு (individual monarchy) தமிழகத்தில் உருவாவதற்குச் சாதகமான சூழ்நிலை சிறுகச் சிறுக வளரத் தலைப்பட்டது. வளர்ச்சியுற்ற வடபுலத்து நாகரிகத்தின் உயிர்மூச்சாக விளங்கிய முடியரசுக்குரிய சந்ததிவழி அரசுரிமைக் கோட்பாட்டையும், வரிவசூல் முறைகளையும் தமிழர் பின்பற்றலாயிற்று எனலாம்.[2] இவ்வாறு மன்னராட்சிக்கான நிறுவன முறையிலான பக்குவத்தைப் (institutional maturity) பெற்ற சங்கத் தமிழகத்தில் தனியாள் திறன்காட்டும் பண்பாடு (Heroic

2 Romila Thapar — ' A History of India ' 1969, p. 105

Age) சிறுகச் சிறுக மறையத் தொடங்கியது. அதே காலத்தில் வணிகம், வேளாண்மை போன்ற பொருளாதார ஆக்கங்கள் வளர்ச்சியுற்றன. இவற்றின் இரட்டைப் பின்னல் வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகின்ற வலிமை சான்ற தனிமனிதனின் மன்னராட்சி முறை மக்களால் இந்த நேரத்தில் பெரிதும் விரும்பப்பட்டது.

கூட்ட வாழ்வு முறையில் (Tribalism) காணப்பெற்ற பழமைக்காலப் பொருளாதாரம் (primitive economy) மறையத் தொடங்கியது. வணிகமும் வேளாண்மையும் அந்த இடத்தைப் பிடித்துக்கொள்ளத் தொடங்கின. அந் நிலையில் நிரந்தரமான வருவாயைப் பெற்றுவிட்ட வணிக வேளாண்மைப் பகுதிகளோடு கூட்ட வாழ்வியலுக்குரிய பகுதிகள் (Tribal Areas) இணைந்து கொள்ள வேண்டிய காலமும் வந்துவிட்டது. இந் நிலையில் முடியரசுக்குரிய செல்வாக்கு (monarchical prestige) வேகமாக வளர்ந்தது. ஒருங்கிணைந்த அரசு (unitary state) ஏற்படலாயிற்று. அரசியல் முறையில் சொல்லப் போனால், கூட்ட முறைத் தலைமையாளர்களின் தனித்திட்டுச் சரகங்கள் (pockets of tribal chieftancies) சேர, சோழ, பாண்டிய அரசுகளால் காலப் போக்கில் ஈர்க்கப்பட்டுத் தன்மயமாக்கப்பட்டன. தமிழகத்தின் அரசு முறை (State System) வலிமை சான்ற முடியரசாகத்தான் இருந்தாக வேண்டும் என்ற நிலையை உறுதிப்படுத்துகின்ற அளவிற்குச் சோழ நாட்டில் வணிகமுறை வாழ்வியற் சமூகம் (mercantile civilisation) வேரூன்றியது ; வேகமாக வலுப் பெறத் தொடங்கியது. இவ்வாறு தனி மனித அரசாட்சியை நல்குகின்ற மன்னவனைச் சார்ந்து சுழலும் அரசாட்சி முறைக்கு ஒழுங்கு முறையான மகுடவுரிமை வரையறுக்கப்பட வேண்டியதாயிற்று. தனிமனிதத் திறனில் மன்னராட்சிச் சமுதாயம் வளர வேண்டிய அந் நிலையில் திறமையுள்ளவர்களுக்கு மேம்பாடு (survival of the fittest) என்ற கொள்கை தானாகவே தோன்றியது. இக் கொள்கை தமிழகத்தின் தொன்மை வழக்கமான நேரடி நபர் மோதலுக்கு (personal duel) அரசியல் அங்கீகாரத்தை வழங்கியது. இதன் காரணமாகத்தான் தாயாதிகளுக்குள் வாரிசுரிமைப் போரினை நலங்கிள்ளி போன்ற தமிழ்ப் புலமை சான்ற சோழர்களே முன்நின்று நடத்தினார்கள். மக்கள் அளவிலும், புலவர் மத்தியிலும் இதற்கு ஆதரவு காணப்படவில்லை.

தொல்காப்பியர் கூறுவது போல 'பிள்ளையாட்டு' என்ற வரையறையின்படி அரசிளங்குமரன் போர்க்களத்தில் தனிப்பட்ட

முறையில் தனது ஆற்றலையும் வீரத்தையும் காட்டி வெற்றி பெற்றபோது அவனுக்குரியவர்கள் அவனைப் பாராட்டுவர்ர்கள். அந்த அரசிளங்குமரனை அந் நாட்டிலுள்ளோர் அரசனுக்குவர். போர்க் குணத்தைக் காட்டிய அரச இளவலுக்கு நாடாளும் உரிமையைப் போர்க் களத்திலேயே வழங்குகின்ற முறையில் அவனுக்கு அங்கேயே முடிசூட்டப்பட்டது எனச் சொல்வோரும் உண்டு.[3] இராணுவ மரபுகளைப் பின்பற்றுவதில் சமூக அந்தஸ்தை யும் ஈட்டிக்கொள்கின்ற வழிமுறை நிலவிய அக் காலத்தில் தாயாதிச் சண்டையின் மூலம் அரசுரிமைகளைத் தக்கவைத்துக் கொண்டவர்களை வாகை சூடியவராகத்தான் அந் நாளையத் தமிழகம் போற்றியது; அவர்தம் ஆளுகைத் திறனையும் தகுதியையும் இராணுவ வெற்றியின் (title of conquest) அடிப்படையில் ஒப்புக்கொண்டது. ஐந்து வயதிலேயே சோழ மன்னனாக ஆகிவிட்ட கரிகாலனுக்கு அவனுடைய தாய்மாமன் இரும்பிடத் தலையர் (அக்பருக்கு பைராம்கான் வாய்த்தது போல) எல்லா உதவிகளையும் செய்தார். இது போன்ற ஆதரவாளர்கள் (partisans) காணப்பட்ட அந் நாளில் வாரிசுரிமைப் போர் நிகழ்வதற்குக் காவிதி, ஏனாதி போன்ற பட்டங்களைப் பெற்ற பெருங்குடியாளரிடையே ஆதரவு காணப் பட்டது எனலாம்.

## (ஆ) சோழர்களின் அரசு (Chola State)

சங்க காலத்தில் அமைந்திருந்த சோழருடைய அரசு தமிழ் நாகரிகத்தின் நேரடிப்பதிப்பாக விளங்கியது. தற்கால வரை யறையின்படி அரசு என்பது மக்கட்தொகை (Population), நிலம் (Territory), அரசாங்கம் (Government), இறைமை (Sovereignty ஆகியவை கொண்டிருக்க வேண்டும். இந்த வரையறையின்படி சோழ அரசை நாம் கவனிக்க வேண்டும்.

I. **மக்கள் தொகை (Population):** சோழர்களின் அரசு தனது மக்கள் தொகையான தமிழர்களின் இயல்பான வளர்ச்சி நிலையைப் பிரதிபலித்து நின்றது. அக் கால மக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளுக்குரிய வாழ்வியலைப் பெற்றிருந்தார்கள். இது தமிழ் இலக்கணம் தருகின்ற வரையறை ஆகும். அரசியல் சாஸ்திரப்படி பார்த்தால், சங்ககால மக்கள் மூன்று முக்கியமான பகுப்புகளைச் சார்ந்த நிலையில் அவற்றிற்குரிய அரசைப் பெற்று வாழ்ந்தார்கள். அவை பின் வருமாறு:

[3] N, Subramanian, 'Sangam Polity', 1966, p. 45

**1. இயற்கை வாழ்வு முறைச் சமூகம் (Pastoral Society):**

கிராமியச் சூழ்நிலையில் இயற்கையோடு இயைந்த வாழ்வு முறையை இந்தப் பகுப்பு மக்கள் கொண்டிருந்தார்கள். தன்னலம் இயலாத தனியார்வ வாழ்வு அவர்களுடையது ஆகும். சுய தரிசனமான முறையில் இம் மக்கள் வீரம், காதல் போன்ற உணர்வுகளைப் போற்றித் தங்களுக்குள் வளர்த்துக்கொண்டார்கள். ஆதித்தமிழ் நாகரிகத்தின் உயிர் மூச்சாக இத்தகைய குணங்கள் விளங்கின என்பது சிறப்புச் செய்தியாகும். இக் குணங்களைத் தங்களுடைய வாழ்வின் இயல்பூக்கமான நிலைக்களங்களாக அமைத்துக்கொண்ட இம் மக்களுக்கு வேளிர்கள் அரசர்களாக இருந்தார்கள். இவ் வேளிர்கள் குறுநில மன்னர்கள் ஆவார்கள். பறம்புமலைப் பாரி இவ் வகை வேளிர்களில் ஒருவன். அவனுடைய வள்ளன்மை அவனுக்குரிய அளப்பரிய புகழை ஈட்டித் தந்த காரணத்தால் மூவேந்தர்கள் அவன்மேல் பொறாமை கொண்டார்கள் ; அவனைத் தோற்கடித்துக் கொன்றார்கள்.

**2. வேளாண்மை முறைச் சமூகம் :** பொருளைச் சேகரித்து வைத்து எதிர்காலக் கவலையில் வாழ்கின்ற தன்முனைப்பு வாழ்க்கை இவ் வேளாண்மையின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது. விளை நிலத்தைத் தனியார்வத் தனியுடைமையில் உரிமைப் படுத்தியவர்கள் இப் பகுப்பில் மேலாக்கம் கொண்டவராவார்கள். இவர்களில் தலையாய உரிமையாளனாக அரசன் காணப்பட்டான். இயற்கை வாழ்வு முறைப்பகுப்புக்குச் சொந்தமான வேளிர்களை எதிரிகளாகப் பெற்ற நிலையில் இவ்வரசன் தனது தன்னலத்தைப் பாதுகாக்க வேளாண்மைப் பொருளாதாரத்தின் துணையைக் கொண்டு படைகளைப் பெருக்குவான். இப் படையின் வலிமையைப் பயன்படுத்தி வேளிர்களை அவ்வரசன் அடக்குவான். சோழ நாட்டில் காணப்பட்ட வேளிர்களைக் கரிகாற்சோழன் இவ்வாறுதான் வாகைப்பறந்தலைப் போரில் வென்று சோழ வல்லமையினுள் அடக்கினான். இவ்வாறு வேளிர்களை அழித்த நிலையில்தான், சோழ அரசிற்கான உன்னதம் காலப்போக்கில் நிலைபெற்றது எனலாம். இவ் வேளிர்கள் சோழ அரசனுக்கு உட்பட்ட பின்னர் அவனுக்குரிய இராணுவ வீரர்களாக மாறிப் போனார்கள்.

சோழ மன்னன் மேற்கொள்ளுகின்ற படையெழுச்சியில் முன்னணிப் படைஞராக அவ் வேளிர்கள் சோழ மன்னன் தலைமையில் இயங்கினார்கள். இவ்வாறு அமைந்த அவ் வேளிர்களின் படைகள் காட்டிய வீரவுணர்ச்சி சோழ சமுதாயத்தின் பொதுச் சொத்தாக மாறிக் காணப்பட்டது. சுயதரிசனமான

உணர்விற்குரிய வீரம் சோழ நாட்டின் வேளாண்மைப் பகுப்பைச் சார்ந்தவர்களுக்கும் பொதுமை அறமாக விளங்கியது. இயற்கை வாழ்வுக்குரிய உணர்வுகள் அதற்கடுத்த வளர்ச்சிப் பருவமான வேளாண்மை முறைச்சமூகத்திற்குப் பரவி நின்றன. சோழ சமுதாயத்தின் நாகரிக வெளிப்பாடுகள் என்றளவில் மேற் சொல்லப்பட்ட உணர்வுகள் புலவர்களால் போற்றப்பட்டன. செல்வமுடைய அரசர்களைவிட வேளிர்களைப் பற்றிப் பாடுவதே சிறந்தது என மங்கலாட்டன் என்ற சோழ மன்னனிடம் பரிசில் எதிர்பார்த்து அயர்ச்சியுற்ற புலவன் ஒருவன் கூறுவதாகப் புறநானூற்றுப் பாடல் (197) உண்டு. இவ்வாறு சோழ அரசினுடைய நடைமுறை செயலாக்கத்திற்கு அவசியமான படையைச் சிறக்கச் செய்ய வேளிர்களின் தனியார்வ உணர்வு நலங்கள் அவசியமாயிற்று.

**3. வணிக முறைச் சமூகம்:** தனக்கெனச் சேர்த்து வைத்துக் கொள்ளாத வெள்ளையுள்ள வேளிர் மக்களும், மேழிச் செல்வத்தின் ஆக்கம் நுகர்ந்த வேளாண்மை மக்களும் காணப் பட்ட சோழ நாட்டில் வணிகத்தின் வளர்ச்சியில் தோன்றிய பெருமக்கள் தங்களுடைய வணிகத்தை வளர்த்துச் சோழ அரசிற் குரிய வலிமையை வளர்த்தார்கள். கரிகாற்பெருவளத்தான் இத்தகைய வணிகர்களை மேலும் வளர்ப்பதற்காகவே சோழ அரசினை ஒரு பேரரசாகக் கட்டத் தலைப்பட்டு வெற்றியும் பெற்றான். இவ்வாறு வேளிர்களால் தாங்கப்பட்டு, வேளாண்மை யாளரால் வலுப்படுத்தப்பட்டு, வணிகர்களால் பேரரசாக வகைப் படுத்தப்பட்ட சோழ அரசிற்கு வேளிர் பகுப்பு, வேளாண்மைப் பகுப்பு, வணிகப் பகுப்பு என்ற மூன்று நிலைகளிலும் பிடிப்பு காணப்பட்டது. இவை மூன்றும் பொருளாதாரச் சமூக வளர்ச்சிப் பரிமாணத்தில் மூன்று பருவங்களாக அமைந்திருந்தன; வரிசைக் கிரமமான தொடர்வளர்ச்சிக்கு உட்பட்டிருந்தன. ஒன்றின் வளர்ச்சிக்குள் மற்றொன்று தோன்றி, அவ்வாறு தோன்றிய அதனுள் அதற்கடுத்தது தோன்றியது. இவ்வாறு தோற்றங் கொண்ட பகுப்புகளில் காணப்பட்ட மக்கள் சோழ அரசைத் தங்களுக்குரியதாக எண்ணினார்கள். அவர்களுக்குள் மன ஒன்றிப்பு உணர்வு (emotional integration) ஏற்படுவதற்கு இந்தச் சோழ அரசே ஈர்ப்புச் சக்தியாக இயக்கங்கொண்டது.

**II. நிலம் (Territory):** குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைப் பகுப்புகளை ஒட்டிச் சங்கத் தமிழகத்தின் சமூக ஒழுகலாறு தோன்றி இருந்தது. அதன் பின்னணியில்தான் மக்களுடைய வாழ்வியல் அமைந்திருந்தது

இந்த இலக்கணத்தின்படி சோழ நாட்டில் மருதமும் நெய்தலுந் தான் காணப்பட்டன. மருதம் என்ற வயலும் வயலைச் சார்ந்த நிலப்பகுதிக்குமுரிய வேளாண்மை சிறப்புற்று வளர்ந்ததால், சோழ அரசுக்கு உறுதிப்பாடு என்ற அளவில் அவ் வேளாண்மை அமைந்திருந்தது. கரிகாற்சோழன், 'பெருவளத்தான்' என்ற விருதினைக் கொண்டிருந்தான். கடலும் கடலைச் சார்ந்த பகுதிகளும் சேர்ந்த நெய்தலுக்கு உரிய பூம்புகார்ப் பட்டினத்தில் வளர்ந்தோங்கிய நகர நாகரிகமும் வெளிநாட்டு வாணிபமும் சோழ அரசினரின் வருவாய்க்கு உறுதுணையாக அமைந்தன. வெளிநாட்டு வணிகத்திற்கு வேண்டிய பருத்தி ஆடை ஏற்றுமதிக்குப் பின்னணி நிலமாக விளங்கிய நகரம் உறையூர் ஆகும். ஆடை உற்பத்திக் கேந்திரமாக அது செயல்பட்டது. இந்நிலையில் பருத்தி விளைகின்ற புன்செய் நிலமும், அகில் போன்ற மற்றைய மலைபடு பொருள்களைக் கொடுக்க வல்ல மலைநாடும் சோழரின் வணிகப் பொருளாதாரத்திற்கு அவசியமாகக் காணப்பட்டன. அவ்விரண்டு நிலப்பகுதிகளும் காணப்பெறாத சோழ நாடு எவ்வாறு வளர்ச்சி அடைந்தது ? அத்தகைய பொருளாதாரத்தைக் கட்டிக் காக்க மேற்சொன்ன கச்சாப் பொருள்கள் கிடைக்கின்ற நிலப்பகுதிகளைக் கவர்ந்து வைத்துக்கொள்கின்ற இராணுவம் பேரரசாகச் சோழ அரசு தன்னை மாற்றிக்கொள்ள வேண்டிய நிர்பந்தம் அக் காலத்தில் காணப்பட்டது.

**III. அரசாங்கம் (Government):** சோழ அரசாங்கம் சோழ மன்னனுடைய தனியார்வத்திறனில் செயல்பட்டது எனலாம். சோழ அரசனே சட்டமியற்றும் அதிகாரமுடையவனாகவும் (legislature), நிர்வாகப் பொறுப்புதாரியாகவும் (Executive), நீதி நிர்வாகியாகவும் (Judiciary) செயல்பட்டான். இம் மூன்று பொறுப்புகளையும் சோழ மன்னன் மேற்கொண்ட நிலையில் அவன் முடியாட்சி முறைமைக்குரிய அத்தனை அதிகாரங்களையும் பெற்றிருந்தான்.

**வரம்புகளை மீறா மன்னன் (King both as Individual and Institulon)** சங்க நாளையச் சோழ மன்னன் எதேச்சதிகாரியாக (despot) மாறிக்கொள்ளவில்லை. சமூக மரபுகள் (Social Conventions), புலவர்களின் அறவுரைகள், பொது அறவுணர்வு போன்றவை அவனுடைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்தின. காட்சிக்கு எளியனாக இல்லாத சோழன் கிள்ளி வளவனை ஆலூர் மூலங்கிழார் நல்வழிப்படுத்த அறிவுரை சொன்னார் (புறம் 40). புலவர்களையும், பாணரையும் ஆதரிப்பது என்பது மன்னனுக்குரிய தனிநபர் விருப்பு

வெறுப்புக்கு உரியவை என்றில்லாமல் தமிழக அரசியல் ஒழுக லாற்றில் ஒரு பகுதியாகக் காணப்பெற்றது. தன்னுடைய தலைமை யின்கீழ் இயங்குகின்ற தமிழ்ச் சமுதாயத்தில் போர் வீரம் நலிந்து போனால் 'படையமை மறவரும் உடையம்யாம்' என்ற நிலைக்கு இழிவு வந்தால்—தன்னைப்பற்றிப் புலவர்கள் பாடாது தன்னுடு விட்டகலட்டும் என்று இளவயது நெடுஞ்செழியன் சூளுரைப்பது தமிழக மன்னர்களின் மனப்போக்கைக் காட்டுகிறது (புறம்—72). அரசனைப் பழித்தால் அரசைப் பழித்ததாகும் எனக்கொள்ளும் மேற்சொன்ன பாண்டியனைப் போன்ற சோழமன்னர்கள் புலவர் களின் அறிவுரையை நாட்டு மக்களின் குரலாகக் கேட்டு அதனை மதித்தார்கள். அவ்வாறு புலவர்களை மதிப்பது சமுதாய மரபு என்ற அளவில்தான் கோப்பெருஞ் சோழன் தன்னோடு முரண்பட்டு நின்ற மைந்தர்களோடு போரிட விழையவில்லை. தந்தைக்கும் மைந்தர்களுக்கும் ஏற்பட்ட பிரிவுக்குக் காரணமான அரசுரிமையைக் கைவிட்டு வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தான் அச் சோழன். இவ்வாறு சோழ மன்னனின் தனி வாழ்வில் காணப்பட்ட சிக்கல்களைக் கூடப் பொதுமை அரசியலறத்திற்கு உரிய முறையில் தீர்த்து வைக்கின்ற மனத்திண்மையும் சமூக மதிப்புற புல்லாற்றூர் எயிற்றினர் போன்ற தமிழ்ப்புலவர்களுக்குக் காணப்பட்டன.

**நீதி நிர்வாகம் :**

தோல்வியுற்றுப் போன மலையமான் திருமுடிக்காரியின் இளவயது மக்களிருவருரின் தலைகளை யானையின் காலால் இடறச் செய்து அவர்களைக் கொல்லத் துணிந்த சோழன் கிள்ளிவளவ னுடைய போர்க்குணச் செய்கை மனிதாபிமானங்கொண்டதல்ல என்று சொல்லி அச் சோழனின் மனந்திருப்பிய கோவூர்க்கிழாரின் பணி சோழ அரசின் நீதியை நிலைநாட்டுவதற்குப் பெரிதும் உதவிற்று (புறம்—46). 'குற்றவாளிகள் தம்பியானலும் பரவா யில்லை, குற்றமற்றவர்கள் தண்டனையடையக் கூடாது' என்ற சட்டத்தத்துவம் இதன்மூலம் வலியுறுத்தப்பட்டது எனலாம். சங்க காலத்தின் சோழர் பரம்பரையினுடைய கடைசி அரசனை கோச்செங்கணன் தன்னிடம் தோல்வியடைந்த சேர மன்னன் கணைக்காலிரும்பொறையைச் சிறை செய்து வைத்திருந்தபோது பொய்கையார் என்ற புலவரின் பரிந்துரை கேட்டு அச் சேரமானை விடுதலை செய்தான். 'இளந்தத்தன்' என்ற புலவனைப் பகைவனின் ஒற்றன் என்று சொல்லித் தண்டனை வழங்க முற்பட்ட சோழன் நலங்கிள்ளிக்கு உண்மை உரைத்த கோவூர்க்கிழார் நீதி நிர்வாகத்தின் நேர்மையைக் காப்பாற்றினர்.[4] தமிழ் கூறும்

4 புறம் 47

நல்லுலகத்தின் கலாசாரத் தூதுவர்களாக நாடெங்கும் அலைந்து மன்னுயிர் போற்றிய இப் புலவர்களின் அறவுரை சோழமன்னர் களின் அதிகாரத்தை நேர்மைத் திறனுக்குரியதாக மாற்றியது. ' அரும்பெறல் புதல்வனை ஆழியில் மடித்தோன் ' என்றளவில், சிலம்பு போற்றுகின்ற மனுநீதிச்சோழன் தானே தன்னுடைய குடும்பத்திற்கு நியாயம் வழங்கிய அறவுணர்வு சோழ அரசி னுடைய நீதி நிர்வாகத்தின் சிறப்பிற்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும். விலங்கினக் கன்றுகளுக்கு ஊறு விளைவிக்கின்ற குற்றத் திற்குத் தண்டனையாக 200 பணம் அபராதத்தை மட்டுமே மனு சாஸ்திரம் (VIII-296—297) விதிக்கச் சொல்கிறது. இதைக் காரணமாகக் காட்டி மனுச்சோழன் தன் மகனிடமிருந்து அத் தொகையை அபராதமாக வசூலித்திருக்க வேண்டுமேயல்லாது ' உயிருக்கு உயிர் ' என்ற பண்டைய நீதிமுறையைப்பற்றி அம் மகனைத் தேர்ச்சக்கரத்தால் நசுக்கிக் கொன்றிருக்கக் கூடாது என்று பேராசிரியர் N. சுப்பிரமணியன் கருதுகிறார். அரச னுடைய தோட்டத்திலிருந்து வெள்ளத்தால் அடித்துவரப்பட்ட மாங்காயைத் தின்ற அறியாச் சிறுமிக்கு நன்னன் என்ற அரசன் மரண தண்டனை வழங்கினான். 8 யானைகளையும் அப் பெண்ணின் எடைக்குத் தங்கத்தையும் அபராதமாகச் செலுத்த அப் பெண்ணின் பெற்றோர்கள் முன்வந்த போதிலும், நன்னன் அதை ஏற்க மறுத்து அத் தண்டனையை நிறைவேற்றினான் (குறுந் தொகை—292). மகத நாட்டு நனநந்தர்களைப் போலப் பொருட் குவையுள்ள நன்னனின் நீதி அவனுடைய பிரஜையிடைப் பெற்றோரைச் சோகத்திலாழ்த்தியது. அதே சோகத்தை மனுச் சோழன் தனக்குத்தானே விதித்துக்கொண்டான். மனு நீதிச் சோழனின் வரலாறு கற்பனை கலந்த வெறுங்கதையாக (legend) இருக்கலாம். இருந்த போதிலும், சங்க நாளில் மட்டுமல்லாது விஜயாலயச் சோழருட்பட்ட எல்லாச் சோழ மன்னர்களுக்கும் வழிகாட்டியாக அக் கதை விளங்கியது. அக் கதை அச் சோழரின் ஞான உயிரில் கலந்து சோழநாட்டு நீதிக்குரிய உந்துதல் சக்தியாக (moving spirit) பாரம்பரியமாக நிலைபெற்று விளங்கியது. நிர்வாகத்தில் காணப்பட்ட சமூக மதிப்பீட்டில் தான் (social values in the judicial administration) மனுச் சோழனுடைய செயலையும் அரண்மனை வாயில் சோழன் பாண்டிய அரசர்களால் தொங்கவிடப்பட்ட ஆராய்ச்சி மணியின் பொருளாழத்தையும் கணிக்க வேண்டும். அறக்களத்து அந்தணர், காவிதி என்ற அரசபட்டம் பெற்ற பெருங்குடிமக்கள் ஆகியோர் துணை கொண்டு சோழ அரசனுடைய அவைக்களம் (சோழ அரசனைத் தலைவனாகக் கொண்டு) தலைமை நீதிமன்ற மாகச் செய்யப்பட்டது.

அறம், செம்மை, தண்மை கொண்டு அரசன் நீதி வழங்கியது போல ஆங்காங்குள்ள 'அவையம்' அல்லது 'பொதியில்' என்ற நீதிமன்றங்கள் 'குறை' என்றழைக்கப்பட்ட மக்களின் வழக்குகளை விசாரித்து, 'முறை' என்ற நீதியை வழங்கின. காவலர் என்ற போலிஸ்துறை குற்றவாளிகளைப் பிடித்துச் சிறையி லிட்டது. கடன் வாங்கவில்லை என்று மறுப்பவர்கள் நாகம் வைத்துள்ள குடத்துள் கைவிடவும், தீண்டப்படாதிருந்தால் குற்றவாளி அல்லவென்றும் முடிவு செய்யப்பட்டது. பண்டைக்காலச் சமுதாயங்களில் காணப்பட்ட இவைபோன்ற தெய்வ பிரமாணங் களும் (ordeals) வழக்கிலிருந்தன. நீதிக்குப் புறம்பாக நடந்தவர்களையும் பொய்சாட்சிச் சொன்னவர்களையும் புகார் நகரத்து நாற்சந்திகளில் காணப்பட்ட துர்கடவாளான சதுக்கபூதம் இடர்ப்படுத்தும்[5] என்ற நம்பிக்கை அந் நாளைய மக்களிடம் பரவி இருந்தது.

உள்ளாட்சித் துறை :

ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆட்சிக் குழுக்கள் சோழ அரசனுக்குரிய ஆட்சியில் அவனுக்குத் துணை நின்றன. (இது பற்றி விரிவாகப் பின்னர் விளக்கப்பட்டுள்ளது.) சோழநாடு பல மண்டிலங்களாகவும் (மண்டிலம்), ஒவ்வொரு மண்டிலம் பல நாடுகளாகவும், ஒவ்வொரு நாடும் பல கூற்றங்களாகவும் (கோட்டங்கள்) பிரிக்கப்பட்டிருந்தன. கூற்றம் என்ற அமைப்பினுள் ஊர் என்ற நகரங்களும், சிற்றூர் என்ற கிராமங்களும் காணப்பட்டன. உல்குடைப் பெருழி என்று அழைக்கப்பட்ட (சுங்கம் வசூலிக்கப்படும் நிலைகளிலுள்ள) பல நெடுஞ்சாலைகளும் (highways), கொடிவழி என்ற பிரிவு வழிச்சாலைகளும் நகரங்களையும் கிராமங்களையும் இணைத்தன. வடபுலத்தின் உஜ்ஜெய்னி நகரத்திலிருந்து தெற்காக வந்த பெருஞ்சாலை ஒன்று கிழக்குக் கடற்கரை ஓரமாகத் தமிழகத்துள் வந்திறங்கியது என்றும், சோழ நாட்டுக் காஞ்சிபுரத்தையும் பாண்டியம்பதியான மதுரையையும் (கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கக் காலத்தில்) இணைத்தது என்றும், பின்பு தமிழகத்தின் எல்லாப் பகுதிகளும் இச் சாலையோடு இணைக்கப்படுகின்ற அளவிற்குப் பல சாலைகள் போடப்பட்டன என்றும் A. L. பாஷாம் கூறுகிறார்.[6] இச் சாலைகளின் துணைகொண்டு அரசியலதிகாரத்தைச் சங்ககால மன்னர்கள் திறம்படச் செலுத்தினர்கள் என்பது ஆராய்ச்சிக் கருத்தாகும்.

5 சிலம்பு—XV—வரி 79—81

6 'The Wonder that was India' — 1963—p. 224

### வரி விதிப்பு, வரி வசூல், செலவு முறைகள் (Taxation and Public Expenditures)

(அ) வரிவிதிப்பு—வரவு : சங்கச் சோழநாடு வேளாண்மையிலும், வாணிபத்திலும் மேம்பாடு கொண்டு விளங்கியதால், அரசுக்குக் கணிசமான வருமானம் வந்தது. விளைச்சலில் $\frac{1}{6}$ பாகம நிலவரியாகப் பெறப்பட்டது.[7] 'புறவு' அல்லது 'இறையிலி நிலம்' அரசனால் அவனுக்குரிய அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. அந்தணருக்கு அரசனால் நன்கொடையாக அளிக்கப்பட்ட 'வரியிலி' கிராமங்கள் 'பிரமதேயம்' என்ற பெயரில் வழங்கின.

(ஆ) செலவு முறைகள்: போரின்மூலம் வருவாய், சுங்க வரி, மக்கள் செலுத்தும் அபராதத் தொகை, வருவாயைப் பெருக்க எண்ணி அரசினரே ஈடுபட்ட வணிகத்திலிருந்து வருமானம்—இவை போன்ற வரவுத் தொகைகள் அரசனுடைய அரண்மனை, இராணுவம், போர் நடவடிக்கை, பாணர், புலவர் போன்றோரைப் போற்றுதல்,கோவில் கட்டுதல், இந்திரவிழா போன்ற விழாக்களை நடத்துதல் முதலியவற்றிற்காகச் செலவிடப்பட்டன. ஹர்ஷ சக்கரவர்த்தி தன்னுடைய அரசாங்க வருவாயை நான்கு சமபாகங்களாகப் பிரித்து அரசாங்கத்தை நடத்துதல், அரசாங்க அலுவலாளர்களுக்குரிய ஊதியமளித்தல், அறிவிற் சிறந்தோருக்குச் சன்மானம் அளித்தல், நன்கொடை வழங்கல் போன்ற நான்கு துறைகளில் செலவிட்டான் என்று மிகைப்படுத்திச் சொல்லப்படுகிறது.[8] ஹர்ஷர் கைக்கொண்ட முறையில் சங்க மன்னர்களும் தங்கள் வருமானத்தைச் செலவிட்டார்கள் எனலாம். நாளந்தாப் பல்கலைக் கழகத்தை அறிவாற்றலைப் பெருக்குகின்ற குறிக்கோளுடன் ஹர்ஷர் நடத்தியது போலப் பாண்டிய மன்னர்கள் அரசாங்கப் பொருளைச் செலவழித்துத் தமிழ்ச்சங்கத்தை நடத்தித் தமிழ் வளர்த்தார்கள்.

### அலுவலாளர்கள்

சங்க மன்னர்களுக்குப் பெருங்குடி மக்களில் திறமைவாய்ந்தவர்கள் அமைச்சர்களாக அமைந்தார்கள். காவிதிப் பட்டத்தை அமைச்சருக்கும், எட்டி என்ற பட்டத்தை வணிகருக்கும், ஏனாதி என்ற விருதினை இராணுவத் தளபதிக்கும் சங்கமன்னன் வழங்கி,

7 V. கனகசபை—'The Tamils—Eighteen hundred years ago' 1904, p. 112

8 Romila Thapar—'A History of India' —1969, p. 147

அவர்களுடைய சேவையை அரசாங்கத்துக்கு உரியதாக்கினன். மன்னராட்சி முறையானது பெருங்குடியாளரின் ஆதரவில்தான் நிலைபெறுகிறது என்ற அரசியற்சாத்திர உண்மையின்படி இந்த முறையில் அரசு விருது பெற்றவர்கள் அந் நாளைய அரசாங்கத்தின் தூண்களாக நின்றனர்கள். விஜயநகரப் பேரரசு காலத்தில் பேரரசர்கள் யானைமேல் ஏறுவதற்குத் தங்கள் தலைகளைப் பாதந்தாங்கிகளாக மனமுவந்தளித்த சாமாந்தகர்களின் தொடக்கநிலைத் தோற்றம் இத்தகைய சங்கநானையப்பட்டம் பெற்றோரிடந்தான் ஏற்பட்டிருக்க வேண்டும். அமைச்சர்கள், அந்தணர்கள், மந்திரக்கணக்கர் போன்றவர்கள் அலுவலாளராகத் திறமையுடனும், அரசப்பற்றுதலுடனும் செயல்பட்டபோது அரசனுடைய இறைமை நடைமுறைப் பொலிவு கொண்டு விளங்கி, அரசாட்சியின் திறமையாகப் பரிணமித்தது.

## IV. இறைமை

சங்ககாலச் சோழர்களின் அரசில் அரசர்களின் இறைமை மன்னனுக்குரிய அதிகாரச் செருக்காகத்தான் காட்சி அளித்தது. யாரும் பங்கு போட முடியாதபடி அவ்விறைமை விளங்கியது. ஆனாலும், ஐம்பெருங்குழுக்கள் அவ்விறைமையைக் கட்டுப் படுத்தின எனலாம். இத்தகைய பங்கீடுபற்றி விரிவாகக் காண்போம்:

**1. ஐம்பெருங்குழு, எண்பேராயம்:** ஏனைய தமிழ் மன்னர்களுக்கு வாய்த்திருந்தது போலச் சங்கச் சோழ அரசனுக்கும் ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் அரசாட்சியில் துணை செய்தன. அரசாங்கத்தின் கொள்கைகளை உருவாக்குகின்ற அமைச்சரியல் பணி (fromulation of policies) ஐம்பெருங்குழுவைச் சாரும். மத்திய காலத்தில் (Middle Ages) இயற்றப்பட்ட பன்னிருபாட்டியல் கொடுக்கின்ற அமைச்சர் பட்டியல் பின் வருமாறு :

> " அமைச்சர், புரோகிதர், சேனாபதியர்,
> தவாத்தொழில், தூதுவர், சாரணர் என்றிவர்,
> பார்த்திவர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே."

நாட்டரசாட்சியில் நடைமுறைப்படுத்துகின்ற அமைச்சகப் பணியை (ministerial staff services) எண்பேராயம் என்ற பெருங்குழு மேற்கொண்டிருந்தது. பன்னிருபாட்டியல் பின் வருமாறு :

"கரணத்தியலவர், கருமகாரர்,
கனகச் சுற்றம், கடைக்காப்பாளர்,
நகர மாந்தர், நளி படைத்தலைவர்,
யானை வீரர், இவுளி மறவர்,
இனையர் எண்பேராய மென்ப."

இத்தகைய முறையில் அமைச்சரியல், அமைச்சகவியல் என்ற இரண்டு பகுப்புகளை அரசு நிர்வாகத்தில் நிலைப்படுத்திய சங்கத் தமிழரின் மதிநலம் பாராட்டுதற்குரியது. அரசர்கள் ஆள்கின்ற அரசு (royal statehood) என்ற அரசியல் பரிணும வளர்ச்சி நிலை நோக்கி வளர்ந்துகொண்டிருந்த கூட்டமுறைத் தலைமையாளர்களின் ஆட்சிதான் இந் நாளில் தமிகத்தில் காணப் பட்டது என்று ருமிலாதாபர் கருதுவதை[9] ஐம்பெருங்குழு போன்ற மேலான அமைப்புகளைக் கொண்ட சோழ அரசின் வளர்ச்சித் தரத்தைக் கொண்டு ஆராய வேண்டும். ஆரிய மயமாதல் (Aryanisation) என்ற முறையில் தமிழ் அரசர்களும் வடபுலத்தவரைப் போலச் சந்ததி முறையில் அரச பதவி வழங்கல், வரிவிதிப்பு முறை போன்றவற்றைப் பெருமளவிற்குத் தழுவிக் கொண்டனர் என்றும், இதன் காரணமாகவும் தமிழ் அரசுகள் அரசர்களுக்கான அந்தஸ்து பெற்று விரிவாகி நிலைபெற்றன என்றும் முன் சொல்லப்பட்ட அதே வரலாற்றாசிரியர் கூறுவது சிந்தனைக்கு உரியது.[10] ஆரியவழி முறையினர் தங்களது அரசாட்சி முறையில் கைக்கொண்டிருந்த சமிதி, சபா என்ற குழுக்களைப் போலத் தமிழ் அரசுகளில் ஐம்பெருங்குழுவும் எண் பேராயமும் அளவில் சிறிதும் பெரிதுமாகக் காணப்பட்டன என்பதோடு தமிழ் அரசுகளின் இந்த இரு குழுக்களும் வடபுலத் தாரின் சபா, சமிதியைப் பின்பற்றித்தான் உருவானதா என்பது ஆராய்ச்சிக்குரிய கேள்வியாகும். போர்க் குணமும் போரிடு வதில் சளைக்காத தன்மையுங்கொண்ட சங்கத் தமிழ் மக்கள் தங்களுக்குள் பல நியதிகளை வகுத்துக்கொள்வது அவசிய மாயிற்று; அதன்மூலம் ஒழுங்குபடுத்தப்பட்ட ஒருவகை அரா ஜகத்தை (organised anarchy) அவர்கள் நிலைநாட்டினுர்கள். மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்பு மேற்கு இந்தியாவில் நிலவிய இத்தகைய இராணுவ முறை அராஜகச் சூழ்நிலையில் அறமோடு போராடும் நல்வீரம் (code of chivalry) சமுதாய நியதிகளாகத் தோற்றங்கொண்டதைப்பற்றி A. L. பாஷாம் கூறுகிருர்[11]. சங்கத் தமிழர்களும் அப்படிப்பட்ட நியதிகளை

9 Romila Thapar — op. cit., p. 105
10 Ibid — p. 105
11 A. L. Basham — 'The wonder that was India' — 1963, p. 126

உண்டாக்கி, அதன்மூலம் தங்களுடைய போரார்வத்திற்குச் சமூக அந்தஸ்தைக் கொடுத்தார்கள். நியதிகளின் சேர்க்கையாக மன்னனுடைய அரசாட்சி தோன்றுகின்ற வரலாற்று நடைமுறைக்கு (historical process) ஐம்பெருங்குழு போன்றவைதான் உறுதுணை செய்தன என்பது வரலாற்று உண்மையாகும்.

குழுக்களைக் கொண்டு அரசியலாட்சியை நடத்தியவர்கள் மகத நாட்டவராவர். ஆகவே, தமிழர்கள் ஐம்பெருங்குழு போன்றவற்றைக் கொண்டிருந்த காரணத்தால் அத் தமிழர்களும் மகத நாட்டிலிருந்து வந்தவராவர் என்ற கருத்தை ஆராய்ச்சியாளர் கனகசபை பிள்ளை தமது '1800 ஆண்டுகளுக்கு முன்பிருந்த தமிழர்கள்' என்ற ஆங்கில நூலில் வலியுறுத்துகிறார். கிரேக்கத் தூதுவன் மெகஸ்தனிஸ் பாடலிபுத்திர நகராட்சியிலும் அந் நாட்டரசின் இராணுவத்திலும் ஆறு வகையான குழுக்கள் இருப்பதாகச் சொன்னதை நம்பியதாலும் அக் குழுக்களைப்பற்றிக் கௌட்டில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் குறிக்கவில்லை என்பதை அறியாததாலும்[12] ஏற்பட்ட தவறான மதிப்பீட்டின் காரணமாகத் தோன்றிய மேற்படி ஆராய்ச்சியாளரின் கருத்துப்படித் தமிழர்களுக்கு அரசியலமைப்பதற்குரிய நுண்ணறிவு (political genius) மறுக்கப்படுகிறது.

சங்க காலத்து ஐம்பெருங்குழு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மன்றத்தினரா? இவ் வினாவும் சங்க காலத்துக்குச் சமமான மௌரியப் பேரரசின் ஆட்சியில் இருந்த பாடலிபுத்திர நகராண்மைக் கழகக் குழுக்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டன என்ற தவறான கருத்தின் விளைவாக எழுந்ததாகும். குழுக்களைப்பற்றிச் சொல்லும் மெகஸ்தனிஸ் தேர்தலைப்பற்றிக் குறிக்கவில்லை என்றும், அத்தியக்ஷர் என்ற தலைமை அலுவலாளனுக்கு உதவியாக இருந்த சக அலுவலாளரைக் குழுவாக மெகஸ்தனிஸ் குறித்தான் என்றும், மேற்படி குழுக்கள் உள்ள நகராட்சி பாடலிபுத்திரத்தில் மட்டுமே காணப்பட்டது, வேறெங்கிலும் இல்லை என்றும் அறிஞர் B. N. பூரி கூறுவதை[13] ஆராய்தல் வேண்டும். ஐம்பெருங்குழு மக்கள் குழுவாகவே செயல்பட்டது என்ற செய்தி சங்க நாளைய அரசர்களின் தனியாணைத் திறனைக் கட்டுப்படுத்திக் காட்டுகிறது.[14]

12 B. N. Puri — 'History of Indian Administration' — 1968 — p. 62 — 68

13 B. N. Puri — op. cit., p. 82

14 S. Krishnamurthy Iyengar — 'Hindu Adminisrrative Institutions of South India' —1931 — p. 19

இந்திர விழா எடுத்தபோது சோழ மன்னனின் ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் 'அரச குமரரும் பரத குமரரும்' (சிலம்பு-V-வரி 157-158) மங்கல வீதியில் வந்து கூடினர். அரச குமரர் என்றதால் அரச குடும்பத்தவரும், பரத குமரர் என்றதால் சாதாரணப் பணியாளரும் மேற்படிக் குழுக்களில் பங்கு பெற வில்லை என்பது தெளிவாகிறது. சோழநாட்டுப் பொது நிகழ்ச் சியில் பங்கு பற்றிய ஐம்பெருங்குழு எண்பேராயம் போன்று சேர நாட்டிலும் காணப்பட்டதைச் சேரன் செங்குட்டுவன் வடபுலப் படையெடுப்புக்கு அக் குழுக்கள் வாழ்த்துக் கூறு கின்ற காட்சியிலிருந்து (சிலம்பு-XXVI-38) அறியப்படும். சேர அரசகுல இளங்கோ தந்த அச் செய்தியின்படி அக் குழுக்கள் அரசரோடு கொண்ட நெருக்கம் புலப்படுகிறது. தற்கால அரசு களைப் போன்று வளர்ச்சி பெற்ற நிலையில் மந்திரி பரிஷத் என்ற அமைச்சர்களைக் கொண்ட கி. பி. மூன்றும் நூற்றுண்டுக்குரிய மௌரியரின் அரசியலமைப்பில்கூடத் தேர்தலுக்கு இடமில்லை என்ற நிலைமையில் அரசுக்குரிய இலட்சணங்களை (characteristics of state hood) அவ்வளவாக உருவாக்காத தமிழ் மன்னர் களின் அரசுகளில் ஐம்பெருங்குழுவிற்கு உரிய தேர்தல் முறை வழக்கில் இல்லாதது என்பது ஒரு பெருங்குறையாகாது எனலாம். போரிடுதலை, தாம் நினைத்த அளவில் தீர்மானிக்கின்ற, தமிழ் அரசர்களைத் தடுத்து அறவழிப்படுத்துகின்ற 'புரோகிதர்' மாடலன் (சிலம்பு-26-வரி 452) போன்றவர்கள் உறுப்பினராக இருந்த ஐம்பெருங்குழு ஏனைய மக்களைப் பிரதிபலித்துத்தான் அரசியலில் அரசனுக்குரிய ஆலோசனை மன்றமாக இயங்கி இருக்க வேண்டும்.[15]

தனி நபர் ஆர்வத்தின் மோதல்களின் காரணமாகச் (conflict of personal ambition) சேர, சோழ, பாண்டியருக்குள் போர் நிகழ்ந்ததே தவிர, வெவ்வேறு அரசியல், சமூகக் கொள்கை களின் மோதல்களின் விளைவாகப் போர் நிகழவில்லை. காரணம், தமிழ்ச் சமுதாயத்தில் அத்தகைய வேறுபாடுகளும் காணப்பெற வில்லை. சமயம் பற்றிய பூசல்களைப் பௌத்தர்களான களப் பிரர்கள்தான் சங்க காலத்தின் இறுதியில் தமிழகத்தில் உண்டாக் கினர்கள்.[16] இத்தகைய பிளவுகள் ஏற்படாத சங்க காலத்தில் சமூக ஒருமிப்பு காணப்பட்டது (social solidarity) அச் சங்க காலச் சமுதாயத்தில் வேறுபட்ட சமூக அமைப்புக்களுள்

15 R. C. Majumdar — 'Corporate Life in Ancient India' — II-nd Ed. — p. 131, 132

16 பேராசிரியர் அ. ஞானசம்பந்தன் — இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுவிழா மலர், சென்னை—1968—சமயம்—பக்கம் 3

தோன்றும் மோதலின் (conflict between different social systems) காரணமாக ஏற்படுகின்ற அபிப்பிராய பேதம் காணப் படாதபோது தேர்தல் முறைக்கு அவசியமில்லை அல்லவா? விஜயாலயச் சோழர்களின் அரசாட்சியில் தேர்தல் தத்துவ மானது அபிப்பிராயத்தையோ கொள்கையையோ அரசியல் ரீதியில் பிரதிபலிக்க வைக்கின்ற அரசியல் கோட்பாடு (political principle) என்றிருக்கவில்லை. மாறாக, நல்ல ஆட்களைக் கிராம ஆட்சித் திறத்துக்கான நடைமுறை (administrative procedure) என்றுதான் அது அமைத்திருந்தது எனலாம். இவ்வாறு தேர்தல் முறையானது தமிழ்ச் சமுதாயத்தில் வேர்ப்பிடிப்போடு எக் காலமும் ஏற்படாதிருந்த காரணத்தால், சுய வளர்ச்சிப் பருவத்திலிருந்த சங்கச் சோழர்கள் ஐம்பெருங்குழுவைத் தேர்தல் முறைக்கு உட்படுத்தவில்லை. அவ்வாறு செய்வதற்கான அரசியல் பக்குவத்தை (political maturity) அவர்கள் இன்னும் பெறவில்லை. மக்களின் பொதுநலத்தை மன்னனுக்கு எடுத்துச் சொல்லும் வழக்கத்தை ஐம்பெருங்குழு மேற்கொண்டிருந்த காரணத்தால் மக்களுக்குரிய குழுவாக அது செயல்பட்டிருக்க வேண்டும் எனலாம்.

சோழ மன்னர்கள் ஐம்பெருங்குழுவின் ஆலோசனை கேட்டு அதன்படி செயல்பட்டார்களா? சங்கச் சோழருக்குச் சமகாலத்துக் குரிய மௌரியப் பேரரசன் தனது மந்திரி சபையின் ஆலோசனைப்படி நடந்துகொண்டான் என்றும், அம் மந்திரி சபைக்குத் தனி செயற்பாட்டுக்குரிய அதிகாரங்கள் கூடக் காணப் பட்டன எனச் சில அறிஞரும்[17], மௌரிய மன்னன் தன் இச்சையாகச் செயல்பட்ட நிலையில்தான் விரும்பிய வண்ணம் அமைச்சரவையின் ஆலோசனையைப் பாராட்டவோ ஒதுக்கவோ செய்தான் என்று மற்றையோரும்[18] கருத்து வேறுபாடு கொள் கின்றனர்; அர்த்த சாஸ்திரம் போன்ற வரலாற்றுத் தடங்கள் கொண்ட மௌரிய கால வரலாறுகூட மேற்சொன்னவாறு தெளிவான தோற்றமில்லாமல் தோன்றுகிறதென்றால், அரசியலில் வளர்ச்சிப் பருவத்தில் இருந்ததாகக் கருதப்படும் சங்க அரசு களின் மன்னர்கள் ஆலோசனைக் குழுக்களை ஏற்றுக்கொண் டார்களா இல்லையா என்பதை வரையறுக்க வாய்ப்பு இல்லை. ஆனால், தமிழ் மன்னர்களுக்கு மௌரிய மன்னர்களைப் போல யதேச்சதிகாரிகளாக நடந்துகொள்வதற்குரிய பேரரசுப் பலமோ,

17 V. R. I. Dikshitar—'Mauryan Polity'—1953—p. 134—135

18 B. N. Puri—op. cit, p. 45

ஒற்றர்களைக் கொண்ட மத்திய அரசுக்குரிய நிர்வாக இயந்திரமோ, இராணுவ வலிமையோ அளப்பரிய வகையில் வாய்த்திருக்கவில்லை; தன்னிச்சையாக அவர்கள் செயல்படாமல் பிறரைப் போலத்தான் அரசாண்டார்கள். ஆகவே, ஆலோசனைக் குழுக்களை மேவித்தான் அவர்கள் ஆட்சி செய்தார்கள் எனலாம்.

வழங்கல் போன்றவற்றை விலக்கிய பின்பு அவ் வகைத் தமிழ் அரசர்கள் வரிசையும் நீக்கித் தானஞ்செய்ய விழைவது என்பது பெருமங்கலம் என்றழைக்கப்பட்டது; அரசரின் பிறந்த நாளுக்கான — ஞானக் கவலைக்கான — 'வெள்ளணி' கைக் கொண்டு அவ்வரசர்கள் அறஞ்சார்ந்து வாழ முனைவதைப் பிற்காலச் சோழ நாட்டவரான நச்சினார்க்கினியர் தொல்காப்பிய விளக்கத்தில் கூறுகிறார் (தொல். பொருளதிகாரம்—90). இத் தகைய ஞானக் கவலை கொண்ட மன்னர் 'எட்டு வகை நுதலிய அவைத்தானும்' (தொல். பொருளதிகாரம்—76) என்ற பேறு பெற்றவர் ஆவர். அதாவது, அவர்களுடைய அவையில் உள்ள அறிவுடையோர் எட்டு மேலான குணங்களைப் பெற்றிருப்போர் ஆவர். குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை ஆகிய சமூக நலம் புரக்கும் நல்பியல்புகளைக் கொண்ட இவர்களே ஐம்பேராயத்தில் அங்கம் வகித்தார்கள் என்பது திண்ணம். இந் நிலையில் சங்க மன்னர்கள் அத்தகைய பெரு மக்களிருந்த ஆலோசனைக் குழுவினைச் சார்ந்து ஆட்சி நடத்துதலைச் சங்க அரசியல் மரபுக்குரிய அரசியல் கடமையாக மட்டுமல்லாமல் தங்களுக்குரிய அரசியல் ஆதாயமாகவும் கருதினார்கள். இவ்வாறு எண்பேராயம் போன்ற குழுக்களின் செல்வாக்கின் காரணமாகத் தமிழ் மன்னர்கள் தனி மனிதர்களாகச் செயல்படுகின்ற நிலையிலிருந்து நிறுவன நிலைக்கு (transformation from being feudalistic individuals to being royal institutions) தங்களை உருமாற்றிக்கொள்ளத் தலைப்பட்டார்கள். இதன் மூலம் தமிழக அரசியலமைப்பு முறையின் வளர்ச்சியில் (constitutional growth) முடியரசுத் தத்துவம் (Ideal of Monarchy) தனது முதிர்ச்சி வடிவத்தை (Mature Monarchy) அடைவதற்கான நேரடி வழி வகுக்கப்பட்டது.

## V வெளிநாட்டுறவில் இறைமை: பேரரசுத் தத்துவத்தின் செயலாக்கம்

சங்கத் தமிழகம் போன்ற போரார்வச் சமுதாயத்தில்

அரசியலமைப்புக்குரிய வளர்ச்சி (constitutional growth) துரித கதியில் நடைபெறும் என்பது பொதுவானதோர் உண்மையாகும். குழுக்கூட்ட வாழ்விலிருந்து (Tribalism) மன்னராட்சி முறைக்குத் தமிழகம் உடனடியாக வந்து சேரவில்லை. ஏனெனில், சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்களின் தனித்தனியான இறைமை (Sovereignty) குழுக்கூட்ட வாழ்வியலுக்குரிய குறுநில மன்னர்களையும் நேரடியாக எதிர்த்து நிற்கவில்லை. ஆனால் நாடு பிடிக்கின்ற ஆசையிலோ, நாட்டைக் காக்கின்ற ஆர்வத்திலோ பிற நாட்டோடு இராணுவ முறையில் மோதிப் போர் செய்து வெற்றித் தோல்விகளை அனுபவித்து, அதன் விளைவுகளினால் வருகின்ற அரசியல் மாற்றங்களை ஒப்புக் கொள்கின்ற மனப்பக்குவத்தைச் சங்க நாளைய ஆட்சியாளர்கள் அனைவரும் பெற்றிருந்தனர். இந்த வகையில் நகர அரசுகள் (city-states) மல்கிக் காணப்பட்ட கிரேக்க நாடு போலச் சங்கத் தமிழகம் தோற்றமளித்தது எனலாம். இந் நிலையில்—பிற நாட்டோடு மோதிக்கொண்ட நிலையில் — தன்னுடைய இறைமையை விரிவாக்கிக்கொள்கின்ற அரசியல் நிகழ்ச்சி தமிழரசுகளின் வரலாற்று இலக்கணமாக (logic of historical growth) தோற்றங்கொண்டிருந்தது. அந்நிய நாடான இலங்கையோடு பல நூற்றுண்டுகளாகத் தொடர்ந்து போரிட்ட தமிழரசுகள் தங்களுக்குள்ளேயும் அதே போன்று தொடர்ந்து மேலும் பல காலம் சண்டையிட்டுக்கொண்டார்கள் என வின்சென்ட் ஸ்மித் கூறுவதற்குரிய[19] அரசியல் நிலைமையைத் தமிழரசர்கள் தொன்றுதொட்டு நிலைபெற்று வந்துள்ள இராணுவ மரபுகளின் துணைகொண்டு தமிழகத்தில் நிரந்தரப்படுத்தினார்கள். கொல்லாமையை வற்புறுத்தும் சங்க காலத்துத் திருவள்ளுவர் அரசுக்குரிய முதற்கூறுபாடாக இராணுவத்தைத்தான் வைத்தார் (குறள்—381). இவ்வாறு அரசியலில் இராணுவப் போக்கு மலிந்து காணப்பட்டது. இந் நிலையில் பேரரசுத் தத்துவத்திற்கு இயல்பான ஊக்கமும் முனைப்பும் தமிழரிடையே காணப் பெற்றது.

## பேரரசுத் தத்துவத்தின் கருநிலை சோழ நாட்டில்தான் தோன்றியது

வேளாண்மையிலும், வெளிநாட்டு வாணிபத்திலும் பெற்ற திரண்ட செல்வத்தைக் கொண்ட சோழ நாடு இராணுவத்தை வலிமையுடன் நடத்துகின்ற வாய்ப்பைப் பெற்றிருந்தது. பேரரசுப் பார்வையில் (vision of imperialism) தமிழகத்தை

19 'The Oxford History of India'—1958—p. 162

ஓரரசு (unitary state) ஆட்சிக்குள் அடக்க முயற்சிக்கின்ற அரசியலார்வத்தை (political ambition) பெற்றுச் செயலாற்று கின்ற திறனைக் கொண்டிருந்தது. ஆகவே, சோழ நாட்டில் அரசுரிமையானது சுமுகமாகக் கைமாறுவதை ஏனைய சேர, பாண்டியர், மற்றும் குறுநில மன்னர்கள் யாவரும் விரும்பவில்லை; இதன் காரணமாகத்தான் கரிகாலன் அரச பதவிக்கு வந்தபோது பதினொரு வேளிர்களும், சேர, பாண்டியரும் வெண்ணிப் போரில் கரிகாலனை எதிர்த்தார்கள். அங்கே அவர்கள் தோல்வி யுற்றுப் போனதற்குக் கரிகாலனின் தனித்திறமை மட்டுமல்லாது சோழ நாட்டின் பொருளாதார வலிமையும் காரணமாக அமைந்தது. அரசியல் போட்டியை இராணுவத்தைக் கொண்டு நடத்தியதில் சோழ நாடு வெற்றி பெற்ற பின்பு கரிகாலன் சோழப் பேரரசை நிலைநாட்டுவதற்குரிய ஆக்கப்பணியில் இறங்க முடிந்தது. தமிழக வரலாற்றில் ஆதாரப் பூர்வமான முறையில் பேரரசுத் தத்துவத்தை நிலைநாட்டியவன் கரிகாலனே ஆவான் என்பது தெளிவு.

### பேரரசுத் தத்துவம் தோன்றுவதற்கான ஏனைய காரணங்கள் : பேரரசு-மனதிற்கிசைந்த அரசியற்கனவு

தமிழகத்தின் நாகரிகம் இராணுவ முறையிலமைந்ததால், பேரரசின் தொடக்க நிலை, செல்வங்கொழித்த சோழ நாட்டில் தோன்றியது என்பது உண்மையானாலும், பேரரசுத் தத்துவம் தமிழக மன்னர்களின் மனதிற்கிசைந்த அரசியற்கனவாகக் காணப்பட்டது என்பதும் உண்மைதான். அரசியல் மேலாண்மைத் தன்மையை (hegemonism) நிலைநிறுத்துகின்ற முயற்சியை ஒரு வகை அரச இலட்சணமாகப் (royal fashion) பிரான்சின் லூயி XIV கைக்கொண்டிருந்ததைப் போலச் சங்க மன்னர்களும் தங்களுடைய ஆதிக்கத்தையும் வீரத்தையும் தமிழகத்தின் மற்றைய பாகங்களில் நிலைநாட்ட விரும்பினர். சான்றாக, வடநாட்டுப் படையெடுப்பை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு தமிழகம் திரும்பிய சேரன் செங்குட்டுவன் சேர, பாண்டியரின் வசைமொழிக்குப் பதில் மொழியாக அவர்கள் மேல் படை எடுத்துப்போக எத்தனிப்பது பேரரசை விரும்பிய மன்னர்களின் உள்ளக்கிடக்கையின் சாயல் எனக் கொள்ளல் வேண்டும்.

### மாமனிதர்களாக விளங்கிய மாமன்னர்கள்

சேரன் இமயவரம்பன், ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன், இமயத்தில் புலிக்கொடி நாட்டிய சோழன்

கரிகாலன் போன்றவர்கள் பேரரசுப் பாணி கொண்ட ஆளுகைத் திறனுடையாளர்கள் (imperial personalities) பிறவியிலேயே செயல் வீரர்களாவார்கள். இவர்கள் பேரரசு கட்டுவதற்கு விழைந்தது அவர்களுடைய குணநலத்திற்குரியதாகத்தான் (character) எனக் கொள்ள முடியும். இத்தகைய குணநலனைக் கொண்டு மகா பீட்டர் ரஷ்யாவிற்குப் பேரரசன் ஆக விரும்பி வெற்றியும் பெற்றதில்லையா ? நாட்டின் கொள்கை என வகுக்கப் பட்ட நியதிப்படி அல்லாமல் தன்னிச்சைப்படி அந் நாளைய அரசர்களும், வேளிர்களும் நடந்துகொண்டார்கள்.[20] இந் நிலையில் ‘ நெப்போலியன்கள் ’ தோன்றினர்கள்.

பொருளாதாரச் சலுகைகள் பேரரசைத் தோற்றுவித்தன

தமிழகத்தில் ஆரிய மயமாதல் நிகழ்ந்த பின்பு தமிழகத்தில் அரசனை மதிக்கின்ற மனப்போக்கு வளர்ந்தது. தனி நபர்த் திறனர்வம் (individuality) சங்கத் தமிழக அரசியலில் யாவராலும் வலிந்து போற்றப்பட்ட வாழ்வியல் மரபாகும் ; அரசனே அவ்வார்வத்தோடு செயலாக்க முனைந்தபோது, தமிழக மக்கள் தங்கள் உடைமைகளைப் பாதுகாக்கின்ற நிறுவனமான அரசின் (state) வலிமையை வளம்படுத்துகின்ற வகையில் அவ்வரசனை ஆதரித்தார்கள். அவ்வரசன் பேரரசனாக மாறியபோது அவனுடைய நாட்டு மக்கள் ஆதரித்தது என்பது இயல்பான நிகழ்ச்சிதான். ஆனால், பிற பகுதி மக்களும் அதனை ஆதரித் தார்கள். ஏனெனில், பேரரசு ஆட்சி முறையில் அரசுக்கு ஏராள மான வருவாய் வருகின்ற போது மக்களின்மேல் விதிக்கப்பெறும் வரி விதிப்பில் கடுமை அவ்வளவாகக் காணப்படாது. முறை யான வருவாய்க்கும் மேலாக எதுவும் மக்களிடமிருந்து அரசன் வாங்குவது என்பது 'பால் தர வந்த பழவிறல் தாயம்' என்றபடி விதியால் தன்னை வந்தடைந்த—பழைய வெற்றியால் உண்டான—அரசுரிமையைத் தாங்குகின்ற மனவலிமையை அவ்வரசன் பெற்றிராதத் தன்மையைக் காட்டும்—என்று சோழப் பேரரசன் கிள்ளி வளவன் மட்டுமே கூற முடியும் (புறம்—75). இதை ஏனைய குறுநில மன்னர்களோ செல்வத்தில் சோழரைவிடக் குறைந்த நிலையிலிருந்த சேர, பாண்டியரோ கூற முடியாது. சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்தான் (புலவர் வெள்ளைக்குடி நாயனரின் வேண்டுதலுக்கேற்ப) வரி நீக்கம் (remission) செய்ய முடியும்.[21] (புறம் — 35). வேந்தருள் சோழர்கள்தாம் செல்வந்தர்கள் என்பதை அவர்களால் நன்கு

20 K. A. N. Satri—‘ Cholas ’—1955—p, 52

21 N. Subrahmanian—‘ Sangam Polity ’—1966—p, 202

பாதுகாக்கப்பட்ட பெருநிதியம் கொண்ட கருவூலம் (Treasury) கும்பகோணத்தில் வைக்கப்பட்டிருந்தது என்ற செய்தியைக் கொண்டு வலியுறுத்தலாம்.[22] மக்களுக்குப் பரவலான பொருளாதார வளர்ச்சியும் சலுகைகளும் கொடுக்க வல்ல சோழப் பேரரசை ஏனைய மக்கள் ஆதரித்த காலத்தில் பேரரசு கட்டுவதற்கான பேராவல் மன்னர்க்கும் மக்களுக்கும் தோன்றியது வியப்புக்குரியதல்ல.

### கலாசார ஒருங்கிணைவும், பேரரசுத் தோற்றமும்

எல்லோரும் தமிழர்கள் என்றாகிய பின்பு நாட்டுக்கு நாடு காணப்பட்ட வேறுபாடு அங்கங்கே ஆட்சியிலிருந்த மன்னர் களைப் பொறுத்ததே தவிர, மக்களைப் பொறுத்ததல்ல. ஆரிய மயமாதலில் தமிழகம் ஒரே முறையான வேள்விவழிச் சமயத்தை மேற்குடியாளரின் நிலையில் ஏற்றுக்கொண்ட பின்பு தமிழகத்தில் கலாசார ஒருங்கிணைவு (cultural integration) ஏற்பட்டிருந்தது. கடவுளாக ஆக்கப்படாமல் மதிப்புக்குரியவனாக மட்டும் தமிழகச் சங்க காலத்தில் காணப்பெற்றிருந்த இராமன் போன்ற இதிகாச நாயகர்களின் அடிச்சுவட்டில் தமிழ் மன்னர்களும் மாமன்னர் களாக மாறி விரிவான ஆட்சியுரிமை கொண்டு தமிழகத்தை ஏகத் தமிழக ஆட்சியுரிமையில் ஆள்வதற்குப் பெரிதும் விரும்பு கின்ற வகையில் அந்தணர், புலவர் போன்றோர் அம் மன்னர் களுக்கு ஊக்கங்கொடுத்து வந்தனர். ஏற்கெனவே வடநாட்டு வெற்றியில் பொருளீட்டி வந்து பத்தினித் தெய்வத்தைக் கோவில் கட்டி வழிபட முனைந்து நின்ற சேரனுடைய சக்தி சிதறுண்டு போகாமல் பாதுகாக்கின்ற எண்ணத்தில்தான் மாடல மறையோன் அச் சேரனின் சேர—பாண்டியப் படையெடுப்புத் திட்டத்தைத் தடுத்து நிறுத்தினான் என்பது பொருந்தும்.

### உள்நாட்டு அரசியலின் தனிப்பெரும் வளர்ச்சியும் பேரரசுக்கான விரிவாக்கமும்

மன்னராட்சியியலுக்குரிய நிறுவனங்களின் வளர்ச்சிநிலை பேரரசின் தோற்றத்திற்கு வழி காட்டியது. மாடுகளினால் இழுக்கப்பட்ட தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய நால்வகைப்படைகளோடு[23] கடற்படையும் சேர்ந்து தமிழக அரசுகளின் இராணுவம் வலிமை பொருந்திக் காணப்பட்டது. தானைத்தலைவர்கள் 'ஏனாதி' என்ற பட்டத்தோடு விருது—மோதிரமும், தனியான இலச்சினையும் (coat of arms)

22 K, A. N, Sastri — 'A History of South India'—1958, p. 128

23 K, A. K. Sastri—op. Cit., p. 128

அரசர்களிடமிருந்து பெற்றூர்கள் ; அந் நிலையில் அவர்களுடைய படை நடத்துந்திறன் மேலும் மேம்பட்டது எனலாம். சங்க மன்னர்களின் அவையில் வெளிநாட்டுறவு இலாகா செம்மை யாகச் செயல்பட்டதைப்பற்றிச் சில அறிஞர்கள் கூறுகிருர்கள். அந்த அளவிற்கான வளர்ச்சி நிலையைத் தமிழக அரசர்கள் சங்க காலத்தில் அடையவில்லை என்ற கருத்தும் உண்டு.[24] எண்பேராயம், ஐம்பெருங்குழு போன்றவற்றின் துணைகொண்டு உள்ளாட்சித்துறை பெருவளர்ச்சி பெற்றிருந்த நிலையில் வெளி நாட்டுறவிற்கான தூதுவரும் ஒற்றர்களும் ஏராளமான எண்ணிக் கையில் செயலாற்றினர். வட நாட்டுப் படையெடுப்பின் சாதக பாதகங்களை அறிந்து வர 1000 ஒற்றரையும் தூதுவர்களையும்—சஞ்சயன் போன்ரேரை—சேரன் செங்குட்டுவன் பயன்படுத் தினன். சோழ நாட்டில் வணிகம் பெருவளர்ச்சி பெற்றது ; அளவிறந்த செல்வம் குவிந்தது. இவ்வாறு இராணுவம், உள்ளாட்சி, வெளிநாட்டுறவுக்கான இலாகா, வணிகம் போன்ற நிறுவனங்களின் வளர்ச்சி, பேரரசுக்குரிய வளர்ச்சியை நோக்கி விரிவடைந்தது என்பது இயல்பானதொரு நிகழ்ச்சி எனக் கொள்ள வேண்டும்.

1. ஒருங்கிருத்தல் கொள்கை (Policy of Co-existence): கரிகாற்பெருவளத்தானும், வெள்ளியம்பலத் துஞ்சிய பெருவழுதி என்ற பாண்டிய வேந்தனும் ஒருசேரக் காணப்பெற்ற நல்வினைக்கக் காட்சியைப் புகழ்ந்து போற்றும் பூம்புகார்க் காரிக்கண்ணனுர் என்ற புலவர் தருகின்ற இரு மன்னர்களின் ஒற்றுமை, ஒருங்கிருத்தல் கொள்கையாகச் செயல்பட்டதைக் காட்டுகிறது எனலாம். கண்ணகிக் கதை அறிவுறுத்தும் அரசியலுண்மைகள் முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியவை என்று இளங்கோ கூறுவதிலிருந்து மூன்று நாடுகளும் புகார்-மதுரை-வஞ்சி என்ற தமிழ்க் கலாசார அச்சு நாடுகளாக விளங்க வேண்டிய அரசியல் குறிக்கோள் வரையறை செய்யப் பட்டது.

2. மண்டலஞ்சேர் கொள்கை (Policy of Alignment): பாரியின் பறம்பு மலையைச் சேர-சோழ-பாண்டிய மூவேந்தரும் சேர்ந்து கைப்பற்றியதானது (புறம்—112) மண்டலஞ்சேர் கொள்கைக்குரிய சான்ருகக் கொள்ளலாம். சோழன் நலங்கிள்ளி உள்ளிட்ட ஒன்பது சோழ அரசிளங் குமரர்களைச் சேரன் செங்குட்டுவன் நேரிவாயிற்போரில் தோற்

24 N. Subrahmanian—op. cit., p. 179

கடித்தது [25] சோழன் நெடுங்கிள்ளியோடு அச் சேரன் கொண்டிருந்த கூட்டுச் சேர்க்கையைப் (மண்டலஞ்சேர்) பொறுத்து தான்.

VI. திறனாய்வு

சங்ககால மக்களின் வாழ்வியலில் வேளிர்களும், அரசர்களும், பேரரசர்களும் தோன்றினார்கள். இவர்கள் மூவரும் மூன்று சமுதாய வளர்ச்சிப் பருவத்திற்குச் (social stratification) சொந்தமானவர்கள் ஆவார்கள். இயற்கை வாழ்வு முறைச் சமூகம் (Pastoral Society) வேளிர்களைக்கொண்டிருக்கும். தனக்கென அமைந்த பிடிப்புகொண்ட நிலையில் தந்நலத்தைப் பாராட்டுவதில் மனித மனம் ஈடுபட்ட நிலையில் வேளாண்மை தோன்றுகிறது. இவ் வேளாண்மை தன்னிறைவை அடைந்த பின்பு உபரி உற்பத்தியினை வெளியிடத்தில் விற்று முதலாக்கிச் செல்வஞ்சேர்க்கின்ற தனி மனிதத் தனியார்வப் பொருளாதார வழிமுறையாக வாணிபம் தோற்றங்கொள்கிறது. இவ் வாணிபத்தைச் செயல்படுத்துகின்ற அரசியலமைப்பு முறையாகப் பேரரசு உரு எடுக்கும். இவ்வாறு மூன்று நிலைகளைத் தன்னுள் அடக்கிய முறையில் சோழ அரசு பேரரசாக உருமாற்றங்கொண்டு வளர்ந்தது. வேளிர்களைக் கொண்ட அப் பேரரசு சோழப் பேரரசுக்கு உரிய தலைவனாகவும் கொண்டிருந்தது. சோழ அரசு இம் மூன்று நிலைகளைக் கடந்தும் கடக்காமலும் காணப்பட்ட சமுதாயத்தைப் பெற்றிருந்தது என்பது சிந்தனைக்கு உரிய செய்தி. இம் மூன்று நிலைகளுக்குரிய மாந்தர்களின் இயல்புகளைப் பிரதிபலித்துச் சோழ அரசு இயங்கியது. வேளிர்களின் தலைமையின்கீழ்க் காணப்பட்ட மக்களின் வீரம், காதல் சோழப் பேரரசின் அரசியலையும் சமூகத்தையும் தாங்கி நின்றன.

வேளாண்மையின் தலைவனாக விளங்கிய கரிகாற்சோழனுடைய எண்ண எழுச்சி கல்லணை, காவிரிக்கரை, தொண்டைமண்டலத்தில் காடு நீக்கிய வேளாண்மைக் குடியேற்றம் என்றளவில் மேலாக்கம் பெற்றிருந்தது; வணிகத்தின் பாதுகாவலனான கரிகாற்சோழன் புகார் நகரத்தில் கடல்வழி வணிகக் கண்காணிப்புத்துறையை நடத்தி, ஈழத்திற்குக் கடற்படை அனுப்பி, யவனர்களை உபசரித்து, தனது சோழ அரசைப் பேரரசாக உரு மாற்றினான். இவ்வாறு சோழ அரசு சமுதாய நிலையில் இயற்கை வாழ்வுக்குரிய உணர்வுகளையும், அரசியலில் வேளாண்மைக்குரிய அரசனையும், பொருளாதாரத்தில் பேரரசிற்குரிய வழி வகைகளையும் பெற்றிருந்தது. உரோம அரசு சங்ககால மக்களோடு தொடர்பு கொண்டிருந்தது. உரோமப் பேரரசின்

25 Robert Sewell—HISI.—1932—p. 15

வலிமைக்கு வழி காட்டுகின்ற முறையில் இங்கிலாந்து போன்ற பேரரசுப் பகுதிகளில் போடப்பட்ட சாலைகள் (roads) போன்று தமிழ் நாட்டிலும் (உரோமர்கள் கைக்கொண்டிருந்த விஞ்ஞானப் பாணியில்) சாலைகள் போடப்படவில்லை. அத்தகைய சாலைகள் தமிழ் மன்னர்களின் அரசியல் வலிமைக்கு ஆக்கம் சேர்ந்திருக்கக் கூடும். (வம்ப மௌரியரின் வரவுக்குப் பின்பு தேர் சோழர்களின் படையமைப்பில் ஓர் உறுப்பாக மாறியது) (பிற நாட்டவரின் போர்முறையைக் கற்றுக்கொள்ளாத பெரும் பிழையின் காரணமாக இந்திய வரலாற்றில் அன்னியர்களின் ஆட்சிக் காலம் தொடர் அவலமாக ஏற்பட்டது.) ஆனால் சோழர்கள் இந்த வரலாற்றுக் குற்றச்சாட்டுக்கு விதி விலக்காவார்கள். மௌரியரின் படைமுறையைக் கற்றுக்கொள்கின்ற அளவிற்குச் சோழநாட்டின் அரசு வலுத்துடிப்புடைய நிறுவனம் (dynamic institution) என்றமைந்தது. இவ்வாறு தனக்குரிய வளர்ச்சித்திறனை அது அயர்வில்லாத முறையில் பெற்றிருந்தது. ஆடம்பரப் பொருள்களை (luxury goods) ஏற்றுமதி செய்து அத்தகைய ஆடம்பரப் பொருள்களை இறக்குமதி செய்த சோழ நாட்டரசு ஈழம் சென்று பேரரசு ஆதிக்கத்தை நிலைநாட்ட முயற்சிக்கின்ற அளவிற்கு வணிகத்தைப் போற்றிய நிலையில் கூட உரோமப்பேரரசன் அகஸ்டஸ் ஆண்ட காலத்தில் பாண்டியர்கள் வெளிநாட்டு வணிகக்குழுவினை அனுப்பியதைப் போலச் சோழர்கள் எதுவும் செய்யவில்லை. யவனர் என்றழைக்கப்பட்ட உரோமர்களின் தொடர்பு ஏற்பட்ட நிலையிலும், உரோமர்களின் நிர்வாகத்திறனுக்கு உதவிய சிறப்புச் சாதனமான உரோமர் பாணிச்சாலைகளை அமைத்துத் தமிழகப் பொருளாதாரத்திற்குப் புதுமை வேகம் கொடுக்கவில்லை; வெளிநாட்டு வணிகத்தின் மேம்பட்ட வளர்ச்சிக்குரிய முறையில் உரோமர் போன்றோரோடு ராஜீய உறவுகளைக் கைக்கொள்ளவில்லை.

பணப் பொருளாதாரத்தை (money economy) சோழர்கள் உருவாக்காத காரணத்தால் உரோமர்களோடு அவர்கள் செய்த வணிகத்தின் விளைவாகக் கிடைத்த தங்கமெல்லாம் கட்டித்தங்கம் என்ற நிலையில் (bullion) உலவியது ; நாணயக் காசுகளாகப் புழக்கத்தில் வந்துலவவில்லை [26]. உரோமர்களோடு தாங்கள் நடத்திய வாணிபத்தின் விரிவாக்க நலனை எண்ணிக் காட்பிஸஸ் போன்ற கனிஷ்கர்வழிக் குஷானர்கள் தாங்கள் வெளியிட்ட நாணயங்களை உரோமர்களின் காசு போல எடையிலும், வடிவமைப்பிலும் ஒத்திருக்கச் செய்தது போல, [27] சமகாலத்திய சோழ

26 Romila Thapar—'A History of India'— 1969—p. 112

27 B. N. Puri—'India under the Kushanas'—1965—p. 119

மன்னர்கள் நாணயச் செலாவணிச் சீர்திருத்தம் எதுவும் மேற்கொள்ளவில்லை. போரிடுந்துறையில் அன்னியரிடமிருந்து கற்றுக்கொண்டது போலப் பொருளாதார நிறுவனங்களையும் மாற்றிக்கொண்டிருந்தால் சோழப் பேரரசின் அரசியல் வலிமைக்குத் துடிப்பும் நீட்டிப்பும் கிடைத்திருக்கக் கூடும்.

## (இ) சங்க காலத்திய சோழர் சமூக நிலை

### I. அரசியல் நிலை

சோழ மன்னர்கள் சங்க காலத்தில் அரசுரிமையானது அரசக் குடும்பத்தின் பரம்பரையைச் சேர்ந்தது. பிரபுக்கள் ஈடுபட்ட தேர்வு முறையில் அரசர்கள் பதவிக்கு வரவில்லை. அதாவது, நாட்டிலுள்ள பிரபுக்கள் போன்றோரின் ஒப்புதலின்பேரில் சோழ மன்னன் அரியணை ஏறவில்லை. ஆனால் அரசக் குடும்பத்தில் வாரிசு பற்றி முடிவு ஏற்படாத நிலைமை இருந்தால் ஒரு யானையின் கையில் மாலையைக் கொடுத்தனுப்பி (கழுமலம் அல்லது சீகாழியில் இருந்து) ஊர்வழி செல்லச் செய்து அரசனைத் தேர்ந்தெடுத்தனர். யானைக் கையால் மாலை பெற்றவன் மன்னனுவான் என்ற முறைமையைக் கரிகால் பெருவளத்தான் வாழ்க்கை நிகழ்ச்சியிலிருந்து நாம் அறிகிறோம்.

போர்த்திறம் காட்ட வேண்டிய படை நடத்தும் வீரர்களாகச் சோழ மன்னர்கள் இருந்தார்கள்; தாங்களே முன்னின்று படைகளை வழி நடத்திச் சென்றனர்கள். போர்முகத்தில் அம் மன்னர்கள் வீழ்ந்தாலும் படுகாயம் உற்றாலும் அவரோடு போருக்குச் சென்ற வீரர்கள் போரை நிறுத்திக்கொண்டார்கள். 'போர் முரசம் அவனுடைய ராஜ இலச்சினைகளில் முக்கியமானது. அரசப் பரம்பரையின் வழிமுறைப்படித் தேர்ந்தெடுக்கப் பட்ட ஒரு மரத்தினால் செய்யப்பட்ட இம் முரசம் நல்ல நேரம் கணிக்கப்பட்ட நாள்களில் நீராட்டப்பட்டுப் போற்றப்பட்டது. தோல்வியுற்ற அரசனுடைய பரம்பரைச் சார்பான மரத்தை வீழ்த்தி, அதனிலேயே முரசு செய்துகொள்ளல் பெரும் வீரத்தின் எல்லையாகக் கொள்ளப்பட்டது. புறமுதுகு காட்டி ஓடிய மன்னன் மறுபடியும் போருக்கு வாரான் என்பது சங்ககால மக்கள் வாழ்வியலுக்குரிய உறுதிப்பாடு ஆகும். ஏனெனில், அவனுடைய மனைவியும், சுற்றமும், சூழலும் அவனை மானத்தோடு வாழ அனுமதிக்க மாட்டார்கள். (தோற்றுப்போன மன்னருக்குப் பெண்பாலார் அணிகலன்களான தண்டையும், மெட்டியுந்தான் உரியன) வெற்றி பெற்ற மன்னன் கழல் அணி

வதன்மூலம் தனது வீரத்தின் சிறப்பை உணர்ச்சிப் பெருக்காக வெளிக்காட்டிக்கொண்டான். ‘எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்’ என்ற சூத்திரத்தின்படி (பொருள்—175) போர்முகத்தில் பெண்பாலாரிடம் காதல் செய்வது என்பது தடுத்தற்குரியது ஆகும். போருக்குப் போகின்ற நிலையில் பாசறைகளில் மன்னருக்குப் பாதுகாப்பு பெண்களே அளித்தார்கள். சங்க காலத்தில் சோழ மன்னர்கள் காட்சிக்கு எளியவராக இருந்தார் [illegible] வாயில்’ என்ற சம்பிரதாயத்தின்படி மன்னன் நாள்தோறும் மக்கள் முன்பு தோன்றி அறம் கூறும் கடமையினைச் செய்தல் வேண்டும். ‘அரும்பெறல் புதல்வனை ஆழியில் மடித்தோன்’ என்று சிலம்பால் புகழப்படும் மனுநீதிச் சோழனின் பரம்பரை என்ற உணர்வின் உந்துதலில் சோழ மன்னர்கள் தம் மக்களுக்கு நீதி வழங்குவதில் முந்தி நின்றது அவர்தம் பரம்பரைச் சிறப்பாகும். ‘வாழ்க்கை வாழ்வதற்கே’ என்ற உலகியல் கருத்தை மையமாகக்கொண்ட தமிழ்ச் சமுதாயத்தில் சோழ மன்னர்கள் அவர்களுடைய அரண்மனைகளில் இனிது இருந்தார்கள் பரிசில் வாழ்க்கை கொண்ட பாணரும், விறலியரும் இசையும் நாடகமும் நல்க, மதுவுண்டு, மன மகிழ்ச்சியில் திளைக்கின்ற மனப்போக்கு அவர்களுக்கு இருந்தது. அந் நாளைய வாழ்வு முறை அப்படித்தான் கலைவுணர்வோடு கூடிய பொது வாழ்வாக அமைந்திருந்தது.

அரசனுடைய பிறந்த நாள் விழா ஆண்டுதோறும் அறச் செயல்களோடு நடத்தப் பெற்றன. வெள்ளாடை அணிந்து, இரப்பார்க்கு ஈந்து, மன்னர்கள் மனம் மகிழ்ந்தார்கள். இந் நிகழ்ச்சிகள் வெள்ளணி, பெருமங்கலம் என வழங்கப்பட்டன. மன்னருக்குரிய மற்றொரு விழா அவர்தம் முடிசூட்டு விழாவாகும். அடுத்து வருகின்ற ஒவ்வோர் ஆண்டிலும் முடிசூட்டு விழாவின் ஆண்டு நிறைவு ‘மண்ணுமங்கலம்’ என்ற விழாவாகக் கொண்டாடப்பட்டது. அரசனுடைய முடிசூடல், நீராடல் போன்ற நிகழ்ச்சிகள் இவ் விழாவில் சீரோடு நடைபெற்றன.

## II பொருளாதார நிலை

**1. வேளாண்மை:** சோழ நாட்டின் பொருளாதாரம் காவிரிச் செல்வமான வேளாண்மையை அடிப்படையாகக் கொண்டதுதான். நிலத்தைப் பயிரிடுவோர் வேளாளர் எனப்பட்டனர். நச்சினார்க்கினியர் என்ற உரையாசிரியர் கூறுவது போல, இவ்

வேளாளர்களில் பெருநிலக்கிழார்களாக விளங்கியவர்கள் தங்கள் நிலங்களில் வேலை செய்யவில்லை. ஏனைய வேளாளர்கள் பிறரிடம் வேலைக்குச் செல்லாமல் தங்களுடைய நிலங்களைத் தாங்களே செய்கால்படுத்தினார்கள். இத்தகைய நேரடியான முயற்சியும் முனைப்பும் 'சோழ வளநாடு சோறுடைத்து' என்ற சிறப்பிற்கு ஆதாரங்களாயின. ஒரு பெண் யானையானது படுத்து எழுந்திருக்கின்ற அளவுள்ள நிலப் பகுதியில் ஏழு யானைகளை உண்பிக்கின்ற அளவிற்கு உணவு விளையும் வளமுடையது என்று ஆவூர் மூலங்கிழார் என்ற புலவர் கூறுகிறார்.[28] இவ்வகையில் செழிப்புக்கும் செல்வத்திற்கும் ஆதாரமான நிலத்தை உடைய நாட்டிற்குரிய சோழர்கள் 'வளத்தான்' என்ற அடைமொழியைப் பெற்றார்கள். வேளாளர் அரசிற்குச் செலுத்திய திறைபற்றி முழுமையான செய்திகள் காணப்பெறவில்லை. நெல் வளஞ் செழித்த நாடு என்ற அளவில் உரோம நாணயங்கள் வழக்கிலிருந்த அந் நாளிலிருந்து பல நூற்றாண்டுகள் வரை சோழ நாட்டில் நெல்தான் செலாவணியாக அமைந்து இருந்தது என ரொமிலா தாபர் கூறுகிறார்.[29]

வேளாண்மைத் தொழிலின் மனவொவ்வாத பகுதியினைக் கடைசியர் என்றழைக்கப்பட்ட ஏழை மக்கள், குறிப்பாகப் பெண்பாலார், மேற்கொண்டிருக்கிறார்கள். அடிமைகளும் காணப்பெற்றார்கள் என்ற வரலாற்றுக் குறிப்பும் உண்டு. கரிகால் சோழன் 'மேழிச் செல்வம் மேம்பாடடைந்த' தன்னுடைய நாட்டுக்குத் தானே அதிபதி என்றளவில் 'பெருவளத்தான்' என்ற பொருளாதாரச் சிறப்பிற்குரிய விருதினைமட்டுமே பெற்றிருந்தான். தொண்டை மண்டலத்தைக் கைக்கொண்ட அதே சோழ மன்னன் காடு திருத்தி 24 கோட்டங்களடங்கிய கழனிகளை உருவாக்கிய பொருளாதார மேம்பாடு தமிழக வரலாற்றில் கரிகால் சோழன் ஒருவனுக்குத்தான் அமைந்திருந்தது. இவ்வாறு காடு திருத்திக் கழனி கண்ட கரிகாலன் அந் நிலங்களின் வருவாயைக் காஞ்சியின் பண்டைக் காலக் கோவிலைத் திருத்தி அமைப்பதில் செலவிட்டான். இவ்வாறு சோழர்குல மன்னவர்க்குக் கோவில் கட்டுகின்ற அரசியல் பாரம்பரியம் தொடங்கி வைக்கப்பெற்றது. புதிதாகக் கழனியாக்கப்பட்ட விளைநிலங்களில் குறும்பர்கள் என்ற குறை நாகரிக மக்கள் குடியேற்றப்பட்டார்கள். இவர்களின் வாழ்வை நவீனப்படுத்துகின்ற பணியில் கரிகாலன் ஈடுபட்டபோது தமிழ் நாகரிகத்தின் பொதுமையான வளர்ச்-

28 புறநானூறு—40

29 Romila Thapar—'A History of India'—I—1969—p. 113

சிக்கு ஆக்கந்தேடிய வழிவகை புலப்படும். காவிரி வெள்ளத்தின் முழுப் பயனைத் துய்ப்பதற்காகவும், கரை உடைப்பைத் தடுப்பதற்காகவும் அவ் வற்றாத ஆற்றின் இரு பக்கமும் கரை எடுப்பிக்கத் தன் கீழிருந்த குறுநில மன்னர்களுக்கு ஆணையிட்டு, அதனைச் செவ்வனே செய்து முடித்தான் கரிகாலன். ஈழநாட்டுப் படையெழுச்சியின் பயனாகச் சோழ நாட்டிற்குக் கரிகாலனால் கொண்டுவரப்பட்ட பன்னிரண்டாயிரம் அடிமைகளைக் கட்டாயச் சேவையில் ஈடுபடுத்தி 100 மைல் நீளமுள்ள காவிரிக்கரையை உயர்த்தினான் என்று வின்சென்ட் ஸ்மித் என்ற ஆங்கில வரலாற்றறிஞர் கூறுகிறார்.[30]

2. சங்கச் சோழரின் கடல்வழி வணிகம் (Overseas Commerce): உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்தின் வளர்ச்சியில் அரசின் பங்கு கணிசமான அளவில் காணப்பட்டது. சோழ நாட்டின் வணிகர்கள் பெருநிதி திரட்டிய செல்வச் செருக்கில் மிதந்தார்கள். அவ் வணிகர் பெருமக்கள் சோழ அரசன் அனுபவித்து வந்த வாழ்க்கை நலன்களை நுகரத் தலைப்பட்டு நின்றார்கள். கோவலன்—கண்ணகி திருமணத்தின்போது 'முரசியம்பின; முருடதிர்ந்தன.................அரசெழுந்ததொர் படி எழுந்தன'[31] என்றமைந்த நிலையில் வணிகரும் அரசனைப் போல வாழத் தலைப்பட்டதும், அதனைச் சோழ அரசர்கள் அனுமதித்துச் சோழ நாட்டின் வணிகத்தை வளர்த்தனர் என்பதும் சிறப்புச் செய்திகளாகும். இவ் வணிகரின் உயரிய சமூக அந்தஸ்து (social status), பெருநிதியாளுந்திறன், அந் நாளைய அந்தஸ்துச் சின்னமான (status symbol) காமக்கிழத்தியர் உறவு (concubinage) போன்றவை சோழ நாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்டது போலப் பாண்டிய நாடு போன்ற பழைமைவாதப் பகுதிகளில் (conservative areas) மனமாற்றம் இன்னும் வரவில்லை. ஆகவே, வணிகரின் வணிகத்திறனை (mercantile power) சமுதாய ஆக்கமாக மாற்றுகின்ற பொருளாதார விவேகம் அவ்விடங்களில் தழைத்திருக்கவில்லை. இவ் வணிகரைச் 'சமூகக் காளான்கள்' (social upstarts) என்றெண்ணுகின்ற பழமைவாதத்தின் உறுத்தலின் காரணமாகத்தான் சோழ நாட்டு வணிகனான கோவலனுக்குப் பழைமையின் பிடிப்பில் உழன்ற பாண்டிய நாட்டில் அவ்வரசனால் (அறங்கூறு அவையத்தில் நடைபெற வேண்டிய விசாரணையின்றியே) மரண தண்டனை வழங்கப்பட்டது என்ற சமூகவியல் வழிச்சிந்தனைக் (socialogical evaluation) கருத்து இந் நாளில்

30 'The Oxford History of India'—1658—p. 162

31 சிலம்பு—I—வரி 46–47

வலிமை பெற்று வருகிறது. ஆனால், வேந்தர்களுக்குத் திருமணப்பெண் கொடுக்கின்ற தகுதியைப் பெற்ற வேளாளர் தாம் வணிகராகவும் விளங்கினர்[32]. அரசனால் 'எட்டி' போன்ற பட்டங்களும் வழங்கப் பெற்றிருந்தனர்[33].

பெரிப்ளஸ் என்ற நூலில் வணிகத்தின் வளர்ச்சிக்கு அடிப் படையாக இருந்த மூவகையான கப்பற்போக்குவரத்து பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பூம்புகாரின் நகர அமைப்பு பெருமளவிற்கு வெளிநாட்டு வணிகத்தின் போக்கிற்கு ஈடுகட்டி அமைந்திருந்தது. வணிகத்தைப் பொறுத்து ஏற் பட்டிருந்த உருவ மாறுதல்களை அந் நகரம் பெற்றிருந்த நிலைகளைப் பட்டினப்பாலை சுட்டிக் காட்டுகிறது. வேளாண்மையைப் பெருவளமாக்கித் தங்களுக்குரிய அரசியற்சுதந்தரத்திற்கு உறுதுணையாகக்கொண்ட வேளாளர்களும், ஏனைய நிலக்கிழார் களும் மட்டும் பெருங்குடி மக்களாகக் கருதப்பட வேண்டிய சோழ நாட்டில் வணிகர்களுக்கும் அவ்வளவு எளிதாக அரசர்க்கு இணையான சமூக அந்தஸ்து கிடைத்தது என்பது வியப்புக்குரிய செய்தி அல்ல. ஏனென்றால், சோழ நாட்டுக்கு அந் நாளையில் வணிகத்தை மேற்கொண்டு அளப்பரிய வருமானம் கிடைத்து வந்தது. 'உரோமப் பேரரசின் செல்வமெல்லாம் ஆண்டொன் றுக்கு 550 மில்லியன் செஸ்டர்ஸ் காசுகளாக (நூறு மில்லியன் காசுகள்) இந்தியாவிற்கு சென்று மறைகின்றன' என்று உரோமா புரியின் எழுத்தாளன் பிளினி (பிளினி XII) அங்கலாய்த்துக்கொள் கிறான் பிளினியின் காலம் கி.பி. 77 ஆனால் கிறிஸ்து சகாப்தத்திற்கு 250 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சோழநாட்டின் வணிகம் அள வில் விரிந்தும், வருமானத்தில் மிகுந்தும் காணப்பட்டது. கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்குரிய அன்றைய இந்தியாவை மைசூர்ப் பகுதி வரை அடக்கி ஆண்டயதேச்சதிகார அரசான் மௌரிய நாட்டிலுள்ள வணிகங்கூட தென்பகுதியின் வணிகத்தைவிடப் பரிமாண அளவில் குறைவாக இருந்தது என்பதை அர்த்த சாஸ்திரத்தில் கௌட்டில்யன் அடித்துக் கூறுகிறான்.[34] பிளினிக்குப் பின்புள்ள கி.பி இரண்டாம் நூற்றாண்டைச் சேர்த்து வருகின்ற 500 ஆண்டுகள் காலத்தில் சோழநாட்டின் வணிகம் ஒரே சீராகச் சிறந்து உயர்ந்திருந்தது. இத்தகைய வளர்ச்சி கரிகாற்பெருவளத்தான் காலத்தில்தான் உச்சிமுனை வளர்ச்சியை (peak growth) அடைந்தது. கி. பி. 180 அளவில் கரிகாலன் இறந்த பின்பு, அவனுடைய மகனுடைய காலத்தில் ஏற்பட்ட

32 நச்சினார்க்கினியர்-உரை-தொல்காப்பியம்-பொருளதிகாரம்-நூற்பா 29

33 தொல்காப்பியம் சொல்லதிகாரம்-நூற்பா 14

34 K. A. N. Sastri 'A History of South India—1958—p. 81

கடல் கொந்தளிப்பில் அழிந்துபட்ட[35] புகார் நகரை விட்டு வெளியேறிய மணிமேகலையின்[36] தகப்பனுன கோவலன் புகார் நகரில் வாழ்ந்த செல்வந்தன் ஆவான். இவன் காலமும் கரிகாலன் காலமும் ஒன்றே என்பது இதிலிருந்து புலனுகும். இளங்கோ புகார் நகருக்குரியதாகச் சித்தரிக்கின்ற உயர்வுகள் எல்லாம் கரிகாலன் காலத்துக்குக் கரிகாலனுடைய நண்பராக விளங்கிய உருத்திரங்கண்ணனுரின் 'பட்டினப்பாலை' தெரிவிக்கின்ற உயர்வு நலங்கள் உள்ள பூம்புகார் நகரில் கடல்வழி வணிகத்தின் வளர்ச்சிக்காகச் சோழ மன்னன் அரசாட்சி முறையில் (administrative measure) பல வழிகளைச் செய்து கொடுத்திருந்தான். பெருங்குடிமக்களும், மன்னனும் வசித்த மாடங்கள் உள்ள பட்டினப்பாக்கத்திற்குக் கிழக்கே கடற்கரையை ஒட்டிய மருவூர்ப்பாக்கத்தில் யவனர் இருக்கை, கைவினையோரின் குடில்கள் காணப்பெற்றன.[37] வணிகஞ்சிறந்து விளங்கிய புகாரில் சமூக ஏற்றத்தாழ்வுகள் வெளிப்படையாகத் தோற்றமளிக்கத் தொடங்கின. இந் நிலையில் புகார் நகரம் சோழ நாட்டை வணிகமுறைச் சமூகமாக (mercantile community) மாற்றுகின்ற (transformation) வரலாற்று உள்ளோட்டத்தைத் (historical under-current) தன்னுள்ளே உள்ளடக்கிக் கொண்டிருந்தது எனலாம். நகரங்களே கிராமங்களை வயப்படுத்தி, எந்த ஒரு நாட்டின் ஆக்க சக்தியை (creative energy) ஈர்த்து, உயர்வு நலங்காட்டிப் பின்பு அந் நாகரிகத்தை உலரவைக்கும் என மேனுட்டாசிரியன் ஸ்பெங்ளரின் (Spengler) கருத்துக்குரிய[38] பிறிதொரு விளக்கம் போல, புகார் நகரம் இயற்கையின் சீதமைான கடலின் துணைகொண்டு வளர்ந்தது; பின்பு அதனுலேயே அழிவுற்றது. ஆனுல் புகார் நகரமோ 'மணிமேகலை' கூறுவது போல, 'நன்மணியிழந்த நாகம் போன்று—கானலும் கடலும் கரையும் தேர்வுழி—வானவன் விழாக்கோள் மாநகர் ஒழிந்தது', 'கடவுள மாநகர் கடல் கொளப் பெயர்ந்த'[39] நிலை அவ்வாறு ஏற்படாமலிருந்தால், சோழ நாடு தன்னுடைய வேளாண்மை வலிமைப் பின்னணியின் (agricultural base) துணை கொண்டு, நவீன கால இங்கிலாந்து போல, அப்போதைய இந்தியாவின் தலைசிறந்த வணிகவியல் நாடாக (mercantile country) மாறி இருக்கக் கூடும்.

35 Robert Sewell—HISI—1932—p. 15
36 மணிமேகலை—XXV—வரி 238—239
37 சிலப்பதிகாரம்—V—வரி 7—58
38 புறம். 30
39 மணிமேகலை—XXV—வரி 195—201

வணிகத்தின் வளர்ச்சியில் ஏற்பட்ட விளைவுகளில் சோழ நாட்டின் செல்வச் செழிப்பைத் (material prosperity) தலையாயதாகக் குறிப்பிடலாம். சங்க காலத்தின் பிற்பகுதியில் கரிகாலன் ஆட்சிக்குப் பின்பு—சமுதாய ஏற்றத்தாழ்வுகள் சோழச் சமுதாயத்தில் ஏற்பட்டன. காவிரி கடலோடு கலக்கின்றன துறைமுகத்துள் (ஆங்கு ஆழமில்லாததைப்பற்றி அக்கறை கொள்ளாமல், பாய்மரம் இறக்காமல், பண்டங்களின் பாரத்தைக் குறைக்காமல். கப்பல்களைச் சோழர்கள் (மிடுக்கோடும், செருக்கோடும், செல்வ மீட்டுகின்ற முனைப்போடும்) கொண்டு வந்தார்கள்; இறக்குமதியான சரக்குகளில் பல 'தகாஅர்' என்றழைக்கப்பெற்ற தகாதவரான பரதவர், அளவர்[40] போன்றோர் வாழுமிடங்களில்கூடக் கொட்டிக் கிடந்தன. (புறம் -30).

இத்தகைய சமூகப் பேதங்களைக் கண்ணுற்ற காலாசாரப் பாதுகாவலர்களான சோழ நாட்டு உறையூர் முதுகண்ணன் சாத்தனார் போன்ற புலவர்கள் பழந்தமிழ் உணர்வில் பிறந்த பண்டைய பொதுமை அறச் சமூகத்தை (primitive utopia) நினைத்துப் பார்த்து, 'தகாஅர்' காணப்பட்ட சோழ நாட்டுக்கு அதிபதியான சோழன் நலங்கிள்ளிக்கு, மறைந்து வரும் பண்டைய சமூக அறம் பற்றி அறிவுறுத்தினர். தாமரை மலரில் நூறிதழ்கள் இருப்பது போலப் பற்பல மனிதர்கள் இருந்தாலும் 'சேற்றுவாச் வேற்றுமையில்லா விழுத்திணை' என்றபடி அமைந்த ஏற்றத்தாழ்வில்லாத சமுதாயத்தின் வேந்தரைத்தான் புலவர்கள் புகழ்ந்து பாடுவார்கள்; அவ் வகைச் சமுதாயத்துக்குத் தலைவர்களாக அமைந்தவர்கள் தாங்களாகவே நல்வினைப் பயனைப் பெற்றுத் துறக்கம் எய்துவராவர் (புறம்—27). புலவர்கள அரசனுக்குரிய துறக்கம்பற்றிப் பேசுவதில் உள்ளுறைப் பொருள் என்ன ?

வாணிபத்தால் ஏற்பட்ட பொருளாக்கம் சமூகப் பொது அறத்தைக் குலைத்து வந்ததைப் புலவர்கள் கண்டுகொண்டதை அது காட்டுகிறது. பொருளாக்கத்தை மட்டும் விரும்பி அதைப் பெறுவதற்குத் துடித்து, முனைப்போடு செல்லுகின்ற வணிக முறைச் சிந்தனைக்கு (mercantile mentality) அப் புலவர்களால் கருத்தளவில் மறுப்புத் தெரிவிக்கப்பட்டது. 'சோழன் நலங்கிள்ளியைப்பற்றி முதுகண்ணன் சாத்தனார் பாடிய பாடல்களில் இழையோடும் சோகம் சோழர்குலத் தாயாதிச் சண்டையின் எதிரொலியா ? அப் புலவரின் இயல்பான மனப்போக்கா?

40 புறநானூறு I—ஔவை சு. துரைசாமிப் பிள்ளை—கழக வெளியீடு—1967—பக்கம் 86

என்று எளிதாக முடிவு செய்ய இயலவில்லை எனப் பேராசிரியர் சாஸ்திரி கூறுகிறார்.[41] வணிகத்தின் வளர்ச்சியால் சோழச் சமுதாயத்தில் ஏற்பட்ட பேதங்களைக் கண்டு மனம் மறுகித்தான் அப் புலவர் போன்றோர் சமூகச் சமத்துவத்தைப்பற்றியும், அதற்கான அரசத் தலைமைபற்றியும் பேசுகிறார்கள். மேலே சொல்லப்பட்ட சாத்தனாரின் சோகம் இதனடியில் பிறந்ததே. மனவிரிவைக் கொடுக்காத செல்வத்தையும், அது கொண்டுவரும் உயர்வையும் அந்த நாளிலேயே சங்கச் சோழருலகம் ஏற்றுக் கொள்ளத் தயங்கியது என்பதை இப் புலவர்களின் கருத்து களிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம். வெறுமையான பொருளாக்கத்தின் விளைவாகச் சங்கத் தமிழகத்தில் மானிட நேயம் (humanism) நலிவுறுகின்ற அவலம் தொடங்குகின்ற அந் நாளி லேயே சங்கச் சிந்தனையாளர்களில் பலர் பழமையின் பெயரால் அதனை நிராகரித்ததை உணரலாம்.

நெடுங்கிள்ளி—நலங்கிள்ளி ஈடுபட்ட உள்நாட்டுப் போர் (civil war), தாயாதிச் சண்டை (dynastic war) என்றளவில் அல்லாமல் சோழ நாட்டுக்குரிய வணிகத்தின் வளர்ச்சிக்குரிய அரசியல் தேவையாக அது காணப்பட்டது. எப்படி ?

ஏராளமான பண்டங்கள் வந்திறங்குவதைக் கொண்ட புகார் நகரைக் கொண்ட நலங்கிள்ளியானவன் எப்போதுமே பாசறையில் இருக்கின்றவனுவான் ; பாண்டியரையும், சேரரையும் வென்றதோடு அல்லாமல் காடுகளைப்பற்றிய அச்சமில்லாமல் அவற்றை ஊடுருவிக் கைப்பற்றும் மறவர் படையுடையவன்; குண (மேற்கு) குட (கிழக்கு) கப்பல்களை ஆள்கின்றவன். இவனுடைய குதிரைப்படையைப்பற்றிய நினைப்பினால் ஏற்பட்ட அச்சத்தில் வடபுலத்து அரசர்கள் கண்துஞ்சாது காலங் கழித்தார்கள் (புறம்—31). மேலும், 'நேரார் கடந்த முரண்மிகு திருவின் கிள்ளி' (புறம்—43) என்றபடி, பகைவரை வென்ற மாறுபாட்டால் மிக்க செல்வத்தையுடையவன் ஆவான். மேலே சொல்லப்பட்ட செய்திகளில் சோழ நாட்டு வணிகத்துக்குத் தொடர்பான கருத்துகளைப் பின் வருமாறு வகைப்படுத்தித் திறனாய்வு செய்யலாம்:

(1) நெசவுத் தொழிலின் கேந்திரமான உறையூரை அதன் உரிமையாளனான நெடுங்கிள்ளியிடமிருந்து நலங்கிள்ளி வலுக் கட்டாயமாகப் பிடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. காரணம் ? பாண்டிச்சேரிக்கு அண்மையிலுள்ள அரிக்காமேட்டில் 1945-ல்

41 K. A. N. Sastri—'Cholas'—1955—p. 39

கண்டுபிடிக்கப்பட்ட யவனர் குடியிருப்பு மலாசியாப் போன்ற நாடுகளுக்குரிய நுழைவுத் துறைமுகமாக (entrepot) உரோமர் களுக்கு அந் நாளையில் பயன்பட்டு வந்தது.[42] உரோமர்கள் சோழரின் உறையூர் ஆடை போன்ற பண்டங்களை வாங்கினர்கள்; கிழக்கத்திய நாடுகளின் சந்தைகளுக்கும் உரோம நகரத்தின் சொந்த உபயோகத்திற்கும் அப் பண்டங்களைப் பயன்படுத்தினர். அரிக்காமேட்டில் உரோமானிய ஆலை (Roman factory) ஒன்று இருந்ததாகவும்[43] அந்த ஆலையில் உரோமானியர்களுக்குப் பிடித்தமானபடியும் (taste) இலாயக்கானமுறையிலும் (specification) உறையூர்த்துணி பதப்படுத்தப்பட்டது.[44] உரோமரின் உற்பத்திச் செயல்முறையின் (manufacturing process) துணை பெற்ற பின்புதான் உறையூர்த்துணி ஏற்றுமதி செய்யப்பட்டது. சோழ நாட்டின் ஏற்றுமதிப் பொருள்கள் விளைபடு பொருள்கள் தாம். செய்தொழிற்பண்டங்கள் அல்ல என்ற குறையை நிவர்த் திக்கின்ற வகையில் உறையூர் நெசவுப் பண்டங்கள் ஏற்றுமதி யாயின. ஆனுல், அவைகூடச் சோழரின் முழுமையான உற்பத்திப் பொருள்கள் (manufactured goods) என்ற முழுப் பெருமையுடன் ஏற்றுமதி ஆகவில்லை. ஆனுலும், இவ்விதமான நெசவு ஆடை ஏற்றுமதியில் சோழர்க்குப் பெருத்த வருமானம் வந்தது என்பது உண்மை. ஏனென்றல், உறையூரைப் போன்ற மற்றொரு நெசவுக் கேந்திரமான பாண்டியரின் மதுரை யையும் நலங்கிள்ளி கைப்பற்றியது பொருளாதார ஆக்கத்திற் காகத்தான் என்று சொல்ல வேண்டும்.

(2) சந்தனம் போன்ற மலைபடு பொருள்களைப் பெருமள விற்கு ஏற்றுமதி செய்கின்ற வணிக நடவடிக்கையின் நேரடி விளைவாக, மலைபடுபொருள்கள் கிடைக்கின்ற காடுகள் மண்டிய சேர நாட்டைக் காடுகளற்ற சோழர்கள் வென்றாக வேண்டிய திருந்தது. புறம்—41 பாடல் செல்வது போல, நலங்கிள்ளியின் மறவர்படை காடுகளினூடேயுள்ள நாடுகளைப் பிடித்து மலைபடு பொருள்களை வணிகத்திற்காக வளைக்க வேண்டியதாயிற்று. இத்தகைய வணிகத் தேவைகளின் காரணமாகக் காடுகளைக் கொண்ட குறிஞ்சித் தலைவர்களை (pastoral chieftains) சோழர்கள் வெற்றி கொண்டு அடக்கியாள வேண்டியதாயிற்று. அத்தகைய காடுநிறைப் பகைப்புலம் (hinter land) இருந்தாலொழியச் சோழர் களின் புகார் நகரம் வணிகத்தில் மேம்பட்டு வளர்ந்து பெரு வாழ்வுப் பீடு பெற்றதை நிரந்தரப்படுத்திக்கொள்ளச் சாத்திய

42 Romila Thapar—'A History of India'—1969—p. 115

43 K. A. N. Sastri—'Sources of Indian History'—1961—p. 54

44 Romila Thapar—op. cit., p. 115

மில்லை. மலைவாழ் மக்களை வெல்வதற்காகவே குதிரைப்படையைத் தனியார்வத்தோடு நலங்கிள்ளி வைத்திருக்க வேண்டியதாயிற்று. இவ்வாறு சோழரின் வணிகந்தான் சோழப் பேரரசுக்கு மூல காரணமாயிற்று எனலாம்.

(3) வாணிபத்தின் வளர்ச்சி என்பது சமூக வளர்ச்சியில் முதுமைக் கட்டமாகும். சோழ நாடு அத்தகைய முதுமை வளர்ச்சிக்குரிய சமூகமாக வளர்ந்திருந்தது. இதனை மேலும் வலிமைப்படுத்த, சோழன் நலங்கிள்ளி பண்டைக்காலக் குறிஞ்சி வேளிரின் போரார்வ மனப்போக்கையும் (traditionalist pastoral chivalry), கூட்ட வாழ்வுக்குரிய சினப்போக்கையும் (tribalist pravacativeness), ஏனைய தமிழ் மன்னர்க்குரிய போர்ப்புகழ் ஆர்வத்தையும் (love for military glory) தனக்குள் வளர்த்துக் கொண்டான். இதனை அவனே பாடிய புறம் பாடல் 73 புலப்படுத்தும். நலங்கிள்ளியின் தந்தை கரிகாலன் ஏற்படுத்திய சோழப் பேரரசு அரசியல் நோக்கத்தில் தோற்றங்கொண்டாலும் பொருளாதாரப் பின்னணியையும் அது கொண்டிருந்தது. கரிகாலனுக்குப் பின்பு அவனுடைய மகன் நலங்கிள்ளி அப் பொருளாதாரம் பின்னணியைச் சோழப் பேரரசின் மூலபலமாக மாற்றினான்; அதன்மூலம் தனது தந்தையைப் போல ஏனைய தமிழ் மன்னர்களை அடக்கி ஆள்கின்ற பேரரசைச் செயல்படுத்துகின்ற மேலாளுகை (hegemonist) தோற்றம் அளிக்கின்ற[45] முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றான். சோழப் பேரரசுக்கு வணிகப் பொருளாதாரந்தான் (mercantilist economy) மூலபலமாக அமையக்கூடும் என்பதை உய்த்துணர்ந்ததோடு, அதைச் செயல்படுத்திய திறமை நலங்கிள்ளியின் அளப்பரிய சாதனை என்றும், சோழப் பொருளாதாரத்தின் நெகிழ்ச்சித் திறனை (economic viability) அது காட்டிற்று என்றும் கூறலாம்.

விஜயாலயச் சோழர்களும் இதே போன்று வாணிபத்திற்காகவே தங்களுடைய வெளிநாட்டுக் கொள்கையை இராணுவப் போக்குள்ளதாகப் பதனப்படுத்தினார்கள். ராஜராஜன் I என்ற மாமன்னன் பாண்டியர்—சேரர்—ஈழத்தவர் ஆகியோரை வென்றடிப்படுத்தியதற்கு மூலகாரணம் சோழரின் அரசியல் பேராவல் (political ambition) அல்ல; மாறாக, தென்கிழக்காசிய நாடுகளுடன் சோழர்கள் கொண்டிருந்த வாணிபத்திற்குப் போட்டியாக வந்த மேற்கத்திய அராபியருக்கு வாணிபப் புகலிடத்தை மலபாரில் கொடுத்து, அதன்மூலம் மேற்கத்திய வாணிபத்தின் ஏகபோகத்தைக் கைக்கொண்டிருந்த சேர—

45 K. A. N. Sastri—'Cholas'

பாண்டிய—ஈழத்தவரை விஜயாலயச் சோழர்கள் அடக்க நினைத்ததுதான் உண்மையான காரணம் ஆகும். மேற்கத்திய அராபியரின் வணிகத்தைத் தங்கள் பக்கம் திருப்பி அதன்மூலம் தங்களிடம் ஏற்கெனவே உருப்பெற்றிருந்த கிழக்காசிய வணிகத்தைப் பலப்படுத்த அச் சோழர்கள் திட்டமிட்டதன் காரணமாகத்தான் சோழப்பேரரசு தென் மண்டலத்திற்கு இராணுவ முறையில் பரவிற்று[46] இவ்வாறு கிழக்கத்திய வணிகத்தைப் பிரதானமாகக் கொண்ட பிற்காலச் சோழர்களுடைய வாணிபத்தின் பின்னணியில்தான் அவர்களுடைய பேரரசு உருவானது. இது பிற்காலச் சோழருடைய தனிப்பட்ட சாதனை என்று கூறுவதற்கில்லை. சங்க காலச் சோழர்கள் காட்டிய வழியைப் (legacy) பின்பற்றியதாலும், அதற்குரிய வணிகயியல் பாரம்பரியம் (mercantilist traditionalism) சோழ நாட்டில் சங்க காலந் தொட்டுக் குடிகொண்டிருந்ததாலுந்தான் அது விஜயாலயச் சோழர்களுக்குச் சாத்தியமாயிற்று எனலாம்.

சங்க காலத்தில் தமிழகம் வந்த சீன வணிகர்களை யவனர்களோடு வைத்து எண்ணுவதற்கில்லை என்று அறிஞர் சேவியர் எஸ். தனிநாயகம் கருதுகிறார்.[47] எனினும், சீனர் போன்ற கீழை நாட்டவர் செய்த வாணிபத்தையும் சேர்த்து உருவாக்கப்பட்டது தான் சங்கச் சோழரின் வாணிபம் என்பது உண்மை ஆகும்.[48] இவ்வாறு உரோமர், சீனர் இருவரும் சம்பந்தப்பட்ட இரட்டைத் தேட்டமான வாணிபத்தைப் பெற்றிருந்த சங்கச் சோழர்கள் விஜயாலயச் சோழர்களைவிட வணிகத்தில் மேம்பாடு காட்டியவர்களாவார்கள். இத்தகைய வணிக வலிமையினை நிரந்தரப்படுத்தி நிலைநாட்டுவதற்காகச் சங்கச் சோழரின் பேரரசுக் கொள்கையைப் பொருளாதாரப் பின்னணியில் சீர்மை செய்தவன் நலங்கிள்ளி ஆவான். அவனுடைய பணி தொடர்ந்து செயலாக முடியாதபடி புகார் நகரம் கடலால் அழிக்கப்பட்டது. அல்லங்காடி, நாளங்காடி என்ற இரவு, பகல் சந்தைகளுக்காரைப் பண்டங்களைக் கொண்டுவந்து கொடுத்து ஊட்டிய புகார் நகரின் கடல் நீரே சோழரின் 'செல்வத்தைத் தேய்க்கும் படை'யாக உருமாறிய அவல நிகழ்ச்சி சங்கச் சோழ வரலாற்றில் பல அடிப்படை விளைவுகளுக்குக் காரணமாயிற்று. உரோம் நாட்டவரை எதிர்த்து (ஆப்பிரிக்க) கார்தேஜ் நகரம் அழிவுற்றுப் பின்பு அந்தக் கடல் வணிக நாடு செயலழிந்து மறைந்தது போலப் புகார் நகரத்தின்

46 Romila Thapar—op.cit,, p. 195

47 இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு விழாமலர்—சென்னை—1968—ஆங்கிலப் பகுதி— பக்கம் 31

48 K. A. N. Sastri—' cholas '—p. 86

அவலமான அழிவின் காரணமாகவும், சில காலம் கடந்த பின்பு நிகழ்ந்த வன்குணக் களப்பிரரின் வருகை காரணமாகவும் சோழர்களுடைய வாணிபம், கிழக்கில் உதித்து வந்த சூரியன் நடுவானில் கழன்று கீழே விழுந்தது போல அணைந்து மறைய லாயிற்று. வெளிநாட்டுடன் ஏற்பட்ட கடல்வழி வாணிபத்தைக் கொண்டு பேரரசையும், பெருமிதமிக்க சோழ அரசியலையும் ஒருங்கே கட்டி வளர்த்த சோழர்களின் பொருளாதார மதிநலம் போல இந்தியாவின் எந்தப் பாகத்திலும் எந்த நாட்டவரும் அந் நாளையில் கொண்டதில்லை என்பது வரலாற்று உண்மையாகும். கடல்வழி வாணிபத்தின் துணை கொண்டு இந்தியாவில் முதன் முதலாகக் கடல்நிலை அரசு (Thalasocracy) ஒன்றை உருவாக்கு கின்ற பெருவாய்ப்பு சோழர்க்குத்தான் அமைந்திருந்தது. நல்லூழற்ற விதத்தில் புகார் நகரம் கடலால் அழிக்கப்பட்ட போது இவ் வாய்ப்பும் மறைந்தது.

ஆசியாவிலேயே சோழர்களின் கடற்பயணத் திறமைதான் இணையற்று விளங்கியது என்பது அந் நாளையிலேயே நிருபிக்கப் பட்டிருந்தது. சங்க காலத்துக் கி.பி. முதலாம் நூற்றாண்டில் சீனர் களுக்குப் பெருங்கடலோடுகின்ற கப்பல்களை விடுந்திறன் பெருகிக் காணாத காரணத்தால் அச் சீனர் அடங்கிய தூது குழுவினரைத் தமிழர்கள் தங்கள் கப்பல்களில்தான் சீனத்திலிருந்து காஞ்சிபுரத் திற்குக் கொண்டு வந்தார்கள்.[49] ஆசியப் பிரவேசத்திற்குப் பண்டைக்கால ஐரோப்பியருக்கும் ஆசானாக விளங்கியவர்கள் சோழர்கள் தாம் என்பதைப் பின்வரும் ஆதாரங்களைக் கொண்டு நிறுவலாம்: கடலை அடக்கிய சங்கத் தமிழர்களின் துணை கொண்டுதான் யவனர்கள் போன்ற ஐரோப்பியர்கள் தென்கிழக் காசியப் பகுதிகளுக்குச் சென்றிருக்க வேண்டும். சான்றாக, கி.பி. 80ஆம் ஆண்டுக்குரிய பெரிப்ளஸ் என்ற நூலுக்கு ஆசிரியர் தமிழகக் கடற்கரையையொட்டிச் சென்று கங்கையின் முகத்து வாரத்தை அடைந்தார். இந் நிலையில் மலேயாவைப்பற்றி அவர் அறியாததால், அவர் அதைக் குறிக்கவில்லை. தாலமி (கி.பி. 130) வியட்நாம் பகுதிவரை தெரிந்து வைத்திருந்தான். இவ்வாறு கி. பி 80-லிருந்து கி.பி. 130-க்குள் மத்தியதரைக்கடல் நாட்ட வரின் கிழக்கத்திய நாடுகளைப்பற்றிய பூகோள அறிவு விரிவடை வதற்கு அவர்களுக்குக் கடல் வழிகாட்டிகளாகச் செயலாற்றிய சங்கத் தமிழகத்தார்தான் காரணம் எனலாம்.

சங்கச் சோழர்களின் கடல்வழி வணிகத்தினுடைய வளர்ச்சியின் விளைவாகத் தோன்றிய சோழரின் கப்பல் விடுத்

49 Auguste Toussaint— 'History of Indien Ocean'—1966—p.74

திறன் சோழ நாட்டவர்க்குரிய பரம்பரைச் சொத்தாகச் சோழ மண்ணில் படிந்து (fossils) பல நூற்றாண்டுகளாகக் கிடைந்தது. சங்ககாலச் சோழர்கள் உருவாக்கிய இந்தக் கடற்பிரயாணப் பாரம்பரியமும் (legacy) அதனுடைய வளர்ச்சி மரபுகளும் (formative traditions) கி.பி. 9ஆம் நூற்றாண்டில் சோழரின் பண்டைய கடல்வழி வாணிபப் பெருமையை மீண்டும் உயிர்ப்பித்து, தஞ்சையில் சோழப் பேரரசை நிலைநாட்டிய விஜயாலயச் சோழர்களுக்கு உணர்வூக்கங்களாக அமைந்தன. இதன்மூலம் இந்தியாவில் தோன்றிய ஒரே ஒரு கடற்படை நாடு (Naval Power) சோழநாடுதான் என்ற பெருமையையும் சங்கச் சோழரின் நேரடிவாரிசுகளான அச் சோழர்கள்தான் பெற்றார்கள். இவ்வாறாகச் சங்கச் சோழர்களின் கடல் வாணிபத்தில் காணப்பட்ட கடலோடுந்திறனுக்குரிய சாதனைகள்தான் விஜயாலயச் சோழ நாட்டின்-மத்தியகால இந்தியநாட்டின்-கடற்படைப் பாரம்பரியத் திற்கு மூலாதாரமாக அமைந்தது என வரலாற்றியல் (historiography) பூர்வமாக நாம் முடிவு செய்யலாம்.

**3. தொழில்கள் :** நூல் இழைகளின் போக்குகளைக் கண்களில் இருத்திப் பார்க்கவொண்ணாத அளவிற்கு நுண்ணியதாய் நெய்யப்பட்ட பாலாவியன்ன மேலாடைகளையும். ஏனைய துணிகளையும் உறையூர்ச் சந்தையில் பெருமளவிற்கு வாங்கலாம் என்ற உறுதியோடு யவனர்கள் வந்து குவிந்தார்கள். ஒரு வகை மெல்லிய ஆடை 'துகிலி' என்ற பெயரில் வழங்கப் பெற்று, தஞ்சைக்குப் பக்கத்தில் உள்ள துகிலி என்ற ஊரில் உற்பத்தி செய்யப்பட்டது. புகார் நகரத்தில் காடுவர் என்ற நெசவாளர்கள் தங்களுக்கான அறுவை வீதியில் வாழ்ந்தார்கள். பொன் வேலை செய்யும் பொற்கொல்லரும், செம்பு உலோகத்தில் தொழில் பல செய்வித்த செப்புக் கோட்டிகளும் அங்கு இருந்தார்கள். மகத நாட்டுக் கைவல்லுநர்கள். மராத்திய நாட்டுக் கொல்லர், அவந்தி தேசத்தின் இரும்புக் கொல்லர், யவனபுலத் தச்சர் ஆகியோரோடு[50] ஒருங்கிணைந்த முறையில் தமிழகக் கைத் தொழில் வல்லாளரும் வெளிநாட்டுக் கைவினையோரின் உழைப்பில் சோழ நாட்டின் தொழில் வளத்தின் தொடக்கநிலை மேம்படுத்தப்பட்டது.

**4 திறனாய்வு :** பொருளியல் முறையில் சோழ நாட்டின் செல்வம் பெருவளர்ச்சிக்கு உட்பட்டு வெளிநாட்டவர் வியக்கும்

50 மணிமேகலை—19—வரி 107—108

வகையில் மேம்பாடு அடைந்தது. வேளாண்மையும், தொழிலும், வணிகமும், வெளிநாட்டவரின் வருகையும் சோழ மன்னனுக்கு நிறைவான வருவாயைத் தேடித் தந்தன. பெரும் செல்வனை அரசனும், அவனுக்கு இணையான செல்வநிலை பெறுகின்ற வகையில் பொருளீட்டிய வணிகரும், வேளாண்மை செய்வித்த வேளாளரும், கடைநிலைப் பணிகளைச் செய்வித்த 'கடைசியர்' 'புலையர்' என்ற வகுப்பாரும், மண்ணுள் காணப்படும் கிழங்குகளைமட்டும் தின்று உயிர் வாழ வேண்டிய வறுமையைக் கொண்ட கலையுள்ளம் கொண்ட புலவரும் அந் நாளைய சோழச் சமுதாயத்தின் பொருளாதார வாழ்க்கைச் சித்திரத்தில் காணப் பெறுகின்றனர்.

அரசனைப் போன்று பிரபுத்துவ மனப்போக்கில் வாழ்க்கை நடத்துவதற்கு முனைந்து நின்ற வணிகர்கள் குறுக்கு வழிகளில் செல்வம் ஈட்டவில்லை. பிறந்த மண்ணின் பெருமை சான்ற அறத்தின் காவலர்களாக அவர்கள் செயல்பட்டார்கள். கொல்லாமை, பழி சொல்லாமை, நியாயத்திற்குப் புறம்பான முறையில் ஆதாயத்தை விரும்பாமை போன்ற நல்லியல்பு களோடு அவர்கள் தங்கள் வணிகத்தைக் காத்து வளர்த்து வாழ்ந்தார்கள். கடல் கடந்து செல்லும் நாவாய்களின் உரிமை யாளர்களான 'மாநாய்கன்களும்', பெருநிதி திரட்டுகின்ற 'மாசாத்துவான்களும்' ஆகிய இரு வகையினர் இவ் வணிகரின் பகுப்புகளில் அடங்குவர். சோழ நாடு வேளாண்மைப் பொருளா தாரத்திற்கு உட்பட்ட நிலையில் இத்தகைய வணிகத்தின் வளர்ச்சி வியப்புக்குரிய ஒரு பொருளாதார எழுச்சியாக அமைந் திருந்தது. ஆனால், நிறுவன அளவில் இவ் வணிகர்கள் இணைந்து செயல் பெறவில்லை. கி. பி. முதலாம் நூற்றாண்டில் வட இந்தியாவில் காணப்பட்ட கனிஷ்கரின் பேரரசில் வணிகர்கள் 18 சங்கங்களாக (guilds) இயங்கிய நாளில், தனிநபர் வணிகர் யாரும் பெருமளவிற்குப் பொருள் வாங்கவோ, அதன்மூலம் ஆதாயஞ் சம்பாதிக்கவோ கூடாது என்று விதித்திருந்தது போல, சோழ வணிகர்கள் சட்ட முறையில் தங்களுக்கான தளைகளை விதித்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லாமலிருந்தது. இதற்குக் காரணமாகச் சோழ மன்னர்களின் சுங்கத் துறை, பண்டக சாலை, வெளிநாட்டவரைக் கண்காணித்தல் போன்ற நடவடிக்கைகளும், சோழ வணிகர்களுக்கு இயல்பாகவே இருந்த சமூக உணர்வும் அமைந்திருந்தன. 'கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறை கொடாது' வணிகர் செயல் பட்டனர் எனப் பட்டினப்பாலை (வரி 210—11) கூறுகிறது.

வணிகப்புகழ்ப் பூம்புகார் நகரும், அதற்குப் பின்னிலமாக (hinterland) விளங்கிய ஆடை உற்பத்திப் புகழ் உறையூரும் கொண்டிருந்த அந் நாளைய சிறப்புகளைக்கொண்டு வயலுங் கடலும் பொலிந்து விளங்கிய சோழ நாட்டின் வணிகத்தினுடைய அளவையும், அது ஈட்டிய செல்வத்தையும் புலப்படுத்தலாம். சங்க காலத்தில் உரோமர்களை விரும்பி வாணிபம் வளர்த்த சோழ மரபுதான் பதினோராம் நூற்றாண்டில் வணிகச் சிந்தனைக்கு நல்லார்வ வடிவங்கொடுத்த பிற்காலச் சோழர்களின்கீழ்த் திசைக் கடல் வணிகத்தின் வளர்ச்சிக்கு ஆதிக்கருவாக அமைந்தது எனலாம். கரிகாற்பெருவளத்தான் காலத்தில்தான் தமிழகத்தில் சோழர்கள் நிர்மாணித்த பேரரசு ஆட்சியின் கட்டுக் கோப்பும், வலிமையும் காணப்பட்டது என்பதை முன்னர்ப் பார்த்தோம். சில ஆராய்ச்சியாளர்கள் தருகின்ற குறிப்பின்படி கரிகாலன் ஆட்சிக் காலமான கி.பி. 175-க்கு முன்பே உரோமர்-சோழர் கொண்ட வணிகத்தின் உச்சக்கட்டம் வளர்ந்து பின்பு ஓய்ந்து காணப்பட்டது. தமிழகத்தில் காணப்பட்ட உரோமானியப் பொற்காசுகளை ஆராய்ந்த இராபர்ட் ஸ்வெல் இதைக் கூறுகிறார்.[51] அவர் கருத்துப்படி அகஸ்டஸ் காலந்தொட்டு நீரோவின் ஆட்சிக் காலமான கி.பி. 65-க்குள் (அதாவது 100 ஆண்டுகளுக்குள்) உரோம-சோழ வணிகம் உச்ச நிலையை அடைந்தது; வணிகத்தின் மூலம் வெளிநாட்டுக்குச் செல்வம் விரைந்தேகுவதைப் பிளினி, ஸ்ட்ராபோ போன்றவர்கள் எச்சரித்த போது உரோம் நகரில் நிகழ்ந்த சமுதாய மாறுதல்களின் காரணமாக அவ் வாணிபம் தனது பரிமாணத்தில் குறுகியது. வார்மிங்க்டன் என்ற ஆராய்ச்சியாளர் இதனை மறுத்து, உரோமரோடு நம் நாடு மேற் கொண்ட வணிகம் எப்போதுமே குறையவில்லை என்றும், ஆடம்பரத்தை விரும்பிய அம் மக்களின் இயல்பு மாறாம லிருந்ததுவே அதற்குக் காரணம் எனவும் கூறுகிறார்.[52] ஸ்வெல் கொடுக்கின்ற கருத்திற்கு ஆதாரமாக மற்றொரு குறிப்பை நாம் பார்க்கலாம். பாண்டிச்சேரிக்கு அண்மையிலுள்ள அரிக்காமேடு என்ற இடத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட உரோமானிய மட்பாண் டங்களுள் மூன்றினில் அப் பாண்டம் செய்வித்த உற்பத்தி யாளரின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இத்தாலி நாட்டின் அரிஸோப் பகுதியின் விபியனி என்பவரின் குடும்பப்பெயர் காணப் படுகிறது. இப் பெயருக்குடையவர்கள் எல்லாம் கி. மு. முதலாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 50-க்குள் வாழ்ந்தவர்கள்.[53] இந் நிலையில்

51 JRAS—1904—p. 50

52 ' The commerce between the Roman Empire and India'—Cambridge—1928—p. 89

53 R. K. Mukerjee—'Ancient India'—1956—p. 451

கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக் கரிகாலனின் பதவிக்காலம் உரோமநாட்டு வணிகம் தளர்வுக்காலத்துக்குரியது என்பதை நாம் ஏற்றுக்கொண்ட நிலையிலுங்கூடத் தமிழகத்தின் வணிக வளர்ச்சி யின் உயர்நிலையை நாம் அளவிடலாம்.

கரிகாலன் காலத்திற்குரியதெனக் கருதப்படும் பட்டினப் பாலையில் வருகின்ற புகார் நகர வணிகச் சிறப்புகளை அளவு கோலாகக் கொண்டு சோழ நாட்டு வணிகத்தை அளக்கின்ற போது வியப்புக்குரிய வளர்ச்சியை நாம் பார்க்கிறோம். இவ் வளர்ச்சியே தளர்ச்சிக் காலத்துக்குரியதாக ஆராய்ச்சி முறைப்படி கொள்ளுமிடத்து, அதற்கு முந்திய காலத்து வணிகம் சோழ நாட்டின் வளமைக்குக் கொடுமுடியாக அமைந்திருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சி உண்மையாகும்.

நகரங்களின் வளர்ச்சி தொழிலோடுகூடிய வாணிகத்திற்கு உரியது. பூம்புகாரும், அதற்குப் பின்னிலமாக அமைந்த உறையூரும் பெற்றிருந்த பெருமித வளர்ச்சி நிலை சோழ நாட்டின் வாணிபத்தின் வளர்ச்சிப் பரிமாணத்தைக் காட்டுகிறது. கி. பி. 600-ல் தொடங்கிய பல்லவர் பேரரசில் சிறந்த துறைமுகப் பட்டினமாக விளங்கிய மகாபலிபுரமும், கி. பி. 1000 அளவில் சோழர்களின் பெருமை சொன்ன துறைமுகமான நாகப் பட்டினமும் சங்க காலத்தியப் பூம்புகாரைப் போல வணிகத்திலும் வணிக மன்றங்களின் தோற்றத்திலும் நிறைவானப் பொலிவு பெற்றிருக்கவில்லை. அரசனும் வணிகரும் பூம்புகாரின் பொருளாதார மேம்பாட்டைத் துய்த்து மகிழ்ந்தனர்; மற்றைய சோழ மக்களோடு அவர்கள் தங்களுக்குப் பெருஞ்செல்வம் திரட்டிக்கொடுத்த கடற்கரையை அடைந்து ‘இந்திர விழா’ நடத்தி, சோழ நாட்டின் கலையியல் வாழ்வைக் காட்டினார்கள். கரிகாலனின் தலைமகன் நெடுமுடிக்கிள்ளியின் ஆட்சிக் காலத்தில் கடலில் எழுந்த புயலின் விளைவாகக் கடலால் புகார் நகரம் அழிக்கப்பட்டது.[54] அழிவுறுவதற்கு முன்பு புகார் நகரம் வணிகத்தின் உறைவிடமாய், சோழ மன்னனின் இருப்பிடமாய், மக்களின் மனமகிழ்மன்றமாக விளங்கியது. நகர நாகரிகத்தில் மூழ்கிப்போன வணிக முனைப்பு மட்டும் கொண்ட வாழ்வியக்கம் அங்குக் காணப்பெறவில்லை. யவனரும் ஏனைய வெளிநாட்டு வணிகரும் காணப்பெற்ற பொதுமைச் சிறப்புடைய பெருநகரமாக (Cosmopolitan City) பூம்புகார் திகழ்ந்தது.

54 Rebert Sewell—HISI—1932—p. 15

## III. சமூக நிலை—கண்ணோட்டம் கல்வி, இலக்கியம்

**1. வாழ்வியல் கண்ணோட்டம்,** தமிழ் நாகரிகத்தின் வளர்ச்சி நிலையில் சமுதாயச் சார்பான கல்வியும், இலக்கியமும், சமயமும், மற்றைய வாழ்வுப் பகுதிகளும் சிறப்பிற்குரிய முறையில் மன வளர்ச்சி பெற்ற ஒரு நாட்டு மக்களின் உயரிய உள்ளப்பாங்காக மலர்ச்சியுற்றிருப்பதை நாம் பார்க்க முடிகிறது. சமுதாய வாழ்வில் பல்வேறு படிநிலைகளிலிருந்த மக்கள் அனைவரும் தத்தம் கடமைகளைப் பிணக்கம் ஏதுமின்றி ஆற்றி வந்தனர். ஆகவே, சமுதாயக் கொடுமைகளோ, அவற்றை எதிர்த்து நின்ற சமூகப் புரட்சிகளோ சங்ககால மக்கள் வாழ்வில் காணப்படவில்லை. கி. மு. ஐந்தாம், நான்காம் நூற்றுண்டுகளில் உரோம் நாட்டில் பொருளாதாரப் பேதத்தின் அடிப்படையில் பிளெபியர்களுக்கும் பெட்ரீஷியர்களுக்கும் மோதல் ஏற்பட்டுப் புரட்சி நடந்த போது உரோமாபுரிச் சமுதாயமே விரிசல் கண்டது. ஆனால், சங்க காலச் சமுதாயமோ கூட்ட வாழ்வு நிலை (Tribalism) கடந்து அரசர் ஆள்கின்ற அரசு அமைகின்ற நிலைக்கு மாறிக்கொண்டிருந்தது.[55]

சமூகப் புரட்சியின் வழிவந்த அரசியல் மாற்றத்தால்தான் இராணுவ முறைமை கொண்ட உரோமப் பேரரசு உருவானபோது அப் பேரரசுக்கு அகஸ்தஸ் சீசர் முழு உருவம் கொடுத்தான். இவை போன்ற அரசியல் பாதிப்புகள் அடங்கிய சமுதாய வரலாறு அந் நாளையத் தமிழகத்தில்—குறிப்பாகச் சோழ நாட்டில்—தென்படவில்லை. ஆனால் உரோம மக்களும் தமிழக மக்களும் உலகியல் துறையில் மிகுந்த ஈடுபாடுடையவர்கள்; அதாவது, 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்ற துடிப்பு மிக்க நிகழ்கால வாழ்க்கைக்கான மன ஈர்ப்பைப் பெற்றவர்கள். எனினும், இவ்விரண்டு நாகரிகங்களின் சமுதாயப் போக்குகளின் தடங்கள் வெவ்வேறு விதமான பொருளாதார ஆழத்தையும் அரசியல் அகலத்தையும் கொண்ட வேறுபாட்டில் பிரிந்து நின்றன. குறிப்பாகக் கூறினால், மனையும் மக்களும், பாட்டும் பரதமும், மலரும் மதுவும், மகளிர்த் துணைநலமும், மன்னவர் நல்கும் கண்ணுக்கினிய இந்திர விழாவும்—என்று அமைந்துபோன வாழ்க்கைப் பாதையில் அவரவர்க்கு உரிய நிலையில் இயன்ற மட்டும் இன்பத்தினைத் தேடி அலைந்த தெம்பும் திறனுமுடைய தமிழ்மக்கள் சோழ நாட்டின் வேளாண்மையும், வணிகமும் கொண்டுவந்த செல்வச் சிறப்பில் தங்களை மேம்படுத்திக்கொண்டார்கள். சமூக இயை

55 Robert Sewell—op. cit., p. 105

போடு அரசியல் பற்றினை ஒன்று சேர்த்து, பொருளாதார நலம் துய்த்து, வாழ்வின் முழுப்பயனை அடைந்த சிறப்புடைய மக்கள் அந் நாளைய தமிழராவர். சிறுகச் சிறுகத் தலைகாட்டிய புத்தமும் சமணமும் அந் நாளையில் தமிழர்களின் அகவாழ்க்கை ஈடுபாட்டுக் கருத்துக்குப் புறம்பான போக்கில் சென்றன. இச் சிந்தனையின் மயக்கம் ஒரு சிலரைப் பற்றிப் பிடித்தாலும் தமிழ் நாகரிகத்தின் ஆதாரமாக அமைந்து போன உலகியல் ஈடுபாட்டு உணர்வை அவற்றால் அழிக்க முடியவில்லை.

**2. கல்வி :** அறிவுப் பூர்வமான வாழ்க்கைக் கருத்துகளைத் தமிழ் மக்கள் கொண்டு இயங்கிய காரணத்தினால் அவர்கள் கல்விக்குச் சிறந்த இடத்தை அளித்திருந்தார்கள். இது பற்றியே தமிழ்நாகரிகத்தின் பொற்காலமாகச் சங்க நாள்களைக் கொண்டாடுவர். குப்தர்களின் பொற்காலத்தில் காணப்பெறுகின்ற 'நவரத்தினங்கள்' என்று அழைக்கப்பெறும் வெவ்வேறு துறைகளில் வேண்டிய மட்டும் புகழீட்டிய அறிஞர் பலருக்கு உரித்தான வகை வகையான வானநூல் போன்ற சாத்திரங்கள் அந் நாளைய தமிழரின் கல்வி அமைப்பில் தோன்றுவதற்குரிய காலநிலையும் சிந்தனைப் பக்குவமும் இன்னும் ஏற்படவில்லை. இதன் காரணமாகத்தான் கவிதை பாடும் புலவர்களைக் கல்வி கேள்வியில் பெரியராகச் சோழ மக்கள் கண்டு மகிழ்ந்தார்கள். கவிதையைப் படைத்துத் தருகின்ற அப் புலவர்களுடைய சிந்தனைக்குப் புலப்படாத செய்திகளே இல்லை என்பது அந் நாளைய மக்களின் துணிபு. அதற்குரியவாறு தங்களின் கல்வித்தரத்தையும், மனப்பக்குவத்தையும், பார்வைத் திறனையும், உலகியல் பண்பாட்டையும் அப் புலவர்கள் வியப்புக்கு உரிய அளவில் வளர்த்துக்கொண்டார்கள். இதன் காரணமாகத் தான் புலவர் கபிலரும், வள்ளல் பாரியும் ஒருங்கிணைந்த நண்பர்களாக இருக்க முடிந்தது.

பிசிராந்தையாருக்கு 'ஆண்டு பலவாயினும் நரையில வாயின' என்று சொல்லுமளவிற்குரிய நல்லுள்ளம் வாய்ந்திருந்தது. இதைப் போற்றுகின்ற முறையில்தான் இவரைக் காணாத போதே உழுவலன்பு கொண்டு தன்னோடு இறப்பதற்கு வடக்கிருக்கும் இடத்திற்குப் பிசிராந்தையார் வந்திடுவார் என்று திடமாக நம்பியதைத் தொடர்ந்து, வர வேண்டிய நண்பருக்குப் புதைகுழியும் தோண்டி வைக்கக்கூடிய விந்தையான நட்புரிமையைக் கோப்பெருஞ்சோழன் வெளிக் காட்டுகின்றான். அந் நட்பிற்கு உரியவராகத் தம்மை ஆக்கிக்கொண்டவர் முடியுடை வேந்தரல்லர் ; கேள்விச் செல்வமுடைய, 'மாண்ட எம் மனைவியொடு மக்களும் நிரம்பிய' குடும்பத்தின் தலைவரான தமிழ்ப்புலவர் ஒருவரே

அவர் ஆவார். இச் செய்தி கல்வியிற்பெரியவரைப் போற்றி நாடாண்ட சோழ மன்னனைக் காட்டுகிறது எனினும், 'கற்றுரைக் கற்றுரே காமுறுவர்' என்றளவில் கல்வியில் சிறந்திருந்த சோழ அரசர்களின் மாண்பையும் விளக்குகிறது. கல்வி நலத்தோடு உணர்ச்சிக் கூர்மையுமுடைய சோழர் வரலாற்றில் குடும்பத்தின் பிணக்கறுக்கும் கோவூர்க்கிழாரையும், பிசிராந்தையார் போல நட்பில் சிறந்த பொத்தியாருடைய கண்கள் கோப்பெருஞ்சோழ னில்லாத உறையூர் மன்றிலைக் கண்டு கண் கலங்கியதையும் அரசியல் பிரிவில் நாம் கண்டோம். சோழ மன்னர்களுக்குள்ளும் தமிழ்ப் பண்பில் தேர்ந்த நல்லறிவுப் புலவர் பலர் இருந்தனர். பண்ணனுடைய 'பசிப்பிணி மருத்துவன் இல்லம்' கொண்டிருந்த சிறப்பினைத் தமிழரின் வீடெல்லாம் பெற்று விளங்கிட வேண்டு மென்று சோழன் நலங்கிள்ளி விழைந்த போது, அவனுடைய மனதில் நிலைத்து நின்ற வள்ளன்மையுணர்வின் உன்னதத்தை அவனுடைய புறநானூற்றுப் பாடல் அளவிட்டுக் காட்டுகிறது. இவனுக்கு முன்பு ஆண்ட கரிகாலன் நாட்டுடை வேந்தன் என்ற நிலையில் மட்டும் பெருவளத்தான் என்றல்லாமல், புலவரைப் போற்றுகின்ற பெருந்தகைமையிலும் விஞ்சி நின்றான். புகார்—மதுரை— வஞ்சி என்ற ஒருங்கிணைவின் நகர நாகரிகத்தைப் போற்றுகின்ற முறையில் பட்டினப்பாலையைப் பாடிய உருத்திரங்கண்ணனார்க்குப் பதினறு இலட்சம் பொற்காசுகள் வழங்கி வாழ்த்திய செய்தியைக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

'கலை வல்லார்க்குரிய வள்ளலாகத் திகழ்ந்த இச் சோழன் பொன்னுபரணங்கள் அணிந்த புன்னகை மகளிர் தங்கக் கோப் பைகளில் மதுவினை ஊற்றி எனக்கு அளிக்கச் செய்தான்' என்ற நன்றி உணர்வில் கரிகாலனைப்பற்றி அச் சங்கப் புலவர் பாடுகிருர். அரசு நடத்தித் 'தாளாற்றி வந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை' செய்த கரிகாலன் தன் இல்லம் விட்டு நீங்கும் புலவரோடு ஏழடி நடந்து சென்று வழி அனுப்பி வைத்த பெருங் குணம் கொண்டிருந்தான் என்ற செய்தி சங்கப் புலவர்களுக்கு முடியுடைய மன்னர்கள் அளித்திருந்த உயரிய சமூக அந்தஸ்தைக் குறிக்கும். வெண்ணிக்குயத்தியார், காக்கைப்பாடினியார் போன்ற பெண்பாலரும் இப் புலவர்களுக்குள் காணப்பெறு கின்றனர். 192 சங்கப் புலவர்களில் பதின்மூன்று மன்னர்கள், இருபத்தொன்பது அந்தணர், ஐம்பத்து ஏழு வேளாளர், பதினேழு குறிஞ்சி நிலத்தோர், பதின்மூன்று முல்லையைச் சார்ந்தோர், ஏழு வணிகர், ஏழு கைவினையோர், ஓர் ஆயர், ஒரு குயவர் ஆகியோரோடு முப்பத்து ஆறு பெண்பாற்புலவரும் காணப் பெறுகின்றனர். 'கல்வி அழகே அழகு' என்ற நிலையில்

கவிவாணரும், சமயவாதிகளும், ஏனைய கல்வியாளரும் பூம்புகார் நகரில் தங்கள் இருப்பிடங்களின்மேல் ‘தங்களோடு கல்வி கேள்விகளில் வாதிடுவதற்கு வருவார் உண்டோ?’ என்றபடி ஏற்றி வைத்த கொடிகளைப்பற்றிப் பட்டினப்பாலை பெருமை பாராட்டுகிறது. ‘பல கல்வித்துறை போகிய தொல் ஆணை நல்லாசிரியர் உரல் குறித்து எடுத்த இரு கழு கொடியும்’ என்று அவர்கள் இருக்கைகள் பூம்புகார் நகரில் கல்விச் சிறப்பின் கருவூலங்களாக விளங்கின. அந் நாளில் அப் புலவர்கள் ‘நவ்வலோ நவ்வல்’ என்ற உரத்த குரலெழுப்பி அறிவுத்திறன் உடையோர்க்குச் சவால் விட்டார்கள் என்ற குறிப்பு சோழ நாட்டின் கல்வி நிலையின் முழுமைத்தன்மையைச் சுட்டிக் காட்டும். கல்விமேல் கொண்ட ஈடுபாட்டுக்கு இல்லற வாழ்வுகூட எதிர்மறையாகி இருந்த நிலையை ‘ஓதல் பிரிவு’ என்ற அளவில் கல்வியாளர்கள் தம் மணைவியரைப் பிரிந்துகூட வாழ்ந்தார்கள் என்பதை அகநானூற்றின் ‘ஓதல் பகையே தூது இவை பிரிவே’ என்ற சித்தரிப்பில் காணலாம். நாட்டைக் காக்க வேந்தனுடைய கட்டளைப்படிப் போரிடவோ அரசியல் காரணமாகவோ இல்லம் விட்டுப் பிரிவது ஓராண்டுக்குத்தான்[56] என்று சொல்லும் தொல்காப்பியர் கல்விக்கு மூன்றுண்டு பிரிந்திருக்கலாம்[57] என்பதிலிருந்து கல்வியின் மேம்பாடு சங்க மக்களைப் பெரிதும் ஈர்த்திருந்தது விளங்கும்.

**3. சோழ நாட்டில் சங்கத்தமிழ் மொழியியல் (Linguistics) இலக்கியம் (Literature):** தமிழ் மொழியின் எழுத்தும் சொல்லும் கி.மு. 3500-க்கும் முந்தியவை எனலாம். தென்னிந்திய இந்துக்கள் அவர்களுக்குரிய திராவிட மொழியும் கலாசாரமும் கொண்ட நாகரிகத்தைச் சிந்துநதித் தீரத்து ஹரப்பாக் கலாசாரமாக நிலை நிறுத்தியபோது சித்திர வடிவமுள்ள எழுத்துகளை எளிமைப்படுத்தினார்கள். பின்பு அவர்களில் சிலர் சுமேரியா (சிரியா) சென்றடைந்தார்கள் என்றும், அங்கே அவர்தம் மொழியின் எழுத்து ஆப்பு வடிவமாக மாறியது என்றும் H. R. ஹால் என்ற மேனாட்டு ஆராய்ச்சியாளர் கூறுகிறார்.[58]

**ஆதித்தமிழ் நாகரிகமே சிந்துவெளி நாகரிகம் ஆகும். எப்படி ?**

(1) பாண்டியனின் *மீன்* சின்னம் ஹரப்பா நாகரிகத்தில் காணப்பட்ட அரசுச் சின்னமாகவும் காணப்படுகிறது ; (2) தமிழ

56 **தொல்காப்பியம்—பொருளதிகாரம்—189**

57 Ibid—p. 188

58 H. R. Hall—‘The Ancient History of the Near East’—1913—p.172—173

கத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பண்டைய காலத்துக்கு உரிய முதுமக்கள் தாழிகளில் பொன்வாய்க் கட்டுகள், வேல் போன்றவை காணப்படுகின்றன. தங்க உலோகம், வேல், திரிசூலம் போன்றவை முதுமக்கள் தாழிகளுக்குச் சமகாலத்தில் நிலவிய சிந்து நாகரிகத்திலும் காணப்படுகின்றன. இரண்டு நாகரிகங்களுக்கும் உரிய கடவுளர் (குமரக் கடவுள்) அவ்வாயுதங்களைக் கொண்டிருந்தனர்.

நாய், காலாள், அவர், ஆன் (கடவுள்), குமரன் போன்ற தமிழ்ச் சொற்கள் சிந்து நாகரிக மொழியில் (முழுமையாக விளக்கப்பட முடியாத தற்கால நிலையிலுங்கூட) காணப்படுகின்றன.[59] தமிழ் மொழியியலின் வளர்ச்சிக்கும் ஹரப்பா கலாசார மொழிக்கும் தொடர்பு உண்டெனக் காமில் ச்வேலேபில் [60] கூறுகிறார். இவ்வளவு தொன்மையான தமிழ்மொழி எழுத்தின் வளர்ச்சி எல்லா மொழிகளைப் போல முதலில் சொற்றொடரின் ஒலிக்குரிய வடிவமாகியது ; பின்பு அச் சொற்களே உருவங்களாகவும், அதன் பின்னர்க் குறிகளாகவும், பின்பு சொற்களின் தனித்தனியான முதலொலி (Phonema), வகையொலி (allophones) ஆகியவற்றிற்கான எழுத்துகளாகவும் மாறி உயர்நிலை வரிவடிவம் பெற்றது என மு. வரதராசனுர் கூறுகிருர்.[61] சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன்னுல் தோன்றிய தொல்காப்பியரின் காலத்தில் தோன்றிய தமிழ் வரிவடிவம் தற்போதும் மாருமலிருக்கிறது என்ற சி. இலக்குவனுரின் கருத்துப்படி [62] தற்போதைய தமிழ் எழுத்து சங்க காலத்திற்கும் உரியதாகும். இத்தகைய முறையில் தொன்மையான எழுத்து வடிவத்தைப் பெற்ற கன்னித்தமிழின் மறு பதிப்பாக விளங்குகின்ற ஹரப்பா நாகரிக எழுத்துகளிலிருந்து உருவான பிராமி எழுத்துகளைக் கொண்டுதான் அசோகரின் கல்வெட்டுகள் (சங்க காலத்துக்குச் சம காலத்தியது) செதுக்கப்பட்டன.[63]

கிறிஸ்து பிறப்பதற்கு முந்திய நூற்றுண்டுக்குரிய ‘சமய வாயாங்கன சுத்த’ என்ற வடமொழி நூலில் 18 வகை எழுத்துகளுள் ‘தாமினி’ எனக் குறிக்கப்படுவது ‘தாமிழி’ என்ற தமிழ்

59 மு. ஆரோக்கியசாமி— இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர்—1968—வரலாறு—பக்கம் 8

60 Kamil Zvelebil's Article in Archir Orientalini, XXII, 1955

61 மொழிநூல்—கழக வெளியீடு—1974 – பக்கம் 8, 13.

62 சி. இலக்குவனுர்—இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர்—1968—மொழி—பக்கம் 5

63 இரா. நாகசாமி— இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர்—1968—மொழி—பக்கம் 26

மொழியே.[64] சங்கக் காலத்திற்குரிய இந்தத் தாமிழி எழுத்து உறையூர், அரிக்காமேடு, மாமண்டூர், அழகர் மலை, நெல்லை மாவட்ட மறுவாதலை என்ற ஊரிலும், கோவை மாவட்ட புகலூர் போன்ற இடங்களிலும் காணப்படுவதால், சங்கத் தமிழகம் எங்கும் ஒரே விதமான எழுத்து வழக்கிலிருந்தது புலப்படும். சங்க காலம் கி. பி. 3ஆம் நூற்றுண்டளவில் முடிவுற்ற போது, வட்டெழுத்து (வளைவுகள் கொண்ட எழுத்து), கண்ணெழுத்து (ஆப்பு போன்ற வரி வடிவம்), கிரந்தம் (தமிழ் மொழியை வடமொழி எழுத்தில் அமைப்பது), மலையாளம் (வட்டெழுத்து, கிரந்தம், ஈழ நாட்டு எழுத்து ஆகியவற்றின் கலவை) ஆகியவை தோன்றின. பிற்காலச் சோழர்களால் இவை பெரிதும் சோழ நாட்டில் பயன் படுத்தப்பட்டன.

மொழியியலில் பால் பாகுபாடு (gender) என்பதனை ஐந்திணைக் குரியதாக இலக்கணம் அமைத்துள்ள தமிழரின் அறிவுத்திறன் வியப்புக்குரியதாகும் எனக் கருதும் அறிஞர் கால்டுவெல் ஆசிய, ஐரோப்பிய நாடுகளில் காணப்பெருத முறையில் தமிழ் (திராவிடம்) மொழியில்தான் நீளமான சொற்கள் (words) காணப்படுகின்றன எனவும் கூறுகிருர். இத்தகைய முறையில் மொழியியலில் புகட்டப்பட்ட அறிவும், அதனை மெய்ப்படுத்துகின்ற முறையி லமைந்த நீளமான சொற்களும் சங்க காலத்தின் சோழ நாட்டுப் புகார் நகரில் ' கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும் ,[65] என விரிவு பெற்று விளங்கின. இயல்பாகவே வார்த்தைகளை வேகமாகப் பேசக்கூடிய இந்தியருள் அதிவேகமாகப் பேசக் கூடிய தமிழகத்தாரின்[66] வாய்மொழிப் பேச்சை யவனர் போன்ற வெளிநாட்டவர் வணிக நகரான புகாரில் எவ்வாறு புரிந்து கொண்டனர் என்பது ஆராய்ச்சிக்கு உரிய விஷயம் எனலாம். பேசுகின்ற பாணி (dialect), மற்றும் அதன் உயர்வு தாழ்வுகள் போன்ற பேச்சு வழக்கு நலங்களைப் பொருளாதார ஏற்றமுள்ள பெருங்குடி மக்களைப் பின்பற்றிதான் புகார் நகரில் சங்க காலச் சோழர்கள் அறிந்திருக்க முடியும் ; உயர்ந்த சாதியாரைப் போலப் பேசுகின்ற முனைப்பு தமிழகத்தில் ஏற்பட்டது என்பது சங்க காலத்திற்குப் பிந்திய காலத்துக்குத்தான் பொருந்தும் எனலாம்.[67] பொதுவாக, எழுத்து நடையும் பேச்சு நடையும் வேறுபாடு

64 Ibid –p. 26

65 சிலப்பதிகாரம்—V—வரி 61

66 மா. சண்முகம் பிள்ளை— முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966 –பக்கம் 717

67 Ibid—p.726

கொண்டிருந்தாலும் புகார் நகரத்தினுடைய பெருங்குடி மக்களின் பேச்சு முறையில்தான் அந் நகரத்து எழுத்து வழக்கில் காணப் பெற்ற உரைநடை அமைந்திருக்க வேண்டும். பெருமளவிற்குச் சோழ நாட்டை நிலைக்களனுகக் கொண்ட சிலம்பு, மணிமேகலை போன்ற காப்பியங்களில் காணப்பெறும் உரைநடை தமிழ் மொழிக்கு என அமைந்த உரைநடை மூலச் சொத்து எனலாம். சங்கச் சோழ நாட்டின் உதிரக்கலப்பில் உருவானது அது. இக் காப்பியங்கள் உருவான கி. பி. இரண்டாம் நூற்றுண்டு சங்க இலக்கியத்தின் பொற்காலமாகும்.[68] தமிழுக்கென அமைந்த தெளிந்த உரைநடை, காப்பிய காலத்தில்தான் உருவானது.[69] அதுவும் சோழ நாட்டுக்குரிய மக்களின் மனநிலைகளை அவர்களுடைய பேச்சுப்பாணியில் (dialect) பிரதிபலித்து, அவ்வுரை நடை உருவானது என்பது சிறப்புச் செய்தியாகும். தொல் காப்பியக் கட்டுப்பாடுகளில் சிலவற்றைப் புறக்கணித்து வளர்ந்த சங்கத்தமிழ் தொன்மையும் வன்மையும் கொண்டு விளங்கியது.[70] இடைச் சங்க காலத்துக்குரிய தொல்காப்பியங்கூட உரை நடைக்குக் கட்டியம் கூறுகிறது.[71]

**சங்க இலக்கியம்**

சங்க இலக்கியத்தின் துணைகொண்டுதான் சங்க இலக்கியத்தின் வரலாற்றைப் பெருமளவிற்கு உருவாக்க முடிகிறது. சங்க இலக்கியத்திற்குப் பின்பு—அதாவது, கி.பி. 3ஆம் நூற்றுண்டுக்குப் பின்பு அழிவாற்றலுற்ற களப்பிரரின் அடிதடி ஆட்சி தமிழகத்தில் 300 ஆண்டுகள் நிலை நின்றது. அப்போது கட்டடங்கள் போன்ற ஏனைய வரலாற்றுத் தடங்கள் யாவும் அழிவுற்றன. இந் நிலையில் சங்க இலக்கியந்தான் வரலாற்ருசிரியர்க்குப் பெரிதும் உதவுகிறது. சாகா வரம் பெற்ற இலக்கியச் சிறப்புகளோடு பொலிவு பெற்றுச் சங்கத் தமிழ் மக்களின் காலத்தைத் தன்னுணர்வுத்திறன் காட்டு காலம் (Heroic Age) என அது இனங்காட்டுகிறது. அந்த அளவில் அந் நாளைய வரலாற்றுப் பெட்டகமாக அது விளங்குகிறது. சங்க மக்கள் தங்களின் எண்ணத்திலும் செயலிலும் தன்னுணர்வுத் திறன் காட்டு காலத்துக்குரிய ஒரு வகையான சுதந்தரத்தைப் பெற்றிருந்தார்கள். அதே நேரத்தில் அந்த மக்கள் பல்வேறு சமூக சம்பிரதாயங்களையும் நியதிகளையும் பின்

68 K.R. Srinivasa Iyeng r—Dravidian Languages and Literature—II—(Bharatiya Vidya Bhavan)1951—p.300

69 அ. மு. பரமசிவானந்தம்— இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழா மலர்—1968—மொழி—பக்கம் 18

70 ந. சஞ்சீவி—Ibid—பக்கம் 12

71 க. வெள்ளைவாரணர்—Ibid—இலக்கியம்—பக்கம் 51

பற்றினுர்கள்; கற்பனையை உயிர்த்துடிப்பாகக் கொண்ட அவர்களுடைய இலக்கியத்திலும் பல மரபுகளை அவர்கள் வளர்த்தார்கள். அவர்கள் எதைச் செய்தாலும் அதில் இயல்பூக்கமான சுதந்தர உணர்வு தலைகாட்டியது. அதே சமயம் மரபு என்ற நியதிகளையும் அவர்கள் பின்பற்றினுர்கள். இவ்விரண்டு செயல்பாடுகளுக்கும் இடையே ஒரு வகைச் சீர்மையை (Balance) அவர்கள் கைக்கொண்டிருந்தார்கள். உலக வாழ்வையே கலைக்களமாக்கிக் களித்த சங்கத் தமிழருக்கு என ஏற்பட்டிருந்த உயர்ந்த சாதனை என இத்தகைய சீர்மையை நாம் குறிப்பிடலாம்.

இலக்கியம் ஒரு காலக் கண்ணுடி என்ருல். சங்க இலக்கியம் எல்லாக் காலத்துக்கும் பொருந்துகின்ற கலைக் கண்ணுடியாக விளங்குவதை அதனுடைய இலக்கிய நியதிகளைக்கொண்டு நாம் நிறுவலாம். அந் நியதிகளின் போக்குப்படி, சங்க கால இலக்கியத்தை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு எனப் பகுக்கலாம். இப் பகுப்புகளில் (தொகையில்) காணப்பட்ட இலக்கிய நூல்களின் அட்டவணை பின் வருமாறு:[72]

I. எட்டுத் தொகை தொகுப்பு : (1) நற்றிணை (2) குறுந்தொகை (3) ஐங்குறுநூறு (4) பதிற்றுப்பத்து (5) பரிபாடல் (6) கலித்தொகை (7) அக நானூறு (8) புற நானூறு ; II. பத்துப் பாட்டுத் தொகுப்பு : (1) திருமுருகாற்றுப்படை (2) பொருநராற்றுப்படை (3) சிறுபாணுற்றுப்படை (4) பெரும்பாணுற்றுப் படை (5) மலைபடுகடாம் (6) முல்லைப்பாட்டு (7) குறிஞ்சிப்பாட்டு (8) பட்டினப்பாலை (9) நெடுநல்வாடை (10) மதுரைக்காஞ்சி; III. பதினெண்கீழ்க் கணக்குத் தொகுப்பு : (1) திருக்குறள் (2) நாலடியார் (3) நான்மணிக்கடிகை (4) இன்னு நாற்பது (5) இனியவை நாற்பது (6) திரிகடுகம் (7) ஏலாதி (8) சிறுபஞ்ச மூலம் (9) ஆசாரக்கோவை (10) முதுமொழிக்காஞ்சி (11) பழமொழி (12) கார் நாற்பது (13) ஐந்திணை நாற்பது (14) ஐந்திணை எழுபது (15) திணைமொழி ஐம்பது (16) திணைமாலை நூற்றைம்பது (17) கைந்நிலை (18) களவழி நாற்பது; IV. தனி நூல்கள் : (1) தொல்காப்பியம் (2) தகடூர் யாத்திரை ; V. இதிகாசங்கள் : (1) சிலப்பதிகாரம் (2) மணிமேகலை ஆக மொத்தம் 40 நூல்கள் அடங்கிய சங்க இலக்கியம் பற்பல துறைகளைச் சார்ந்தது.

**சங்க இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி, அவற்றின் பின்னணி**

வரலாற்றுத் திறவுகோலாக விளங்கும் சங்க இலக்கியங்களின் தோற்றத்தில் உலகில் வேறெந்த மொழிக்கும் இல்லாத தனிச் சிறப்புகளைக் காணலாம். அவை யாவன :

72 N. Subramanian—'Sangam Polity'—1966—p.11

(அ) இலக்கியத்திற்கு முந்தியே இலக்கணம் அமைந்த நிலையில் சங்க இலக்கியங்கள் யாவும் மாற்ற முடியாத சட்ட திட்டங்களுக்கு (litarary convention) உட்பட்டுத் தோற்றங் கொண்டன. பிறந்த குழந்தை உடனே எழுந்து நின்று கலை வல்லமையோடு நடனம் செய்வது போல, சங்க இலக்கியத்திற்கு எடுத்த எடுப்பிலேயே இலக்கணம் வாய்த்துள்ளது. இவ்வித மான இலக்கணம் தோன்றுவதற்கு வழித்தடமாகப் பயன்பட்ட ஏனைய மூதாதை இலக்கியம் எதுவும் தமிழக வரலாற்றில் சங்க காலத்திற்கு முந்தியதாகக் காணப் பெறவில்லை. மிதமான மதிப்பு கொண்ட ஏனைய இலக்கியங்களின் மத்தியில்தான் முதுநிலை பொலிவு இலக்கியம் (classics) தோன்றும் என்ற இலக்கியத் திறனாய்வு உண்மைக்குப் புறம்பான முறையில் சங்க இலக்கியம் எல்லாமே—தொடக்கம் முதல் முடிவு வரை—முதுநிலைப் பொலி விலக்கியமாகவே தோற்றமளிக்கிறது. நவீன இலக்கியத்திற்கு அமைந்துள்ள எல்லா விதமான உணர்வு நலங்களும் (perceptory values), இலக்கிய உத்திகளும் (literary techniques) சங்க இலக்கியத்தில் காணப் பெறுகின்றன. இதன் காரணத்தால் அதனுடைய இலக்கியப் புலப்பார்வை (literary perspective) உலகப் பார்வை அளவில் விரிவாக்கங்கொண்டு தெளிநிலை முதிர்ச்சி (sophistication) பெற்று விளங்குகிறது. ஐரோப்பிய மொழிகள் கி.பி. 1500 அளவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி (Renaissanc:) காலத்தில் பெற்ற அதே இலக்கிய கலைச்செறிவைச் சங்க இலக்கியம் சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்பே பெற்றிருந்தது. இது சங்கத் தமிழருக்குரிய வளர்ச்சிச் சாதனை எனக் கூறலாம்.[73]

(ஆ) வேட்டையாடுதலைக் கொண்ட வல்வில்நுரி (புறம்-152), கடல்வழி வாணிபத்தை நடத்திய சோழன் நலங்கிள்ளி (புறம்-30) போன்றோரின் தலைமைக்கீழ் வாழ்ந்த மக்கள் அனைவரும் நாகரிக வளர்ச்சியில் வேறு வேறு கட்டங்களைச் சார்ந்தவராவார்கள். ஆனாலும் சங்க இலக்கியம் இவ்வாறு வேறுபட்ட பல கட்ட சமூக நியதிகளைப் பிரதிபலித்துத் தோன்றுகின்ற போது எல்லா இடங் களுக்கும் எல்லா மக்களுக்கும் பொதுமைப்படுத்தப்பட்ட இலக்கண வரம்புகளுக்கு உட்பட்டு உருவாகியது. இத்தகைய முறையில் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்ட விரிவாக்கமுள்ள இலக்கணம் நியதிகளை வெறும் சொற்களுக்கு உரியவையாக மட்டும் வைத்துக்கொள்ளாமல், 'பொருள்' என்ற பொதுமைச் சிறப்பில் வாழ்வியலின் உண்மைகளையும் நமக்குத் தருகின்ற காரணத்தால், தமிழக வரலாற்றுக்குரிய அடிப்படையான

73 M. மனுவேல்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—பக்கம் 63.

செய்திகளை அவ்விலக்கியத்திலிருந்து நாம் அறிய முடிகிறது. சான்றாக, தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் சங்கத் தமிழரின் வாழ்வை அகம், புறம் என்றளவில் சமூகயியலாக்கிப் (Socialogy) பேசுவதைக் குறிப்பிடலாம்.

மனித மனம் நுட்பமாகச் செயல்படுகின்ற போது மானிட இயலுக்கான (anthropology) கருக்கள் தோற்றங்கொள்கின்றன. சங்க கால இலக்கிய இலக்கணம் தன்னுடைய சமுதாயப் பார்வையில் (social perspective) இத் தோற்றத்தை அடக்கிக் காட்டும். சான்றாக, சங்க காலத்தில் ஏற்பட்ட கடவுளுணர்வின் வளர்ச்சியைப்பற்றிக் கூறலாம். 'சிறந்தது' என்று தொல்காப்பியம் கடவுளை அழைக்கிறது. இங்கிருந்து தொடங்கிய வளர்ச்சி மக்களைக் கடவுளிடம் வழிப்படுத்துகின்ற கட்டத்திற்கு வந்து நின்றதைத் திருமுருகாற்றுப்படை என்ற சங்க இலக்கியத்தின் உள்ளடக்கம், உத்தி, பொருளாக்கம் ஆகியவை கொண்டு நிறுவலாம். சங்கத் தமிழ் இலக்கியத்துள் காணப்படும் இதிகாசங்களுக்கு எல்லாம் முந்தியது என்றும்,[74] சங்க காலத்திற்கும் பல்லவன் காலத்திற்கும் இடைப்பட்டது என்றும் கருதப்படும் சிலப்பதிகாரம் காலத்தால் பிந்தியது ; ஆகவே, சங்க கால மக்களின் முதுநிலை வளர்ச்சியைத் தாங்கி நிற்கிறது. அதில்கூட நாட்டார் பண்ணியல்கள் (folk motif) பல காணப்படுகின்றன.[75] நகரங்களில் வாழ்கின்ற மக்களாக விளங்கியவர்களில் சிலர் நாட்டாராகவும் விளங்குகின்ற மனப்போக்கு கொண்டு காணப்பட்டனர்; சான்றாக, ஆய்ச்சியர் குரவையைச் சொல்லலாம். நாட்டார் பண்ணான ஆய்ச்சியர் குரவையைப் பாடி அவர்கள் இசைத்த போது, அவர்தம் பாமர நிலையை உயர்ந்த கலாசாரமுடைய நகர மாந்தர்கள் (கோவலன்—கண்ணகி) வெறுத்தொதுக்கவில்லை; மாறாக, தமிழகத்தின் கலாசாரப் பொதுமையை இளங்கோ போற்றுகிறார்.[76]

**கடவுளுணர்வு, நாட்டார் பண் ஆகிய இரண்டு சான்றுகளிலிருந்தும் அறியப்படும் உண்மை யாது ?**

(அ) பல திறப்பட்ட, பல நிலைகொண்ட வெவ்வேறு மக்களைப்பற்றி ஒரே நோக்குடன் கூறுகின்ற இலக்கியமாகச் சங்க

74 T. P. மீனாட்சி சுந்தரம்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—பக்கம் 89

75 T. P. Meenakshi Sundaram—'A History of Tamil Literature'—p. 38

76 N. வானமாமலை—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—பக்கம் 142

இலக்கியம் விளங்குகின்றது; இவ்வாறு ஒரே ஒரு நோக்கு **(uniformity of vision)** கொண்டு பற்பலச் சமூக நிலைகளைப்பற்றி விவரிக்கின்றது.

(ஆ) இந்த வகையான ஒரே நோக்கு ஏற்பட்டதற்கு அவ்விலக்கியத்திற்கு என அமைந்திருந்த மரபுகள்தான் காரணமாக இருந்தன. மரபுவழி இலக்கண அமைப்பைச் சங்க இலக்கியம் கொண்ட போது உள்ளதை உள்ளபடி கூறுகின்ற அதனுடைய நிதரிசனப் போக்கு (sense of **realism**) மங்கி விடவில்லை. அத்தகைய இலக்கண நியதிக்கு உட்பட்டுச் செயல்படாத காரணத்தாலும், அப்பட்டமான உண்மைத் தன்மையோடு இலக்கியம் படைத்த காரணத்தை முன்னிட்டும் ஷேக்ஸ்பியரின் கலைப்படைப்புகளில் கலையமிசம் குறைவாகக் காணப்பெறுகிறது என டிரைடென் என்ற ஆங்கிலத் திறனாய்வாளன் கூறுகிறான். ஆகவே, மரபு என்ற நியதிவழி சிறிது செயற்கையையும் சேர்த்துக் குழைத்தால்தான் நிறைவான இலக்கியம் தோன்றும். இத் திறனாய்வுக் கருத்துக்கு இயைந்தபடி சங்க இலக்கியம் நிதரிசனப் போக்கோடும் (realism), அதே நேரத்தில் மரபு வழிப் பார்வையோடும் உருவாக்கப் பெற்றது. இவ்விரண்டுக்கும் இடையே ஏற்பட்ட சமன்நிலைச் சீர்மையின் (balance) நேரடிப் பயனாக வரலாற்றாசிரியர்களுக்கு உரிய பற்பல செய்திகள் புலப்படுகின்றன.

**சங்க இலக்கியத்தில் பொது உலகப் பொதுப் பார்வையும் வரலாற்றுப் பூர்வாமிசமும் (Aesthetic Nicety and Universal Perspective and Historicity)**

அகம், புறம் என்ற பிரிவு சங்க இலக்கியத்திற்கு என்று வாய்த்துள்ள உயர்தனிச் சிறப்பாகும். அகம் என்பது உள்ளங்கை போன்றும், புறம் என்பது புறங்கை போன்றும் உதவுகின்றன எனத் தொல்காப்பியத்தின் 59ஆவது சூத்திரத்திற்குரிய உரையில் நச்சினார்க்கினியர் கூறுவார். வாழ்வியலை அகம், புறம் என்று இரண்டு நுட்பப் பிரிவுகளாகப் பகுத்துக் கண்ட சங்க இலக்கியப் படைப்பாளர்கள் கற்பனையையும், அது கலந்த கலைப்பார்வையையும் (aesthetics) வளர்த்தார்கள்; அதே சமயத்தில் அதனோடு உலகியலையும் (worldly reality) ஒன்றிணைத்து வைத்தார்கள். இந்த ஒருங்கிணைவு சங்க இலக்கியத்துள் காணப்பெறும் மற்றொரு சமன்நிலைச் சீர்மை ஆகும்.

கிரேக்கத் துன்பியல் நாடகயியலுக்குரிய செயல் (action), காலம் (time), இடம் (place) ஆகியவற்றைச் சங்க இலக்கியமும்

பெற்றிருந்தது. இம் மூன்றோடு புதுக்கற்பனை (unit of imagery) என்பதனையும் சேர்த்து சங்க இலக்கியம் வளர்ந்தது. இத்தகைய புனர் கற்பனை என்பது சங்க இலக்கியத்திற்கு ஏற்பட்ட கருவூலச் சரக்கு எனலாம். அரசர், ஊர், மலை பெயர்களைக்கூடத் தங்களுடைய பாடல்களில் புலவர்கள் சித்தரித்தார்கள். ஆனால் உண்மையில் அப் பெயருக்கு உடைய நபர்களையோ இடங்களையோ அவர்கள் கூற வரவில்லை. அதற்கு மாறாக, உள்ளுறைப் பொருளாக நுண்ணறிவுக்கு விருந்தாக அந்தச் செய்திகளை வைத்துக்கொண்டு உலகப் பொதுப் பார்வையில் உலக நெறிகளை அப் புலவர்கள் சுட்டிக் காட்டினார்கள்; புறச் செய்திகளான மலையருவி போன்றவற்றைச் சொல்லி அகப் பொருளைத் தொனிப்பொருளாகச் (இறைச்சி) சொன்னார்கள். இச் சாதனைக்குச் சான்றாக, அகநானூறு திகழ்கிறது. வரலாற்றுப் பார்வையில் அகநானூறு போன்ற நூல்கள் அந் நாளைய மக்களின் மன நுட்பங்களைச் சிறந்த மனோதத்துவக் கூறுபாடுகளாகத் தருகின்றன.

உள்ளுறை நயப்பாடு என்பது ஓர் இலக்கிய உத்தியாகப் பயன்பட்டுச் சங்க காலத்துப் பின்னாளைய தமிழிலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிற்று. சான்றாக, ஆழ்வார்கள் இயற்றிய பக்திவழி இலக்கியம் தோன்றுவதற்கு இந்த வகை இலக்கிய உத்தி பெருமளவிற்குத் துணை செய்தது.[77] ஒரு பொருள் பலமொழி, பலமொழி ஒரு பொருள் என்றளவில் பன்மையினின்று ஒருமையும், ஒருமையினின்று பன்மையும் மாறி மாறி வருகின்ற இலக்கிய ஊடு பாவுகளுக்குக் கவித்துவ மலர்ச்சியைக் கொடுக்கின்ற உலகப் பார்வை அவ்விலக்கியத்தினுள் தானாகவே சுயம்புலிங்கமாகத் தோன்றுகிறது. இதனை விளக்குவதற்கு முயற்சி செய்து வெற்றியும் பெற்ற அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள் சகல கலா வல்லுநராக விளங்க வேண்டியதாயிற்று.[78] ஏழாம் நூற்றாண்டுத் தமிழ்நாட்டில் நாயகா—நாயகி முறை பக்தி இலக்கியமும் தத்துவமும் வடபுலத்து ராதா—கிருஷ்ண வழிபாட்டிலிருந்து தோன்றியதல்ல. கண்ணன்—நப்பின்னை காதல் சங்க இலக்கியத்தில்[79] பக்தித் தத்துவத்திற்குரிய கருவாக அமைந்தது.

77 A. சீனிவாச இராகவன்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—பக்கம் 118

78 சேவியர்—S. தனி நாயகம்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—பக்கம் 123

79 சிலப்பதிகாரம்—XVII—வரி 105

**சங்கப் புலவர்களின் உள்ளுணர்வு, தன்மானம், தனித் தன்மை (Intuition, Integrity, Individuality)**

உலகந்தழுவிய பொதுப் பார்வையில் மேம்பட்டு விளங்கும் சங்க இலக்கியத்தைப் பாடிய புலவர்கள் சிறந்த உள்ளுணர்வு கொண்டவர்கள் ஆவார்கள். தமிழகத்தின் பலகட்ட வாழ்வுக்குரிய மக்களைப்பற்றிப் பாடுகின்ற போது அப் புலவர்கள் அம் மக்களின் மானிடத் தன்மையை அவர்களுடைய அடிமனத்திலிருந்து கிளர்த்து எடுத்தார்கள். இதற்கு அப் புலவோரின் உள்ளுணர்வுப் பயன் (intuitive understanding) பெரிதும் துணை புரிந்தது. தனியொரு பொருள் சம்பந்தப்பட்ட மட்டில் தனிநபர்க்கு என அமைகின்ற அழகுணர்வுப் பார்வை அனுபவத்தை (lyrical experience) அகன்ற தமிழகத்தோடும், அதனுடைய ஆழமான கலாசாரத்தோடும் பொருத்திக் காட்டினார்கள்; அதனினும் அகன்ற நிலையில் காணப் பெறும் உலக நாகரிகப் பார்வைக்குள் அதனை இட்டு வைத்தார்கள். எங்கோ ஒரு மூலையில் நீண்டு படுத்திருக்கும் மலையை உலகச் சிந்தனைக்கு உகந்ததாக அவர்கள் மாற்றினார்கள். இதற்கு இலக்கிய மரபுகள் என்ற இலக்கண மரபுகள் அவர்களுக்கு உதவின. தனி மனிதர்களைப்பற்றிய செய்திகளைச் சொல்ல வந்த இடத்தில் தனி மனிதர்களை விடுத்துப் பொதுவான சிந்தனைக்குரிய மலை, ஆறு போன்ற இயற்கையின் எழிலார்ந்த வளப்பத்தைச் சித்தரித்தார்கள். பாரியைப் பாராட்ட வந்த கபிலர் பாரியின் பறம்பு மலையைப்பற்றித்தான் அதிகமாகப் பாடியுள்ளார் (புறம்—பாடல்கள் 105—120). தங்களைப்பற்றிய உயரிய சிந்தனையில் பரிசில் வாழ்வு மன அறத்தைக் காக்கின்ற காவலர்களாக அவர்கள் தமிழகத்தில் ‘ வலைவ ’ வந்தார்கள். இப் புலவர்களின் வாழ்வில் வறுமை இருந்த போதிலும், அவர்களிடம் மன வறுமை (poverty of mind) காணப்படவில்லை. தன்மானத்தோடு அவர்கள் கலைவாழ்வில் செயல்பட்டார்கள். வேந்தனைப் போலத் தேரேறிப் போர்க்களத்திற்கு வந்த புலவரால் தான் களவழிச் செய்யுள் பாடப்பட்டது. பொத்தியாரின் களவழி நாற்பது இவ் வகைப்படும்.

சங்க இலக்கியத்தை உலகத்துக்குரியதாக மாற்றியமைத்தது போல, அப் புலவர்களின் ஆத்ம சுத்தியான கலையார்வமானது உலக உண்மைகளைச் சங்க இலக்கியத்துக்கே உரித்தான நிதரிசனத்தோடு (Realism) உலகிற்குப் புலப்படுத்திற்று எனலாம். சான்றாக, பௌத்த சமயச் சிந்தனையாளரான சீத்தலைச் சாத்தனார் இளந்துறவி மணிமேகலை பளிக்கறை மண்டபத்தில் ஒரு சிறிது காம வயப்பட்டதாகக் கூறுகிறார். உடலில் காம அணு ஒன்று குடிகொண்டு விட்டால், உடலோடு உயிரையும் கவ்வி விழுங்குகின்ற பலவணுப் பூதாகாரத் தோற்றத்திற்கு அவ்வணு வழி

காட்டும்[80] என்ற உலக உண்மையை அவள் உணர்ந்து, பின்பு தெளிந்ததாகச் சாத்தனூர் அறிவுறுத்துகிறுர். காம உணர்வுபற்றிய உலகப் பொது உண்மையைத் துறவியைக்கொண்டு உணர்த்தத் துணிந்த பௌத்த சமயவாதியான சாத்தனுர் சங்க இலக்கியத்தின் தொன்மையான மரபுகளைப் (traditions) பாதுகாக்கின்ற கலைச் சீர்மையைப் புலப்படுத்துகிறுர் எனலாம். பௌத்தராகக் காணப் பட்ட நிலையிலும், அவ்வாறு அவர் தமது தனித்தன்மையை இழந்த நிலையில் சங்க இலக்கியத்தின் மரபுகளை நிலைநாட்டினுர்.

தனிநபர் உணர்வைத் (personality) தானுகவே வலிந்து இழந்த அந் நிலையில் இலக்கிய மரபுகளை (traditions) நடைப் பயனுள்ளவையாக மெய்ப்படுத்துவதற்கு முயற்சிக்கின்ற வல்ல மையைக் கவிஞன் பெறுகிறுன்; அந்தக் கலைப் படைப்பாளனுக்குத் தன்னையே ஒரு சாதனமாக அப்போது பயன்படுத்திக்கொள்கின்ற ஆத்தும திருப்தி ஏற்படும்.[81] சாத்தனுர் போன்ற சங்கப் புலவர்கள் கைக்கொண்ட இத்தகைய ஆத்துமார்த்தமான ஈடுபாட்டின் காரணமாக அவர்களுடைய கலைப் படைப்புகள் ஒவ்வொன்றும் தனிநபர்த் திறனுக்குரிய முத்திரையைப் பெற்று விளங்குகின்றன. பின்பு எல்லாப் படைப்புகளையும் ஒரு தொகையாக வகைப்படுத்து கின்றபோது உலகந்தழுவிய உருவகம் (universal personality) சங்க இலக்கியத்திற்குக் கிடைத்து விடுகிறது. ஆனுலும், உலகம் முழுவதற்குமான சிந்தனை உலகத்தையோ, கலைப்படைப் பியக்கத்தையோ வளப்படுத்துகின்ற படைப்புகளைச் சங்கத் தமிழகம் உருவாக்கவில்லை. கி. மு. 776-லிருந்து ஒலிம்பிக் விளையாட்டுகளை நடத்திக் கலாசார ஒருமைப்பாட்டை மென் மேலும் வளர்த்துக்கொண்ட கிரேக்கர்கள் போலச் சங்கத் தமிழர்கள் வாழ்ந்தாலும் கி. மு. 347-ல் இறந்த பிளேட்டோ, அவருடைய சீடர் அரிஸ்டாட்டில் போன்ற அறிஞர்களைப் பெற்றிருக்கவில்லை. சங்கத் தமிழகத்தில் அரசியல் பக்குவம் இல்லாத அந் நாட்களில் கிரேக்க அறிஞரைப் போன்றவர்கள் தமிழகத்தில் யாருமிலர். விஞ்ஞானப் பூர்வமான கருத்துகளைச் சொல்லவுமில்லை. அரிஸ்டாட்டிலுக்குச் சமகாலத்தவரான கௌடில்யரைப் போலவோ, கி. மு. 6-ஆம் நூற்றுண்டுக்குரிய புத்தரைப் போன்றே உலகச் சிந்தனையாளர்களின் வரிசையில் வைத்துப் பார்க்கின்ற தனித்தகைமை (specialisation) கொண்ட அறிஞர்கள் தோன்றி இருக்கவில்லை. திருக்குறள் பொதுவான செய்திகளைச் சொல்லிற்று. கலையுணர்ச்சியை வளர்த்துக் கொண்ட சங்கத் தமிழகத்தில் கி. மு. 850-ல் கிரேக்கத்தில்

80 சு. ப. மாணிக்கம், 'இரட்டைக் காப்பியங்கள்'—பக்கம் 58

81 T. S. Eliot—'Tradition and Individual Talent'—p. 7

வாழ்ந்த ஹோமர் எழுதிய ஒடீஸி (Odessey) போன்ற வீரகாவியம் தோன்றவில்லை. சிந்தனை வளத்திலும், இலக்கியக் கலையிலும் உலகளாவிய தனித்தகைமையைச் சங்க காலம் உருவாக்கிக் கொள்ளவில்லை. இதற்குக் காரணம் என்ன? குழுக்கூட்ட வாழ்வியலின் (Tribalism) பாதிப்பை (Impact) அகற்றுகின்ற முறையில் (சோழன் நலங்கிள்ளி போன்ற வேந்தர்கள் உள்ளிட்ட) புலவர்கள் செய்த நெடுநாளைய முயற்சி தனது நிறைவை அடைய வில்லை; இலக்கிய மரபுகளைப் பயன்படுத்திய இம் முயற்சியின் இடைக்காலத் தோல்வியின் காரணமாகக் கம்பராமாயணம் போன்ற காவியங்களும், சிவஞான போதம் போன்ற சிந்தனையிற் சிறந்த சாத்திரங்களும் பல நூற்றுண்டுகள் கழித்துத்தான் தோன்றின.

தனிநபர் உள்ளக் கிளர்ச்சியின் துணுக்குகளாக உருவங் காட்டும் சங்கப் பாடல்கள் அனைத்தும் எக் காலத்துக்கும், எந் நாட்டவருக்கும் பொதுமையான உலகயுண்மைகளை நோக்கித் தாங்களாகவே பாய்ந்து செல்வதால், அவற்றை அவற்றினுடைய இலட்சியப் பார்வைக்கு உகந்தவாறு வகைப்படுத்தப்பட்ட தொகுப்பினுள் (anthology) நிரல்படுத்தி வைக்கலாம்; அவ்வாறே செய்யப்பட்டது. தஞ்சைப் பெரிய கோவிலின் ஒவ்வொரு பாகத்தி லுள்ள கலைக்கல்லிலும் தனிநபர்ச் சிற்பி தன் கலைத் துடிப்பைப் பெய்து உண்டாக்கியது போல, சங்கப் புலவர்களின் பாடல்கள் காணப்படுகின்றன. எல்லாச் சிற்பிகளின் ஒருமித்த கலைச் சேவை யின் விளைவாகத் தஞ்சைக் கோபுரத்தின் எழிலானது மொத்த உருவாக்கமாக எழுச்சியுறுகிறது.[82] இதைப் போலச், சங்கப் புலவர்களின் தனிநபர்த் திறமைகளின் மொத்த சேர்க்கையாகச் சங்க இலக்கிய கோபுரம் எழுந்துள்ளது. உலக மானிட இனத்திற் குரிய உயர்வுக்கான உயர்ந்த கருத்துகளைச் சங்க இலக்கியம் கலையமிசத்தோடு வலியுறுத்துகின்ற சாதனையானது, அக் கோபுரத்தின் பொற்கலசமாக நிரந்தரமான அழகோடு ஒளிர்கிறது.

**தமிழ்ச் சங்கம் :** கன்னியாகுமரிக்குத் தெற்கே 700 காவதம் (சரியாக 1000 கி. மீ.) கடந்து காணப்பட்ட லெமூரியப் பகுதியின் தென்மதுரை நகரில் பாண்டியரால் நிறுவப்பட்ட முதல் தமிழ்ச் சங்கம் 4440 ஆண்டுகள் 4449 புலவருடன் வழுதி முதலாகக் கடுங் கோன் ஈருகவுள்ள பாண்டியரால் நடத்தப்பட்ட நிலையில் கடல் கோள் கொள்ள அந் நகரமும், சங்கமும் அழிவுற்றன. தெற்கே கிழக்குக் கரையிலமைந்த கபாடபுரத்தில் பாண்டியர்கள் குடியேறி, இடைச் சங்கத்தைத் தொல்காப்பியர் உட்பட்ட 3700 புலவர்

82 T. P. மீனுட்சி சுந்தரம்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர்—II—பக்கம் 5

களுடன் 3700 ஆண்டுகள் நடத்தினுர்கள்.[83] செழியனை முதலாவதாகக்கொண்டு தொடங்கிய இடைச்சங்கப் பாண்டியர் வமிசத்தின் கடைசி அரசனை முடத்திருமாறன் மற்ருெரு கடல்கோள் வருவதை உணர்ந்துகொண்ட நிலையில்[84] தனது தலைநகர்விட்டு அவசரமாக வெளியேறினுன்; பின்பு தற்காலத்திய மதுரையில் நிலைநாட்டப்பட்ட கடைச்சங்கம் செயலாற்றிய நாளையில்தான் தொல்காப்பியம், சிலப்பதிகாரம், மணிமேகலை நீங்கலான ஏனைய சங்க இலக்கியங்களெல்லாம் அரங்கேறின. 1850 ஆண்டுகள் நடைபெற்ற கடைச்சங்கத்தை முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதி வரையுள்ள 49 பாண்டியர்கள், நக்கீரர் போன்ற 449 புலவர்களைக் கொண்டு நடத்தினர்; தமிழ் வளர்த்தனர். சங்கத்தைப்பற்றி இறையனுர் அகப்பொருள் உரை—சூத்திரம் I பேராசிரியர்,[85] நச்சினுர்க்கினியர் (மலைபடுகடாம்—145 பாடலுரை), கலித்தொகை (பாடல் 104), சிலப்பதிகாரம் (XI—19—20) சொல்லுகின்ற செய்திகள் ஏராளம். வரலாற்றுக்குரிய அளவில் பல உண்மைகள் இச் செய்திகளில் புலப்படுகின்றன. ஆனுல், இதனைப் பூரணமாக ஒப்புக்கொள்ளாத அறிஞர்களும் உண்டு.[86] இலக்கியம், இசை போன்ற கலைகளுக்கு உரிய பற்பல மரபுகளை (conventions) ஏற்படுத்தி, அக் கலைகளின் தூயத் தன்மையைப் பாதுகாத்த சங்கத் தமிழர்கள் தமிழுக்கு உரிய தணிக்கையாளராக (censors) மதுரைச் சங்கத்தை வைத்திருந்தார்கள். பெரும்பாலும் அரசியல் காரணங்களுக்காகத் தங்களுக்குள் இடையருது போர் செய்து வந்த சேர-சோழ-பாண்டியர்களுக்குள் பொருளாதார மேம்பாட்டைக் கொண்டிருந்த சோழர்கள் பாண்டியரின் மதுரைச் சங்கத்திற்குப் புலவரை அனுப்பியதைப்பற்றியோ, அனுப்பாமல் இருந்ததுபற்றியோ தகவல் கிடைக்காதவரை, தொன்மைச் சிறப்போடு விளங்கிய மதுரையின் மொழித் தலைமையைச் சங்கச் சோழர்களும் தமிழின் பெயரால் ஒப்புக்கொண்டார்கள் என்றும், அதன் மூலம் அச் சோழர்களும் தமிழ் வளர்த்தார்கள் என்றும் சொல்லுவது பொருந்தும்.

83 க. வெள்ளைவாரணன்—'தொல்காப்பியம்' (தமிழிலக்கிய வரலாறு)—1970—பக்கம் 3, 4

84 P. T. Rajan—'The contributions of the Sangams to Tamil Language and Literature'—முதல் உலகத்தமிழ் மாநாடு மலர் II—p. 130

85 தொல்காப்பிய உரை—பொருளதிகாரம்—649

86 K.A.N. Sastri—'Pandian Kingdom'—p. 17

## IV. போர்

### வீரம், படைத்திறன், போர் முறை

**1. வீரம் :** வாழ்க்கைச் சுவைநலம் பேணும் வழிமுறை கொண்ட சங்க காலத் தமிழ் நாகரிகம் வீரத்தை அளப்பரிய நிலையில் போற்றியது. உயிர் நலம் வழங்கும் உணவு, உடை, காதல் உணர்வு போன்றவற்றைத் தேடிப் பெறுதலில் வாழ்க்கைச் சிறப்பையும், பயனையும் கண்டவர் தமிழ் மக்கள். அவ்வனைத்தையும் இழந்து போகின்ற அளவில் அத் தமிழினமே வீரத்தினைத் தன்மான உணர்ச்சிக்குக் கொழுகொம்பாக அமைத்துள்ளது. சங்கத் தமிழுக்கு உரிய அடிப்படை உணர்வாகிய இலக்கியப் பாங்கில் அது எழுச்சியுடன் தலைதூக்கி நிற்கிறது. வீரத்தின் விளைநிலமான போர்க்களத்தில் வெற்றி பெறுவதைவிட உயிரிழத்தலான வீர மரணம் அடைவதில் பெருமை காண்கின்ற உளப்பாங்கினைச் சங்கத் தமிழுக்கு உரித்தான கலாசாரச் சொத்தாக நாம் காண்கிறோம். ஆதலால்தான் இயல்பாக இறந்தவர்களின் உடலில் காயத்தின் வடுவைச் செயற்கையாக ஏற்படுத்திய பின்னர்தான் அடக்கம் செய்தனர் அந் நாளைய மக்கள். போர்க்களத்தில் முகத்திலும் மார்பிலும் பட்ட புண்ணை ஆற்றிக்கொண்டு வாழ்வின் நிலையாமையை எண்ணி மேலும் வாழ விரும்பாமல் அப் புண்ணைக் கிழித்துக்கொண்டு மாய்கின்ற வீரர்கள் இருந்தார்கள்.[87]

பண்டைக் காலக் கிரேக்கர்கள் தங்கள் வாழ்க்கையில் வீரம் என்ற உணர்விற்கு அளித்த நிலையைவிடச் சங்கத் தமிழர்தான் மிக உயர்ந்த இடத்தை அவ் வீரத்திற்கும், தன்மான உணர்விற்கும் வழங்கியிருந்தார்கள். முடியுடை மூவேந்தரும், எண்ணற்ற குறுநில மன்னர்களும் தங்களுடைய மக்களைத் தாங்கள் ஆற்றுகின்ற போர்களில் எவ்விதத் தயக்கமும் தடங்கலும் இல்லாமல் ஈடுபடுத்தினார்கள். பொது நலம் பேணும் அரசியலுக்காக மட்டுமன்றி அந்தந்த மன்னருடைய தனிநபர் உணர்ச்சிக் கொந்தளிப்பின் வெளிப்பாடாகவும் இத்தகைய போர்கள் தோற்றங் கொண்டன. இந் நிலையில் இப்படிப்பட்ட போர்களில் ஈடுபட்ட அக் காலத் தமிழ் மக்களின் நெஞ்சத்தில் வீரம் என்ற உணர்வாற்றல் தனி மனித முயற்சியாகவும், முடிவில் சமுதாய வெற்றியாகவும் கனன்று நின்றது. அப்படி அது நிற்க வேண்டிய சமுதாயச் சடங்காக அவரவர் மனதில் அது ஓர் உணர்ச்சித் தினவாகவும், உந்துதல் சக்தியாகவும் ஆட்சி செய்தது.

87 **தொல்காப்பியம்**—பொருளதிகாரம்—79

பகைஞரை வீழ்த்துதல் வீரத்தின் எல்லையாகும். அதே பகைஞர் சுற்றமாகவும், நட்பாகவும், தமிழர் என்ற ஓரின மக்கள் ஆகவும் அவர்களுக்குள்ளேயேதான் காணப்பட்டனர். எனினும், தனிநபர்ச் சிந்தனையாக, உயிர் ஈர்க்கும் உணர்வாக அவ் வீரம் செயல்பட்ட நிலையில் சுற்றமும் இனமும் பார்க்க முடியவில்லை. கிரேக்க நாட்டின் வரலாற்றின் உண்மையும் இதுதான். சூளுரைத்தல், வடக்கிருத்தல் போன்றவை இத்தகைய தனிநபர் உணர்ச்சிகளின் சமுதாயப் படிவங்களாகும். தன்மான உணர்ச்சி இவ் வீரத்தின் ஆதாரமாக நிலை நின்றது. ஒவ்வொரு படைஞனும் தான் சார்ந்த வேளிர் அல்லது மன்னன் பக்கம் கடைசி வரையில் நின்று போராடச் சித்தமாக இருந்தான். ஒரே தமிழ்க் கலாசாரப் பரம்பரை என்ற ஒரு வரலாற்றுச் சங்கிலியில் கோர்த்த வளையங்களாக இம் மன்னர்கள் விளங்கினர்கள். ஆனாலும், அவர்கள் காட்டிய போர்வழியில் செல்ல அவர்களைச் சார்ந்த போர்வீரர்கள் எப்போதுமே ஆயத்தமாக இருந்தார்கள். இத்தகைய சூழ்நிலையில் மன்னர்கள் தங்கள் மனம் போனபடித் தங்களுக்குள் மோதிக்கொண்டார்கள். அதில் ஏற்பட்ட ஆர வாரத்தில் சங்க நானைய இலக்கிய மலர்ச்சிகள் தோன்றின; வரலாற்றின் விளிம்பு விரிந்து கொடுத்தது.

தமிழகமெங்கும் அரசியல் ஒற்றுமை ஏற்பட்டு ஒரே நாடு தோன்றுவதற்கான இலட்சிய முழக்கம் கரிகால் பெருவளத்தான், சேரன் செங்குட்டுவன் ஆட்சிக் காலங்களுக்குப் பின்பு அறவே கேட்கவில்லை. ஆகவே, தமிழ் வீரத்தின் சங்க காலப் பதிப்பில் தனிநபர் கண்ட சொந்தச் சிறப்பு மட்டும் காலமெல்லாம் காணப் பெற்றது. நாடு முழுவதிலும் எல்லோரும் ஒற்றுமையாக இருப்பதற்கோ, 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்ற பூங்குன்றனரின் புகழ்ச்சிக்குரிய பொது மறையை வேரூன்றச் செய்வதற்கோ அவ் வீரம் பக்குவம் பெறவில்லை. சரித்திர கால வளர்ச்சிப் பலகணியின் முதற்கட்ட நிலையாகச் சங்க காலம் தோற்றம் அளித்தது.

**2. படைத்திறன் :** போர் ஈடுபாட்டினைப் பிள்ளைப்பிராயத்தி லேயே வளர்ப்பதற்குரிய சமுதாய மரபுகள் சங்க காலத்தியச் சோழ நாட்டில் மலிந்திருந்தன. முன்னைய நாட்களில் தனது தலைவனையும் தந்தையையும் இழந்துவிட்ட மறத்தி போர்முரசம் கேட்ட நிலையில் தெருவிலே விளையாடி நின்ற தன் மகன் கையில் வேல் கொடுத்து, செருமுகத்திற்கு அனுப்புகின்ற அக் காட்சியை ஒக்கூர் மாசாத்தியார் என்ற பெண்பாற்புலவர் வியந்து சித்திரிக் கின்றார். இத்தகைய நிகழ்ச்சிகள் மலிந்த அக் காலத்தில் சிறுவனுக்குக்கூடப் போர்ப் பயிற்சி அளிக்கப்பெற்றது தெரிகிறது

(புறம்-279). தாயின் வயிறு புலி கிடந்துபோன கற்குகைதான் என்றும், அவன் எங்கே போனுன் என்பது தனக்குத் தெரியா தென்றும், வேண்டுமானுல் போர்க்களத்தில் பார்க்கலாம் என்றும் காவற்பெண்டு என்ற புலவர் அந் நாளையத் தாயின் போரார்வத் தாய்மையைக் குறிக்கிருர் (புறம்-86).

சோழ நாட்டில் பெருநற்கிள்ளி ஏற்படுத்திய பேரவை போன்றவை போர்த்திறன் ஊட்டும் பயிற்சி மன்றங்களாகச் செயல்பட்டன. பட்டினப்பாலை கூறும் 'முரண் களறி' இவ் வகையைச் சேர்ந்ததுதான். போரில்லாத காலங்களில் வில், வாள், வேல் போன்றவற்றில் ஈடுபாடுடைய மக்கள் தங்கள் வீரத்தை நிர்ணயிக்கின்ற போர் பந்தயப் போட்டிகளில் ஈடு பட்டார்கள். பிற்காலத்தில் விஜயாலய வழிச் சோழர் காலத்தில் போர்ப் படைஞராக கைக்கோளர் போன்ருேர் காணப்பட்டனர்; இதே போல ஜப்பானில் சாமுராய் (Samurai) காணப்பெற்றனர். சங்க காலத்தில் வீட்டுக்கு ஒரு வீரன் என்றளவில் அரசனுடைய படைகள் எல்லாம் நாட்டுப் படையாகத்தான் எல்லா மக்களையும் கொண்டு விளங்கியது. போரிடுவதற்கு முன்பு பெருஞ் சோறிடுதல் என்ற முறையில் வயிருற விருந்துண்டார்கள் போர் வீரர்கள் (அகம்-233); தங்களின் போர்ச் சேவைகளுக்குரிய ஊதியம் பெற்றதாகக் குறிப்பு காணப்பெறவில்லை. வட்டுடைத் தரித்துப் போராடிய வேலைக்காரப் படையினர் 'செய்; அல்லது செத்து மடி' என்ற உள்தகிப்பு உணர்வோடு அரசனுக்குரிய போர் வீரர் களாகச் செயல்பட்டனர். இத்தகைய பொதுமன்ற நிகழ்ச்சி களுக்குப் 'பூந்தொடை விழா' எனப் புறநானூறு பெயரிட்டு அழைக் கிறது. நக்கண்ணையார் என்ற பெண்பாற்புலவர் இதுபற்றிய செய்திகளைத் தருகிருர். போர் முகத்தில் தம் அரசர்க்குரிய பூ மட்டுமன்றித் தனது குலத்துக்குரிய பூவையும் அடையாளமாக (coat of arms) அணிவர். இவ்விதமாக இரண்டு பூக்களை அணிந்தனர் (நெடுநெல்வாடை-176). தலையில் பூ அணிந்து போராடுகின்ற தென்புலத்தாரைப்பற்றி வால்மீகி இராமாயணம் பேசுகிறது.[88] குலத்தின் பெயரைச் சொல்லி, அதற்குரிய பூச்சூடிக் குலத்தின் பெருமை காக்கின்ற நன்மகனுக அந் நாளைய போர் வீரன் போரிட்ட இராணுவப் பாரம்பரியம் (military tradition) பிற்காலச் சோழர் காலத்திலும் குலவழி அமைந்த (இடங்கை, வலங்கை) படை அமைப்புகளுக்குக் காரணமாயிற்று. குலவழி எண்ணி, போர்முகத்தில் செயலாற்றுகின்ற இத்தகைய குழுக் கூட்ட வாழ்வியலுக்குரிய (Tribalism) போக்கு பிற்காலத்தில்

88 A. .L Basham—'The Wonder that was India' –1963—p.136
தொல்காப்பியம்—636 (பொருளதிகாரம்—பேராசிரியரின் உரை).

மறையாததோர் இராணுவப் பாரம்பரியமாக விளங்கிய நிலையில், அத்தகைய இராணுவப் பாரம்பரியங்களின் விளைவாகப் பிற்காலத்தில் இந்தியாவைப் படையெடுத்து வந்த அன்னியரை 'இந்தியர் அனைவரும் ஒன்று; அவர்தம் இராணுவ முயற்சியும் ஒன்றே' என்ற ஒருமித்த (unity of mind) சிந்தனையும், செயல்பாட்டு உணர்வும் (team spirit) கொண்டு எதிர்த்து வெற்றிபெற இயல வில்லை என்ற பொருளமைந்த கருத்தை A. L. பாஷாம் கூறுகிறார்.

**3. போர் முறை :** அறத்தின் வழிநடந்த போர் முறை தமிழ் நாகரிகத்தின் உயர்தனிச் சிறப்பாகும். போர் முரசம் தனிப்பட்ட பாராட்டுதலுக்கும் மன ஈர்ப்புக்கும் உட்பட்டது நல் முகூர்த்த நாட்களில் அதை நீராட்டிப் பேணுவர். ஒவ்வொரு மன்னருக்கும் உரித்தான மரம் ஒன்று அவரவர் தலைநகரில் உண்டு. படை எடுப்பின்போது பகைஞர் அதை வெட்டி வீழ்த்துவர். வீழ்த்தப்பட்ட மரத்தில் முரசம் செய்வதும் அந் நாளைக்குரிய வீரத்தின் சாதனையாகத் தமிழர் கருதினர். ஆநிரை கவர்தல் போரினுக்கு முகமன் கூறும். ஆநிரை, அந்தணர், பெண்டிர், இளஞ்சிறுர், இயலாத முது மக்கள் போன்றவரைத் தவிர்த்துப் போர் செய்யும் முறை அந் நாளைய தமிழர் கண்ட வீரத்தின் முதிர்ச்சியாகும். போரிடுங்காலங்களில் பகைவர் நாட்டில் உள்ள ஏனைய மக்களைப் (civilian population) போர் வீரர்கள் ஒருபோதும் துன்புறுத்துவதில்லை; பொது மக்களின் சொத்துகளுக்குத் தீங்கு இழைத்ததும் இல்லை. போர்முகத்தே காணப்பெற்ற மன்னர்கள் போரிடும் முறையில் அறவுணர்வு காட்டியவர்களைப் போற்றினர். ஒவ்வொரு மன்னருக்கும் ஒரு பூ அரசச் சின்னமாக விளங்கியது. பாண்டியனுக்கு வேப்பம் பூவும், சேரனுக்குப் பனம் பூவும், சோழனுக்கு ஆத்திப்பூவும் (ஆர்) அமைந்த போர்க்கோலச் சின்னங்கள் (totemic symbols) ஆகும். பொதுவாகப் போர் விடியற்காலம் நடைபெற்றது எனத் தொல் காப்பியப் புறத்திணைக்கு உரை கண்ட நச்சினார்க்கினியர் சொல்வார்.

போரில் புறமுதுகு காட்டியவருக்கு வீட்டிலும் நாட்டிலும் புகலிடம் கிடையாது. தோல்வியுற்றவர்கள் வடக்கிருந்து உயிர் விடுதல் அந் நாளைய போர் சார்ந்த சமூக மரபாகும். போர் முகத்தே எப்போதுமே அதிபதியாகவும் போரிடுந்தலைவனுகவும் இருப்பவன் அரசனே. எல்லோருக்கும் முதன்மையானவன் என்ற முறையில் முன் வரிசையில் முதல் ஆளாக நின்று போரிட்ட சோழ மன்னர்கள் படைவீர அரசர்களாக (warrior-kings) விளங்கினுர்கள். முல்லைப்பாட்டு சொல்வது போல, போரிடு

கின்ற நாட்களில் இரவு வேளைகளில் வெகுநேரங் கண்விழித்துப் போர் உபாயங்கள் பற்றிய ஆலோசனையில் அரசர்கள் ஆழ்ந் திருப்பார்கள். போரில் தனிநபர்த் திறனைக் காட்ட வந்த மன்னன் போரவையைச் (council of war) சார்ந்துதான் செயல்பட்டான். சாத்தந்தையார் என்ற புலவரின் பாட்டுடைத் தலைவனை சோழன் போரவைக் கோப்பெருங்கிள்ளி என்றே அழைக்கப் பெறுகிறான் (புறம். 80, 81, 82). போரவை நடைபெறுகின்ற பொழுது நாழிகைக் கணக்கு எடுப்போர் அவ்வப்போது காலக் கணக்கைச் சொல்லிச் சென்றனர். போர்க் காலங்களில் அரசனுடைய பாதுகாப்புக்குப் பெண்களும். ஊமையரும் பொறுப்பு ஏற்றனர். அரசன் கொல்லப்பட்டாலோ படுகாயமுற்றாலோ அவனுடைய வீரர்கள் போரினை நிறுத்தித் தோல்வியை ஏற்றுக் கொள்வர். குடும்ப உறவில் முரண்பட்டு நின்று போருக்கு ஆயத்தமான நலங்கிள்ளி,நெடுங்கிள்ளிபோன்ற சோழ அரசர்குலச் சகோதரர்களையும், தம் மைந்தர்களையே பகைவராகப் போர் முகத் தில் பார்க்க இருந்த கோப்பெருஞ்சோழனையும் பரிசில்வாழ் புலவர் கள்தான் போர் செய்யாது தடுத்து நிறுத்தினார்கள்; அவர்களை நல் வழிப்படுத்தினார்கள். போருக்குப் புறப்படுமுன் பெருஞ்சோறு வழங்கலோடு களத்தில் வீரங்காட்டிய நிலையில் இறந்துபட்டோ ருக்கு 'வீரக்கல்' நாட்டுதலும் ஏனைய மரபுகளாகும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை ஆகிய திணைகளின் இலக்கணப்படி முறையே ஆநிரை கவர்ந்து, மோதி, அரணை வளைத்து, எதிரியைக் கொன்று சங்கத் தமிழர் போரிட்டனர் (தொல். புறத்திணையியல்).

தோல்வியுற்ற நாடுகளின் செல்வத்திற்கு வெற்றியாளர்கள் உரிமை கொண்டாடினார்கள். அச் செல்வத்தைத் தன் நாடு கவர்ந்து வந்து பரிசிலர்க்கு அளிப்பதுவும் போர்க்கால வழக்க மாகும். போர்முகத்தில் வீரம் விளைவித்த படைத்தலைவர்கட்கு 'ஏனாதி 'என்ற விருது சோழ மன்னர்களால் வழங்கப்பட்டது. போர்த்திறம் காட்டிய வேலாளர் போன்றோர் வேல், அரசு என்ற பட்டங்களைச் சோழ மன்னர்களிடமிருந்து பெற்றனர். 'கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்தப் பரந்தோங்கு ' சிறப்பிற் பாரி பொருமையுணர்வில் தகித்துப்போன மூவேந்தரின் படை யெடுப்பில் மாய்ந்து போனான். இது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி யாகும். நேருக்குநேர் ஆயுதம் தாங்கிய நிலையில் வீரம் காட்டு கின்ற தமிழ்ப்பண்புக்கு வேறுபட்ட முறையில்தான் இவ் வள்ளல் வீழ்ச்சியுற்றான். இருந்தாலும், சங்க காலத்தின் தமிழக மக்களு டைய போர்முறை வளர்ச்சியின் பொதுமையான சிறப்பிற்கு இத் தனி நிகழ்ச்சி ஊறு இழைக்கவில்லை.

போரிடும் முறையில் சூழ்ச்சிக்கு அவ்வளவாக இடமில்லை. நேரடியான மோதுதல் போர் நெறியாக நிலைப்பட்டது. யானையும், குதிரையும் போர்முறையில் காணப்பட்டன. தேர்ப்படை சங்க காலத்தின் பின்னுளையப் போர்ச்சாதனமாகும். உருவப்பஃறேர்ப் பெருநற்கிள்ளி என்பவன் தேர்ப்படையைப் பெரிதும் பயன் படுத்திய சோழ மன்னன் ஆவான். கோட்டைக்குள் சென்றமர்ந்து கொள்வதும், கோட்டையை வளைத்து முற்றுகை இடுகின்ற பகைவரை எதிர்த்துக் கோட்டைக்குள்ளிருந்தே போரிடுவதும் போர்முறைகளாகவே கருதப்பட்டன. யானைகளின் உதவியுடன் கோட்டைகளை இடிப்பதும், ஆயுதசாலைகளில் படைக்கலங்களைப் பெருமளவிற்கு உற்பத்தி செய்தலும் போரிடுகின்ற முறையில் சாதனங்களைப் பயன்படுத்திய வழிவகையைக் காட்டுகின்றன.[89] சோழன் கரிகாலனுடைய ஈழப்படையெழுச்சி சோழர்களுக்குக் கடற்படை அமைந்திருந்ததைக் காட்டுகிறது. போர்ச்செய்தியை யும், போர்நிறுத்தல் விண்ணப்பத்தையும் எடுத்துச்சென்ற தூது வர்கள் நன்கு மதிக்கப்பெற்றார்கள். பெரும்பாலும் புலவர் பெரு மக்கள்தான் இத்தகையத் தூதுவர்களாகத் தாங்களாகவே சென்றி ருந்தார்கள். போரில் தோற்றவர்கள் சிறையிலிடப்பட்டார்கள். கிரேக்கத்தின் ஸ்பார்ட்டா நகரத்தவர் போலப் போர்த்திறன் வளர்த்தவர்களும், அந் நாட்டு ஏதென்ஸ் வளர்த்த மதிநலம் வாய்ந்தவர்களும் இருவழி வளர்ச்சியாக அமைந்திருந்ததைப் போலல்லாமல், வீரமும் அறிவுங்கொண்டிணைந்த சான்றாண்மை வாழ்வைச் சோழ மக்கள் கைக்கொண்டார்கள். அறிவு சான்ற வீரத்தை அவர்கள் தங்கள் வாழ்வின் உயிர்மூச்சாகக் கொண்ட நிலையில் அறமோடு நின்ற நல்வீரம் (code of chilvalry) காட்டினார்கள்.

**V. இறை உணர்வு :** சங்க காலச் சோழ மண்டலத்தார் நிலமிசை நீடு வாழ்வார் என்ற நிலை பெற்றவர்கள். கற்ற கல்வியும், பெற்ற செல்வமும் வாலறிவன் நற்றாள் தொழு வதற்குத்தான் என்று கடவுளரைப் போற்றுகின்ற உலகியல் உயர்வைக் காட்டிய வள்ளுவத்தின் கூற்றுக்கு மாறாக, 'திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும், கொங்கலர் தார்ச் சென்னி குளிர் வெண்குடை போன்றிவ்வங்கண் உலகளித்தலான்' என்று இளங்கோவடிகள் நிலவை வாழ்த்தித் தமது காவியத்தைத் தொடங்கியுள்ளார்.[90] நிலவை வாழ்த்திச் சென்னி என்ற பெயர்க்குரிய சோழனையும் சோழ நாட்டையும் அந்

89 சிலப்பதிகாரம்—அடைக்கலக்காதை—வரி 207—218

90 சிலம்பு—I—வரி 1—3

நிலவின் வள்ளன்மையாக எடுத்துக் காட்டுகின்றார். சிலப்பதிகாரக் காலத்தில் சங்கத் தமிழ் வேந்தர்கள் வடபுலத்து மன்னர்போல் தங்கள் குலங்களைச் சூரிய சந்திர மரபினதாக வரித்துக்கொண்டனர் என்ற ஓர் ஆராய்ச்சிக் குறிப்பு உண்டு. இளங்கோவடிகளின் திங்களைப் போற்றுதும் என்ற சிறப்பினைச் சூரிய குலத்தவர் என்று தங்களை அழைத்துக்கொண்ட சோழருக்கு அளித்த நிலையை இரட்டை முரண்பாடு எனக்கொள்ளலாம். உண்ணவும், உடுக்கவும், இல்லறத்தில் இனிது இருக்கவும்—என்றளவில் அமைந்த வாழ்வியல் இலக்கணத்தில் பழகிப்போன தமிழ் நாகரிகத்தவர்க்குப் ‘ பிறவிப் பெருங்கடல் நீந்துவர் ’ என்ற சமயக் கோட்பாடு புதிதுமட்டுமல்ல; அக் காலச் சோழ மக்களுடைய ‘ எல்லாம் இன்ப மயம் ’ என்ற வாழ்க்கைக் கோட்பாட்டிற்கு எதிர்மறையாகவும் அமைந்துள்ளது. ஆனாலும் முழுமையான பொருள்—முதல்வாத வாழ்வியலில் சங்க காலச் சோழ மக்கள் ஆழ்ந்திடவில்லை.

மனிதனுக்கு இயல்பான அற உணர்ச்சியின் அடிப்படையில் இறை உணர்வைச் சங்க மக்கள் ஏற்றுக்கொண்டிருந்தார்கள். ஆனாலும் தொல்காப்பியம் காட்டுகின்றாற்போலப் படிப்படியாக வடபுலத்தின் சடங்காசாரச் சமயக் கோட்பாடுகள் தமிழகத்தில் ஊடுருவி நின்றன. இதனை வரலாற்றறிஞர் இரு வேறு கோணங்களில் நோக்குகின்றார்கள். ஆதித்தமிழ்ச் சமயக் கருத்துகளும் வடக்கே இருந்து வந்த நான்மறைக் கோட்பாடுகளும் இரண்டறக் கலக்கத் தலைப்பட்டு, பொதுமையான உருவகம் அடைகின்ற நிலையை எய்திவிட்டன என்பது சில அறிஞரின் கருத்து. இவ்விரு கலாசாரங்களும் ஒன்றையொன்று தழுவிக்கொள்ளாமல் பெருமளவிற்குத் தனித்தனியே சங்ககால இறுதிவரை நின்று சாதித்தன என்றும், நகர மாந்தர்களிடம் வடபுலத்தின் கலாசாரம் பிடிப்புக் கொண்ட போது மற்றைய பகுதிவாழ் மக்கள் தொன்மையான தமிழ்க் கலாசாரத்தின் அடிப்படையான திணைவாழ்விற்குரிய கோட்பாடுகளின்படி சமயச் சிந்தனைகளைத் தாங்கி நின்றார்கள் என்றும் பிற அறிஞர் கூறுவர்.

சிவன், குமாரவேள், மகாவீரர், புத்தர் போன்றோர்க்குக் கோவிலும் வழிபாடும் சங்க காலத்தில் இருந்தன. சிலப்பதிகாரம் கூறுவது போல, ஆயர்தம் மனைவியர் ஆய்ச்சியர்க்குக் கண்ணனும், வேட்டுவர்களுக்குக் கொற்றவையும், குறவர்களுக்கு முருகனும் தலைநிலைக் கடவுளராவர். வடபுலத்தின் கலாசாரத்துத் தலைநிகர்க் கடவுளான இந்திரன் பெயரால் புகார் நகரில் இந்திர விழா நிகழ்ந்ததும், ஆங்கு அரசன் உள்பட அத்தனை மக்களும்

கடல் நீராடிப் பாட்டும் பரதமும் பயின்று கொண்டாடியதையும் சிலப்பதிகாரம் எடுத்துக் காட்டுகின்ற சோழ நாட்டுச் சமயச் சார்பான பெருவிழா எனலாம். மனித மண்டை ஓடுகளைக் கழுத்தில் கோர்வையாகப் போட்டலைந்த கபாலிகர்கூட அந் நாளில் உண்டு. வேலனுடல் என்பது முருக வழிபாடு. குரவைக்கூத்து கண்ணனைப் போற்றுவது. இவ்விரு ஆடல்கள் பற்றிக் கூறுகின்ற சிலப்பதிகாரத்தில் அருகதேவன் கோட்டமும், அதைச் சார்ந்த அறவண அடிகள், கவுந்தி அடிகள் போன்ற துறவியரும் இடம் பெறுகின்றனர். சரஸ்வதிக்குக்கூடக் கோவில் இருந்தது என்று கூறுகின்ற மணிமேகலையில் 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' என்ற பொதுமை அறம் கடவுள் வழிபாட்டு நிலையில் உயர்ந்தேத்தப்படுகிறது.

'நாடுகொண்ட நறுவீமுல்லை' என்று முல்லைப்பாட்டு சொல்வது போல 'விரிச்சி கேட்டல்' நிகழ்ந்தது. துளசிச்செடியும் மணியோசையுங்கொண்டு விஷ்ணுவை வழிபட்டதைப் பதிற்றுப் பத்து எடுத்துக் காட்டுகிறது. அதே மணிமேகலை சோழ அரசனால் கூட்டப்பட்ட சமய மன்றங்களில் மதச்சார்பான வாதங்கள் நடந்ததைப்பற்றிக் குறிப்பிடுகிறது. புகார் நகரத்தில் சமயவாதிகள் தங்கள் இருப்பிடங்களில் கொடியேற்றிப் பிற சமயத்தவரை வாதிட அழைத்த ஞானச் செருக்கைப்பற்றிப் பட்டினப்பாலையில் காணலாம். இந் நிலையில் வடபுலத்தில் இருந்து வந்த இந்து சமயக் கோட்பாடுகளைவிட வாழ்வின் இன்பியல் மனப்போக்கு உடைய தமிழர்களைச் சமயச்சார்பான மனமயக்கத்தில் ஈடுபடுத்தியவை புத்த சமண மதங்களே; வள்ளுவத்தின் பிறவிப் பெருங்கடல் நீந்துகின்ற கோட்பாடும், கர்மத்தின் அழியாத் தன்மையில் விளைந்த மறுபிறப்பு பற்றிய மனச் சோர்வும் சங்கத் தமிழரைப் பிற்காலத்தில்தான் பற்றிக்கொண்டன எனலாம். கி. மு. 22-ல் உரோமப் பேரரசன் அகஸ்டஸ் என்பவனை ஏதென்ஸில் சந்தித்த பாண்டியரின் தூதுக் குழுவிலுள்ள ஸ்மராஞசாரியன் என்ற சாது, வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு தீக்குளித்து இறந்த நிகழ்ச்சி அசாதாரணமானதுதான். உலகியல் வாழ்வின் நலங்களை ஒறுத்த அச் சமண முனிவர்கள் தாங்கள் தங்கியிருந்த மடங்களில் ஓவியம் போன்ற நுண்கலைகளை வளர்த்த நிலையில் மக்கள் மத்தியில் வந்துலவ முற்பட்டார்கள். ஆக, சங்க காலத்தில் சோழர்களுக்கான சமய வளர்ச்சியின் பொதுமைச் சிறப்புகளைச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் நேரடியாக விளக்குகின்றன. 'ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி' என்ற சோழ மன்னன் இதற்குரிய எடுத்துக்காட்டு எனக் கொள்ளலாம். மன்னர் அளவில் மட்டுமல்லாமல் மக்கள் நிலையிலும் இத்தகைய வழிபாட்டுச் சடங்குகள் ஊடுருவி நின்றதைக்

கோவலன்—கண்ணகி மணவினைப்பற்றி விரிந்துரைக்கும் இளங்கோவின் சிலம்பிலும் காணலாம். ஆவூர் மூலங்கிழார் இத்தகைய சடங்குகளையும், வேள்விகளையும் செய்வதற்குரிய பேராற்றலைப் பெற்றிருந்த அந்தணரான பூஞ்சாற்றூர் விண்ணந்தயன் என்பவர் வேத வேள்வி செய்ததைச்சிறப்பாகக் குறிப்பிடுகிறார் (புறம்—166).

திருமணத்தில் தன்னிச்சையான காதலும் அதற்குரிய தன் முனைப்பும் சங்கத்தமிழரின் அந் நாளையத் தனிச்சிறப்புகள் ஆகும். ஆனால் தமிழுக்கு முதல் நூலெனப்படும் தொல்காப்பியத்திலேயே 'கற்பெனப்படுவது கரணமொரு புணர' (சூத்திரம்—142) என்றளவில் சடங்கு முறையில் நடந்த திருமணத்தில்தான் கற்பென்ற இல்லறம் நடத்துதலின் மேம்பாடு காணக்கிடைக்கும். 'கரணத்தில் அமைந்து முடிந்த காலை நெஞ்சதனை அவிழ்ந்த புணர்ச்சி' (சூத்திரம்—146) என்றமைந்த போது திருமணச் சடங்குதான் அச்சமற்ற வாழ்வியலின்பத்திற்கு ஆதாரம் என்றாகிவிட்ட சமூக நிலை சடங்காசாரத்தைக் கொண்டு நிலைபெற்றுவிட்டது. 'மாமுது பார்ப்பான்மறைவழிக்காட்டிடத் தீவலஞ் செய்வது' (சிலம்பு-I-வரி 53) மணமகன்கோவலனுக்கு உரியதாயிற்று. இவ் வகைச் சடங்குகளும் வேள்விகளும் நடப்பதற்காகவே சோழரின் புகார் நகரில் யாகத்தீ வளர்க்கும் வேள்விக் கிடங்கானது (உலக நோன்பிகள் பௌத்தர்களின் இருக்கையோடு இணைந்திருந்த ஏனைய நான்கு கடவுளரின் கோவில்களைப் போன்று) நிலைப்பெற்றிருந்தது (சிலம்பு—V—வரி 168—198). புராணங்களைச் சார்ந்து மக்களின் எண்ண மரபுகள் இயங்குகின்ற அளவிற்கு வேத வேள்வி முறைச் சமயத்தின் பிடிப்பு சங்க காலத்திலேயே நிலைப்பெற்று விட்டது.[91] சான்றாக, மாதவி ஆடும்போது இசைந்திருந்த இசையானது வானுலகு நாரதனின் வீணையினுடையதாகவும், வானத்து இந்திரனுக்கே திருப்தியளிக்கக் கூடியதாகவும் காணப்பட்டது என இளங்கோகூடக் கூற வேண்டியதாயிற்று (சிலம்பு—VI—வரி 18—21). பிறருக்காக முயலுகின்ற நோன்மையாளர், அமரர்களின் அமுதம் கிடைத்தாலும் அருந்தார் என்பது புறநானூறு வாக்கு (பாடல்—182). உள்ளதை உள்ளபடிப் பார்க்கின்ற வாழ்வியலும், கல்வியிலுங்கொண்ட சங்கத் தமிழர் வாழ்வில் இவ்வாறு சடங்காசார வேள்வி முறைச் சமயம் வேரூன்றிக் கவிந்து நின்றது.

## (ச) கலை

### I. இசையும், நடனமும் சங்க காலத்து இசைக் கலை

இசைக் கலையின் வளர்ச்சி கொண்டு ஒரு நாட்டின் கலாசாரத்தின் தரத்தை அறியலாம். சங்க மக்கள் இசையைக் கலை

91 இது பற்றி விரிவாகப் பின்னால் 'சங்கத் தமிழகம் ஆரிய மயமாதல் ஒரு திறனாய்வு' என்ற தலைப்பில பார்க்க.

யாகவும், விஞ்ஞானமாகவும் இரண்டும் விரவிய இன்சுவைப் பெட்டகமாக அனுபவித்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் தருகின்ற இசைநூல்களின் பட்டியல்களினின்றும் அறியக் கிடக்கிறது. இன்னிசை கேட்டுக்கொண்டிருக்கும் அசுணப் பறவை இசை பேதம் குறுக்கிடும்போது உயிரிழந்து விடுகின்ற நுட்பமான உணர்ச்சியைக் கலை நினைப்பாகக் கொண்டு சங்கத் தமிழர்கள் தங்களுடைய இசைக் கலையைத் தனிமனித மனோலயத்திற்கும் (individual taste), பொதுமுறை மரபுகளுக்கும் (popular conventions) இடங்கொடுக்கின்ற பான்மையில் 'ஊன் கலந்து உயிர் கலந்து' பாடப்படும் மாண்புக்குரியதாக்கினார்கள்.

I. **இசை நூல்கள் :** பெருநாரை, பெருங்குருகு, தாளசமுத்திரம், தளவகையோத்து, வாய்ப்பியம், இந்திரகாளியம் போன்றவை பண்டைய சங்க நாட்களுக்குரிய இசை நூல்களாகும். 'பதினாறு படலம்' என்ற நூலைச் சிலப்பதிகாரத்துக்கு உரை சொன்ன அரும்பதவுரைக்காரர் குறிக்கிறார்.

II. **இசைப் பண்கள் :** பண்ணை என்பது இசையோடு பாடுவதைக் குறிக்கும். பண்ணத்தி என்பது பாடலை இசைப்படுத்தியதைக் குறிக்கும். தண்ணுமை என்ற தாளகதி (rhythm) அங்கு விரவி வருகின்றபோது ஆறலைக் கள்வர்கூட மயங்கினர் எனப் பொருநராற்றுப்படை (வரி—21-22) கூறுகிறது. அவ்வளவு எளியதாகவும் மனதைக் கவர்வதாகவும் சங்ககால இசை விளங்கியது. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழிசைப் பண்கள் காணப்பட்டன. சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றுக் காதை (வரிகள் 70—89) சொல்வது போல இவ்வேழு இசைப் பண்களும் ஏழு வான தேவதைகளாக உருவகஞ் செய்யப்பட்டு ஆயம், சதுரம், திரிகோணம், வட்டப்பாலை என்ற நான்கு நிலைகளில் அமர்த்தப்பட்டன. இப்போது இசைக்குரிய எழில்நலங்கள் பிறந்தன. அவை யாவன : பாலை ஏழு நிலைகளில் தோன்றியது—செம்பாலை, செவ்வளி, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை; இவற்றிலிருந்து பெரும்பண் —7 ; பண்ணியாற்றிறம் – 31 ; திறம் 65— ஆக மொத்தம் 103 உருக்கள் சங்க கால இசைக்குரிய கூறுபாடுகளாக அமைந்தன என இசையாராய்ச்சியாளர் விபுலாநந்தர் தமது யாழ் நூலில் கூறுகிறார். 'வம்புறு மரபு' என்று இளங்கோ கூறுவது போலப் புதுமையான இசை நோக்கையும் சங்கத் தமிழகம் ஏற்றுக்கொண்டது.

III. **இசைக் கருவிகள் :** குழல் இனிது ; ஏனைய மத்தளம், வங்கியம் போன்றவை இனியவைதான் ; ஆனாலும், சங்க

காலத்தில் யாவராலும் மதிக்கப் பெற்றது யாழ் என்ற நரம்புக் கருவியே ஆகும். 5 நரம்பு முதல் 1000 நரம்பு வரை இந்த யாழில் இருந்தன. குறிஞ்சி யாழ் (வில் யாழ்) போன்ற ஐந்திணைக்குரிய யாழ்கள் அந்தந்தப் பகுதி மக்களுடைய மனநலம் வளர்க்கத் தக்க யாழின் வடிவமைப்பு (design) அமைந்திருந்தது. இதைக் கொண்டு சங்கத் தமிழரின் கலைநுகர்ச்சிக்கு விஞ்ஞானப் பூர்வ மான விளக்கமும் சிறப்பும் காணப்பட்டதை அறியலாம். பேரியாழ், சிறியாழ் போன்றவை சங்க காலத்தில் காணப் பட்டன.

IV. **இசைக் கலைஞர்கள் :** மொழியில் கிடைக்கும் நுண்ணு ணர்வை இசையாகவும் வெளிப்படுத்திய சங்க கால இசை வல்லுநர்கள் ஊர் ஊராகச் சுற்றியலைந்து கலைவாழ்வை நடத்திய பாணரும் விறலியருந்தான் என்றறிந்தால், அந் நாளைய கலை நுகர்ச்சியின் மக்கள் வழி மதிப்பை உணர முடிகிறது. இசை நாட்டுக்குரிய பொதுச் சொத்தாகக் காணப்பெற்றது எனலாம். ' பாடல் ஓர்ந்தும், நாடகம் ஓர்ந்தும் ' எனச் சோழர்களின் கலை வாழ்வைச் சித்தரிக்க வந்த பட்டினப்பாலை (வரி 21—22) கூறுகிறது. பாணன் பாட, அவர்தம் துணைவியர் விறலியர் நாடகம் என்ற நடனஞ்செய்ய, கரிகாலன் போன்ற தமிழரசர்க ளின் அவைக்களங்கள் இசைக்கலையை வளர்க்கின்ற கலைப் பண்ணைகளாகவே காலமெல்லாம் காட்சி அளித்தன.

## நடனக் கலையும் நாடகக் கலையும்
## (Dance and Drama)

கலை வளர்த்த சங்கத் தமிழர்கள் பரிபாடல், சிலப்பதிகாரம் போன்ற இலக்கியங்களை இசை வடிவாக்கி அனுபவித்தார்கள். ஒலிச்சுவையைச் சாஸ்திர பூர்வமான இசையாக்கி ஒளிச்சுவையை அங்க அசைவுகளில் நடனமாகத் தேக்கி இரண்டும் சேர்ந்த நாடகத்தை இன்பியல் சுவையாக அனுபவித்த சங்கத் தமிழர்க ளின் கலைநுகர்ச்சியைப்பற்றி இலக்கியங்கள் வாயிலாகத்தான் பெருமளவிற்குத் தெரிந்துகொள்கிறோம். நடனக் கலையோடு கூடிய இசை, நாடக நுட்பங்களைச் சிலப்பதிகாரத்தின் அரங் கேற்றுக்காதை கூறுகிறது. செல்வச் செழிப்புள்ள சோழநாட்டுப் புகார் நகரில் நிகழ்ந்த இந் நிகழ்ச்சி சோழர்களின் சமூகவாழ்க்கை யின் கலைநுகர்விற்கான குறியீடுகளையும் தெளிவுற விளக்கும். சங்க கால நடனக்கலையைச் சிலப்பதிகாரமும் அதனுடைய உரை யாசிரியரான சோழநாட்டு அடியார்க்கு நல்லாரும் சித்தரிப்பதைத் தழுவிப் பின்வருமாறு விளக்கஞ்செய்யலாம் :

I. **நடன வகைகள் :** சங்கத் தமிழரால் கூத்து என்றழைக்கப் பெற்ற நடனம் அகக்கூத்து, புறக்கூத்து என்ற இரு வகைப்படும். வடமொழியில் நிருத்தியம் என வழங்கப்பட்ட நாட்டிய வகையைச் சார்ந்தது இந்த அகக்கூத்து எனலாம். ஆழமான கருத்துக்களை நடன முகபாவனைகளில் வெளிப்படுத்துவதுதான் இதனுடைய தனிச்சிறப்பு ஆகும். இரண்டாவது வகைக்குரிய புறக்கூத்து வடமொழியின் நிருதத்திற்குச் சமமானது. அழகுத் தோற்றத்தை வெளிப்படுத்துகின்ற நடனமுறையான புறக்கூத்தில் 14 வகைப் பாடல்கள் இணை சேர்ந்து பொலிவு பெறும்.

II. **நடன முறைகள் :** (1) ஒரு கைகொண்டு நடன பாவங்களை விளக்கினால், அது பிண்டி எனப்படும். இதில் 28 வகை உண்டு. (2) இரு கரங்கள் கொண்ட 'பிணையல்' முறையில் 24 வகை காணப்பெற்றன. (3) கருத்து வெளிப்பாடு நிகழ்கின்ற நடன அமைப்புக்குத் 'தொழிற்கை' எனப் பெயருண்டு. பிண்டி, பிணையல் இருபெரு வகைகளின் உள் வகைகளைச் சேர்த்து 52 வகைகளையும் தன்னுள் அடக்கியது இது. (4) அழகு-வெளிப்பாடு மட்டும் கொண்ட எழிற்கை என்ற நடன அமைப்பில் 13 வகைகளே காணலாம்.

III. **நாடகப் பாங்கில் நடனங்கள் (Opera) :** சிவன் திருமால் போன்ற கடவுளரின் புராண நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கின்ற வகையில் ஆடல் பாடலோடு நாடகப் பாங்கில் நடனங்கள் பின் வருமாறு நிகழ்ந்தன: (1) அல்லியம் (2) கொடு கொட்டி (3) குடைக் கூத்து (4) குடக் கூத்து (5) பாண்ட ரங்கம் (6) பேடியாடல் (7) மல்லாடல் (8) துடியாடல் (9) கடையம் (10) மரக்காலாடல் (11) பாவையாடல். மேற்சொன்ன பதினொரு வகை ஆடல்களில் முதல் ஆறும் நின்ற நிலையில் நிகழ்த்தப்பட்டன. மீதியுள்ள ஐந்து ஆடல்களும் நிலத்தில் படிந்து வீழ்ந்து ஆடும் வகையைச் சார்ந்தன.

IV. **கூத்து வகைகளும் நாடகப் பாணியும் :** பார்வையாளரின் அறிவுத்தரம், சுவைத்திறம் ஆகியன கொண்டு நாடகப் பாங்கு நடனங்களைப் பின்வருமாறு நிரல்படுத்தலாம்: 'அ' பகுதியிலுள்ளவை அரசர் போன்ற அறிவிற்சிறந்தோர் பார்க்கத் தகுதி பெற்றவை. 'ஆ' பிரிவிலுள்ளவை ஏனையோருக்கு உரியன. ஒரே நடன வகை இரண்டு தரங்களில் காணப்பட்டதைக் குறிக்கின்ற முறையில் அவை எதிரெதிராகக் கொடுக்கப்பட்டுள்ளன.

| அ | ஆ |
|---|---|
| 1. சாந்திக் கூத்து | 2. விநோதக் கூத்து |
| 3. குரவைக் கூத்து | 4. வரிக் கூத்து |
| 5. வசைக் கூத்து | 6. வரிசாந்திக் கூத்து |
| 7. தமிழ்க் கூத்து | 8. ஆரியக் கூத்து |
| 9. தேசக் கூத்து | 10. மார்க்கக் கூத்து |
| (தூய தமிழ் வழி) | (ஆரிய வழி) |

வரிக் கூத்தில் கண்கூடு வரி, கானல் வரி, ஊர் வரி, புற வரி, கிளர் வரி, தேர்ச்சி வரி, காட்சி வரி, எடுத்துக் கோள் வரி ஆகிய எண் வகை நாடகயியலுக்குரிய அமைப்புகள் காணப்பெற்றன. கோவிலில் கூத்தம்பலமும், அரண்மனையில் கூத்தப் பள்ளிகளும் நடத்தப்பட்டன. நாடக அரங்குகளில் திரைச்சீலைகளான (Scenes) எழினிகள் ஒரு முக எழினி, பொருமுக எழினி, கரந்து விரல் எழினி கூத்தியலுக்கு வனப்பு ஊட்டின.

V. **இதர கூத்து வகைகள் :** மற்றைய கூத்துகளில் நோக்கு போன்றவை ஓயில் போன்ற தனிச் சுவை நலங்கொண்டு ஏற்பட்டவையாகும். அவை யாவன ; (1) **வசை :** விநோதக் கூத்து என்றும் அழைக்கப்பட்ட இக் கூத்தில் நையாண்டியும் நகைச் சுவையும் இடம் பெறும். இக் கூத்து அரசர்க்கு முன்பு நடத்தப்படுகின்ற வேத்தியல் என்றும், பாமரர்க்கு உரிய பொது வியல் என்றும் இரு வகைப்படும். (2) **நோக்கு ;** பெருமிதம், நேயம், மோக மயக்கந்தரும் ஓயில் போன்ற பாவங்களை எடுத்துக் காட்டுகின்ற நடன வகை. (3) **குடம் :** தலையில் தண்ணீர்க் குடந்தாங்கி நடனஞ்செய்வது. (4) **தோற்பாவை :** தோலால் ஆகிய பொம்மலாட்டம். (5) **களிநடம் :** கழைக் கூத்தாடித் தொழிலாளர் கயிறுகளின் மேல்நின்று ஆடுவது.

VI. **நடனக் கலைஞர் ;** காதல், போர்க்கள வெற்றி போன்ற வற்றைப்பற்றிய குரவை நடனங்களில் எட்டு, ஒன்பது பேர் காணப்பட வேண்டும். சங்கத் தமிழர்களின் கலை உணர் வில் இத்தகைய மரபுகள் மலிந்து காணப்பட்டன. நடனத்தை ஆடல் மகளிர் ஐந்து வயதிலிருந்து ஏழு ஆண்டுகள் வரை தொடர்ந்து ஆசானிடம் கற்றுக வேண்டும். சிலம்பக் கூடத்தில் 'தண்டியம் பிடித்தல்' (initiation) என்ற சம்பிரதாயப்படி முறை யாக நடனம் கற்றுக்கொண்டு 'தட்டுக் கழி' என்ற தாளக்குச்சி யின் தாள நியதிகளின்படி நடனமாடத் தெரிந்த பன்னிரண்

டாண்டு வயதுடைய இளமை எழில் நலங்கொண்ட குமரியாக அரசர் முன்பு அரங்கேற்றம் செய்த பின்புதான் நடன வல்லுநர் என்ற அந்தஸ்தைச் சங்க கால ஆடல் மகளிர் பெற முடிந்தது. யாழ், குழல், மத்தளம் போன்ற இசைக் கருவிகளை மீட்டத் தெரிந்த ஆடல் மகளிருக்கு வேற்று நாட்டாரின் மொழிகளில் பாடல்கள் இயற்றவும் தெரிந்திருக்க வேண்டும். ஆடல் மகளிருக்கு மட்டு மல்லாமல் அரசர் உட்பட மற்றெல்லோருக்கும் நடனக் கலை உரியதுதான் என்பதைச் சோழன் கரிகாலனின் மகள் ஆதிமந்தி யின் ஆடல் திறனைக் கொண்டு நிறுவலாம். இசையாளன், குழலோன், யாழோன், மத்தளக்காரன் போன்றவர்களையும் சேர்த்துதான் நடனம் நடைபெறமுடியும் (composite performance) என்றளவில் நடனக்கலையின் நிழலில் (concert) மற்றைய கலைக ளான இலக்கியம், இசை போன்றவையைச் சார்ந்தோரும் வளர்த் தனர்.

VII. இந்தியாவின் பரத நாட்டியம் முதலில் தோன்றிய சங்கத் தமிழகம்; நடனக் கலையின் வெவ்வேறு நிலைகளைத் தன்னுள் அடக்கிய பரத நாட்டியக் கலை சங்கத் தமிழகத்தில்தான் முதன் முதலில் தோன்றியது. இதுபற்றிக் கி.பி. 2ஆம் நூற்றுண்டுக்குரிய சிலப்பதிகாரம் பேசுகிறது. வடமொழியாளர் நந்திகேஸ்வரர் இயற்றிய 'அபிநய தர்பண' என்ற நூலும், பரதன் என்பவர் வடமொழியில் எழுதிய 'நாட்டிய சாஸ்திரம்' என்ற நூலும் சிலப்பதிகாரத்தில் காணப்படும் அடிப்படையான கருத்துகளைக் கருவாக வைத்துக்கொண்டு எழுதப்பட்டவை எனலாம்.[92] கி.பி. 3ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட நாட்டிய சாஸ்திர நூலில்[93] கி.பி. 2ஆம் நூற்றுண்டுக்குரிய சிலப்பதிகாரத்தில் காணப்படும் நடனக்கலைச் சம்பந்தமான கருத்துகளின் மறு பதிப்பைப் புதிய மெருகோடு பார்க்க முடிகிறது; அந் நூலின் ஆசிரியர் பரதன் 'தட்சிண இசையும் நடனமும்' என்று தெளிவாகக் கூறுவது[94] தமிழ் மூலத்திற்கு ஆதாரமாகும். நடனமிடும் திரிசூலச் சிவன் என்ற இறைத் தத்துவங்காட்டும் மண்ணோட்டுப் பதிப்புகளையும், நடன மாதரின் சிலைகளையும் கொண்டிருந்த சிந்துவெளி நாகரிகத்தின் வழித்தோன்றல்களாக அமைந்திருந்த தென்ன கத்துச் சங்கத் தமிழகத்தார்தான் இந்தியாவின் உயிர்ப்புக் கலைகளுள் சிறந்து விளங்குகின்ற நடனக்கலையை இந்தியாவில்

92 V.P. Raman—'The Music of the Ancient Classical Tamils'—முதல உலகத் தமிழ் மாநாடு மலர்—II—1966—p. 390

93 M. A. Mehendale—'The History and Culture of the Indian People'—Vol. II—Bhavan's Publication—1951—p. 270

94 Bharata's Natya Sastra—Chapters IV, V

தோற்றுவித்தவர்கள் என்ற பெருமைக்கு உரியவர் ஆவர். சங்க காலத்தின் முடிவில்வந்த களப்பிரரின் ஆட்சிக்குப்பின்பு தோன்றிய பல்லவர் சோழர் ஆட்சிக் காலங்களில் நடனக் கலையை அரசாங் கமே நேரடியாகப் போற்றிவளர்த்தது. இத்தகைய உயரிய நிலையை மத்திய காலத்தில் (Middle Ages) நடனக்கலை பெறு கின்ற அளவிற்கு அக் கலைக்கான சங்க கால மரபுகள் (களப்பிரர் காலத்தில் நைந்துபோன நிலையிலுங்கூட) நிறைவான வலிமை யோடு வளர்ச்சிக் கருவின் திறன் கொண்டு வளர்ந்தன என்பது தெளிவு.

## II சிற்பம், ஓவியம்

**சிற்பக் கலை :** சங்க கால நடுகற்களில் உயிர்த்தியாகஞ் செய்த வீரனுடைய பெயர் மட்டும் பொறிக்கப்பட்டது ; உருவஞ் செதுக்கப்படவில்லை. ஆகவே, சங்க நாளைய சிற்பக்கலையின் தொடக்கக் கால வளர்ச்சி நடுகற்களில் காணப்படுகிறது என்பது பொருத்தமல்ல. சிலப்பதிகாரம் சொல்லுகின்ற படிமங்கள் புத்தருக்கும், இந்திரனுக்கும் இருந்ததை மணிமேகலை போன்ற மற்றைய நூல்கள் வழிமொழிகின்றன. சுண்ணும்பு, களிமண் போன்ற கடினமற்ற அழிவுக்குரியப் பொருள்களைக் கொண்டு மண்ணீட்டாளர் என்றழைக்கப்பட்ட சங்க நாளைய சிற்பக் கலைஞர்கள் பாவை (terrocota) போன்றவற்றைச் செய்தனர். சங்க நாளையச் சிற்பமும் ஓவியமும் அறவே அழிந்துபட்டாலும்[95] இலக்கியச் செய்திகளின்படி அவற்றின் தரம் உயர்ந்துதான் காணப்பட்டிருக்க வேண்டும். சங்க காலத்தில் கொல்லர்கள் ஆயுதங்களைச் செய்து குவிக்கின்ற அளவிற்கு இரும்பின் பயன் தெரிந்திருந்ததை ஔவையார் குறிப்பிடுகின்ற அதியமானின் படைக்களக் கிடங்கைக் (armoury) கொண்டு புலப்படுத்தலாம்.[96] கி. பி. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த உரோமானியர்கள் (தங்களுடைய இந்தியத் தொடர்பை லாம் சாகஸ் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட உலோகப் பெண் சிலையைச் செய்த முறையில்) வெளிக்காட்டினுர்கள்.[97] சோழ நாட்டு அரிக்காமேட்டில் உலோகத்தில் சிலை செய்யத் தெரிந் திருந்த உரோமானியர் குடியேற்றம் (colony) காணப்பட்டது என்ற போதிலும், ஆயுதக் கிடங்குகளை உண்டுபண்ணுகின்ற அள விற்கு உலோக வேலை தமிழகத்தில் நடந்து வந்த அந் நாளில், அந்த உரோமானியர்களிடமிருந்து சங்கத் தமிழர்கள் உலோக

95 Vincent A. Smith—'The Oxford History of India'—1958—P. 445

96 புறம்—95

97 K. A. N. Sastri—' Cholas '—1955—P. 87

வார்ப்புச் சிற்பக் கலையைக் கற்றுக்கொள்ளாதது வரலாற்றுப் புதிராகவே இருக்கிறது. நல்லிணக்கமான தமிழக மன்னர்கள் ஆண்ட தமிழகத்தோடு தொடர்புகொண்ட கி.மு. 3ஆம் நூற்றுண்டுக்குரிய அசோகனின் கட்டளைக்கிணங்க சாஞ்சி, சாரநாத் போன்ற இடங்களில் கல்லில் சிற்ப வண்ணங்களைச் செதுக்கி வைத்த மகதத் தச்சர்களின் வழித்தோன்றல்கள் சோழன் கரிகாலன் கி.பி. 2ஆம் நூற்றுண்டில் வளமோடு ஆண்ட தமிழகத்தில் வேலையிலமர்த்தப்பட்டபோது மகத நாட்டிலுள்ளதைப் போலக் கற்சிலைகளோ கல்லில் வேலைப்பாடோ செய்யாமல் போனது மற்றொரு வரலாற்றுப் புதிர் எனக் கொள்ளல் தகும்.

**சங்க காலத்தில் ஓவியங்கள்**

இலக்கியத்திற்குச் சமமான அந்தஸ்தை ஓவியக் கலைக்குச் சங்க மக்கள் அளித்தார்கள் என்பதற்குச் சான்றாகச் சங்க இலக்கியங்களில் ஏராளமான செய்திகள் அந் நாளைய ஓவியக் கலையின் வளர்ச்சி பற்றிக் காணக் கிடைக்கின்றன. சங்க காலத்தைச் சேர்ந்த ஓவியம் என்று உறுதியாகக் கூறப்படுகின்ற ஓவியம் எதுவும் காணப்படாமையால், இலக்கியச் செய்திகளைக் கொண்டுதான் அந் நாளைய ஓவியங்களின் தரத்தையும் வளர்ச்சியையும் அறிந்துகொள்ள இயலுகிறது.

**I ஓவியக் கலைஞர்**

1 ஓவம், ஓவு, சித்திரம் என்றழைக்கப்பட்ட ஓவியத்தை வரைந்த கலைஞர்கள் சங்கச் சோழ நாட்டில் அதிகம் காணப்பட்டார்கள். அவர்களைக் கண்ணுள் வினைஞர் எனச் சிலம்பும் (V—30), வித்தகர் என மதுரைக்காஞ்சியும் அழைக்கின்றன. விஞ்ஞான முறையில் செயல்படாமல் ஓவியம் வரைதலை ஒருவகை ஆத்துமச்சிலிர்ப்பாக அவ்வோவியர்கள் மேற்கொண்டார்கள் என்பதை ‘ ஓவியன் உள்ளத்து உள்ளியது வியப்போன் ’ என்ற பரிபாடலின் சித்தரிப்பினால் அறிந்துகொள்ளலாம். சமூகத்தில் மேல் நிலையாளராகவோ இவர்கள் மதிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை நல்லிக்கோடன் என்ற குறுநில மன்னன் ஓவியர் குடியிற்பிறந்தவன் என்ற சிறுபாணாற்றுப்படைச் (பாடல்—122) செய்தி கொண்டு நிறுவ முடியும்.

2. சங்க நாட்களில் ஆண் பெண் இருபாலாரும் ஓவியக் கலையை நேரடியாகப் பயின்று ஓவியங்கள் படைத்து வாழ்க்கை நலன்களில் ஒன்றாக அக் கலையை அனுபவித்துச் சுவைத்தார்கள். சான்றாக, (அ) சோழநாட்டுத் தலைநகர் பூம்புகாரின் கலைவளர் மகளாகத் தோற்றமளித்த மாதவிக்கு ஓவியக் கலையும் தெரிந்து

இருந்தது. (ஆ) மடலேறுதல் என்ற வழக்கத்தை மேற்கொண்டு தாம் விரும்பிய மகளிரை அடைய விரும்பிய இளைஞர்கள் தமது காதலுக்குரிய மகளிரைப் போன்ற ஓவியத்தைத் தம் கைப்பட எழுதி, அதைச் சுமந்து சென்றார்கள். இவ்வாறு இளைஞர்களும் ஓவியந்தீட்டுகின்ற வல்லமையைப் பெற்றிருந்தார்கள் எனலாம்.

## II ஓவிய சாஸ்திரம்

**(அ) நூல் :** ஓவியஞ்சம்பந்தமான நூல்கள் பல பண்டைத் தமிழகத்தில் பயிரிடப்பட்டன என்பதை 'ஓவியஞ் செந்நூல் வரைநூற் கிடக்கையும்' என்ற மணிமேகலை (II—31) உரை கொண்டு நிறுவலாம்.

**(ஆ) சாதனங்கள் :** மணல், சுண்ணம் சேர்ந்த கலவையை இரண்டு அடுக்குகளாக ஒன்றன்மேலொன்ருகச் சுவரின்மேலே தடவி, அதன்மேல் ஓவியம் எழுதினார்கள். இந்த ஏற்பாட்டைச் சுதை என்று வழங்கினார்கள். துகிலிகை (brush), வட்டிகை (plate) போன்றவை ஏனைய சாதனங்கள் ஆகும்.

**(இ) நிறம் :** மஞ்சள், நீலம், பொன்னிறம் போன்ற நிறங்களில் பெருவாரியான ஓவியங்கள் படைக்கப்பட்டன. வீட்டுச் சுவர்களில் செம்மண் பூசுகின்ற பழக்கம் ஓவியத்தின் நிறங்களைக் கட்டுப்படுத்தியது எனலாம்.

## III ஓவியம் வரையப்பட்ட இடங்கள்

'ஓவத்தன்ன கோபச் செந்நிலம்'[98] என்று உலகத்தையே ஓவியப் பார்வையில் நோக்கிய சங்கப் புலவர்கள் மதுரைத் தெருக்கள் ஓவியம் போன்றிருந்தன[99] என்று சொல்வதினின்றும் உலகமும், ஊரும், தெருவும் ஓவியங்களுக்கான இலக்குகளாக விளங்கியது புலப்படும். 'ஓவத்தன்ன வினைபுனை நல்இல்' என்றமைந்த[100] பேரில்லச் சுவர்களில் கண்கவர் ஓவியங்கள் எழுதப் பெற்றிருந்தன. பொருள்வழிப் பண்பாடு (material culture) எனச் சொல்லப்படும் சங்க கலாசாரத்தில் கடவுள் உணர்வுக்குக் கணிசமான இடமுண்டு என்பதை உணர்த்துவது போலச் சங்க காலக் கோவில்களிலும் கடவுளரின் தோற்ற உருவங்கள் எழுதப்பெற்றிருந்தன. 'வரந்தர எழுதிய ஓவிய

98 அகம்—54

99 மதுரைக்காஞ்சி—365—366

100 அகம்—98

மாக்கள்' என இதுபற்றி மணிமேகலை[101] குறிப்பிடுகிறது. திருப்பரங்குன்றத்து ஓவியங்கள் இதுபற்றிய கருத்துகளை மேலும் வலியுறுத்துகின்றன. கடவுளரின் கோயில்களைப் போல நிலைபெற்றிருந்த அரசர்களின் மாடங்களில் எழுதப்பட்ட ஓவியங் களில்கூடக் கடவுள் தத்துவத்தின் சாயல் காணப்பட்டது. பாண்டிய அரசியின் மாளிகையின் மேற்கூரையில் மேஷ ராசி சூரிய சந்திரர் போன்ற வானசாஸ்திர விளக்கங்களோடு கூடிய ஓவியம் வரையப்பெற்றிருந்தது.[102] புகார் நகர நாட்டிய அரங்கத்திலும், அவ்வரங்கத்தில் காணப்பட்ட எழினி என்ற திரைச்சீலைகளிலும் ஓவியங்கள் காணப்பட்டன.[103] புகார் நகரத்துப் பளிக்கறையிலும் அவந்தி நாட்டுக் கைவினையாளர் கட்டிய சித்திர மண்டபத்திலும் காணப்பட்ட தமிழ் ஓவியங்கள் புகார் நகரின் கலைவாழ்வைப் புலப்படுத்தின. பொது மக்களுக்கு உரிய கலையாகவும் ஓவியம் விளங்கியதைப் பொது மண்டபத்தில் தீட்டப்பட்டிருந்த ஓவியங்கொண்டு புலப்படுத்தலாம்.[104] சங்க காலத்தில் வாழ்க்கை நலன்கள் யாவும் பெருங்குடியாளர்க்குத்தாம் அமைந்திருந்தன. அந் நிலையில் கோவில்களும், பொது மண்டபங் களும் அத்தகைய தனியார் ஆதிக்கத்தை மாற்ற முயற்சித்தன எனலாம். ஆனாலும் பெருங்குடியாளர்தாம் கலையைப் பல நிலை களில் சுவைத்தார்கள். சான்றாக. ஆடையில்கூட ஓவியந் தீட்டிப் பார்க்கின்ற அந் நாளைய கலைச் சுவையைப் புகார் நகரத்து மாதவி ஓவியந்தாங்கிய ஆடைகளை அணிந்து அனுபவித்தாள்.

## IV சங்ககால ஓவியப் பாணி (Style of Paintings)

வாழ்க்கைக் கலைக்கு உறுதுணையாகச் சங்கக் கலைகள் பயன் பாட்டுத் தத்துவத்தை (utilitarian concept) அடிப்படையாகக் கொண்டு காட்சி அளித்தன. தன்னுணர்வு காலத்திற்கேற்ப (Heroic Age) அவை இயற்கை வர்ணனையில் சிறந்து விளங்கின. சங்க காலத்து ஓவியக் கலையும் இந்த நியதிக்கு உட்பட்டுத்தான் காணப்பட்டிருக்க வேண்டும். ஓவியத்தில் காணப்பெற்ற செடி கொடிகள்[105] வீடுகளின் அழகுத் தோற்றத்திற்கு மேலும் அழகை ஊட்டின. மானிடரைப்பற்றிய சித்தரிப்பில் உடல் நெகிழ்ச்சி (dynamics), முகபாவனை (expression), அங்க அசைவு நிலை (movement) ஆகிய நலன்களைக்கொண்டு ஓவியர்கள்

101 மணிமேகலை—XXVIII

102 நெடுநல்வாடை—வரி 159—163

103 சிலம்பு—III—வரி 109—111

104 அகம்—136

105 சிலம்பு—VII—வரி 15

தங்களுடைய திறமையைக் காட்டினார்கள் என எண்ண இடமுண்டு. செல்வத்தைக் குறிக்கும் இலட்சுமியை வணங்கி நிற்கும் யானைகளையும் அல்லி மலர்களையும் முன்னேக்கு நிலையிலாவது (frontal pose), பொது நோக்கு தோற்றத் திலாவது (profile) ஓவியர்கள் சித்தரித்து இருக்க வேண்டும். இலக்கியத்தில் புலவர்கள் காட்டிய பார்வை நலத்தை (observation) ஓவியர்களும் தங்களுடைய உயிர்த்துடிப்பான படைப்புகளில் பெய்து காட்டிய நிலையில் ஓவியக்கலை மக்களுடைய உள்ளுணர்வாக விளங்கியது; அவர்களுடைய இன்பியல் நுகர்ச்சியை (hedonism) நேரடியான பதிப்பில் (monistic objectivity) வெளிப்படுத்தியது. அதற்கான கலையியல் மரபுகள் (traditions of aesthetics) சங்க காலத்தில் பல்கி நிலைபெற்றுக் காணப்பட்டன.

## III. சங்க காலக் கட்டடக் கலை

கடல்வழி வணிகத்தின்மூலம் உரோமப் பேரரசு போன்ற மேற்கத்திய நாடுகளோடும், சீனம் போன்ற கீழ்த்திசைப் பகுதி களிலும் சங்கத் தமிழர்கள் கொண்டிருந்த தொடர்புகளினால் சங்க நாளையக் கட்டடக் கலை அவ்வளவாக மாற்றமடையவில்லை. சுண்ணும்பு, சுட்டசெங்கல் முதலியவை கொண்டு கட்டப்பட்ட கட்டடங்கள் எல்லாம் தாளுகவே அழிவுற்றன; ஓயாது தங்களுக்குள் போர் புரிந்த தமிழர்கள் தங்களுக்குள் அமைந்த எதிரிகளின் கட்டடங்களைத் தீ வைத்தும் இடித்துத் தரைமட்ட மாக்கியும் அழித்தார்கள். மரங்களைக் கொண்டு கட்டடங் கட்டுவது பண்டைத் தமிழர்களுக்குக் கைவந்த கலையாகும். மரங்கள் காணப்பெருத எகிப்து, சைப்ரஸ் (பாபிலோனியா) ஆற்றுப்படுகை நாடுகளில் குறிப்பாகப் பாபிலோனியாவின் தலைநகரான 'ஊர்' என்பதில் தமிழகத்துத் தேக்கு மரங்கள் தமிழ் நாகரிக முறைப்படி துலாக்கட்டைகளாக வீடு கட்டுவதில் பயன் பட்டிருப்பதை ஹியூவிட் (Hewit) போன்ற ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்து உள்ளனர். பயன்பாட்டு முறை (utilitarian typicality), பருண்மை (massiveness), செல்வத்தைப் பறையறை விக்கும் ஆடம்பரம் (vanity fair) ஆகிய குண நலன்களைக்கொண்டு சங்க நாளையக் கட்டடக் கலை விளங்கியதால், கலைக்கருவூலங் களாக அவை பேணி வைக்கின்ற எண்ணம் அந் நாளையத் தமிழர்களுக்கு வாய்த்திருக்கவில்லை. ஒரு சிறிது கலைத்தன்மை கொண்டவை போரின் வன்கண்மைகளுக்குப் பலியாயின. புகார் நகரத்தின் அழிவில் சோழ நாட்டினுடைய கட்டடக் கலையின் மலர்ச்சிக்காலத்துக்குரியவை (Flower of Chola Architecture) அழிவுற்றன எனலாம். கி பி. 150ஆம் ஆண்டளவில்

ஆண்ட சோழன் கரிகாலன் கட்டிய இயற்கைத் துறைமுக நகரான புகார் அவனுடைய மகன் பெருநற்கிள்ளி காலத்தில் (கி. பி. 180-லிருந்து கி.பி. 225-க்குள்) அழிவுற்ற போது, 50 ஆண்டுக்கால மேம்பாட்டு வாழ்வில் ஏற்பட்ட கடல் வணிகத்தின் பெருத்த வருவாயின் எதிரொலியாக எழும்பி நின்ற புகார் நகரக் கட்டடங்கள் யாவும் மறைந்தன. செல்வமும் வெளிநாட்டுத் தொடர்பும் கொண்ட அந்த ஐம்பது ஆண்டுக்காலப் பகுதிக்குரிய கட்டடங்கள் பழம்பதிகளான உறையூர் போன்ற இடங்களிலுள்ள கட்டடங்களைவிட வேறுபட்டும் மேம்பட்டும் காணப்பெற்றிருக்க வேண்டும். நடைபெற்று வருகின்ற அகழ்வாராய்ச்சிகள் இந்த உண்மையை நிலைப்படுத்துகின்ற வாய்ப்பு தற்போது காணப்படுகிறது.

சங்கத் தமிழகத்தின் கட்டடக்கலை வளர்ச்சியில் அந் நாளைய கோவில்கள் எல்லாம் கற்றளியாக மாறுகின்ற பரிணாமம் தொடக்க நிலையில்கூடக் காணப்பெறவில்லை. பல்லவர்களின் கலைஎழுச்சிக்குரிய காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டில்தான் சுட்ட செங்கல்லும், சுண்ணாம்பும், மரமும் அதிகமாகப் பயன்படுத்தப் பட்ட கோவில்களும் கூடங்களும் பெரும்பாலும் இருந்தன. காலப் போக்கில் அவை அழிந்துபட்டன. சங்க காலத்தை அடுத்த கி. பி. நான்காம் நூற்றாண்டில் வட இந்தியாவில் தோன்றிய குப்தர்கள் காலத்திலும் பின்வந்த ஹர்ஷ சக்கரவர்த்தி (607-647) வாழ்நாளிலும் கட்டப்பட்ட கோவில்கள் அவ்வளவாக இன்று காணப்பெறவில்லை. இந்து மதத்தின் மறுமலர்ச்சிக்கு இலக்கியம், கல்வி போன்ற கலைகளின்மூலம் ஒப்பரிய வளர்ச்சியைக் கொடுத்துள்ள குப்தர் காலத்தில் கட்டடக் கலை அடைந்த வளர்ச்சிப்பற்றி நாம் நேரடியான சான்றுகளோடு அறிய முடியாததற்குக் காரணம் என்ன? குப்தர்களும் ஹர்ஷரும் அழிவுறத்தக்கதான மரம், சுதை போன்ற மூலப்பொருள்களில் அவர்களுடைய கட்டடங்களை உருவாக்கிய காரணத்தால் இந்து சமயத்தின் எழுச்சியின் கொடு முடியான குப்தர் காலத்தியக் கோவில்களும், பௌத்தமும், சிவமதமும் பின்னி வளர்ந்த கலா சாரப் பொதுமை மலர்ந்திட்ட ஹர்ஷர் காலத்தின் கட்டடங்களும் இன்று இடிபாடாகக்கூடப் பெருமளவிற்குக் காணப்பெறவில்லை என்று அறிஞர் கூறுவர். இதே போன்றுதான் சங்க காலத்தில் கட்டப்பட்ட கோவில்கள் காலப்போக்கில் அழிந்துபட்டன. கிரேக்கத்துக்கு ஒரு பார்தியன் கோயில் எனவும், உரோம் நகரத்துக்கு ஒரு கொலீஸியம் எனவும் அவற்றின் பண்டைக் காலம் அந் நாடுகளில் இன்றும் உயிர்க்கின்ற சிறப்பைப் போன்று தமிழகத்தின் பழம் பெருமையை எடுத்துச் சொல்ல இவ் வகையில் பழங்காலக் கட்டட உருவத்தில் ஒன்றும் இல்லை.

புகார் நகரத்தின் மாட மாளிகைகள், துறைமுகத்தின் கப்பல் நின்ற துறைகள் எல்லாம் தமிழ் இலக்கியத்தில் உயிர்த்து வாழ்கின்ற சொற்சித்திரங்கள் என்ற அளவில் இருந்த நிலை இப்போது மாறி உள்ளது. அவ்விலக்கியச் செய்திகள் அண்மையில் நடைபெற்றுள்ள அகழ்வாராய்ச்சியின் விளைவாக விஞ்ஞானப் பூர்வமான உண்மைகளாக உருக்கொண்டுள்ளன. பொருள்வழிப் பேராக்கம் (Material Progress) கொண்ட பூம் புகாரின் சிறப்புகளாக, 'பாபிலோனியத் தொங்கு தோட்டங்களாக' மாறி நம் கண்முன்னே அவை தவழ்கின்றன. மௌரியப் பேரரசன் அசோகனுடைய பாடலிபுத்திரத்தின் அரண்மனையினுடைய உடைபாடுகளைக் கண்டு கி. பி. 399-லிருந்து 414 வரை இந்தி யாவுக்கு வந்த சீன யாத்திரிகர் பாஹியான் வியந்து அரூபமான தேவதைகள்தான் இவ்வரண்மனையைக் கட்டியிருக்க வேண்டும் என்று பாராட்டுகிறார். அசோகனுடைய பாறை எழுத்து செதுக்குச் சிற்பங்களும் தூண்களும் போன்று கரிகாலனுக்குரிய அல்லது நலங்கிள்ளியினுடைய பெயர் சொல்லும் கட்டடங்களோ தூண்களோ தமிழகத்தின் வரலாற்றைச் சொல்லி நிற்கவில்லை. சமுத்திரகுப்தனுடைய அலகாபாத் இரும்புத் தூணைப் போன்ற உலோகத்தூண் ஒன்றேனும் சோழர்களாலோ, சேர, பாண்டிய ராலோ அமைக்கப்படவில்லை. எகிப்தியரின் பிரமிடுகள் போன்ற கட்டடக்கலையின் காலத்தை வென்ற வளர்ச்சிப் பெருமிதம் சங்கத் தமிழகத்தில் கிடையாது. வின்ஸென்ட் ஸ்மித் கூறுவது போலக் கிரேக்கர்கள், பாரசீகர்கள் ஆகியோரின் செல்வாக்கிற்கு உட்பட்ட நிலையில் அசோகன் காலத்திய கட்டடக்கலையும் சிற்பக் கலையும் கற்களைப் பயன்படுத்தத் தொடங்கிய சிறப்பைப் பெற்றன. அசோகனுடைய தந்தை பிந்துசாரன் காலத்திலேயே 'வம்ப மௌரியர்' தமிழகத்துக்கு வருகை தந்தனர். பின்பு அசோகன் தனது கல்வெட்டில் நட்புரிமைக்குரிய சோழர் என்று குறிப் பிடுகிறான்.

இவ்வாறிருக்க கல்லில் கட்டடமோ சிற்பமோ செய்கின்ற கலை வட இந்தியாவிலிருந்து—ஏன் தமிழகத்திற்கு—குறிப்பாகக் கலை வளர்ந்த சோழ நாட்டுக்கு—வரவில்லை என்பது வரலாற்று விந்தை தான். அசோகனுக்கு முந்திய 1500 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த இதிகாசப் பாரதப்போரில் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்ற வள்ளன்மை சான்ற சேர மன்னன் போர்ப் படைகளுக்குச் சோறிட்ட வரலாற்றுத் தொடர்புடைய நாளிலேயே சோழ மன்னனும் தமிழகத்தில் இருந்திருக்க வேண்டிய தொன் மைக்கு உரிமையாளன்தான். இந் நிலையில் சுமார் 2000 ஆண்டுக் கால வட இந்திய தொடர்பைக் கொண்ட தமிழகத்திற்கு மௌரிய

நாட்டில் அசோகன் காலத்தில் தோன்றிய கற்சிற்பக்கலை பரவாமல் இருந்தது வரலாற்றுப் புதிராகத்தான் கொள்ளப்பட வேண்டும். பாடலிபுத்திரத்தின் கோட்டைச் சுவர்கள் மரத்தினுல் ஆனவை; தமிழகத்துச் சோழரின் நகரங்களின் கோட்டைகள் அரண்களாகப் பயன்பட்ட நிலையில் கற்களால்தான் உருவாக்கப் பட்டிருக்க வேண்டும். பரந்த கடலில் பெரிய கப்பல் நின்றதைப் போல, பச்சைப்பாயலாக விளங்கிய வயல் வெளியின் நடுவே கோட்டை விளங்கியதைப் புறநானூறு (238) கூறுகிறது.

கட்டடம் கட்டியவன் என்ற பெருமை இல்லாமல் கோட்டைகளை உடைத்த பேராண்மை பற்றிப் பெருமை கொள்கின்ற மனப்போக்கு சங்கச் சோழருக்கு இருந்த நிலையைத் 'தூங்கு எயில் எறிந்த இளஞ்சேட் சென்னி' பாராட்டப் படுவதினின்றும் அறிகிறோம். சங்க காலத்தில் நாம் காணும் இந்தப் பேரிழப்பிற்கு ஆக்க முறையில் ஈடு செய்தாற்போல விஜயாலயச் சோழர்கள் காலத்தில் காட்டு மலர்கள் பூத்தது போன்று எல்லா இடங்களிலும் சிற்பக்கலையின் செழுமை எல்லாம் தாங்கிய கோவில்கள் தோன்றின. குறிப்பாக, சோழ நாட்டில் இக் கோவில் எழுப்பிக்கும் கட்டடக்கலை நவீனகாலப் பொறியியல் வல்லார்க்குங் கூடச் சவால் விடுகின்ற அளவில் பெரும் வளர்ச்சியுற்றது. தஞ்சைப் பெரிய கோவில் விமான அமைப்பு இதற்குரிய சான்ருகும். இது விந்தையாக இன்றும் தலைதூக்கி நிற்கிறது. சங்கச் சோழரின் உறையூரும், புகார் நகரமும் இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சி களின் பயனுக உயிர்த்தெழுகின்ற வளர்ச்சிப் பருவத்தில் உள்ளன. ஏனென்ருல், புதைபொருளாராய்ச்சியாளர் நீருள் ஆழ்ந்த பூம்புகாரையும், அழிந்துபோன உறையூரையும் உயிர்த் துடிப்புடைய சோழத் தலைநகரங்களாக உருவாக்கி முழுமையான வரலாற்றைத் தருகின்றபோது இலக்கியத்தின் அடிப்படையில் இப்போது நமக்குத் தெரியவரும் நகரமைப்பு, கட்டடங்கள் போன்ற செய்திகளுக்குப் பெரிதும் ஆக்கம் ஏற்படும்.

**சங்க காலக் கட்டடக் கலை (Architecture) ; அதன் பரிணும வளர்ச்சி**

சங்க காலத் தமிழர்களின் இயற்கையோடியைந்த வாழ்வு அவர்களுடைய பொருளாதார வளர்ச்சியையொட்டிப் பரிணுமங் (evolution) கொண்டதை அத் தமிழர்களின் இருக்கைகளின் வளர்ச்சியைக்கொண்டு கணிக்கலாம்.

**மன்றம் மண்டபமாகியது :** வாகை மன்றம், வெள்ளில் மன்றம், இலஞ்சி மன்றம், பாவை மன்றம் என்பவை சங்க காலக்

கிராமத்திலுள்ள மரங்களின்கீழே கூடிய மக்கள் மன்றங்களைக் குறிக்கும். பொது மக்கள் கூடுகின்ற மரத்தடி மன்றங்களின் இடங்களின் பிற்கால வளர்ச்சியாகப் பட்டி மன்றம் என்ற கல்லா லாகிய கட்டுமானமும், பளிங்குக் கல்லாலாகிய பளிக்கறை மண்டபமும் [106] காணப்பட்டன.

**பரண் மாடமாகியது :** முல்லை (காடு) நில மக்கள் மரத்தி லமைத்த பரண்கள் பிற்காலத்திய மாடங்களாகின. புகார் நகரத்துப் பட்டினப்பாக்கத்து மாடங்கள் வரலாற்றுப் புகழ் வாய்ந்தவை. பாசறைகளையும் பாடி வீடுகளையும் பசிய இலைகள், முள்கள் கொண்டு அவ்வப்போது சிறுநகர் போன்று தோற்றமளிக்கின்ற வகையில் சங்கத் தமிழர்கள் அமைத்தார்கள்.

**குடிசை வீடுகள் பேரில்லங்களாயின :** பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் பெருமளவிற்கு மலிந்து காணப்பட்ட தமிழகத்தில் மனிதர்களின் வீடுகள் அந்தந்த நிலப்பகுதிகளைச் (முல்லை போன்ற திணைகளை) சார்ந்து காணப்பட்டன. முல்லையில் வரகு தாள்கள், பாலையில் ஈந்தின் ஓலை, நெய்தலில் தாழை, மருதத்தில் வைக்கோல் ஆகியவைற்ருல் வேயப்பட்ட குடிசைகள் ஏழைக் கான இல்லங்களாகத் தோற்றமளித்தன. பெருங்குடி மக்கள் வாழ்ந்த இடங்கள் பேரில்லங்கள் எனப்படும். அவ்வில்லங் களின் பக்கங்களில் திண்ணைகளும், உயர்ந்த வாயில்களும், பலகையினுலான புதவு என்ற கதவுகளும், மான் கண்ணினைப் போன்ற வடிவமைப்பும் மணிகள் தொங்கவிடப்பட்ட அழகுங் கொண்ட சாளரங்களும், மாட்டுச் சாணி போட்டு மெழுகப்பட்ட தரையும், சுட்ட செங்கற்களாலும் சுண்ணும்பாலும் கட்டப்பட்டுச் செம்மண் பூசப்பட்டு அதில் வரையப்பெற்ற பற்பல ஓவியங்க ளோடு சுவர்களும் ஒருங்கே காணப்பட்டன.

**சங்க நாளையக் கட்டடக் கலையின் தனிச் சிறப்புகளும் சிந்து வெளி நாகரிகமும்**

சங்கத்து மக்களுடைய உயர்வான நாகரிகத்தைப் பின் வரும் வேலைப்பாடுகள் வெளிப்படுத்துகின்றன :

1. மீன் வடிவமான அம்பணம் என்ற நீர்போக்குப் புழை மட்டப்பா போட்ட வீடுகளின் கூரைகளில் விழுந்த மழை நீரையெல்லாம் திரட்டி வெளியேற்றியது.

106 மணிமேகலை—IV—வரி—87

2. வீட்டினுள்ளிருந்து கழிவுநீரை வெளியேற்றுகின்ற புழை அங்கணம் என்றும், வீட்டு முற்றத்தில் காணப்பட்ட உயர் பீடத்திற்கு வேதிகை என்றும் அழைக்கப்பெற்றன.

3. வீட்டின் முன்பு பந்தல்களும், வீட்டைச் சுற்றி நந்த வனமும், பொருள்களஞ்சியங்களாகப் பயன்பட்ட கொட்டில்களும் காணப்பெற்றன. இவை போன்றவை சங்கத் தமிழர்களின் நாகரிகத்தைப் பொருள்நிலைக் கலாசாரப் பகுப்பிற்குரியதாகக் (material culture) காட்டும். ஜன்னலில்லாத வீடுகளைச் சுற்றிலும் திண்ணையில்லாத நாலுபக்கச் சுவர் மூலைகளில் வளைவுகள் இட்டு வேற்றூர் வந்து உட்காருவதற்கு இடங்கொடாத வாறு அமைக்கப்பட்ட வீட்டு வடிவ அமைப்பை (house design) சிந்துவெளியின் ஹரப்பா நாகரிகம் கொண்டிருந்தது. திண்ணைக ளோடு வீட்டுக்கு வெளியே நந்தவனமும், வீட்டு முன்பு பந்தலும், வீட்டுக்குள் இளைப்பாறும் பீடமும் கொண்டு கட்டப்பட்ட சங்க கால வீடுகளில் வசித்தவர்கள் எல்லாம் பெருங்குடி மக்கள்தான் என்பது முக்கியச் செய்தியாகும். ஆயினும், மனவளம் இல்லாத ஹரப்பா நாகரிகத்துக் கட்டடக்கலையைவிட, மற்றைய மனிதர்க்கு உதவுகின்ற நெஞ்சின் ஈரத்தை வெளிக்காட்டி நின்ற கட்டடங் களைக் கட்டிய சங்கத் தமிழரின் நாகரிகம் உயர்ந்தது ஆகும். இந் நிலையில் இச் சங்கத் தமிழரே ஆதிநாளில் தென்னிந்தியாவி லிருந்து சிந்து சமவெளிக்குச் சென்று அமர்ந்து, அங்குத் தங்கள் நாகரிகத்தை மேலும் வளப்படுத்தி, பின்பு நிலைப்படுத்திக்கொண் டார்கள் என்று வழங்கும் கருத்துக்கு [107] எதிர்ப்பாக அவ்விரண்டு நாகரிகங்கள் வளர்த்த கட்டடக்கலைகளின் அடிப்படை அமிசங்கள் காணப்பெறுகின்றன. ஆனால், நகரமைப்பைப் பொறுத்த அளவில் இவ்விரண்டு நாகரிகங்களும் ஒருமித்த சிறப் பைப் பெற்றுள்ளன. விரிந்து நீண்டு கிடக்கின்ற ஆறுகள் போலத் தெருக்கள் தமிழக நகரங்களில் அமைந்தன என்பதை மதுரைக் காஞ்சி (வரி—358) சொல்கிறது. தெருக்களிலுள்ள வீடுகள் வரிசை வரிசையாகச் சிந்துவெளி நாகரிகத்தில் காணப்பட்டது போலச் சங்க நாட்களின் நகரத் தெருக்களும் வீடுகளும் குதிரை பூட்டிய தேர்கள் செல்லுவதை அனுமதிக்கின்ற வகையில் அமைந்திருக்க வேண்டிய அவசியம் உண்டு. தமிழரசர்களுக்குள் ஓயாத முறையில் நடந்த போர்கள், நாசவேலை செய்த களப் பிரரின் படையெடுப்பு, அழியக்கூடிய செங்கல், சுண்ணாம்பு கொண்டு வீடுகள் கட்டப்பட்டமை, வரலாற்றுச் சின்னங்களை அலட்சியப்படுத்தும் மக்களின் மனப்போக்கு இவை போன்ற

107 H. R. Hall — 'The Ancient History of near East'—1913—p. 172—173

காரணங்களை முன்னிட்டுச் சங்க காலக் கட்டடக் கலையின் மாண்பிற்கு இன்றளவில் சான்று சொல்கின்ற கட்டடங்களோ, அவை சம்பந்தமான வரைபடங்களோ காணப்படவில்லை. சோழன் கரிகாலனுடைய ஆட்சிக் காலத்திற்குரிய காசுகள் அச் சோழன் உருவாக்கிய புகார் நகரத் துறைமுகத்தின் பக்கம் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. இத்தகைய காசுகளைப் பெற்றுத் தந்த கடல் வணிகத்தின் பொருள்களைக் குவித்து வைக்கப்பெற்றிருந்த பண்டக சாலையின் அஸ்திவாரப் பகுதிகளை அண்மையில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்துள்ளார்கள்.[108] அகழ்வாராய்ச்சிகளின் பயனாக மேற்கொண்டு செய்திகள் நிறைவாகக் கிடைத்த பின்புதான் சங்கத் தமிழகத்தாரின் கட்டடக் கலையின் மாண்பைப்பற்றியச் சரியான மதிப்பீடு தோன்றுவதற்குரிய வாய்ப்பு உருவாகும் எனலாம்.

## IV. பழக்க வழக்கங்கள்

எந்த ஒரு நாகரிகத்தின் இயல்பான வெளிப்பாடும் அந் நாகரிகத்தின் மக்கள் கொண்டிருந்த பழக்க வழக்கங்களில் காணப்பெறும் என்ற அளவுகோலின்படித் தமிழர் பழக்க வழக்கங்களைச் சங்க இலக்கியங்களில் நுண்மையான பார்வையோடு புலவர்கள் சித்தரித்திருக்கின்றனர்கள். ஐந்திணைகளோடு கூடிய வாழ்வியலுக்குரிய முறையில் தமிழரின் பழக்க வழக்கங்கள் அமையப் பெற்றன. மருதமும், நெய்தலும் உடைய சோழ நாடு, நெய்தலும் முல்லையும் குறிஞ்சியும் உடைய பாண்டிய நாடு, முல்லை, குறிஞ்சி, நெய்தல் உடைய சேர நாடு-இவற்றினுடைய கலாசாரம் ஒரே வார்ப்படமாக அமைந்திருந்த நிலை வியப்புக் குரியதாகக் காணப்படுகிறது. சோழ நாட்டுப் பூம்புகாரைப் பாடுகின்ற மாங்குடி மருதனர் பாண்டிய நாட்டின் மதுரையையும் பற்றி நினைக்கின்ற போது வேறுபட்ட பழக்க வழக்கங்களின் குறுக்கீடுகளால் அவருடைய கவித்துவ மலர்ச்சி தடைப்படுத்தப் படவில்லை. 'யாதும் ஊரே, யாவருங் கேளிர்' என்று கணியன் பூங்குன்றனர் கூறியபடி, புலவர்கள் மூவேந்தர்கள், மற்றும் குறுநில மன்னர்கள் ஆகிய எல்லா ஆட்சியாளர்களும் ஆண்ட நிலங்களில் நிலவிய தமிழ்க் கலாசாரத்தின் வெளிப்பாடாக ஒரே வகையான பழக்க வழக்கங்களைத்தான் காண முடிகிறது. துண்ணக்காரர்கள் என்ற தையற்காரர்கள் செய்த ஆடை, மெய்ப்பை, கஞ்சுகம் என்ற மேல்சட்டை இவற்றைப் பெருங்குடியாளர் அணிந்தனர். ஏறு தழுவுதல் என்றபடி காளை அடக்குதல், சூதாட்டம், ஊஞ்சலாடுதல், பேய் பிசாசுகளை நம்புதல், இறந்த

108 Indian Archaelogy—1961—1962—a Review p. 13.
Ibid—1962—63 a Review— p. 26-27

வர்களைச் சுடுதல், சுடுதல் உள்ளிட்ட ஐந்து முறைகளில் அடக்கம் செய்தல், சகுனம் பார்த்தல், தாயத்து கட்டுதல், தாலி அணிதல், நாள்கோள் கணித்து அதன்வழி நிற்றல், குறி பார்த்தல், வெற்றிலை போடுதல், வீட்டில் நாய் வளர்த்தல், 'தேள் கடிப்பன்ன தேறல்'' (கள்) அருந்துதல், புலால் உண்ணுதல், பொருளீட்டுவதற்குக் கடல்வழி பிரிதல், தை நீராடுதல், பரிசிலாகப் பெற்ற யானையை விற்று முதலாக்கிக்கொள்ளல், ஆண் பெண் இருபாலாரும் தலையில் கூந்தல் முடிதல், மன முரண்பாடுகளின் காரணமாக வடக்கிருந்து உயிர் நீத்தல், மற்போர், கோழிச் சண்டை, ஆடுகளினிடையே சண்டை கண்டு களித்தல், ஆடம் பரப் பொருள்களான வாசனை மருவும், அகில், சந்தனம், மலர் ஆகியவற்றை விரும்பி அனுபவித்தல், மனமகிழ்ச்சியின்பொருட்டுக் கூட்டமாக வேற்றிடம் (picnic) செல்லுதல், நிலாச் சோறு உண்ணுதல், மழைவரச் செய்யக் கடவுளரை வழிபடும் சடங்குகளை மேற்கொள்ளல், பத்தினிப் பெண்டிரைப் போற்றுதல், நிரந்தர மான கைம்மை நோன்பை வலியுறுத்துதல், சிறுதேர், சிற்றில், அம்மானை போன்ற விளையாட்டுகளைச் சிறுர் விளையாடுதல், விருந்தினரை உபசரிப்பதைச் சமூகச் சடங்காகப் பின்பற்றுதல், புலவர் போன்ற நல்லியல்பாளருக்கு விருந்தோம்பல் முறையில் தம் இல்லங்களிலிருந்து ஏழடி நடந்து சென்று பிரிவுபசாரம் செய்தல் ஆகியவை போன்ற சமுதாயப் பழக்க வழக்கங்கள் தமிழ் நாகரிகத்தின் தொடக்க நிலை வளர்ச்சிக்குரியவையாகக் காணப் படுகின்றன. மானிடவியலின் (anthropology) வளர்ச்சியில் தமிழ் நாகரிகம் உயர்நிலைக்கான பல கூறுபாடுகளைக் கொண்டு இருந்தது என்பதை இப் பழக்க வழக்கங்கள் புலப்படுத்தும் எனலாம். தெள்ளேணம் கொட்டல், அம்மானை சூடல், இறப்பு நிகழ்ந்தபோது ஒப்பாரி வைத்தல், சிலம்பு போன்ற அணிகலன் களை அணிதல், ஆலயந்தொழுதல், நீலநிறப் புடவையை மேலாக்கு இல்லாமல் அணிதல், பெருங்குடிப் பெண்கள் மேலாக்கு அணிதல் போன்ற பழக்க வழக்கங்கள் காணப்பட்டன. பெண்கள் மேலாடை இன்றித் தமிழகம் எங்கும் காணப்பட்டார்கள். பாடல் மகளிரான விறலியர் என்போர் நிர்வாணமாகவே ஆடிப் பாடி அலைந்தனர் என்று V. கனகசபை கூறுகிறுர்.[109] மேலாடை யின்றி ஏழ்மைப் பெண்கள் காணப்பட்டது உண்மைதான். ஆனல், எல்லா மக்களின் இல்லங்களுக்கும் சென்று பழகிய விறலியர் கலையுணர்வு கொண்டவர்கள்; ஆடையோடுதான் வாழ்ந்திருப்பார்கள். பாணனும், விறலியரும் காதலித்து மணம் புரிந்த தம்பதியருக்குள் ஏற்படும் ஊடல்களைத் தீர்த்து வைக்கின்ற

109 V. கனகசபை—'The Tamils—Eighteen Hundred Years Ago'—1904—p. 170

முறையில் மக்களோடு இணைந்து வாழும் பழக்கத்தைக் கொண்டு இருந்ததால், அவ் விறலியர் நிர்வாண மக்களாதல் இயலாது. காக்கைக்குக் கவளம் அளித்த பின்பு கீழே உட்கார்ந்து வாழை இலையில் அரிசிச் சோறிட்டுச் சாப்பிடல், பசு, ஆடு வளர்த்தல், கள்ளுண்ணுவதற்காக மதுக் கடைக்கு 'யாத்திரை' செல்லல், கழுத்தில் அணிந்துள்ள மலர்மாலையில் இஞ்சித் துண்டுகளைச் சேர்த்துக்கட்டி வைத்துக்கொண்டு கள்ளையும், இஞ்சித் துண்டையும் மாறி மாறி உண்ணல், அந்தணர்கள் புண்ணியத் தேடிக் காசிக்குச் செல்லல், பரிசம் கொடுத்து மணஞ்செய்தல், அந்தணரின் சேவைக்குத் தட்சிணை கொடுத்தல், வெயிலில் ஏற்படும் தாகத்தைத் தணிக்க நெல்லிக்காயைக் குதப்புதல், வெளி நாட்டினரை 'மாக்கள்' எண்றெண்ணி ஒதுக்கி வைத்தல், வறுமையை வெளிக் காட்டாது எளிய உணவைக் கதவடைத்துக் கொண்டு உண்ணல், இன்னது இன்னபடி செய்வேன் எனச் சூளுரைத்தல், அந்தணருக்கும், புலவர்க்கும் பொன்னாலாகிய தாமரை மலர்களைப் பரிசாக அளித்தல், நோய்களுக்கு மருத்துவம் பார்த்தல், தீர்த்த யாத்திரை போதல், நிலத்தில் புதையல் கிடைத்தால் அரசனிடம் சேர்ப்பித்தல், சோரம் போகுதலை மரண தண்டனை விதித்துத் தடுத்தல் (நாலடியார்-81), பாவங்களைக் கழுவிடக் கன்னியாகுமரி செல்லல்,[110] அரசனிடம் குறையைச் சொல்ல அரண்மனையின் வாயிலில் உள்ள ஆராய்ச்சி மணியை அடித்தல், நன்னனுடைய மனைவி போலக் கற்பரசிகள் தங்கள் இல்லங்களில் தங்களுடைய கற்பின் திறனைச் சமுதாயம் போற்று வதைக் காட்டுகின்ற முறையில் கொடிகள் பறக்க விடுதல்,[111] துறவியாவதைப் போற்றுதல், முனிவருக்கும், அரசருக்கும், உடன் கட்டை ஏறிய பெண்மணிகளுக்கும் கல்லறை எழுப்புதல்,[112] மாதவிடாய் நேரங்களில் பெண்களை ஒதுக்கி வைத்து ஓய்வு அளித்தல், தாய்தந்தையரையும் பெரியோரையும் மதித்தலைச் சமூகத் தர்மமாகக் கொள்ளல்; மேலே சொல்லப்பட்ட பழக்க வழக்கங்கள் அந் நாளைய மக்கள் மேலும் மனவளர்ச்சி பெறப் பெரிதும் வழிகாட்டுகின்ற திறனைப் பெற்றிருந்தன. இப் பழக்க வழக்கங்களில் தோய்ந்து நின்ற தமிழ் நெஞ்சத்தின் வாழ்க்கை உணர்வு உலகப் பொது நாகரிகத்தின் ஒப்பரிய பெட்டகமாக விரிந்து மலர்ந்தது; மிளிர்கிறது.

'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்று சொல்லும் கணியன் பூங்குன்றனாரின் கருத்துப்படி[113] தமக்குத்தாமே வினையறந்தேடி,

110 மணிமேகலை—VIII—வரி 4—7
111 N. Subramanian—'Sangam Polity'—1966—p. 288
112 மணிமேகலை—VI—வரி 48—59
113 புறம்—192

வாழ்வின் சுவையைக் கருத்திலும், செயலிலும் கண்டனுபவித்த சங்கத் தமிழர்கள், தங்களுடைய பழக்க வழக்கங்களைத் தனி மனித வளர்ச்சிக்கும் சமூக ஒப்புரவாதலுக்கும் வழிகாட்டுகின்ற வகையில் அமைத்துக்கொண்டார்கள். கருத்திலும் செயலிலும் நெஞ்சுத் திடனைக் காட்டுகின்ற தீவிரப் போக்கை மேற்கொண்ட 'வெள்ளை' மனத்தினரான சங்கத் தமிழரைவிட அவர்களுடைய வாரிசுகள் மேம்பட்டவரானார்கள்; சங்ககாலத்தினரின் பிற்கால வாரிசுகளான அத் தமிழர்கள் கண்ணியமும் அறிவொளியுங்கொண்டவர்கள் என்று A. L. பாஷாம் பாராட்டுகின்ற முறையில்,[114] சங்கத் தமிழரின் பழக்க வழக்கங்கள் சங்க காலத்தை அடுத்து வந்த சந்ததியினரை மென்மேலும் நற்பண்பாட்டில் புடம் போட்டுப் பக்குவப்படுத்தின என்பது வரலாற்று உண்மையாகும்.

## 1. நீராடல்

குளிப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் போலக் காணப்பட்ட சிந்து நாகரிகத்தினர் தமிழரின் முன்னோர்கள் என்ற கருத்து உண்மையாக இருக்கும் என்பதற்குச் சங்கத் தமிழர்கள் நீராடலில் பற்றுக் கொண்டிருந்த மன ஈர்ப்புச்சான்று சொல்லும் எனலாம். உடல் சுத்தம் பேணுகின்ற நாகரிகத்தினராக அவர்கள் விளங்கினார்கள். ஆகவே, வாழ்க்கையின் எல்லாக் கட்டங்களிலும் நீராடலுக்கு ஒரு தனி இடம் வழங்கியிருந்தார்கள். இன்ப நுகர்ச்சியில் பெரும் ஈடுபாடு காட்டிய நிலையில் சங்கத் தமிழர்கள் மேற்கொண்ட உலகியல் வாழ்வுக்குரிய தலைவன் ஆறு, குளம், பூங்கா போன்ற நீர்நிலைகளில் காமக் கிழத்தியரோடும் மனைவியரோடும் தனித்தனியாக நீராடுவான் என்பதைத் தொல்காப்பியம் கூறுகிறது.[115] மேலே சொல்லப்பட்ட தொல்காப்பிய சூத்திரத்திற்கு உரை சொன்ன நச்சினார்க்கினியர் காவிரி, வைகை, தாமிர பரணி ஆறுகளின் பக்கம் இன்ப நீராடுதலுக்கென நீர்வாவிகள் காணப்பட்டன என்பார்.

மகப்பேறு அடைந்த மகளிர் உடலளவில் தூய்மையற்றவராகக் கொள்ளப்பட்டனர். 'நெய்யணி மயக்கம்' என்றழைக்கப் பெற்ற சடங்கின்படி[116] மகவு ஈன்ற பத்தாம் நாள் தங்களுடைய சுற்றத்து மகளிரோடு குளத்தில் எண்ணெய் நீராடி வெளி வந்து வீடு தொடுவர். சோழ நாட்டிலிருந்த இப் பழக்கத்தை மணிமேகலை (VII—வரி 74—76) கூறுகிறது. மதுரைக்காஞ்சியும் இதை வழிமொழிகிறது (வரி 600—603). நீராடலில் சமயவுணர்

114 A. L. Basham—'The Wonder that was India'—p. 62
115 தொல்காப்பியம்—பொருளதிகாரம்—191
116 Ibid—

வைக் காட்டுகின்ற பழக்கம் சங்க காலத்திலேயே காணப்பட்டது. சோழ நாட்டாரான கோவலன், கண்ணகி, கவுந்தியடிகளுக்கு மாடலன் என்ற அந்தணர் கூறுவது போல மதுரை செல்லும் வழியில் 'வியத்தகு மரபின்' புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி போன்ற குளங்களில் நீராடி அவற்றிலிருந்து சிறப்பாகப் பெற்றுக்கொள்ளத்தக்க ஆன்மீயப் பயன்களை அடையலாம் என்ற நம்பிக்கையும் தீர்த்தமாடுகின்ற பழக்கமும் மக்களிடையே காணப்பட்டது.[117] முடிபுனைந்த காலந்தொட்டு ஆண்டுதோறும் முடிபுனைந்து நீராடி நீராட்டு மங்கலம் என்ற சடங்கினைச் செய்து மகிழ்ந்த தமிழ் மன்னர்கள் எதிரியின் கோட்டையை அழித்துத் தூளாக்கிக் கழுதை வைத்து உழுத பின்பு மங்கல நீராடித் தங்களுடைய வெற்றியைக் கொண்டாடினர்கள். இந்திர விழாவின்போது கடலாடுதல் என்பது சோழ நாட்டு மக்களுக்குரிய சிறப்பான நீராடுதல் எனக் கொள்ளலாம். புகார் நகரத்தில் ஊர் மக்கள் அனைவரும் ஏற்றத் தாழ்வுகள் பார்க்காமல் கடலாடுவதை மனமகிழ் நிகழ்ச்சியாகவும், தெய்வ வழிபாடாகவும் (orgiastic paganism) மேற்கொண்டிருந்தனர்.[118] புகார் நகரத்துத் துறைமுகத்தில் காவிரி கடலோடு கலக்கும் இடத்திலுள்ள சோம குண்டம், சூரிய குண்டம் போன்ற துறைகளில் நீராடிய பின்பு அங்குள்ள காமவேள் கோட்டம் சென்று தொழுகின்ற பெண்களுக்குத் தத்தம் கணவருடன் பெறுகின்ற இன்ப நுகர்ச்சி நிலைப்படும் என்றும், அந் நுகர்ச்சிக்கு இம்மை மறுமைக்கான ஏற்றம் கிடைக்கும் என்பது சங்க நாளைய நம்பிக்கையாகும் என்பதை இளங்கோ கூறுகிறுர்.[119] மங்கல மங்கையர் தலையில் சுமந்துகொண்டு வந்த மட்பாண்டங்களின் நீரைக் கொண்டு மங்கல நீராட்டிய பின்பு திருமணப் பெண்ணுக்குத் தாலி கட்டப்பட்டது.[120] மற்றைய பொருள் களுக்கும் நன்னீர் வழங்கப்பட்டது. போர்க்களத்தில் வெற்றிக்குக் காரணமான வாள் கொற்றவை தெய்வச் சிலையின்மேல் வைக்கப் பெற்று நீராட்டப்பட்டதை வாண் மங்கலம் என்றழைத்தனர். நடுகற்களும், கண்ணகி சிலையும் முறையே உள்ளூர் நீர் கொண்டும், கங்கை நீர் கொண்டும் நன்னீராட்டப் பெற்றன.

## (உ) பெண்மை

**பெண்மை, மணமுறை, மனையியல்**

**I. பெண்மை :** பெண்மையைப் போற்றுவதென்பது பழந் தமிழர் நாகரிகத்தின் சிறப்புகளில் வீரத்திற்கு அடுத்த

117 சிலம்பு—XI—வரி—93—103
118 Ibid—
119 Ibid—IX—வரி 58—62
120 அகநானூறு—86

இடத்தைப் பெற்றிருந்தது. பெண்களுக்குரிய சம அந்தஸ்து சங்க காலத்தில் முழுமையான அளவிற்குக் காணப்பெறவில்லை. ஆனாலும் பெண்பாலார்க்குரிய சமூக மேம்பாட்டைச் சங்க நாளைய மகளிர் அனுபவித்து வாழ்ந்தனர்.

(1) **இல்லக்கிழத்தியர் :** ஒத்த நலன், ஒத்த குணம், ஒத்த கல்வி என்ற முறையில் பெண்பாலாருடைய காதல் மணவாழ்வாகவும், மனை அறமாகவும் அமைந்தன. 'மனைமாட்சி இல்லோள்' என்ற இல்லக்கிழத்தியாக விளங்கிய சங்க காலத்தியப் பெண் மகள் 'வளத்தக்காள் வாழ்க்கைத்துணை' என்னும் அமைப்பில் 'நன்கலம் நன்மக்கட்பேறு பெற்று', 'தகை சான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்' என்ற இலக்கணத்திற்குட்பட்ட வாழ்வரசியாக வாழ்ந்தாள்; இலக்கியக் கற்பனைக்கு அமைந்துள்ள அளவற்ற மனவிரிவாற்றலோடு வாழ்ந்தாள். கணவரின் போராற்றலையும் வீரத்தையும் போற்றுகின்ற தனது வாழ்வின் அறமாகக் கைக்கொண்ட சங்க கால மனையாட்டி தன் கணவன் வீரங்காட்டி வேட்டையாடிப் பெற்ற புலிப்பல் தாலியை அணிந்தாள்; தனது கணவன் 'போரில் பிரிந்து' செல்லுகின்ற போது, அவன் சமுதாய அறம் பேணுகின்ற அறவாளன் என்றளவில் அவனை மதித்து விடை கொடுத்தாள். அரசியற் தலைவர்களான மன்னர்களின் தனி மனித விருப்பு வெறுப்புகளுக்கு உட்பட்டு, ஏற்றம் இறக்கம் பெற்ற அரசியல் அலைகளுக்குத் தக்க சங்க காலத்தியப் போர்கள் ஏற்பட்டபோது போர்க்குரிய காரணத்தையும் முடிவையும் பற்றி எண்ணாது போரினை ஒருவகைச் சமூகச் சடங்கு (social ritualism) என ஏற்றுக் கொண்ட மன நிலையில் தனது கணவனை அவள் போருக்கு அனுப்பி வைத்தாள். இவ்வாறு சங்க நாளைய பெண்மகள் வீட்டறமும் நாட்டறமும் போற்றித் தமிழ்ச் சமுதாயத்தின் இயக்கு சக்தியாக நின்று, தனது கணவனையும் தனது பிள்ளைகளையும் வழி நடத்திச் சென்றாள். ஆதித்தமிழ் வாழ்வியலின்படி, தாய்வழிச் சமூக நியதிகளின்படி அவள் இத்தகைய பெண்மையைக் கணவனுக்குரிய காதல் தோழமையிலும் மைந்தர்களுக்குரிய வீரத் தாய்மையிலும் தன்னிறைவு பெற்றாள்.

(2) **பொருட்பெண்டிர் :** கற்பு எனப்படுவது பெண் பாலார்க்கு மட்டுந்தான் என்ற சங்க காலத்திய சமூக வரையறை அந் நாளைய சமூக இயக்கத்தில் காணப்பெறும் கசப்பான உண்மையாகும். ஏழாண்டுப் பயிற்சிக்குப்பின் ஒன்பது நடன பாவங்களைப் பூம்புகார் நகரப் பொதுமேடையில் நடித்துக் காட்டிய மாதவியைக் கோவலனிடம் கொண்டு சேர்த்தது அவர்களுக்குள் இயல்பாக அரும்பிய காதல் அல்ல; மாறாகப் பரத்தையரை

விரும்புதல் அந் நாளைய செல்வந்தரின் சமூக அந்தஸ்தாக இருந்ததை ஒட்டிக் கோவலனும் மாதவியின் அரங்கேற்ற விழாவிற்குச் செல்ல மாதவி 1500 பொன் கழஞ்சுகளைத் தனக்குரிய விலையாகப் பெற்று அவ் வணிகனுக்கு உரியவள் ஆனாள் (சிலப்பதிகாரம்—3 ; 164—171). இங்ஙனம் செல்வத்தின் துணை கொண்டு மாதவியை அடைந்த கோவலன் அவளுடைய மாருத அன்பையும், பண்பு நலத்தையும் அனுபவித்த நிலையில் ஒரு காவியத் தலைவனாகத் தன்னையே மாற்றிக்கொள்வதற்கு மாதவியின் குணச் சிறப்புகள்தான் துணை நிற்கின்றன. இவ்வாறு இளங்கோ காட்டுகின்ற மாதவி போன்ற பரத்தையர்கள் தமிழ்ச் சமுதாயத்தின் நாகரிக வளர்ச்சிக்குப் புறம்பாக இயங்க வில்லை என்பது சிலப்பதிகாரம் சொல்லிக் காட்டும் வரலாற்று உண்மை ஆகும்.

'மாதவியின் உயர்தனிச் சிறப்புகள் சிலப்பதிகாரத்தில் பாத்திரப்படைப்புக்கு என அமைந்தவையா ? மாதவி போன்றோர்க்குரிய பொதுமைச் சித்திரிப்பா ?' என்ற கேள்விக் குரிய பதிலாகச் சங்க காலத்திய பரத்தையர் நிலைபற்றிச் சில குறிப்புகளைத் திரட்ட வேண்டும். பரத்தையர் என்ற விலைமகளிர் மூன்று பிரிவுகளில் அடங்குவர். அவை யாவன :

(1) இல்பரத்தையர் என்ற இந்தப் பிரிவைச் சேர்ந்தவள் காமக்கிழத்தியாக ஒருவனுடைய வாழ்வுக்குரியவளாக இணைந்து காணப்பட்டாள். தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தின் 151ஆவது சூத்திரத்திற்கு உரை எழுத வந்த நச்சினார்க்கினியர் என்ற சோழ தேசத்து உரையாசிரியர் 'காமக்கிழத்தியராவர் கடனறிவும் வாழ்க்கையுடையவராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர்' எனக் குறிக்கின்றார். நம்பியகப் பொருள் (105). இப் பரத்தையர் 'மனைவிக்கமைந்த ஒழுக்கமும்' உடையவர் என்று சொல்கிறது. மாதவி இந்த வகையைச் சேர்ந்தவள் என்பது தெளிவு.

(2) இரண்டாவது பிரிவில் சேரிப்பரத்தையர் என்ற பொதுப் பிரிவில் அடங்கிய காதற்பரத்தையர் காணப்பட்டனர். போரிடும் ஆற்றலை நிலை நாட்டவில்லையானால், 'தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப் பரத்தையரைத் தழுவிய நிலையில் என் மாலை மாசுறுவதாக' எனச் சோழன் நலங்கிள்ளி (புறம்—73) சூளுரைப்பதிலிருந்து பரத்தையர் தரும் இன்பத்தில் மனங்கலந்த இன்பமில்லை என்பதால், பரத்தையருக்குத் தொழில் முறையில் கூட அந்தஸ்து இல்லை என்பது புலனாகும்.

(3) மூன்ருவதாக, வரைவின் மகளிர் என்பவர்கள் தன்னிச்சையாகவே வாழுகின்ற பரத்தையர் ஆவர்.

பரத்தையரின் நிலைபற்றிய ஆராய்ச்சி அவர்களை விலைமாதர்களாக மட்டும் பார்க்கிறது. தொல்காப்பியச் சூத்திரத்திற்கு அமைந்த இளம்பூரணர் உரை பின் வருமாறு பரத்தையரைச் சித்தரிக்கிறது: ‘ பரத்தையவராவார் யாரெனின், அவர் ஆடலும் பாடலும் வல்லவராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகு ஒருவர் மாட்டும் தங்காதார் ’. பொதுவான செய்தியாக இது தென்பட்டாலும் பரத்தையர் அனைவரும் இப்படி அமைந்திருக்கவில்லை. பாட்டு, பரதம், கண்கவர் தோற்றம் கொள்ளல் போன்ற 64 கலைகளை முறைப்படி படித்து ஏழாண்டுகள் நடனத்தைத் ‘ தலைகோச்சன் ’ என்ற ஆசிரியரிடம் பயின்று பன்னிரண்டு வயதில் அரசன் முன்பு அரங்கேற்றம் மேற்கொண்ட[121] பரத்தையர் அந் நாளையத் தமிழ்ச் சமுதாயத்தின் கலைவளர்ச் செல்விகளாக விளங்கினர். ‘எண்ணெண் கலையோர்’, ‘ பண்ணியல் மடந்தையர் ’, ‘கலைவாளர்’, ‘ கலை உணர் மகளிர் ’, ‘ கலை இகழ்திணைய கோளர் ’ என்று பல வகைகளில் அவர்களுடைய கலைவாழ்வின் தனிச் சிறப்புத் தென்படுகின்ற அளவில் சிலப்பதிகாரத்திலும், சீவகசிந்தாமணியிலும் பரத்தையர் என்ற ஆடல் மகளிர் குறிப்பிடப்படுகின்றனர். இந் நிலையில் இவ் வகை ஆடல் மகளிரை அடைந்து வாழ்வின்பம் தேடுகின்ற செல்வ மனப்போக்குச் சமூகநெறி வாழ்வுக்கு அப்பாற்பட்டது என்ற எண்ணம் சங்க காலத்தில் காணப்பெறவில்லை. இதனுல்தான் கடையேழு வள்ளல்களில் ஒருவனுன பேகன்கூடத் தனி மனித மனக் கிளர்ச்சியின்படிக் கலை நுகர்வு கொள்ள இத்தகைய பரத்தையர் என்ற ஆடல் மகளிரை விரும்பி வாழ்ந்தான். சோழன் நலங்கிள்ளி மன்னனுயிருக்கின்ற நிலையில் பரத்தையரை வெறுப்பதுவும், பேகன் வேளிர் நிலையில் அதை விரும்பியதும், மன்னர்கள் சமூகச் சிந்தனையில் காட்டுகின்ற மனவளர்ச்சி வேளிருக்கு (Chieftain) காணக்கிடைக்கவில்லை என்பதும் சிறப்புச் செய்திகளாகும்.

கொடை மடம் படுவதல்லாது படைமடம் படாத வள்ளல் பேகன் தன் மனைவி கண்ணகியை நீர்வார் கண்ணுளாக விட்டுப் பிரிந்து சென்று பரத்தையருடன் வாழ்ந்த நிலையைப் பார்த்த அரிசில்கிழார் என்ற சங்கப் புலவர் அங்கலாய்த்துக்கொள்கின்ற காட்சி இத்தகைய பரத்தையர் கொடுமை நிறைந்த பகுதியை மட்டும் சித்தரிக்கிறது (புறம்—146). இல்லறம் வேண்டி நின்ற

121 சிலப்பதிகாரம்—III—வரி 10—11

வாழ்வரசிகள் ஒவ்வொருவருக்கும் பொது எதிரி இப் பரத்தையர் தான் என்று பொதுவாகக் கூறுகின்ற சரித்திர ஆராய்ச்சிக் குறிப்பு அக் காலச் சமூக இயலை ஒருதலைப்பட்ட பார்வைக்குள் உட்படுத்தி விட்டதைத்தான் எடுத்துக்காட்டும். தமிழ் நாகரிகத்தின் வளர்ச்சிப் பாதையில் உருவாகி, பின் மலர்ச்சியுற்ற இத்தகைய பரத்தையரின் அந்தஸ்து காலப்போக்கில் உயர்நிலை மாறி இழிநிலை அடைந்தது. இதை மாற்றியமைக்கின்ற முயற்சியின் வழி வந்ததுதான் பிற்காலச் சோழர்களின் காலத்தில் காணப்பட்ட தேவதாசி முறையாகும். ராஜராஜன் I கட்டிய தஞ்சைப் பெரிய கோவிலில் இத்தகைய ஆடல் மகளிர் நானூறு பேரை அரசினரால் நியமனம் செய்யப்பட்ட கோவில் பணியாளர் என்றளவில் அக் கோவிலுக்குப் பக்கமுள்ள தலைச்சேரியில் குடியேற்றினான் ; முறைப்படி ஊதியமும் வழங்கினான். சங்க காலத்தில் செல்வந்தர் களுக்கு மட்டும் உரிமையாகிவிட்ட ஆடல்மகளிரின் கலையும், 'தலைக்கோலி' என்றளவில் பெற்ற கலையுணர்வின் முதிர்ச்சியும் எல்லா மக்களுக்கும் பயன்படக்கூடிய அளவில் ராஜராஜன் I (985—1014) காலத்தில் கோவில்களில் காணக்கிடைத்தது. பொருள் வசதியாளர்க்குரியதாக மாளிகையிலிருந்த சங்க நாளையக் கலை மக்களுக்கு உரியதாக (democratisation of art) இவ்வாறு மாற்றப்பட்டதற்கு முன்னோடியாக நின்றவர்கள் பிற்காலச் சோழ மன்னர்களே ஆவார்கள். இவ்வாறு சங்க காலத்திய சோழ நாட்டில் காணப்பெற்ற கலைபயில் வல்லமை கொண்ட ஆடல் மகளிர் சோழ வரலாற்றில் கடை சிவரை தொடர்ந்து வருகின்ற ஒரு சமூக நிறுவனம் (social institution) என்றளவில் உருமாறித் தமிழ்ச் சமூகத்தால் ஆதரிக்கப் பெற்ற நிலையில் சமூக அந்தஸ்தோடு கூடிய வளர்ச்சியை அனுபவித்துச் சோழ நாட்டுக்கு உரிய கலைகளைக் காத்த பெருமைக்கு உரியவராயினர்.

## II சங்க காலச் சோழர் மணமுறை

சங்க காலச் சோழர் மணமுறை தூய தமிழ் நாகரிகத்தின்படி யும், அக் காலத்தில் சிறுகச் சிறுகப் பரவி வந்த ஆரியச் சடங்காசாரத்தின்படியும் காணப்பட்டது. தீவலம் வருதல், புரோகிதர் சேவை போன்றவை பண்டைய மணமுறைக்கு உகந்தவை அல்ல.[122] அத்தகைய ஆரிய முறைகளை அந் நாளையச் செல்வந்தர்கள் ஒப்புக்கொண்டார்கள் என்பதைச் சிலப் பதிகாரத்தின் 'மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட' நடந்த கோவலன் – கண்ணகி மணவிழாவைப் பற்றியச் சித்தரிப்புப் பகுதியில் கண்டறியலாம். தலைவனும், தலைவியும் காதல் உணர்வால் ஈர்க்கப்பெற்று வாழ்க்கைத் துணையறம் மேற்

122 P. T. Srinivasa Iyengar—' History of Tamils '—1929—p. 80

கொண்ட நிலை தமிழ்வழி வாழ்வியலாகும். சமூகத்தின் கண்களுக்கு அகப்படாதவாறு தலைவனும் தலைவியும் உடலுறவோடு களவொழுக்கம் மேற்கொள்வதும் அந் நாளைய இலக்கியச் செய்தியாக மட்டும் கருதப்பட வேண்டியதில்லை; நடைமுறை வாழ்வு நிகழ்ச்சியாகவும் அம் முறை நிலவி வந்தது (தொல். களவியல்). ஒருதலைப்பட்ட காதலைக் 'கைக்கிளை' என்று வழங்கினர். சோழ இளவரசன் உதயண குமாரன் மணிமேகலையின்மேல் கொண்ட காதல் இரு வகைப்படும். பொருந்தாக் காமம் 'பெருந்திணை' என்று வழங்கப்பட்டது. மாற்றரசர் படை எடுத்து வந்து மகளிரை மணஞ்செய்யும் முயற்சியும் உண்டு என்பதைத் தொல்காப்பியர் தருகின்ற மகட்பாற்காஞ்சி (பொருள்—79) விளக்குகிறது.

காதலர் இருவர் கருத்தொருமித்து இல்லறம் காண விழைகின்றபோது ஆதரவுபட்டது இன்பம் என்ற நிலையில் கணவனைப் பேணுகின்ற மனையியல் மாட்சி சங்க நூல்களில் காணப் பெறும் வாழ்வியல் பகுதியாகும். தன்னுடைய வாய்ப்பாடலினால் தன் கணவனின் உடல் நோயைப் போகச் செய்த மனையாட்டி பற்றிப் புறநானூறு கூறுகிறது. குறுந்தொகை காட்டுகின்ற மனைமாட்சிக் காட்சியில் கணவனுக்குச் சுவை உள்ள உணவு படைத்து நன்றாக உண்பிக்கச் செய்த பேறு தனக்கே உரியது என்னும் மனமகிழ்ச்சியில் திளைக்கின்ற வாழ்வரசி ஒருத்தி வருகின்றாள். இதனையே 'தான்றுழந்தட்ட தீம்புளிப்பாகர், இனிதெனக் கணவன் உண்டலின், நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே' என்று சங்க இலக்கியமான அக் குறுந்தொகை (167) விளக்கம் கொடுக்கிறது. 'ஏனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமிழ்தம் ஆகும்' எனத் தலைவன் தலைவியின் கரம்பட்ட உணவைக்கூடப் பாராட்டுகிறான் (தொல். பொருள். கற்பியல்—5).

**இத்தகைய அன்பு கணவன்-மனைவியரிடையே எவ்வாறு ஏற்படும்?**

கணவனையும் மனைவியையும் சமூகத்தின் பெரியவர்கள் நிச்சயிக்கின்ற ஏற்பாட்டுக்குரிய மணவினை அமைப்பு (arranged marriage) அந்தணரைப் பின்பற்றும் அரசனைப் போல வாழத் தலைப்பட்ட வணிகர்களிடம் காணப்பட்டது என்பதைக் கோவலன்—கண்ணகி மன உறவு ஏற்பட்ட காட்சியைச் சொல்லிச் சிலப்பதிகாரம் விளக்குகிறது. திருமணத்தைப் பொறுத்த அளவில் தனக்கென அமைந்த உணர்ச்சிகள் கொண்ட தனியாள் திறனோடு (individual personality) களவியலிலும் கற்பியலிலும் நடந்துகொள்கின்ற மனமார்ந்த ஆதித்தமிழ் செயல்முறையை

ஆரிய மணமுறை மாற்றி அமைத்தது. கன்னிகாதானம் என்றளவில் காரணம் என்ற சடங்காசாரம்[123] தமிழகத்தில் நிலை பெற்றது. இதன்மூலம் பெண் ஆணுக்குரியவள் என உடைமை ஆக்கப்பட்டாள். ஆதித்தமிழ் வழியில் நடைபெற்ற மணவிணை யில் மணமகள் தனது தோழமையைத்தான் கணவனுக்கு உரிமையாக்கினள்; 'உடனுணைத் தனியாணைத் திறன்' கொண்ட அவளுடைய வாழ்வில் அப் பெண்மகளுக்கு அவளுடைய கணவன் எஜமானன் ஆவதில்லை. 'தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்' என்று சங்க காலக்குறள் பேசுவது கணவன்—மனைவியரிடையே எஜமானன்—அடிமை உறவுகள் தோன்றியதைக் கூறுவதாகக் கொள்ளப்பட வேண்டியதில்லை. மாருக, கணவனிடம் மனைவிக்கு இருக்க வேண்டிய பற்றுதலானது கற்புக்கனலாக விளங்கினுல் சமுதாய அறம் தானுகத் தழைக்கும் என்பதுதான் வள்ளுவம் தரும் சங்ககால இல்லற வாழ்க்கைப் பற்றிய தொனிப் பொருள் செய்தியாகும்.

சங்க காலத்திய சோழ நாட்டுக்குரிய பெண்மகள் கண்ணகி ஆரியவழி மணமுறையின்படி கோவலனை மணந்து, பின்பு கோவலனுடைய பிரிவு போன்ற அவதிகளை உள்ளார்ந்த பொறையுடைமையோடு ஏற்றுக்கொண்ட நிலையினைக் கண்ணகி என்ற பாத்திரப்படைப்புக்குரியதாகத்தான் இளங்கோ காட்டுகிருர். அதே கண்ணகி கற்பின் கனலியாக மாறிப் பாண்டிய அரசனின் பிழையைப் பொறுக்க மாட்டாமல் மதுரையை அழிக்கின்ற வெஞ் சினம் கொண்டதைச் சோழமகள் ஒருவள் தன் வாழ்வுத்துடிப்பில் கொண்ட கிளர்ச்சி உணர்வு என்றுதான் கணிக்கப்பட வேண்டும். கண்ணகியின் மௌனித்தனமான வாழ்வுப் பிடிப்புணர்வை **(mute assertiveness)** சங்க நாளையச் சோழச் சமுதாயத்தின் பெண்கள் எல்லோரும் கைக்கொண்டிருந்தனர் என்று கொள்வ தானது இளங்கோ தரும் இலக்கியப் படைப்பில் காணப்பெறும் நெஞ்சை அள்ளும் காவியச்சுவையை நீக்கித் தமிழக வரலாற்றுக் குரிய தடம் பார்க்கின்ற அறிவியல் பிழையாகத்தான் அமையும். அக் காலச் சோழ மகளிர் சுதந்தரமான வாழ்வு கொண்டனர்; அதில் வெற்றியும் கண்டனர். இதனை 'மணிமேகலை' என்ற மற்றெரு சோழ நாட்டுக் காவியத்தின் நாயகியான மணிமேகலை இளவயதில் கொண்ட துறவு நிலையைக் கொண்டு நிலை நிறுத்தலாம் அல்லவா?

## III. மனையியல்

இல்லங்களின் வாழ்வரசிகளாகச் சங்கப் பெண்டிர் இனிது இருந்தனர். இல்லறம் இழந்த பெண்டிர் 'கைம்மை நோன்பு'

123 தொல்காப்பியம்—கற்பியல் I

மேற்கொண்டனர். பெண்ணுக்கு மட்டும் கற்பு என்ற அளவில் குறுகி நின்ற சங்க காலத்திய வாழ்வியல் மேலும் குறுகிய நிலையில் தான் 'கைம்மை' என்பது சமுதாயப் பழக்கமாகக் காணப்பட்டது. நூல் நூற்றல் போன்ற தனிநபர் முயற்சியில் தங்களுக்கிருந்த மீதி உள்ள வாழ்நாளைக் கழித்துக்கொள்கின்ற அவலத்திற்குரிய கைம்மைப் பெண்களைப் 'பருத்திப் பெண்டிர்' என்றழைத்தார்கள். கணவனின் மறைவிற்குப் பின் தன் உயிரையும் இழப்பதற்கு முன் வந்தவர்கள் உடன்கட்டை ஏறினார்கள். சோழநாட்டில் காணப் பட்ட கைம்மையாளர்களின் பல்வேறு மனநிலைகளைத் தொல் காப்பியம் பின் வருமாறு சொல்லுகிறது : இறந்த கணவனோடு உடன்கட்டை ஏறுகின்ற பாலைநிலையும்,[124] அவ்வாறு உடன் கட்டை ஏறாது கைம்மை நோன்பை மேற்கொள்ளுகின்ற தாபத நிலையும், கணவன் இறந்த செய்தி கேட்டளவில் உயிர் பிரிகின்ற மூதானந்தம் என்ற நிலையும் (முதுமை : உழுவலன்பு, ஆனந்தம் = சாக்காடு) கைம்மைப் பொருள்களின் வெவ்வேறு மனநிலைகளாகக் காணப்பட்டன. பாலை (இடையன்பு), தாபதம் (கடையன்பு) நிலை களிலும் மூதானந்தம் என்ற தலையன்பு மேலானது எனக் கருதப் பட்டது. இவ்வாறு கைம்மையாளர்கள் உடன்கட்டை ஏறுதலைச் சங்க காலத்தின் கடைநாட்களுக்குரிய 'மணிமேகலை' கூடத் தெரிவிக்கிறது.[125]

**பலதார மணம் ; பரத்தையரை நாடல்**

கணவன் மனைவியை விடுத்து வாழ்வதைச் சங்கச் சமூகம் விகற்பமாக எடுத்துக்கொள்ளவில்லை ; இயல்பானதாக ஏற்றுக் கொண்டிருந்தது. ஊழ்வினையில் நம்பிக்கையோடு[126] ஒருவரை ஒருவர் மனதார ஏற்றுக்கொண்ட புனிதமான அந்தரங்க சுத்தியான காதலுணர்வுகூட, கணவன் பரத்தையரை நவ்வி வாழ்கின்ற தன்னிச்சையான போக்கைத் தடை செய்யவில்லை. இத்தகைய பரத்தையரைச் சார்ந்த வாழ்வு அந் நாளைய ஆடவருக்கு அமைந்திருந்ததைச் சமூகத்தின் மனசாட்சி (social conscience) பூரணமாக ஒப்புக்கொள்ளவில்லை. ஆனாலும் அதனைச் சகித்துக்கொள்ளக்கூடிய சமூக மரபு சங்க நாளில் வழக்கிலிருந்தது என்பது உண்மையாகும். சங்க நூலான பரி பாடல் (வரி—16-18) தலைவனுடைய பரத்தமை வாழ்வு கற்புக் காலத்துக்கு உரியதுதான் எனச் சொல்லுகிறது. சங்க காலத்தை அடுத்து வாழ்ந்த சைவப் பெரியார் சுந்தர மூர்த்தியாரின் முதல் மனைவியான பரவை நாச்சியார் திருவாரூரில் குடிகொண்டிருந்த

124 தொல்காப்பியம்—புறத்திணை—19

125 ஊரலர் உரைத்த காதை—வரி 42—48

126 தொல்காப்பியம்—களவியல் 2

பதியிலார் குலத்தைச் சார்ந்தவர் என்பதைக் கணிகையர் நாளடைவில் பெற்ற சமுதாய மேம்பாட்டைத் தெரிவிக்கின்ற செய்தியாகக் குறிப்பிடலாம்.

**ஆடவர் பரத்தையரை நாடுவதற்குக் காரணங்கள் யாவை?**

(1) சங்கத் தமிழகத்தின் மக்கள் தொகையில் பெண்களின் எண்ணிக்கை ஆண்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்த காரணத்தால் முறைப்படி திருமணம் செய்ய முடியாத சூழ்நிலையிலிருந்து தப்புகின்ற வகையில் பெண்கள் பரத்தையராக மாறுகின்ற சமுதாயப் போக்கு காணப்பட்டது.[127] ஒருவன் பலரை மணப்பது (Polygamy) என்ற நிலையையொட்டிய சமுதாய அமைப்பு ஏற்பட்டதை இது காட்டுகிறது. மகாபாரதக் காலத்தில் வட இந்தியாவில் காணப்பட்ட பலரை ஒருத்தி மணக்கின்ற மண முறையை (Polyandry) தமிழ்ச் சமுதாயம் ஏற்றுக்கொள்ளாத நிலையையும் அது புலப்படுத்தும்.

(2) தமிழ் மகன் ஒவ்வொருவனும் ஆடல் பாடல் போன்ற கலைகளை ஆதரிப்பது தனது கடமையாகக் கருதிய நிலையில், இத் தகைய பரத்தையரை நாடி அவன் அக் கலைகளைத் துய்த்தான். இதை நக்கீரரே தமது இறையனார் அகப்பொருளில் கூறுகிறார்.

(3) இல்லற வாழ்வில் ஏற்படுகின்ற சலிப்பைப் பிரிவு, ஊடல் போன்றவை துணைகொண்டு விலக்கிக்கொள்வதற்காக ஆடவர் பரத்தையர் ஒழுக்கத்தை மேற்கொண்டனர் என்றும், பிரிவுக்குப் பின்பு, ஊடலுற்ற மனைவியோடு கூடி முயங்குகின்றபோது ஏற்படுகின்ற இன்பத்திற்கு (குறள்—1109) மனோதத்துவ முறையிலமைந்த ஏற்றங்காணப்பட்டது என்றும் பேராசிரியர் T. P மீனாட்சி சுந்தரம் கருதுகிறார்.[128]

(4) சங்க காலத்து ஆண்மகன் ஒரு மனைவிக்குமேல் பல மனைவியரைத் திருமணச் சடங்குகளை நடத்தி ஏற்றுக்கொள்வதைப் 'பின்முறை வதுவை' என்றழைப்பர். இவர்களுக்கு முதல் மனைவியைப் போன்ற அந்தஸ்தும் அருகதையும் உண்டு.[129] இவ்வாறு பலதார மணம் சங்க காலத்தில் வழக்கிலிருந்தது. இவ்வாறு சட்டப்படி அமைந்த மற்றைய மனைவியரைப் போல, பரத்தையரும் கற்புக்கடம் பூண்டு அவனையே கணவனாக ஏற்று

127 ஔவை D. நடராஜன்—முதல் உலகத் தமிழ் மாநாடு மலர் II —1966—பக்கம் 84

128 வள்ளுவரும் மகளிரும்—பக்கம் 683

129 மு. இராகவையங்கார்—'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி'—1960—பக்கம் 101

வாழ்வார்கள். இவரையும் மனைவியரைப் போல அக் கணவன் நடத்தினன். அந் நாளைய சமுதாயத்தில் இத்தகைய 'சின்ன வீட்டு' வாழ்வுக்கு (concubianage) ஒப்புதலும் காணப்பெற்றது எனலாம். மாதவியைக் கோவலன் விரும்பிச் சென்ற விதத்தில் காணப்பட்ட[130] சமூக அந்தஸ்துக்கு ஆதாரம் அவள் காட்டிய கற்புத்திறன்தான் என மணிமேகலை கூறுகிறது.[131]

### மனையற வாழ்வில் சமூகத்தின் பரிவும் சமுதாய நீதியும் பெண்ணுக்கு மறுக்கப்பட்டதா?

தொல்காப்பியம் கூறுவது போல, 'கரணம்' என்ற சடங்கு முறையில் மணம் முடித்ததால் 'நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி' கொண்ட கணவன் மனைவியைப் பிரிந்து வேந்தனுக்கு ஊழியஞ் செய்யவும், கல்வி கற்கவும், பொருள் ஈட்டவும் போனபோது அவனுக்கிருந்த சமூக அந்தஸ்து, பரத்தையர் வாழ்வால் ஏற்பட்ட பிரிவின்போது காணப்படவில்லை. பரத்தையரோடு வாழ்வதைச் சங்க இலக்கியம் பாராட்டவில்லை. நச்சினர்க்கினியர் கூறுவது போல, திருமணத்திற்கு முன்பு பெற்றோரால் அன்னியருக்குரிய சொத்து என்றவளவில் பெற்றோரின் பாதுகாப்பில் வளர்க்கப்பட்ட சங்க காலப் பெண்[132] திருமணத்திற்குப் பின்பு கணவனுடைய பாதுகாப்பிலும் அன்புப் பிணைப்பிலும் மனையறம் கண்டாள். இத்தகைய சூழ்நிலையில் கணவனுடைய பரத்தமை வாழ்வு போன்ற புற இச்சை நவ்வுதல்களைச் (sexual escapades) சகித்துக் கொள்கின்ற விரிவாற்றலுள்ள மனத்தையும் அவள் பெற்றிருந்தாள். 'பிறன்மனை நோக்காப் பேராண்மை யாளனுக' ஆண் வாழ்வதற்கான சமூக நியதி காணப்பட்டது. ஆனுலும், இச்சைப்படி வாழ்வதற்கான வகையில் விலைமகளிரின் நாட்டம் அவனுக்குத் தடையின்றிக் காணப்பட்டது. கட்டுக்கு அடங்காத மனச் செருக்கை அவன் கைக்கொண்ட போதும், அவனை மதித்துப் போற்றுகின்ற பெண்மையை அந் நாளைய மக்கள் வழிமொழிந் தார்கள்.

### பூம்புகாரின் கற்பரசிகளும், கண்ணகியின் இலட்சியமும், சோழ நாட்டு மகளிர் நிலையும்

மதுரையை எரிப்பதற்கு முன்பு கண்ணகி தானும் கற்பின் திறங்கொண்டவள் என்பதை வலியுறுத்துகின்ற பாங்கில் தனது ஊரான புகார் நகரில் வாழ்ந்த ஏழு கற்பரசிகளின் வரலாறுகளைக்

130 Ibid—p. 101
131 மணிமேகலை—II—வரி 38—39
132 தொலகாப்பியம்—பொருளதிகாரம்—92-க் குரிய உரை

கூறுகிருள். 'கல்லானுலும் கணவன்' என நினைக்கும் மனநிலைக் குரிய கற்பரசிகளாக (1) தோழியரால் கணவன் என்று அறிமுகப் படுத்தப்பட்ட ஆற்று மணற்பாவையை நீரலையினின்றும் காத்த வளையும், (2) ஏற்கெனவே நியமனம் ஆனதால் மனத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட — ஆனுல் மணந்துகொள்ள முடியாதுபோன — ஆடவனைப் போலப் பாவை செய்து தலைச்சுமையாக அதனைக் கொண்டலைந்தவளையும் சங்க கால 'நளாயினி'களாகப் புகார் நகரம் கொண்டிருந்தது. (3) கணவனுயிர் மீட்கும் அந் நாளைய 'சாவித்திரி'யாக ஆதிமந்தி காணப்பட்டாள். (4) கப்பலில் சென்றுவிட்ட கணவனுக்காகக் கல்லாகிப் புகார் நகரக் கடற் கரையில் காத்திருந்து, பின்பு அவன் திரும்பி வந்தபோது தன்னியல்பு உருவத்தை மீண்டும் அடைந்தாள் ஒருத்தி. (5) மற்றொருத்தி பிற ஆடவனொருவன் தன் முகத்தைக் கண்ணுற்ற மோகத்தைக் (நீணோக்கம்) கண்டு, தன் முகத்தைப் பிரிவிற் சென்றிருந்த கணவன் மீண்டும் வரும் வரை குரங்கு முகமாக மாற்றி வைத்திருந்தாள். (6) மற்றுமிரு கற்பரசிகளில் ஒருத்தி தெய்வ சாட்சியங்களைக் கொண்டு கணவனை வழி பட்டவள். (7) மற்றொருத்தி தன் சக்களத்தியின் குழந்தை கிணற்றில் வீழ்ந்தபோது தன் குழந்தையையும் அக் கிணற்றில் தள்ளி, பின்பு இரு குழந்தைகளையுமே காப்பாற்றி, கணவனுடைய பலதார மணமுறையை ஒப்புக்கொண்டதைக் காட்டியவள் ஆவாள்.[133] சிலப்பதிகாரம் காட்டும் மேலே சொல்லப்பட்ட ஏழு பத்தினியரை இலட்சிய மகளிராகக் கண்ணகி கொண்டு இருந்தது போலப் புகார் நகர மகளிரும் அவர்களை வழிபட்டு வந்தனர். இந்தச் செய்தியிலிருந்து சோழ நாட்டுக்குரிய நகர நாகரிகத்தின் உறைவிடமான புகார்த் தலைநகரில்கூடச் சோழ நாட்டுப் பெண்கள் இத்தகைய முறையில் கணவரைப் போற்றும் கற்புடையவராக விளங்கினுர்கள்.

சோழ நாட்டு நங்கையான கண்ணகி தன்னுடைய துயர வாழ்வில் கைக்கொண்டிருந்த மௌனித்தனமான தன்னுணர்வு (mute assertiveness) பெண்ணினத்துக்குரிய இலட்சியமாக்கப் பட்டது. 'கற்புக்கடம் பூண்டதாக'க் கண்ணகியைச் சித்திரிக்கு மாறு அந் நாளையில் நிலைபெற்றிருந்த இத்தகைய சமூகச் சிந்தனை தான் இளங்கோவைத் தூண்டியது. 'முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது' என்று அவர் கண்ணகி கதையின் படிப்பினைகளையும், அவற்றில் ஒன்ருன பத்தினித் தெய்வ வழி பாட்டையும் தமிழகத்துக்குரிய பொதுமை அறமாக வலியுறுத்தி ஞர். தலைசிறந்த மனித நேயப் போக்கை (humanism) இலட்சிய

133 சிலப்பதிகாரம்—XXI—வரி 5—35

மாகக் கொண்டிருந்த சங்கத் தமிழகத்துப் புலவர்கள் மனிதத் தன்மையற்ற உடன்கட்டை ஏறும் வழக்கத்தை வன்மையாகக் கண்டிக்கவில்லை. அதற்கான பாடல்கள் அதிகமாக எழுதப் பெறவில்லை. ஊர்ச் சொத்தைப் பாதுகாப்பதற்கும், மன்னனுக்குச் சேவை புரிவதற்கும் போராடியதில் தத்தம் இன்னுயிரை ஈந்த வீரர்களுக்குக்கூட நடுகல் நாட்டுவதற்கு அந் நாளில் இலக்கியமும் இலக்கணமும் இயற்றி வைத்திருந்தார்கள்.[134]

தாய்க் கடவுளை வழிபட்ட ஆதித் தமிழ்க் கலாசாரம் தனது வலிமையை இழந்து போனதைத்தான் தமிழகத்தின் உடன் கட்டை ஏறும் சதிப்பழக்கம் சுட்டிக் காட்டும். ஏனெனில், மென்மையின் தனித் தன்மைக்குச் சதிப்பழக்கமானது நேர்மாறானது ஆகும். இவ்வாறு உடன்கட்டை ஏறி உயிர்விட்ட கண்ணகி போன்று அல்லலுற்று மாய்ந்த பெண்களுக்குப் பத்தினிக் கல் (மாசதிக்—மாஸ்திக் கல்) எழுப்புகின்ற வழக்கமும் இருந்தது. சோழ நாட்டு நங்கையான கண்ணகிக்குக் கோவிலெடுப்பித்த சேர நாட்டு அரசன் அக் கண்ணகியைப் பத்தினித் தெய்வமாக வழிபடத் தொடங்கிய நாளிலிருந்து தமிழகமெங்கும் மற்றும் தென் கிழக்காசிய நாடுகளிலுங்கூடப் பத்தினித் தெய்வம் பரவத் தொடங்கியது.[135]

தாய்வழிச் சமூக முறையானது (matriarchal society) அது தோன்றிய காலத்திலிருந்து மாறாமல் காணப்பட்ட தமிழ்ச் சமுதாயத்தில் பெண்கள் நன்கு போற்றப்பட்டார்கள். இந்தக் கருத்தை மறுதலிக்கின்ற வகையில் கைம்மை நோன்பு கொண்ட பெண்களின் அவல நிலை சங்கத் தமிழகத்தில் காணப்பட்டது. குளிர்ந்த நீரில் குளித்தல், பழைய சோறு உண்ணுதல், வெற்றிலை மலர் போன்றவற்றைப் பயன்படுத்தாமை, தலைமுடியை மழித்தல் (புறம்-250) போன்ற கைம்மை நோன்பிற்குரிய புறத்தோற்ற விரதங்களோடு சமூகத்தின் நிந்தனை மனப்போக்கும் சேர்ந்து விதவைகளைத் தன்னிரக்கக் (self-pity) கொடுமைக்குள்ளாக்கின. இவற்றின் ஆற்றாமையை எடுத்துச் சொல்லிப் பூதப்பாண்டியனின் மனைவி பெருங்கோப்பெண்டு கைம்மை நோன்பைவிட உடன்கட்டை ஏறுவது மேலாகும் எனக் கூறித் தீப்பாய்ந்ததை (புறம்-246) ஊருக்கு வெளியேயுள்ள காட்டுப்புறத்துத் தேவதைக் கோவில் முன்பு எழுப்பப்பட்ட உடன்கட்டைத் தீயாகிய 'அழற் பள்ளிப் பாயலில்' அப் பெண் சென்றணைந்தாள் என்று மதுரைப் பேராலவாயர் என்ற புலவர் விவரித்து அறிவிக்கின்றார் (புறம்-247).

134 அகம்—131; தொல்காப்பியம்—பொருள். 63

135 N. வானமாமலை—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—II—1966—பக்கம் 160

பொதுவாக, இந்தியாவில் விதவைகள் மறுமணம் செய்யக் கூடாது என்ற நிலை காணப்பட்டது.[136] ஆனால், தென்னிந்தியாவின் சில பகுதிகளைத் தவிர ஏனைய இடங்களில் தந்தைவழிச் சமூகவியல் (patriarchal society) வழக்கிலிருந்தது; பெண்களுக்குரிய அந்தஸ்து அந்த அளவில் மறுக்கப்பட்டது. தாய்வழிச் சமூகவியலுக்குரிய தமிழ்ச் சமுதாயத்திலும் அவ்வாறு விதவை மறுமணம் மறுக்கப்பட்டதென்பது ஒவ்வாதது எனச் சொல்லலாம். போர்களை ஓயாது செய்துகொண்டே இருந்த பல்வேறுபட்ட அரசுகளைக் கொண்டிருந்த தமிழகத்தில்[137] தமிழ் வீரர்களின் சாவில் பெண்களின் வாழ்க்கை நலம் எல்லாம் முடிவடைந்துவிட வேண்டும் என்ற கொள்கை அத்தகைய போரார்வச் சமூகத்தில் இராணுவ மரபுகளை வளர்க்க உதவியிருக்க முடியாது. போர்க்களத்தில் வீழ்ந்துபட்ட வீரர்கள் மைந்தர்களாக இருப்பின், வீரத் தாய்கள் பாராட்டுபவரின் புகழுரையைக் கேட்டார்கள்; உவந்தார்கள் (புறம்-270). அதே வீரர்கள் கணவன்மார்களாக இருப்பின், கைம்மை நோன்பின் கொடுமையை எண்ணி நாளடைவில் மனைவியர் உள்ளந் தளர்வுற்றுக் காணப்படுதல் மனித இயல்பாகும். இந் நிலையில் போர் வீரத்திற்குத் துணைநின்ற சங்ககாலப் பெண்மையின் சிறப்பு மங்கிக் காணப்படும் அன்றோ! ஆகவே, மேற்குடியாளரிடையேதான் இத்தகைய உடன்கட்டை ஏறுதல் போன்ற வழக்கம் வேரூன்றிக் காணப்பட்டது என்றும், சங்க காலத்தில் விதவை மறுமண முறை காணப்பட்டிருக்க வேண்டும் என்றும் முடிவு செய்யலாம்.

**நன்மக்கட்பேறு :** கற்புடைய மனைவியரால்தாம் மனையறம் மங்கலம் பெறும் ; அம் மங்கலத்திற்கு அழகு சேர்ப்பது நன்மக்கட் பேறு ஆகும் (குறள்—60). சங்க மக்களுக்கு—குறிப்பாக வேளாண்மையும் வாணிபமும் வளர்ந்திருந்த சங்கச் சோழ நாட்டுக்கு—நன்மக்களின் பிறப்பும் அவர்தம் சீரிய வளர்ச்சியும் நாட்டின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதனவாக அமைந்திருந்தன. பிறந்த புதல்வன் முகம் பார்த்தல், காத்தல் கடவுளான திருமால் ஏந்தியுள்ள ஆயுதங்களைப் போன்ற ஐம்படைத் தாலியைப் புதல்வனுக்கு அணிவித்துப் பெயரிடுதல், அந்தணரைக் கொண்டு பிறந்த மகவிற்கான நலம் வேண்டிப் பற்பல சடங்குகளைச் செய்தல் போன்றவற்றை மகவின் தந்தை செய்வது அந் நாளைய வழக்கம்.[138] சங்ககாலச் சமூகச் சிந்தனையின்படி பின்வரும் காரணங்களுக்காக மக்கட்பேற்றினை அந் நாளைய மக்கள் விரும்பினார்கள்:

136 A. L. Basham—'The Wonder that was India'—1963—p. 186
137 Ibid—p. 62
138 தொல்காப்பியம்—கற்பியல்

(1) மணையறத்தில் இல்லறம் நடத்தி இன்பங்கண்ட குடும்பத் தலைவன் மக்கட்பேற்றை அடைவதைக் குடும்பவாழ்வின் நிறைவு களில் ஒன்றாக எண்ணினான். நல்ல மைந்தரைப் பெற்றெடுக்கத் துணை செய்கின்ற வேள்வியைச் (புத்திர காமேஷ்டி யாகம்) சேர மான் பெருஞ்சேரலிரும்பொறை செய்தான் எனப் பதிற்றுப்பத்துப் பாடல்—74 கூறுகிறது.

(2) மக்கள் தரும் இன்பம் இல்லறத்தின் சுவைகளில் ஒன்றாகும். மக்களோடு கலந்துறவாடி உண்கின்ற இனிய குடும்பக் காட்சியை அனுபவித்தவனுடைய வாழ்வில் குறை ஏது மிராது என்று பாண்டியன் அறிவுடைநம்பி கூறுகிறான். அதை அப்படியே திருவள்ளுவர் வழிமொழிகிறார் (குறள்—64).

(3) குழுக்கூட்ட வாழ்விலும், வேந்தர்களின் ஆட்சியிலும் போர் செய்பவர்களைப்பொறுத்து அந்தந்தப் பகுதியின் தற்பாது காப்பு (self-defence) அமைந்திருந்தது. 'போரெனில் புகலும் புனைகழல் மறவர்' (புறம்—31) வேந்தர்களுக்குரிய தேவையாகி விட்ட அந் நாளைய சூழ்நிலையில் போரிடுகின்ற வீரரைப் பெற்றெடுப்பது என்பது வாழ்வியல் தேவையாக அமைந் திருந்தது (புறம்—312). தந்தையின் வேளாண்மைக்கு உதவி செய்ய ஏராளமான மக்களைப் பெற விரும்பிய சீனதேசத்தினரைப் போலத் தமிழ் மக்களும் போரிடுந்தேவையை எண்ணிப் பல மக்களைப் பெற எண்ணினார்கள் எனலாம்.

(4) சமய நோக்குடன் மக்கட்பேற்றினை அந் நாளைய மக்கள் பெற்றார்கள். ஈமக்கடன், இழவுக்கடன், மூதாதையரின் இறப்புக் குறித்து ஆண்டுதோறும் ஆற்றும் கடன் எல்லாம் தமிழகத்தில் ஆதிநாள்களிலிருந்து மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு இருந்தன.[139] வேத வேள்வி நாகரிகத்தைச் சங்க மக்கள் ஒப்புக் கொண்ட நிலையில் மூதாதையரைப் பெருஞ்சோறிடுதல் போன்ற வேள்வி செய்து வணங்குகின்ற சோழ நாட்டினளான கண்ணகி யைப் பத்தினித் தெய்வமாக வழிபட்ட செங்குட்டுவனின் தந்தை யான உதியஞ்சேரலாதன்[140] இவ் வேள்வியைச் செய்தான். இம் முறை சங்க நாள்களில் தமிழகத்தில் நிலைபெற்றிருந்தது; இவ் வேள்விகளை ஆண் வாரிசுகளே செய்து வந்தார்கள்.[141]

மக்கட்பேற்றினை அடைவதில் ஆர்வங்காட்டிய சங்கத் தமிழ்ப் பெற்றோரின் குடும்பப் பற்றுதலுக்கு ஈடுபாடாக அவர்தம்

139 மொ. அ. துரை அரங்கசாமி—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர் —II—1966—பக்கம் 447

140 Ibid—p. 436

141 P. அருணாசலம்—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—I—1966 —பக்கம் 313

மக்களின் மனப்போக்கு விரிவடைந்து காணப்பட்டதா? இது கேள்வி. சங்கச் சோழ வரலாற்றில் இது பற்றிய செய்திகளைப் பின்வருமாறு நிரல்படுத்தலாம்:

சோழன் நெடுங்கிள்ளி வேள்வி செய்து நாட்டறம் போற்றியவன். அவனுக்குரிய மைந்தனை உதயகுமாரன் துறவியாகிய மணிமேகலைமேல் கொண்ட மையலால் (infatuation) உயிரிழந்தான். மற்றொரு மகனை இளந்திரையன் கடலில் கலமிழந்து இறக்காமலேயே இறந்துபோன சோகத்தைத் தன் தந்தைக்கு ஏற்படுத்தினன். மகன் செய்த தவற்றுக்கு அவனைத் தேர்க்காலிலிட்டுக் கொன்று மக்களறம் போற்றிய மனுநீதிச் சோழன் வழிவந்த நெடுங்கிள்ளி, இளந்திரையனின் வரவு காணுமையால் ஏற்பட்ட சோகத்தில் புகார் நகரத்தில் மக்களுக்கான இந்திரவிழா நடைபெறவில்லை. கோப்பெருஞ்சோழன் தன் மக்களிடமே முரண்பட்டு 'வடக்கிருத்தலை' மேற்கொள்ள வேண்டியதாயிற்று (புறம்—213). அரசியல் காரணத்திற்காக அரசர்களின் மக்களும் துயரடைகின்ற நிகழ்ச்சியைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமானின் மைந்தர்களைப் போர் யானையின் காலால் மிதித்துக் கொல்விக்கின்ற நிகழ்ச்சியிலிருந்து அறியலாம்.

சங்கத் தமிழ்ச் சமுதாயம் சம்பிரதாயங்களில் தோய்ந்து காணப்பட்டது. பல திறப்பட்ட வாழ்வு நிலைகளைப் (திணை ஒழுக்கமுள்ள) பெற்றிருந்த மக்களிடையே அத்தகைய சம்பிரதாயங்களை வலியுறுத்துவதன்மூலந்தான் எல்லா மக்களுக்கும் உரித்தான பொதுமையான சமூகக் கலாசாரத்தை உருவாக்க முடியும். சட்டபூர்வமாக நடந்தேறிய திருமணங்களின் பயனாகப் பிறக்கின்ற குழந்தைகளைத்தாம் அந் நாளைய தமிழ்மக்கள் ஒப்புக் கொண்டார்கள். வால்மீகி சொல்வது போலக் காந்தர்வ விவாகம் பண்ணிக்கொண்ட துஷ்யந்தன்-சகுந்தலைக்குப் பிறந்த பரதனை நேர்வழிப் பிறப்பாளனாக ஒப்புக்கொள்ள மறுக்கின்ற தமிழ் நெஞ்சத்தைத் திருப்தி செய்வதற்காக அவ்விருவருக்கும் அரண்மனைப் புரோகிதரைக்கொண்டு அந்தரங்கமான திருமணத்தைத் தமிழிலக்கியங்களில் நடத்திய பிறகுதான் பரதனைப் பிறக்க வைக்க வேண்டியதாயிற்று (recension).[142] கற்புக்கடம் பூண்ட மாதவியின் மகளான மணிமேகலை ஆடல் மகளிர் குலத்தவள்; சோழ இளவரசன் உதயகுமாரனின் கட்டாயக் காதலினின்றும் நாட்டு மக்களிடையே காணப்பட்ட அவளுடைய பிறப்பைப்

142 V.I. சுப்பிரமணியம்—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—II—1966 பக்கம் 133

பற்றிய மிதமான எண்ணச் சக்தியிலிருந்தும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள அவள் இளந்துறவியாக வேண்டிய தாயிற்று எனலாம். இவ்வாறு அதிக எண்ணிக்கையான மக்கள் தொகையை வளர்த்துப் போரிடுகின்ற இளம் வீரர்களை ஆயத்தம் செய்துகொள்வதே அந் நாளைய தமிழகத்தின் தேவையாகக் காணப்பட்டது. கிரேக்க நாட்டு ஸ்பார்ட்டா நகரத்தின் ஆட்சி யாளர்கள் அந் நகரத்தில் குழந்தைகள் பிறந்தவுடன் அவற்றைப் போய்ப் பார்த்து ஊனமுடன் பிறந்த மகவுகளைப் பக்கத்து மலைக்கு அப்பால் எறிந்துவிடுகின்ற வழக்கம் இராணுவத்திற்கு என மக்கட் பிறப்பை வகைப்படுத்தியதற்குச் சான்றாகும். அதே நேரத்தில் அவர்களின் பிறப்பைப்பற்றிய சம்பிரதாயச் சிந்தனையும் அதே நாளைய தமிழகத்தில்—குறிப்பாக மணிமேகலை சித்திரிக்கின்ற சங்கச் சோழ நாட்டில்—நிலவியதை உய்த்துணரலாம்.

இவ்வாறு மக்கள்தொகையின் பெருக்கம், சம்பிரதாய நீர்மை என்ற இவ்விரு இலட்சியங்களும் எதிரெதிர்ப் பக்கங்களி லிருந்து (cross-purpose) செயல்பட்டன. சம்பிரதாயத்தைத் தளர்த்த விரும்பாத சங்கத் தமிழகம் போர்க்குணச் செய்கை களைக் கைவிடத் துணிந்தது. அதன்படி தீமை பயக்கின்ற இராணுவப் பூசல்களைக் குறைக்கின்ற பெரும்பணியைச் சங்கப் புலவர்கள் ஆற்றத் தொடங்கினார்கள். சங்கத் தமிழகத்தின் வெளிநாட்டு வணிகத்தின் உறைவிடமான பூம்புகாரை வங்கக் கடல் கொண்டது போலக் களப்பிரரின் படையெடுப்பு நாடு தழுவிய பிரளயமாக (deluge) தமிழகத்தின்மேல் வந்து கவிந்தது; சங்ககாலத்தையும் ஒரு முடிவுக்குக் (கி.பி.300 அளவில்) கொண்டு வந்தது. 'கெடுக சிந்தை' என்ற புறநானூற்றுப் பாடல் (279) காட்டுகின்ற மனக்காட்சியில் கிளர்ந்தெழுந்த வீரவுணர்வுக்குரிய இராணுவப் பாரம்பரியங்களை (military traditions) மக்கட்செல் வத்தைப் பெற்ற பெற்றோர் தங்களுடைய மக்களுக்கு இடையறுது காலமெல்லாம் ஊட்டி வரவில்லை. இதனை மணிமேகலை, சிலப்பதி காரம் போன்ற இதிகாசங்களின் போதனைகள் புலப்படுத்து கின்றன. இச் சூழ்நிலையில் மண்ணின் மைந்தர்க்கு வாழ்வுக்குரிய பிடிப்புள்ள சிந்தனை வலுப்பெறவில்லை; ஏனெனில், இன்பங்களைத் துய்ப்பதில் தணியாத ஆர்வங்காட்ட வேண்டிய சங்க நாளைய மக்கள் 'பெண்டிரும் உண்டியும் இன்பமென்று உலகில்—கொண்டோர் உறூஉம் (பெறுகின்ற) கொள்ளாத் துன்பம்'[143] என்ற பௌத்தம், சமணம் போன்ற சமயங்களின் செல்வாக்குக்கு உட்பட்டார்கள். புத்த மதம் அரசியல் அந்தஸ்துப் பெற்று மௌரியப் பேரரசிற்கு இராணுவத் தளர்ச்சியைக் கொண்டுவந்தது

143 சிலப்பதிகாரம்—XIV—வரி 39—40

போலச் சங்க நாள்களின் கடைசிப் பகுதியில் இம் மதங்களின் சமூக அந்தஸ்துடன் கூடிய ஊடுருவலால் சங்கத் தமிழகத்தாரின் இராணுவ மனப்போக்கு நைந்தது ; இதனால் மக்கட்பேற்றுக்கு உரித்தான மைந்தர்களுக்கும் அவர்களின் மூதாதையருக்கும் இடையே சந்ததிப் பிளவு (generation gap) ஏற்பட்டது. எப்போதும் போரிடுகின்ற இராணுவ மனப்போக்கின் பாரம்பரியத்தை மேலே சொல்லப்பட்ட சூழ்நிலையில் நிறைவான அளவில் பெற்று வளரமுடியாத மைந்தர்களால் புத்தமதத்தைச் சொல்லி அதிரடி இராணுவ வெற்றிகளை நிலைநாட்டுவதற்குத் தமிழகத்திற்குள் படைக்கலமேந்தி வந்த களப்பிரர்களை எதிர்த்து நிற்க முடியவில்லை. சங்கக் கலாசாரம் இவ்வாறு அழிந்துபட்டது.

ஆரியமயமாதல் நிகழ்ந்த பின்பு வடபுலத்தாரின் மணமுறைகளைத் தமிழர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. வடபுலத்தாரின் மணமுறைகளான (1) பிரம்மம், (2) பிரசாபத்தியம், (3) ஆரிடம், (4) தெய்வம், (5) காந்தர்வம், (6) அசுரம், (7) இராட்சசம், (8) பைசாசம் ஆகியவற்றுள் காந்தர்வ முறையை 'யாழோர் முறை' என்று தொன்மை நாள்களிலும், களவியல் என்று பின்னாளைய வளர்ச்சிக் காலத்திலும் தமிழர்கள் கொண்டிருந்தார்கள். இந் நிலையிலுங்கூட ஆரிய வழியான காந்தர்வ மணமுறையின்படி பிறந்த மகவுகளைச் சமூகத்திற்குரியவர்களாக ஒப்புதல் அளிக்கத் தயங்கிய நிலை தமிழ்ச்சமுதாயத்தைத் தாராளப் போக்குச் சமூகமாக (permissive society) மாறுவதற்குத் தடை செய்தது. அரசியலில் போர் செய்வதைப் பண்டைய தமிழ் முறையின்படி அப்படியே ஒப்புக்கொண்ட பின்பு – பொருளாதார வளர்ச்சிக்கு மன்னராட்சி முறைக்கான தனியார் வலிமையைப் போற்றுவதற்குப் பழைய மரபுகளை நல்வழிக்கு உரியதாக ஏற்றுக்கொண்ட பின்பு—சமுதாய நிலையில் மக்கட்பேற்றைப் பொறுத்த மட்டில் சம்பிரதாயமான மனநிலையை வகுத்துக்கொண்டார்கள். இது தமிழ்ச் சமுதாயத்தின் கட்டுப்பாடான வளர்ச்சிக்கு அடிகோலியது எனலாம். ஆணுக்குப் பெண் எல்லா வகைகளிலும் அடங்கிப் போகின்ற கற்பு என்ற நியதியையும் (institution of 'Karpu'), தனியுடைமை என்ற சமூகவியலுரிமைச் சாசன முறையையும் தமிழ்ச் சமுதாயம் ஏற்றுக்கொண்ட பின்பு, தந்தைவழிச் சமூகம் (patriarchal society) ஏற்பட்டது.[144] தந்தைவழிச் சமூகத்தில் பெண்களுக்குரிய சம உரிமைகள் அகற்றப்பட்ட பின்பு, மக்கட்பேற்றில் சம்பிரதாயத்தின் ஆதிக்கம் நிலைநிறுத்தப்பட்டது.

144 P. T. Srinivasa Iyengar—'History of the Tamils'— 1929—p.10

## (ஊ) சங்கத் தமிழகம் ஆரியமயமாதல்
### (Aryanisation of Tamilagam)

சங்க காலத்திய தமிழகத்தின் சேர, சோழ, பாண்டிய நிலப் பகுதிகள் நாடுகள் (States) என்றழைக்கப்பட்டாலும், அவை யாவும் தமிழகம் என்றவளவில் ஓருயிர்த்திறன் சமுதாயம் (social personality) என அமைந்திருந்தன ; ஒரே நாட்டுணர்வு கொண்டிருந்தன. இம் மூன்று நாடுகளையும் புராண காலத்திலேயே காணப்பட்ட மூன்று தனியுணர்வு நாடுகள் (Nations) என்று இராபர்ட் ஸ்வெல் அழைப்பது[145] பொருத்தமன்று. தமிழ்க்காப்பியமான மணிமேகலையின் அறவணவடிகளுக்குத் தமிழகம் என்ற மலரின் மூன்று இதழ்களாகப் புகார்—வஞ்சி—மதுரை தென்பட்டன; தமிழ்ச் சமுதாயத்தின் கலாசார ஒருமைத் தன்மையானது அவ் விதழ்களின் மணமாகவும் தோற்றம் அளித்தது. 'ஒன்றே குலம், ஒன்றே கலாசாரம்', என்றமைந்திருந்த தமிழகத்தை வடபுலத்தின் வேதவேள்விச் சமயம் வந்தடைந்தபோது தமிழரின் கடவுள் வழிபாட்டில் அடிப்படையான மாற்றங்கள் ஏற்பட்டன. அதைத் தொடர்ந்து கலாசார வளமும் விளைந்தது.

**கால வரையறை :** இந்த நிகழ்ச்சி எப்போது நிகழ்ந்தது என்பதுபற்றி அறிஞர்களுக்குள் கருத்தொற்றுமை காணப்பெறுவதில்லை. சங்கத் தமிழரின் தொன்மையைக் கண்டறிய இலக்கியச் சான்றுகள் ஏராளம் உண்டு. கி.மு. 300-லிருந்து கி.பி. 300 வரையுள்ள சங்க காலத்திலேயே தமிழில் வடமொழியின் செல்வாக்குக் காணப் பெறுகிறது ; தமிழ்ப் பேச்சொலியின் மரபுபடி சமஸ்கிருதத்தின் சொற்கள் எடுத்தாளப்பட்டன ; ஆனால், இலக்கிய மரபுகள் மாறவில்லை.[146] தமிழில் தோன்றிய முதன்முதலான தொல்காப்பியத்தில் ஆரிய முறை வேள்வி, சடங்கு போன்றவற்றைப் பின்பற்றுகின்ற அகம், புறம் என்ற இரண்டு வகை வாழ்க்கைக்குரிய பழக்க வழக்கங்கள் பரவலாகவும் ஈடுபாட்டோடும் குறிப்பிடப்படுகின்றன. பண்டைய அகஸ்தியர் கதைகள் ஆரியர் வருகையைக் குறிப்பிடுகின்றன. ஆனால், காலம் தெளிவாக்கப்பட வழி இல்லை. பாணினியும், மெகஸ்தனிஸும் (கி.மு. 3ஆம் நூற்றாண்டு) தெற்கேயுள்ள பாண்டியரைப் பற்றிக் குறித்துள்ளதைக் கொண்டு அங்கே ஆரியரின் செல்வாக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஏற்பட்டது என்று கூறலாம். அசோகனுடைய மைசூர்ப் பகுதிக் கல்வெட்டு(கி.மு. 250அளவில்) தமிழகத்தின் கலாசாரம்பற்றி எதுவும் தெரிவிக்கவில்லை.

145 HISI—1932—p.2
146 K.A.N. Sastri—'Sources of Indian History' — 1968—p.53

சாலமோன் ராஜா (கி.மு. 1000 அளவில்) தமிழகத்தோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்ததற்குப் பைபிளில் ஆதாரம் உண்டு.[147] ஆனால், தமிழ்க் கலாசாரம்பற்றிய செய்தி கிடையாது. இராமாயணம் துங்கபத்திரை நதிக்குத் தெற்கே பதினுன்கு அரசுகள் இருந்தனவெனச் சொல்லுகிறது என ஸ்வெல் கூறுகிறுர்.[148] இந் நதிக்கு வடக்கேயுள்ள கோதாவரியின் கரையெடுப்புகளில் காடுகளுக்குரிய தவநிலயங்களான ஆசிரமந்தான் காணப்பட்டன; அவற்றின் சித்திரிப்பிலிருந்து தெற்கே ஆரியரின் செல்வாக்கு சென்றடைந்த தூரத்தைக் கணக்கிடலாம் என்ற கருத்தைப் பேராசிரியர் சாஸ்திரி கூறுகிறுர்.[149] கி.பி. 700-ல் வடஇந்தியா முழுமைக்கும் ஆரிய நாகரிகம் பரவி முடிந்தது எனவும், அந் நாளில் தெற்கே தமிழுக்கு மூலமான திராவிட நாகரிகம் நிலைபெற்றிருந்தது எனவும் ஸ்வெல் கூறுகிறுர்.[150] தெற்கே ஆரியரின் செல்வாக்கு கி.மு. 2000 அளவில் பரவியது என வின்சென்ட் ஸ்மித் சொல்லியிருப்பதை எடுத்துக்கூறி, அவ்வாறு அது பரவிய காலத்தைக் கணிக்க முடியாது என்பது ஸ்வெல் கொண்ட கருத்தாகும்.[151] மின்சார இரயிலின் பக்கம் நாட்டுப்புறத்துக் கட்டை வண்டியும் காணப்படுவது போலத் தமிழ்ச் சமூக வளர்ச்சியைக் காட்டும் பற்பல பழக்கவழக்கங்கள் ஆரிய முறை, தமிழ் முறை ஆகியவை சார்ந்திருந்த நிலையில் அடுத்தடுத்துச் சங்க காலத்தில் நிலவின என்றும், மணிமேகலையில் இறந்தவரை அடக்கஞ்செய்யும் முறையானது ஏழு வகைகளில் காணப்படுவதால் எந்த முறை எந்த நாகரிகப் பாங்குக்குரியது எனக் கணிப்பது கடினமானதாக இருக்கிறது என்றும், ஆரியர்-தமிழர் கலாசார வேறுபாட்டுக்கு இடமில்லாதபடி அவ்விரண்டும் சங்கமம் கொண்ட பின்பு அவற்றினை வேறு பிரித்துப் பார்ப்பதும், காலத்தை அளவிடுவதும் கடினமானது என்றும் பேராசிரியர் கருதுகிறுர்.[152]

இந்து சமய மன்னன் யசோவர்மன் தனது காம்போஜ (கம்போடியா) நாட்டிலெங்கும் நூறு ஆசிரமங்களைக் கட்டிக் கொடுத்ததைப் போல,[153] ஆரியக் கலாசாரம் தமிழகம் வந்தபோது அதனை ஆதரித்த தமிழ் மன்னர்கள் நிறுவன முறையில் **(institutionalisation)** தங்களுடைய இறையுணர்வை வகைப்படுத்திச் செயல்படவில்லை. தனிப்பட்ட முறையில் தனிநபர்

147 பைபிள்—ராஜாக்கள்—10- சங்கீதம் 11
148 Robert Sewell—HISI—1932—p. 2
149 'Sources of Indian History'—1961—p. 51
150 HISI—p.2
151 Ibid—p.2
152 'Cholas' —1955—64
153 R. K. Mukerjee—'Ancient India' 1956—p.498

ஆன்மீய வேட்கை தணிக்க வேண்டி வேள்விகளைச் செய்வதில் அவர்கள் கவனஞ்செலுத்தினர்கள். நிறுவனங்கள் உருவாகாத நிலையில் ஆரிய நாகரிகம் தமிழகம் வந்தடைந்து வேரூன்றிய காலத்தை வரையறை செய்வது என்பது நமக்கு இன்னும் கைகூடவில்லை. ஆனாலும் R. N. தாண்டேகர் கருத்துப்படி, கி. மு. 1000 அளவில் தொடங்கிக் கி.மு. 273-ல் அரசப் பதவிக்கு வந்த அசோகனின் காலத்துக்கு முன்பே தமிழகம் ஆரிய மயமாகி விட்டது என்று கூறலாம். இதன்படி, அசோகனின் தந்தையின் காலத்தில் 'வம்ப மோரியர்' தமிழகத்திற்குத் தேரில் வந்த பிறகு ஆரிய மயமாதல் நிகழத் தொடங்கியது என்ற கருத்து வலிவிழந்து விடும். முதலாவதாக, ஆரிய மயமாதலில் ஆரியக் கடவுளர் (theology) புகுத்தப்படவில்லை; வேள்வியில் நம்பிக்கையுள்ள சடங்காசார ஆரிய முறைச் சமூகவியல் (sociology) புகுத்தப் பட்டது. இரண்டாவதாக, தமிழ் மக்களால் ஆரியமுறை கொண்டு வந்த மாற்றங்கள் விருப்பத்துடன் ஏற்றுக்கொள்ளப்பட்டன. மூன்றாவதாக, தமிழ்மொழிக்கும் ஆதித் தமிழ்மறைக் கலாசாரத் திற்கும் விரோதமாக ஆரியமுறை அமையாததால், ஆரியரின் ஊடுருவல்கள் (incursions) வன்முறையாக அமையவில்லை.[154]

**சங்கத் தமிழரின் வாழ்வில் வேத வேள்வியாளர் கைக்கொண்ட செல்வாக்கும் விளைவுகளும்**

ஆயர் (முல்லை), மறவர் (பாலை), கிழார் (மருதம்), பரதவர் (நெய்தல்), வேட்டுவர் (குறிஞ்சி) என்பவர்கள் ஐந்திணை நிலப் பகுதிக்குரிய 'தனித் தமிழரே' என்பர் அறிஞர்.[155] அவரவர் வாழ்க்கைச் சூழலுக்கு உகந்த முறையில் கடவுளரும் அமைக்கப்பட்டனர். 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று தொடங்கும் தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரத் தின்படி,[156] ஆயரின் முல்லைக்குத் திருமாலும், வேட்டுவர் புலமான குறிஞ்சிக்கு முருகனும், கிழாரின் மருதத்திற்கு இந்திரனும், பரதவரின் நெய்தலுக்கு வருணனும் கடவுளராக அமைந்தனர். மறவரின் பாலைக்குப் பகவதியம்மன் இறைவியாக அமைந்ததாக இறையனர் களவியலுரைகாரர் கூறுகிறர். சோழ நாட்டுக்குரிய முறையில் இக் கடவுளரை ஆராயின், மருத நாட்டுக் குரிய கிழார் பல்கிய அந் நாட்டில் அத் திணைக்குரிய கடவுளான இந்திரனை வழிபட்ட நிலையில் கிழார் தலைவனை சோழ மன்னன்

154 R.N. Dandekar—'Mythology. Contribution of the South to the Heritage of India'—(The Publication Division, Government of India, Delhi)—1961—p.18

155 மு. இராகவையங்கார்—'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி' —1960—பக்கம் 34

156 தொல்காப்பியம்—அகத்திணை—5

சங்க நாள்களில் புகார் நகரில் இந்திர விழா எடுத்ததும், விஜயாலயச் சோழர்களில் பலர் ராஜ இந்திரன் என்றபடி ராஜேந்திரன் என்ற விருதுப் பெயரினைச் சூட்டிக்கொண்டார்கள் என்பதும் புலப்படும். காலமும் பொழுதும் (time and space) முதற் பொருளாகக் கொண்டு உரிப்பொருளான அகம், புறம் நலன்களைப் பெற மனிதர் முயல்கின்ற போது கருப்பொருளாக (சாதனமாக) விளங்குவதில் தலையாயதாகத் தெய்வம் அமைந்துள்ளது என்று தொல்காப்பியமே சொல்லுகிறது (பொருளதிகாரம்—அகத்திணை-5). முன்னர்ச் சொன்னபடி தெய்வத்திற்கு 'மாயோன்' போன்ற உருவ அமைப்புக் கொண்ட தெய்வம் 'ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்' (தொல்காப்பியம் களவியல்-2) என்றபடி ஊழ்வினையால்தான் தலைவியும் தலைவனும் கூடுவார்கள் என்பதும், அத் தலைமக்கள் இல்லறம் அமைக்க ஊழ்வினையே கடவுள் என்ற நிலையில் இயக்கு சக்தியாகத் தமிழர் வாழ்வில் அங்கீகரிக்கப்பட்டது என்பதும் விளக்கப்பட்டது. காலப்போக்கில் களவியலுக்கான நேர்மை நெஞ்சம் மக்களிடையே மறைந்து வந்தபோது சடங்குகளின்படி அகவாழ்வில் மணமுறையும், ஏனைய புறவாழ்வில் நியதிகளும் அமைவதாயின. 'பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணமென்ப' என்பது தொல்காப்பியச் செய்தியாகும் (கற்பியல்-4). இவ்வாறு சமுதாய வாழ்வுக்குரிய நலங்களைத் தேடுவதற்குக் கடவுளரின் அருளை வேண்டுகின்ற சடங்குகளைச் செய்வதையும் அச் சடங்குகளின் பாதுகாப்பில் சமுதாயத்தின் நலிவைத் தேற்றி மக்களின் மனநலம் சிறக்கச் செய்வதையும் தமிழ் மக்கள் தொல்காப்பியக் காலத்திலேயே ஒப்புக்கொண்டுவிட்டனர். எல்லா வகுப்பாருக்கும் சடங்குகள் பொருத்தமே என்பதை 'மேலோர் மூவருக்கும் புணர்ந்த கரணம்—கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே' என்றமையும் தொல்காப்பிய நியதியால் அறியலாம். இவ்வாறு வேள்விகள் மற்றும் சடங்குகளின் பொலிவாற்றலில் பின்னப்பட்ட நிலையில் சங்ககாலத்து இறைவுணர்வு புதுமை உரு எடுத்தது. இந்த நிலையில்தான் வேள்விக்கு முதலிடங்கொடுக்கத் துணிந்தார்கள். சோழன் நலங்கிள்ளியை இதற்குச் சான்றாகச் சொல்லலாம்.[157]

இயற்கை வழிபாட்டில் ஈடுபாடு கொண்ட தமிழரின் இறையுணர்வு முதலில் உருவ வழிபாட்டை (image worship) ஏற்றுக் கொண்டது. சான்றாகச் 'சினைச்சுறவின் கோடு நட்டு—மனைச் சேர்த்திய வல்லணங்கினால்' என்ற பட்டினப்பாலையின் (86, 87) செய்தியின்படி சுறுமீனின் கொம்பினை இயற்கையோடு

[157] Romila Thapar—'A History of India'—1969—p.104

இயைந்த உணர்வுடன் வழிபட்ட பரதவர் தொல்காப்பியம் சொல்லுகின்ற வருணனையும் தெய்வமாக ஏற்றுக்கொண்டனர். அந் நிலையில்தான் வேள்விகளுக்கான மயக்கம் சங்கத் தமிழர்களை விநோதமான முறையில் வயப்படுத்திக்கொண்டதை[158] நாம் பார்க்கிறோம். சங்க காலத்தில் பரவலாகி வந்த ஆரிய முறை என வழங்கப்பட்ட வேள்விவழிச் சடங்காசாரத்தோடு பண்டைத் தமிழ் வழிபாட்டு முறைக் கடவுளரான முருகன், சிவன் போன்றவர் இணைத்து வைக்கப்பட்டனர். அழகு, இளமை, மணம், கடவுட்டன்மை அடங்கிய இயற்கையே தமிழருக்கு உரிய வழிபாடு ஆகும் என்ற கருத்து உண்டு.[159] வேதகாலக் கடவுளான ருத்திரனும் தமிழ்க் கடவுள் முருகனும் சேர்ந்திணைந்து சிவன் உருவானான்.[160] இலிங்க அமைப்பில் சிவனை வணங்குகின்ற முறை கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில்தான் நம் நாட்டில் நிலைநின்றது என்பார் ரோமிலா தாபர்.[161] ஆனால், நம் நாட்டில் கற்காலம் கழிந்து உலோகக் காலம் உருவாகி வந்த நிலையில் இலிங்க வழிபாடு (Phallic Cult) நடந்துள்ளதைப் புருஸ் புட் செய்த ஆராய்ச்சியை எடுத்துக்காட்டி நிறுவலாம்.[162] வேத காலம் (Vedic Age) முடிவடையும் முன்பே இந்த வகையான இலிங்க முறையை (பல நாள் எதிர்ப்புக்குப் பின்பு) வேதங்கள் ஒப்புக்கொண்டதை அதர்வண வேதத்தின் (X—7) பகுதி கொண்டு அறிந்துகொள்ளலாம்.[163] பாசுபதம் என்ற அளவில் சிவன் வழிபாடும், பாகவதம் என்ற முறையில் திருமால் தொழுகையும் அவற்றின் வளர்ச்சிப் பருவநிலையில் சங்க காலத் தமிழகத்துக்கு வந்தமைந்தன; இவ்விரண்டு வழிபாட்டு முறைகளுக்கும் வேள்வி முறை பொதுமைப்பட்டுக் காணப்பெற்றது. ஏற்கெனவே தமிழ்ச் சங்க காலத்து இறையுணர்வின் அடிப்படை இதுதான் எனலாம். சங்ககாலத்தின் முடிவில்—7ஆம் நூற்றாண்டில்—சிவன் வழிபாட்டுச் சைவத்திலும், திருமால் வழிபாட்டு வைணவத்திலும் தனியார்வப் பக்திமுறை ஏற்பட்டன. வேள்விமுறை வழிபாட்டுக்குப் புறம்பான வகையில் அந்தணரில்லாத் தனிநபர் இறைவழிபாடு தமிழ் நாட்டில் தோன்றியது. இதுவே பக்திமுறை எனப்படும். பின்பு இந்தியா முழுமைக்கும் இது பக்தி இயக்கம் (Bakti Cult) என்ற அளவில் பரவியது.[164] இவ்வாறுஇந்திய இறைவழிபாட்டு வளர்ச்சி

158 Ibid—p.104

159 திரு. வி. கலியாணசுந்தரனார்—'முருகன் அல்லது அழகு'—1943—பக்கம் 32

160 Romila Thapar—op. cit., p. 133

161 Ibid—p.133

162 Indian Pre-historic and Indian Pre-historic Antiquities—p. 14

163 P. T. Srinivasa Iyengar—' Stone Age in India'—1926—p. 49—50

164 மு. இராகவையங்கார்—op. cit., பக்கம் 141

வரலாற்றில் தோன்றிய பக்திமுறைக்குரிய கரு, சங்க காலத்தில் தான் தோன்றியது. வேள்விவழிச் சமயமும், தமிழ்முறை இயற்கை வழிபாடும் இணைந்த சங்கமந்தான் இந்தப் பக்திமுறை வழி பாட்டுக்கு ஆதாரமாக அமைந்தது எனலாம். இவ் வகைச் சங்கமத்தின் உயர்நலத்தை வாழ்வியல் படிவமாக மாற்றி, பின்பு அதன்மூலமாகச் சைவத்தையும், வைணவத்தையும் சீரமைத்த பெருமை விஜயாலயச் சோழரைத்தாம் சேரும். சுருங்கக்கூறின், உருவங்களில் (image) கடவுட்டன்மை பெய்து வைக்கப்பட்டது. பின்பு அக் கடவுளை அடைய முழுமுதற்பொருளாக வேள்விமுறை (Vedic ritualism) அமைந்தது. இதில் அந்தணர்களின் இன்றி யமையாத் தன்மை காணப்பட்டது. இந்த நிலை மாறித் தமிழகத்தின் இயற்கை முறை வழிபாடு ஒருங்கிணைந்த பின்பு பக்தி இயக்கம் பரவலாகிப் பிற்காலச் சோழ மன்னர்களால் (அந்தணரை ஏற்றுக் கொண்டு அவர்களுக்கும் ஏற்றங்கொடுக்கின்ற வகையில்) அது சமநிலைப்படுத்தப்பட்டது ; அந்தணரின் சேவைகளைத் தவிர்க் கின்ற புத்த, சமண மதங்களை மக்கள் அவ்வளவாகச் சோழ நாட் டில் விரும்பவில்லை. முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, வேந்தர், உலகு—இவை ஆறும் ‘அறுவகை வாழ்த்து’ என்றவளவில் மக்களின் மதிப்புக்கு உரியவை ஆகும். அதுவே தொல்காப்பியம் காட்டும் தமிழ்வழிச் சிந்தனையாகும். இளங்கோ தமது காவிய மான சிலம்பின் மங்கல வாழ்த்துக் காதையில் ஆநிரையையும் பார்ப்பாரையும் விலக்கி மழையையும் முனிவரையும் போற்றிச் சொன்னர்.[165] பெரும்பான்மையான மக்களை இத்தகைய பௌத்த முறைச் சிந்தனை பாதிக்கவில்லை. ஆனால் காலப் போக்கில் பௌத்த, சமண சமயங்களின் ஆதாரக் கொள்கை யான பரிவுணர்ச்சி வேள்விவழிச் சமயத்தவரால் ஒப்புக்கொள்ளப் பட்டது. சிவ, விஷ்ணு கடவுளரே அருள் வழங்கு செல்வர் களாகத் தோற்றங்கொண்டனர்.[166]

**வேள்வி செய்த அந்தணரின் நிலை :** சோழநாட்டுப் பூஞ்சாற் றூரிலிருந்த கௌணியன் விண்ணந்தாயன் என்ற வேத வேள்வி நடத்தும் அந்தணரின் வீட்டில் வேள்விக் காலத்தே விருந்து உண்டு பரிசிலும் பெற்றதைப்பற்றி ஆவூர் மூலங்கிழார் புற நானூற்றில் (பாடல்—166) தருகின்ற சித்திரிப்பிலிருந்து சங்கத்துச் சோழ நாட்டில் இவ் வகையான வேள்விகளைச் செய்துவந்த அந்தணரின் நிலையைப்பற்றிய செய்திகளைப் பின்வருமாறு நிரல் படுத்தலாம்: (1) வேள்வியில் ஈடுபட்ட அந்தணரின் மூதா தையர் வேதக் கல்வியில் வழிவழியாகத் தேர்ந்தவர்கள் ஆவார்கள்.

165 மு. இரா. வையங்கார்-தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி'—1960—பக்கம் 144

166 Romila Thapar—op.cit., p.188

(2) வேள்விக் காலத்து அந்தணரின் வாய் சிவனுரின் பெயரை எப்போதும் சொல்லும். (3) காட்டுமானின் தோலினைப் பூணூலின்மேல் அந்தணர் அணிந்துகொள்வர். (4) சாலகம் என்ற ஒருவகை ஆடையை அணிந்து சிலசொற் பேசி அவரவர்க் கென அமைந்த தொழில் செய்து கணவனுடைய வேள்விக்கு உதவுகின்ற பல மனைவியரை விண்ணந்தாயன் பெற்றிருந்தான். 'வைதிகர்கள்' பல மகளிரை மனைவியராக மணக்கலாம் என்பது விதி. சில யாகங்களுக்குப் பத்தினிகள் மூவருக்குக் குறையாதிருக்க வேண்டுமென்னும் விதியுண்டெனத் திரு. உ. வே. சாமிநாதய்யர் கூறுகிருர்.[167] (5) நான்கு கூறுகளையும் ஆறு அங்கங்களையும் உடைய வேதத்தை உணர்ந்து பின்பு அதன் உட்பொருளைப் பௌத்தர் போன்ருேர்க்கு 'வேட்ப மொழிவது' என்பதைச் செவ் வனே செய்தவராவர். (6) 'மூவேழ் துறை' என்றபடி இருபத் தொரு வேள்விகளையும் குறையில்லாமல் செய்து முடிப்பவன். (7) பசுவின் நெய்யை நீரென இறைத்து விருந்தளிப்பவன். (8) வேள்வி விருந்தில் வேளாளராகிய ஆவூராரும் கலந்து கொண்டதிலிருந்து வேள்விக் காலங்களிலும் பண்டை நாளில் சாதி வேறுபாடு அந்தணரால் மேற்கொள்ளப்படவில்லை.[168] (9) வேறுபாடின்றித் தான் பெற்ற செல்வத்தைப் பரிசிலர்க்கு உணவாகவும் பரிசுப்பொருளாகவும் தந்து மகிழ்ந்தவன். இவ்வாறு சமுதாய நலம் விளைவிக்கும் அந்தணரின் செந்தண்மையான வாழ்வு சங்க காலத்தின் அற வாழ்வுச் சிறப்பாக மலர்ந்திருந்த காரணத்தால் மக்களால் நன்கு மதிக்கப்பெற்றவன் ஆவான். (10) இகபர நலன்களுக்காகக் காமியம் என்ற வேள்வியைச் செல்வருக்காகச் செய்து கொடுத்து, காமக்காணி என்ற நிலக் கொடையைப் பெற்றவனுவான்.[169]

சங்க காலத்து மக்களின் வாழ்க்கைபற்றிய படப்பிடிப்பு நிகழ்த்தும் தொல்காப்பியம் இனங்காட்டும் அந்தணர் நிலை என்ன ?

'அந்த ணாளர்க்கு அரசுவரை வின்றே' (தொல். மரபியல் 83) என்றபடி அந்தணர்கள் ஆட்சி செய்யக்கூடிய அருகதை உடையவராவர். நூலே (பூணூல்), கரகம் (தண்ணீர்க் கமண்டலம்), முக்கோல் (முக்கோல் என்ற கையாசனம்) மணையே (இருக்கை)—ஆயுங் காலை அந்தணர்க்கு உரிய' (தொல் மரபியல்—71) என்றபடி பற்பல சாதனங்களைக் கையாண்டு

167 புறநானூறு—I—ஔவை துரைசாமிப் பிள்ளை—கழக வெளியீடு—1967 —பக்கம் 358

168 Ibid—p.358

169 Journal of Annamalai University—Vol. XV, புறம்—271

வேள்விகளையும் மற்றைய சடங்குகளையும் நடத்தி வைக்க அவ் வந்தணர்கள் கடமைப்பட்டவராவார்கள். பொருள்முதல்வாதக் கண்ணோட்டம் (materialist outlook) உடைய சங்க கால மக்கள் காலப்போக்கில் இவ் வகைப்பட்ட சடங்காசாரத்திற்குத் தங்கள் வாழ்வில் இடங்கொடுத்தார்கள். இச் சூழ்நிலையில் மனித முயற்சியைவிடத் தெய்வ சங்கல்பத்தை அவர்கள் முதன்மையாக்கினார்கள். 'வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்— பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து' என்ற தொல்காப்பிய நியதியின்படி தெய்வத்தின் காப்புறுதியானது பலவகைச் செல்வத்தைவிட உலகியல் வாழ்விலும் வல்லமை கொண்டது என்றான பின்பு, அவ் வல்லமையை மக்கள் வேள்வியினால் அடைய முடியும் என்ற நிலையில் அந்தணருக்கும் அவர்களுடைய சடங்குகளுக்கும் தமிழ்ச் சமூகத்தில் அளவிறந்த மதிப்பு வந்தடைந்தது. சங்க நாளில் நடைமுறை வாழ்வில் காணப் பட்ட சமூக ஒழுகலாற்றினைப் பின்னணியாகக் கொண்டு எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியம் காட்டுகின்ற வாழ்வுநிலை வரலாற்று உண்மைகொண்டு விளங்குகிறது. இலக்கண நூல் என்றவளவில் சமுதாயத்தின் ஒழுகலாற்றினைப் பிரதிபலித்த தொல் காப்பியம் தருகின்ற மேற்படி செய்திகள் யாவும் வரலாற்றுத் தரம் கொண்டவை என்பது தெளிவு.

**சங்கச் சோழரும், வேள்வி முறைச் சமயவுணர்வும், அந்தணர் உறவும்**

'அந்தணர் ஆவொடு பொன்பெற்றார்; நாவலர் மந்தரம் போன் மாண்ட களிறு ஊர்ந்தார் — எந்தை — இலங்கிலைவேல் கிள்ளி' என்று சங்க நாளைய முத்தொள்ளாயிரம் (82) சொல்வது போல, சோழன் கிள்ளியின் அவைக்களத்தில் யானையைப் பரிசாகப் பெற்ற நாவலரைவிடப் பசுவைத் தட்சிணையாகப் பெற்ற அந்தணர் அவைக்களச் சிறப்பில் முதன்மை நிலையைப் பெற்றிருந் தனர். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த—மறை மொழி தானே மந்திரம் என்ப' (தொல்காப்பியம்-செய்யுளியல்-171) என்ற நியதிப்படி இலக்கியப் புலவரின் நேரடியான மொழியை விட அந்தணரின் மறைமொழி தானே மந்திரம் என்றாகிச் சோழ மன்னர்க்குப் பெருமளவிற்கு ஈர்ப்புக் காட்டியது. புதுமையை ஒப்புக்கொள்வதில் சோழர்கள் ஒரு விறுவிறுப்பைக் காட்டினார்கள் என்றுகூடச் சொல்லலாம். சான்றாக, சோழர்கள் இராம கதையை முதன்முதலில் விரும்பி ஏற்றமையைக் குறிப்பிடலாம். வட இந்தியாவில் பரவலாக நிலைபெற்றிருந்த இராம வழிபாட்டின் மன ஈர்ப்புச் சங்க நாளிலேயே சோழரிடம் ஏற்பட்டது; அதுவே பின்னாளைய கம்ப இராமாயண அரங்கேற்றத்துக்குரிய ஆன்மிய ஆர்வத்திற்கான ஆதிக் கருவாகவும் அமைந்தது எனலாம். சங்க காலத்திலேயே சோழர்கள் அவ்வாறு இராம கதையால்

ஈர்க்கப்பட்டதற்கு ஆதாரமாகச் சோழன் இளஞ்சேட்சென்னி யைப்பற்றிய புறநானூற்றுப் பாடலை எடுத்துக் காட்டலாம். சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னியைப் பாடிப் பல பெருங்குடி நகைகளைப் பெற்ற புலவன் தனது சுற்றத் தாருக்கு அவற்றை அளித்து அணியச் சொன்ன போது (இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போன நாளில் வழி யோடு அவள் எரிந்து சென்ற நகைகளை வானரங்கள் மயர்வோடு போட்டுப் பார்த்தது போல) தாறுமாறாக அந் நகைகளை அவர்கள் அணிந்துகொண்டார்கள்.

தென் பாண்டியப் பகுதியின் பரதவரை இச் சோழன் வெற்றி கொண்ட நிகழ்ச்சியானது இப் பாடலின் முகப்பிலேயே இடம் பெற்றுள்ளதிலிருந்து தென்திசையை வென்ற அவதார இராமனின் போராற்றலானது தொனிப்பொருளாக இச் சோழனுக்கும் சென்றடைகிறது. இவ்வாறு அந்தணரையும், வடபுலத்து இராம கதையையும், வேள்விமுறை கலாசாரத்தையும் பெரிதும் ஏற்றுக் கொண்ட சோழர்களைப் பாண்டியரோ, சேரரோ ஒதுக்கிவிட வில்லை; தமிழகத்தின் ஒருமித்த கலாசாரப் பொதுமையானது எவ் வகையிலும் ஊறுபடுத்தப்படவுமில்லை. வேள்விகளைச் செய்கின்ற பெருமையில் இணையற்று விளங்கியவன் 'பல்யாக சாலை' நெடு முடிக்கிள்ளி (சோழன் கரிகாலனின் மகன்) ஆவான்; அவனுடைய சகோதரி மகனான சேரன் செங்குட்டுவன் ஆதித் தமிழ் முறைப்படி அமைந்த பத்தினித் தெய்வ வழிபாட்டை மேற் கொண்டான்; அதே சமயம் வேத முறைப்படி நடந்து கொண்டான்; எப்படி? பத்தினித் தெய்வம் கண்ணகிக்குச் சிலை செய்வதற்கான கல்லினைச் சிவனுரின் உறைவிடமான இமயத்தில் பெயர்த்தெடுத்தான்; புனித கங்கையில் நீராட்டினான்; வடபுல மன்னரான கனக விசயர் தலைமேல் ஏற்றிக் கொண்டு வந்தான். வேள்வி முறையும் தமிழ் முறையும் இணைந்த நிலையை இது காட்டு கிறது. சிலம்பு தருகின்ற வரலாற்று நிகழ்ச்சி கங்கைக் கரையில் நடைபெறுங்காலத்துச் சேரனைத் தேடி வந்த தமிழகத்து மாடலன் என்ற அந்தணனிடம் சோழ நாட்டரசனின் நன்னலத்தைச் சோழ நாட்டின் நலமாகக் கேட்ட நிலையில், அச் செய்தி சொன்ன அவ் வந்தணனுக்குச் சோழன் பரிசில் வழங்கினான். அந்தணர்க்கு உரிய மரியாதையை வழங்கியதில் வேள்வி முறையையும், கௌரவத்தைப் பரிசிலாக வழங்கியதில் தமிழ் முறை யையும் அவன் வட இந்திய மண்ணிலும் கைக்கொண்டான். 'எங்கோ மாதவி கானற்பாணி, கனக விசயர்தம் முடித்தலை நெரித்தது' என்று மாடல மறையோன் சொன்னபோது, இளங்கோவடிகள் ஒரு வரலாற்றியலாளராக (historiographer)

மாறி, தமிழகமும் வடபுலமும் இமயத்தையும் கங்கையையும் போற்றுகின்ற கலாசார ஒருமையுணர்வில் எவ்வாறு இணை சேர்ந்து வளரத் தலைப்பட்டது என்பதை அறிவுறுத்துகிறுர். கலாசாரத்தின் செழுமை அத்தனையையும் பெற்று இந்தியக் கலாசாரம் பொதுமைப் பார்வையாக ஏற்றங்கண்டது. அதே சமயம் தமிழ்முறை வழிபாட்டுக்குரிய நலங்களோடு வேள்வி முறை வழிபாடு ஒருங்கிணைவு கொண்டது. இவை இரண்டின் இணைப்பில் உருவான ஆன்மீயப் பொலிவிற்குரிய அடிப்படை நலமாக வேத வேள்விகளைச் சோழர்கள் முன்னின்று நடத்திஞர்கள். இதற்கு உறுதுணை செய்த அவர்களுடைய மேழிச் செல்வமும், வணிக வருமானமும் தெய்வ வழிபாட்டுக்கும் மனித மனவுயர்வுக்கும் துணை புரிந்தன என்பதுதான் சங்க காலத்திய சோழ நாட்டின் தனிப் பெருஞ்சாதனை என நாம் பாராட்டிப் போற்றலாம்.

தனி மனித ஆன்ம நல உயர்வுக்கும் கடைத்தேற்றத்திற்கும் வழிகாட்டிய சடங்காசார வேத முறை வளர்ச்சியுற்றிருந்த அதே சோழ நாட்டில்—அதே காலத்தில்—மணிமேகலை எழுதிய சாத்தனுரின் மக்கள் வாழ்வுக்குரிய பொதுநலந்தேடும் கருத்தும் நிலவியது. அறமே கூற்றமாகிய பின்பு பாண்டியனை இழந்த அவலமும், பூம்புகாரைக் கடல் விழுங்கிய பின்பு சோழ மக்கள் மனதில் தைத்துநின்ற நிலையாமைக் கொள்கையின் பிடிப்பும் ஒருசேரக் காணப்பட்ட அந் நாளையச் சூழ்நிலையில் தவமகள் மணிமேகலையின் வாயிலாகச் சாத்தனுர் இனங்காட்டுகின்ற இறைவுணர்வானது பொதுநல அறம் என அமைந்திருந்ததைப் பின்வருமாறு சொற்சுடரிட்டு விளக்கப்படுகிறது: ‘அறமெனப் படுவது யாதெனக் கேடான்—மறவாது இது கேள் மன்னுயிர்க்கு எல்லாம்—உண்டியும், உடையும், உறையுளும்’[170] கொடுப்பது தான். பெருஞ்செல்வத்தைப் பெற்று வளவன் என அரசாண்ட சங்கத்துச் சோழ நாட்டரசனுக்கு வேத வேள்வியை நயந்து நின்ற போக்கு அரசியல் ஒழுகலாருக அமைந்திருந்த நாளில் பொதுநலத்தைப் பாராட்டுகின்ற மக்களறக் கருத்தையும் நாட்டில் அச் சோழர்கள் வளரவிட்ட சகிப்புத் தன்மை சோழ நாட்டவரின் சமயச் சார்பான பொறையுடைமையையும் காட்டும்.

### சங்க காலத்தில் காணப்பட்ட சாதி முறை (Caste System in Sangam Age)

நாகரிகமான வாழ்வுக்குத் தேவையான செல்வத்தைக் கடல் கடந்து சென்று வாணிகஞ்செய்து பெற்றதன் விளைவாகப் பல

[170] மணிமேகலை—XXV—வரி 229—231

நகரங்களை உருவாக்கி, வாழ்வின் உயர்நலங்களையும் (refinements) மேம்பட்ட வசதிகளையும் (luxuries) துய்த்த தென்புல நாகரிகம் நிலைபெற்றிருந்த ஆதி நாகரிகத் தமிழகம் கன்னடம், துளு, மலையாளம் சார்ந்த பகுதிகளையும் தன்னகத்தே கொண்டு விரிந்திருந்தது என்றும், அப்போது கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே அகஸ்தியர் போன்றவர்களின் தலைமையில் ஆரியர்களின் வருகை நிகழ்ந்தது என்றும், தமிழகத்தில் ஆரியரின் நாகரிகக் கலப்பு ஏற்படுவதற்கு முன்பு தமிழகத்தில் காணப்பட்ட தமிழகப் பண்பாட்டுச் செய்திகளை அறிவாய்ந்து சொல்லுகின்ற அறிஞன் ஒருவன் தோன்றும்வரை தென்னக நாகரிகத்தின் தொன்மையும், சிறப்பும் தெளிவுறத் தெரியாது என்றும், இதன் காரணத்தால்தான் பண்டைக்கால இந்திய வரலாற்றை எழுதிய வரலாற்றுசிரியர்கள் தென்னிந்தியா என்ற ஒன்று இருப்பதாகவே எண்ணவில்லை என்றும் அறிஞர் வின்சென்ட் ஸ்மித் அறிவுறுத்துகிறுர்.[171]

மேலே கண்டவாறு அமைந்த கருத்துக்கு நேர் மாருக ஆரியரின் வருகைக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்த தமிழர்களின் நிலையானது நாகரிகத்தில் மிகவும் பழங்குடிமையாளருடைய தாகவும் (primitive), வாழ்வியலில் பின்தங்கியவர்க்குரியதாகவும் காணப்பட்டது எனப் பேராசிரியர் சாஸ்திரி அபிப்பிராயப் படுகிறுர்.[172] ஆரியரின் வேத வேள்விச் சமயத்தைப் பின்பற்றிய அந்தணர்கள் தமிழகம் வருவதற்கு முன்பு பௌத்த, சமண சமயவாதிகள்தான் கி.பி. 2ஆம் நூற்றுண்டளவில் தமிழகத்திற்குள் வந்தார்கள் என்றும், தமிழரசர்கள்கூடத் தலைதாழ்த்தி அவ் வந்தணர்களுக்கு மரியாதை செய்தாக வேண்டும் என்ற சமூக மரபு ஏற்படுகின்ற அளவிற்கு அவ்வந்தணர்கள் தங்களுடைய வேத வேள்விகளின் காரணமாக அளப்பரிய செல்வாக்கை நாட்டிலும் நாட்டு அரசனின் அவையிலும் நிலைநாட்டினுர்கள் என்றும், தமிழுக்கும், தமிழரசர்களுக்கும் பற்பல சேவைகளை அவ்வந்தணர்கள் ஆற்றிய நிலையில் தமிழ்ச் சமூகத்தில் உயர்ந்தோர்களாக ஆனுர்கள் என்றும் தூய்மையான தனிக் குடியிருப்பு (அக்கிரகாரம்),[173] அரசரளித்த நிலங்களடங்கிய செல்வம் போன்றவற்றை அவர்கள் பெற்றிருந்தார்கள் என்றும் பேராசிரியர் K. K. பிள்ளை கருதுகிறுர்.[174]

171 'The Oxford History of India' — 1958— p. 42, 43

172 'The Culture and History of the Tamils' — p. 7

173 குறுந்தொகை — 72

174 'Aryan Influence in Tamilagam during the Sangam Epoch— முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—I—பக்கம் 271—279

புராதனப் பழங்குடி மக்களாக இருப்பினும் (1) பெருமை சான்ற, பொருளாதார வலிமை கொண்ட நாகரித்தைப் பெற்ற வர்கள் சங்கத் தமிழர்கள் என்ற வின்சென்ட் ஸ்மித்தின் கருத்தை யும், (2) அந் நாகரிகம் முழு வளர்ச்சி பெருததொன்று என்ற பேராசிரியர் சாஸ்திரியின் கருத்தினைத் தழுவி அந் நாகரிகத்தின் வளர்ச்சி நிலைச் சக்திகள் (creative powers) ஆரியமயமாதலைத் தன்னகத்தே கொண்டு முழுநிலை நாகரிகமாகியது என்ற பேராசிரியர் K. K. பிள்ளையின் கருத்தையும் இணைத்துப் பார்க்கின்ற பொதுமைக் கருத்தை உருவாக்கினுல், அந் நாகரிக வளர்ச்சியின் கலவைத் தோற்றம் (synthesistism) புலப்படும். ஐந்திணை என்ற நிலப்பாகுபாட்டின் அடிப்படையில் உருவானது சங்கச் சமுதாயம் (economic ecological community) ஆகும். பொருள் நெறி வாழ்வின் (materialist life) நிலைக்களன்களை வகைப்படுத்திக்கொண்டு உருவாகி வந்த அச் சமுதாயத்தில் மனிதர்கள் தங்களுடைய பொருளாதாரப் பிடிப்புகளை மேலும் வலுப்படுத்திக்கொள்ள வடபுலத்துச் சாதியாசாரமான வர்ணுஸ்ரம முறையை (சாதி முறையை) ஓரளவிற்கு எடுத்தாளத் தலைப் பட்டார்கள். சான்ருக, சங்க கால முல்லை நிலத்தில் நின்று நிலவிய காடுநிலைப் பொருளாதார அமைப்பு (pastoral economy) வேளாண்மையை நோக்கி விரிவடைந்தது. தனியுடைமை நிறுவனமும் (Institution of private property) தோன்றியது. வட இந்தியாவில் இதிகாச காலத்திலேயே இந்த வகையான நிலை உருவாகிவிட்டது. அதாவது சங்க காலத்திற்கு முன்பு பல நூற்ருண்டுகளுக்கு முன்னமேயே காடுநிலை வளர்ச்சிக்குரிய தலைவனை கண்ணனுடைய தமையன் பலராமன் வேளாண்மை யைச் செய்கின்ற இலட்சியத்தை, தான் எப்போதும் சுமந்து திரிந்த ஏர்க்கலப்பை கொண்டு உலகோர்க்கு உணர்த்தினன். பால் விற்பனையும் (நற்றிணை—142), பூ விற்பனையும் (நற்றிணை—97) தோன்றிவிட்ட முல்லைத் (காடு) திணைப் பொருளாதாரத்தில் ஏர்க்கலப்பையின் பயன் நிலைப்பெற்றதை அக நானூறு (பாடல் – 194) தெரிவிக்கிறது. வேளாண்மைப் பொருளாதாரத்தை வளர்த்துக்கொள்கின்ற போது நிலத்திற்காக நடக்கின்ற போட்டி யில் பங்கெடுக்க அரசு உருவானது.[175] வஞ்சித்திணையில் மன்னர்கள் நிலப்பறிப் போராட்டத்தில் ஈடுபடுகின்ற அளவில் அவர்களுடைய போரார்வத்திற்குச் சமுதாய அங்கீகாரமும் அரசியல் நியதிகளும் வரையறை செய்யப்பட்டன. முல்லை நிலத்தில் இவ்வாறு தோன்றிய முடியரசு அரசியலுக்குரிய தோற்றம் சிறுகச் சிறுக மற்றைய திணைகளான மருதம், நெய்தல்

175 P. T. Srinivasa Iyengar—'History of the Tamils'—1929—p. 68

போன்றவற்றிற்குப் பரவியது. வரலாற்றுக் காலத்துக்கு (pre-historic age) அதாவது 4000 ஆண்டுகளுக்கு முன்னுல் தமிழகத்தில் நிகழத் தொடங்கிய இத்தகைய நானில மக்களின் வாழ்க்கை உருமாற்றம் அவ்வப்போது அந்தந்தச் சூழ் நிலையைப் (environment) பிரதிபலிக்கக்கூடிய கலாசாரத்தை நிலை நிறுத்தியது.[176]

இவ்வாறு பொருளாதார நோக்கமே (economic motivation) தமிழர்களின் அரசியல் கலாசார வாழ்வியலுக்கு அடிப்படையாக அமைந்திருந்தது. காவிரியில் சோழரும், பொருநை, வைகையில் பாண்டியரும், பாலாற்றுப் படுகையில் சேரரும் தங்களுடைய அரசுகளை உருவாக்கியபோது மேலே சொல்லப்பட்ட பொரு ளாதார விரிவாக்கம் நிறைவு பெற்றுவிட்டது எனலாம். ஆனுலும், தமிழகமெங்கும் ஒரே சீரான சூழ்நிலைச் சார்பான கலாசார விரிவாக்கம் (expansion of environmentalist culture) நடந்தேற வில்லை. முடியரசின் அதிகாரத்தை மக்களுக்குரிய வாழ்வு நலமாக எடுத்துக்காட்டிய ஆரியமுறை வாழ்வு தமிழக மன்னர்களுக்கும் ஏனைய குறுநில மன்னர்களுக்கும் துணைபோயிற்று. ஆகவே, தமிழ கம் அவ்வாறு ஆரிய மயமாதலை அவர்கள் ஆதரித்தார்கள். தமிழ்ச் சமுதாயத்தின் வளர்ச்சிக் கரு எப்போதுமே மேல் குடியாளரிடந் தான் காணப்பட்டது; அத்தகைய பெருங்குடியாளத் தன்மை யோடு கூடிய பழக்கங்களில் நம்பிக்கை கொண்டிருந்தது.[177] இந்த நம்பிக்கையின்மேல்தான் அச் சமுதாயத்தின் மரபியக்கம் (traditionalism) வளர்ந்தது. தனி மனிதர்கள் தங்களுடைய தனிப் பெரும் ஆற்றலின் துணை கொண்டு முன்னேறிச் சமுதாயத் தின் பெருங்குடியாளனுக மலர்வதை (aristocratic self-expression) ஊக்கப்படுத்துகின்ற முறையில் தமிழ்ச் சமுதாயம் தன்னை உருமாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. வடபுலத்தின் புதிய கலாசாரத்தை இந்த வகையான பெருங்குடியாளர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அப் புதிய கலாசாரம் சாதி முறையைக் கொண்டிருந்தது. அதனை முழுமையான அளவில் தமிழகம் ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழக அரசியல் மற்றும் பொருளாதார சமூகத் துறைகளில் அச் சாதி முறை எந்த அளவிற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பதையும், தனியார்வத்திறன் (individual enterprise) காட்டுகின்ற வாழ்வு முறையைச் சார்ந்த பெருங்குடி யாளரின் மேலாக்கத்தின் துணை கொண்டு தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சியின் வேகம் எவ்வாறு துரிதமாக்கப்

176 V. R. R. Dikshitbar—'Studies in Tamil Literature and History' 'திரிவேணி' Vol. I—No. 3—1928—p. 72

177 N. Subramanian—' Sangam Polity '— 1966—P. 85

பட்டது என்பதனையும் விரிவாகக் காண்போம். பிறப்பினுல் ஏற்பட்ட உயர்வை அடிப்படையாகக் கொண்ட சாதி முறையைச் சங்கத் தமிழகம் பூரணமாக ஒப்புக்கொள்ளாததையும் தனி நபர்த்திறனுர்வத்திற்கு (concept of individualism வழிகாட்டு கின்ற போட்டி முறைச் சமூக அமைப்பை (competitive community) எவ்வாறு அது ஆரியமயமாதலுடைய பாதிப்பின் நடுவே அமைத்துக்கொண்டது என்பதனையும் ஈருகக் காண்போம்.

**சங்க காலத்து அரசியலில் சாதி முறை (Caste System in Sangam Politics)**

வடபுலத்தின் சாதி ஆசாரப்படி அமைந்த அந்தணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு பாகுபாடுகளில் சூத்திரரைத் தவிர்த்த ஏனைய மூவரும் அச் சமுதாயத்தின் நலங்களைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்டார்கள்; சூத்திரர்கள் அந் நலங்களை உண்டாக்குகின்ற ஏவலாள்களாக அமைந்தார்கள். தமிழகத்தில் ஆரிய மயமாதல் நிலைப்படுத்தப் பட்டபோது தமிழக அரசியலில் சாதி முறையின் பாதிப்பு (impact) பின் கண்டவாறு நிகழ்ந்தது:

1. தமிழகத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற வகுப்புகள் (groups) அவ் வகை ஆரிய மயமாதலுக்குப் பின்பு ஏற்பட்டன. இனங்கள் சாதிகளாக அமையவில்லை. பூணூல் அந்தணர் மட்டும் அணிந்த காரணத்தால், சங்க காலத் தியச் சாதிமுறை அவ்வந்தணர்களையே பூரணமாகச் சார்ந்து இருந்தது.[178] அந்தணரைத் தவிர ஏனைய அனைவரும் சூத்திரர் களே. இதன்படிப் பார்த்தால் சேர, சோழ, பாண்டிய அரசர்கள் அனைவரும் சாதியில் கடைநிலைக்குரிய சூத்திரர்களே ஆவர் என்பது உணரப்படும்.[179] அந்தணரைப் பொறுத்த அளவில் இந்த நிலை இருந்தது. ஆனுல் அரசகுடிப் பிறந்தோரின் உயர்வைத் தமிழ்ச் சமுதாயம் ஒப்புக்கொண்டிருந்தது. சேர, சோழ, பாண்டியர் என்ற மன்னர் பரம்பரையினர் தமிழகம் ஆரிய மயமாதலுக்கு உட்படுவதற்கு முன்பே—வடவரின் வருகைக்கு முன்பே—தமிழகத்தில் நிலைபெற்றவர் ஆவர் என்பது தெளிவு. ஏற்கெனவே சமூக உயர்வோடு இருந்த அம் மன்னர்கள் தங்க ளுடைய தனித் தன்மையை மேலும் வலுப்படுத்திக் கொள்கின்ற முறையில் வடபுலத்தார் கொண்டு வந்த வேள்வி முறையை ஒப்புக்கொண்டார்கள். இந்த வகையில் வேள்விகளைச் செய்த லென்பது மன்னர்களின் அந்தஸ்துச் சின்னமாகவும் (status symbol), அதன் விளைவாக வேள்விகளைச் சமுதாய உயர்வினுக்

178 N. Subramaniam—op. cit., p. 257
179 Ibid—p. 256

கான மனங்கவர் அடையாள இயலாகவும் (command of symbolism) அம் மன்னர்களால் கைக்கொள்ளப்பட்டது.

2. அரசாங்கத்தை நடத்துவதற்குத் தேவையான தெய்வப் பலத்தை அரசுக்குத் தருகின்ற வலிமை வேள்விகளுக்கு அமைந்திருந்தது என்று தமிழரசர்கள் நம்பிய காரணத்தால் 'ராஜசூயம்' போன்ற பெரிய வேள்விகள் நடந்தேறின. ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குப் புகழும் வந்தடைந்தது. ஆனாலும் அரசர்கள் தனிச்சாதியாளராக (இவ் வேள்விகளின் மேலாக்கத்தால்) மாறி விடவில்லை. உழுதுண்பவரான வேளாளரிடமிருந்துதான் தங்களுக்கான மனைவியரை அவர்கள் வரித்துக்கொண்டார்கள். சோழன் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிரிடமிருந்தும் அவன் மகன் கரிகாலன் நாங்கூர் வேளிரிடமிருந்தும் மணப் பெண்களைப் பெற்றனர்கள் என நச்சினார்க்கினியர் கூறுகிறார்.[180] சோழன் மாநிதிக் கிழவன் என்ற நிலையில் வேளாண்மையில் சிறந்த ஆலங்சேரியில் பெண்ணெடுத்ததாகத் தமிழ்நாவலர் சரிதையில் மேற்கோள் காட்டப்பட்ட சோழ மண்டல சதகப் பாடல்—30 கூறுகிறது. இவ் வேளாளரே வணிகராகவும்[181] போர் வீரர்களாகவும் காணப்பட்டதால் முல்லை நிலத்து ஆயர்களும் வேளாளராக ஆனார்கள் என்பதைக் 'கொல்லைக் காவலர்' என்ற அடைமொழியை அவர்களுக்கு நற்றிணை (பாடல் 266, 289) வழங்குவதிலிருந்து புலப்படுகின்றது. அரசின் அந்தஸ்துக்கான மாராயம் என்பதனைச் சார்ந்த நிலையில் ஏனாதி, காவிதி போன்ற அரசுப் பட்டங்களை[182] (state awards) (போர் வீரராகவும், உழவர்களாகவும், வணிகராகவும் பணியாற்றிய அந்தந்தத் துறைக்குரிய ஒரே வகுப்பாரான) அவ் வேளாளர்கள் பெற்று, தமிழரசர்களின் அரசரவையில் நாட்டின் அரசியலுக்குரியவர்களாக அமர்ந்திருந்தார்கள். 'ஆசான் (அமைச்சர்), பெருங்கணி (சோதிடர்), அறக்களத்து அந்தணர், காவிதி (பட்டம் பெற்றோர்), மந்திரக் (ஓலை மந்திரம்) கணக்கர் (கணக்காயர்—Auditor-general) போன்றோராக அரசவையில் அவர்கள் செயல்பட்டார்கள்.[183] இவ் வகையான உயர்நிலையை அவர்கள் தங்களுடைய சாதி உயர்வைக் கொண்டு அடையவில்லை. மன்னரும் ஏனையோரும் ஒரே குலம் என்றாகிய பின்பு திறமைக்கு மதிப்புக் கொடுக்கின்ற அளவில் தமிழரசின் செயலாக்கம் விரிவாக்கங்கொண்டு விளங்கியது.

180 நச்சினார்க்கினியர் உரை—'தொல்காப்பியப் பொருளதிகாரம்'—30—கழக வெளியீடு—1968—பக்கம் 65—66

181 நச்சினார்க்கினியர்—op. cit., p. 65

182 தொல்காப்பியம்—பொருளதிகாரம்—63

183 சிலம்பு—XXII—8, 9

ஆனால், இந் நிலையை அடைய பொருளாதார வலிமை (economic power) கொண்டிருந்த வேளாளரால்தான் முடிந்தது. ஆகவே, அந் நாளைய மன்னராட்சியின் அரசியல் வலிமை சாதியின் பிடிப்பில் வளரவில்லை. அவ்வரசியலுக்குத் துணை நின்றவர்களும் சாதிமுறை கொண்டு இயங்கவில்லை. இந்தியாவில் மன்னனின் சாதியைச் சார்ந்து இருந்தால்தான் அம் மன்னனின் அரசாட்சி சுமூகமாக நடைபெறும் என்று சொல்வதற்கில்லை. முடி திருத்தும் மருத்துவக் குலத்தவளுக்குப் பிறந்த மகாபத்மநந்தன் சாதி முறையை ஒப்புக்கொள்ளாத சமயமான சமண மதத்தைச் சேர்ந்தவன் ஆவான்.[184] இந் நிலையில் அர்த்த சாஸ்திரம் எழுதப்பட வேண்டிய அளவிற்கு நாட்டில் வேள்வியாளரின் அதிருப்தி நிலவிய போதிலும்[185] நந்தர்களின் ஆட்சி வலிமையில் குறைந்திருக்கவில்லை. நந்தர்களின் ஆட்சியை வெறுத்துத் தமிழகத்துக்குள் ('எண்ணூற்றுவர்'—'ஐநூற்றுவர்' என்றழைக்கப்படுகின்ற அளவில்) அலையலையாக வந்த அந்தணர்கள் தமிழகத்திலும் சாணக்கியப் புரட்சியை நடத்துவதற்கு உரிய நிலையில் தமிழ் மன்னர்கள் கடைநிலைச் சாதியாளராகவோ, வேள்வி வழிச் சமயாசாரத்திற்கு எதிர்ப்பாளரான சமணரைச் சார்ந்தோ வாழவில்லை. இவ்வந்தணர்க்கு முன்பு புத்தரும் சமணர்கள் தாம் தமிழகத்துக்குள் வந்தார்கள் என்ற கருத்தின்படி பார்த்தால், தமிழக மன்னர்கள் அவ்விரு மதங்களைத்தான் முதலிலேயே தழுவி இருக்க வேண்டும். இந் நிலையில் விருந்தோம்பல் சிறந்த தமிழர்களால் எந் நாட்டவரும் வரவேற்கின்ற பொது நிலையைப் பயன்படுத்தி அந்தணர்களும் தமிழகத்தில் குடியேறுவதற்குத் தடை இருந்திருக்க முடியாது. அப்போது அவ்வந்தணர்கள் சமணர்களாகவோ புத்த மதத்தாராகவோ காணப்பட்ட தமிழரசர்களை எதிர்த்திருக்க வேண்டும். இந்த வரலாற்று அனுமானம் (historical hypothesis) எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாகப் பின்வரும் கருத்தையும் அதே அனுமானமாகச் சொல்லலாம். அதே தமிழ் மன்னர்கள் புத்தமதத்தினராக இருந்திருந்தால், புத்த மதத்தைச் சேர்ந்த களப்பிரரின் படையெடுப்பு நிகழ்ந்துகூட இருக்காது. அல்லது அப் படையெடுப்பினால் ஏற்பட்ட அரசியல் விளைவுகள் (சங்க காலத்திற்குப் பின்புள்ள தமிழகத்திற்கு இருண்ட காலத்தைக் (Dark Age) கொண்டு வரக்கூடிய அளவில்) அவலத்தோடு அமைந்திருக்கா

184 Vincent A. Smith—'The Oxford History of India'—1958—p. 83

185 Ibid—p. 83

அரசர்களை மாமனிதர்களாகவும் தெய்வமாகவும் ஆக்குகின்ற வேள்விகளை அந்தணர்கள் செய்வதை அரசமுறைச் சமுதாயம் (monarchical order) வளர்ந்து வந்த சங்க காலத்தின் தமிழரசர்கள் ஒப்புக்கொள்வதில் மன ஈர்ப்புக் காட்டினார்கள். தங்களை க்ஷத்திரியர்களாக மாற்றிக்கொள்ளுவதில் மராட்டிய சிவாஜி போல ஆர்வம் காட்ட வேண்டிய அவசியம் அவர்களுக்கு இல்லை. இதற்குக் காரணம் என்ன ?

1. அந் நாளைய அரசியலில் அரசர்களின் தோற்றமும் வளர்ச்சியும் தொன்மைக்குரிய மாண்போடும் மரியாதையோடும் (sanction of custom) ஏற்கெனவே நிலைபெற்று விளங்கின. சந்திரனின் வழிவந்தோர் என்று சொன்ன பாண்டியரையும், அவர்கள் அவ்வாறு கொண்ட பட்டத்திற்குப் போட்டியாகச் சூரியனிலிருந்து தோன்றியவர்களாகத் தங்களைச் சொல்லிக் கொண்ட சோழர்களையும்[186] வேள்விவழிச் சென்ற அந்தணர்கள் நேரடியாக ஆதரித்தார்கள் ; அவ்வரசர்களின் தோற்ற மரபுகளுடைய ஏற்றத்தை வேள்விகளால் புராணீகப்படுத்தி வலுப்படுத்தினார்கள். இந் நிலையில் சூத்திரர்களாகவே தமிழ்மன்னர்கள் விளங்கினார்கள்.

2. தமிழ் மன்னனை அரசுக் கட்டில் ஏற வைப்பதற்கு உரிய திறன் நாட்டு மக்களிடந்தான் இருந்தது என்றும், போர்க்களத்தில் வெற்றி பெற்றுத் திறமையை நிரூபித்த இளவலுக்கு அந்தந்த நாட்டு மக்களின் நல்லெண்ணம் வாய்க்கப் பெற்றது என்றும், அதனால் அவனையே அவர்கள் மன்னனாகத் தேர்ந்தெடுத்தார்கள் என்றும் V.R.R. தீட்சதர் கூறுகிறார்.[187] இந்தக் கருத்துகளை இந்த ஆராய்ச்சியாளர் தொல்காப்பியத்தின் பிள்ளையாட்டுத் துறையினின்றும்[188] வியாக்கியானமாக எடுத்தாள்கிறார். மக்களால்தான் தமிழ்மன்னர்கள் அரசுரிமைப் பெற்றார்கள் என்றமைந்த கருத்து உண்மையானால், ஒப்பந்தப் பிணைப்பியல் சமுதாயமாகத் (contractualist society) தமிழ்ச் சமூகம் தோற்றமளிக்கும் எனலாம். இந் நிலையில் மன்னர்களின் பிறப்புரிமைகளாக விளங்க வேண்டிய சமூக உயர்வும், அரசுரிமையும், தெய்வப் பிறப்பும் ஒவ்வாத செய்திகளாகிவிடும். இம் மூன்று பிறப்புரிமைகளையும் வலியுறுத்துகின்ற சந்திர-சூரிய வமிசத்தினர் என்ற புராணிகப் பிறப்புப் பற்றிய கருத்துகளை வேள்வி செய்த அந்தணர்களும்

186 N. Subramanian—'Sangam Polity'—1966—p. 39

187 'Studies in Tamil Literature and History'—1936—p. 182

188 தொல்காப்பியம்—பொருளதிகாரம்—60

ஏற்றுக்கொண்டு அவற்றை மக்களிடையே பரப்பியபோது பிள்ளை யாட்டுத் துறை சொல்வதுபோல, மக்கள் வழிநாயகமாக அரசர்கள் தோற்றமளிக்க வேண்டியது அவசியமில்லை. இவ்வாறு ஏற்கெனவே அமைந்திருந்த சந்திர-சூரிய உயர் பிறப்புகளின் துணை கொண்டு விளங்கிய அரசர்கள் தங்களுக்கான சாதி உயர் வைக் காட்டாமல் தங்களின் தனிக்குடிப் பிறப்பையே ஆள்கின்ற சாதி (ruling class) உயர்வாக மாற்றிக்கொண்டார்கள் எனலாம். சேர-சோழ-பாண்டியர் என்ற பெயர்கள் அவர்தம் குலங்களைக் (classes) குறிக்கும் என்று கால்டுவெல் கூறுவது முன்னரே குறிக்கப் பெற்றது. அரச குலப் பிறப்பினுல் ஏற்பட்ட உயர்வை அரசர்களும் அந்தணர்களும் வேள்விகளால் வலுப்படுத்தினுர்கள். இவ்வாறு துரிதமாக வளர்ந்து வந்த மன்னராட்சி இயலுக்கு (monarchy) அவர்கள் துணை சேர்த்தார்கள். அந் நிலையில் தமிழ் மன்னர்கள் சாதிமுறையைப் பெயரளவில் மேற்கொள்ளா விட்டாலும் அந்தணரோடும் அவர்தம் வேள்வியாசாரத்தோடும் கொண்ட நலனிணக்கத்தை (identity of interests) மன்னர்குலப் பிறப்புரிமை உயர்வாக உருமாற்றி அமைத்துக்கொண்டார்கள். இந் நிலையில் மன்னர்க்கெனத் தனிச்சாதியோ அதற்குரிய உயர்வோ கற்பிக்கப்பட அவசியமில்லாத நிலை ஏற்பட்டது. அந்தணரின் சாதிமுறையை எதிர்த்து மக்கள் அனைவரையும் ஒரு வித ஜனநாயகச் சிந்தனையில் ஒன்று சேர்த்த சமண, பௌத்த சமயங்களைத் தமிழ் மன்னர்கள் அரசியல் முறையில்தான் எதிர்த் தார்கள் ; ஆனுல் அவற்றை அடக்கு முறைக்கு உட்படுத்த வில்லை. தங்களுக்கான பரம்பரைப் பிறப்புரிமையின் உயர்வில் குடிகொண்டிருந்த அரச மரியாதையைச் சங்க மக்கள் ஒப்புக் கொண்டிருந்ததை அவர்கள் அறிந்து பெருமிதங்கொண்டார்கள். 'அடிதொட்டு சூளுரல்' என்றபடி வழக்காடு மன்றத்தில் மன்ன னின் காலைத் தொட்டுச் சாட்சியஞ்சொல்வது[189] என்பது அந் நாளைய அரசர்களின் பிறப்புரிமையின்படி ஏற்பட்டிருந்த இறை மையைக் காட்டும். இந் நிலையில் சாதியுணர்வை அம் மன்னர்கள் வலிந்து சென்று தேடிக்கொள்ளவில்லை.

**சங்க நாளையப் பொருளாதாரத்தில் சாதி முறை**

பொருளாதாரத்தைப் பொறுத்தமட்டில் தமிழகம் ஒரே மாதிரியான வளர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை. ஐந்திணைகளுக்கு உரித்தான முறையில் பலதரப்பட்ட பொருளியல் வாழ்க்கை அமைப்புகளைக் (economic patterns) கொண்டு சங்கத் தமிழகம் காணப்பட்டது. போர் வீரராக விளங்கியவர்கள்தான் அப்

189 சிலப்பதிகாரம்—XII—வரி 163

பொருளாதார அமைப்பைப் பாதுகாத்த அரசர்களுக்கும் ஏனைய குறுநில மன்னர்களுக்கும் துணை நின்றார்கள். 'அவர்களுள் உழுதுண்பார்க்குக் 'கலத்திற் பிரிவும் உரித்து'[190] என்றளவில் வேளாளர்கள் வணிகர்களாகவும் செயல்பட்டதுபற்றி முன்னர்க் குறிக்கப்பட்டது. வணிகர்களின் பொருள் தேடுகின்ற திறமையைப் பயன்படுத்திய தமிழ் மன்னர்கள்—குறிப்பாகச் சோழ மன்னர்கள்—பெருநிதி திரட்டினார்கள். சோழன் கரிகாலன், அவனுடைய மகன் பெருநற்கிள்ளி நடத்தியது போலப்[191] பெரிய வேள்விகளை அவர்கள் செய்வதற்கு அந் நிதி அவர்களுக்குப் பெரிதும் உதவிற்று. அஸ்வமேத யாகத்தை எந்தச் சங்கத் தமிழ் மன்னனும் செய்ததில்லை.

சோழ நாட்டுப் புகார் நகரத்து அந்தணனுக்குப் பொன்னைத் துலாபாரச் சடங்கின்போது வழங்கிய சேரன் செங்குட்டுவனைப் போலக் குறுநில மன்னர்கள் சடங்குகளைச் செய்ய முடியாத நிலையிலிருந்தார்கள். ஆனால் பரிசில் வாழ்க்கைக் கொண்ட பாணர்களைப் பெருமளவிற்கு ஆதரித்ததன்மூலம் வேள்வி செய்ய முடியாத குறையை அவர்கள் நிவர்த்தி செய்துகொண்டார்கள் எனலாம். பாணர்கள் சங்க காலச் சமுதாயத்தின் கடைநிலை மக்களாகக் கருதப்பட்டார்கள். ஆனாலும், அவர்களுடைய கலைவாழ்வு சிறந்தது; புனிதமானது. ஏற்கெனவே அவர்களுக்குச் சமூகத்தில் ஏற்பட்டிருந்த மதிப்பு குறுநில மன்னர்களின் தனிப்பட்ட ஆதரவில் மேலும் பெருகியது. இதன் காரணமாகவும் மன்னர்களுக்கும் பாணர்களுக்கும் இடையே காணப்பட்ட உயர்வு—தாழ்வு என்ற சாதி வேறுபாடு குறுகிக்கொண்டே வந்தது.

சங்கத் தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சியில் எல்லா மக்களும் சம்பந்தப்பட்டு இருந்தார்கள். அவர்கள் பொதுவாக எல்லா வேலைகளையும் செய்தார்கள். வட இந்தியாவில் இந்த நிலைமை காணப்படவில்லை. சாதி ஆசாரம் (வர்ணாஸ்ரம தர்மம்) அங்கு நிலவியதால், சூத்திரர்கள்தான் கடைநிலை வேலைகளைச் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால் வட இந்தியாவில் (சங்க காலத்துக்குச் சமமான) மௌரியரின் ஆட்சிக் காலத்தில் நடைபெற்ற பொருளாதார வளர்ச்சிக்கு ஈடு கொடுக்கின்ற வகையில் சூத்திரர்களின் எண்ணிக்கை கணிசமாகக் காணப்படவில்லை. இதன் காரணமாக மௌரியர்கள் தங்களுடைய இராணுவத்தைக் கொண்டு கலிங்கத்தை அடக்கி, அங்கிருந்து 1,50,000 சூத்திரர்களை நாடு கடத்திக்கொண்டு போய்ப் பேரரசின் எல்லைகளிலிருந்த

190 நச்சினார்க்கினியர்—தொல்காப்பியம் பொருளதிகார உரை—கழக வெளியீடு—1966—பக்கம் 65

191 புறம்—224

காடுகளை அழித்து வேளாண்மையைப் பெருக்கவும், நாடு நகரங்களை உருவாக்கவும் பயன்படுத்தினார்கள்.[192] சங்கத் தமிழகத்தில் அரசன் உட்பட எல்லாருமே சூத்திரர்களாகக் காட்சியளித்த போது மேலே சொன்ன மௌரியரின் முறையை பின்பற்ற வழி இல்லை. ஆனாலும் அதன் பொருட்டுப் பொருளாதார ஆக்க வேலைகள் தடைபடுவதற்கில்லை. ராஜவளியம் என்ற சிங்கள வரலாற்று நூல் கூறுகின்றபடி கஜபாகு I மன்னனின் தந்தையான வன்கண்சிக தீசா என்பவனின் ஆட்சியின்போது 12,000 தொழிலாளரை இலங்கையிலிருந்து சோழன் கரிகாலன் சோழநாட்டுக்குக் கொண்டு வந்து காவிரிக் கரையை உயர்த்து கின்ற பணிக்கு உட்படுத்தினான் என இராபர்ட் ஸ்வெல் அறிவிக்கிறார்.[193] மௌரியருக்குக் கலிங்கத்தின் சூத்திரர்களும், சோழர்க்குச் சிங்களவர்களும் உதவுகின்ற முறையில் அந் நாடு களின் பொருளாதாரம் உள்நாட்டு ஆள்பலம் இல்லாமல் நலிந்து காணப்பட்டது. மௌரிய நாட்டில் சூத்திர சாதியினர் வேண்டிய அளவிற்குக் காணப்படாமையையும், சோழநாட்டில் அரசர் உட்பட எல்லோருமே (அந்தணரைத் தவிர) காணப்பட்டமையும் மேற்சொன்ன கட்டாயச் சேவைகளை அயல் நாட்டினர் செய்ய வேண்டியதாயிற்று என்பது ஆராய்ச்சிச் செய்தியாகும்.

### சங்கச் சமுகத்தில் சாதி முறை (Caste in Sangam Society)

சாதி, குலம், வர்ணம் போன்ற பிரிவுகள் சங்க நூல்களில் காணப் பெறவில்லை என்ற கருத்து நிலவுகிறது.[194] 'தங்குலக் கோதிய தகைசால் அணியினர்' என்று இளங்கோ கூறுவதி லிருந்து குலத்தளவில் அமைந்த சாதிமுறை தெரிய வரும். உழவர், ஆயர், பொற்கொல்லர் போன்ற கைவல்லுநர், படையாச்சி (அறந்தாங்கியார்), வளியர் (மீன் பிடிப்போர்), புலையர் (அரசாங்க ஆணைப்படி குற்றவாளிகளைச் சிரச்சேதம் பண்ணுவோர்) ஆகியோர் அந்நாளையச் சாதியாராக விளங்கினர் என ஆராய்ச்சி யாளர் V. கனகசபை கூறுகிறார்.[195] சாதிகள் நான்கே என்பதை 'வேற்றுமை தெரிந்த நாற்பாற்றுள்ளும்' என்று பாண்டியன் நெடுஞ்செழியன் தனது பாடலில் (புறம்—183) கூறுகிறான்.

192 Romila Thapar—'A History of India'—1969

193 HISI—1932—p. 15

194 M. Rajamanickam—'Social Life of the Tamils'—Sangam Age—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—I—1966—பக்கம் 334

195 'The Tamils—Eighteen Hundred Years Age'—1904—பக்கம் 114

## சங்கத் தமிழகச் சமுகத்தில் தீண்டாமை (Institution of Untouchability)

சங்கத் தமிழகத்தில் தீண்டாமை என்ற சாதிக் கொடுமைகூட நிலவியது. தென்னகத்தில் சாதிமுறை வந்ததுபற்றி A.L. பாஷாம் கீழ்க்கண்டவாறு கூறுகிருர்: தொடக்க நாள்களில் ஒன்றுக் கொன்று ஏற்றத் தாழ்வுகள் காணப்படாத குழுக்கூட்டங்கள் (tribal groups) பல நூற்றுண்டுகள் கழிந்த பின்பு சமூக வகுப்பு களாக உருத்திரண்டு மாறின. அப்போது வட இந்தியாவில் காணப்பட்டதைவிடத் தென்னகத்தில் வாழ்ந்த அந்தணர்கள் தங்களுடைய வேள்வி முறைச் சடங்குகளைக் கடினப்படுத்தித் தீவிரமாக்கினுர்கள். தீண்டத்தகாதவர்களின் நிலை வட இந்தியா வில் இருந்ததைவிடத் தென்னிந்தியாவில் மிகவும் தாழ்த்தப் பட்டது. பின்வரும் அகச் சான்றுகளைச் சங்கச் செய்யுளினின்றும் கொடுத்து ஓரளவிற்குச் சாதி முறையும் பெருமளவிற்குத் தீண்டாமையும் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவியதை நிரூபிக்கலாம்:

1. 'இழி பிறப்பாளன் கருங்கைச் சிவப்ப—வலிதுறந்து சிலைக்கும் கருந்துடி,[196] என்று துடியன் என்ற சாதியாரை அந்தணப் புலவர் உறையூர் மருத்துவன் தாமோதரனுர் (புறம்—170) குறிப்பிடுகிருர்.

2. 'துடியன், பாணன், பறையன், கடம்பன்' என்று இந் நான்கு அல்லது குடியும் இல்லை' —என மாங்குடிகிழார் கூறுகிருர் (புறம்—335).

3. போர் முகத்தே வேல் போன்ற ஆயுதங்களைச் சுமந்து சென்று போரிடும் வீரர்க்கு வழங்குகின்ற தொழிலையுடையவர் துடியர் எனப்படுவர். இவர்கள் இழிபிறப்பினர் ஆவர் என மு. இராகவையங்கார் விளக்குகிருர்.[197]

4. சங்க கால அரசர்கள் அரசு வீற்றிருப்பது 'நாளவை' எனப்படும். பரிசில் வாழ் பாணர்களை உபசரிப்பது அவ்வரசர்க்கு அமைந்த சமூக மரபு ஆகும். 'பாணர் நாளவை' என்று அரசரின் 'சுற்றம்' என்ற உடன்கூட்டம் முழுவதும் பாணர் களாகவே விளங்கிய நாள்களும் உண்டு. இவ்வாறு அரசின் ஆதரவில் உயர்வும் அந்தஸ்தும் பெற்ற பாணருங்கூடத் தாழ்த்தப் பட்டு வைக்கப்பெற்ற கொடுமைக்கு ஆளாயினர். அவர்கள் 'மாதங்கா' (கிராம மத்தியத்தை அடையாதார்) என வட

196 A. L. Basham—'The Wonder that was India'—1963—p. 138
197 'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி'—1960—பக்கம் 123

மொழியில் அழைக்கப்பெற்றுர்கள். தீண்டத்தகாதவராக இவர்கள் கருதப்பட்டதால், இவர்கள் கையில் ஏந்திச் சென்ற வழியில் தரையில் அடித்து, தங்களது வருகையைத் தெரியப்படுத்தித் தீண்டாமையை வழிநடத்தினர்.

சங்க காலத்துக்குப் பின்புகூட இவர்களுக்கு இதே சாதிக் கொடுமை நீடித்திருந்தது என்பதைக் கி.பி ஏழாம் நூற்றுண்டுக் குரிய பாணன் என்ற வடமொழி வல்லுநன் (ஹர்ஷச் சக்கரவர்த்தி யின் அவைக்களப் புலவன்) புலப்படுத்துகிருன். தன்னுடைய காதம்பரி என்ற நூலில் வடநாட்டு மன்னனிடம் வந்த தென்னுட்டு மாதங்க சாதிப் பெண் கைக்கோலை அவ்வரசனின் அவைக்களத்தின் தரையில் அடித்துத் தனது வருகையை உணர்த்தினுள்[198] என்று அப் புலவன் குறிக்கிருன். 'வெண் கடைச் சிறுகோல் அகவன் மகளிர்' என்ற இவ் வகைப் பெண்ணைக் குறுந்தொகை (பாடல்—298) சித்திரித்து, காதம்பரி கொடுக்கின்ற செய்திக்குக் காலத்தால் முந்திய ஆதாரத்தை வழங்குகிறது. சங்க காலத்தில் பாணரைப் பொறுத்து நிலவிய சாதிமுறை மாருமலிருந்தது என்பதைத் தொல்காப்பியவுரை யாளர் நச்சினுர்க்கினியர் 'பாணரும் பொருநரும் தத்தஞ் சாதியில் திரியாது வருதலின் சேர வைத்தார்' என்று சொல்வதி னின்றும் அறியலாம்.[199]

5. பட்டினப்பாலை தாழ்த்தப்பட்டோரின் குடியிருப்புப்பற்றிப் பேசுவதைச் (பட்டினப்பாலை வரிகள் 75—76) 'சேரி இழிகுலத் தோருக்கும் தெரு' எனச் சோழ நாட்டு நச்சினுர்க்கினியர் உரை செய்து வழி மொழிகிருர். மேலே சொல்லப்பட்ட துடியன், பாணன் போன்ருேர் சங்க காலத்தில் சாதிக் கூறுபாடுகளின் தொடக்க நிலைக்குரிய கொடுமையை அனுபவித்தவர்களாவர் எனலாம்.

### பொற்கொல்லரும் தீண்டாதவரா ?

பொன் வேலை செய்கின்ற கலைவல்லாரான பொற்கொல்லர் கூடத் தீண்டத்தகாதவராக இருந்தனர் என்பதைச் சிலப்பதி காரம் (XVI—வரி 107) சொல்வதைக் கொண்டு சில அறிஞர்கள் விளக்குவார்கள்.[200] 'மெய்ப்பைபுக்கு விலங்கு நடைச் செலவிற்' பொற்கொல்லார் வந்தார் என்பது செய்தி. அரசரோடும் அரசர்

198 Ibid—p. 93

199 தொல்காப்பிய உரை—கழக வெளியீடு—1968—பக்கம் 282

200 N. Subrahmanian—'Sangam Polity'—1966—p.261

சுற்றத்தோடும் அவர்தம் இல்லங்களிலேயே நெருங்கிய இணக்கம் கொண்டிருந்த கலைவல்லுநரான பொற்கொல்லரைத் தீண்டத் தகாதவராகச் சங்க காலம் பெற்றிருந்தது எனக் கூறுவது பொருத்தமாகாது.

குடி மக்கள் (Bonded Labour) : மாற்ற முடியாத அமைப்புக் கொண்ட (rigidity) சாதி முறை காணப்பெருமல் செய்யும் தொழிலால் சாதி முறை போன்ற அமைப்புக்கு உட்பட்டுச் சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலியோர் அவ்வவ்வகைச் சாதியினராக விளங்கினர்.[201] உரிமைச் சுற்றம் என்றழைக்கப்பட்ட இவர்களின் நிலை அடிமைகளுடையதைவிட உயர்ந்ததாகக் காணப்படவில்லை.[202] தமிழகப் பரிவுணர்வுப் பண்பாட்டில் குற்றேவல் புரிகின்றவர்களை—குறிப்பாக அடிமைகளாகக் காணப்பட்ட அடிமக்களையும் குடும்பங்களிலும் அரசாங்கத்திலும் பணிசெய்த பணிமக்களையும்—மனிதாபிமானத்தோடு நடத்தினர் என்பது தெளிவு. இந்த வகையில் மேலே சொல்லப்பட்ட சூதர் போன்ற சாதியினர் பணிமக்கள் என்ற குற்றேவல் பணியாளராக விளங்கினர் ; கொத்தடிமைகளாகச் செயலாற்றினர்.

அடிமை முறை (Institution of Slavery) : அடிமக்களாகிய அடிமைகள் சங்க காலத் தமிழகத்தில் காணப்பெறவில்லை என்றும், இதுவே அந் நாளையத் தமிழ் நாகரிகத்தின் மேம்பாட்டினைத் தெரிவிக்கும் என்றும் ஆராய்ச்சியாளர் V. கனகசபை தெரிவிக்கிருர்.[203] இதையே வழிமொழிந்து அடிமை முறை என்பது தமிழர்களிடம் காணப்பெறவில்லை என வின்சென்ட் ஸ்மித் கூறுகிருர்.[204] தமிழகத்தில் மனிதர்களைச் சந்தையில் விற்றது பற்றிய செய்தி கிடைக்கவில்லை [205] என்ற கருத்திற்கு மாருக, ' அடியோர் ' என்பவர்கள் விற்றுக்கொள்ளுவதற்கு உரிய அடிமைகளாவர் என்றும், அடிமை வழக்கம் தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் வழக்கிலிருந்தது என்றும் மு.இராகவையங்கார் அறிவிக்கிருர்.[206] ' அடியோர் பாங்கினும், வினை வல பாங்கினும்' எனக் கூறி விற்றுக்கொள்ளுவதற்குரிய அடிமைகளையும், ஏனைய குற்றேவலாளரையும் சித்திரிக்கிறது. ' குற்றிளையோரும் அடியோர் பாங்கும்' எனச் சிலம்பு சோழ நாட்டில் கண்ணகியின்

201 நச்சினுர்க்கினியர்—தொல்காப்பிய உரை—கழக வெளியீடு—1966—பக்கம் 281
202 N, Subrahmanian—op.cit., p.106
203 ' The Tamils—Eighteen Hundred Years Ago'—1904—p.114
204 'Early History of India '—1914—p.441
205 N. Subramanian—op.cit.,p. 284
206 தொல்காப்பியம் பொருளதிகாரம்—23

புகார் நகர வீட்டில் அமைந்திருந்த அடிமைகளை மற்றறைய ஏவல் கேட்போரிடமிருந்து பிரித்து வைக்கிறது.[207] சங்க கால அடிமைகள் தங்களையே விற்றுக்கொண்டவராவார்கள் என்பதைத் திருக்குறளின் 'அடிமை புகுத்தி விடும்' (குறள் - 608), 'விற்றற்குரியர் விரைந்து' (குறள்—1080'), 'விற்றுக் கோட்டக்க துடைத்து' (குறள்—220) என்ற வரிகள் புலப்படுத்தும். தன்னையே விற்றுக்கொண்டு அடிமை புகுந்தவன் தன்னுடைய தோளிலும் மார்பிலும் தனது எஜமானனது இலச்சினையைப் பொறித்துக்கொள்வது அந் நாளைய மரபு ஆகும். சங்க நூலான கலித்தொகை (பாடல்—84) 'மார்பிற் பொறியொற்றி கொண் டாள்வல்' என்று சொல்வது இதனைக் குறிக்கும். அடிமைகள் தனி சாதியாராக அமையவில்லை. பொதுவாகப் பொருளாதார காரணங்களே சங்க கால அடிமை முறைக்குக் காரணமாயின. போர்க்காலங்களில் எதிரியின் நாட்டில் சிறைப்படுத்தப்பட்ட பெண்கள் பொதியில் என்ற பொது மன்றத்தில் நட்டு வைக்கப் பட்டிருந்த மரத்தால் ஆன தெய்வத்தை வணங்கித் தங்களுடைய உய்வுக்கு இறைஞ்சினுர்கள்;[208] ஆரியப்பேடியர் என்போர் தமிழ்மொழி தெரியாத அலிகள் ஆவர்; இவர்கள் சேரர் செங் குட்டுவன் மனைவி போன்ற அரச மகளிரின் இருக்கைகளைக் காவல் செய்தனர்.[209]

## தனியார்வத்திறனை மதித்து வளர்த்த சங்க காலச் சமுதாயம் (Individualism in Sangam Society)

சங்க காலத்தில் பிறப்பினுல் ஏற்றத் தாழ்வுகளை வலியுறுத்தும் சாதிமுறை முழு அளவில் வளர்க்கப்படவில்லை; அடிமை முறை என்பது பொருளாதாரப் பிடிப்புகளால் உண்டானது. சங்க காலத்தின் வட இந்தியாவில் சாதி முறையில்தான் அடிமை முறை இருந்ததென்றும் அந்தணரும் சூத்திரரும் காணப்பட்ட அச் சமுதாயத்தில் சாதிமுறையினுல் ஏற்படுகின்ற உயர்வைக் கொண்ட அடிமைகள் தங்கள் அடிமைத்தனத்தின் பொருளா தாரப் பிடிப்புகளை விலக்கிக்கொண்டு (தங்கள் சாதியின் இயல்பு களுக்கு ஏற்ப) சுதந்தரம் அடைவதையும் பேராசிரியை ரொமிலா தாபர் கூறுகிருர்.[210] சங்கத் தமிழகத்தின் அடிமை முறையில் சாதிகளின் ஆதிக்கம் காணப் பெறவில்லை என்பது தெளிவு. பெரிய அளவிலான உற்பத்தி முறைக்கு இத்தகைய அடிமை

207 சிலப்பதிகாரம்—XVI—வரி 84—85

208 பட்டினப்பாலை—வரி 246—249

209 சிலப்பதிகாரம்—XXVII—வரி—186

210 'A History of India'—1969—p.76

முறை வட இந்தியாவில் பயன்படவில்லை என்றும் அதே பேராசிரியை கூறுகிறார்.[211] அசோகனின் பாட்டன் சந்திரகுப்தனின் மாநில ஆணையாளரால் (governor) 800 ஆண்டுகள் பயன்படுமாறு கிர்னர் என்ற இடத்தில் கட்டப்பட்ட நீர்த் தேக்க அணைக் கட்டில்[212] வேலை செய்யக் கலிங்க நாட்டுச் சூத்திரர்கள் பயன் பட்டார்களா என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். அதே அணையைக் கரிகாலனுக்குச் சமகாலத்திலான கி.பி. 150-ல் வாழ்ந்த ருத்ரதாமன்[213] சீரமைத்த போது அடிமைகள் பயன்பட்டார்களா என்பதும் ஆராய்வதற்குரிய செய்தியாகும். ஆனால், கரிகாலன் ஈழத்தவரைக் காவிரிக்குக் கரை எடுப்பிக்கின்ற கட்டாயச் சேவையில் ஈடுபடுத்தினன் என்பது முன்னர்க் குறிக்கப் பெற்றது.

**மேற்சொன்னவற்றால் புலப்படும் உண்மை என்ன ?**

தமிழகப் பொருளாதார வளர்ச்சியில் அடிமைகள் மற்றும் அனைவரும் சாதி முறைக்கான அந்தஸ்தைக் கொண்டு செயல் பெறவில்லை தனியார்வத்திறனோடு ஒவ்வொருவரும் தங்களுடைய நலன்களை முன்னேற்றஞ்செய்விக்கின்ற தாளாற்றி வினை செய்கின்ற வாய்ப்பைச் சங்கத் தமிழகம் வழங்கியது. பொருளாதாரத் துறையில் ஏற்பட வேண்டிய பொதுவான முன்னேற்றத்திற்காக இந்த முறையில் சங்ககாலச் சமுதாய அமைப்பும் வரையறை செய்யப்பட்டிருந்தது. அரசியல் போன்ற துறைகளில் தனிமனிதத் திறனுழைப்புக்கு வாய்ப்பு அளிக்கின்ற வகையில் தமிழகச் சமூகவியல் செயலாக்கம் கொண்டதைப் பின் வருமாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்:

**அரசியலில் தனிமனிதத் தனித்திறன் (Role of Individualism in Politics)**

குறுநில மன்னர்கள் தங்களுடைய நிலவுரிமையைப் பெருக்கிக்கொள்ளும்பொருட்டு மற்றவர்கள் நிலங்களின்மேல் படை எடுத்துச் செல்லவும், தங்களுடைய மேலாண்மைக்கு (Suzerainty) உட்பட்டு வரி செலுத்தி வந்த பகுதிகளை மற்ற மன்னரிடமிருந்து பாதுகாத்துக்கொள்வதற்குப் படைக்கலம் ஏந்திப் போர் செய்யவும் சங்கச் சமுதாயத்தில் தகுதி பெற்றிருந்ததைப்பற்றித் தொல்காப்பியம் சொல்வதை (பொருளதிகாரம்—32) நச்சினார்க்கினியர்

211 Romila Thapar—op' cit., p.76

212 Ibid—p.76

213 A. L. Basham— 'The Wonder that was India'—1963—p.62

விளக்குகின்றபோது[214] முடியுடை வேந்தர் போலக் குறுநில மன்னர்களும் நடந்துகொள்வதற்கு அந் நாளைய சமூக நீதியும், அரசர்களுக்கிடையே நிலவிய அரசியல் சட்ட நியதிகளும் இடங் கொடுத்தன என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். தங்களுடைய நாட்டை விரிவாக்கிக்கொள்ளப் படை நடத்தும் உரிமை அவர் களுக்கும் உரியதுதான் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட நிலையில் வட இந்திய அரசியல் நீதியான மச்ச நியாயம்[215] செல்லுபடி யாகாது. ஏனென்றால், குறுநில மன்னர்களை வென்று அழித்துப் பேரரசாக வளர்கின்ற அரசியல் ஏகாதிபத்தியத்திற்கு மச்ச நியாயம் பொருந்தும். சங்கத் தமிழர்கள் இதை ஒப்புக்கொள்ளவில்லை. இத் தகைய அரசியல் கோட்பாட்டினை அரசுகள் தங்களுக்குள் எழுதப் படாத சட்டமென மேற்கொண்டிருக்க வேண்டும். வெளிநாட் டுறவை வகைப்படுத்துகின்ற நிறுவன முறைச் செயல்பாட்டகம் (foreign office) சங்கநாள்களில் அரசுகளில் காணப்பட்டது என்ற கருத்து[216] வலிமை பெறுகிறது. ஆனாலும் சோழ மன்னனொருவன் தன்னுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து தான் வேட்டைக்குச் சென்றபோது உடன் போகாதத் தவறைச் செய்த வேளிர் ஒருவனுடைய பற்களைப் பிடுங்கி வெண்மணி என்ற ஊரிலுள்ள கோட்டைக் கதவில் அப் பற்களை ஊன்றி வைத்தான் என்று அக நானூறு (பாடல்—211) கூறுகிறது. ஆனால், இத்தகைய நிகழ்ச்சி களின் விளைவாகக் குறுநில மன்னர்களின் தனி வேட்கை அரசிய லார்வம் குன்றிப் போய்விடவில்லை.

தனியார்வத்திறனோடு தமிழ் மக்கள் அரசியலில் செயல் பட்டதை அத் துறைக்கான அவர்களுடைய ஆக்க சக்தியின் வெளிப்பாடு (expression of creative power) எனத் தெளிவுற வேண்டும். இத்தகைய நுட்பப் பார்வையில் (perspective) கணிக் கப்பெறுத சங்கத் தமிழரின் வாழ்வியல்பற்றி உண்மைக்குப் புறம் பான முடிவுகளை ஆங்கில நாட்டறிஞர் A.L. பாஷாம் போன்ற அறிஞர்கள்கூட மேற்கொள்ளுகின்றார்கள். சங்கத் தமிழர்களின் குண அமைப்பில் (character) இரக்கமற்ற தன்மை இழையோடு கிறது என்றும், இவ்விரக்கமின்மையோடு மற்றவனின் உயிரைப் பற்றிய இலட்சியமின்மையும் சேர்ந்து அத் தமிழர்களின் (திராவிடர் களின்) வாழ்வில் விஜய நகர சாம்ராஜ்யம் வீழ்ச்சியுறும் வரை

214 தொல்காப்பியப் பொருளதிகார உரை—கழக வெளியீடு—1968—பக்கம் 67

215 A.L. Basham—'The Wonder that was India'—1963

216 V.R.R. Dikshithar—'Studies in Tamil Literature and History'—1928 p. 248

(பதினாறும் நூற்றாண்டு) தொடர்ந்து காணப்படுகின்றன என்றும் A.L. பாஷாம் கூறுகிறார்.[217] இத்தகைய குண அமைப்பைக் கொண்டிருந்த சங்கத் தமிழகத்தாருக்கு வாய்த்த வேந்தர்களும், குறுநில மன்னர்களும் வட இந்திய அரசர்களைவிட இரத்தப் பசியுள்ளவர்கள் என்றும், வடமொழியில் காணப்படாத போர் அட்டூழியங்களையும் போர் முடிந்த பின்பு நரமாமிச விருந்துண்ணலையும்பற்றிய செய்திகள் தமிழிலக்கியத்தில் காணப்படுவதாகவும், சமஸ்கிருதத்தில் இதிகாச மாவீரர்களைப் போல இரக்கமின்மை, கட்டுக்கடங்காமை, வெறியாட்டம், துர்தெய்வ வழிபாடு, மதுவிலும் போரிலும் மன ஈடுபாடு, மட்டற்ற காதலுணர்வு போன்றவை கொண்டு சங்கத் தமிழர்கள் வீறுப்புடன் வாழ்ந்தார்கள் என்றும், ஆரிய மயமாதல் அரைகுறையாக நிகழ்ந்திருந்த காலத்தில் இத்தகைய தமிழர்தான் காணப்பட்டனர் என்றும் அதே அறிஞர் மேலும் கூறுகிறார்.[218] 'பேய் மகள் பற்றிய பிணம்' (புறம்-369) என்றபடி அமைந்த பரணி இலக்கியத்தின் மரபுகளை[219] வாழ்க்கையின் நடைமுறை உண்மைகளாக வலிந்து பொருள் கொண்ட அறியாமை நிலையில்தான் நரமாமிச விருந்துண்ணலைச் சங்கத் தமிழருக்கு உரியதாக ஏற்றிச் சொல்ல முடியும்.

தனியார்வத்திறன் கொண்டு செயல்பட்ட சங்கத் தமிழர்களின் அரசியலில் குறுநில மன்னர்கள் மட்டும் யதேச்சைவாதிகளாக (free footers) நடந்துகொண்டார்கள் என்பதற்கில்லை. மன்னர்களின் மைந்தர்களும் அவ்விதமே தங்களுடைய செயற்திறனைக் காட்டினார்கள். பிள்ளையாட்டு என்ற அரசியல் கோட்பாட்டின்படி எந்த அரசிளங்கோவும் தனியார்வத்திறனோடு கூடிய போர் வெற்றியைப் போரில் பெற்றால், அதனை மக்கள் பாராட்டினார்கள் ; போர்க்களத்திலேயே அவனுக்கு முடிசூட்டுகின்ற வெற்றி வீரனுக்குரிய பெருமிதமான கௌரவத்தை வழங்கினார்கள்.[220] இவ்வாறு போரார்வம் என்பது தனியார்வமாக வெளிப்பாடு கொண்டு, சமூகத்தின் ஒப்புதலும் கொண்டது. இத்தகைய போரார்வச் சூழ்நிலையின் காரணமாகக் கிறிஸ்து சகாப்தத் தொடக்கக்கால நூற்றாண்டுகளில் சேர, சோழ, பாண்டியர்கள் இடை விடாமல் போர் செய்தார்கள்[221]. அவர்கள் இடையறாது போர் செய்வதற்கு என்ன காரணம் ?

217 A.L. Basham op. cit. p. 62

218 A. L. Basham—op. cit., p. 62

219 T. P Meenakshi Sundaram—'The Parani Poetry'—முதல் உலகத் தமிழ் மாநாட்டு மலர்—II—1966—p. 196

220 N. Subrahmanian—op. cit., p. 46

221 A.L. Basham—op. cit., p. 62

போரார்வ குணத்திற்கு மனோதத்துவ முறையில் விளக்கஞ் சொல்லும்போது தனியார்வத் திறன் காட்டுகின்ற வாழ்வு முறை சங்கத் தமிழர்களுடைய நாகரிகத்தின் ஆதாரமாக விளங்கியது எனக் குறிப்பிடல் பொருந்தும் எனலாம்.

**சங்க காலத்துப் பொருளாதாரத் துறையில் தனியார்வத் திறனுக்கும் (Individualism in the Field of Economy)**

தனிமையாக முயற்சி செய்து செயற்கரிய செயல்களை ஆற்றியவரை 'உயர்ந்தோர்' என்றும், மற்றையோரைப் 'பின்னோர்' என்றும் மனித முயற்சியை அளவையாகக் கொண்டு தொல்காப்பியம் தமிழ்ச் சமுதாயத்தை வகைப் படுத்தியது. நச்சினார்க்கினியர் இத்தகைய பின்னோர் வேளாளர் ஆவர் என்று சொல்வது மேற்கொண்டும் முயற்சிக்குரியவராக அவர்கள் விளங்க வேண்டிய நிலையைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது எனலாம். தொழில் முறையில் வேகமாக வளர்ந்து புகார், மதுரை போன்ற பல நகரங்களைக் கட்டிப் பொருளியலின் மேலாக்கத்தை நுகர்ந்து வாழத் தலைப்பட்ட அந் நாளையத் தமிழ்ச் சமுதாயத்தின் பின்னிலக் காயல்களாக (backwaters) முல்லை நிலவாழ் ஆயர்களும், குறிஞ்சி நில வேட்டுவர்களும் காணப்பட்டார்கள். இவர்களைப்பற்றித் தொல்காப்பியம் பேசிய போதிலும் அது தொகுத்தளித்த நால் வகைச் சாதியினரோடு அவ்விரு குழுக் கூட்டங்களையும் (tribes) சேர்த்து வைக்கவில்லை. நாட்டின் பொருளாதாரப் பொது வளர்ச்சியில் (main stream of national economy) பங்கு பெருமல் நாட்டாராகவே (folk) வாழத் தலைப்பட்ட அவ்விரு குழுக்களும் தனியார்வத்திறனைப் பேணாத கூட்டு வாழ்க்கை முறையைக் கைக் கொண்டிருந்ததால் ஏனைய தமிழ்ச் சமூகத்தினின்றும் தனித்து வைக்கப்பட்டனர் எனலாம்.

'பின்னோர்' என நச்சினார்க்கினியரால் கருதப்பட்ட வேளாள ரில்தான் வணிகரும் காணப்பட்டனர் என்பதை முன்னர்ப் பார்த் தோம். அதே 'பின்னோர்' தங்களுடைய தனியார்வத் திறனைக் கொண்டு பெருநிதி திரட்டியபோது அரசர்கூட அவர்களுக்குக் 'காவிதி' போன்ற அரச விருது வழங்கி, அவர்களு டைய தனியார்வத்திறனைச் சமுதாய நலமாகப் போற்றினர்; அதனை ஆற்றுப்படுத்தினர். 'வாணிக மரபின் வருபொருளீட்டி நீணிதிச் செல்வனாய் நீணில வேந்தனின் எட்டிப்பூப்பெற்று' சிறப்போடு தமிழக வணிகர்கள் வாழ்ந்தார்கள் என மணிமேகலை விரித்துரைக் கிறது.[222] நீணில வேந்தனுக்கு நிகராக விளங்குகின்ற முறை

222 சிறைசெய் காதை—XXII—வரி 13

யில் வேளாளர்கள் எப்படி வளர்ந்தார்கள்? நீணிதிச் செல்வராகவும் அவர்கள் வளர்ச்சியுற்றதால்தான், சங்கச் சோழ நாட்டில் இவ்விதமான பெருநிதியோடு விளங்கிய கோவலன் வேளாளராகக் குலத்தளவில் தோற்றங்கொண்டபோது அரசர்க்குரிய நலன்களையும் துய்த்தது முன்னர்க் கூறப்பட்டது.

பாண்டியன் வெற்றிவேல் செழியன் ஆயிரம் பொற்கொல்லரைக் கொன்ருன் ; அவனது தலைநகரத்துக்குக் கொற்கை (கொல்+கை) என்ற பெயரமைவதற்குக் காரணமாயிருந்த அத் தண்டனை[223] பொற்கொல்லரை ஒரு சாதியாராக எண்ணி நிறைவேற்றப்பட்டதல்ல; தொழில் துறையில் ஏற்பட்டிருந்த நாணயக் குறையை (fall in the professional morals) நீக்குவதற்காகவே அப் பெரிய தண்டனை வழங்கப் பெற்றது எனலாம். தனியார்வத் திறனை மதிக்கின்ற சமுதாயத்தில் பொதுமை அறமும் (collective responsibility) பாதுகாக்கப்படுவது அவசியமாகும். சோழநாட்டுப் பிரஜைகளுக்குப் பாண்டிய நாட்டில் ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளுக்குப் பாண்டிய அரசு தமிழகத்திற்கான பொதுமை அறத்தை மனதில் நிறுத்தி, அரசியல் தீர்வு காண்பது என்பது வரலாற்றுக்குப் புதிதல்ல. சோழ நாட்டான் ஒருவனுடைய பரிசிலைப் பெற்றதன் தொடர்நிகழ்ச்சியாக வர்த்தகன் அபாண்டமாகக் களவு குற்றஞ்சாட்டப்பட்டுச் சிறையிடப்பட்ட போது அவ்வந்தணரின் மனைவி அரற்றி, ஐயை என்ற கிராம தேவதையை வேண்டி, அத் தெய்வத்தின் கோவில் கதவைத் தெய்வ நிகழ்ச்சியாக அடைக்கச் செய்ததைக் கேட்ட பாண்டிய மன்னன் அவளுடைய கணவனை விடுவித்து, அவள் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டனன்.[224] அது அரசியலுக்குரிய நீதிக்கான பிராயச்சித்தமென ‘ மறைநூல் வழுகதத்து கொண்டால் பொற்கொல்லரின் மரண தண்டனை பொற்கொல்லத் தொழில் நல உயர்விற்காக வழங்கப்பட்டது எனக் கொள்ளல் தகும். தமிழகமெங்கும் தொழில் துறையின் மேம்பாட்டிலும் அம் மேம்பாட்டுக்கு உதவுகின்ற தனிநபர்த் தொழிலொழுக்கத்திலும் நேரடியான மன ஈர்ப்பை இச் செய்தி கொண்டு புலப்படுத்தலாம்.

### சங்க காலத்திய சமுகத்தில் தனியார்வத்திறனுக்குரிய மதிப்பீடுகள் (Values of Individualism in Sangam Society)

சங்கத் தமிழகத்தாரின் சமுதாய உயர்வு சாதியின் பெயரால் அமையவில்லை. தனிப்பட்ட நபரின் தனியார்வ முயற்சியினுல்

223 சேவியர் தனிநாயகம்—இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டு விழா மலர்—1968—ஆங்கிலப் பிரிவு—பக்கம் 31

224 சிலம்பு—XXIII—வரி 55-84

பெற்ற மேம்பாடுதான் அவர்களுக்குச் சமூக அந்தஸ்தைக் (social prestige) கொண்டு வந்தது. அந்தணர்கள் மற்றவரைவிடத் தனிப்பட்ட செயல்திறன் காட்டினர்கள். விபூதி அணிவதோ, நாமம் இடுவதோ இல்லாமல்[225] 48 வயது வரை திருமணம் செய்யாமல் ஈர உடையோடு மூன்று காலமும் எழுத்தில் வழங்கப்படாத[226] மந்திரங்களைச் சொல்லி முத்தீ வளர்த்து, தவமியற்றுகின்ற தனித்திறனை அவர்கள் வெளிக்காட்டியதால் முக்காலமும் உணர்ந்தவர்கள் என்ற மதிப்போடு வாழ்ந்தார்கள். மதுவும் மாமிசமும் அவர்களால் அனுபவிக்கப்பட்டன என S. வையாபுரிப்பிள்ளையும், பேராசிரியர் சாஸ்திரியும் கருதுவதை ஒப்புக்கொள்வதற்குரிய சான்றுகள் நிருபன அளவில் காணப்பெறவில்லை. சமண, புத்த மதங்களை மடக்குவதற்கு இந்துமதம் எடுப்பித்த எதிர்ப்புரட்சியின் தொடக்க நிலையிலேயே போட்டி மதங்களுக்குரிய கோட்பாடான புலால் உண்ணாமையை இந்து சமய அந்தணர்கள் ஏற்றுக் கொண்டுவிட்டார்கள் எனச் சொல்ல வேண்டும். திறமையை வளர்க்காத புரிநூல் மார்பரைத் தமிழ்ச் சமூகம் மதிக்கவில்லை என்பதைச் சிலம்பு விளக்குகிறது.[227] வடபுலத்து அந்தணரில் இரு வகை உண்டு என்றும், அவர்களில் வேத வேள்வியாளர் ஒரு பிரிவு என்றும், மற்றுமொரு பிரிவினர் ஹரப்பா நாகரிகத்தில் காணப்பட்ட திராவிடருக்கு உரிய மந்திரத் தந்திரங்களை ஏற்றுக் கொண்டு, அவற்றைப் பயிற்சித்த (அதர்வ) அந்தணர்களாகக் காணப்பட்டனர் என்றும் A. L. பாஷாம் கூறுகிருர்.[228] ஹரப்பாவின் திராவிட நாகரிகத்தினரான சங்கத் தமிழகத்தார் தங்களுக்கு எளிதாகவும் மன ஈர்ப்புக்குரியதாகவும் காணப்பட்ட மந்திரத் தந்திரங்களைக் கைக்கொண்ட அந்தணரைப் பாராட்டாமல் வேத வேள்வியாளரைப் பின்பற்றியதானது அத் தமிழர்களின் உயர்நல வாழ்வை அடையக் கருத்தார்வத்தைக் (z'st for life) காட்டும். இவ்வாறு தமிழரால் போற்றப்பட்ட அந்தணர் 'நான்மறை அந்தணர்' என்ற நிலையிலிருந்து 'அறக்களத்து அந்தணர்' (அரசனுக்குரிய ஆலோசகர்கள்) நிலைக்குத் தங்களை (தங்களுடைய தனியார்வத் திறனைக்கொண்டு) உயர்த்திக் கொண்டனர்.

சங்கத் தமிழகத்தில் ஒவ்வொருவரும் தங்களைப் பெருங்குடியாளரின் மனப்போக்குக்கும் நாகரிக வாழ்வு நிலைக்கும் உயர்த்திக் கொள்கின்ற மனமுனைப்புக்கொண்டார்கள் என்பதை ஆயர்கள் என்ற வளர்ச்சிப் பருவத்தினரான நாட்டார்கூடத் (folk)

225 திருமுருகாற்றுப்படை—24

226 குறுந்தொகை—156

227 சிலம்பு—XIII—வரி 38—39

228 A. L. Basham—'The Wonder that was India'—1963—p.139

தங்களுடைய ஆய்ச்சியர் குரவையில் 'நாராயணாவென்னா நாவென்ன நாவே' என்று பாடித் தங்களுடைய மனவுயர்வைக் காட்டுவதினின்றும் அறியலாம்.[229] சங்கச் சமூகத்தில் கல்வியாளருக்கே முதலிடம்; சாதி உயர்வாளருக்கு அல்ல – என்பதனைப் பாண்டியன் நெடுஞ்செழியனுடைய பாடல் (புறம்—183) உணர்த்துகிறது. அதோடு மட்டுமல்ல; மூத்தவனுக்குத்தான் ஆளுகை உரிமை என்பது குடும்பத்தில்—நாட்டில்—நிலைநாட்டப் பட்டிருப்பதுகூடக் கல்வியறிவுடையவன் இளையோனாக இருப்பின், அவன் பொருட்டு அவ் விதி தளர்த்தப்பெறும். அவனுடைய தனித்திறனைப் பெறுகின்ற முறையில் அச் சமுதாயத்தில் அவனையே தலை நிலைத்து வைக்கப்பெறும். இவ்வாறு கல்வியின் வளர்ச்சியானது சமுதாயத்தின் தனிமனிதர்களைத் தனித்திறன் காட்டி உயர்த்துவதாயிற்று. அதன்மூலம் சமுதாய நலம் சிறப்படைவதற்கும் துணை செய்கின்ற அறிவியலாக்கம் உருவாக்கப்பட்டது. வேதங்களைப்பற்றிய அறிவைக் கல்வியாக அந் நாளைய மக்கள் ஒப்புக்கொள்ளவில்லை என்பதைத் தொல்காப்பியத்திற்கு உரை செய்ய வந்த இளம்பூரணர் புறநானூறு 170ஆவது பாடலை மேற்கோள் காட்டி நிலைநாட்டுகிறார்[230].

தனியார்வத்திறனை வளர்க்கின்ற இப்படிப்பட்ட சமுதாயம் நலம் புரக்கும் கல்வியானது பரம்பரையாகத் தொழில் செய்பவரிடம் அவர்தம் குடிப்பிறப்பின் சூழலில் தானாகவே கிடைக்கப்பெறுவதை ஒட்டிச் சமுதாயத்தில் சாதிமுறைகூடத் தலை தூக்கியது. இதை ஒப்புக்கொள்ளக்கூடிய மனப் பக்குவத்தை அந் நாளைய மக்கள் பெற்றிருந்தார்கள் என்பதைச் சங்கப் புலவர் முன்றுரை அரையர் தமது பழமொழிப் பாடல் 21-ல் எடுத்துக் கூறுகிறார். கல்வியே சமுதாய நலமீட்டும் சாதனம் (instrument for social development) என்றான பின்பு, அக் கல்வி கொண்ட தனி நபர்கள் சாதிமுறையையும், மூத்தவனுக்கு உரிமை என்ற சமூக மரபுகளையும் தாண்டிச் சமூகத்தில் அரசின் இணக்கத்தோடு உயர்வு பெறுவர் என்ற நிலை ஏற்பட்டது. இதுவே தனி நபரின் தனித்திறமை வெளிப்பாட்டுக்கு வழி காட்டியது; சமுதாயத்தின் ஆக்கம் வலுப்பெற்றது. ஆரிய மய மாதலினால் சிறுகச் சிறுகச் சங்கத் தமிழகத்தில் ஏற்பட்ட சாதி முறையின் வளர்ச்சியைத் தனி மனிதத் திறனை மதிக்கின்ற வகையில் திசை திருப்புகின்ற பெரு முயற்சியைச் சங்கத் தமிழர்கள் மேற்கொண்டதானது சங்கத் தமிழக வரலாற்றுக்குரிய பெருமை மிக்கப் படலம் எனச் சொல்ல வேண்டும். ஆனால், அதில்

229 சிலம்பு—XVII–வரி 147

230 இளம்பூரணர்—தொல்காப்பியம்—பொருளதிகார உரை

அவர்கள் பூரணமான வெற்றி கொள்ளவில்லை. ஆனாலும், தனி மனித உயர்வை (growth of individualism) கொண்டு சமுதாய ஆக்கத்தை உருவாக்க முனைந்து நிற்கும் தற்கால இலட்சியங்களை (modern ideals) சங்கத் தமிழர்கள் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே கைகொண்டிருந்தது பாராட்டத் தகுந்தது ஆகும். பிறப்புரிமைக்கு உரிய சாதி உயர்வை மட்டுப்படுத்தி, தனிநபர்த் திறமைக்கு ஆக்கங்கொடுக்கின்ற சமூக முறையானது ஐரோப்பிய வரலாற்றில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நெப்போலியனுடைய திண்மையான சீர்திருத்தங்களுக்குப் பின்புதான் நிலை கொண்டது. ஆனால், கி. மு. 3ஆம் நூற்றாண்டு தொடங்கி, சங்கத் தமிழர்கள் தனிமனிதரின் திறமைக்கு மதிப்புக் கொடுத்தும், சாதிமுறையின் வளர்ச்சியை நிதானப்படுத்தியும், தன்னளவில் ஆக்கச் சக்தியைத் தன்னுள் ஊற்றெடுக்க வைக்கும் சமுதாயத்தை (self—generating creative society) உருவாக்கியும் வைத்தார்கள். சங்கத் தமிழர் களின் செயலாற்றலைக் காட்டிய இத்தகைய சமூகயியலறிவு கனிந்து முதிர்வதற்கு முன்பு சங்க காலத்தை முடித்து வைத்த களப்பிரரின் படையெடுப்பு நிகழ்ந்தது.

சங்க நாளையத் தனிச் சிறப்புக்குரிய சமூக மதிப்பீடுகள் களப்பிரரின் காலத்தில் அழிந்துபட்டபோது தனியார்வத்திறன் அடியோடு மங்கிப்போய்விடவில்லை. விஜயநகரப் பேரரசின் வீழ்ச்சிவரை இத்தகைய தன்முனைப்பு திராவிட குண அமைப்பு என்ற முறையில் தொடர்ந்து வந்ததாக A. L. பாஷாம் கருதுவது முன்னர்க் குறிப்பிடப்பட்டது; இது உண்மை. களப்பிரரின் காலத்திலேயே சங்க காலத் தனிநபர்த் திறனுர்வம் பக்தி மார்க்க மாக உரு மாறுகின்ற துளிர் வளர்ச்சியை நாம் பார்க்க முடிகிறது. பல்லவர் காலத்தில் அப்பக்தி மார்க்கம் முதிர்ச்சி பெற்றும் தமிழ்ச் சமூகத்தினுள் (களப்பிரரின் காலந்தொட்டு) வலிமை அடைந்து வந்த சாதிமுறைக்குள் சென்று சங்கமம் ஆகியது. ஒன்பதாம் நூற்றாண்டில் வளரத் தொடங்கிய விஜயாலயச் சோழர்களின் ஆட்சிக் காலத்தில் சங்க காலத்திற்குரிய தனிநபர்த் திறனுர்வம் (individualism) பெரிதும் அழிந்துபட்டது. அச் சோழச் சமுதாயத்தில் அவரவர்க்கு என அமைந்த சமூக ஸ்தானத்திற்குரிய—அதாவது சாதிக்கு உரிய—கடமைகளை ஆற்றுவது மட்டுமே பெரிதும் விரும்பப்பட்டது.[231] சமுதாயத்திற் காகவே 'தனி மனிதர்கள்' என்ற கோட்பாடு கொள்கையளவிலும் செயலளவிலும் நிலைநாட்டப்பட்டது. சங்க காலத்தில் தலைதூக்கி நின்ற தனிநபர்த்திறனுர்வம் காலப்போக்கில் சாதி ஆசாரமாக

231 K. A. N. Sastri—'A History of South India'—1958—p. 309

மாறுவதற்குரிய முறையில் தமிழகத்தின் அரசியலமைப்பிலும் பொருளாதார வளர்ச்சியிலும் அடிப்படையான பல மாறுதல்கள் ஏற்பட்டன. முல்லை நிலத்திலுள்ள ஆநிரையைக் களவாடி அப் பசுக்களைத் தின்று பசியாறி வாழ்கின்ற பாலைநிலத்து எயினர்[232] போன்ற குழுக்கூட்ட வாழ்வியலுக்குரியவர்களை (Tribalism) நாகரிகப்படுத்துகின்ற பெரும்பணியைத் தனியார்வத்தில்தான் தனிநபர்கள் செய்தாக முடியும். தமிழகத்தின் எல்லாப் பாகங் களிலும் பட்டினப்பாலை சித்திரிக்கின்ற, ‘ காலின் வந்த நிமிர்பரிப் புரவி ’ கொண்ட தேர் நடத்தி, மன்னராட்சி முறையின் சட்ட நிர்வாகத்தை நிலைநாட்டுகின்ற பெருஞ்சாதனையையும் அத்தகைய தனிநபர்த் திறனுர்வங்கொண்டுதான் தனிநபர்கள் ஏற்படுத்த முடியும்.

குழுக்கூட்டங்கள் மறைந்து வேளாண்மைப் பொருளா தாரத்தோடு வணிகயியலுக்குரிய பொருள் வளப்பமும் தமிழகத்தில் சமுதாய நலமாக அமைந்த பின்பு, தனியார்வத்திறனைச் சமூக மதிப்பீடாகக் கொண்டிருந்த சமூக முறை—சங்க காலத்தின் தொடக்க காலச் சமுதாயம்—வழக்கொழிந்தது. அரசியலும், பொருளாதாரமும் தென்னிந்தியக் கனபரிமாணத்தில் விரிவாகிப் போன பின்பு, தனிநபர்த்திறனுக்குரிய சமூகக் கோட்பாடுகள் களையப்பட்டன. இந் நிலையில் ஏற்கெனவே சமகால வளர்ச்சிக் குரியதாக அனுமதிக்கப்பட்டிருந்த சாதிமுறைக்குப் புதிய விளக்க மும் விருப்பமும் அளிக்கப்பட்டன. வேத வேள்வி அந்தணரின் இணக்கத்தோடு சாதி முறையிலான சமுதாயம் அப்போது உருவானபோது அரசர்களும் ஏனைய திறனாளர்களும் தனிநபர்த் திறனுர்வத்தை மேற்கொண்டு சமுதாயத்தின் வளர்ச்சிக்கு வழி வகுக்கலானார்கள். இந் நிலையில் பிறப்பினால் ஏற்படுகின்ற சாதி முறை உயர்வைக் கடிந்து தனிநபர்ச் செயலாக்கத்தைப் போற்றிய சங்க காலத் தமிழகத்தினரின் தொன்மைச் சமூகக் கோட்பாடு புதிய உருவத்தில்—ஆனால் பழைய நோக்கத்தில்—வழி வழியாகத் தொடர்ந்து செயலுறத் தொடங்கி, தமிழ்க் கலாசாரத்தின் உயிரோட்டமாக நிலைபெற்று வளர்ந்தது.

232 அகம்—47

# 4. விஜயாலயச் சோழர்கால வரலாற்றுத் தடயங்கள் (Sources)

நமக்கு இது நாள் வரை தெரிந்துள்ள நம் தமிழகத்தின் வரலாறு சங்க காலத்திலிருந்துதான் தொடங்குகிறது. கி. பி. மூன்றும் நூற்றுண்டோடு முற்றுப் பெறுகின்ற அச் சங்க காலத் திற்குப் பிறகு கி. பி. 600 வரை உள்ள முந்நூறு ஆண்டுகளுக்குக் களப்பிரர் என்ற கடினமான ஆட்சியாளர்களின் கையில் தமிழகம் அகப்பட்ட நிலையில் ' களப்பிரர் கலியுகம் ' என்ற இருண்ட காலம் நிலவிற்று. கி. பி. 600-ல் பாண்டிய-பல்லவப் பேரரசுகள் தோன்றின. காவிரி ஆற்றைக் குறுக்கு எல்லையாக வைத்துக் கொண்டு தமிழகத்தைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்ட இவ்விரு தமிழ்ப் பேரரசுகளுடைய நேரடிப் போட்டி கி. பி. 800-ல் நடந்த திரும்புறம்பியப் போரில் முடிவடைந்தது. இப் பேரரசுகள் இருந்த இடத்தை நிறைவு செய்கின்ற வகையில் திருப்புறம்பியப் போரின் முடிவின் பயனாகக் கிளர்ந்தெழுந்ததுதான் பிற்காலச் சோழர்கள் ஆண்ட சோழப் பேரரசு ஆகும். ' புதியன புகுதலும் பழையன கழிதலும் ' என்ற அளவில் பல்லவர்—பாண்டியப் பேரரசுகளின் மறைவுக்குப் பின்பு ஏற்பட்ட சோழப் பேரரசின் தோற்றம் வரலாற்று இயல்புக்குரிய வளர்ச்சி நியதியாகக் காணப் படுகிறது. இந்த அளவில் கி. பி. 880-ல் தோற்றங்கொண்ட சோழப் பேரரசு 1279 வரை நிலை நின்றது. இச் சோழர் பரம் பரையைத் தஞ்சையில் நிலைப்படுத்திப் பேரரசுக்குரிய ஆக்கத் திற்கு வித்திட்டவன், சிறப்பு மிக்க பிற்காலச் சோழர் குலத்தின் முதல் மன்னனான விஜயாலயன் ஆவான். இச் சோழர் பரம் பரையை விஜயாலயச் சோழர்கள் என்றும் அழைக்கலாம். இதுவே பின்பு இரண்டாம் பாண்டியப் பேரரசுக்குள் சங்கமம் ஆயிற்று.

எல்லா வகைகளிலும் பேரரசனாக விளங்கிய ராஜராஜன் I ஆட்சிக்கு வந்த கி. பி. 985 ஆண்டு முதல் வீர ராஜேந்திரன் ஆட்சி முடிவுற்ற 1070 வரை சோழப் பேரரசிற்குரிய எழுச்சி மிக்க காலமாகச் சொல்லலாம். 85 ஆண்டுகள் அடங்கிய இக் காலப் பகுதியில் சோழப் பேரரசின் விரிவாக்கம் தென்னிந்தியாவைத் தழுவி நின்றது. தெற்கே கன்னியாகுமரி, கிழக்கேயும் மேற்கேயும் இரு கடல்கள், வடமேற்கே துங்கபத்திரை நதிக்கரையின்

தொடர்ச்சியாக வடதிசையில் கோதாவரி—இந் நான்கு எல்லைகளைக் கொண்ட சோழப் பேரரசின் பேராதிக்கம் நாடு தழுவிய அரசியலாகவும், பொருளாதாரப் பெருவளர்ச்சியாகவும், சமயச் சார்பான சமுதாயச் சீராக்கமாகவும் தன்னை இனங்காட்டிக் கொண்டது. அரசியலுக்கு வல்லடிப் போர்கள் ; பொருளாதாரத் திற்கு நீர்ப்பாசன வசதியும் வரிவசூலிப்பும் ; சமுதாய நலனுக்குச் சமயப்பொறையோடு கூடிய சைவ நெறிக் கோவிலறம்—இம் மூவகை உயிரோட்டங்களையும் கொண்டு சிறந்தது சோழப் பேரரசு ஆகும். இப் பேரரசு தனியார்வத்திறனோடு இயக்கம் கொண்ட காலத்தில் தென்னிந்தியாவில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பொறுத்து வரலாற்றுத் தடயங்களாகக் கல்வெட்டுகள் போன்ற எழுத்துக் குறிப்புகளும் (Epigraphy), கோவில்கள் போன்ற பழங் காலக் கட்டடங்களும் (Monuments), பொருளியல் வளர்ச்சியைக் காட்டிய நாணயப் புழக்கத்திற்குச் சான்றாக நாணயங்களும் (Numismatics) நாடெங்கிலும் மலிந்து காணப்படுகின்றன. இம் மூவகை தடயங்களைக் கொண்டு சோழர் காலத்திய வரலாற்றைக் கற்பனை கலக்காத முறையில் உருவாக்குகின்ற வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது.

சோழப் பேரரசின் மேம்பாடுகளில் ஒன்றான இலக்கிய வளர்ச்சியில் காணப்படுகின்ற நூல்கள் தரும் செய்திகளும் சோழர் காலச் சரித்திரத்தை உருவாக்க உதவுகின்ற பல குறிப்புகளை நமக்கு வழங்குகின்றன. வெளிநாட்டுக்காரர்களால்—விஜயாலயச் சோழ மன்னர்களைப்பற்றியும், அவர்களுடைய ஆட்சிச் சிறப் புகள்பற்றிய செய்திகளையும் அவரவர் ஆட்சிக் காலங்களில் எழுதப் பட்ட வரலாற்றுக் குறிப்புகளில் நாம் காண்கிறோம். ராஜராஜன் I (985—1014) காலம் முதல் சோழ மன்னர்களே தங்கள் வரலாற் றைக் கூறுகின்ற முறையில் மெய்க்கீர்த்தி என்ற தங்களின் சாதனைப் பிரகடனத்தைக் கல்வெட்டாகச் செதுக்கி வைக்கின்ற வழக்கத்தை மேற்கொண்டிருந்தார்கள். சோழ வரலாற்றின் உயிரோட்டமான சில நிகழ்ச்சிகளைச் சோழ மன்னர்களின் சாதனைப் பட்டியலைப் போன்று காட்சி தந்த இவ் வகையான மெய்க்கீர்த்திகளின்மூலந்தான் தெரிந்துகொள்கிறோம். சோழ மக்கள் வரலாற்று உணர்வு (sense of history) உடையவர்கள். இதன் காரணம்பற்றியும் நம் நாட்டு வரலாற்றில் அவர்களுக்குத் தனிச்சிறப்பு உண்டு. மேலே பரவலாகச் சொல்லப்பட்ட அத்தனை வரலாற்றுக்குரிய தடயங்களையும் நாம் பின் வருமாறு வகைப்படுத் தலாம்: (1) எழுத்துச்சாசனம், (2) பழங்காலக் கட்டடங்கள், (3) நாணயங்கள், (4) இலக்கியக் குறிப்புகள், (5) வெளி

நாட்டுக் குறிப்புகள், (6) மெய்க்கீர்த்திகள். இவை ஒவ்வொன்றும் சோழரின் வரலாற்றை உருவாக்குகின்ற முயற்சிக்குத் துணை போகின்ற திறனைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்:

## I. எழுத்துச்சாசனம் (Epigraphy)

விஜயாலயச் சோழர்களின் காலம் எல்லாத் துறைகளிலுள்ள மக்களும் துடிப்போடு முன்னேறிய காலமாகும். இந் நிலையில் பல தரப்பட்ட நடவடிக்கைகள் நாட்டில் நிகழ்ந்து வந்தன. இவ் வரலாற்று நிகழ்ச்சிகளின் போக்கில் முக்கியமானவற்றை எழுத்து வடிவில் தேக்கி வைக்கின்ற பண்பாடு சோழ காலத்தவர்க்கு உண்டு. சோழ மன்னர்கள் அளித்த அரச ஆணைகள் செப்புப் பட்டயங்களாக உருமாற்றப் பெற்றன. ஏனைய மக்களுடைய நடவடிக்கைகளில் பொதுமைச் சிறப்புடையனவற்றைக் கல்வெட்டுகளாகச் செதுக்கி வைத்தனர்.

**1. கல்வெட்டுகள் (Inscriptions) :** சோழர் காலத்தில் உள்ள சமுதாய வாழ்வு ஆங்காங்கே சோழர்களால் தோற்றுவிக்கப்பட்ட கோவில்களின் இயக்கத்தோடு பிணைக்கப் பட்டிருந்தது. அரசியல் போன்ற எந்தத் துறையைச் சேர்ந்த செய்தியானாலும் சமுதாயத்துடன் சம்பந்தப்பட்டு நின்ற தன்மை பெற்றிருந்ததால், கோவில் கற்சுவர்களில் அச் செய்திகளைப்பற்றிய ஊராரின் முடிவுகளைச் சாசனமாக்குகின்ற முறையில் மக்கள் செதுக்கி வைத்தார்கள். சமுதாயம் சம்பந்தப் பட்ட அத்தனை நிகழ்ச்சிகளும் கிராமக்குடியரசுக்கு உட்பட்டுக் காணப்பெற்ற அந் நாளைய சோழச் சமுதாய வாழ்வியலில் கல்லில் சாசனம் செய்வதென்பது நடைமுறைப் பழக்கமாகச் சோழப் பேரரசு முழுவதிலும் காணப்பட்டது. இச் செய்திகளைத் திரட்டிச் சோழர்கால வரலாற்றை நம்மால் உருவாக்கிக்கொள்ள முடியும். எல்லா நடவடிக்கைகளையும் சோழர்கால மக்கள் கல் வெட்டுகளாகச் செய்தார்கள் என்று நாம் கூறுவதற்கில்லை. சில முக்கிய நிகழ்ச்சிகள் கல்வெட்டுகளில் காணப்பெறவில்லை. ஆகவே, சோழச் சமுதாயத்தின் வளர்ச்சி நிலைகளை அறிவிக்கும் அளவை அறிவிப்புகள் (Moral and Material Progress Reports) என்று கொள்வதற்கில்லை எனப் பேராசிரியர் K. A. நீலகண்ட சாஸ்திரி கூறுகிறார்.

தஞ்சைப் பெரிய கோவிலில் ராஜராஜனுக்கு உரியதாக 61 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. பல்லவராயன்பேட்டைக் கல்வெட்டு காணப்பெறாமல் போயிருந்தால் ராஜராஜன் II நோய்

வாய்ப்பட்ட போது அமைச்சர்களால் சோழ மன்னனுகத் தேர்ந் தெடுக்கப்பட்ட ராஜாதிராஜன் II பற்றிய செய்திகள் நமக்குக் கிடைத்திருக்க வேறு வாய்ப்பில்லை.

**2. செப்புப் பட்டயங்கள் (Copper Plates) :** மன்னர் களால் மட்டும் செப்புப் பட்டயத்தில் சாசனஞ் செய்கின்ற வழக்கம் காணப்பட்டது. ஊர்மன்றங்களும், அதிகாரிகளும், மன்னர்களும் செய்த கல்வெட்டுகள் எண்ணிக்கையில் அள விறந்தன எனலாம். பராந்தகன் II அன்பில் செப்பேடுகளை வரைந்து அன்பில் ஊரைச் சார்ந்த அநிருத்தனன் என்ற அந் தணர்குல அதிகாரிக்கு ஒரு கிராமத்தையே முற்றூட்டாக வழங் கினுன். திருவாலங்காட்டுச் செப்பேடுகள் ராஜராஜ சோழனின் மகனுன ராஜேந்திர சோழன் I மேற்கொண்ட கங்கைப் படையெழுச்சிபற்றிக் கூறுகின்றன. தமிழிலும் சமஸ்கிருதத்திலும் எழுதப்பட்டிருந்த செப்பேடுகள் பிற்காலத்தில் தமிழகம் வந்த டச்சுக்காரர்களால் தமிழகத்திலிருந்து அவர்கள் நாட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. ஹாலந்திலுள்ள லெய்டன் நகரத்துப் பொருள்காட்சியில் வைக்கப்பட்டிருக்கின்ற அச் செப்பேடுகளை லெய்டன் செப்பேடுகள் என்று நாம் குறிக்கிறோம். ராஜ ராஜ சோழன் நாகப்பட்டினத்திலுள்ள புத்த கோவிலுக்கு ஆனை மங்கலம் என்ற ஊரை முற்றூட்டாக வழங்கிய சமயப்பொறை பற்றிய செய்தி லெய்டன் செப்பேடுகளில்தான் காணப்படுகிறது.

இக் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் சோழ வரலாற்றைப் பற்றிய செய்திகளை நமக்கு நேருக்கு நேர் சொல்லுகின்ற அமைப்பு கொண்டவை. இது பாராட்டத்தக்கதாகும். நீதி பரிபாலனத்தைப் பற்றி உலக வரலாற்றிலேயே முதன்முதலாகத் தீர்க்கமாகச் சிந்தித்த ஹமுராபி என்ற பாபிலோனிய மன்னன், தான் வழங்கிய சட்டங்களைக் களிமண் செங்கல்லில்தான் எழுதி வைத்தான். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்பு வந்த சோழர்கள் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அளிக்கின்ற அமைப்பு முறை தமிழகக் கலாசாரத்தில் ஊறி உறைந்து நின்ற ஒப்புரவறிதல் என்ற மனப்பழக்கத்தைச் சார்ந்ததாகும். எல்லோரையும்பற்றிய ஒரு முடிவை ஊரார் எல்லோருக்கும் தெரியப்படுத்துகின்ற ஒப்புர வறிதல் தமிழ்ச்சிந்தனையாக உருவகம் கொண்டிருந்த அக் காலத் தில் அரசனையும் சமுதாயத்தையும் தழுவி நின்ற பற்பல நிகழ்ச் சிகளுக்குரிய சமுதாய ஒப்புதலாகத்தான் (Popular Confirmation) சோழர் கால கல்வெட்டுகள் காணப்பட்டன. செப்பேடுகள் மட்டும் அரசாங்கப் பிரகடனமாகத் தனித்ததொரு மாண்போடு விளங்கின.

## II. பழங்காலக் கட்டடங்கள் (Monuments)

சோழர்களுடைய வரலாற்றை மடை திறந்து வெளியிடுகின்ற தஞ்சைப் பெரிய கோவில் போன்று சோழ நாட்டில் ஊரெல்லாம் நிறைந்து கிடக்கும் எண்ணிறந்த கோவில்கள் அச் சோழர்களைப் பற்றிய அத்தனை செய்திகளையும் கூறிவிடுகின்றன. கங்காபுரி என்ற கங்கை கொண்ட சோழபுரக் கோவில், தாராசுரம் கோவில், திரிபுவனக் கோவில் என்ற மூன்று கோவில்களும் முறையே ராஜேந்திரன் I, ராஜராஜன் II, குலோத்துங்கன் III என்ற சோழர்களைப்பற்றிய வரலாற்றைச் சொல்லுகின்றன. சோழர் காலத்தில் ஊரெல்லாம் முளைத்து எழுந்த அத்தனை கோவில்களும், அவை சேவை செய்த மக்களுக்குரிய பத்திரப்பதிவு நிலையமாக இருந்தன எனலாம். எல்லா நன்மை தீமைகளைப்பற்றிய விவரங்களையும் (பொது மக்களைப் பாதித்து நின்றவை மட்டும்) கணித்து எடுத்து, அவற்றைக் கோவில் கல்சுவர்களில் கல்லெழுத்துகளாகப் பொறித்து வைத்தனர். இவ்வாறு கோவில்களின் கட்டடம், சிலை ஆகியவற்றின் அமைப்புகள், கோவில் சுவற்றுக் கல் எழுத்துகள் போன்றவை சோழர் நாள்களில் காணப்பட்ட அரசியல், கலாசாரம்பற்றிய பேருண்மைகளை அப்படியே எடுத்துத் தந்து விடுகின்றன.

சோழரின் குடியிருப்பு மாளிகைகளின் பெருமிதத் தோற்றங்களை நாம் கண்டு களிக்கின்ற முறையில் அந் நாளைய கட்டடங்கள் பிற்காலத்தில் அவ்வளவாக உருக்குலைவு இல்லாத அளவில் காணப்பெறவில்லை. 1216, 1256 ஆண்டுகளில் நிகழ்ந்த இரண்டாம் பாண்டியப் பேரரசின் படையெடுப்புகளில் உறந்தையும் தஞ்சையும் தீக்கொளுத்தப்பட்டுத் தரைமட்டமாக அழிக்கப்பட்டுப் போயின. இந் நிலையில் கோவில்களைத் தவிர, வேறு கட்டடங்கள் காணப்பெறவில்லை.

பள்ளிப்படை என்ற சமாதிக் கோவில்கள் சோழ முன்னோர்களுக்கு உரியவையாகும். அரசியல் நிகழ்ச்சிகளைப்பற்றியும் அரசர்களின் உருவத் தோற்றங்கள்பற்றியும் நமக்குத் தெரிய வருகின்றன. ராஜராஜ சோழன், அவனுடைய மனைவியர் ஆகியோரின் சிலைகள் தஞ்சைப் பெரிய கோவிலில் காணப்பெறுகின்றன. கடவுளர் சிலைக்கும் அரசர்களான மனிதர்களின் சிலைக்கும் வேறுபாடு இல்லாத முறையில் ஒரே பாணியில் செதுக்கித் தள்ளிவிட்ட பல்லவர்காலச் சிற்பிகள் போலல்லாமல், சோழர்களின் சிற்பக்கலை விதிப்படி அரசர்களின் சிலைகள் மனிதர்களாக இருகரம் கூப்பி, இறையருள் வேண்டி, நிறைமன மோனத்தில் அமைக்கப்பட்டன.

ஈழத்து நகரமான மகாதித்தாவிலும், பொலனருவாவிலும், இன்னும் மற்ற இடங்களிலும் அமைக்கப்பட்ட சோழர்காலக் கோவில்கள் சோழரின் ஆதிக்கம் வெளியிடத்தில் நிறுவியதைப் பற்றி எடுத்துக் கூறுகின்றன. பார்மோசாத் தீவுக்கு எதிர்ச்சாரியி லுள்ள கடற்கரையிலுள்ள சீன நாட்டுப் பட்டினத்தின் எல்லைக் குள் காணப்பெறுகின்ற கோவிலிலுள்ள வைணவ நெறியைச் சார்ந்த சிற்பங்கள் குலோத்துங்கன் I (1070-1112) காலத்தைச் சேர்ந்தவை என்று கணிக்கப்பெறுகிறது. கி.பி. 1000-லிருந்து வீரராஜேந்திரன் (1064-1070) காலம் வரை 70 ஆண்டுகள் மிக நெருக்கமான தொடர்புகளைச் சோழப்பேரரசோடு கொண்டிருந்த கடார நாட்டு ஸ்ரீ விஜயப்பேரரசு, காம்போஜம் போன்ற நாடுக ளிலுள்ள அங்கர்வாட் போன்ற பழங்காலக் கோவில்களின் கட்டட அமைப்பிலும், சிலைகளிலும், சடங்குகளிலும் காணப்படு கின்ற சோழர்களுடைய செல்வாக்கு சரிவரக் கணிக்கப் பெற்றால் சோழர்கால வரலாற்றிலுள்ள கட்டடக்கலை கருவூலங்களாக அவை யும் மாறிக்கொள்கின்ற பெருவாய்ப்பு உண்டு.

சோழர்-சாளுக்கியப் போர்களில் வெற்றிமேல் வெற்றியாகப் பெற்றிருந்த பேராண்மை முதலில் சோழர்கள் மன்னந்திப்பை, கரடிக்கல் போன்ற மாற்றார் இடங்களில் நிறுவிய வெற்றித் தூண்கள். அம் மாற்றார்க்குரிய அவமானச் சின்னங்கள் என்றளவில் அழிக்கப்பட்டுப் போயின என்பதில் வியப்பு ஒன்றுமில்லை. தர்ம விஜயம் செய்த அசோகனின் ரரநாத் கல்தூண் போன்றோ திக் விஜயம் மேற்கொண்ட சந்திரகுப்தனின் அலகாபாத் இரும்புத் தூண் போன்றோ சோழர்கள், காலத்தை வெல்லுகின்ற அளவில் தங்கள் வெற்றித்தூண்களை அமைக்க வில்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஆகவே, போரார்வப் பெருமிதத்தில் ஏராளமான இடங்களைப் படை நடத்திப் பிடித்த சோழர்களுடைய வெற்றிச் செய்திகளைக்—அவர்கள் போரிடச் சென்ற இடங்களிலும் அப் போர்களினூடே அவர்கள் வழங்கியருளிய கோவிலற நன்கொடைகள் குறித்து வைக்கப் பட்டிருக்கின்ற—கோவில் சுவர்கள் சொல்லுகின்றன.

கங்கைப் படையெழுச்சிக்கு முன்பே (1022) கட்டப்பட்டுப் போன கங்கை கொண்ட சோழபுரம் கோவிலும் கங்கை வெற்றி யின் பெயர் தாங்கி நின்ற அவனால் அவ் வெற்றியைக் கொண்டாடு கின்ற முறையிலே வெற்றிச்சின்னமாக உருவாக்கப்பட்டது இல்லை. ஆனால், பாண்டியனைப் போரில் கொன்றதற்குத் தஞ்சாவூர்ப் பகுதி பாண்டிய குலாசனி (பாண்டிய குலத்திற்கு எமன் போன்றோன்) என்ற ராஜராஜ சோழனுடைய பட்டத்தினடிப்படையில் தஞ்சாவூர் ‘பாண்டிய குலாசனிக் கூற்றம்’ என்று அழைக்கப்

பட்டது. தஞ்சைப் பெரிய கோவில் கோபுர வாசல் கேரளாந்தகன் வாசல் (கேரளத்திற்கு எமன்) என்றழைக்கப்பெற்றது. பத்தொன் பதாம் நூற்ருண்டில் ஸ்பெயின் நாட்டு இடமான டிராபால்கரில் நெப்போலியனை நெல்சன் தோற்கடித்து வீர மரணம் எய்திய அளவில் இலண்டனிலுள்ள பிரதானப்பகுதியை டிராபால்கர் சதுக்கம் என்று ஆங்கிலேயர்கள் வழங்குவதைப் போலக் கோபுரக் கோவில் வாசல்களையும், மண்டலங்களையும், கூற்றங்களையும் சோழர்கள் தாங்கள் கொண்ட வெற்றிகளின் பெயர் கொண்டு அழைத்தார்கள். இவ் வெற்றிகளைக் கொண்டாடுகின்ற முறை யில் கட்டடக் கலையையே உயிர்மூச்சாகக் கொண்ட சோழர்கள் தனிப்பட்ட முறையில் கட்டடங்களைக் கலைக் கருவூலங்களாக விளங்குகின்ற அளவில் நிறுவவில்லை. கங்கைக்குத் தாம் அனுப்பிய கங்கைப் படையெடுப்பாளர்கள் வெற்றியுடன் திரும்பி வந்த போது அவர்களைக் கோதாவரியில் எதிர்கொண்டு அழைத்துத் தமிழ்நாட் டிற்கு வழி நடத்தி வந்த ராஜேந்திரன் I காஞ்சிபுரத்தில் கட்டிய மண்டபம் சாதாரணமானதுதான்.

கோவில்களை இன்னுயிராக மதித்த சோழர்கள் கோவில் களுக்கு வரலாற்றுப் பூர்வமான அத்தனை நலங்களையும் கொண்டு வந்து சேர்த்தனர் என்பது உண்மை. ராஜாதிராஜன் I சாளுக் கியப் படையெடுப்பு நடந்தேறியபோது சாளுக்கிய தலைநகர் கல்யாணபுரத்திலிருந்து கொண்டுவந்த துவார பாலகர்களின் சிலை தாராசுரம் கோவிலில் வைக்கப்பெற்றது. அச் சிலையின் பீடத் தில் எழுதப்பட்ட குறிப்பு அதனை அம் மன்னன் போரில் கவரப் பட்ட பொருளாகக் கொண்டு வந்த பெருமையைச் சொல்லுகிறது. சோழர்-சாளுக்கியப் போராட்டத்தின் வரலாற்றைக் கூறுகின்ற இச் சிலை காணப்படுகின்ற கோவிலைப் போன்ற மற்றைய கோவில் களிலும் இத்தகைய வரலாற்றுக்கு உட்பட்ட பொருள் சேமிப்பு களை நாம் காண்கிறோம். கொங்கு நாட்டை வெற்றி கொண்ட ஆதித்த சோழனும் கேரள, பாண்டியரை அடக்கி ஆண்ட பராந்தக சோழனும் தில்லைச் சிதம்பரக் கோவிலுக்குப் பொன் வேய்ந்தார்கள். குலோத்துங்கன் III கேரள, பாண்டிய நாடு களின் பொன்வரி விதித்துச் சிதம்பரம், ஸ்ரீரங்கம் ஆகிய இரண்டு கோவில்களிலும் பொன் வேய்ந்தான். ராஜராஜன் I சாளுக்கியப் போரில் கவரப்பட்ட 222 கிலோ தங்கத்தையும், 266 கிலோ வெள்ளியையும் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு அளித்தான். இவ்வாறு சேமிக்கப்பட்ட பொருள்களனைத்தும் கோவில்களில் காணப்பட்ட காரணத்தினுல் அக் கோவில்களே பழங்கால வர லாற்றின் நினைவுக் கட்டடங்கள் என்ற அளவில் சோழ வரலாற் றின் துடிப்பு மிக்க போர்க்காதைகளைப்பற்றிப் பல செய்திகளை நமக்குத் தருகின்றன.

## III. நாணயங்கள்

உள்நாடு வெளிநாடு ஆகிய இரண்டையும் சார்ந்த வாணிபத்தின் வளர்ச்சிக்கு உட்பட்ட நிலையில் சோழ நாட்டின் பொருளாதாரம் பெரும் ஆக்கம் கொண்டு விளங்கியது. கிராமியப் பொருளாதாரத்தோடு பிணைக்கப்பட்டுப் போன வணிகத்தைத் தங்கள் கையில் அடக்கி வைத்த நிலையில் கடற்படை கொண்டு கடல் வணிகத்தை மேம்படுத்தி, சுங்கம் தவிர்த்து, பண்டங்களை நாட்டில் மலியச்செய்து சோழ மன்னர்கள் தங்களுடைய பொருளாதாரப் புலமையை வெளிக்காட்டிக்கொண்டார்கள். இத்தகைய வணிகத்தின் வளர்ச்சியின் காரணமாகவும் செல்வச் செழிப்போடு ஆடம்பரப் பொருள்களை அனுபவிக்கின்ற மக்கள் தொகையைப் பெற்றிருந்த காரணத்தினாலும் உள்நாட்டு வாணிபத்தில் நாணயங்களின் சேவை இன்றியமையாததாகக் காணப்பட்டது. ராஜராஜன் மாடை, மதுராந்தக தேவர் மாடை, குலோத்துங்கனுடைய நாணயங்கள் போன்றவை வழக்கிலிருந்தன. இப்போது அவை கிடைப்பதற்கில்லை. ஈழக்காசு, கருங்காசு, பொற்காசு, செப்புக்காசு ஆகியவை நமக்குக் கிடைக்கின்றன. உத்தம சோழன் காலத்திய நாணயந்தான் சோழர் காலத்தைச் சார்ந்த முதலாவது நாணயமாக ஆராய்ச்சியாளர்களுக்குக் கிடைதிருக்கிறது.

ராஜராஜன் காலத்திய நாணயத்தில் அரசன் உடையோடு காணப்பெறுகின்ற ஓர் ஆண் உருவம் இடக்கையில் திரிசூலத்தும், வலக்கையில் தாமரையையும் கொண்டு நிற்கிறது. அந்நாணயத்தின் பின்பக்கத்தில் ராஜராஜன் அரசப் பெருமிதத்தோடு நிற்கிறான். இத்தகைய காசுகள் சோழ வரலாற்றைப் பற்றிய குறிப்புகளை நமக்கு வழங்குகின்றன. கையில் வீணையோடு காணப்பெறுகின்ற சமுத்திரகுப்தனுடைய குப்தர் கால நாணயத்தைக்கொண்டு குப்த அரசர்க்குரிய இசை விற்பன்னத்தைக் கணக்கிடுவது போல, வேள்வித்தீப்பெட்டகத்தை நோக்கி நீட்டிய கரம் கொண்டிருக்கின்ற தோற்றமுடைய கனிஷ்கரின் நாணயத்தில் குஷானர்களின் காலத்திய கலாசாரங்கள் கலப்புற்ற நிகழ்ச்சி காணப் பெற்றது போல, ராஜராஜன் காலத்திய நாணயங்களில் காணப் பெறுகின்ற உருவத்தின் இடக்கையிலுள்ள திரிசூலம் போர்த்திறனையும், வலக்கையிலுள்ள தாமரை செல்வச் சிறப்பையும் காட்டும் எனக் கொள்ளலாம். குழல் ஊதும் கண்ணன் உருவம் சோழரின் நாணயங்களில் காணப் பெறுவதிலிருந்து சைவ நெறிச் சமயத்தைச் சார்ந்த சோழ மன்னர்களின்

ஆட்சியில் சமயப் பொறை நிலவியதை நாம் அறிகிறோம். ராஜ ராஜன் I காலத்துக்கு முந்திய 'காசு' என்ற நாணயத்தை 'ராஜ ராஜன் காசு' என்றுதான் வழங்குவர். இச் சோழனுடைய காலத் திலிருந்து சோழ நாணயங்களில் அதுவரை அமுலிலிருந்த கிரந்த வரி எழுத்துகளுக்குப் பதிலாக தேவநாகரி எழுத்து வழக்கில் வந்தது.[1]

தேவநாகரி எழுத்து பெருமளவிற்கு எல்லாத் தமிழ் மன்னர் களுடைய நாணயங்களிலும் காணப்பட்டது போன்று சோழ நாணயங்களிலும் காணப்பெற்றது. தமிழ் எழுத்துகளைப் பெருமளவிற்குக் கொண்டிருந்த பாண்டிய நாணயங்களைப் போலன்றி தேவநாகரி எழுத்து பெருமளவிற்கு எழுதப்பட்டிருந்த சோழர் காலத்திய நாணயங்களைக் கொண்டு நூற்றுக்கு நூறு சரி யான வரலாற்றுச் செய்திகளைக் கோர்வைப்படுத்த முடிவதற் கில்லை. ஏனென்றால், மன்னனுடைய இயற்பெயரே ஆட்சி பீடம் ஏறிய ஆண்டினையோ அந் நாணயங்களில் காண்பதற் கில்லை. இது சோழரின் நாணயங்களுக்கு மட்டுமல்லாமல் எல்லாத் தமிழ் மன்னர்களின் நாணயங்களுக்கும் பொருந்தும். குலோத்துங்கன் நாணயத்தில் திமிலோடு கூடிய நந்தியும் அதற்கு மேலே காணப்படுகின்ற அர்த்தசந்திரனும் ஒரு பக்கத்திலும், பின்பக்கத்தில் அரசன் தன்னுடைய ராஜரிக உடையோடு காணப்படுகின்றான். சங்க காலத்தின் இறுதியில் கொற்கையிலும், காவிரிப்பூம்பட்டினத் திலும், பாண்டிச்சேரியின் அருகிலுள்ள அரிக்காமேட்டிலும் யவனர்களான உரோமர்களின் நாணயங்கள் கண்டுபிடிக்கப் பட்டவை போன்று விஜயாலயச் சோழர் காலத்திய வெளி நாட்டினரின் நாணயங்கள் அவ்வளவாக இதுவரை கிடைக்க வில்லை. 1946-ல் கிழக்குக் கோதாவரிப் பகுதியின் தவளேஸ் வரத்தில் 78 சோழ நாட்டரசின் நாணயங்கள் ஏனைய நாணயங்களைக் கொண்ட குவியலோடு காணப்பட்டன.[2] பராந்தகன் I இலங்கைக்குப் படை எடுத்துத் தோற்ற போதிலும், நாணயங்களை வெளியிடுவதில் தேர்ச்சி பெற்ற ஈழத்தவரைப் பின்பற்றி 'ஈழக்காசு' என்ற பெயரில் சோழ நாட்டில் புது வகை நாணயங்கள் புழக்கத்தில் வந்தன.

## IV. இலக்கியம்

ஒரு நாட்டின் வரலாறு வரலாறாக எழுதப்பட்டாலுங்கூட அந் நாட்டினருடைய சொந்த விருப்பு வெறுப்புக்கு உட்பட்ட

1 K. A. N. Sastri—'Sources of Indian History'—1961—p. 72

2 K. A. N. Sastri — op. cit., p. 72

நிலையில் மெய்மைக்கும் பொய்மைக்கும் உட்பட்டு வளைந்து மெலிவுகளோடு காணப்படும் என்பது எக் காலத்துக்கும் உரிய உண்மையாகும். ஆனால், சோழர் காலத்தில் இந்த முறையில் எந்த வரலாறும் எழுதப்படவில்லை. வரலாற்று மனப்போக்கு (Sense of History) சோழர்களுக்கு வரலாற்றுப் புத்தகமாக, தொகுப்புரையாக எழுதக்கூடிய அளவில் அமைந்திருக்கவில்லை. பிரான்ஸைக் கட்டுப்படுத்திப் பிரிட்டனைக் கி.மு.55-ல் ஆட் படுத்திய ஜூலியஸ் சீஸர் தன்னுடைய வாழ்க்கைக் குறிப்புகளை எழுதி வைத்துவிட்டுச் சென்றதைப் போலச் சோழ மன்னர்களில் ஒருவரேனும் நாட்டின் வரலாற்றை முறைப்படி எழுதவில்லை. கிரேக்க நாட்டு ஹெரோடோட்டஸ், தியுசிடைஸ், ஏகாதிபத்திய உரோமன் நகரத்துப் பொலிபியஸ் போன்றோர் தனிப்பட்ட வரலாற்று ஆசிரியர்களே ஆவர். 11ஆம் நூற்றாண்டுக் கஜினி முகமதுவினுடைய காலத்திய அல்பிருணி போன்றோரைப் போன்ற தனி நபர் வரலாற்றாசிரியர்கள் யாரும் சங்க காலத் திலிருந்து தமிழ்நாட்டில் தோன்றினரில்லை.

பீடு (Bede) என்பவர் இலத்தீன் மொழியில் எழுதிய திருச்சபை யின் வரலாற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தம் நாட்டு மக்களுக்கு வரலாற்றின் அடிப்படையில் நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் ஊட்டிய மாமன்னனாகப் புகழ்ந்தேத்தப்படு கின்ற ஆல்ஃபிரட் என்ற ஆங்கில அரசன் சோழர் காலத்திற்குச் சம காலத்தவன் ஆவான். ஆல்ஃபிரட்டைப் போன்று சோழ மன்னர்கள் தாங்கள் பெரிதும் போற்றிய இந்து சமயத்தின் வரலாற்றைக்கூட முறைப்படி எழுதவில்லை. நம்பியாண்டார் நம்பியின் துணைகொண்டு தேவாரம் திருவாசகத்தை நிரல்படுத்தித் தந்த ராஜராஜ சோழனின் சேவையின் காரணமாக அச் சைவ ஞானியர் நால்வரும் வாழ்ந்த பல்லவப்-பாண்டியர் பேரரசுகளில் தோன்றிய பாடிக்காசு பஞ்சம் போன்ற நிகழ்ச்சிகள் அடங்கிய வரலாறு நமக்குக் கிடைப்பதற்கு வழி வகுக்கப்பட்டது. ‘பிறவா யாக்கைப் பெரியோன்’ ஆன சிவபெருமான் தமிழ்நாட்டிலே நிகழ்த்திய திருவிளையாடல்களின் தொகுப்புரையாக உருவாக்கப் பட்ட சேக்கிழாரின் பெரிய புராணம், சமய இலக்கியம் என்ற ளவில் வரலாற்றுச் செய்திகளைக் கற்பனைச் சிறகில் ஏற்றிக் கொண்டு வருகிறது.

இவ்வாறு பல்லவ-பாண்டியப் பேரரசு காலத்திற்குரிய அருளாளரின் வாழ்வு நிகழ்ச்சிகளைத் தருகின்ற பெரிய புராணத் தில் சோழநாட்டைப்பற்றிய குறிப்புகள் விரிவான அளவில் காணப்பெறவில்லை. ராஜராஜ சோழன் வழிபாடு செய்கின்ற

முறையில் அவர்களுக்குச் சிலைகள் எடுப்பித்தான். 63 நாயன்மார் களும் அவன் காலத்திற்கு 200 ஆண்டுகளுக்கு முந்தியவர்கள். அவ்வறுபத்து மூவரையும் அருளாளராகக் காட்டிய சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் அவர்கள் வாழ்ந்த காலத்தின் அருளியல் சிறப்புகளையே அதிகம் எடுத்துக் காட்டுகிறுர். 200 ஆண்டுக்கால இடைவெளியில் முந்திய நாள்களில் வாழ்ந்த மனிதர்களை மாந்தருக்குள் தெய்வமாகக் காட்டுகின்ற வழி முறையை அந் நாளைய சைவ சமயத்திற்கு ஆக்கந்தேடுகின்ற சேக்கிழாரும் ராஜராஜனும் இவ்வாறு பாண்டிய-பல்லவர் காலங் களைப்பற்றி நாம் அதிகம் தெரிந்துகொள்ள வழி காட்டுவராயினர். இந் நிலையில் அவர்கள் இருவரும் வாழ்ந்த சோழ நாட்டைப் பற்றிய வலாற்றைப் பெருமளவிற்கு நமக்கு வழங்க முடியாமல் போயிற்று. இருந்தாலும் அவ்விருவர்களால் இனங்காட்டப்பட்ட சமயாசாரியார்களின் பெருமையைப் போற்ற வந்த சோழர்கால மக்களுடைய உள்ளப்பாங்கு அவர்களுடைய சமயச்சார்பான உணர்வாக நமக்குத் தெரிய வருகிறது.

ஒட்டக்கூத்தரின் தக்கயாகப்பரணி பார்வதி தேவியின் தவத்தைப்பற்றியும், கம்பனின் கம்பராமாயணம் சீதையை மீட்க இராவணனைக் கொன்ற இராமனைப்பற்றியும் புண்ணிய கதை களாக இலக்கியக்கலை வெள்ளத்தின்மேல் காணப்பட்ட மலர் நீட்ட மாகக் காட்சியளித்தன. சோழ நாட்டினுடைய மன்னர், மக்கள் ஆகியோரைப்பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே அவ்விலக்கிய நூல்களில் தலைகாட்டுகின்றன. ஜெயங்கொண்டாரின் கலிங் கத்துப்பரணியில் சோழர்குல வரலாற்றை உருவாக்கிய கரிகாலன் போன்ற மன்னர்களைப்பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே வருகின்றன. குலோத்துங்கன் I சோழன் காலத்தில் கலிங்கம் என்ற ஒரிஸாப் பகுதியை வென்றடிப்படுத்திய சோழர்ப் படைகள் அந் நாட்டுக்குச் சென்று வந்த விதத்தினைப்பற்றிக் கலிங்கத்துப் பரணி தருகின்ற விளக்கங்களிலிருந்து அந் நாளையில் தென்னிந்தி யாவின் கிழக்குக் கடற்கரையோரத்து மக்கள் கொண்டிருந்த அரசியல் சமூக வாழ்வியல் நிலைகளை நாம் அறிந்துகொள்ள முடிகிறது. ஒட்டக்கூத்தர் எழுதிய விக்கிரமச் சோழனுலா, குலோத்துங்கச் சோழனுலா, ராஜராஜ சோழனுலா என்ற மூன்று உலாக்கள் தருகின்ற வரலாற்றுச் செய்திகளில் சோழர் காலத்தில் செல்வச் செழுமையையும், மன்னர் மாண்பையும், மக்கள் பெருமிதத்தையும், புலவர்களின் ஏற்றத்தையும், பரிசில் வாழ்வு பாணர்களின் கலைவாழ்வையும், சைவநெறியின் மேம்பாட்டையும் பெருமளவிற்கு நாம் தெரிந்துகொள்ளுகின்றேம்.

கம்பரின் இராமக் காவியத்தில் சித்திரிக்கப்பெறும் அயோத்தி நாடு சோழநாடாகத்தான் காட்சி தருகிறது. குறிப்பாக, தசரத நாடாக இல்லாமல் கம்பனுடைய தலைவனை குலோத்துங்கன் III பெற்றிருந்த 'தியாக விநோதன்' என்ற பட்டத்தைக் கௌரவிக்கின்ற நிலையில் அயோத்தி நாட்டைத் 'தியாக விநோதனின் நாடு' என்று கம்பர் அழைக்கிறார். வற்றாத காவிரியின் வள்ளன்மையில் தோன்றுகின்ற செல்வத்தின் சீர்மையை அயோத்தி நாட்டுக்குரியதாக ஏற்றிச் சொல்லுகின்ற கம்பனின் மனப்போக்கில் காணப்பெறுகின்ற சோழ வரலாற்றுக்கு உரிய செய்திகள் சோழர் காலத்தின் சுயதரிசனமாக நம்மை வந்தடைகின்றன. அக் கால வரலாற்றுக்கு உறுதுணை செய்கின்ற மற்றைய நூல்களின் பெயர்கள் பின்வருமாறு: விக்கிரமாங்க சோழ சரித்திரம், திவ்விய சூரி சரித்திரம், தமிழ் நாவலர் சரிதை, கொங்கு தேச ராஜாக்கள், சூரிய சித்தாந்தம், சித்தாந்த சிரோமணி, குரு பரம்பரை, புத்தமித்திரரின் வீரசோழியம், ஒட்டக்கூத்தர் எழுதிய தண்டியலங்காரம், நாதமுனி இயற்றிய நாலாயிரத் திவ்விய பிரபந்தம், அமிதசாகரர் எழுதிய யாப்பருங் கலக்காரிகை, ஒட்டக்கூத்தரின் குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ், மதுரைத்தல வரலாறு என்ற மதுரைக் கோவில் சரிதம், ஸ்ரீரங்கம் கோவில் ஒழுகு (இது 1803-ல் கிழக்கிந்திய கம்பெனியின் அதிகாரியான ஜான் வாலஸ்—திருச்சிக்குப் பொறுப்புதாரி—என்பவனால் திருத்தி எழுதப்பட்டது)[3] வைணவ ஆழ்வார்களையும் அவர்தம் தொண்டரையும்பற்றிய குரு பரம்பரை என்ற நூலின் பற்பல பதிப்புகள். போசளரின் ஆஸ்தான கூர்களான வித்தியா சக்கரவர்த்திகளில் ஒருவர் எழுதிய கத்யகர்ணாமிருதம் என்ற அரைகுறை வரலாற்றுப் படைப்பு உரைநடையில் அமைந்துள்ளது; சோழ அரசு சிதைகின்ற நாளில் போசளர்-பாண்டியர் சோழ நாட்டின்மேல் படைகொண்டு மோதிய நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறது.[4]

## V. வெளிநாட்டுக் குறிப்புகள்

ஈழ நாட்டின் பௌத்த குருக்களால் தொகுக்கப்பெற்ற வரலாற்றுக் குறிப்புகள் மகாவம்சம் என்ற தொகுப்புரையாக வழங்கப்பெறுகின்றன. சங்க காலத்திய சோழ நாட்டைப்பற்றிய குறிப்பு கரிகாற்பெருவளத்தான் தனது ஈழப் படையெடுப்பைக் கூறுகின்ற முறையில் மகாவம்சத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே காணப்பெறுகிறது. விஜயாலயச் சோழனின் ஆதிக்கப்

3 K.A.N. Sastri—op. cit., p.73
4 Ibid—p. 75

போர்களினால் நாட்டுரிமையை இழந்து நின்ற ஈழ மன்னர்களின் இன்னல்களையெல்லாம் இந்த மகாவம்சம் நிரல்படுத்தி நமக்கு அளிக்கிறது. பௌத்தக் கல்விக் கழகம் சிறப்புற்றிருந்த காஞ்சிபுரத்திற்குப் பல்லவர் காலத்தில் வந்த யுவான் சுவாங் தெற்கே சோழர்கள் ஆண்டுகொண்டிருந்ததைக் குறிப்பிடுகிறார்.

வல்லடியான ஆதிக்கப் போர்களை முன்னின்று நடத்திய சோழ மாமன்னர்கள் தங்கள் ஆட்சிக்காலங்களில் வேளாண்மையோடு வெளிநாட்டு வாணிகத்தை ஆதரித்துத் தங்கள் கடற்படை துணைகொண்டு பெருமளவிற்கு வளர்த்தார்கள். இந்திய வரலாற்றில் காணப்படுகின்ற ஒரே ஒரு கடற்படைப் பேரரசு என்றளவில் சோழ சாம்ராஜ்யம் மேற்கே பாரசீகத்தையும், கிழக்கே சீனநாட்டையும் தன்னுடைய தொடர்புக்கு உட்படுத்தி வைத்திருந்தது. அவ்விரு அயல்நாடுகளுக்கும் இடையேயுள்ள அத்தனை நாடுகளிலும் சோழநாட்டு வணிகர்கள் தங்களது வாணிபத்தை மேற்கொண்டார்கள். நானுதேசியர், திசையாயிரத்து ஐநூற்றிருவர், மணி கிராமத்தார், அஞ்சுவண்ணத்தார் என்ற பற்பல வணிகக் குழுக்களைச் சேர்ந்த அவ் வணிகர் பிற நாட்டில் ஏற்படுத்தியிருந்த வணிகத் தொடர்புகளைப்பற்றிய செய்திகளை வரலாற்றுப் பூர்வமாகத் தருகின்ற குறிப்புகள் நமக்குக் கிடைக்காதது துரதிர்ஷ்டமேயாகும். கப்பற்திறனும் வளமுங் கொண்ட சோழநாட்டோடு வணிகத் தொடர்பை வலுப்படுத்திய சீனநாட்டின் 'சுங்க்' என்ற வமிசத்தாரின் வரலாற்றுக் காதையில் காணப்படுகின்ற சோழரைப்பற்றிய குறிப்புகள் போலச் சோழ நாட்டில் தரமான செய்திகள் காணப்பெறுவதற்கில்லை. சீன நாட்டின் யாத்திரிகன் சௌ-ஜீ-குவா (Chau-ju-Kua- கி.பி. 1225) என்பவனுடைய குறிப்பு சோழ மன்னன் அரண்மனையில் மூவாயிரம் பெண்கள் பணியாளர்களாகக் காணப்பெற்றதை விளக்குகிறது.

அபுசாயிட் (Abu-zaid) என்ற முஸ்லீம் எழுத்தாளனின் வரலாற்றுக் குறிப்பின்படி, சோழ நாட்டில் காணப்பட்ட கப்பல்களின் திறன் தெரிய வருகிறது. ஸ்பெயின் நாட்டைச் சார்ந்த டுடேலா என்ற இடத்து யூதனான பெஞ்சமின் சோழநாட்டினரின் கடல்வாணிகச் சிறப்பினைப்பற்றி வியந்து கூறுகிறான். வங்கக் கடலைச் சோழர் ஏரியாக மாற்றிய அளவிற்குத் தங்கள் கடற்படையை நடத்தி, கீழைநாடுகளை ஆதிக்கம் கொண்ட சோழர்களைப் பற்றிய குறிப்புகள் பெருமளவிற்கு அக் கீழைநாடுகளில் காணப்பெறவில்லை. 1010-ல் ஏற்பட்டிருந்த லோபே-டுவோ என்ற இடத்துக் கல்வெட்டின்படி சுமத்ரா தீவின் சோழர்க்குரிய கடல்

வாணிகத்தார் அவ் வணிகத்தைச் சார்ந்த வணிகர் பாசறை அமைத்து, சோழப் பேரரசின் பெருமிதத்தோடு வணிகத்தை மேற்கொண்டதைச் சொல்லுகிறது. 1312-ல் தமிழ்நாட்டுக்கு வந்த மார்க்கோ போலோ என்ற இத்தாலிய நாட்டு வெனிஸ் நகர அரசின் வர்த்தகன் பாண்டிய நாட்டையும் சோழ நாட்டையும் சேர்த்துக் குறிப்பிடுகிருன். அவனுடைய குறிப்புகளில் காணப் பெறுகின்ற செய்திகளின்படி தமிழகத்தின் கடல்வாணிகம் பெருஞ்சிறப்போடு காணப்பட்டது. 1279 வரை நீடித்திருந்த சோழப் பேரரசின் கடல்வாணிகத்தின் சாயலேத்தான் அவன் அவ்வாறு கூறியிருக்க முடியும். அவன் கண்ட தமிழகத்தின் முன்னேடியாக இருந்த சோழப் பேரரசின் மாண்பை நாம் தக்க முறையில் எண்ணிப் பார்க்க இயலும்; வரலாற்றை உருவாக்குகின்ற பணியினுக்கு உகந்ததாக அதைக் கொள்ளுவதில் தடையேதும் இல்லே.

கி.பி. 880-லிருந்து 1279 வரை உள்ள 400 ஆண்டுக்காலச் சோழர் ஆட்சியில் தமிழகத்தில் தழைத்த பொருளாதார ஆக்கம், சமய வாழ்வு பெருமை, இலக்கிய வளம், உள்நாட்டு வெளிநாட்டு வாணிபத்தின் பெருவளர்ச்சி, தென்னிந்தியாவை ஆட்கொண்ட சோழ சாம்ராஜ்யத்திற்கு அடிநாதமாக (key note) அமைந்த ஆதிக்கப் போர்கள், சோழ மாமன்னர்களின் மாண்பு, சோழ மக்களின் கிராமக் குடியாட்சிச் சீர்மை ஆகியவை பற்றிய குறிப்புகளேத் திரட்டி எடுக்கின்றபோது சோழ வரலாற்றுக்குரிய ஒருமித்த தோற்றப் பொலிவு (integrated picture) தானுகவே உருவாகின்றது. அத்தகைய உருவாக்கத்தில் முகிழ்த்து நின்ற சோழ வரலாற்றைச் சங்க காலத்திற்குப் பின்புள்ள தொடர்ச்சி நிலேயான களப்பிரர் காலத்திலிருந்து-தமிழக வரலாற்றின் தொடர்ச்சி நிலேயிலிருந்து – காண்போம்.

## VI. மெய்க்கீர்த்திகள்

சோழர் காலத்திய முக்கியமான நிகழ்ச்சிகளேச் சோழ மன்னனின் மெய்க்கீர்த்திகளிலிருந்து அறிந்துகொள்கிருேம். ராஜராஜ சோழன்தான் இம் மெய்க்கீர்த்தி எழுதுகின்ற வழக்கத்தைக் கொண்டு வந்தவன் ஆவான்.[5] வீரராஜேந்திரன் காலத்தில் ஸ்ரீ விஜயப் பேரரசுக்குச் சோழர்படை ஒன்று சென்றது. இதை அவனுடைய மெய்க்கீர்த்தி அல்லாமல் வேறு குறிப்பிலிருந்து நாம் அறிவதற்கில்லே. இவனுடைய இந்த மெய்க்கீர்த்திதான் இதைப்பற்றி அழுத்தமாகக் கூறுகிறது. ராஜகேசரி, பரகேசரி

5. K.A.N. Sastri—op., cit., p. 69

என்ற பட்டங்களைச் சோழ மன்னர்கள் ஒருவர்பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்துகொண்டார்கள். அவர்களுடைய மெய்க்கீர்த்தி களில் இப் பட்டம் பற்றிய குறிப்பு முத்தாய்ப்பாக வந்து சேர்கிறது. ஒவ்வொரு சோழ மன்னனுடைய ஆட்சிக்காலச் சிறப்பிற்குரிய தனித்தன்மையை எடுத்துக் கூறுகின்ற வகையில் சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் அமைந்தன.

'திருமகள் போலப் பெருநிறைச் செல்வி' என்று தொடங்கு கின்ற ராஜராஜ சோழனுடைய மெய்க்கீர்த்தி 'பேசுகொல் கோராச கேசரி வர்மரான-உடையார் ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு' என்று முடிகிறது. அளப்பரிய செல்வமும், விரிவாக்கம் கொண்ட பேரரசும் பெற்றிருந்த ராஜராஜனுடைய மெய்க்கீர்த்தி 'திருமகள் போல' என்று தொடங்கியது பொருத்தமானதே. 'புகழ்மாது விளங்கச் செயல் மாது விரும்ப' என்று தொடங்கும் குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்தி ராஜராஜனின் மெய்க் கீர்த்தியில் காணப்படுகின்ற மகள் என்ற சொல் 'மாது' என்று வடமொழி ஆதிக்கத்திற்கு உட்பட்ட அளவில் தோற்றம் கொள் கிறது. இந்த இரு மன்னர்களுக்கும் இடையேயுள்ள காலமான சுமார் 75 ஆண்டுகளில் சமஸ்கிருதத்திற்குக் கிடைத்த செல்வாக்கு இதிலிருந்து புலப்படுகிறது. இந்த அளவில் மெய்க்கீர்த்தி வழங்குகின்ற செய்திகளோடு அம் மெய்க்கீர்த்தியினுடைய அமைப்பு முறையும் சொல் ஆட்சியும் சோழ வரலாற்றினுடைய போக்குத் தடங்களைக் காட்டி நின்றன. இம் மெய்க்கீர்த்திகளைப் பற்றிய சிறப்பு செய்தியாக, அவ்வப்போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை இம் மெய்க்கீர்த்தியில் சேர்த்துக்கொண்டே வந்த சோழர்களுடைய சிந்தனைத் திறனைக் குறிப்பிடலாம்.

மன்னர்களுடைய துதிப்பாடல்கள் என்றளவில் இம் மெய்க் கீர்த்திகளில் காணப்படுகின்ற செய்தியும் உண்மைத் தன்மையி லிருந்து ஒதுங்கி நிற்கவில்லை. அசோகனுடைய பிரகடனங்கள் சோழர்களுடைய மெய்க்கீர்த்தியைப்போலக் கல்லில்தான் பொறிக் கப்பட்டிருந்தன, ஆனால் மக்களுடைய அறவுணர்வைத் தூண்டு கின்ற வகையில் அசோகன் எழுதி வைத்த பிரகடனங்களைப் போலல்லாமல் சோழர்களுடைய மெய்க்கீர்த்தி மன்னர்களைப் பற்றிய மெய் (உடல்), கீர்த்தி (புகழ்) என்றளவில் மன்னர் களுடைய உலகியல் சாதனைகளைக் கூறுகின்ற புகழுரையாக அமைந்திருந்தது. சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டவை பிராசஸ்தி எனப்பட்டன. இவ்வாறு சமஸ்கிருதம் சோழர் காலத்தில் பெற்ற வளர்ச்சியைச் சுட்டிக் காட்டுகிறது. சோழ மன்னர்களிலேயே திறமையற்றவன் என்று எல்லா வரலாற்றுசிரியராலும் மதிப்பீடு

செய்யப்பட்ட ராஜராஜன் III தன்னுடைய 'சீர்மண்ணி இரு நான்கு திசைவிளங்கு திருமடையும்' எனத் தொடங்கும் மெய்க் கீர்த்தியில் 'நடுவுநின்று, குடிகாத்து, நன்ருற்றும் திறம் பொருது—கடிதிழைத்த உட்பகையும் புறப்பகையும் மறக்கடிந்து—பொலந்தி கிரிபதினன்கு புவனங்களு மடிப்படுத்தி' என்ற சாதனைகளைத் தான் ஆற்றியதாக உண்மைக்குப் புறம்பான முறையில் கூறிக் கொள்கிருன். இவ்வாறு அமைந்த சம்பிரதாயச் சலுகைகளை அகற்றிவிட்டு மெய்க்கீர்த்திகளை ஆராய்கின்றபோது உண்மைக் கோலத்தோடு நமக்கு உதவ வருகின்ற வரலாற்றுச் செய்திகள் ஏராளமாகக் காணப்படுகின்றன என்பது தெளிவு. விஜயாலயச் சோழர்களின் ஆட்சிக் காலங்களில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளுக்கு உரிய தேதி வரையரையைப் பிழையில்லாமல் செய்துகொள்ள இம் மெய்க்கீர்த்திகள் பெரிதும் உதவுகின்றன.[6]

மெய்க்கீர்த்திகளை எழுதுவதற்குச் சோழர்கள் அனுமதி வழங்கியது அவர்களுடைய வரலாற்று உணர்வுக்கு (sense of history) சான்று சொல்லுகிறது. வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்து வைக்காத வெறுமை மனம் மத்திய காலத் தொடக்கத்தில் காணப் பட்ட இந்தியர்வரை காணப்பட்டதென்பர். ஆனல், முஸ்லீம் ஆட்சியின்போது வரலாற்றுணர்வு நம் நாட்டில் நிலைபெற்று விட்டது எனலாம். காகித சர்க்கார் (Paper Government) என வழங்கப்பட்ட மொகலாயரின் ஆட்சிமுறையின்[7] ஓரங்கமாக இருந்த வரலாறு எழுதப்படுவதைத் தன் அரண்மனையில் தொன்றுதொட்டு வந்த வழக்கத்திற்கு எதிரான முறையில் தடை செய்த ஔரங்கசீப் மொகலாயனைப் போல[8] எந்தச் சோழ மன்னனும் வரலாற்றை அதன் எழுத்துப்பூர்வமான வடிவத்தில் வெறுக்கவில்லை. ஆறடியுயரப் பேடியோடு தான் ஆற்றிய போரினை மிகைப்படுத்தி எழுதப்பட்ட காரணத்திற்காக ஓடும் நதி நீரில் அவ் வரலாற்றுப் படைப்பை வீசியெறிந்த அலெக்சாண்டரைப் போல[9] எந்த ஒரு சோழ மன்னனும் மெய்க்கீர்த்தியில் காணப் பட்ட புகழுரைகளைப் புறக்கணிக்கவில்லை. மேலே சொல்லப் பட்ட இந்தியர்கள் வரலாற்றுணர்வில் மேம்பட்டவர் அல்லர் என்ற குற்றச்சாட்டைப் பொய்ப்பிப்பது போலச் சோழர்கள் அவர்கள் காலத்திய நிகழ்ச்சிகளைத் தங்கள் மெய்க்கீர்த்தியில் குறித்து வைத்த நிலை சோழர் கால வரலாற்றைக் கோர்வை

6 K.A.N. Sastri—'Sources of Indian History'—1961—p. 69

7 J.N. Sarkar—'Moghul Administration'

8 H.M. Elliot—'The History of India'—Vol. II — Calcutta—1959—p. 26

9 Ibid—p. 28

யாக்கிப் பார்க்கப் பெரிதும் உதவுகிறது. சங்ககால நூலான பதிற்றுப்பத்தில் உள்ள பதிகங்களைப் பின்பற்றி இவ் வகை மெய்க் கீர்த்திகள் இயற்றப்பட்டதால் நிறைவான் செழுமையோடு இவை வரலாற்றுக் கோர்வையாக விளங்குகின்றன.

## சோழருக்கு முந்திய தமிழக வரலாறு

### I. சோழர்களும் களப்பிரர்களும்

சோழரின் வரலாற்றைக் கோர்வையாக அறிவதற்குச் சங்க காலத்திற்குப் பிறகு வந்த களப்பிரரின் தமிழக ஆதிக்கம்பற்றி அறிதல் வேண்டும். களப்பிரர்களின் ஆட்சி தமிழகத்தில் கி.பி. 250-லிருந்து கி.பி. 600 வரை நிலவியது. இக் களப்பிரரின் காலம் தமிழ்நாட்டின் வரலாற்றில் காணப்படும் ஓர் இருண்ட பகுதி யாகும். ஏனென்றால், அவர்களைப்பற்றிய தெளிவான செய்திகள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும், களப்பிரருடைய அரசியல் நடவடிக்கைகளைப்பற்றிய ஒரு சில குறிப்புகளில் சோழரைப்பற்றிய செய்திகள் வருகின்றன. வடக்கே கி.பி. 600 ஆண்டளவில் ஆண்ட பல்லவ மன்னன் சிம்மவிஷ்ணு, தெற்கே பாண்டிய அரசன் கடுங்கோன் (575-620) ஆகிய இருவரும் இக் களப்பிரரை ஆறும் நூற்றாண்டின் கடைசியில் வென்று பல்லவர்-பாண்டியர் அரசுகளை நிறுவினர். இத்தகைய நாடு மீட்புப் போராட்டத்தில் சோழர்கள் கலந்துகொள்ளாததன் காரணமாகத் தான் பிற்காலச் சோழர்களான விஜயாலய வமிசத்தினர் களப் பிரருடைய தமிழக ஆதிக்கம்பற்றித் தங்களுடைய அளவிறந்த சாசனங்களில் குறிக்காமல் விட்டுவிட்டனர் என்ற கருத்து உண்டு.

பாண்டியர்—பல்லவர் எழுச்சியின் பயனாக ஏற்பட்ட அவர் களுடைய பேரரசுகள் 300 ஆண்டுகளாகத் தமிழகத்தில் தழைத் தோங்கின. அவற்றிற்குள் ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியும் போர்களும் அவ்விரு அரசுகளையும் உருக்குலையச் செய்தன; வீழ்ச்சிக்கு இட்டுச் சென்றன; அப்போதுதான் (9ஆம் நூற்றாண்டு) விஜயாலயனின் தலைமையில் சோழப் பேரரசு எழுச்சி யுறத் தொடங்கியது. களப்பிரரின் ஆட்சிக்காலத்தில் தமிழகத்தில் சங்ககால நாகரிகம் நலிவுற்றதைச் சீர்படுத்திய இந்த இரு பேரரசுகள் அழிந்த பின்பு, அவற்றினுடைய பணியை அவற்றிற்குப் பதிலாக அவை ஆண்ட பகுதியில் வேரூன்றி வளர்ந்த சோழப் பேரரசு தொடர்ந்து மேற்கொண்டது எனலாம்.

தனிநபர் வாழ்வில் எல்லாச் சுவை நலங்களையும் தன் முனைப்போடு நாடித் தேடுதல் என்பது சங்கத்தமிழர் கண்ட

வாழ்வியல் இலக்கணம் ஆகும். கலியரசர்களான களப்பிரரின் வன்முறை ஆதிக்கப் பிடிப்புக்குள் முன்னூறு ஆண்டுகள் (கி.பி. 300-600) முடங்கிப் போய்விட்ட தமிழகம் முன்னையத் தமிழ் நாகரிக உணர்வுகளோடு அக் களப்பிர இருளிலிருந்து மீளவில்லை. சமயச் சார்பான கழிவிரக்கத்தின் அடிப்படையில் ஏற்பட்டுப் போன அந்தணராதிக்கச் சடங்காசார வாழ்க்கைக் கண்ணோட்டம் தமிழர்களைத் தன்முனைப்பற்றவர்களாக ஆக்கிவிட்டது. இத்தகைய உணர்வு மாற்றத்தின் உருவாக அமைந்த சடங்காசாரச் சமயத்தைப் பொது அறமாக்கிவிட்ட பாண்டியரும் பல்லவரும் கட்டிய பேரரசுகளின் சரிவிற்கப்பால் தோன்றுகின்ற சோழர்கள் அம் மதத்தில் கோவிலறம் என்ற புதுமையைச் சேர்த்தனர். இத்தகைய மாற்றத்தைத் தோற்றுவித்த இருள் கவிந்த இடைக்காலத்தின் ஆட்சியாளர்களான இக் களப்பிரர் யாவர்? வரலாற்ருசிரியருக்குள் ஒருமித்த கருத்து இதுபற்றி இன்னும் ஏற்படவில்லை.

கி.பி. 250-ல் இருந்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதிதான் சங்க காலத்தில் காணப்பெறும் கடைசித் தமிழ் மன்னன் ஆவான். இவன் காலத்தில்தான் களப்பிரர் படையெடுப்பு நிகழ்ந்தது. 'அளவரிய ஆதிராசரை அகல நீக்கி அகலிடத்தைக் களப்பிரரெனும் கலி அரசன் கைக்கொண்டு' என்று வரும் பாண்டிய நாட்டு வேள்விக்குடிச் செப்பேடுகள் சொல்வது போல, களப்பிரர்கள் பல்லவரையும், சோழரையும், சேரரையும், பாண்டியரையும் வென்றடிப்படுத்தினர். அச்சுத விக்ராந்தன் என்ற களப்பிர அரசன் நந்தி மலைக்கு உரியவனுக இருந்தான் (யாப்பருங்கலக்காரிகை-சூத்திரம் 83, 86). 'விநயவிநிச்சயா' என்ற தமது நூலில் புத்ததத்தன் என்ற பௌத்த அறிஞர் அச்சுத விக்ராந்தன் சோழர், பாண்டியர், சேரர் ஆகிய மன்னரைச் சிறைப்படுத்தி வைத்திருந்ததைச் சொல்லுகிருர். கூற்றுவ நாயனுர் என்ற களப்பிர குல அடியார் காளந்தைக்கு அதிபதியாகி, பின்பு சிதம்பரம் சென்று தில்லைவாழ் அந்தணரிடம் தம்மை மன்னராக முடி சூட்டுமாறு பணித்ததாகவும், அவ்வந்தணர்கள் அத்தகைய தகுதி சோழ குலத்தவர்க்கே உரியது என்று சொல்லிக் களப்பிரருக்குப் பயந்து சேர நாட்டுக்குச் சென்றுவிட்டதாகவும், பின்பு கூற்றுவக் களப்பிரருக்குத் தில்லை நடராஜ பெருமானே அருள் செய்த நிலையில் முடிசூட்டல் நடந்ததாகவும் சேக்கிழாரின் பெரியபுராணம் விவரிக்கிறது.

சோழ, சேர மன்னர் போலத் தம்மைப்பற்றிப் பாடாத பாண்டியனை மேலும் ஒரு தனிச்சங்கிலியில் களப்பிர அரசன்

பிணைத்தபோது பாண்டியன் களப்பிர அரசனின் புகழ் பாடினுன் என்ற கதைக்கு ஆதாரமாக மூவேந்தர் பாடல்களில் நான்கைச் சான்ருகக் காட்டுகிறது தமிழ் நாவலர் சரிதை என்ற நூல்.

தமிழறிஞர் மு. இராகவையங்கார் இக் களப்பிரரை அன்னியர் என்று கருதவில்லை. தமிழ்க்குலமான வேளாளர்தான் களப்பிரர் என்ற குலப் பெயரில் இருந்தனர் என்ற கருத்துடன், ' சிவஞான போதம் ' எனப்படும் சைவ நூலின் ஆசிரியரான மெய்கண்ட தேவரின் தந்தை பெயர் அச்சுதக் களப்பாளர் என்ற செய்தியை இணைத்து, களப்பிரர் தமிழ் நாட்டவரே என்ற கருத்து வலியுறுத் தப்படுகிறது.

முதலில் பங்களூரிலிருந்து சித்தூர் வரை பரவி வாழ்ந்த இக் களப்பிரர் வடக்குத் திசையினின்றும் கடம்பர்கள் அவர்களை நோக்கி நெருங்கி வந்ததன் காரணமாகத் தமிழகம் வந்தனர். இந்த இடர்ப்பாட்டைக் ' கலிபுகம் ', ' கலிகுலம் ' என்ற சொற்களால் குறிக்கலாம். ஆகவே, களப்பிரர் வேங்கடமலை ஒட்டிய வடபுலத் தவர் ஆவர் என்ற இந்தக் கருத்து களப்பிரரைத் தமிழகத்தின் அருகாமையில் கொண்டு வந்து விடுகிறது.

சங்க காலத்தில் மாற்ருரின் கால்நடைகளைக் கவர்ந்து வாழ்ந்த ' கள்வர் ' என்ற குலத்தினரின் தலைவன் புல்லி என்பவன் வேங்கட மலையைச் சார்ந்தவன். கள்வர் அல்லது களப்பிரர் என்ற பெயரமைந்த இவர்கள்தான் தஞ்சையிலும், கொடும் பாளூரிலும் (புதுக்கோட்டை) காணப்பெற்ற முத்தரையர் ஆவர். இக் கருத்து களப்பிரரைத் தமிழ்ச் சார்பான வன்முறை வாழ்விய லாளராகக் காட்டுகிறது.

கூரம் செப்பேடுகள், நந்தி வர்மன் II பல்லவ மல்லன் மேற் கொண்ட முடிசூட்டு விழாவிற்கு முத்தரையர் (கள்வர் காவலன் என்ற பட்டமுடையவன்) வந்திருந்தான் எனக் கூறுகின்றன.

வேள்விக்குடிச் செப்பேடுகள், பாண்டியன் கடுங்கோன் (590-620) என்பவன் களப்பிரரைத் தமிழகத்தில் முதன்முதலாகத் தோற்கடித்தான் எனச் சொல்வதோடு அச் சாசனத்தை முதன் முதலில் எழுதிய பாண்டியன் பராந்தக நெடுஞ்சடையன் (765—815) மீண்டும் களப்பிரரை வென்ருன் எனவும் குறிக்கிறது.

' பல்யாகசாலை முதுகுடிமிப் பெருவழுதி ' என்ற சங்க காலப் பாண்டியன் வேள்விக்குடி என்ற பிரம்மதேயத்தைக் கொற்கைக் கிழான், நற்கொற்றன் என்ற அந்தணர்க்குக் கொடுத்திருந்தான்.

இதனைக் களப்பிரர் நீக்கிவிட்டனர். இதையே நெடுஞ்சடையன் திரும்பவும் அவ்வந்தணர் வாரிசுகளுக்கு நரசிங்கன் என்ற கொற்கைக் கிழானுடைய வழிவந்தவனின் வேண்டுதலுக்கேற்ப வரி நீக்கிய பிரம்மதேயமாக அளித்தான்.

இத்தகைய முறையில் தமிழகம் வந்து பௌத்த, சமண, சைவ உணர்வுகளில் ஈடுபட்டுத் தமிழகத்தைக் களப்பிரர்கள் ஆளத் தலைப்பட்டு நின்றார்கள். வல்லடியான அரசியல் நடத்திய முன்னூறு ஆண்டுகளுக்குப் பின்பு பாண்டியரிடமும், பல்லவரிடமும் இவர்கள் தோற்றுப்போய் அரசியல் வலிமை இழந்தார்கள். தமிழகத்தில் தமிழர்களாகவே மாறிக்கொண்ட இவர்களிடமிருந்து தமிழகத்தை மீட்கின்ற பெரும்பணியில் சோழர்கள் ஈடுபடவில்லை. பாண்டியரும், பல்லவரும் கி.பி. 600-ல் மதுரையிலும் காஞ்சியிலும் தமிழ்ப் பேரரசுகளை நிறுவினார்கள். சோழ வழியினர் கி.பி. 600-லிருந்து இன்னும் முன்னூறு ஆண்டுகள் பழையாறையில் அரசியல் மேம்பாடும் ஈர்ப்பும் இன்றி வாழ்ந்து வந்தார்கள். ஆனால், அவர்களுடைய தொன்மைச் சிறப்பு யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. அவர்தம் பெண்டுகளைப் பல்லவர்-பாண்டிய அரசகுலங்கள் போன்ற உயர் குடும்பங்களின் இளவல்கள் மணந்துகொண்டார்கள். மொகலாயப் பேரரசன் ஔரங்கசீப் நடத்திய மதவெறி கலந்த அரசியலில் பங்கு ஏற்ற ராஜபுத்திரர்களைப் போலச் சோழ இளவரசர் பலர் பாண்டிய-பல்லவர் அரசுகளில் தாங்களே விருப்புற்ற நிலையில் பணியாற்றினர். அதே சமயம் அச் சோழர்கள் தங்கள் எழுச்சிக்கு உரிய தக்க காலத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தார்கள்.

சங்க காலத்தின் இறுதியிலிருந்து தமிழகத்தை ஆண்ட களப்பிரர் காலம் ஏறத்தாழ 300 ஆண்டுகள். பாண்டிய-பல்லவப் பேரரசுகளின் காலம் சுமார் 300 ஆண்டுகள். ஆக மொத்தம் 600 ஆண்டுகள் அரசியல் மேம்பாடு இல்லாமல் சங்க காலக் கரிகாலனின் வழித்தோன்றல்கள் என்ற பெருமையோடு 'காவிரிக் காவலர்' என்ற சோழர்குலச் சுய உணர்வோடு அக் கால அரசியல் அலைகளின் நீக்கு போக்குப்படித் தங்களை வளைத்துக் கொண்டு சோழன் விஜயாலயனின் எழுச்சிக்காகவும், பாண்டிய-பல்லவப் பேரரசுகளின் வீழ்ச்சிக்காகவும், அக் காவிரிக் காவலர்கள் பழையாறையில் விழிப்போடு காத்திருந்தார்கள்.

## II. பல்லவர்—பாண்டியர் பேரரசுகள்

விஜயாலயச் சோழர்களின் வரலாற்றுக்கு முந்திய பாண்டியரைப்பற்றியும் பல்லவப் பேரரசு பற்றியும் அடிப்படையான சில வரலாற்றுச் செய்திகளை அறிந்திருக்க வேண்டியது அவசிய

மாகும். பிற்காலச் சோழர் காலத்திற்குரிய மேம்பாட்டை ஒப்புமை நோக்கில் தெரிவிக்கும் முறையில் அச் செய்திகள் அமையும். சங்க காலத்திலிருந்து வருகின்ற தமிழக வரலாற்று வளர்ச்சித் தொடர்பு பாண்டிய-பல்லவராட்சிகளில் எத்துணை நலம் பெற்றது? பின்பு எவ்வாறு தமிழ் நாகரிகம் சோழர் காலத்தில் செழுமை உற்றது? இவற்றைப் பாண்டியர், பல்லவர்பற்றிய சிறு குறிப்புகளைச் சோழ நாட்டுக்குரிய செய்திகளின் அடிப் படையில் நாம் காண்பது நலம்.

## 1. பல்லவப் பேரரசு (கி. பி. 600—880)

தொண்டை மண்டலம், சோழ நாடு போன்ற பகுதிகளைப் பெற்றிருந்த பல்லவப் பேரரசின் பெருமைக்கு அடித்தளமிட்டவன் மகேந்திர வர்மன் (600—630) ஆவான். வடக்கே கிருஷ்ணு நதியிலிருந்து தெற்கே காவிரி வரை பரவி நின்ற இவனுடைய பல்லவப் பேரரசு மராத்திய இனத்தினரான சாளுக்கியரின் பேரரசுப் போட்டியின் காரணமாகக் குறுகி விட்டது. 632-ல் புலிகேசன் II என்ற சாளுக்கியனின் தலைநகரான வாதாபி பல்லவ ரால் அழிக்கப்பட்டது. ஏழாம் நூற்றுண்டுக்குரிய இந்த நிகழ்ச்சி யிலிருந்து சாளுக்கியர், பின்பு அவர்களின் வழிவந்த ராஷ்டிரக் கூடர், மேலைச் சாளுக்கியர், கீழைச் சாளுக்கியர் போன்ருேரின் தொடர்புகள் தமிழகத்தின் அரசியலுக்கு உரியவையாக வழிவழி யாகப் பன்னிரண்டாம் நூற்ருண்டு வரை வருகின்றன. பல்லவர்கள் சாளுக்கியரோடு மோதினுர்கள். சோழர்கள் மற்றவர்களோடு போரிட்டார்கள். பேரரசுப் போட்டியே இப் போர்களுக்குக் காரணமாகும். மகேந்திர வர்மனுடைய கற்கோவில் கட்டும் முறை சோழர்களின் கலைப்பணிக்கு ஆதாரமாக அமைந்து விட்டது. இவன் சமணத்திலிருந்து சைவத்திற்கு அப்பர் சுவாமி களால் மாற்றப்பட்ட நாளிலிருந்து தொடங்கிய சைவ சமய முன் னேற்றம் சோழர் காலத்தில் மேம்பாடான நிலைக்கு வளர்ந்தது. இவ்வாறு அரசியலில்—வடக்குப் பேரரசிற்குரிய சாளுக்கிய வழி வந்தவர்களோடு போராட்டம், கலையில் கற்கோவில் கட்டுதல், சமய வாழ்வில் சைவத்தைப் போற்றுதல் என்றளவில் அமைந்த சோழர்களின் வரலாற்றுக்கு உயிரோட்டமாக (accent) அமைந்தது மகேந்திர வர்மனுடைய ஆட்சிக் காலத்திய நிகழ்ச்சி கள் தாம்.

சங்க காலத்தில் கரிகாற்சோழன் மேற்கொண்ட ஈழப் படை யெழுச்சிக்குப் பின்பு மகாபலிபுரத்திலிருந்து நரசிம்மன் (630—668) அனுப்பிய இரு படையெழுச்சிகள் நிகழ்கின்றன. பின்பு பாண்டியன் வரகுணன் மேற்கொண்ட ஈழப் படையெழுச்சி

நிகழ்கிறது. பராந்தகன் I சோழனுடைய ஈழப் படையெழுச்சியிலிருந்து சோழர்களின் ஈழத் தொடர்புகள் அரசியல் ஆதிக்கப் போர்களாக மாறத் தொடங்குகின்றன. நந்திவர்மன் II பல்லவ மன்னன் (731—796) காலத்தில் பல்லவர்—பாண்டியர் மோதுதல்களில் சோழ மண்டலத்தில் நிகழ்கின்ற அரசியல் நிலை வலுப் பெற்றது. இவர்களுடைய பேரரசுப் போட்டியில் சோழ மண்டலம் போர்க்களமாக மாற்றப்பட்டுப் போனதைப் பாண்டியரைப்பற்றிய கீழ்க்கண்ட பிரிவில் காணலாம்:

## 2. முதல் பாண்டியப் பேரரசு (கி. பி. 575—880)

பாண்டியன் கடுங்கோன் கி. பி. 575-ல் களப்பிரரை வென்று பாண்டிய அரசை நிறுவினான். அரிகேசரி மாறவர்மன் (670—710) காலத்தில் பல்லவர்களுக்கு அடங்கி இருந்த சோழ மண்டலம் பாண்டியர் படையெழுச்சிக்கு உட்பட்டது. திருஞான சம்பந்தரால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றப்பட்ட இப் பாண்டியனுடைய மகன் கோச்சடையன் ரணதீரன் மராத்தியரை மங்கலபுரம் என்ற ஊரில் வென்று, 'மதுரா கருநாடகன்', 'கொங்கர் கோமான்' என்ற பட்டங்களைச் சூடிக்கொண்டான். கர்நாடகப் பகுதிக்குப் பிற்காலச் சோழர்கள் சென்று போரிடும் முன்பே பாண்டியர்கள் போர்ப்படையுடன் சென்றிருந்தது இதனால் புலப்படும். மாறவர்மன் ராஜசிம்மன் I (730—765), நந்திவர்மன் II பல்லவனைச் சோழ மண்டலக் கும்பகோணம் பக்கமுள்ள நந்தி கிராமத்தில் முற்றுகையிட்டான். உதயச்சந்திரன் என்ற பல்லவப் படைத்தளபதி பாண்டியரைத் தோற்கடித்து, தெற்கு நோக்கி அப்புறப்படுத்தினான். ராஜசிம்மன் பல்லவரின் ஜென்மப் பகைஞரான சாளுக்கியரை வெண்பைப் போரில் தோற்கடித்தான். பராந்தக நெடுஞ்சடையன் (765—790) தஞ்சாவூர்க்கூற்றம் பெண்ணுடகம் போரில் நந்திவர்மன் II பல்லவனைத் தோற்கடித்தான்.

வரகுணன் I (792—835) பாண்டிய நாட்டோடு சோழ நாட்டையும் முறைப்படி பேரரசாகக் கட்டி ஆண்ட பாண்டியனாவான். தொண்டை மண்டலத்துத் தென் பெண்ணையாறு இப் பேரரசின் வட எல்லையாக அமைந்திருந்தது. ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் (815—862) பல்லவரைக் குடமூக்குப் (கும்பகோணம்) போரில் தோற்கடித்தான். இப் பாண்டியன் ஈழத்தின்மீதும் படை எடுத்து, அந் நாடு முழுமையும் பிடித்துக்கொண்டு, அங்குள்ள செல்வக்குவியல்களைத் தன்னோடு எடுத்துச் சென்றதாக ஈழ வரலாறு மகாவம்சம் குறிக்கிறது. விஜயாலயச் சோழர்கள் ஈழத்தில் நடத்திய பேரரசு ஆதிக்கப் போர்களுக்கும், பொருள் கவர்

தலுக்கும் பாண்டியர்களும் அவர்களுக்கு முன்பே ஈழத்தைப் படை எடுத்த நரசிம்மவர்ம பல்லவனும் முன்னேடிகளாக விளங்கி இருக்கிறார்கள் என்பது தெளிவு. சேன II என்ற ஈழ மன்னன் நிகழ்த்திய பாண்டிய நாட்டுப் படையெழுச்சி பயனற்றுப் போனது என்பது சோழர் காலத்தில்தான் முதன்முதலாகத் தமிழகத்தில் ஈழப்படைகள் வந்தன என்ற செய்தியை மறுதலிக்கும். இப் பாண்டியனைப் பல்லவன் நந்திவர்மன் III 'தெள்ளாறு' என்ற இடத்தில் போரிட்டு வென்ற காலத்திலிருந்து முதலாம் பாண்டியப் பேரரசின் நலிவு தொடங்கியது. வரகுணன் II (862—880) காலத்தில் சோழர்கள் விஜயாலயன் தலைமையில் தஞ்சையதிபதிகளாக ஆகிவிட்டார்கள். இடைவையில் சோழர்களைத் தோற்கடித்த இவனைத் திருப்புறம்பியத்தில் கங்கர்-பல்லவர்-சோழர் கூட்டணி தோற்கடித்து, பாண்டியரைக் காவிரிக் கரையிலிருந்து தென்பக்கம் அப்புறப்படுத்தினர். ராஜசிம்மன் II (900—920) என்ற பாண்டியனேடு ஈழத்தவரையும் சோழன் பராந்தகன் I வெள்ளூர்ப் போரில் தோற்கடித்த பின்பு 26 ஆண்டுகள் கழித்து வீரபாண்டியன் (946—966) என்ற பாண்டியன் சுந்தரச் சோழனுடைய மகன் ஆதித்தனால் கொல்லப் பட்ட நிலையில் முதலாம் பாண்டியப் பேரரசு முற்றிலும் மறைந்து விடுகிறது.

## III. பல்லவர்-பாண்டியர் பேரரசுகளும் சோழப் பேரரசும்

வடக்கே பேரரசாக இருந்த சாளுக்கியரோடு பல்லவர்கள் மோதி நின்றார்கள்; தெற்கே சோழ மண்டலத்தைக் கைப்பற்ற முனைந்து நின்ற பாண்டியப் பேரரசோடும் போரிட்டார்கள். பல்லவரையும் பாண்டியரையும் மோதவிட்டு 880-ல் நிகழ்ந்த திருப்புறம்பியப் போரில் அவ்விரு பேரரசுகளும் அழிவுபடச் செய்த நாளிலிருந்து சோழர்கள் தங்கள் பேரரசைக் கட்டத் தொடங்கினார்கள். இப் பேரரசுகள் இருந்த தமிழகப்பகுதியில் தோன்றிய சோழப்பேரரசு சாளுக்கியரை வடக்கில் எதிர்த்து நின்ற பல்லவரின் பணியைத் தொடர்ந்தது. தெற்கே 1190 ஆண்டளவில் ஏற்பட்ட இரண்டாம் பாண்டியப் பேரரசோடு மோதி அச் சோழப் பேரரசு 1279-ல் அழிவுற்றது. வடக்கிலும் தெற்கிலும் போட்டிப் பேரரசுகளை எதிர்த்து வளர்ந்த பல்லவப் பேரரசு போலச் சோழப் பேரரசும் இடைவிடாமல் வடக்குத் தெற்குப் போட்டியாளரோடு போராடிக்கொண்டே வளர்ந்தது. பல்லவர்களுடைய கோவில் கட்டுதல், அந்தணரைப் போற்றுதல், சைவத்தை வளர்த்தல் போன்ற கலாசாரச் சமய வளர்ச்சிக்குரிய பாரம்பரியங்களை வர

லாற்றுப் பூர்வமான முறையில் தன்மயமாக்கிக்கொண்ட சோழப் பேரரசு பல்லவர்க்குரிய முழுமுதல் அரசியல் வாரிசுகளாகத் தோற்றங்கொண்டது.

வடக்கே இருந்து வந்த பேரரசுப் போட்டியாளர்களான சாளுக்கியரின் இராணுவ வலிமையில் நலிவுற்றுப் போகாத பல்லவர் பேரரசு தெற்கே இருந்து வந்த பாண்டியர்களோடு மோதி, 880-ல் தனது அழிவைத் தேடிக்கொண்டது. இதே போல வடக்கத்தியாளரான மேலைச் சாளுக்கியரை வலிமையுடன் எதிர்த்து வளர்ந்த சோழப் பேரரசு பாண்டியரின் இரண்டாவது பேரரசின் எழுச்சிக்கு உட்பட்டு 1279-ல் அழிந்து போயிற்று. ஆனாலும் பல்லவர்—பாண்டியர் என்ற இரு பேரரசுகளுக்கு அடங்கி இருந்த தமிழகத்தை ஒரே பேரரசின் ஆட்சிக்குக் கொண்டு வந்த சிறப்பு சோழருக்குத்தான் உண்டு. இந் நிலையில் தமிழகத்தின் அரசியல், கலை போன்றவற்றின் ஒருமித்த வளர்ச்சியை 880-லிருந்து 1279 வரையுள்ள நானூறு ஆண்டுக் காலத்தில் மேம்படுத்திக் கொடுத்த தனிப்பெரும் சாதனை விஜயாலயச் சோழர்களின் பெருமையாகக் காணப்பெறுகிறது. உன்னதமான சங்க காலத்திற்குப் பின்பு வந்த களப்பிரருடைய இருண்ட காலத்தின் திரையைக் கிழித்துக்கொண்டு தமிழக வரலாற்றைத் துலக்கித் தோன்றிய பல்லவர்—பாண்டியர் பேரரசுகள் வளர்த்துவிட்ட தமிழ் நாகரிக வளர்ச்சி சோழர்களால் கோர்வைப்படுத்தப்பட்ட நிலையில் அவர்களுடைய நானூறு ஆண்டுக் கால ஆட்சியில் எவ்வாறு மேம்படுத்தப்பட்டது என்பதைப் பின்வரும் அத்தியாயங்களில் விஜயாலயச் சோழன் தொடங்கிய சோழர்களின் அரசியல் வாழ்விலும், அக் காலத்திற்குரிய சமூக வரலாற்றிலும் இனி நாம் காண்போம்.

# 2. சோழன் விஜயாலயன் (850 – 871)

பிற்காலச் சோழர்களின் எழுச்சிக்கு வித்திட்டவன் விஜயாலயச் சோழன் ஆவான். பாண்டியரும் பல்லவரும் பேரரசுப் போட்டியில் ஈடுபட்டபோது சிறந்த ராஜதந்திரவுணர் வோடு இப் பழையாறைச் சோழ மன்னன் மேற்கொண்ட அரசியல் நடவடிக்கைகளின் காரணமாகத் தஞ்சையும், தஞ்சை யைக் கேந்திரமாக வைத்துச் சோழப் பேரரசும் உருவாயின. தஞ்சைக்கு வடமேற்கேயுள்ள செந்தலை, வல்லம் என்ற இரு நகர்களைத் தலைநகரங்களாகக் கொண்டு முத்தரையர்கள் தஞ்சை யையும் சேர்த்துப் பாண்டியர்களுக்கு அடங்கி ஆளத் தலைப்பட் டார்கள். கி.பி. 846-ல் (பொதுவாக 850-க்குப் பின்பு) விஜயாலயன் முத்தரையரின் தஞ்சையைக் கைப்பற்றிக்கொண்டான். வரகுண பாண்டியன் I காலத்தில் பாண்டியரின் பக்கம் சார்ந்து நின்ற முத்தரையரை ஒழிக்கின்ற வேலையைச் சோழன் விஜயாலயன் செய்யட்டும் என்று பல்லவ மன்னன் நந்திவர்மன் III (8·4—866), ஒதுங்கி இருந்தான் எனக் கொள்ளல் வேண்டும்.

854-ல் சோழர், பல்லவர் உள்பட எல்லா எதிரிகளையும் குடமூக்குப் போரில் தோற்றோடச் செய்த பாண்டியன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் என்ற பரச்சக்கர கோலாகலன் 862-ல் நடந்த அரிசி லாற்றங்கரைப் போரில் பல்லவ மன்னன் நிருபதுங்க வர்மனிடம் தோல்வியுற்றான். பாண்டியன் வசம் இருந்த சோழநாடு பல்லவர் கைக்குள் அடங்கிற்று. பரச்சக்கர கோலாகலன் மறைவுக்குப் பின் அவன் மகன் வரகுணன் II (862 885) தன் தந்தை இழந்த சோழநாட்டைத் திரும்பப் பிடிப்பதற்காகக் காவிரியாற்றைக் கடந்து வடவை வரை வந்தான். விஜயாலயனுடைய மகன் ஆதித்த சோழன் I 871-ல் தந்தைக்கடுத்த 'யுவராஜா' என்ற பட்டத்துக்குரிய அரசியல் அந்தஸ்தைப் பெற்றிருந்த நிலையில் பாண்டியப் படையெழுச்சியை எதிர்த்து நின்றிருக்க வேண்டும். பேராசிரியர்[1] K.A. நீலகண்ட சாஸ்திரி அவர்களின் கருத்துப்படி முத்தரையர்களின் தஞ்சை, சோழர்களின் வசப்பட்ட பின்பு,

1 இனிப் பேராசிரியர் என்று குறிப்பிடப்படும் ஆசிரியர் இவர் எனக.

தென்னகத்தின் அரசியலில் சமநிலை (Balance of Power) பிறழ்ந்தது; பல்லவர்—சோழர் எழுச்சிக்கு ஊக்கம் ஏற்பட்டது இதனைச் சீர்படுத்துகின்ற எண்ணத்தில்தான் பாண்டியன் வரகுணன் II 879-ல் இடவைக்கும், பின்பு அதனடியாக 880-ல் திருப்புறம்பியத்திற்குச் சென்றான்; தோற்றான்.

பல்லவருக்குப் பகை காட்டுகின்ற முறையில் பாண்டியர்க்குச் சார்பாக மேற்கொண்ட அரசியல் நடவடிக்கையாகத் தஞ்சையை விஜயாலயன் கைப்பற்றி இருக்கலாம் என்ற கருத்தும் உண்டு. அப்படியானால், திருப்புறம்பியப் போரில் பாண்டியனின் தோல்வி யைப் பங்கிட்ட முறையில் விஜயாலயனும் வலுக்குன்றி அரசியலில் ஏற்படுகின்ற பிழைகளுக்கு ஏற்புடைத்தான அழிவையோ, அடிமைத் தளையையோ பெற்றிருக்க வேண்டும். இவ்விரண்டும் இல்லாத முறையில், பல்லவன் அபராஜிதனைத் தொண்டை மண்டலத்துக்காக நடந்த போட்டிப் போரில் தனது மகன் ஆதித்தன் நேருக்குநேர் போரிட்டுக் கொல்லுகின்ற அளவில் அரசியற்செல்வாக்கும் படை வலிமை யும் விஜயாலயனிடம் தொடர்ந்து இருந்தன.

## I. திருப்புறம்பியப் போர் (கி.பி. 880)

880-ல் நடந்த இப் போர் இனி வருகின்ற நானூறு ஆண்டு களுக்குத் தென்னகத்தின் அரசியலைச் சோழ மன்னருக்கு உரிய தாக்கியது. சங்க காலத்திலிருந்து 600 ஆண்டுகள் பழை யாறையின் பழம் பெருமையில் உறங்கிப்போன சோழர்குலம் விஜயாலயன் காலத்தில் விழிப்படைந்து எழுச்சியுற்றதன் நேரடி யான தோற்றத்தை இப் போரில் நாம் காண்கிறோம். சோழ வரலாற்றில் பேரரசுக்குரிய மனஊர்ப்பை இந்தப் போரின் வெற்றி பெற்றுத் தந்ததால்தான் சோழ சாம்ராஜ்யம், விஜயாலயன் தன் வாளால் கோடிட்டுக் காட்டிய வல்லடிப் போர்ப் பாதையில் வளர்ச்சியுற்று. தென்னிந்தியாவையும் கீழை நாடுகளையும் தமிழக அரசியல், கலைகொண்டு ஆரத் தழுவி நிற்க முடிந்தது.

தென்னிந்திய அரசியலை 400 ஆண்டுகளுக்குச் சோழ அரசர் களுக்குச் சொந்தமாக்கிய திருப்புறம்பியப் போருக்குக் காரணம் என்ன?

பேரரசுப் போட்டியின் நேரடியான மோதலில் பல்லவ மன்னன் அபராஜிதன் பாண்டியன் வரகுணனுக்குரிய முழு எதிரி ஆனான். பாண்டியர்களின் படையெழுச்சிகள் தொண்டை மண்டலம் கொங்குதேசம் வரை சென்று மீண்ட அக் காலத்தில் பல்லவர்கள் தங்களுடைய ஆட்சியின் பொது எதிரியை முறியடிக்கக் கூட்டணியைத் திரட்டினார்கள். தென் மைசூர்ப்

பகுதியான கங்க நாட்டின் மன்னன் பிருதிவிபதி I பல்லவன் அபராஜிதனேடு சேர்ந்துகொண்டான்; திருப்புறம்பியப் போரில் அவனுடைய ஒத்துழைப்பால் ஏற்பட்ட வெற்றிக்குப் பின்பு அவன் உயிரிழந்தான். அவன் பெயரால் உதிரப்பட்டி ஒன்றும், வீரக்கல் ஒன்றும் திருபுறம்பியத்தில் அமைக்கப்பட்டன. அபராஜிதனுக்கு இப் போரின் வெற்றி அவ்வளவாகப் பயனைத் தரவில்லை. பேராற்றல் பொருந்திய பாண்டிய எதிரியை வீழ்த்துகின்ற போராட்டத்தில் தன் சக்தி அனைத்தும் இழந்து போன பல்லவ அரசாக—அபராஜிதன் ஆண்ட காலத்தில்—காஞ்சியின் ஆட்சி காணப்பட்டது. இரண்டு பாம்புகள் ஒன்றையொன்று வாலிலி ருந்து விழுங்க முயற்சிப்பது போல இரு பேரரசுகளின் மோதுதலில் இரண்டுமே அழிவுற்றன. இப்போது சோழன் விஜயாலயன்தான் உண்மையான பயனை அடைந்தான். இதற்கு முழுமுதற்காரணம் அவனுடைய தன்னூக்கம் கொண்ட மகன் ஆதித்த சோழனுடைய போர்த்திறனும் பேரரசுப் பெருமிதமும் ஆகும் எனக் கொள்ளல் வேண்டும்.

## II. திறனய்வுக் குறிப்புகள்

1 **பேரரசுப் பார்வை (Vision of Imperialism) :** பிற்காலச் சோழர்களின் வளர்ச்சிப்பாதையில் காணப்பெறுகின்ற பேரரசுத் தத்துவம், அந்தணர்வழி இந்து சமயத்தைத் தழுவிய சைவ சமயத்தின் வளர்ச்சி, கற்கோவில் கட்டுதல், அரசக் குடும்ப ஒழுகலாறு போன்றவற்றிற்கு அமைந்த போக்குகளை (Trends) விஜயாலய சோழன் அமைத்துக் கொடுத்தான். இவனுடைய ஆட்சியில் காணப்பட்ட, மேலே சொல்லப்பட்ட சாம்ராஜ்யக் கட்டுமான அமிசங்கள் பிற்காலச் சோழர்களுடைய வரலாற்றுக் கான உயிரோட்டம் (Accent) என அமைந்ததை நாம் கண்டு கொள்ளலாம். சோழன் விஜயாலயன் பிறவியிலேயே மாமன்னனுக இருக்கத் தக்கதான அரச இயல்புகளைப் பெற்றவன்; நாடறிந்த முனைப்புடைய படை வீரன். ‘அடுத்தடுத்துச் சீறுர் செருவிற்திரு மார்பு தொண்ணூறும் ஆறும் பழுதழும்பின் ஆரத்தோன்’ எனக் ‘குலோத்துங்க சோழனுலா’ அவனைக் குறிக்கிறது. இத்தகைய படையாற்றல் அவனுக்குரிய தொண்ணூற்ருறு புண்களின் வீரத் தழும்புகளாக நெஞ்சில் வரலாற்றுப் படமாக விளங்கியது. ஐரோப்பிய வரலாற்றில் மகா பிரடெரிக் வல்லடியான முறையில் சைலீசியா என்ற ஆஸ்திரிய நாட்டுப் பகுதியைப் பிடித்தபோது இரண்டு ஐரோப்பியப் போர்களை அவன் நடத்த வேண்டி யிருந்தது. விஜயாலயன் தஞ்சையைப் பிடித்தபோது அதன் காரணமாகத் தமிழகப் பேரரசுகள் இரண்டும் தாமாகவே மோதிக்கொண்ட நிலையில் அவை தாமாக இற்று வீழ்ந்தன.

இத்தகைய முறையில் அரசியலில் தனக்குரிய பயனைத் தானே நேரடியாகக் கலந்துகொள்ளாத—ஆனல் தன்னுடைய தஞ்சைப் பிரவேசத்தால் உண்டு பண்ணப்பட்ட அரசியல் குழப்பத்தால் ஏற்பட்ட—திருப்புறம்பியப் போரில் அவன் பெற்ருன்; தமிழகத்தின் அரசியலைத் தனக்குச் சாதகமான வகையில் திருப்பிவிட்டுச் சோழ அரசின் எழுச்சியைத் தனது ராஜதந்திரத்தினுல் பேரரசுக்கான உயிரோட்டமாக அமைத்துத் தந்தான் இவ்வரசன்.

**2. சமயக் கொள்கை உருவாக்கம் :** இவ்வாறு அரசியற் புலமையும், படை நடத்தும் பேராற்றலுமுள்ள இவனுக்குப் படைஞருக்குப் பொருத்தமான துர்க்கை தேவி இஷ்ட தெய்வமாக விளங்கியதிலும், அத் தெய்வத்திற்குத் தஞ்சையில் 'நிசும்பசூதனி' என்ற பெயரிட்டு ஒரு கோவிலை இவன் கட்டியதும் பொருத்தமானதே; திருத்தணி பக்கம் 'விஜயாலயா' என்ற பெயருடைய கோவில் பற்றி விஜயநகரப் பேரரசின் குறிப்பு வருகிறது. புதுக்கோட்டையைச் சார்ந்த நார்த்தா மலைப்பக்கம் உள்ள குன்றில் 'விஜயாலயச் சோழேச்சுவரம்' என்ற கற்கோவில் ஒன்றையும் இவன் கட்டினுன். எழுபது கோவில்களைச் சங்க காலத்தில் கட்டிய இவனுடைய மூதாதை கோச்செங்கணுனின் வழியில் சோழர்க்குரிய கோவில் கட்டும் பாரம்பரியத்தை, இக் கோவிலைக் கட்டுவித்ததன்மூலம் இவன் போற்றினுன்; இவனுக்குப் பின் வந்தவர்கள் இக் கோவில் கட்டுகின்ற பணியில் தங்கள் அரசியலையே இணைத்துப் பார்க்கின்ற வழி முறைக்கு வித்திட்டவன் இவனே. ஏனென்ருல், கோவில் கட்டுதலும், அந்தணர்க்கு நிலம் வழங்கலும் சோழ அரசியலில் இடையருமல் பின்னி வருகின்ற சமுதாய நலங்கள் ஆகும்.

தமிழ் நாகரிக வழி முறைப்படி பெண் தெய்வ வழிபாட்டுக்குரிய கொற்றவை கோவிலையும், அந்தணரைப் போற்றுகின்ற சமய வழி முறையின்படி விஜயாலேச்சுவரம் என்ற மற்ருெரு கற்கோவிலையும் கட்டிய விஜயாலயன், அந்தணருக்கு நிலமும் அளித்தான். தஞ்சைப் பெரிய கோவில் கல்வெட்டில் காணப்பெறும் விஜயாலயச் சதுர்வேதி மங்கலம் என்ற குறிப்பு இதனை உணர்த்துகிறது. இவ் வகையில் சோழ நாட்டுக்குரிய அரசியல் போக்கை மட்டுமல்லாமல் அரச அதிகாரத்தோடு இலங்குகின்ற சமய வாழ்வியலையும் தொடங்கி வைத்தவன் விஜயாலயனே ஆவான்.

**3. அரசக் குடும்பத்தின் ஒழுகலாறு :** சோழ வமிசத்தின் அரசர்கள் பரகேசரி, ராஜகேசரி என்ற பட்டங்களை மாறி மாறி ஒருவர் பின் ஒருவராகப் புனைந்துகொண்டார்கள். இருபத்து ஐந்து ஆண்டுகள் அரசாட்சி செய்த விஜயாலயனுக்கு

உரிய பட்டம் 'பரகேசரி' என்பதாகும். தென் ஆற்காடு மாவட்டத்தின் திருக்கோவிலூர்ப் பக்கமுள்ள வீர சோழ புரத்தில் தஞ்சை கொண்ட பரகேசரி எனக் குறிப்பு வருகிறது. இவனுக்கு வாய்த்த மனைவியரைப் பற்றிய குறிப்புகள் நமக்கு இதுவரை கிடைக்கவில்லை. இவன் பட்டத்திற்கு வந்த மூன்ருவது ஆண்டில் (849) அக் கல்வெட்டு செய்யப்பட்டதால், இச் சோழனுக்குத் தொண்டை மண்டலம் வரை கல்வெட்டு களை அமைக்கக்கூடிய பெருஞ்சலுகையைப் பல்லவர்கள் வழங்கி யிருக்க வேண்டும் எனப் பேராசிரியர் குறிப்பிடுகிருர். இவ் வகையில் திருப்புறம்பியப் போருக்கு முன்பே அரசர்க்குரிய பேராற்றலோடு விளங்கிய விஜயாலயனுடைய முழுச்சாதனைகள் எல்லாம் அவன் மகன் ஆதித்தன் I காட்டிய போராற்றலில் நிறைவு பெற்றன எனக் கூறலாம்.

**4. அரசியல் சார்புடைய பேராண்மை விதையிடு காலம்:** படை நடத்தி விஜயாலயன் பெற்ற தஞ்சையின் வளர்ச்சியே பேரரசாக அமைந்தது என்று கொண்டால், இராணுவத்தின் அடிப்படையில் அப் பேரரசு இயங்க வேண்டிய அரசியற்கூறுபாடு களைச் சோழ அரசினுக்கு வரலாற்றுப்பூர்வமான வளர்ச்சியாக இவன் வழங்கினுன் என்றும் கூற வேண்டும். படைகள் இல்லாமல் பேரரசு சிறக்காது என்பது உண்மைதான். பேரரசுகளுக்குரிய பல்லவரையும், பாண்டியரையும் தென்னிந்திய அரசியலிலிருந்து ஒதுக்கிவிட்டுப் பின்பு சோழப்பேரரசு வளர முற்பட்ட காலத்தில் வடக்கே முதலில் ராஷ்டிரகூடரோடும், பின்பு மேலைச்சாளுக்கிய ரோடும், தெற்கே பாண்டிய விடுதலை வீரர்களோடும் மீளாத போர்ப் பிடிப்பில் ஈடுபட்டுப் போக வேண்டிய அரசியற்போக்கை இராணுவப் பாதையில் அமைத்துக் கொடுத்தவன் விஜயாலயனே.

இவ் வகையில் விஜயாலயன் தஞ்சையை மட்டும் கொண்டவன் அல்லன்; படைத்திறம் காட்டல் என்பதை உயிரோட்டமாகக் கொண்ட சோழப் பேரரசுக்கான அரசியல் விளிம்புகளைக் கட்டியவன் என்ற பொறுப்பும் இவனைச் சாரும். இங்கிலாந்தின் அரசியல், கலை, சமயம் என்றளவில் விரிந்து நின்ற பெரு வளர்ச்சிக்குக் காரணமான ட்யூடர்களின் முதல் அரசன் ஹென்றி VII என்பவனுடைய ஆட்சியை விதையிடு காலமாகக் (seed time) கொள்வர். அதே போல விஜயாலயன் சோழ அரசுக்கு அளித்த இராணுவப் பாங்குடைய அரசியலும், சைவச் சமய வழி நிற்கும் அரசியற்சார்பும் சோழ மன்னர்களுக் குரிய பாரம்பரியங்களாகக் காலப்போக்கில் மலர்ச்சியுற்றுப் போயின. இதன் காரணமாகவே விஜயாலயனின் ஆட்சியைச் சோழர் காலத்தின் அரசியல், கலை சம்பந்தமான பெருஞ்சாதனைக் குரிய விதையிடு காலமாக நாம் கொள்ளலாம்.

# சோழன் ஆதித்தன் I (871-907)

விஜயாலய சோழனுடைய மகன் ஆதித்தன் I, தன் தந்தை உருவாக்கிய சோழ அரசு என்ற கருவை உயிர்த்துடிப்பான பேரரசாகக் குறுகிய காலத்தில் அந் நாளைய வரலாற்றுப் போக்கு முறையில் வளர்த்த சோழ மாமன்னன் ஆவான். இவனுடைய படைத்திறன்தான் திருப்புறம்பியப் போரில் சோழர்க்கான அரசியல் நன்மைகளைப் பெற்றுத் தந்தது. விஜயாலயன் முதுமை அடைந்திருந்த அந் நாளில் அவன் இறப்பதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்பாகவே, அதாவது 861-ல், ஆதித்தனுக்கு 'யுவராஜா' என்ற பட்டஞ்சூட்டப்பட்டது. சோழ அரசியலில் 'யுவராஜா' என்ற பதவி நாட்டின் அரசியலை நடத்துகின்ற மன்னனுக்கு இணையாகச் செயல்படக்கூடிய இளவரசனைக் குறிக்கும்.

## I. வெளிநாட்டுக் கொள்கை

**பல்லவருடன் போர் - தொண்டை மண்டலம் கை வசமாதல் :** 880-ல் திருப்புறம்பியப் போரில் பெற்ற வெற்றிக்குத் துணைநின்ற சார்புடைமையை முன்வைத்து அபராஜிதன் ஆதித்தனுக்குத் தஞ்சை மண்டலத்தில் ஒரு பகுதியைக் கொடுத்தான். இது நண்டுக்குச் சூல் வாய்த்தது போல அபராஜிதனையே அழித்தது. 890-ல் ஆதித்தன் பல்லவன் அபராஜிதனை நேர்முகப் போரில் கொன்றான். யானைமேல் வந்த பல்லவனை நோக்கிப் பாய்ந்து அவனை வெட்டி வீழ்த்தினான் எனக் கன்னியாகுமரி கல்வெட்டு ஆதித்தனைப்பற்றிக் கூறுகிறது. இப் போரில் ஆதித்தனுக்கு உதவியாகப் பாண்டியன் வரகுணன் தனது படையெழுச்சியை நடத்திவந்து பல்லவனை அழிப்பதில் துணை நின்றான் என ஆராய்ச்சியாளர் திரு. T. A. கோபிநாத ராவ் கூறுகிறார். பாண்டியன் உதவி ஆதித்தனுக்குக் கிடைத்திருக்க வழி இல்லை எனப் பேராசிரியர் கூறுகிறார். ஆனால், கங்க நாட்டரசன் பிருதிவிபதி II (பிருதிவிபதி I மன்னனுடைய மகன் மாறசிம்மனுடைய இளவல்) ஆதித்தன் பக்கம் நின்று போரிட்டான். கங்கை நாட்டை வென்றடிப்படுத்தியதால் இவ்வாறு அவ்வரசன் துணை போயிருக்கலாம் என்ற கருத்தும் உண்டு. ஏனென்றால், கங்கநாட்டுத் தலைநகர் தலைக்காடு ஆதித்தன் வசமானது. கங்கர்கள் சோழ மன்னருக்கு உட்பட்டவர்களாக ஆகிவிட்டார்கள். தொண்டை மண்டலப் பகுதி

சோழர்களின் வசமானதை இப் போரினுடைய தலையாயப் பயனாகக் கொள்ளலாம். திருவாலங்காட்டுச் செப்பேடுகள் இதுபற்றி கூறுகின்றன.

**கொங்கு நாட்டைக் கைப்பற்றுதல் :** கேரள மன்னன் பரிந்துரைக்க, விக்கி அண்ணன் என்பான் ஆதித்தனுக்குச் செய்த இராணுவ உதவியின் சன்மானமாக அந்த தானைத் தலைவனுக்குச் சிவிகை, சங்கு முழக்கம் போன்ற அரசனுக்குரிய மரியாதைகளைச் சோழனும், கேரளனும் அனுமதித்தார்கள். தன் மனைவி கடம்ப மகாதேவியைப் போலக் கர்நாடகத்தைச் சேர்ந்த இவன் கொடும்பாளூர் (புதுக்கோட்டை) வேளிர் (குறுநில மன்னன்) ஆவான். சோழ மன்னன் ஆதித்தன், சோழ மண்டலத்தின் தென்பகுதியின் தலைவன் விக்கியண்ணன், கேரள மன்னன் ஆகிய மூவரையும் கொங்குநாட்டைக் கைப்பற்றிய போரில் ஈடுபடுத்துகின்ற நிலையில் தென்னகத்தின் ஒற்றுமை பாண்டியர் நீங்கலாகக் காணப்பட்டது என்பதைக் குறிக்கும். பாண்டியன் பராந்தகன் வீரநாராயணன் (880—895) என்பவனும் கொங்குநாட்டைப் பிடித்துக்கொண்டதாக உரிமை கொண்டாடு கின்ற செய்தியும் உண்டு. சோழனும் பாண்டியனும் கொங்கு நாட்டை இரு பகுதிகளாகப் பிரித்து அனுபவித்தார்கள் என்ற கருத்தைப் பேராசிரியர் கூறுகிறார்.

## II. உள்நாட்டுப் பணி

**சமயக் கொள்கை :** கொங்கு நாட்டைக் கைப்பற்றிய போது அப் போரில் கிடைத்த தங்கத்தைத் தன்னோடு கொண்டு வந்த ஆதித்தன் சிதம்பரம் நடராஜப்பெருமானுக்கு அதை அளித்து, அக் கோவிலுக்குச் சிறப்புச் செய்தான். 'பல்யானை கோக்கொண்ட' எனவும், 'தொண்டை நாடு பாவின் சோழன்' எனவும் புகழுரை எய்திய இச் சோழனின் கொங்குதேச விஜயம் பற்றி 'கொங்கு தேச சரித்திரம்' குறிப்பிடும்போது வேடர் இராசாக் களை ஆதித்தன் வெற்றி பெற்றான் என விவரிக்கிறது. இவ் வெற்றி யின் சிறப்பைத் தில்லைச் சிதம்பரத்திற்கு அளித்த தங்கமாக இவன் காட்டியதைத் தொடர்ந்து சோழ மன்னர்கள்—குறிப்பாக மாமன்னன் ராஜராஜன் I—மேலைச் சாளுக்கியரோடு செய்த போர்களில் கிடைத்த தங்கம் போன்ற விலையுயர்ந்த பொருள் களைத் தஞ்சைப் பெரிய கோவில் போன்ற கோவில்களுக்கு அளித்தார்கள். திருப்புறம்பியத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்குக் 'கற்றளி' ஒன்றை எழுப்பி, அதற்கு

'ஆதித்தேசுவரம்' என்ற பெயரும் வழங்கினுன் என்று கல்வெட்டுகள் வாயிலாக அறிகிறோம். சங்கச் சோழருள் கடைசி அரசன் நல்லடியானுக்கு முந்திய கோச்செங்கணுன் கட்டியது போல, ஆதித்தனும் காவிரிக்கரை நெடுக. சாயத்திரி மலைத் தொடக்கம் வங்கக்கடல்வரை ஏராளமான சிவன் கோவில் களைக் கட்டினுன் என அன்பில் செப்பேடுகள் குறிக்கின்றன.

பல்லவ மன்னன் மகேந்திர வர்மன் I மரம், சுண்ணும்பு, செங்கல் இன்றி வெறும் கல்லால் கோவில் கட்டுகின்ற கலையை முதன்முதலாக நிறுவனம் செய்ததை ஒட்டி, விஜயாலயனின் நார்த்தா மலையிலுள்ள விஜயாலயச் சோழேச்சுவரம் என்பதை அடுத்து, ஆதித்த சோழன் கட்டிய கற்கோவில் ஏற்பட்டது. கல் மட்டும் கொண்ட கட்டடக் கலையின் புதுமையைச் சோழ நாட்டில் தனி ஓர் இயக்கமாக இவ்விரண்டு கற்றளிகளும் கொண்டு வந்தன. 'சோழநாடு கோவில்கள் உள்ள திருநாடு' என்ற உலகப் புகழுரை தோன்றுவதற்கு முதல் காரணமாக விளங்குபவன் ஆதித்த சோழனே ஆவான். காவிரிக்கரை எங்கும் கற்றளிகள் நிறுவிய இவனுக்குப் பின் வந்த சோழ மன்னர்கள் இவ்வாறு கோவில் கட்டுதலைத் தாங்கள் நடத்தும் அரசியலில் மிக ஈடுபாடான பகுதியாக்கிக் கொள்வதற்குச் சாதகமான கலைப் பார்வையையும், சமயச் சேவை ஈடுபாட்டையும் சோழர்குல அரசின் ஒழுகலாறு என இச் சோழன்தான் வரையறுத்தான். திருச்சியை அடுத்துள்ள திருஎறும்பியூர்க் கோவிலும் இவன் கட்டியதுதான்.

ஐயன்பேட்டைக்குப் பக்கமுள்ள இராசகிரி எனப்படும் ராஜ கேசரி சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் இச் சோழன் அந்தணர்க்கு வழங்கிய முற்றூட்டு ஆகும். இதுவும் சோழ அரசிற்கு உரிய அந்தணர்வழி சமயப்பற்றை விஜயாலயனைத் தொடர்ந்து ஆதித்தன் கைக்கொண்டதைக் காட்டுகிறது.

## III. குடும்பம்

போரில் கொல்லப்பட்ட அபராஜிதனுடைய வழித்தோன்றல் களைத் தம் பக்கம் ஈர்க்கின்ற முறையில் ஆதித்தன் பல்லவர் குலமான 'காடுபட்டிகள்' என்ற வழியில் வந்த திரிபுவன மகா தேவி என்பவளை மணம் முடித்தான். இருந்தாலும் பல்லவர்கள் சோழருக்கு அடி பணிந்து போராட்டமின்றி அயர்ந்து இருக்க வில்லை. ஆதித்தன் மகன் பராந்தகன் பல்லவரைப் போரில் தானும் வென்றதாகக் கூறிக்கொள்வதிலிருந்து இதை அறியலாம்

கொங்கு நாட்டைக் கொண்ட விதம் ஆதித்தனை ஓர் அரசியல் ராஜதந்திரியாகக் காட்டிற்று. கேரள அரசன் தாணுரவியின் இணக்கத்தின்பேரில் தானைத் தளபதி விக்கி அண்ணன் உதவியோடு ஆதித்தன் கொங்கு நாட்டைக் கைப்பற்றினான். ராஜராஜன் I சைவத்தை வளர்த்த காலத்தில் திருப்பதிகம் தொடுத்த நம்பி ஆண்டார் நம்பி என்ற நாயனார் தமது திருத் தொண்டர் திருவந்தாதியில் 'சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்' எனக் குறிப்பிடுகிறார்.

கோவில் எடுப்பிப்பதில் ஒரு வகையான அருளுணர்வு ஏக்கத் தையும், அந்தணர்க்கு 'மங்கலம்' வழங்குதலில் ஏற்கெனவே உள்ள பாரம்பரியத்தையும் போற்றியவன் இம் மாமன்னன் ஆதித் தனே. முப்பத்தாறு ஆண்டுகள் தன்னளவில் மாமன்னனாக ஆட்சி செய்த இவனுக்கு வாய்த்த இரு மனைவியரில் மூத்தவளான இளங்கோபிச்சி என்பவள் ராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணன் II என்பவனுடைய மகள் ஆவாள். கன்னர தேவன் இவனுக்குப் பிறந்த மகனே. இரண்டாவது மனைவி திரிபுவன மாதேவி வயிரி யக்கன் என்பவள் பல்லவர் குலத்தவள். இவனுக்குப்பின் பட்டத் திற்கு வந்த பராந்தகன் I இவருள் யாருடைய மகன் என்பது தெளிவுறவில்லை. தொண்டை மானாடு என்று தற்போது வழங்கப் பெறும் காளஹத்திக்குப் பக்கமுள்ள ஊரில் ஆதித்தன் இயற்கை எய்தினான். இவனுக்கு ஒரு பள்ளிப்படையை (சமாதிக் கோவிலை) அவனைப் புதைத்த இடத்தில் ஓர் இலிங்கத்தை நிறுவி இவனு டைய மகன் பராந்தகன் I தனது தந்தையை வழிபட்டு மேம்படுத் தினான். புத்தரின் அங்கங்களையும் உபகுப்தர்களின் சமாதிகளையும் வழிபடுகின்ற புத்தமத வழக்கத்தை ஒட்டிய இவ் வழிபாடு தமிழகத் திற்குப் புதுமை அல்ல; மூதாதையரை வழிபடுவது ஆதித்தமிழ் நாகரிகத்தை ஒட்டியதுதான். இருப்பினும், கோவிலைக்கட்டி ஆகம முறைப்படி மூதாதையரின் சிலைகளை நிறுவி, நிலங்களை அக் கோவிலுக்கு அரசினர் வழங்குவது தமிழகத்தின் வரலாற்றில் அது வரை பரவலாக்கப்படாத ஒரு வழிபாட்டு முறையாகும். பராந்தகன் தன் தந்தையின் சமாதியைத் தனியொரு கோவிலாகக் கட்டி வழிபட்டதைத் தொடர்ந்து பிற்காலச் சோழர்கள் தங்கள் முன்னோர்களின் சிலைகளைத் தஞ்சைப் பெரிய கோவில் போன்ற பெருமை சான்ற வழிபாட்டுக்கூடங்களில் கடவுளர் சிலைகளுக்குப் பக்கம் நிறுவித் தொழுகின்ற பாரம்பரியத்தைக் கைக்கொண் டார்கள்.

## ஆதித்த சோழன் — ஒரு மதிப்பீடு

ஆதித்த சோழன் காலத்தில்தான் சோழ அரசு சோழப் பேரரசாக மாறியது. இந்தப் பேரரசுக்கு வடக்கு எல்லையாக அவன் கைப்பற்றிய கங்கர் நாடு அமைந்திருந்தது. இந்தக் காரணத்தால் ராஷ்டிரகூடரோடு அரசியல் போட்டிக்குப் போகவேண்டிய அவசியம் உண்டாயிற்று. அதேராஷ்டிரகூடரோடு ஆதித்த சோழன் மணவினை ஒப்பந்தமும் செய்துகொண்டான். இவனுடைய காலத்திற்குப் பின்பு உறவுக்காரர்கள் என்ற முறையில் ராஷ்டிர கூடர்கள் சோழ அரசியல் விவகாரங்களில் தலையிட்டார்கள். அதன் பயனாகப் பல விளைவுகள் ஏற்பட்டன. திறனாய்வு முறையில் சொல்லப் போனால், ஆதித்த சோழன்தான் சோழப் பேரரசுக்கு இராணுவ வலிமையை அதற்குரிய ஆதாரமாகத் தந்தான். இவ்வாறு அப் பேரரசை இராணுவ ஏகாதிபத்தியமாக (Military Imperialism) தோற்றம் கொள்ளச் செய்தான் என்ற பொறுப்பு இவனைச் சாரும். இவன் காலத்திற்குப் பின்பு வந்த சோழ மன்னர்கள் இத்தகைய இராணுவ ஏகாதிபத்தியத்தைக் கட்டிக் காப்பதுதான் சோழ அரசியல் ஒழுகலாறு ஆகும் என எண்ணினார்கள். ஐரோப்பாவில் ஜெர்மானியப் பிரெஷ்யாவிற்கு இராணுவத் துடிப்பை அதற்குரிய ஆதாரமாகப் புகட்டிய காரணத்தினால் அப் பிரெஷ்ய நாட்டின் பிற்கால வளர்ச்சிப் பருவமாக மலர்ந்த ஜெர்மனிக்குப் போர்க்கோலமே வாழ்வு முறையாயிற்று. ஆகவே, இதற்குக் காரணமாக இருந்தவனை மகா பிரெடெரிக் (18ஆம் நூற்றாண்டு) என்பவனோடு ஆதித்த சோழனைச் சோழப் பேரரசிற்குரிய இராணுவ மனப்போக்கை வழங்கியவன் என்ற முறையில் நாம் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

## சோழப் பேரரசின் நிறுவனர்

இத்தகைய இராணுவ ஏகாதிபத்தியத்தின் வடக்கு நோக்கிய வளர்ச்சிக்குப் போட்டியாக வந்த வடபுலத்து ராஷ்டிரகூடர்களின் தீராப்பகைமை சோழரின் அரசியல் வாழ்வில் ஓர் அங்கமாகி விட்டது. இதற்குரிய பொறுப்பும் ஆதித்தனையே சாரும். மகாராஷ்டிர நாட்டின் வளர்ச்சி சக்தியை வடக்கு நோக்கித் திருப்பிவிட்டு, முகமதியரிடம் சென்று 'சிங்கமராட்டியர்' மோதி நிற்கும் வண்ணம் 'வடக்கே செல்க' என்ற கோட்பாட்டைக் கொடுத்தவன் பீஷ்வா பாஜிராவ் I ஆவான். இவனோடு சோழரின் வளர்ச்சிப் பாதையை வடக்கு நோக்கி அமைத்துத் தந்த ஆதித்த சோழனை ஒப்பிட்டுப் பேசலாம். மேலே சொல்லப்பட்ட இவ்விரண்டு உண்மைகளும் ஆதித்தனுடைய போரார்வ அரசியல் கண்ணோட்டத்தின் வெளிப்பாடுகளாக அமைந்தன என நாம் சொல்லலாம். ஆனால், ஆதித்தனுக்கு இதைவிட மற்றொரு

சிறப்பும் உண்டு. அமைதிக் காலத்தில் தழைக்க வேண்டிய நல்லறத்தின் மேம்பாட்டிற்காகக் கோவில் கட்டுதல், வேத கேள்விச் செல்வரான அந்தணரை ஆதரித்தல், மூதாதையரைப் போற்றுதல் போன்றவற்றையும் சோழரின் அரசியல் ஒழுகலாற்றுக்கு இவன்தான் வழங்கினுன். இவ்வாறு சோழநாட்டு அரசியலின் வளர்ச்சிக்கு இரு வகை சமபோக்குத் தடங்களாகப் படை முயற்சியையும், அறவளர்ச்சிக்கான ஆர்வத்தையும் இவன் தான் அளித்தான். இதன் காரணமாக, ஆதித்த சோழனையே சோழப் பேரரசின் உண்மையான நிறுவனர் (Real Founder of Chola Empire) எனவும், சோழ அரசியல் ஒழுகலாற்றின் சிற்பி (The Architect of Chola Polity) எனவும் நாம் பாராட்டி அழைத்தால், ஆதித்த சோழனைப்பற்றிய மதிப்பீடு நிறைவாகத் தோற்றம் அளிக்கும்.

## ஆதித்த சோழனும் இங்கிலாந்துத் தொடர்பும்

ஆதித்த சோழனுடைய சமயப் பொறையின் பெருமையை விளக்குகின்ற வகையில் அவனுக்கும் இங்கிலாந்து மன்னனுக்கும் நல்லெண்ணத் தொடர்பு அமைந்திருந்தது. ஆங்கிலோ-சாக்ஸானிய வரலாறு (Anglo — Saxon Chronicle) இத் தொடர்பைப்பற்றிய செய்தியைத் தருகிறது. சென்னையின் மைலாப்பூரில் அடக்கமாகி இருந்த அர்ச். தாமஸ் (ஏசு பிரானின் சீடர்) அடிகளாரின் சமாதியைச் சீராட்டுவதற்காக, கி.பி. 884-ல் இங்கிலாந்தின் மன்னன் ஆல்ஃபிரட் தனது தூதுவராக பிஷப் சிகலினஸ் என்பவரைச் சோழ நாட்டதிபதியான ஆதித்த சோழனிடம் அனுப்பி வைத்தான்.[2] இங்கிலாந்து மன்னனுக்கென ஆதித்த சோழன் அளித்த விலையுயர்ந்த வெகுமதிகளான பல ஆபரணங்களையும் வாசனைத் திரவியங்களையும் எடுத்துக்கொண்டு தூதுவர் பிஷப் சிகலினஸ் இங்கிலாந்து திரும்பிய போது, அந் நாட்டு மன்னனிடம் சோழரின் நல்லெண்ணங்கொண்ட இறை மாட்சியை எடுத்தியம்பி இருக்க வேண்டும் என A. L. பாஷாம் என்ற ஆங்கில வரலாற்றுசிரியர் இங்கிலாந்துத் தொடர்பு பற்றிய செய்தியை மேலும் சித்திரிக்கிறுர். விஜயாலயச் சோழர்களின் மாட்சிமை சீன போன்ற நாடுகளுக்குப் பரவிய பெருமை சான்ற வரலாறு ஆதித்த சோழனுக்குப் பின்புதான் வருகிறது. சங்க காலத்தில் பாண்டியர்கள் இத்தாலியின் உரோமர்களோடு தொடர்பு கொண்ட செய்திக்குப் பின்பு இப்போது சொல்லப்படு கின்ற இங்கிலாந்துத் தொடர்பு தமிழ் நாகரிகத்தின் பண்டைக் காலத்திய பெருமையின் மரபை உயிர்ப்பித்தது எனலாம்.

2 A.L. Basham—'The Wonder that was India'—1963—p. 543

இங்கிலாந்திலிருந்து சென்னைக்குக் கி. பி. 884ஆம் ஆண்டிலேயே பிஷப் செகலினஸ் வந்ததும், பின்பு போனதும் சாதாரணமான ஒரு நிகழ்ச்சிதான் (stray incident). ஆனாலும், அக் காலத் தமிழகத்தில் பரவலாகப் பரிச்சயமாகாத கிறிஸ்தவ சமயத்தின் பெயரால் — கிறிஸ்தவ சமயத்தின் ஆக்கத்திற்காக—சோழ மன்னனுடைய பண்பாட்டைப் பெரிதும் நம்பி தூதுவனை அனுப்பி வைத்து, பிற சமய வழிபாட்டுக்குரிய சலுகைகளைக் கேட்கின்ற அளவிற்கு—விலையுயர்ந்த பொருள்களை மதச்சடங்கிற்காக அனுப்பி வைக்கின்ற அளவிற்கு—பரம்பரைத் தமிழ்க் கலாசாரப் பாதுகாவலனை ஆதித்த சோழனுடைய சமயப் பொறை கடல் கடந்து அந்நியரும் அறிந்திருக்கக்கூடிய நற்செய்தியாகப் பல காலம் சிறந்து விளங்கியது என்பது வரலாற்று உண்மையாகும்.

# 3. பராந்தகன் I [907 - 955]

பிற்காலச் சோழ மன்னர்களுக்குள் மாமன்னனாக முதன் முதலில் முடிசூடியவன் பராந்தகனே. பேரரசு அளவில் சோழ நாட்டை இவன் தந்தை ஆதித்தன் பெருக்கிக் காட்டிய நிலையில் சோழப் பேரரசின் வடக்கு எல்லையைக் காளஹஸ்தியிலிருந்து வடக்கே நெல்லூர் வரை கொண்டு சென்றவனும் இவனே. அதற்குரிய படைத்திறன் காரணமாகவே ராஷ்டிரகூடரோடு மோதி, தக்கோலம் என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் 949-ல் தோல்வியுற்று, சோழ மண்டலம் தவிர ஏனைய பேரரசுப் பகுதிகளை இழந்த நிலையில் இறந்த சோழ மன்னனும் இவனே. இவனுக்குப் பத்தாண்டுகள் கழித்துத்தான் தொண்டைநாடு (திருக்கோவலூர் உட்பட) சோழ அரசுக்குச் சுந்தர சோழன் காலத்தில் திரும்பக் கிடைத்தது. மொத்தம் பதினெட்டு ஆண்டுகள் (949 முதல் 967 வரை) தொண்டைநாடு அடங்கிய வடக்குத் தமிழகம் ராஷ்டிர கூடர் என்ற மராத்தியர் வழிவந்த கன்னடியர் கையில் சிக்கிக் கிடந்தது.

வெளிநாட்டு உறவுகளில் இத்தகைய இழப்புகளுக்கு உள்ளான இதே பராந்தகனுடைய ஆட்சியில்தான் ஏரி, கால்வாய் தோண்டுதலும், கிராமக் குடியரசு முறைமைக்கு மணிமுடி விளக்க மாக இருந்த உத்திரமேரூர் போன்ற கிராமச் சபைகளைச் சீராக்கும் பணிகளும் பொதுநலம் சிறக்கும் முறையில் திறனுடன் நடந்தேறின.

பராந்தகனுடைய நாற்பத்தாறு ஆண்டுக் கால ஆட்சியில் பேரரசுத் தத்துவத்திற்கான வலிமை பெருமளவிற்குக் குன்றியது உண்மைதான். ஆனால், அதற்கு ஈடு கட்டக்கூடிய அளவில் கிராம சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் ஆக்கப் பூர்வமான முறையில் சோழ மக்களின் நடைமுறை வாழ்வியலின் நிலைபெற்ற உண்மைகளாக உருப்பெற்றன.

## I. வெளிநாட்டுக் கொள்கை

ஆதித்த சோழனுடைய ஆதிக்கவுணர்ச்சியுள்ள போர்களின் (wars of aggression) அரசியல் விளைவுகளைப் பராந்தகன் தன் காலத்திய வளர்ச்சிக்கு உரிய படிக்கற்களாக மாற்றிக்

கொண்டான். நீள்காவிரித் தொடக்கம் காளஹஸ்தி வரை பரவி நின்ற ஆதித்தன் கண்ட சோழநாடு அவன் மகன் பராந்தகன் காலத்தில் கன்னியாகுமரி முதல் நெல்லூர் வரை என்றளவில் விரிந்து, பேரரசின் பேராண்மைக்குரிய பராந்தகனுடைய போர்ப் படைத்திறனின் தனிப்பட்ட சாதனையாக வளர்ச்சியுற்றது. கங்கர்கள் அவனுக்குரிய கப்பம் செலுத்தும் கூட்டாளிகளாகி, தங்களுக்கு அண்டை நாட்டினரான வாணரின் உடைமைகளைக் கவர்கின்ற வேலைக்குத் துணை நின்ற அளவில் சோழ மன்னனைப் பயன்படுத்தினார்கள்.

பராந்தகனும் கங்க நாட்டை ஓர் இடைப்படு நாடாக (Buffer State) ஏற்றுக்கொண்டான். ராஜதந்திரத்தில் சிறந்த ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆளத் தலைப்பட்ட ஆரம்ப நாள்களில் 19ஆம் நூற்றாண்டுக்குரிய மொகலாய மன்னன் ஆட்சிப் பகுதிக்கும், கிழக்கிந்தியக் கம்பெனியின் மேலாதிக்கத்துக்கு உட்பட்ட வங்காள மாகாணத்திற்கும் இடைப்படு நாடாக இருத்தப்பட்ட அயோத்தி போலவும், ஏறத்தாழ இதற்கு அடுத்த நூற்றாண்டில் ஆப்கானிஸ்தானத்திற்கும் பிரிட்டிஷ் இந்தியாவிற்கும் இடையே இருந்த மாமன்னன் இரஞ்சித்சிங்கின் சீக்கிய ராஜ்யம் போலவும், பாணர்களின் நாட்டை உள்ளடக்கிப் பெருக்கப்பட்ட கங்க நாட்டை, சோழர்கள் 10ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியிலேயே இடைப்படு நாட்டுத் தத்துவத்திற்கு (Idea of Buffer State) உட்படுத்தும் அரசியல் கலைநுட்பத்தைக் கைக்கொண்டு இருந்தார்கள்.

வைதும்பர்களும், வாணர்களும் சோழர்களின் ஆதிக்கப் போர்களின் காரணமாக நாடிழந்தார்கள். பராந்தகனுடைய ஆதிக்கப் போர்களுக்குப் பதிலடி கொடுக்க ராஷ்டிரகூடரோடு அவர்கள் அணிசேர்ந்து நின்றார்கள். குடும்பப் பிரச்சினையாக மேற்கொள்ளப்பட்ட வாரிசுரிமைப் போர்களின் விளைவாக ராஷ்டிரகூடர் தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றினார்கள். சோழப் பேரரசின் எழுச்சிக்கு நேரடியான பாதிப்பில் நாடிழந்த பாண்டியர்கள் எப்போதும் போலவே தங்களுடைய விடுதலையுணர்வின் கனலைக் காத்து நின்றார்கள். இவ்வாறு பராந்தகனுடைய வெளிநாட்டுக் கொள்கை அவனுடைய ஆட்சியின் முற்பகுதியில் பெருவெற்றிக்கு உரியதாகவும், பின்பு பேரிழப்புக்குக் காரணமாகவும் முதலில் உயர்வடைந்து பின்பு திரிபு கொண்டது.

## 1. பாண்டிய நாடு

பராந்தகன் 910-ல் 'மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மன்' என்ற பட்டத்தைப் புனைந்துகொண்டான். 907-ல் அரசப்

பதவிக்கு அவன் வந்த பின்பு மூன்றும் ஆண்டு பாண்டிய நாட்டின்மேல் அவன் படையெடுத்துச் சென்றான்; இருபத்தோர் ஆண்டுகள் நடந்த பாண்டியர்—சோழர் போராட்டத்தின் பயனாக, தான் பதவிபெற்ற 24-வது ஆண்டில், பாண்டிய நாட்டைத் தன்னடிப்படுத்தினான் இப் பராந்தகன். இச் சோழனை எதிர்த்த பாண்டிய மன்னன் மாறவர்மன் ராஜசிம்மன் II (900—920) காசிபன் V (913—923) என்ற இலங்கை வேந்தனிடம் படையுதவி கேட்டபோது, சிங்கள சேனாதிபதி சாக்கன் என்பவன் பாண்டிய நாட்டிற்குச் சோழரோடு போரிட வந்தான். இவ்வாறு தொடங்கிய போரில் 919-ல் நடந்த வெள்ளூர் என்ற இடத்தில் பாண்டியனும் சிங்களரும் பெருந்தோல்வி அடைந்தனர். கண்டன் அமுதன், அரசூருடையன், சென்னிப் பேரரையன், நக்கன், சாத்தன் என்ற திறமை மிக்க தானைத் தலைவர்கள் சோழரின் படைகளை முன்னின்று நடத்தினார்கள். தோல்வியுற்றுப்போன பாண்டியன் தன் நாடு விட்டு அகன்ற பின்பு மதுரையைக் கைப்பற்றிய பராந்தக சோழனுக்குப் பாண்டிய நாட்டில் உடனடியாக அரசியல் ஆதிக்கம் செலுத்த முடியவில்லை. கீழப்பாலூர், திருப்பாற்கடல் என்ற இடங்களிலுள்ள சோழரின் சாசனங்கள் உரைக்கின்றபடி பராந்தகனுக்கு நேரடியான பிடிப்பு பாண்டிய நாட்டில் அவனது ஆட்சிக் காலத்தின் 24ஆம் (931) ஆண்டில் தான் ஏற்பட்டது.

பராந்தகன், பாண்டியம்பதியான மதுரையில் பாண்டியனைப் போலத் தானும் முடிசூட்டிக்கொள்ள விழைந்தான். ஆனால், பாண்டியன் ராஜசிம்மன் II ஈழத்தேசம் சென்றிருந்த நாளில் தனக்குச் சார்பான அளவில் தமிழகத்தில் அரசியல் மாற்றம் ஏற்படுகின்ற சூழ்நிலை தோன்றாத காரணத்தால் இலங்கை மன்னனின் விருந்தோம்பலை பெருநட்புக்குரிய சலுகையாக எண்ணி, சுந்தரமுடி, இந்திர ஆரம் போன்ற அரச இலச்சினைகளை அம் மன்னனிடம் ஒப்புவித்துவிட்டு, தன் தாய் வானவன் மகா தேவியின் நாடான கேரளநாடு சென்றமர்ந்தான். இந் நிலையில் மதுரையில் தான் முடி சூட்டிக்கொள்வதற்காகப் பாண்டியனுடைய மகுடத்தை ஈழத்திலிருந்து பறித்துவர, பராந்தகன் தன்னுடைய படையை ஈழநாட்டுக்கு அனுப்பினான். ஈழ வரலாறு மகா வம்சம் கூறுவது போல, ஈழ மன்னன் உதயணன் IV என்பவன் போரில் தோல்வியுற்றான். ராஜசிம்ம பாண்டியன் அடைக்கலம் என்று அளித்துவிட்டுச் சென்ற அரச நகைகளைப் பாதுகாப்பதற்காகத் தன் தலைநகரம் விட்டுக் காடுகள் செறிந்த தென்கிழக்குப் பகுதியான ரோகண நாடு சென்றுவிட்டான் இலங்கை வேந்தன். அவனைப் பின்தொடர்ந்த சோழப் படையினர் நகைகளை மீட்க

முடியாமல் சோழநாடு திரும்பினர். இவ்வாறாக, பராந்தகனுடைய பாண்டியாதிபதியாக முடிசூட்டுகின்ற முயற்சி நிறைவேறுமற் போயிற்று.

பாண்டிய நாடு சோழர்களின் ஆதிக்கத்தில் பெயரளவிற் காவது அடங்குவதற்கு 21 ஆண்டுகள் பிடித்தன. மொத்தம் 26 ஆண்டுகள் இச் சோழ ஆதிக்கம் பாண்டிய நாட்டில் வேரூன்றித் தழைத்துவிடப் பெருமுயற்சி செய்தது. ஆனால் வீர பாண்டியன் (946—966) பாண்டியரின் போராட்டத்தை அரசியலுக்குரிய விடுதலை எழுச்சியாக நடத்தி அதில் வெற்றியும் பெற்றான். கி.பி. 953-ல் பராந்தகன் காலமானான். வீரபாண்டியன் பாண்டிய அரசை 946-லிருந்து திரும்பவும் உயிர்ப்பித்திருந்தான். ஆகவே, பராந்தக னுடைய கடைசிக்காலத்தில் தொண்டைமண்டலம் 949-ல் நிகழ்ந்த தக்கோலப் போருக்குப் பின்பு கைநழுவிப் போய் விட்டதைப் போலப் பாண்டிய நாடும் 946-ல் விடுதலை பெற்ற நிலையில் சோழர்களை எதிர்த்து நின்றது. தஞ்சைக்கு வெகு தூரத்திலில்லாத திருக்கோவலூர் அடங்கிய திருமுனைப்பாடிவரை ராஷ்டிரகூடரின் கைக்குள் சோழப்பேரரசின் வடபாகம் அடங்கிப் போய்விட்டது.

அந் நிலையில்கூட அக் கால உணர்வுகளின் போக்குப்படி அந்நியர்களாகக் காணப்பட்ட கன்னடிய ராஷ்டிரகூடர்களைத் தமிழின உணர்வோடு எதிர்க்கின்ற பணியில் பாண்டியர்களை இச் சோழர்கள் தங்களோடு சேர்ப்பதற்கு இயலாமல் போயிற்று. இருபத்தாறு ஆண்டுக்கால வேதனை நிறைந்த சோழர் ஆதிக்கத் தின் பிடிப்பின் வடுக்கள் பாண்டியருக்கும் சோழருக்கும் இடையே மாளாத பகைமைச் சுவரை எழுப்பி நின்றன. இந் நிலையில், இவை இரண்டும் தமிழகப் பகுதி கவர்ந்து நின்ற பொது எதிரியை எதிர்க்கின்ற பேரணியாக ஒன்றுபடவொட்டாமல் அப் பகைமை தடுத்து நின்றது. இங்கிலாந்தின் வரலாற்றில் ஸ்காட்லாந்தை அடக்குகின்ற போர்களை எட்வர்டு 1 போன்றோர் இடைவிடாமல் நடத்தியதன் காரணமாகப் பொது எதிரியான பிரான்ஸை எதிர்க்கின்ற வரலாற்றுச் சார்பான நாட்டுப் பணியில் ஸ்காட் லாந்தியர் இங்கிலாந்தினரோடு ஒத்துழைக்க மறுத்ததை அந் நாளைய சோழர்-பாண்டியர் நிலைக்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

**2. வாணர்கள்**

பல்லவன் அபராஜித வர்மனின் வீழ்ச்சிக்குப் பின்பு தொண்டை மண்டலம் விஜயாலயச் சோழன் வழி வந்த சோழர் வசமானது. ஆதித்த சோழன் (871—907) காலத்தில் வடக்கு

நாட்டினர்களான வாணர்களின் சுதந்தரம் சோழப் பேரரசுக்கு இடர்ப்பாடாகத் தோன்றவில்லை. ஆனால், ராஷ்டிரகூடர்களின் பேரரசுப் போட்டியும் கங்கர்களின் பரம்பரையான நட்பும் சுதந்தரமாக விளங்கிய வாணர்களைப்பற்றிச் சோழர்களைச் சிந்திக்க வைத்தது. ராஷ்டிரகூடர்களின் பேரரசுப் போட்டியை அழிக்கவும், கங்கர்களின் நட்பைப் பெருக்கவும் என்றளவில் ஏற்படுகின்ற இரட்டைப் பயனைப் பெற வாணர்களை அழிக்கச் சோழ அரசு முடிவெடுத்தது.

ராஷ்டிரகூட மன்னர்கள் மண உறவுகளின் காரணமாகச் சோழ மன்னர்க்குச் சுற்றத்தாராகிப் போன நிலையில் பிற்காலச் சோழர் வரலாற்றில் முதலாவது வாரிசுரிமைப் போர் ராஷ்டிரகூட அரசன் கிருஷ்ணன் II (878—913) காலத்தில் சோழர் நாட்டிலேயே நிகழ்ந்தது. பராந்தகன் தந்தை ஆதித்த சோழனுடைய ராஷ்டிரகூடக் குலமனைவி இளங்கோவிச்சியின் மகன் கன்னர தேவா (கிருஷ்ண தேவா என்பதற்கான கன்னடச் சொல்) பராந்தகனுக்குப் பதிலாக அரசுரிமை பெற வேண்டும் என்பதற்காகத் திருவல்லம் என இப்போது வழங்கப் பெறும் திருவல்லம் என்ற இடத்தில் 910—11-ல் சோழரோடு போரிட்டுத் தோற்று, தன் நாடு திரும்பிப் போனான் கன்னர தேவனுடைய பாட்டன் கிருஷ்ணன் II. பராந்தகனுடைய அரசுரிமைக்கே ஆபத்து விளைவிக்க வந்த இந்த ராஷ்டிரகூடப் படையெழுச்சியில் கிருஷ்ணன் II பக்கம் சேர்ந்து போரிட்டவர்கள் இவ் வாணர்கள் ஆவார்கள். பராந்தகன் இவர்களை எதிர்த்துப் போரிடத் தீர்மானித்தான். இவ்வாறு ஏற்பட்ட வல்லடிப் போரில் பராந்தகன் வெற்றி பெறத் துணை நின்றவன் கங்கநாட்டு மன்னன் பிருதிவிபதி II ஆவான். 912-ல் நடைபெற்ற இந்தப் போரில் பெருமளவிற்குப் பங்கு ஏற்றவன் இந்தப் பிருதிவிபதி என்றளவில் அவனுக்குச் 'செம்பியன் மாவலி ராயன்' என்ற பட்டமும், 'வாணாதிராசன்' என்ற விருதுவும் சோழப் பேரரசனால் வழங்கப் பெற்றன.

பாலாற்றுக்கு வடக்கே சித்தூர் மாவட்டம் வரை பரவியிருந்த இவ் வாணர்களின் ஆட்சிக்கு உறைவிடம் ஆந்திர நாட்டின் அனந்தப்பூர் மாவட்டம் ஆகும். சாளுக்கியரின் பகைமையை முன்னிட்டுத் தென்னாடு வந்த இவர்களுக்குரிய பகுதிகளைப் 'பெரும்பாணப்பாடி' என்றும், 'வடுகவழி மேற்கு' என்றும் வழங்குவர். வாணபுரம், வல்லம் என்ற தலைநகர்களில் நிறுவப் பட்ட இவ் வாணர்களின் ஆட்சி இருநூறு ஆண்டுகள் செவ்வனே நடைபெற்றது. பராந்தகனுடைய படையெழுச்சியைப் பிருதிவிபதி முன்னின்று நடத்தியதன் விளைவாக அரசுரிமை இழந்த வாணர்

களின் பெயர்கள் விக்கிரமாதித்தன் II, அவன் மகன் விஜயாதித்தன் III என்பதாகும். இவர்கள் இருவரும் சோழர்களின் பரம்பரைப் பகைவனுன ராஷ்டிரகூட கிருஷ்ணன் III மேற்கொண்ட அரசியல் சூழ்ச்சிகளில் நேரடிப் பங்கு பெறுகின்ற அளவில் ராஷ்டிரகூடத் தலைநகரில் மற்றைய சோழ எதிரிகளோடு அணி சேர்ந்தனர்.

## 3. வைதும்பர்

வாணர்களுக்கு அடங்கியிருந்த மற்றொரு குறுநாட்டு அரசு வைதும்பர்களுடையது ஆகும். 915-ல் பராந்தகன் வைதும்பரின் தலைவன் காந்தாயன் திருவயன் என்ற மன்னனை வென்றுன்.

இந்த வைதும்பர்கள் ரேணுண்டு நாட்டைச் சேர்ந்தவர்கள்; இந்தத் தொன்மைச் சிறப்பை ஊனப்படுத்திய சோழர்களிடம் தாங்கள் பெற்ற தோல்வியை எண்ணிப் பொருமிக்கொண்டே கிருஷ்ணன் III சேர்த்து வந்த சோழ எதிர்ப்பு அணியில் போய்ச் சேர்ந்தார்கள்.

## 4. சீட்புலி நாடு

வேங்கி நாட்டின் மன்னன் சாளுக்கிய பீமன் II என்பவனுக்கு எதிராக அனுப்பப்பட்ட சோழர்படை பராந்தகனுடைய தளபதி மறவன் பரமேசுவர வர்மன் தலைமையில் சீட்புலி நாட்டை 941-ல் கைப்பற்றியது. தொண்டை மண்டலத்தின் திருவொற்றியூருக்கு வடக்கே கிழக்குக் கரையோரம் உள்ள நெல்லூர்ப் பகுதியான இச் சீட்புலிப் பகுதியில் பராந்தகனுடைய கல்வெட்டுச் சாசனங்கள் காணப்படாமையால், இப் படையெழுச்சியினுல் பெற்ற இந் நாடு பல காலம் சோழர்க்குரியதாக நிலைத்து நிற்கவில்லை என எண்ணுவதற்கு இடமுண்டு.

## 5. ராஷ்டிரகூடர்களின் படையெடுப்பு

பராந்தகன் ஆட்சிக் காலத்தில் இரண்டு முறைகள் ராஷ்டிரகூடரின் படையெழுச்சி நடைபெற்றது. பராந்தகன் அரச பதவியில் அமர்ந்த போது ராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணன் II தனது பெயரனுன கன்னர தேவனைச் சோழ அரசனுக்குவதற்காகச் சோழநாடு வந்து, 910-ல் திருவல்லத்தில் சோழரால் முறியடிக்கப்பட்ட பின்பு தன்னுடு மீண்டது முதலாவது படையெடுப்பு எனக்கொள்ள வேண்டும். அடுத்த படையெழுச்சி முன்னைய போரில் வெற்றி பெற்ற பராந்தகனைத் தண்டிப்பதற்காகக் கிருஷ்ணன் III மேற்கொண்டதாகும். இதைப் பின்வரும் காரணங்களினுல் நிறுவலாம் :

(அ) பராந்தகனுடைய பேரரசுப் பெருமிதத்தாலும், ஆதிக்கப் போர்களினுலும் அரசுரிமையை இழந்து போன வாணரும், வைதும்பரும் ராஷ்டிரகூடரின் அரவணைப்பில் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கான நாளினைக் கணக்கிட்டு ராஷ்டிரகூடரின் தலைநகரில் காத்துக் கிடந்தனர். அவர்களுடைய எதிர்காலத்தின் தொடக்கம் சோழப் பேரரசின் வீழ்ச்சியில்தான் இருந்தது என்ற வரலாற்றுப் பூர்வமான சிக்கலைத் தீர்க்க வடபுலத்தினரின் படையெழுச்சி அந் நாளைய தேவையாகவும் தஞ்சை அரசியலுக்குரிய ஆபத்தாகவும் காணப் பட்டது. வாணர்கள் கி.பி. 912-லும், வைதும்பர் கி.பி. 915-லும் தங்கள் நாடுகளை இழந்ததிலிருந்து கடந்த 38 ஆண்டுகளாகத் தங்கள் நெஞ்சில் சோழரைப் பழிவாங்கும் உணர்ச்சியைத் தாங்கி நின்றுர்கள்; அரசியல் சூழ்ச்சிகளில் ஈடுபட்டார்கள். வலிமை பொருந்திய இராணுவப் படையெடுப்பைக் கி. பி. 949-ல் கிருஷ்ணன் III மேற்கொண்டான். இதைச் செய்யும்படி அவனை அவர்கள் இடையருது தூண்டினுர்கள். இவ்வாறு சோழருக்கு எதிரான அணியில் சோழர்களால் பதவி இழந்த மன்னர்கள் யாவரும் சேர்ந்து சோழருக்கு விரோதமாகச் செயல்பட்டார்கள்.

(ஆ) சோழன் பராந்தகனுடைய மகள் வீரமாதேவியின் கணவனுன கோவிந்தன் (ராஷ்டிரகூட யுவராஜாவாக இவன் இருந்த காலம் 918—934) ராஷ்டிரகூடரின் அரசனுக ஆக்கப்பட வேண்டி, பராந்தகன் I படை அனுப்பியதைக் கிருஷ்ணன் III விரும்பவில்லை. அந்த யுவராஜா கோவிந்தன், கிருஷ்ணன் II என்ற மன்னனின் சகோதரன் இந்திரன் II என்பவனுடைய மகனுவான். மன்மதனைப் பழிக்கின்ற தோற்றமுடைய இவ்விள வரசன் மக்களின் ஆதரவைத் தன்னுடைய செருக்கான வாழ்வின் காரணமாக இழந்தவன். வேங்கி நாட்டின் கீழைச் சாளுக்கியனுன யுத்த மல்லனுக்கும் வீமன் II என்பவனுக்கும் நடந்த அரசுரிமைப் பூசலில் யுத்த மல்லனுக்கு இக் கோவிந்தன் உதவி செய்தான்; வீமன் II அவனைத் தோற்கடித்தான். மக்கள் ஆதரவு இல்லாத கோவிந்தன் தனது மனைவி வீடான தஞ்சாவூர் வந்து பெண் கொடுத்த மாமன் பராந்தகனுடைய உதவி கேட்டு ராஷ்டிரகூட அரசுரிமையை இராணுவ முறையில் அடைய முயற்சித்தான்.

கிருஷ்ணன் III என்ற வினைத்திட்பமுடைய இளவரசன் கோவிந்தனுடைய தந்தையின் சகோதரனுன அமோக வர்ஷன் என்பவனுடைய மகன் ஆவான். கி.பி. 935-ல் தனது தந்தையை மன்னனுக்கிய கிருஷ்ணன் III (939—966) தனது தந்தை கி.பி.

939-ல் இறந்தவுடன் தானே அரசன் ஆனுன். 940-ல் பராந்தகன் தன் இல்லம் வந்து சேர்ந்த மருமகன் கோவிந்தனுக்கு அரசுரிமையைப் பெறுவதற்காக மேற்கொண்ட இராணுவ முயற்சியை முறியடித்ததில் பெரும்பங்கு கங்க மன்னன் பிதூகன் II (939—960) என்பவனைச் சேரும்.

கி.பி. 940-ல் பிருதிவிபதி II என்ற சோழர்க்கான துணை நண்பன் இறந்தவுடன், கங்கர் நாட்டின் மற்றொரு பகுதியின் மன்னனுன பிதூகன் II அப் பிருதிவிபதியின் நாட்டைக் கவர்ந்து கொண்டான் இவ்வாறு இந்த நாட்டைப் பிடிக்கின்ற திட்டத்தைச் செயலாக்குவதற்காகத் தனது தமையனைக்கூடக் கொன்றவன் இவன். தமையனைக் கொன்றதால் கங்கநாட்டின் மற்றொரு பகுதியைப் பெற்ற இவன் சோழ இளவரசன் ராஜாதித்தியனைத் தக்கோலப் போரில் கொன்றதால் வனவாசி என்ற மைசூர்ப் பிரதேசத்தைக் கிருஷ்ணனிடமிருந்து வெகுமதியாகப் பெற்ருன். மேலும், இப் பிதூகன் கிருஷ்ணனுடைய சகோதரியை மணம் புரிந்தவன். தனது மைத்துனன் கிருஷ்ணனுடைய அரசுரிமையைப் பாதுகாப்பதற்காகப் பராந்தகனுடைய படையெழுச்சியை இவன் எதிர்த்து நின்றதில் வியப்பு ஒன்றும் இல்லை.

மேற்சொன்ன இரண்டு காரணங்களாலும் தண்டனை வழங்குகின்ற படையெடுப்பாகக் கிருஷ்ணனுடைய 949ஆம் ஆண்டின் போர் நடவடிக்கைகளைக் கூறலாம். ஏறத்தாழப் பத்தாண்டுகளுக்கு முன்பு, அதாவது 936ஆம் ஆண்டிலேயே, பராந்தகன் இப் படையெடுப்பை எதிர்பார்த்த நிலையில் முன்னேற்பாடுகளை இராணுவ முறையில் எண்ணமிட்டுச் செய்திருந்தான். தன்னுடைய மூத்த மைந்தன் ராஜாதித்தியனைத் திருக்கோவலூரில் பாசறை அமைத்து, நாட்டின் எல்லைப் பாதுகாப்புக்குப் பொறுப்பு அதிகாரி (Warden of Marches) என அவன் நியமித்திருந்தான். டெல்லியின் முஸ்லீம் மன்னன் பால்பன் அரசியல் வாரிசான தனது மகனை மங்கோலியரின் படையெடுப்பைக் கண்காணிக்கப் பஞ்சாபில் வைத்திருந்தது போலப் பராந்தகன் மூத்தவன் ராஜாதித்தியனையும் அவன் தம்பி அரிகுலகேசரி என்பவனையும் திருமுனைப்பாடி நாட்டில் — சோழநாட்டின் எல்லையில் — காப்பாளர்களாகப் பகைவரின் வருகையைக் கண்காணிக்குமாறு பணித்திருந்தான். இவ்விரு அரச இளவல்களும் இப் பகுதியில் காணப்பட்ட கோவில்களுக்கு வழங்கிய அறக்கட்டளைகளைத் தாங்கிய கல்வெட்டுச் சாசனங்கள் பல அவர்களைப்பற்றிய செய்திகளை இன்றும் கூறுகின்றன.

ராஷ்டிரகூடரின் படையெழுச்சி எதிர்பார்த்தபடியே நிகழத் தொடங்கியது. இதில் பிதூகன் II முக்கிய பங்கு ஏற்றுச் சோழ நாட்டுக்கு வந்தான். இந்த நாளையில் கிருஷ்ணன் III தன்னுடைய முழு இளமைப் பருவத்தில் திகழ்ந்தான்; பேராற்றல் அத்தனையும் போரிடுவதில் காட்ட விழைந்தவன் அவன்; மேலும், உள்நாட்டுப் பிரச்சினைகள் ஏதுமில்லாத அளவில் படை நடத்திப் போரிடும் மனப்போக்குக்குத் தாராளமாக இடமளிக்கின்ற சோழ நாட்டில் அவன் வளைய வந்தான். அரக்கோணத்திற்குப் பக்க முள்ள தக்கோலத்தில் சோழர்—ராஷ்டிரகூடர் போர்ப்படைகள் மோதிக்கொண்டன. யானைமேல் இருந்து போர் செய்த ராஜா தித்தியனைப் பிதூகன் தாக்கி வீழ்த்தினான். ஆக்கூர் சாசனம் சொல்வது போலப் பிதூகன் ராஜாதித்தியனுடைய யானையின் அம்பாரியில் போய்க் குதித்து இவ்விளவரசனைக் கொன்றான். அபராஜிதனை ஆதித்த சோழன் முன்பு கொன்று பல்லவரின் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியது போல, பிதூகன் ராஜாதித்தியனைக் கொன்றவுடன் அதே தொண்டை மண்டலம் ராஷ்டிரகூடரின் கைக்கு மாறிக்கொண்டது.

தனது திக் விஜயத்தைப் பத்தாண்டுகள் (849—859) தமிழகத்தில் நடத்திய பேராற்றலுக்குரிய நிறைவாக இராமேசு வரம் வரை தன் படைகளை நடத்திச்சென்று ஆங்கு ஒரு வெற்றித் தூணைக் கிருஷ்ணன் III நிறுவினான். 'கச்சியும் தஞ்சையுங் கொண்ட கன்னர தேவன்' என்ற சொற்கள் தென்படும் 944-ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டு ஒன்று தென்னாற்காட்டுப் பகுதியி லுள்ள சித்தலிங்க மடம் என்ற இடத்தில் காணப்படுகிறது. தக்கோலப் போர் 949-ல் நிகழ்ந்த பின்புதான் ராஷ்டிரகூடருக்குத் தமிழகத்தில் இராணுவ வெற்றிகள் கிடைத்திருக்க வாய்ப்பு உண்டு. ஆகவே, இந்தக் கல்வெட்டு உண்மையானதாக இருக்க முடியாது எனப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.

949-ல் நிகழ்ந்த தக்கோலப் போருக்குப் பின்பு 955 வரை அவன் வெற்றி பெற்ற தொண்டை நாட்டைத் தன்னடிப்படுத்து கின்ற அரசியலாட்சி முயற்சியில் கிருஷ்ண தேவன் ஈடுபட்டான். ஆகவே, 968 வரை தொண்டை நாடு அந்நியருக்கு அடங்கிக் கிடந்தது. இவ்வாறு பதினெட்டு ஆண்டுகள் இவ்வாட்சி நீடித்தது. சோழரின் எல்லையில் அமைந்த இந்த அந்நியரான ராஷ்டிரகூடப் பகைவரின் ஆட்சியிலிருந்து தொண்டை மண்டலத்தைச் சுந்தரச் சோழன் (957—980) மீட்டான். ராஷ்டிர கூடரின் ஆட்சியில் சோழர் ஆட்சிக்கு மாறான அடிப்படை மாற்றங்கள் எதுவும் நிகழவில்லை. கோவில்களுக்கான அறக்

கட்டளைகளும் பிரம்மதேயங்களும் அப்படியே பாதுகாக்கப் பட்டன. புதிய ஆட்சியாளர்களின் புதிய அறக்கட்டளைகள் ஏற்கெனவே இருந்த கோவிலற ஏற்பாடுகளை மேலும் வலிமை யாக்கின. இந் நிலையில் சாதாரண மக்கள் ராஷ்டிரகூடரை எதிர்த்து நிற்கின்ற மனப்பக்குவம் அந் நாளில் ஏற்பட வழியே இல்லை. ஆங்கிலேயரின் இராணுவ அடக்குமுறை ஆட்சிக்கு அயர்லாந்து உட்பட்டபோது, அதே போன்ற நெப்போலியன் ஆட்சியை ஸ்பானியர்கள் எதிர்த்தது போல, இங்கிலீஷ்காரர் களை ஐரிஷ்காரர்கள் வீட்டுக்கு ஒரு வீரனை நின்று நாடு மீட்பு கிளர்ச்சியில் ஈடுபட்டார்கள். இது போன்ற அரசியல் விழிப்பு அக் காலத் தமிழினத் தொண்டை மக்களிடையே ஏற்படுகின்ற அளவிற்கு ராஷ்டிரகூடரின் ஆட்சியில் மக்கள் விரோதக் கொள்கைகள் மலிந்து காணப்படவில்லை. எந்த ஆட்சியாள ராக இருந்தபோதிலும் கிராம அரசாட்சி முறையையும், கோவி லறம் என்ற சமயச் சார்புடைய நலம் பேணுகின்ற அமைப்பை யும் மாற்றுவதற்கு முற்படாத வரை எந்த அந்நியர் அரசாட்சி யும் அந் நாளைய மக்களின் கவனத்தை ஈர்ப்பதற்கில்லை; அதனுடைய அந்நியத் தன்மை புலப்பட்டு எதிர்க் கிளர்ச்சிக்கு வித்திட வழியும் பிறக்காது.

ஆகவே, ராஷ்டிரகூடரின் ஆட்சி பதினெட்டு ஆண்டுகளாகத் தொண்டை மண்டலத்தில்—சோழ நாட்டின் தலைவாசல் எல்லை யில்—மக்கள் எதிர்ப்பு ஏதுமில்லாமல் நடந்து வந்தது. அரசியலில் ஈடுபட வேண்டிய அவசியத்தில் உட்பட்டுக் காணப்பட்ட குறுநில மன்னர்கள்கூடத் தங்கள் கல்வெட்டுகளில் தங்களுக்கு மேம்பட்ட மன்னரின் பெயரை வழக்கத்துக்கு மாறான முறையில் குறிக்காமல் விட்டதை முத்தரையர் என்ற குறுநில மன்னர்களின் சாசனங்களிலிருந்து நாம் அறிய முடிகிறது. இந் நிலையில்தான் பத்தாண்டுகள் (949—959) வரை கிருஷ்ண தேவன் தமிழகத்தில் தங்கி, தனது ஆட்சியின் பிடிப்பை வலுப்படுத்துகின்ற இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டான். இத்தகைய இராணுவ நடவடிக்கைகள் அவனுக்கு ஏற்பட்ட மக்கள் எதிர்ப்பைச் சமாளிப்பதற்காக நடந்தேறவில்லை. குறுநில மன்னர் போன் றோரைக் கண்காணிக்கின்ற ராஷ்டிரகூட அரசுரிமை ஆதிக்கத் திணிப்பு என அவற்றை நாம் கொள்ளல் வேண்டும். இராணுவ வலிமையை நேரடியாக உணர்ந்த குறுநில மன்னர்கள் பலர் ராஷ்டிரகூட மன்னனுக்கு உடனடியாகப் பணிந்து போயினர்.

இவ்வாறாக மக்கள் எதிர்ப்பு ஏதுமில்லாமல் குறுநில மன்ன களின் தந்நல உணர்ச்சிக்கு ஊட்டமிடுகின்ற வகையில், நில

வுரிமைகளைப் பரிமாற்றம் செய்கின்ற பணியில், கிருஷ்ண தேவன் மைசூர்ப் பகுதியான வனவாசி போன்ற இடங்களை வடபுலத்தில் பிதூகன் போன்றோர்க்குச் சன்மானமாக அளித்தான். ஒன்பது ஆண்டுகள் இராணுவ ஆயத்தம் செய்து 949-ல் தக்கோலப் போரின் வெற்றியைக் கண்ட பின்பு, அந்த வெற்றியைப் பத்தாண்டு நேரடிப் பார்வையில் அவன் அனுபவித்தான். 966-ல் நிகழ்ந்த அவனுடைய இறப்புக்குப் பின்பு மேலும் எட்டு ஆண்டு களுக்கு அவனுடைய இனத்தார்களின் ஆட்சி அப் பகுதிகளில் தொடர்ந்து நின்றது. இவ்வாறு படைஞனாகவும், ஆட்சியாள னாகவும் விளங்கிய கிருஷ்ண தேவனின் அளப்பரிய ஆற்றலுக்கு இணையாகச் சோழ வரலாற்றில் காணப்படும் மாமன்னன் ஒருவனே. அவன் ராஜராஜ சோழன் ஆவான்.

## 6. அயல்நாட்டுக் கொள்கை—திறனாய்வு

சோழப் பேரரசின் ஒப்பரிய வளர்ச்சி—உருணியை உரு வாக்கிய பின்பு அதன் 'பேரறிவாளன் திரு' என்றளவில் இலங்கிய ராஜராஜன் I என்ற சாம்ராஜ்ய மன்னனுடைய காலந்தொட்டு காணப்பெறும் பிற்காலச் சோழர் வரலாற்றில் இத்தகைய வேற்று இனத்தாரின் படையெடுப்பு இத்தகைய அரசியல் விளைவுகளோடு மாற்றாரின் ஆட்சியாகத் தமிழ் மண்ணில் வடிவம் கொள்ள வில்லை. வாரிசு உரிமைப் போரில் ஈடுபடுவதற்கு மேலைச் சாளுக்கியன் விக்கிரமாதித்தன் VI (1076—1126) யுவராஜா அந்தஸ்தில் அரசியலதிகாரம் பெற்று விளங்கிய காலத்தில் காஞ்சி நகருக்கு வந்தான்; தனது மைத்துனன் அதிராஜேந்திரனை 1070ஆம் ஆண்டு அளவில் கங்காபுரியில் முடிசூட்டி அரசனாக்கி விட்டுப் போனான். இப் படையெழுச்சியின் பயனாக அவனுடைய நேரடியான ஆட்சிக்குள் எந்தத் தமிழகப் பகுதியும் அகப்பட்டுக் கொள்ளவில்லை. ஆனால், பராந்தகன் காலத்தில் வடக்குப் பகுதியில் விழுந்த அடியில் தென் பகுதியான பாண்டிய நாடும் கழன்று போய்விட்ட வரலாற்றுத் திருப்பம் ஏன் ஏற்பட்டது?

மகாராஷ்டிரத்தின் பீஷ்வா பாஜிராவ் (1720—1740) மொகலாய அரசை உளுத்த மரத்திற்கு ஒப்பிட்டு, டெல்லி (தலைநகர்) என்ற அடிமரத்தில் அடித்தால் மற்றுமுள்ள கிளைகள் தாமாகத் தரையில் விழும் என்று சொன்னது போல, ராஷ்டிரகூடர் சோழநாட்டின் வடபாகத்தில் கொடுத்த அழுத்தத்தில் மற்றைய பாகங்கள் சிதறிப் போய் விட்டனவா? அப்படியானால், சோழரின் அரசு உள்ளீடற்றதாக விளங்கியதா? தனக்கென அமைந்த தனியான வலுவின்றி, உள்ளீடற்ற குழலாக, போலிச் செழுமை (false power) செறிந்த கற்பனைக் கதையாகத்தான் (myth) பராந்த

கனுடைய பேரரசு உண்மையில் இருந்ததா?—அத்தகையப் பேரரசைக் காட்டுகின்ற வகையில்தான் பராந்தகனின் அயல் நாட்டுக் கொள்கை அடிப்படையிலேயே பிழைபட்டுப் போய் விட்டதா?

இவ் வினுக்களுக்குரிய விடைகளைச் சோழப் பேரரசின் பிற்கால வளர்ச்சிக் காதையில்தான் நாம் காண வேண்டும்.

ஆதித்த சோழன் காலம் முதல் பராந்தகன் ஆட்சிக் காலக் கடைசிப் பகுதிவரை காணப்படும் ஐம்பது ஆண்டுகளில் சோழ நாடு பேரரசாக விரிவாகிப் போனது. உலக வரலாற்றில் காணப் படுகின்ற பேரரசுகளின் வளர்ச்சிக் காலத்தின் அட்டவணையில் ஐம்பதாண்டுகள் எனப்படுவது ஒரு குறுகிய காலமே. சோழப் பேரரசின் வளர்ச்சிப் பாதையில் ஆதிக்கப் போர்களின் காரண மாக மகுடமிழந்த மன்னர்களின் எண்ணிக்கை அதிகமானதோடு பாண்டியர் நீங்கலாக அவர்கள் அனைவரும் வடக்குப் பகுதியைச் சார்ந்தவர்கள் ஆவர். அவர்கள் வடபுலத்து ராஷ்டிரகூடர் களோடு அணி சேர்ந்துகொண்டார்கள். இவ் வகையில் எதிரிகளை ஓரிடத்தில் செறிந்து காண விட்டுவிட்டு, அவர்களின் எதிர்ப்பைச் சமாளிக்கின்ற வகையில் தென்னகத்தின் ஏனைய மன்னர்களைச் சோழர்கள் தங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ளவில்லை. ஆகவே, ராஷ்டிரகூடர்களை எதிர்க்கின்ற பொறுப்பு சோழர்க்குரிய சொந்த விநயமாகிவிட்டது. பொது எதிரியை எதிர்ப்பதற்கு உரிய வகையில் அனைத்துத் தமிழக அளவில் எல்லா மன்னர்களையும் ஒன்று சேர்த்து அரசியல் ஒற்றுமையை வளர்த்துக்கொள்வதற் குரிய மனப்பக்குவமும் அதற்குரிய அரசியல் விவேகமும் அப்போது சோழர்களிடம் தோற்றம் கொண்டன. மாற்றரோடு நேருக்கு நேர் போரிடுவதற்கான படைவலிமையின் அடிப் படையில் வெளிநாட்டு உறவுகளைத் திட்டஞ்செய்கின்ற குறுகிய பார்வை கொண்ட அரசியல் முறை அந் நாளையில் அவர்களிடம் காணப்பட்டது. இப் பிழையின் காரணமாகச் சோழப் பேரரசின் விரிவாக்கத்திற்குத் தடங்கல் ஏற்பட்டது. இதனடியாக அப் பேரரசு தஞ்சைக்குரிய பகுதியாக—வெறும் சோழப் பிரதேசமாக— அறுகிவிட்டது

## II. உள்நாட்டு நிர்வாகம்

பராந்தகனுடைய அயல்நாட்டுக் கொள்கை அவனுடைய ஆட்சியின் கடைசிப் பகுதியில் சோழ தேசத்திற்குப் பேரிழப்பைக் கொண்டு வந்தது எவ்வளவு கசப்பானதோ அதனளவிற்குப் பராந் தகனுடைய உள்நாட்டு நிர்வாகத்தில் தமிழகத்தின் எதிர்கால

வாழ்வுக்கு வேண்டிய அத்தனை நலன்களும் அவனைச் சிறக்கச் செய்தது தமிழகத்தின் வரலாற்றில் இனிமை சார்ந்த நல்லாட்சிப் பகுதியாகும். சோழ நாட்டின் வேளாண்மையைப் பேணுகின்ற அளவில் ஏரிகளை வெட்டி வைத்த பராந்தகன் சேரழநாட்டின் பெருமைகளில் சிறந்ததெனக் கொள்ளப்படும் கிராம சுயாட்சி முறையை ஒழுங்குபடுத்தி, மக்களாட்சியின் வலிமைக்கு ஆக்கம் தேடினான். கோவில்கள் கட்டுவதில் அவன் காட்டிய தீவிரம் போல அந்தணர்க்குரிய முற்றூட்டுகள் வழங்குவதிலும் அவன் உணர்த்திக் காட்டிய வழியில் திரண்டு எழுந்த சமுதாய நலம் பிற்காலச் சோழர்க்குரிய பரம்பரைப் பெருமைகளின் மாட்சி மைக்குச் செழுமை ஊட்டிற்று.

## 1. வேளாண்மை பேணல்

கரந்தைச் செப்பேடுகள் கூறுவது போலக் காவிரியின் நீரை எல்லா நிலங்களுக்கும் எடுத்துச் செல்வதற்காகப் பல கால் வாய்களைப் பராந்தகன் வெட்டினான். 'வீரநாராயணன் ஏரி' (வீராணம் ஏரி) அவன் வெட்டிய நீர்நிலைதான். சோழ சிங்க புரத்தில் அவன் தோண்டிய பெரிய ஏரி 'சோழ வாரிதி' எனப் பெயர் பெற்றது. சோழர்களின் செல்வத்திற்கு அடிப்படையாக இருந்த வேளாண்மையை இவன் குலத்தில் உதித்த வேறு எந்த மன்னரும் இவனைப் போலப் பொதுப் பணிகள்மூலம் மேம்படுத்து வதற்காக அரசியல் முனைப்புக் கொள்ளவில்லை.

## 2. சமயக்கொள்கை

உதயேந்திரச் சாசனங்கள் சொல்வது போலப் பராந்தகன் ஏமகர்ப்பம், துலாபாரம் போன்ற சமயச்சார்பான கொடைகளை நிகழ்த்தினான். இன்று காட்டுமன்னார் கோவில் என வழங்கப் பெறும் 'வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம்' என்ற பிரம தேயத்தை இவன் வழங்கிய நிலையில், இவனுடைய குல ஆசார மான 'அந்தணர் புரத்தல்' என்ற பெரும்பணி அரசியல் சார்பான நடவடிக்கையாக மாட்சியுற்றது. இவனுடைய இலங்கைப் படை எழுச்சி தோல்வியடைந்த போதிலும் சங்கிராம இராகவன் (போர் செய்யும் இராமன்) என்ற பட்டம் புனைந்துகொண்ட செய்தியோடு 'நாராயண ஏரி,' 'நாராயண மங்கலம்' என்று மக்கள் நலத்தைக் காட்டும் நீர்நிலைகளுக்கு இவன் பெயர் கொடுத்த மனப்போக்கை ஆராய வேண்டும். சைவத்தின் மேலாளராகச் சோழர்கள் அனைவருமே விளங்கினார்கள். வைணவப் பெரியார்களைத் தங்களுக்கும் தாங்கள் எடுப்பிக்கும் பொதுப் பணிகளுக்கும் விரும்பிச் சூடிக்கொள்கின்ற இவ் வகையான முறை 'கோதண்ட

இராமன்' என்று தன்னை அழைத்துக்கொண்ட இவனுடைய தந்தை ஆதித்த சோழன் காலத்தில் காணப்பட்ட வைணவப் பார்வையின் வகைப்பட்டதா?—இது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

பராந்தகன், தன் தந்தை ஆதித்த சோழனைப் பின்பற்றி, தில்லைச் சிதம்பர நடராஜப் பெருமானுக்குரிய திருநடம் ஆடும் அம்பலத்தைப் பொன்னால் அழகு படுத்தினான்; 'பொன் வேய்ந்த பராந்தகன்' என்ற விருதினையும் பெற்றான். 'திருமன்றங் காதலாற் பொன் வேய்ந்த காவலனும்' என்று ஒட்டக்கூத்தர் தம்முடைய விக்கிரம சோழன் உலாவில் (வரி—32) பராந்தகனைப்பற்றிக் குறிப்பிடுகிறார். தில்லைச் சிதம்பரம் என்ற பெயரோடு 'பொன்னம்பலம்' என்ற சைவத் திருப் பெயரும் தமிழ் நாகரிகத்தின் சமயச் சார்பான மறுமலர்ச்சியில் 'ஊன் கலந்து' உயிர்ச் சித்திரமாகத் தமிழ் இல்லங்கள்தோறும் பொலிந்தது. இவன் தன் தந்தை ஆதித்த சோழன் இறந்த காளஹஸ்தியில் அவனுடைய சமாதியின்மேல் 'ஆதித் தேச்சுவரம்' என்ற கோவிலைக் கட்டி வழிபாடு செய்தான். காவிரியின் கரையிருப்பில் வாழ்ந்த வெங்கட மாதவர் ரிக் வேதத் திற்குப் புதிதாக ஓர் உரை எழுதினார்.[1]

### 3. கிராம சுயாட்சி முறை—மன்னனின் ஆர்வம்

உத்திரமேரூர் (செங்கல்பட்டு மாவட்டம்) சாசனங்கள் பராந்தகனுடைய 12-வது, 14-வது ஆட்சிக் கால ஆண்டுகளில்—அதாவது கி.பி. 919, 922-ல்—அவ்வூர் அந்தணர் அடங்கிய சபாவின் நிர்வாகக் குழுக்களுக்குரிய தேர்தல் முறை பற்றிய புதிய மாற்றங்களைக் குறிப்பிடுகின்றன. கிராம ஆட்சி முறை என்பது பல்லவர் காலத்திலும் அதே காலத்தில் தென்பகுதியை ஆண்ட முதல் பாண்டியப் பேரரசின் காலத்திலும் கா[illegible]டதுதான். சான்றாக, மானூர் (நெல்லை மாவட்டம்) என்ற அந்தணர் மட்டும் காணப்பட்ட பிரமதேயத்திலுள்ள மகாசபையின் ஒழுகலாறு பற்றி கி.பி. 800-ல் ஏற்பட்ட மானூர்ச் சாசனம் (வரகுணன் I—பாண்டியன் காலம்) 'இவ்வூர் பங்குடையார் மக்கள் சபையில் மன்றாடுகிறது' என்றளவில் நிலவுரிமை உள்ளவர்களான 'பங்குடையார்' ஊர் நிர்வாகம் செய்ததைக் குறிக்கிறது. மானூருக்கு அடுத்த சிறப்பு உத்திரமேரூருக்கு என்று கொண்டாலும், உத்திரமேரூரில் சபை அமைப்பு முறையில் மாற்றங்கள் கொள்ளப்பட்ட பரிசோதனைகள் (constitutional experiments) நடத்தப்பட்டன. இது சோழன் பராந்தகனுடைய ஆட்சியின் சுயவளர்ச்சிக்கான (self-improvement) முனைப்பைக் காட்டுகிறது.

[1] K.A.N. Sastri—'Sources of Indian History'—1961—p. 68

உத்திரமேரூரின் வார்டுகளான குடும்பங்களுக்கு என ஏற்கெனவே ஏற்பட்டுப்போன குடவோலை முறையின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட வாரியப் பெருமக்கள் என்ற ஆட்சிக் குழு உறுப்பினர்களோடு, அக் குடும்பங்களுக்கு உட்பட்டு இருந்த ஊரின் 12 தெருக்களுக்கும் தனி முறையில் பிரதிநிதித்துவம் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாறு வார்டுக்கும் வார்டில் உள்ள ஒவ்வொரு தெருக்களுக்கும் 919ஆம் ஆண்டின் தீர்மானத்தின்படி கொடுக்கப்பட்ட பிரதிநிதித்துவம் சரியாக அமையாததால், இம் முறை அடுத்து நீக்கப்பட்டது. தங்கத்தைத் தரம்பார்த்துத் தங்கத்தின் அளவைக் கணக்கிடுகின்ற பொறுப்பை ஒவ்வொரு கிராமத்தின் சார்பிலும் ஏற்று நடத்தி வந்த பொன் வாரியத்திற்கு உதவுகின்ற எட்டு பேர் கொண்ட மற்றொரு துணைக்குழு ஒன்றை உத்திரமேரூர் சபா 922-ல் ஏற்படுத்தியது.

இவ்வாறு அரசியலைச் சார்ந்தும் பொருளாதாரத்தைப் பொறுத்தும் ஏற்பட்ட இவ்விரண்டு மாற்றங்களும் சோழன் பராந்தகன் அனுப்பி வைத்த உயர் அதிகாரிகளின் 'மத்தியஸ்தர்' அந்தஸ்துக்கான மேற்பார்வையில் நடந்தேறின. சோழ அரசின் சீர்மைகளுக்குள் தலையாயதாகக் கொள்ளப்படுகின்ற கிராம சுயாட்சிக்குச் சாசன முறையில் கொடுக்கப்படும் ஆதாரம் உத்திரமேரூர்தான். இந்த அளவில் பராந்தகனுடைய ஆட்சியில் நிகழ்ந்த மாற்றங்களின் அடிப்படையில்தான் பிற்காலச் சோழருடைய கால முழுமைக்குமான கிராம ஆட்சிச் சாதனைகள் கணிக்கப் பெறுகின்றன.

## III. குடும்பம்

நாற்பத்து ஆறு ஆண்டுக்காலம் ஆண்ட இப் பராந்தகனுக்குப் பதினொரு மனைவியர் இருந்தனர். நான்கு ஆண் மக்கள், இரண்டு பெண் மக்கள் என்றளவில் பரந்த ஒரு குடும்பத்தின் தலைவனான பராந்தகனுடைய கடைசிக் காலம் அவனைச் சோழப் பிரதேசத்தின் மன்னனாக மட்டும் காட்டுகிறது. கி.பி. 949-ல் நடந்த தக்கோலப்போரில் தன் தலைமகன் ராஜாதித்தியன் இழந்ததிலிருந்து (டெல்லி மன்னன் பால்பன் தன் மகனைப் பிரிந்து இரவெல்லாம் அரற்றி உள்ளம் நைந்து இறந்ததைப் போலல்லாமல்) நான்கு ஆண்டுகளைப் பேரரசை இழந்த தவிப்பில் அவன் கழித்திருக்க வேண்டும். 950-ல் கண்டராதித்தியன் என்னும் மற்றொரு மகனுக்கு இவன் 'யுவராஜா' பட்டம் கட்டி வைத்தான். கி பி. 955-ல் பராந்தகன் இயற்கை எய்தினான்.

பராந்தகனுக்குச் சங்கிராம இராகவன், வீரசோழன், பண்டித உற்சவன் (அறிஞரைப் போற்றியதால் வந்த பட்டம்), குஞ்சர மல்லன், இருமடி சோழன் என்ற விருதுகள் உண்டு. சோழப் பேரரசைக் கடைசிக் காலத்தில் இழந்து போன நிலையிலும் பராந்தகனுடைய ஏனைய சாதனைகளான ஏரி வெட்டுதல், கோவில் கட்டுதல், கிராம சுய ஆட்சி பேணல் போன்ற பொது நலத்திற் கான பெரும்பணிகள் இவன் ஆட்சியில் நிறைந்து காணப்படு கின்றன. இம் மன்னனுடைய நாற்பத்தாறு ஆண்டுக் கால ஆட்சியில் இப் பணிகள் எல்லாம் வீரியமுடன் சீராக நடந்தேறின என்று சொல்வதைவிட இச் சாதனைகளின் பயன்களைத் துய்த்த மக்களில் பெரும்பான்மையோர் சோழ மண்டலத்திற்கு அப்பாலுள்ள உத்திரமேரூர், வீரநாரயணம் என்ற வீராணம் ஏரி உள்ளிட்ட தொண்டை மண்டலத்தார் போன்றவர்தான் என்று கூறுவது பொருத்தமாகும். இக் கருத்து பராந்தகச் சோழனுக்குரிய தனி நபர்ச் சிறப்பில் மலர்ச்சியுற்ற பொதுநலம் பேணும் முடியாட்சியின் அழகுக்கு அழகு செய்யும்.

# 7. கண்டராதித்திய சோழன் (955-957)

கி.பி. 950-ல் 'யுவராஜா' பட்டம் பெற்ற கண்டராதித்தியச் சோழனுடைய நேரடியான ஆட்சி 955-லிருந்து 957-வரை இரண்டாண்டுகள்தான் நடைபெற்றது என்றாலும், சோழரின் பரம்பரைக்கு உரிய மேம்பாடுகளெல்லாம் காணப்பெற்ற ஓர் எளிமையான காலம் இவனுக்குரிய ஆட்சிக்காலம் எனலாம். இவன் தந்தை பராந்தக சோழன் இறந்த ஆண்டான 955-லிருந்து பேரரசன் ராஜராஜ சோழன் I பதவிக்கு வருகின்ற 985ஆம் ஆண்டு வரை சோழ வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் நடைபெறவில்லை. ஆட்சிக்கு வந்த மன்னர்களின் பெயர்களிலும் ஆட்சிக் காலக் கணிப்புகளிலும் குழப்பங்கள் மண்டிக் கிடக்கும் இந்த முப்பத்தைந்து ஆண்டுக் காலம் பிற் காலச் சோழர்களின் வரலாற்றிலேயே சோகமும் சோர்வும் பின்னிக் கிடந்த வாழ்க்கையை நடத்திய மன்னர்கள் காணப்பெற்ற ஒளியற்ற காலம் எனக் கொள்ளலாம்.

இரண்டே ஆண்டுகள் ஆள்கின்ற மன்னர்களாகக் கண்டராதித்தியன்; அவன் இளையோன் அரிஞ்சயன்; வீரபாண்டியனை வென்று கொன்ற பின்பு தானும் கொலையுண்டு போன யுவராஜா ஆதித்த சோழன்; இவ் வகையில் மகனை இழந்து மனமுடைந்து வடக்கிருந்த நிலையில் காஞ்சியின் 'பொன் மாளிகையில் துஞ்சிய' சுந்தரச் சோழன்; அவன் பிரிவு தாங்காமல் பால் மணம் மாறாத குழந்தையை (ராஜராஜனை அல்ல) விட்டு விட்டு உடன்கட்டை ஏறிய அவன் மனைவி வானவன் மாதேவி; அரசுரிமைக்காகப் போராடிப் பங்காளியான ஆதித்தனுடைய கொலையை அடுத்துச் சுந்தரச் சோழனுடைய தன்னுர்வ இறப்புக்குப் பின்பு அரசனாகி வாழ்ந்த உத்தமச் சோழன் என்றளவில் இந்த முப்பத்தைந்து ஆண்டுக் காலம் சோழ வரலாற்றில் அரசியல் நலன்கள் வற்றிப்போன இருண்ட காலம் எனக் கூறலாம். இக் காலம் முடிவடைந்த பின்பு பதவிக்கு வந்த ராஜராஜன் ஆட்சியினுடைய உயர்நலன்களோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றபோது இவ்விருண்ட காலத்தின் அரசியல் சூனியம் விளங்கும். ஆனாலும், பராந்தகனுக்குப் பின் வந்த கண்டராதித் தியச் சோழனுடைய ஆட்சிக் காலத்தில் சோழர் பரம்பரையின்

சமய வளர்ச்சி, வேளாண்மை போற்றுதல் போன்ற தலையாய நலன்கள் ஆக்கம் பெற்று வளர்ந்தன.

# I. வெளிநாட்டு உறவு

## 1. தொண்டை மண்டலம்

பாண்டியரை 965 ஆண்டளவில் வெற்றி பெற்றதும் தொண்டை மண்டலத்தை 963 ஆண்டிலிருந்து சிறுகச் சிறுக மீட்டதும் சுந்தரச் சோழன் (967—970) காலத்தில் நிகழ்ந்த இரு பெரும் அரசியல் நிகழ்ச்சிகள் ஆகும். ஆனால், இவ்விரண்டு அரசியல் மாற்றங்களுக்கும் துணை நிற்கின்ற சோழர்தம் உள்ளக் கிளர்ச்சியைக் கண்டராதித்தியன்தான் தொடங்கி வைத்தான். இழந்த நாடுகளைத் திரும்பவும் பெறுகின்ற பேரரசுத் தத்துவம் கண்டராதித்தியனைப் பொறுத்தவரை ஒரு சமுதாயக் கடமையாகக் காணப்பெற்றது.

## 2. பாண்டியர் நாடு

சோழர்களின் ஆதிக்கத்தைப் பாண்டியர்கள் எதிர்க்கின்ற திறன் ஓயாத அலை கடலெனத் தென்னக அரசியலை உறுத்தி வந்தது. பாண்டியரின் பாழ்பட்டுப்போன முதலாம் பேரரசின் சாக மறுக்கின்ற உயிர்ப் பிடிப்பிற்கும் புதிதாக எழுச்சியுறத் துடித்துக்கொண்டிருந்த சோழப் பேரரசின் முனைப்புக்கும் இடையே ஏற்பட்ட ஆதிக்கப் போர் காலத்தால் அழியாத வடு என்றளவில் கடைசி வரைக்கும் ஓயாத போராட்டமாக உருப்பெற்றது. கிரேக்க வரலாற்றில் சிந்தனைச் சிறப்பிற்குரிய ஏதென்ஸ் நகரத்திற்கும் இராணுவ முனைப்பு உடைய ஸ்பார்ட்டா நகர அரசுக்கும் நடந்த இதிகாசப் போர்களைப் போலச் சங்கம் வளர்த்த பாண்டியருக்கும், கோவிலறம் பேணிய சோழருக்கும் ஆதிக்கப் போட்டி இடையறுமல் நடைபெற்றது. பாண்டியர் களின் இயலாமையின் காரணமாகச் சோழரின் எழுச்சி செயல் பட்டு ஓங்கியது. இருப்பினும், பழைய பேரரசு என்ற மனவுணர்வு இறக்கத்தில் பாண்டியர்கள் தங்கள் விடுதலைப் போரை விடாமல் நடத்தி வந்தார்கள். கடைசியில் சோழரையும் வென்று தங்களுடைய இரண்டாம் பேரரசைக் கட்டியும் காட்டினுர்கள்.

பராந்தகன் I பாண்டியர்களை 21 வருட காலப் போராட்டத்தின் பயனுக அடக்கிய பின்பு 26 ஆண்டுக் காலம் பாண்டிய அரசியல் ‘வற்கடம்’ சென்றது; போராற்றலுள்ள பாண்டியர்கள் பொதுமையானதோர் அரசைக் கொண்டவர்கள் என்றளவில் நிலை பெருமல் தனித்தனியான ஊர்களின் விடுதலைப் போராட்டம் என்ருகிப்போன சிதறலில், தங்களின் ஊக்கம் தேய்ந்து போய், ஓய்ந்து போனுர்கள். பின்பு வீரபாண்டியன்

(946—966) என்பவன் எழுச்சியுற்றான். பராந்தகனுக்குக் கப்பம் கட்டுகின்ற மன்னனாக மாறிய அவன் மதுரைக்குத் திரும்பி வந்தமர்ந்தான். கண்டராதித்தியன் காலத்தில்—பாண்டியன் பதவிக்கு வந்து பத்தாண்டுகளில்—சோழனுக்குரிய கப்பம் கட்டாமல் சுயேச்சை அடைந்தான். இப் பாண்டியனை அடக்குவதற்காகக் கண்டராதித்தியன் எடுத்த முயற்சி ஒன்றும் பயன் அளிக்கவில்லை.

### 3. வெளிநாட்டுக் கொள்கை—திறனாய்வு

தொண்டை நாட்டின் இழப்பு சோழப் பேரரசின் வளர்ச்சியில் ஏற்பட்டுப் போன பெரிய தடைக் கல்லாகும். 966வரை ராஷ்டிரகூட கிருஷ்ண தேவரின் கல்வெட்டுகள் தொண்டை மண்டலத்தில் காணப்பட்டாலும் கண்டராதித்தியன் அங்குள்ள தமிழினத் தலைவர்களைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ளும் முயற்சியில் வெற்றி பெற்றான் எனப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.[1] ஆனால், அரசியல் பயன்கள் எதுவும் இதனால் விளையவில்லை. தொண்டை மண்டல மீட்புப்போர் என்றளவில் கண்டராதித்தியனைப் பொறுத்த அளவில் அது ஒரு ராஜதந்திரப் புரட்சியாக (Diplomatic Evolution) செயல்பட்டிருக்க வேண்டும். தம்மோடு இணைசேர்கின்ற தலைவர்களைத்தங்கள் பக்கம் ஈர்க்கின்ற இந்த வகை அரசியல் ராஜ தந்திரத்தையாவது மேற்கொண்டு தான் சோழர்கள் தங்களுடைய பழைய வலிமையைத் திருப்பிப் பெற முடியும். ஆகவே, இந்த முயற்சியில் கண்டராதித்தியன் முழு மனதோடு ஈடுபட்டிருக்க வேண்டும். தொண்டை மண்டலத்தை மீட்டுக்கொள்கின்ற பெருமுயற்சியில் வருங்காலச் சோழ மன்னரின் வழித்தோன்றல்களுக்கான அரசியல் பாரம்பரியமாக (political legacy) அவன் அளித்துச் சென்றான். வேற்று நாட்டாரோடு போர் செய்வதன்மூலம் நிலைநாட்டப்படும் ராஜ தந்திரத்தால் முழுமையான பயன் அவ்வளவாகக் கிடைப்பதற்கில்லை. போரிடாமல் வெறும் ராஜதந்திரத்தைக் கொண்டே வேற்று நாட்டவரை நம் நலனுக்கு உகந்த நிலையில் திருத்தி அமைத்துக்கொள்வது ராஜதந்திரத்தின்மூலம் நடைபெறும் போர் (war by diplomacy) என்று அமையும். ராஷ்டிரகூடர்களோடு அரசியல் தொடர்பு கொண்டு, அவர்களோடு அரசியல் இணைவாழ்வு மேற்கொண்டு வாழ்ந்து வந்த அந் நாளைய தொண்டை நாட்டு அரசியல் தலைவர்களின் அரசியல் விசுவாசத்தை உடைப்பதன்மூலம் கண்டராதித்தியன் தன்னை ஒரு மதிநுட்ப ராஜதந்திரியாக இனங்காட்டிக்கொண்டான். இத்தகைய ராஜதந்திரப் புரட்சி அமைதியாக உள்ளுக்குள்ளே

[1] K. A. N. Sastri—' Cholas '—1955—p. 153

நடந்து வந்தது. பொறுமையும் ஆர்வமும் கொண்டு இதில் ஈடு பட்டால் அதற்குரிய அரசியல் ஆதாயம் சோழருக்குக் கிடைக்குமென்ற எண்ணம் வலிமைப்படுத்தப்பட்டது. இவ்வாறு கொஞ்சங் கொஞ்சமாக அரசியல் மனவேற்றுமையை (political disaffection) ஏற்படுத்தி, ராஷ்டிரகூடரின் அரசியல் பிடிப்பைத் தொண்டை மண்டலத்திலிருந்தும் உலுப்பி உதறித் தள்ளுவதற்காக மேற் கொள்ளப்பட்ட இந்த வகை அரசியல் நடவடிக்கையை உளேச்ச லூட்டு இழுவைப் போர் (War of Altrition) என்ற வகையில் சேர்க்கலாம்.

## II. உள்நாடு

### 1. சமயக் கொள்கை—சமயச்சார்பான வாழ்வு

பாண்டியரோடும், ராஷ்டிரகூடரோடும் மோதிப் பார்த்ததில் பயன் ஏதும் கிட்டாத வகையில் கண்டராதித்தியன் தன்னுடைய மிகக் குறுகிய இரண்டாண்டுக் கால ஆட்சியில் சமயச் சார்பான சிந்தனைகளில் ஈடுபட்டுப் பெருமதிப்பு பெற்ருன். 'சிவஞான கண்டராதித்தியன்' என்ற பெயர் இவனுக்கு உண்டு. சிவநெறிச் செல்வனுக மட்டுமல்லாது கல்வியில் சிறந்த கவிஞனுகவும் விளங்குகின்ற பேறு பெற்றவன் என்றளவில் இவனுக்கு இணை பிற்காலச் சோழ மன்னர் வரிசையில் யாருமிலர். பராந்தகன் I, ராஜேந்திரன் I போன்ரோர் 'பண்டித உற்சவன்', 'பண்டித சோழன்' என்ற பட்டங்களைக் கொண்டிருந்தனர். ஆனல், அவர்கள் இலக்கியப் படைப்பாளிகளாகக் காணப்பெறவில்லை. கண்டராதித்தியன் ஒருவன்தான் நுண்கலைகளில் இசையைத் தேர்ந்தெடுத்து, சமயவுணர்வோடு இணைத்துத் தனது புலமையை வெளிப்படுத்தினன்.

கண்டராதித்தியனுடைய திருவிசைப்பா சைவத்திருமுறை களில் ஒன்பதாம் திருமுறையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. கோழியின் வீரத்திற்கு இலக்கமாகத் தோன்றிய உறையூரைக் குறிப்பிட்டுக் 'கோழி வேந்தன்' என்று இப் பதிகத்தில் தன்னை இவன் அழைத்துக்கொண்டது போல, 'தஞ்சையர் கோன்' என்று இவன் தன்னையே விளிக்கின்ற போது வெறும் தஞ்சைக்கு மட்டும் என்ருகிப் போன தன்னுடைய அரசியல் எளிமையை எண்ணி இவன் வருந்தவில்லை. மாருக, கடவுள் சிந்தனைத் தடம் பார்த்து வளர்ச்சியுற்ற கல்விச் சிறப்பில், 'மேற்கெழுந்தருளிய தேவர்' என்றழைக்கப் பெறும் வகையில் சமயச் சார்பான ஸ்தல யாத்திரைகளை இவன் மேற்குப் பகுதியில் மேற்கொண்டிருந்தான்

என அறிஞர் T.V.S. பண்டாரத்தார் கூறுவர். மேற்குப் பகுதியில் இறந்தான் என்ற கருத்தை 'மேற்கெழுந்தருளிய' என்ற தொடரில் இறப்பை மங்கல வழக்கில் சொல்லப்பட்ட அளவில் காண்பவர்களும் உண்டு.

எல்லாச் சோழர்களுக்கும் உள்ள 'அந்தணர் புரத்தல்' என்ற கொள்கை சைவத்தில் சிறந்து விளங்கிய கண்டராதித்திய னிடத்திலும் காணப்பட்டது. திருச்சி மாவட்டம் உடையார் பாளையம் வட்டத்தில் கண்டராதித்தியச் சதுர்வேதி மங்கலம் என்ற பிரமதேயம் இவனால் வழங்கப்பட்டது. தில்லையம்பலத்தை நாடுகின்ற ஆன்மீய கவித்துவம் கொண்ட அனுபூதி சித்தம் இவனுக்கு உண்டென்றாலும் அந்தணரைப் போற்றியது போல ஏனைய சமயத்தவரையும் இவன் மனங் கிளர்ந்து ஆதரித்தான். கண்டராதித்திய சதுர்வேதி மங்கல நகரில் வைணவத்திற்கான திருமால் கோட்டம் ஒன்றைச் சமைத்து, அதற்குத் திருவிசைப்பா பாடிய சைவனான தன்னுடைய பெயரினையே 'கண்டராதித்திய விண்ணகரம்' என்று வழங்கினான். சமணக் கோவில் ஒன்று தென்ஆற்காடு மாவட்டம் 'பள்ளிச் சந்தம்' என்னும் ஊரில் இவன் காலத்தில் சமண வழிபாட்டவரின் இருக்கையாக விளங் கியது. சமயப் பொறையின் மேம்பாட்டை இவன் தனி வாழ்க் கையில் சைவ ஈடுபாட்டில் திளைத்திருந்த நிலையிலும் கைக் கொண்டு விளங்கியது இவனுக்குரிய தனிமைச் சிறப்பாகக் கொள்ளலாம்.

## III. பொதுப்பணி

தென் ஆற்காடு மாவட்டம் உலகபுரம் தருகின்ற சாசனச் செய்தியின்படி இவன் கண்டராதித்தியப் பேரேரி என்ற நீர் நிலையைத் தோண்டி, அப் பகுதியின் வேளாண்மைக்கு ஆக்கம் செய்தான்.

## IV. குடும்பம்

வீரநாராயணி என்ற பட்டத்து இராணியோடு மழவரையன் மகள் செம்பியன் மாதேவி கண்டராதித்தியனுக்கு அமைந்த இரு மனைவியருள் இளையவள்; வரலாற்றுப் புகழ் வாய்ந்தவள். கண்ட ராதித்தியனுக்குரிய ஒரே ஆண்வாரிசை மன்னனின் பல ஆண்டுக் காலத் தவத்தின் காரணமாக அவள் பெற்றெடுத்தாள். இளமை யிலேயே (அதாவது 957-ல்) தன் கணவனை இழந்து 1001-ல் அவள் காலமாகும் வரை 44 ஆண்டுகள் வைதவ்யம் பேணி ஏராளமான அறக்கட்டளைகளைச் செய்த பெருமாட்டி இவள்.

இவன் மகன் உத்தமச் சோழன்தான் கண்டராதித்தியனுக்குப்பின் அரச பட்டத்திற்கு வந்திருக்க வேண்டியவன். மூன்று வயது பாலகனுன இந்த உத்தமச் சோழனைக் கண்டராதித்தியன் அரசனுக்கி இருக்க வேண்டும். தன்னுடைய தம்பி அரிஞ்சயன் தன் மகன் உத்தமச் சோழனுக்குரிய ராஜப் பிரதிநிதியாக (Regent) அமைந்து ஆட்சி செய்திருக்க வேண்டியதுதான் முறை. ஆனுல், பிற்காலச் சோழரின் வாரிசுரிமை ஒழுகலாற்றில் தலைமகனுக்குப் பட்டம் என்பது எந் நாளும் வழுவாது பின்பற்றப் பட்ட கோட்பாடாகச் செயல்படவில்லை. எனவே, உத்தமச் சோழன் அரச உரிமையை இயல்பாகப் பெருமல் பின்பு சுந்தரச் சோழன் காலத்தில் ஆட்சிக்குரிய வாரிசாக ஆக்கப்பட்ட யுவராஜா ஆதித்த சோழனைக் கொன்று பின்பு போராடிப் பெற வேண்டிய நிலை ஏற்பட்டது. இதற்கு முழுமுதற்காரணம் கண்டராதித்தியனே ஆவான். ஏனென்ருல், அவன் 957-ல் காலமாவதற்கு மூன்ருண்டுகளுக்கு முன்பு 954-ல் தனது சகோதரன் அரிஞ்சயனுக்கு 'யுவராஜா' பட்டம் கட்டி வைத்தான்; இதன்மூலம் தனக்குப் பின்பு தனது தம்பிதான் அரசனுக வேண்டும் என்ற நியதியையும் ஏற்படுத்தி வைத்தான்.

இதன்படி அரசுரிமை அரச பரம்பரையின் இரண்டாவது கிளை வழியாகச் செல்லத் தலைப்பட்டது. இவ்வாறு கண்டராதித்தியன் தனது தம்பியை யுவராஜாவாக ஆக்கிய அரசியல் அதிகார ஒழுங்குமுறை சிறிது நாள்களில் வாரிசுரிமை பற்றிய அரண்மனைப் போராட்டத்தில் (Palace Revolution) கொண்டு போய் விட்டது. இது பற்றி வருந்திய உள்ளத்தோடு கச்சி மாநகரம் சென்று பொன் மாளிகையில் சங்ககாலத்தில் உள்ளம் நொந்தவர்கள் வடக்கிருந்ததைப் போல அமர்ந்த நிலையில் உயிர் விட்டான் அரிஞ்சயன் மகன் சுந்தரச் சோழன். 'எண்ணித் துணிக கருமம்' என்ற அளவில் அல்லாமல் தன் இயல்பான அருள் வாழ்க்கை நல்லுணர்ச்சியினுல் தூண்டப்பட்டுத் தன் சகோதரனுக்கு 'யுவராஜா' பட்டங்கட்டி வைத்த இவனது செயல் பெரும் அரசியல் பிழையாக இவனுக்குப் பின்வந்த காலத்திய அரசியலில் உருவெடுத்து அரசக் குடும்பத்தை வருத்தியது. இது வரை கண்டிராத அளவில் அரசக் குடும்பத்துள் பிளவு ஏற்படுத்தியது; யுவராஜா ஆதித்த சோழன் உயிரிழக்க நேரிட்டது.

பராந்தகனைத் தொடர்ந்து வந்த முப்பதாண்டுக்கால இடர்ப்பாடுகளில் மன்னர் குலத்தை வருத்தி நின்ற பெருங்குறைகளுக்கான 'ஊழ்வினையாகக்' கண்டராதித்தியனுடைய இந்த அரசியல் ஏற்பாடு அமைந்தது. அரிஞ்சயன் பேரன் ராஜராஜன் I, 985-ல்

அரசனுக வரும்வரை இந்த ஊழ்வினை சோழ மன்னர்களைச் சுற்றிச் சுற்றி உழன்று வந்து அவர்களை உறுத்தி வருத்தியது.

## அரிஞ்சய சோழன் (957—957)

சோழப் பேரரசைப் பறித்துச் சென்ற தக்கோலப் போரில் (கி. பி. 949) நேரடியாகப் பங்கு பற்றிய சோழ இளவரசருள் ஒருவன் அரிஞ்சயன் என்பதை இவனுடைய மற்றெரு பெயரான 'அரிகுலகேசரி' என்பதினின்றும் உணரலாம். இவனுடைய தமையன் யுவராஜா ராஜாதித்தியனின் துணைக்கு இவனை இவன் தந்தை பராந்தகன் திருக்கோவலூர்ப் பாசறையில் ராஷ்டிரகூடரை எதிர்நோக்கிக் காத்திருக்க 936-லிருந்து பணித்திருந்தான். தந்தை பராந்தகனுடைய காலத்தின் முற்பகுதியில் காணப்பட்ட பேரரசுப் பேராண்மையை அரிஞ்சயன் நேரடியாக அனுபவித்தவன் ஆவான். பேரரசு போய்விட்ட நிலையில் மனச்சுமை தாங்கி, தந்தை போல இரண்டாண்டில் இவனும் காலமாஞன். இவ் வகையில் தக்கோலப் போரின் அவல விளைவு ராஜாதித்தியனை உடனடியாகவும், பராந்தகன், கண்டராதித்தியன், அரிஞ்சயன் ஆகியோரை நான்கு வருடங்களிலும் பறித்துச் சென்றது.

கி. பி. 950-ல் இவனுக்கு யுவராஜா பட்டம் கட்டி வைத்த இவனுடைய தமையன் கண்டராதித்தியனுடைய மகன் உத்தமச் சோழன் ஆவான். இந்த உத்தமச் சோழனுக்கு மூன்று வயதான குழந்தைப் பருவம் நடந்தபோது அரிஞ்சயன் சோழ அரசனுக பதவி ஏற்ருன். உத்தமச் சோழனுக்குரிய அரசுரிமையை இவ்வாறு இவன் எடுத்துக்கொண்டான் என்றே சொல்லலாம். உத்தமச் சோழனை அரசனுக்கிய நிலையில் இவன் ராஜப்பிரதிநிதி யாகத்தான் (Regent) ஆட்சி செய்திருக்க வேண்டும். 957-ல் இவன் இறந்தான். அதற்குப் பின்பும் உத்தமச் சோழன் சோழ மன்னனுக ஆக்கப்படவில்லை. அரிஞ்சயன் பதவிக்கு வந்த பின்பு அரச வமிசத்தின் இளைய வழியில் சென்ற அரசுரிமை மேலும் தொடர்ச்சி பெற்ற வகையில் இவனுடைய மகன் பராந்தகன் II சுந்தரச் சோழன் பட்டத்துக்கு வந்தான். மூத்த வழியினனுன உத்தமச் சோழன் ஒதுக்கப்பட்டுப் போஞன். வரலாற்றுப் பூர்வமான ஒரு பெரும்பிழையைச் செய்கின்ற மனப்போக்கு மன்னர் பதவியின் இனிமையைச் சார்ந்த தனிநலன்களை அனுபவித்த அரிஞ்சயனுக்கு ஏற்பட்டது என்று கூறலாம்.

### I. வெளிநாட்டுக் கொள்கை

தன்னுடைய தமையன் ராஜாதித்தியனைக் கொன்று தக்கோலப் போரில் வெற்றிபெற்ற ராஷ்டிரகூடரைத் தொண்டை மண்டலத்தி

லிருந்து அப்புறப்படுத்துகின்ற இராணுவ முயற்சியில் அரிஞ்சயன் ஈடுபட்டது உண்மைதான். இராணுவத்திறனை இவன் பெற்றிருக்க வில்லை என்றாலும், இவன் மேற்கொண்ட ராஜதந்திரம் அதை விடச் சிறந்து விளங்கியது. ராஷ்டிரகூடரின் ஏவலாளர்களாக இருந்த வைதும்பரின் எதிரிகளான வாணர்களிடம் திருமண உறவுகளைச் செய்துகொண்டதன்மூலம் அத்தகைய ராஜ தந்திரத்தை இவன் வெளிக் காட்டினான். தொண்டை நாடு, திருமுனைப்பாடி நாடு போன்றவற்றில் ராஷ்டிரகூட அரசின் பிரதிநிதிகளாக வைதும்ப மகாராசன் திருவையன் என்பானும், அவனுடைய மகன் ஸ்ரீகாந்தனும் மாமன்னன் கிருஷ்ணன் III சொற்படி ஆண்டு வந்தார்கள். அரிஞ்சயன் தனது மகள் அரிஞ்சயப் பிராட்டியை வைதும்பரின் அரசியல் போட்டியாளர் களான வாணர் குலத்தாரைச் சேர்ந்த ஓர் இளவரசனுக்கு மண முடித்து வைத்தான். அவர்களை இந்த வகையில் ராஷ்டிர கூடரிடமிருந்து பிரித்து சோழர்களிடம் குடும்ப உறவோடு வந்து சேர்ந்த வகையில் அவர்களை ராஷ்டிரகூடரின் பகைவர்களாக மாற்றினான் அரிஞ்சயன்.

திருமணம் என்ற தனிப்பட்ட விஷயத்தை அரசியல் காரியங் களுக்குச் சாதகமான முறையில் அமைத்துக்கொள்கின்ற ராஜ தந்திர வழக்கம் மகத மன்னர் பிம்பிசாரர் (கி. மு. ஆறாம் நூற்றாண்டு) போர் வீரக்குலமான லிச்சாவியர்களின் அரச குமாரியை மணம் முடித்த நாளிலிருந்து இந்திய வரலாற்றில் காணப்படுகிறது. ஐரோப்பிய வரலாற்றில் இதை அதிகமாகப் பின் பற்றியது பிரான்ஸ் நாடுதான். அரிஞ்சயனுக்கு இத்தகைய ராஜ தந்திரந்தான் தன்னளவில் சாத்தியமாகக் காணப்பட்டது. ஆகவே தான் தொண்டை நாட்டின் விடுதலை அவன் மகன் பராந்தகன் II காலத்தில் நடைபெற வேண்டியதாயிற்று.

## II. உள்நாட்டுப் பணிகள் ஏன் இல்லை ?

உள்நாட்டுப் பணிகளை ஆற்றுகின்ற அளவில் இவன் ஆட்சிக்காலம் நீடித்து நிற்கவில்லை. 1526-லிருந்து 1530-வரை அரச பதவியிலிருந்த முதல் மொகலாய மன்னன் பாபர் உள் நாட்டுக் காரியங்களை மேற்கொள்ளாமல் போனதற்குக் காரணம் அவனுடைய ஆட்சி குறுகி நின்றதால்தான் என்பது வரலாற்று உண்மையாகும். நவீன காலத்தைத் தொட்டு நின்ற காலத்தில் பீரங்கிப்படை நடத்திவந்த பாபருக்கே ஐந்தாண்டுகள் குறுகிய வையாக இருந்தன எனக்கொண்டால், சில மாதங்களே அரசாண்ட—அதிலும் தக்கோலப் போரில் தமையனையும் பின்பு பேரரசுப் பெருமிதத்தையும் இழந்து நின்ற—அரிஞ்சயன் செயற் கரிய உள் நாட்டுப் பணிகளைச் செய்திருக்க முடியாததுதான்.

### III. குடும்பம்

அரிஞ்சயனுடைய தாய் சேரர்குலப் பெண்மணி ஆவாள். தந்தை பராந்தகனுக்கு வாய்த்த பட்டத்தரசியும், யுவராஜா ராஜாதித்தியனின் தாயாரும் ஆன கோக்கிழானடிகளும், மற்றொரு மனைவியான கோதைபிராட்டியும் சேர மன்னர்களின் வழித் தோன்றல்கள்தான். சேரர் குலத்தைச் சேர்ந்த பழுவேட்டரையரின் திருமகள்தான் அரிஞ்சயனைப் பெற்றெடுத்தவள். இவ்வாறு அரிஞ்சயன் பராந்தகனின் மூன்றாவது மகன் ஆவான்.

சேரர்குலத் தாய்க்குப் பிறந்த இவன் அரசனான பின்பு, சேரர் வழியினர் பலர் தமிழகம் வந்து சோழ அரசியலில் அலுவலாளராகச் சேர்ந்தனர். தந்தை பராந்தகனைப் பின்பற்றி வெவ்வேறு நாட்டினரின் நான்கு பெண்டிரை அரிஞ்சயன் மனைவியராகக் கொண்டான். முதல் மனைவி வீமன் குந்தவை கீழைச் சாளுக்கிய மன்னன் வீமன் II என்பவனுடை மகள் என்றும், அது அரசியல் நன்மைக்கான அளவில் நடந்தேறிய ராஜதந்திரத் திருமணம் (diplomatic marriage) என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். ஆனால் பேராசிரியர், அவ்வாறு அவர்கள் இருக்க முடியாது என்பதற்குக் கீழைச் சாளுக்கிய மன்னன் ராஷ்டிர கூடருக்கு அடங்கிக் கிடந்த அரசியல் நிலையை எடுத்துக்காட்டுகின்றார். அரையன் ஆதித்தன் வீமன் என்ற குறுநில மன்னனின் மகளே அக் குந்தவை என்று சொல்வர்.

ராஜராஜன் I தனது பாட்டன் அரிஞ்சயன் இறந்த இடத்தில் 'பள்ளிப்படை' என்ற சமாதிக் கோவிலைக் கட்டினான். 'ஆற்றூர்த் துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீ இராசராச தேவர் எங்கள் நகரத்தில் எடுப்பித்தருளின திரு அரிஞ்சகை ஈசுவரத்து மகா தேவர்' என்ற கல்வெட்டுச் செய்தியின்படி அப் பள்ளிப்படை வட ஆர்க்காடு மாவட்டம் மேற்பாடி என்ற ஊரில் அமைந்துள்ளது.

## பராந்தகன் II சுந்தரச் சோழன் (957-973)

பராந்தகன் II காலத்தில் சோழப் பேரரசின் மீட்சிக்கான தொடக்க நிலையைக் காணலாம். தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிய அளவில் கச்சிமாநகர் இவனுக்கு உரிமையாயிற்று. பின்பு காஞ்சியில் இவன் இறந்துபட்டான். பாண்டியன் வீரபாண்டியனை இவன் மகன் ஆதித்தன் II, 965-ல் கொன்றதால் முதற்பாண்டியப் பேரரசின் கடைசி மன்னனும் வீழ்ச்சியுற்றுப் போனான். இந்த முறையில் சோழப் பேரரசை மீட்கின்ற பெரும் பணியில் இரண்டு சாதனைகளைப் பராந்தகன் II ஆற்றினான்.

சோழர்களின் பேரரசுக்கான ஆர்வம் எத்தகைய அளவில் அவர்களுடைய அரசியலுக்கு அடிப்படையாக அமைந்து அதை விடாப்பிடியாக உந்தி நின்றது என்பது பராந்தகனுடைய ஆட்சியிலிருந்து தெரியவரும். பராந்தகன் II தந்தை அரிஞ்சயனின் ஆட்சிக் காலம் சில மாதங்களே என்றமைந்த பின்பு, இவனுடைய பதின்மூன்று ஆண்டுக்கால ஆட்சியில் பிற்காலச் சோழர்க்குரிய பரம்பரை மேம்பாடுகளான பிரம்மதேயம் வழங்கல், சமயப் பொறையுடையோடு புத்தமதம் போன்ற பிற சமயத்தவர்க்கு அரச ஆதரவு நல்குதல் போன்ற நற்செயல்கள் நடந்தேறின.

சோழப் பேரரசின் மீட்பும், நலம் பயக்கும் உள்நாட்டு அரசியலும் சுந்தரச் சோழனுடைய சாதனைகளாக அமைந்த போதிலும், இவனுடைய மூத்த மகன் யுவராஜா ஆதித்தன் II கொலையுண்டு போகுமளவிற்கு வாரிசுரிமைப்பூசல் அரண்மனைப் புரட்சியாக (Palace Revolution) இவனுடைய வாழ்நாளின் கடைசிக் காலத்தில் நடந்தது. தோற்றப் பொலிவின் காரணமாகச் சுந்தரச் சோழன் என்ற பெயர் பெற்ற இப் பராந்தகன் அரசர் குலத்தில் ஏற்பட்டுப்போன பிளவுகளை நினைந்து, மனமுடைந்தான்; இறந்த தன் மகனை நினைத்துருகிக் காஞ்சியில் உயிர் துறந்தான்.

## I. வெளிநாட்டுக் கொள்கை

965-ல் பாண்டியரை அடக்கிய நிலையில் பாண்டிய நாட்டின் அரசியலைச் சுந்தரச் சோழன் நேரடியாக நடத்த முடியாமற் போனாலும் பாண்டிய மன்னன் வீரபாண்டியன் சோழன் மகன் ஆதித்தன் கையில் தன் தலை இழந்துபோனது ஒரு முக்கியமான அரசியல் திருப்பத்தைத்தான் கொண்டுவந்தது. தொண்டை மண்டலத்தின் மீட்புக்கான ராஜதந்திரப் போர் (war by diplomacy) இவனுடைய பெரிய தந்தை கண்டராதித்தியன், தந்தை அரிஞ்சயன் காலங்களில் நன்கு நடந்தேறியது சோழர்களின் படைக்கல வலிமையின்மைக்குச் சான்றாக நின்ற தொண்டை மண்டலத்தை மீட்பதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் எல்லாம் சுந்தரச் சோழன் காலத்தில் பயன் அளிக்கத் தொடங்கின. 966-ல் ராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணன் III இறந்துபட்டான். ஆனாலும் 963-லிருந்து தொண்டை மண்டலத்தில் இப் பராந்தகனின் ஆட்சிக்குரிய கல்வெட்டுச் சான்றுகள் காணப்படுகின்றன. இச் சான்றுகள் சுந்தரச் சோழனுடைய படைகள் சிறுகச்சிறுக தொண்டை நாட்டை நாளடைவில் மீட்டு வந்தன என்பதைச் சுட்டிக்காட்டுகின்றன.

முதற்சோழன் விஜயாலயன் உருவாக்கஞ்செய்த சோழப் பேரரசின் உயிர்ப்பிடிப்பு அவனுக்குப் பின்வந்த சோழர்கள் மேற்கொள்ள வேண்டிய இராணுவத்திறனில்தான் அமைந்திருந்தது என்ற உண்மையை அறிவுப்பூர்வமாக உணர்ந்தவன் இப் பராந்தகச் சோழன் ஆவான். ஆகவே, அத்தகைய உணர் வூட்டம் பெற்ற படையாற்றலோடு, தனக்கென அமைந்த கொடும்பாளூர் வேளிர் போன்ற குறுநில மன்னர்களின் துணைக் கொண்டு தக்கோலப் போருக்குப் பின்பு கைநழுவிச் சென்றுவிட்ட தொண்டை மண்டலத்தைச் சுந்தரச் சோழன் மீட்டிருக்க வேண்டும்; பாண்டியரைத் தன்னுட்சி உரிமையற்றவர்களாக அரசியல் வெறுமையுடன் கிடத்துகின்ற அரசியற்போராட்டத்தில் இத்தகைய இராணுவ வலிமைதான் பராந்தகனுக்கு உதவியது. இவ்விரண்டு சாதனைகளுக்கு வழிகாட்டிய இராணுவப் போக்கைப் பெரும் அளவிற்குக் கைக்கொண்ட ராஜராஜன் I (985—1014) சோழப் பேரரசின் அடிப்படைகளை அதே வகையான இராணுவ வலிமையைக் கொண்டே அவனுடைய ஆட்சிக் காலத்திலேயே உருவாக்கிக் காட்டினன். இத்தகைய இராணுவ மயமான அரசியல் நேர் உணர் பார்வையைத் (political perspective with accent militarism) தன் இளைய மகன் ராஜராஜனுக்கு அனுபவ முறையில் வரலாற்றுப் பாரம்பரியமாக விட்டுச் சென்ற பெருமை இப் பராந்தகனைச் சேரும்.

## 1. பாண்டியரோடு போர்கள்

'மதுரை கொண்ட கோராசகேசரி வர்மன்' என்றும், 'பாண்டியனைச் சுரம் இறக்கிய பெருமான் ஸ்ரீ சுந்தரச் சோழத் தேவர்' என்றும் காணப்படும் பராந்தகச் சோழனுடைய பட்டங்கள் பாண்டியரின் இராணுவ வீழ்ச்சியைக் காட்டுகின்றன. மாறவர்மன் ராஜசிம்மன் (905—920) என்ற பாண்டியனின் மகன் வீரபாண்டியன் (946—966) என்பவன் 919-ல் நடந்த வெள்ளூர்ப் போருக்குப் பின்பு பாண்டிய நாட்டில் நிலவிய குழப்பமான அரசியலைச் சீர்படுத்தி, 946-ல் மதுரையில் அரியணை ஏறினன். வீரபாண்டியன் தனது ஆட்சிக் காலமான 20 ஆண்டுகளிலும் சோழரோடு மனம் வேறுபட்டு நின்றுன். சோழர்க்குரிய கப்பம் கட்டுவதைக் கண்டராதித்தியன் (950—957) காலத்திலேயே நிறுத்திவிட்ட பாண்டியனுடைய சுயேச்சையான அரசியல் போக்கு சோழப் பேரரசுக்கு இடப்பட்ட இராணுவச் சவாலாகவும் அரசியல் ஆபத்தாகவும் காணப்பட்டது

இச் சூழ்நிலையின் விளைவாகத்தான் சுந்தரச் சோழனுடைய பாண்டியப் படையெழுச்சி நடைபெற்றது. 962-ல் நடந்த சேவூர்ப்

போரில் பாண்டியன் வீரபாண்டியன் தோல்வியுற்ருன். சுந்தரச் சோழனுடைய தலைமகன் ஆதித்தன் II போர்க்களத்தில் காட்டிய இளந்துடிப்பு வீரத்தின் காரணமாகத்தான் இப்போர் சோழர்க் குரிய பெரும் வெற்றியாக மலர்ந்தது. இவ்விளவரசனுக்குத் துணை நின்ற ஏனைய குறுநில மன்னர்களான கொடும்பாளூர் பூதி விக்கிரம கேசரி, தொண்டை நாடு பார்த்தியேந்திர வர்மன் ஆகியோரும் தங்களுடைய கல்வெட்டுகளில் வீரபாண்டியனைத் தோல்வியுறச் செய்ததைத் தங்களுடைய தனிப்பட்ட போராற்றலுக்கு வாய்த்த பெருமை எனச் சொல்லிக்கொள்கின்றனர். வீரபாண்டியன் தனது அரசியல் சுதந்தரத்தைப் பாதுகாத்துக்கொள்ளத் தனி மையில் போராடவில்லை. இவனுடைய வேண்டுகோளுக்கு ஏற்ப ஈழநாட்டு மன்னன் மகிந்தன் IV (956—972) தன்னுடைய சேனாதிபதி 'சேன' தலைமையில் சிங்களப் போர்ப்படை ஒன்றைப் பாண்டியனுக்குத் துணை செய்ய அனுப்பி வைத்தான். இவ்வாறு வந்த இருநாட்டுப் படைகளையும் சோழர்படை வென்றது. புதுக் கோட்டையின் சேவளி மலைப்பக்கமுள்ள செவ்வூர்ப்போரில் இப் பாண்டியனுக்கு ஏற்பட்ட தோல்வியை அச் சிங்களவரும் பங் கிட்டுத் துயர் உற்றனர். கரந்தைச் செப்பேடுகள் கூறுவது போல, தோல்வியுற்ற பாண்டியன் காயத்ரி மலையினுள் சென்று ஒளிந் தான். அதை ஒட்டியே, 'பாண்டியனைச் சுரம் (காட்டுக்குள்) இறக்கின சுந்தரச் சோழன்' என்ற பட்டம் பராந்தகனுக்கு உரிய தாயிற்று.

இலங்கையாளர் வீரபாண்டியனுக்குத் துணையாக வந்தது சோழ வரலாற்றில் இனித்தொடர்ந்து வரப்போகின்ற ஈழத்தாரின் தமிழக அரசியல் பிரவேசத்திற்குக் கட்டியங்கூறியது. பேரரசுப் பெருமிதத்தில் வீறுகொண்டு நின்ற சுந்தரச்சோழன் ஈழத்தாரைத் தண்டிக்க எண்ணிச் செவ்வூர்ப்போரில் சிறந்த முறையில் போரிட்ட கொடும்பாளூர் சிறிய வேளான் தலைமையில் சோழர் படையை ஈழநாட்டுக்கு அனுப்பினான். ஈழத்தின் புத்தமதச் சார் பான வரலாற்று நூலான மகாவம்சம் கூறுவது போல, இச் சோழர் படை ஈழமண்ணில் நடந்த போரில் தோல்வியுற்றது. சிறிய வேளான் போரில் மடிந்து போனான். இது சுந்தரச்சோழனுக்கு ஈழத்தைப் பொறுத்தவரை ஏற்பட்ட முதலாவது தோல்வி.

962-ல் நடந்த செவ்வூர்ப் போருக்குப் பின்பு 965-ல் வீர பாண்டியன் திரும்பவும் தன் தலைநகரம் சென்றமர்ந்தான். கேரளத்தாய் வயிற்றில் பிறந்தவன் என்ற முறையில் 'வீர கேரளன்' என்றமைந்த தனது அரசிருக்கையில் அமர்ந்து தமிழ்க் கூடல் என்ற மதுரையிலிருந்து தமிழ்ப் பேரரையன் என்ற அமைச்

சனின் உதவியோடு தனது ஆட்சியைத் திரும்பவும் அவன் தொடங்கினான். சோழர்களோடு போராடுவது என்பது அவனுக்குப் புதிய அனுபவம் அல்ல. பாண்டியர்—சோழர் மோதுதலில் இன்னார் என இதுவரை கணிக்கப்பெறாத ஒரு சோழ இளவரசனை இவ் வீரபாண்டியன் கொன்று வெற்றி பெற்றதை யொட்டி 'சோழர் தலைகொண்ட' என்ற பட்டத்தை 947-லிருந்து அல்லது 953-லிருந்து இவன் புனைந்துகொண்டிருந்தான். 966-ல் இவனுக்கும் சோழர் படையினருக்கும் ஏற்பட்ட போரில் ஆதித்த கரிகாலன் இவனைத் தோற்கடித்து, இவனுடைய தலையைக் கொய்து, சோழர் தலைநகரம் எடுத்துக்கொண்டு போனான் எனத் திருவாலங்காடு செப்பேடுகள் உரைக்கின்றன.

இவ் வெற்றியின் காரணமாக ஆதித்த சோழன் 'யுவராஜா' என்ற பட்டம் பெற்று, சுந்தரச் சோழனுக்குரிய வாரிசாக நியமிக்கப் பட்டதன் காரணமாக, அரச குலத்தில் பிளவு ஏற்பட்டது பின்பு 967-ல் நடந்த அரசியல் கொலைக்கு இந்த ஆதித்த சோழன் ஆளாகிப் போனான். இந்த அளவில் பாண்டிய நாட் டோடு சோழர்கள் மேற்கொண்ட போர்கள் சோழர் குலத்தை மனத்தளவில் பாதித்து நின்றன.

## 2. பாண்டியனைத் 'தலைகொண்ட' சோழன்—ஒரு விளக்கம்

'தலைகொண்ட' என்ற தொடர் ஒரு மன்னன் மாற்றானின் தலையைக் கொய்வதைக் குறிக்கும் என்பர். இது ஆராய்ச்சிக் குரியது. பேராசிரியர் அவர்கள் குறிப்பிடுவது போல, 'தலை கொண்ட' என்பது மாற்றானின் தாழ்மைக்கு அடையாளமாக அவன் தலைமேல் ஒரு மன்னன் தன் கால் பாதம் வைத்து எடுத்தல் என்றுங்கொள்ளலாம். விஜய நகரத்தரசன் கிருஷ்ண தேவராயர் தான் ஆயத்தமாகக் கொண்ட படையெழுச்சியை நிறுத்த வேண்டுமானால், பிஜப்பூர் அடில் ஷா சுல்தான் தன் கால்களை முத்தமிட வேண்டும் என்று நியதி உரைத்த செய்தி இதற்கு மேற்கோளாகக் காட்டப்படுகிறது. சோழர்களின் வாழ்க்கை முறைகளை விவரிக்கின்ற 'குரு பரம்பரை' என்ற நூல் எவ்வாறு சாமந்தன் என்ற அந்தஸ்துடைய ஒரு குறுநில மன்னன் பட்டத்து யானையின் பக்கம் உட்கார்ந்துகொள்ள அவன் தலையில் கால் வைத்துச் சோழப் பேரரசன் தன் யானைமேல் அமர்வான் எனக் கூறுகிறது. இந்த வழக்காறுகளை வைத்துப் பார்த்தால், 'தலைகொண்ட' என்பதற்குத் தலைமேல் கால் பாதம் வைத்தல் என்ற பொருள் கொள்ளலாம்.

பாண்டியர்—சோழர் பகை பாண்டியர்களுக்கு வாழ்வு—சாவுப் போராட்டமாகத் தொடர்ந்தது. சோழ—பாண்டிய மன்னர்களின்

அழிவில்தான் அப் போராட்டம் தீர்ந்தாக வேண்டுமென்ற அரசியற்சூழ்நிலை பல காலம் தென்னக அரசியலில் நிலவி நின்றது. இந்த நிலைமை சோழர்—பாண்டியர் போர்களினூடே கிளைத்து எழுந்து இரு சாராரையும் பலகாலம் வருத்தி நின்றது. இச் சூழ்நிலையில்தான் 'சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்' என்ற பட்டத்தை ஒரு சோழ இளவரசனைப் போரில் கொன்றதையோ, தலைமேல் கால்வைத்து எடுத்து ஆட்கொண்டதையோ காரணமாக வைத்து வீரபாண்டியன் பெருமையோடு சூடிக்கொண்டான். இது எப்போது? 953-லிருந்து 965 வரை பன்னிரண்டு ஆண்டுகள் இப் பட்டத்தை அவன் அனுபவித்தான். பின்பு 'வீரபாண்டியன் தலைகொண்ட சோழன்' என்ற பட்டத்தை ஆதித்த சோழனுக்குரியதாக ஆக்குகின்ற முறையில், சோழ இளவரசன் கையில் 965-ல் அப் பாண்டியன் இறந்து படுகின்றான்.

கி. பி. 965-க்கு முன்புள்ள பன்னிரண்டு ஆண்டுகளைத் தள்ளிப் பார்த்தால் கிடைக்கின்ற ஆண்டு கி. பி. 953 ஆகும். பிற்காலச் சோழர்—பாண்டியர் போர்கள் எல்லாம் சோழர்களால் வலிந்து மேற்கொள்ளப்பட்டுப்பேரரசுத் தத்துவத்திற்காக நடத்தப் பட்டவை என்பவை மறக்க முடியாத வரலாற்று உண்மையாகும். 953-ல் சோழர்கள் பாண்டியர்மேல் போர் தொடுத்திருக்க முடியாது. 949-ல் நேரிட்ட தக்கோலப் போர் கொண்டுவந்த அவலத்தின் பிடிப்பில் உழன்று கிடந்த சோழர்குலம் அவ்வளவு குறுகிய காலத்தில் பாண்டியரோடு போர்புரியத்தக்க அளவில் தங்கள் படையையும் மனத்தையும் தேற்றிக்கொண்டார்கள் எனச் சொல்வதற்கில்லை.[2] ஆகவே, 953 அல்லது 954-ல் நடந்திருக்க வேண்டிய வெற்றியை முன்னிட்டுச் 'சோழன் தலைகொண்ட வீர பாண்டியன்' என்ற பட்டம் அவனுக்கு வந்திருக்க முடியாது.

ஆதித்த சோழன் யுவராஜா ஆனது 965-ல்தான். இப் பட்டம் பெற்ற இரண்டாமாண்டுக்குரிய இவனுடைய கல்வெட்டில் 'வீரபாண்டியன் தலைகொண்ட' என்ற விருது இச்சோழனுக்குரியதாக வருகிறது. பன்னிரண்டு ஆண்டுகள் பின்னடைந்து சென்றால் 953தான் என்றமைகிறது. பார்த்தியேந்திர வர்மன் என்றழைக்கப் பெற்றவனும், ஆதித்த சோழனும் ஒருவனே என்று அமைதி சொன்னால், 944-ல் அல்லது 955-ல் நடந்த போரில் வீரபாண்டியன் இப் பட்டத்தை மேற்கொண்டான் எனக் கொள்ளலாம் எனவும், ஆனால் அவ்வாறு கொள்ள இயலாது எனவும் பேராசிரியர் சாஸ்திரி கூறுகிறார்.[3]

[2] K. A. N. Sastri—op. cit., p. 165
[3] K. A. N. Sastri—op. cit., p. 165

பேராசிரியர் சாஸ்திரியின் ‘சோழர்கள்’ என்ற நூல் வெளியான ஐந்தாண்டுகள் கழித்து 1960-ல் கண்டெடுக்கப்பட்ட சிவகாசிச் செப்பேடுகளில் ‘சோழன் தலை கொண்ட வீரபாண்டியன்’ என்ற பட்டம் பாண்டியனுக்குக் காணப் பெறவில்லை.[4] (சிவகாசிச் செப்பேடுகள் 946-ல் அரச பதவிக்கு வந்த வீரபாண்டியனால் அவன் பதவிக்கு வந்த மூன்றாவது ஆண்டில் வெளியிடப்பட்டன).

இந்த அளவில் 935-ல்தான் சோழர்கள் வீரபாண்டியனோடு மோதி நின்றதன் காரணமாகப் பாண்டியனுக்குச் ‘சோழன் தலை கொண்ட வீரபாண்டியன்’ என்ற பட்டம் கிடைத்திருக்க வேண்டும் என்று திரு. T. V. S. பண்டாரத்தாரின் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாகும். 965 அல்லது 966-ல் ஆதித்த சோழன் இவனைப் போரில் கொன்றதிலிருந்து முடிவடைகின்ற பாண்டிய முதற்பேரரசின் வாழ்வு முற்றிலும் அற்றுப் போகவில்லை. அது விடுதலைக் கனலாக நீடித்து, சுந்தரச் சோழன் கட்டிய இதே சோழப் பேரரசை 1205-ஆம் ஆண்டிலிருந்து அழிக்கின்ற இரண்டாவது பாண்டியப் பேரரசாக உருவாக்கம் பெற்றது. ஆனாலும், இனி வருகின்ற முன்னூறு ஆண்டுகளுக்கு இப் பாண்டியர்கள் சோழப் பேரரசோடு மோதி மருகுகின்ற வலிமையற்ற ஆட்சியாளர்களாக மாற்றப்பட்டுப் போன வரலாற்றுத் திருப்பமான நிகழ்ச்சி சுந்தரச்சோழன் காலத்தில்தான் நிகழ்ந்தது. இச் சுந்தரச் சோழனுடைய மகன் ராஜராஜன் I காலத்தில் பாண்டிய நாடு வென்றடிப்படுத்தப்பட்டு ராஜராஜன் I மகன் ராஜேந்திரன் காலத்தில் அப் பாண்டியநாடு சோழரின் நேரடி ஆட்சிக்கு உட்பட்டுப்போன பின்பு 1190-ல் மேற்சொல்லப்பட்ட இரண்டாம் பேரரசாக வளர்ச்சி பெற்ற பின்புதான் மேற்சொன்னவாறு 1216-ல் சோழப் பேரரசை அழிக்கத் தலைப்பட்டு 1279-ல் பூரணமாக அழித்துத் தன்மயமாக்கி விடுகிறது. இத்தகைய முறையில் பாண்டியரைச் சோழரோடு நேரடியாக அரசியல் பூர்வமான பிணைப்புக்கு உட்படுத்தியவன் சுந்தரச் சோழனே ஆவான்.

## 3. தொண்டை மண்டலம்

தொண்டை நாட்டின் மீட்பு கௌரவப் பிரச்சினையாகச் சோழர் குலத்தை வருத்தி நின்றது. சுந்தரச் சோழனுடைய கல்வெட்டுச் சாசனங்கள் அவனுடைய ஆட்சிக் காலத்தின் ஐந்தாவது

4 Dr. K. V. Raman's—'Some Aspects of Pandian History in the Light of Recent Discoveries'—1972—University of Madras—p. 12

ஆண்டிலிருந்து தொண்டை மண்டலத்தில் காணப்படுகின்றன. 962-ல் வீரபாண்டியனோடு நடந்த செவ்வூர்ப் போரில் பெரும் ஆற்றலோடு சோழர்க்குத் துணைநின்று போரிட்ட தொண்டை நாட்டுக் குறுநில மன்னனாகச் சொல்லப்படும் பார்த்தியேந்திர வர்மன் என்பவனுடைய கல்வெட்டுகளும் ஆங்குக் கிடைத்திருக் கின்றன. மேலும் 'பொன் மாளிகையிற் துஞ்சின சுந்தரத் தேவர்' என்ற அடைமொழியின்படி, பராந்தக சுந்தரச் சோழன் கச்சிமாநகர் சென்று, தனது மூத்த மைந்தன் ஆதித்தன் 969-ல் தன் அண்ணன் மகன் உத்தமச் சோழனுடைய பகையின் காரண மாக அரசியல் கொலையுண்டு போனதை எண்ணி உள்ளம் வெதும்பி 973-ல் இறந்துபடுகின்றான். இவன் இவ்வாறு காஞ்சிக்குச் சென்று அமர்கின்ற அளவில் அந்த தொண்டை மண்டலம் இவனுக்குரியதாகப் போய்விட்ட செய்தியை நாம் மேற் சொன்ன கல்வெட்டுகளின் இருப்பிடங்களோடு இணைத்துப் பார்த்தால் தொண்டை மண்டலத்தைச் சோழர்க்கு உரியதாக மாற்றுகின்ற பெருமுயற்சியில் சுந்தரச் சோழன் வெற்றி பெற்றிருந் தான் எனக் கொள்ளல் வேண்டும்.

எந்தெந்த நிலைகளில் தொண்டை மண்டலத்தின் எந்தெந்தப் பகுதிகளை எந்தெந்தக் காலங்களில் மீட்டார்கள் என்பது தெளி வாகப் புலப்படுத்துவதற்கான தடயங்கள் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும், இங்கிலாந்தும் பிரான்சும் ஈடுபட்ட நூற்றாண்டுக் காலப் போரில் (1338—1453) பிரான்ஸ் நாடு தன்னை நாளடைவில் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து மீட்டுக் கொண்டது போல, தொண்டை நாடும் சிறுசிறு அளவில், பெரும் போர்களற்ற முறையில் சோழரின் கைக்கு மாறிக்கொண்டே வந்தது என்பது தெளிவு.

தொண்டை நாட்டைத் தனது பிரதிநிதிகளான வைதும்பர் களைக்கொண்டு ஆண்டு வந்த ராஷ்டிரகூடன் கிருஷ்ணன் III ஒன்பதாண்டுக் கால ஆயத்தம் செய்து 949-ல் தக்கோலப் போருக்கு வந்து, பின்பு அப் போரில் பெற்ற வெற்றியின் சுவையை அனுபவிக்கின்ற முறையில் பத்தாண்டுகள் வரைத் தமிழகத்தில் தன் இராணுவப் பாசறை (camp) அமைத்து திக்விஜயம் செய்து வந்தான். இவ்வாறு தொண்டை நாடெங்கும் அவன் கால்பாவி நின்றான். இவன் 966-ல் இறந்த பின்பு பதவிக்கு வந்த கோட்டிகா போன்ற ராஷ்டிரகூட மன்னர்கள் வலிமை இல்லாத வர்கள். ராஷ்டிரகூடர்களின் வமிசம் 973-ல் முற்றுப் பெற்று விடுகிறது. ஆகவே, 966-ல் கிருஷ்ணதேவன் இறந்த பின்பு நான்கு ஆண்டுகள் மேற்கொண்டு வாழ்ந்த சுந்தரச் சோழன்

காலத்தில் தொண்டை நாடு மீட்கப்பட்டது என்பது உண்மையாகும். ராஷ்டிரகூடரின் வலிமை குன்றிப் போனதால், தக்கோலப் போர் போன்ற பெரிய இராணுவ மோதல்கள் ஏற்பட வேண்டிய அவசியமில்லாமலேயே தொண்டை மண்டலத்தின் மீட்பு காலப் போக்கில் நடந்தேறி வந்தது எனக் கொள்ள வேண்டும்.

## II. உள்நாட்டு நிர்வாகம்

பதின்மூன்று ஆண்டுகளாக நடந்த சுந்தரச் சோழனுடைய ஆட்சியின் பொதுமைச் சிறப்பாகச் சோழ நாட்டில் நிலவிய அமைதியைக் கூறலாம். இருப்பினும், ராஜராஜன் I காலத்தில் காணப்படுகின்ற அளவிற்கு உள்நாட்டுப் பணிகள் இவன் ஆட்சிக் காலத்தில் நடைபெறவில்லை. அதற்குரிய அறிகுறிகூட முன்னேற்டமாகக் காணப்படவில்லை. பராந்தகச் சோழனுக்குப் பின்வந்த நாற்பதாண்டுக் கால ஒளியற்ற சோழ வரலாற்றுப் பகுதியைச் சார்ந்த சுந்தரச் சோழனுடைய ஆட்சியில் பாண்டியர் போன்றோரின் சுயேச்சையான போக்கினை அடக்குகின்ற பெரு முயற்சியில் சோழ நாட்டினுடைய சக்தி முழுவதும் செலவழிந்து போயிற்று.

**1. போரும் பொதுப்பணியும் :** பேரரசு நிறுவப்பட மாமன்னர்கள் தொடுக்கின்ற வல்லடிப் போர்களின் பயன்களாகப் புதிதாகக் கவரப்பட்ட நிலப்பகுதியின் நில வருவாய் அல்லது போரில் கவரப்படும் பொருள் (spoils) அல்லது வெல்லப்பட்ட அரசனின் கப்பப்பணம் முதலியவை கிடைக்கலாம். இந்த முறையில் பேரரசுக்கான வல்லடிப் போர்களைப் பயனற்றவை எனச் சொல்லிவிட முடியாது. ராஜராஜன் காலந்தொட்டு நடந்த சோழப் பேரரசுப் போர்கள் எல்லாம் வெறும் செலவைமட்டும் கொடுத்தவை அல்ல; வருவாயும் உண்டென்பதற்குத் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வழங்கப்பட்ட பெருநிதியமான 222 கிலோ எடைத் தங்கமே சாட்சி. ஆனால், சுந்தரச் சோழனுடைய பாண்டிய நாட்டுப் போர் எந்த வருவாயையும் அவனுக்குக் கொண்டுவரவில்லை. ஆகவே, உள்நாட்டுப் பணிகளுக்கு எனச் செல்ல வேண்டிய சோழ நாட்டின் தன்னிறைவு வளங்கள் எல்லாம் மண்ணில் கொட்டிய பாலென பாண்டியப் போர்களின் பொருளாதார வெறுமையில் தேய்ந்த பின்பு அப் போர்களில் சுந்தரச் சோழனும் மற்றையோரும் காட்டிய வீரப்பு வெம்மையில் தீய்ந்தன. ஆனாலும், சோழ மன்னர்களின் பொது இயல்புகளுக்கு உகந்த முறையில் சுந்தரச் சோழன் காலத்தில் 'சுந்தரச் சோழப் பேரேரி' என்ற ஒரு நீர்நிலை வட ஆர்க்காடு மாவட்டம் பிரம்மதேசத்தில் தோண்டப் பெற்றது.

**2. நகரம் நிறுவுதல்** : இவன் பெயரால் 'சுந்தரச் சோழபுரம்' என்ற நகர் புதுக்கோட்டை திருமயம் பகுதியில் கட்டப்பட்டது. ரஷ்ய நாட்டின் வல்லாட்சியாளன் மகாபீட்டர் போர் செய்துப் போராடி வென்ற பால்டிக் பகுதியில் 'செயின்ட் பீட்டர்ஸ்பர்க்' என்ற நகரத்தைத் தன் பெயரிலேயே நிர்ணயித்தது போலல்லாமல், சுந்தரச் சோழன் தனக்கு அடங்கி இருந்த புதுக்கோட்டைப் பகுதியில் இந் நகரம் எடுப்பித்தது இவனுக்குரிய முனைப்பாற்றலைக் காட்டும். முதற்சோழன் விஜயாலயன் குடி புகுந்த தஞ்சையம்பதியை விட்டுப் பழையாறையில் இவன் பெரு விருப்பத்தோடு தங்கியதன் காரணமாகப் பழையாறையின் பழம் பெயரான நந்திபுரம் என்றளவில் 'மேதகு நந்திபுரி மன்னர் சுந்தரச் சோழர்' என்று வீரசோழியப்பாடல்கள் இவனைச் சித்திரிக்கின்றன. கங்கை கொண்ட சோழபுரம் என்ற நகரங்கட்டுவதிலும், தஞ்சையைவிட்டுத் தலைநகரை அக் கங்காபுரிக்கு மாற்றிக்கொள்வதிலும் பிற்காலத்தில் பதவிக்கு வரும் ராஜேந்திரன் புதுமை ஏதும் செய்து விடவில்லை என்பதை நகரம் அமைத்தல், புதுத்தலைநகரம் புகுதல் போன்ற இரண்டு காரியங்களையும் முன்னமே ஆற்றிய சுந்தரச் சோழனுடைய வரலாற்றிலிருந்து தெரிந்துகொள்ளலாம். வடபுலத்துக் காசிக்குச் சென்று உயிர்விடுகின்ற இந்துசமய மனப்போக்கில் இவனும் தனது தனிப்பட்ட விருப்பத்தின் காரணமாகக் காஞ்சியைத் தேர்ந்தெடுத்து, அங்குள்ள பொன்னாலான தனது அரண்மனையில் அரச குலத்தின் பிளவை நினைந்து வடக்கிருக்கும் பாணியில் உயிர்விட்டான். இதிலிருந்து காஞ்சி இவனுடைய மற்றொரு தலைநகராக விளங்கியது புலப்படும்.

**3. சமயம்** : சோழரின் பாரம்பரியம்படி பிரம்பதேயங்கள் சுந்தரச் சோழனால் வழங்கப்பெற்றன. அநிருத்தியன் என்ற கல்விற்பெரிய அந்தணருக்கு இவன் 'கருணாகர மங்கலத்தை' ஏகபோக பிரம்மதேயமாக வழங்கி, அதையே அன்பில் செப்பேடுகளாக மனமுவந்து சாசனஞ்செய்தான். இச் செப்பேடுகளுடைய சமஸ்கிருத பகுதியை அணியலங்காரத்தோடு எழுதியவன் மாதவபட்டா என்ற சமஸ்கிருத பண்டிதன். அநிருத்தியன் சோழ அரசியலில் பெரும்பங்கு பெற்று, அந்தண அதிகாரிகளுக்கு மட்டும் வழங்கப்பட்ட 'பிரம்மாதி ராஜன்' என்ற விருதுடன் வாழ்ந்தான். இந் நிலையில் அந்தணர்க்கு உயர் பதவியைக் கொள்கை அளவில் வழங்கிய சுந்தரச் சோழனின் மனதைப் புண்படுத்துகின்ற நிலையில் இவனுடைய மூத்த மைந்தனை அரசியல் கொலைக்கு உள்ளாக்கக் காரணமாக இருந்த உத்தமச் சோழனுக்கு உதவி செய்தவர்கள் அநிருத்தியனைப் போன்ற இரண்டு பிரம்மாதிராஜாக்களும் அவர்களின் இரு சகோதரர்களுந்தான்.

தென் ஆற்காடு மாவட்டம் உலகபுரம் என்ற ஊரில் ஒரு புத்த விகாரம் எடுப்பிக்க இவன் உதவி செய்தான். அது 'சுந்தரச் சோழப் பெரும்பள்ளி' என இவன் பெயரிலேயே அழைக்கப் பெற்றது. இவனுடைய சமயப் பொறைவுடைமையை இது காட்டுகிறது. 'வீரசோழியம்' என்ற நூலுக்கான உரையில், இச் சோழனுக்கும் தென்னகத்தே நிலைநின்ற புத்தமதச் சங்கத்திற்கும் இடையே பரஸ்பர ஆதரவுடன் கூடிய நல்லிணக்கம் காணப்பெற்றிருந்த நிலை பற்றிய குறிப்பு வருகிறது. ராஜராஜன் காலத்தில் நாகப்பட்டினத்து புத்த விகாரத்திற்கான ஆணை மங்கல முற்றூட்டு வழங்கப் பெறுகின்ற அரசியல் நிகழ்ச்சியை ராஜராஜனுக்குரிய சொந்த சாதனையாகக் கொள்வர் சிலர். ஆனால், சோழ அரசுக்கும் புத்த மதத்திற்கும் உள்ள நல்லுறவை முதன்முதலில் யாவரும் அறியும்வண்ணம் ஒரு வகை அரசியல் ஒழுகலாறுகக் கைக்கொண்டவன் சுந்தரச் சோழன் என்பதால், அவனுடைய மகன் ராஜராஜன் தன் தந்தையைப் போல புத்தமதத்திற்கான நல்லுறவோடு அரசியலில் நடந்து கொண்டதில் வியப்பில்லை. உள்நாட்டில் புத்தமதத்தாரை எல்லா மக்களுக்கும் உரிய மன்னன் என்றளவில் சுந்தரச் சோழன் சமயப் பொறையோடு மதித்தான். பிற சமயத்தவரை மதிக்கின்ற அளவில் வெளிநாட்டுறவுக்கான மேம்பாட்டுக்காக ராஜராஜன் வெளிநாட்டுப் புத்தமதத்தாரைக் கௌரவித்தான். முந்தியது அரசியல் கலப்பற்றது என்பதால் தனிச்சிறப்பிற்கு உரியது எனலாம்.

## III. குடும்பம்

சேரமானின் மகள் பராந்தக தேவியம்மனும், மலையமானின் புதல்வி வானவன் மாதேவியும் இவனுடைய இரு மனைவியர் ஆவர். இவன் 973-ல் காஞ்சியில் உயிர்விட்ட பின்பு வானவன் மாதேவி உடன்கட்டை ஏறினாள். தீராத மனச்சுமை காரணமாக இவள் கணவன் இறந்தான். இவளுடைய மூத்த மகன் ஆதித்தன் 966-ல் இளவரசுப் பட்டம் கட்டிய நிலையில் 969-ல் அரசியல் கொலைக்கு ஆளாகிப் போனான். மற்றொரு மகன் அருண்மொழித் தேவன் என்ற ராஜராஜன் தந்தையைவிடப் பெருமை பெற்றான். அருண்மொழிக்குக் குந்தவை என்றொரு தமக்கையும் உண்டு. பாலூட்டும் தாய்மையில் இவனுடைய தாய் காணப்பட்ட அந் நிலையில் 'தலைமகற் பிரியத்தையல்' என்றளவில் வனப்பும் திண்மையும் கொண்டு சுந்தரனாக இலங்கிய தன் கணவனை நினைந்து 'சதி' என்ற தகனத்தீயில் விழுந்து தானும் இறக்கும் விரதத்தை மேற்கொண்டாள்.

இவள் சதிவிரதம் மேற்கொண்டபோது இவளுக்குக் குழவிப் பருவத்திலுள்ள மகவு ஒன்றுண்டு என்பது திருக்கோவிலூர்க் கல்வெட்டால் அறியப்படுகிறது. அது என்ன ஆனது என்றோ அதன் பெயர் யாது என்றோ தெரியவில்லை. இதிலிருந்து சுந்தரச் சோழனுக்கு ஆதித்தன், ராஜராஜன், குந்தவை என்ற மக்கள் தவிர, மற்றொரு மகவும் இருந்தது என்று ஊகிக்கப்படுகிறது.

சுந்தரச் சோழன் 973-ல் இறந்தபோது பால்மணம் மாருக் குழந்தையாக ராஜராஜன் இருந்திருப்பின், அவன் 985-ல் அதாவது தனது 22-வது வயதில் அரசபதவி ஏற்கின்ற அளவிற்குப் பக்குவம் இல்லை என்று (உத்தமச் சோழனை அரிஞ்சயன் ஒதுக்கியதைப் போல) நிராகரிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் மாருக, 985-ல் ராஜராஜன் பதவி பெற்றான். ஆகவே, வானவன் மாதேவி இறக்கும்போது இருந்த குழந்தை ராஜராஜன் இல்லை என்பது தெளிவு. தங்கள் தந்தைக்கும் தாய்க்கும் உரிய சிலைகளைத் தஞ்சைப் பெரிய கோவிலிலேயே எடுப்பித்து ராஜராஜனும் குந்தவையும் வழிபட்டார்கள். பிறர் பிணி அகற்றும் பணியிற் பற்பல அறக்கட்டளைகளைத் தாய் தந்தையர் பெயரில் ஆற்றிய இக் குந்தவை 'சுந்தரச் சோழ விண்ணகர் ஆதுரசாலை' என்றழைக்கப் பெற்ற மருத்துவமனையைத் தஞ்சையில் ஏற்படுத்தினான். சுந்தரச் சோழனுடைய மன்னுயிர் போற்றும் பொது நல உணர்ச்சியை ராஜராஜன் காலத்திய சோழ மக்கள் எந் நாளும் நினைவு கூறத்தக்க அளவில் ஒரு நிரந்தரமான பயன்பாடுள்ள ஞாபகச் சின்னமாக இந்த மருத்துவ நிலயம் மக்களிடையே உயிர்த்து நின்றது. சோழ அரசர் குலத்தாரின் 'முன்னோர் வழிபாடு' வெறும் செல்வச் செருக்கை விளம்பரம் செய்கின்றதாக அமையாமல் பள்ளிப்படைகளின் திருவிழாக்களில் அன்னதானம் என்ற பொதுப்பணி நடந்தேறியது. மருத்துவம் செய்யும் பொது நல நிறுவனம் என்றளவிலும் இப் பள்ளிப்படைகள் செயல் பட்டுச் சமுதாய நல மன்றமாக உருவெடுத்தன.

## உத்தமச்சோழன் (973—985)

பிற்காலச் சோழர்களுள் உத்தமச்சோழன் தனது அரசுரிமையைச் சோழ மன்னர் குடும்பத்திற்குள்ளேயே போராடிப் பெற்றவன். சோழன் கண்டராதித்தியனுடைய மகன் இவன். கண்டராதித்தியன் தன் தம்பி அரிஞ்சயனை யுவராஜாவாக்கித் தன் வாரிசாகச் செய்த அரசியல் பிழை பிற்காலத்தில் உத்தமச் சோழனை வாட்டிற்று. கண்டராதித்தியன் 957-ல் இறக்கும்போது

உத்தமச் சோழனுக்கு வயது பன்னிரண்டுதான். ஆகவே, அரிஞ்சயச் சோழன் பட்டத்திற்கு வந்தான். சில மாதங்களே ஆட்சி செய்துவிட்டு அவனும் இறந்துபடவே, உத்தமச்சோழன் சிறுவனுக இருந்த அக் காலத்தில் இளைய வழியினரில் மூத்த குமாரன் பராந்தகன் II சுந்தரச்சோழன் பட்டத்திற்கு வந்தான். இவன் தன்னுடைய மூத்த மைந்தன் ஆதித்தனுக்கு 966-ல் யுவராஜா பட்டம் கட்டியபோது உத்தமச்சோழனுக்கு 21 வயது ஆகிவிடுகிறது. 969-ல் ஆதித்த சோழன் அரசியல் கொலையுண்டு போகும்போது 24 வயதாகிவிட்ட உத்தமச்சோழனுக்கு மூன்று வயதில் கண்டராதித்தியன் என்ற மகன்கூட இருந்தான். உத்தமச் சோழன் ஆதித்த சோழனைக் கொல்வதற்குரிய நியாயத்தைக் கொண்டிருந்தான் எனலாம். என்ருலும், சோழரின் வரலாற்றில் இத்தகைய அவலம் நிகழ்வது இயல்பானது அல்ல.

சுந்தரச்சோழன் 'யுவராஜா' பட்டம் பெற்று பதவிக்கு வரவில்லை. அது போலவே, 969-ல் ஆதித்த சோழன் இறந்த பின்பு, 973-ல் காஞ்சியின் பொன் மாளிகையில் உயிர்விடும் வரை, சுந்தரச்சோழன் உத்தமச் சோழனுக்கு 'யுவராஜா' பட்டம் எதுவும் கட்டி வைக்கவும் இல்லை. 973-ல் சுந்தரச்சோழன் இறந்த பின்பு, அவன் மனைவியும் உடன்கட்டை ஏறுகின்ற மன நிலைக்கு ஆளானுள். தமையனை இழந்து, பின்பு தனது தந்தையையும் தாயையும் இழந்து, குந்தவை என்ற தனது தமக்கையின் வளர்ப்பில் ஆளான ராஜராஜன், உத்தமச்சோழனேடு தனிப்பட்ட முறையில் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டான். அதன்படி, உத்தமச்சோழன் தன் இச்சைப்படி அரசனுக அவன் இயற்கை எய்தும் வரை இருக்கலாம். அவனுக்குப் பின்புள்ள அரசுரிமை ராஜராஜனைச் சேர வைப்பதற்கு என 'யுவராஜா' பட்டம் ராஜராஜனுக்கு வழங்கப்பட்டது. உத்தமச் சோழன் இதன்படி நடக்க உறுதி செய்த அளவில், 973-ல் சோழப் பேரரசனுக அமர்ந்தான். ராஜராஜன் அரசியலிலிருந்து தான் ஒதுங்கிக்கொண்ட அளவில் தனது ஒன்றுவிட்ட சிற்றப்பாவைக் கண்காணித்துத் தனக்குரிய நல்ல காலத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தான். உத்தமச் சோழன் அவனிடம் பகைமை பாராட்டவில்லை.

## I. வெளிநாட்டுக் கொள்கை

பிறப்பினுல் தனக்கு என ஏற்பட்டுப் போன சோழ அரச உரிமையை இவ்வாறு கோபதாபச் சூழ்நிலையினூடே வேண்டிய அவசியத்தை உணர்ந்து செயல்பட்ட உத்தமச் சோழனுடைய வெளிநாட்டுக் கொள்கை ஏற்கெனவே அமைந்து போன

பேரரசின் நலன்களைப் பாதுகாக்க விழைந்து நின்றது. புற அமைதியின் காரணமாக எந்த வகையான போர்களும் இவன் ஆட்சிக் காலத்தில் ஏற்படவில்லை. பிற நாட்டுக்குப் படையெடுத்துச் செல்லக்கூடிய அளவில் உத்தமச் சோழன் தனது 25-வது வயது இளமைப் பிராயத்திலும் எழுச்சி கொண்டிருக்கவில்லை. எப்போதுமே முரண்பட்டு கிளர்ச்சி செய்கின்ற வழக்கங் கொண்ட பாண்டியர்களைப்பற்றிய அரசியல் சங்கடம் அப்போது காணப்படவில்லை. ஏனென்றால், அவர்கள் ஏக தலைவன் ஒருவன் இல்லாமல் சிதறிக் கிடந்தார்கள்.

தொண்டை நாட்டில் திருவண்ணாமலை, காஞ்சிபுரம் போன்ற இடங்களில் உத்தமச் சோழனுடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இச் சோழனுடைய 'பெருந்தனம்' என்ற உயர் வகை அதிகாரிகளின் கல்வெட்டுகளும், குறுநில மன்னர்களின் சாசனங்களும் கிடைக்கப் பெறுகின்றன. சுந்தரச் சோழன் காலத்தில் மீட்கப்பட்டுப் போன தொண்டை மண்டலத்தில் சோழப் பேரரசு திரும்பவும் ஆழமாக வேரூன்றி விட்டதைத்தான் இவை காட்டும். இக் கல்வெட்டுகளெல்லாம் கோவில்களுக்கும் மடங்களுக்கும் தானங்கள் செய்கின்ற நிகழ்ச்சிகளையோ, ஏரி குளங்களை வெட்டுதல் போன்ற பொதுப்பணிச் சேவைகளையோ பற்றித்தான் பேசுகின்றன. இதிலிருந்து அறியப்படும் உண்மை யாது? சோழர்களின் அரசியல் பிடிப்பு தொண்டை நாட்டில் ஏற்பட்டுப்போன பின்பு பொதுப்பணி, அறக்கட்டளைகள் போன்ற சமாதானக் காலத்திற்கு ஏற்ற நலன்கள் தாமாகவே தோன்றத் தொடங்கிய காலத்தில் உத்தமச் சோழனின் அரசாட்சி தற்செயலாக வந்து அமைந்தது அல்லது அவ்வாறு பொது நலன்கள் சிறக்கின்ற அளவில் அவனுடைய ஆட்சி, திறமையும் வலிமையும் பெற்று பொலிந்தது ஆகிய இரண்டு வகைகளில் இவன் ஆட்சிக்காலத்தைக் கணித்தால், இரண்டிலும் உண்மை உண்டு என்பதுதான் வரலாற்றுத் திறனாய்வு கூறுகின்ற செய்தியாகும்.

## II. உள்நாட்டு நிர்வாகம்

**1. நாணயங்கள் :** பிற்காலச் சோழர்கள் வெளியிட்ட நாணயங்களில் நமக்குத் தெரிய வருகின்ற தொன்மையான நாணயம் உத்தமச் சோழன் வெளியிட்டது ஆகும். அந் நாணயத்தை வைத்திருந்த சர் வால்ட்டர் எலியட் என்ற நாணய சம்பந்தமான வரலாற்றாசிரியரின் அபிப்பிராயப்படி, இந்தப் பொன் நாணயம் 60 அல்லது 70 அரிசி எடை இருக்கும். இது காணாமற் போய் விடுவதற்கு முன்பு வரையப்பட்ட இதைப்பற்றிய சித்திரிப்பு

உள்ள படத்தில் புலி உருவம் ஒன்று உட்கார்ந்திருக்க அதற்கு வலப்பக்கம் மீன் உருவம் காணப்படுகிறது. வடமொழியில் உத்தமச்சோழன் என்ற பெயர் நாணயத்தின் வட்ட விளிம்பு தொட்டு பொறிக்கப்பட்டுள்ளது. சோழர்களின் உள்நாட்டுப் பொருளாதாரத்திற்கு உதவுகின்ற அளவில் இத்தகைய தங்க நாணயங்கள் மக்களிடையே காணப்பட்டிருக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தை இப் பொற்காசின் வடிவம் பற்றி ஆராய்ந்தோர் சொல்லுவர்.

**2. அதிகாரிகள் :** பராந்தகன் I காலத்தில் கேரளத்திலிருந்து வந்த வெள்ளன குமரன் என்பான் ராஜாதித்தியன் என்ற சோழ யுவராஜாவிற்குத் தானைத்தலைவனாக இருந்தது போல, மைசூரின் கோலார்ப் பகுதியைச் சேர்ந்த அம்பலன் என்பவன் உத்தமச் சோழனுக்குப் படைத்தலைவனாக இருந்தான். இச் சோழனுக்கு விக்கிரமன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அதனால்தான் அம்பலன் என்ற அந்த அதிகாரி விக்கிரமச் சோழ மாராயன் என்ற பட்டத்தைப் பெற்றான். 985-ல் உத்தமச் சோழனின் இறப்புக்குப் பின்பு—ராஜராஜன் I அரச பட்டத்திற்கு வந்த பின்பு—ராஜராஜ மாராயனாக இவன் மாறிக்கொண்டான். இதிலிருந்து சோழரின் பொது ஆட்சி (Public Administration) பற்றிய ஒரு கோட்பாடு வெளிப்படுகிறது. அதாவது மன்னர்கள் மாறுவார்கள் ; ஆனால் அதிகாரிகள் தங்களுடைய விசுவாசத்தையும் சோழ அரசின் பொதுமை நிர்வாகத்திற்கு இயக்கு சக்தியாக அமைந்த சோழ மன்னனிடமே செலுத்தினார்கள். மன்னன் யாராகவும் இருக்கலாம். அம் மன்னர்களின் பெயர்களைத் தாங்கிய பட்டங்களை மேற்கொண்டு அந்த அதிகாரிகள் தங்கள் பணிகளைத் தொடர்ந்தார்கள்.

ஒரு மன்னன் போய் மற்றொரு மன்னன் பதவிக்கு வருகின்ற போது (அதிலும் எதிரும் புதிருமான உத்தமச் சோழனும் ராஜராஜனும் ஒருவர் போய் ஒருவராகப் பதவியில் அமர்ந்தபோது) தற்காலத்திய அமெரிக்க நாட்டு ஜனாதிபதியோடு அவருடைய அலுவலாளரும் பதவி நீங்கிக்கொள்வதைப் போலல்லாமல், சோழரின் அதிகாரிகள் தங்கள் கடமைகளைத் தொடர்ந்து செய்தார்கள். இதே போன்ற உயர் அதிகாரிகள்தான் ஆதித்த கரிகாலனைக் கொன்றார்கள் என்றளவில் அரசியலில் ஈடுபட்ட அவர்களை ராஜராஜன் தண்டித்தது உண்மைதான். ஆனாலும், சோழரின் பொது ஆட்சிக் கோட்பாட்டின்படி அதிகாரிகள் எந்த மன்னர் வந்தாலும் தங்கள் கடமையைச் செய்தார்கள். இப்போது அமெரிக்கா தவிர, மற்ற நாடுகளில் இருப்பது போலச்

சோழ அரசின் உயர் அதிகாரிகள், நாட்டில் நடைபெறும் அரசியல் மாற்றங்களுக்கு அப்பாற்பட்டு இருக்க முடியும் என அவர்தம் அரசர்களாலேயே நம்பப்பட்டார்கள் என்பது வரலாற்று உண்மை ஆகும்.

**3. பொதுப்பணி :** உத்தமச் சோழன் நேரடியாக ஈடுபட்ட பொதுப்பணி பற்றிய சாசனக் குறிப்புகள் காணக் கிடைக்க வில்லை. ஆகவே, அவனுடைய சேவை பற்றி எதுவும் சொல்வதற்கில்லை. ஆனால் இவனுடைய தாய் சோழர்குல வரலாற்றிலேயே பெருமளவிற்கு அறக்கட்டளைகளைச் செய்தவள். கண்டராதித்தியனின் இளைய மனைவியான இவளுக்கு ஏராளமான தனியுரிமையான சொத்துகள் இருந்திருக்க வேண்டும். பல சிவாலயங்களைக் கற்றளியாக இவள் மாற்றிக் கட்டினாள். இவளுடைய பேரார்வமான அறப்பணிகளுக்கு மேலாக உத்தமச் சோழன் எதுவும் செய்வதற்கில்லை என்ற நிலை ஏற்பட்டது. ஏனைய மன்னர்களான அரிஞ்சயன், சுந்தரச் சோழன், ராஜ ராஜன் ஆட்சிக் காலங்களில் காணப்படுகின்ற இவளுடைய அறக் கட்டளைகளோ மிக அதிகம். தன் மகனே சோழ அரசனாக வீற்றிருந்தபோது இவள் தனியொரு மன மலர்ச்சியில் இவ்வாறான அறப்பணிகளில் ஈடுபடத் தொடங்கியிருக்க வேண்டும்.

அம்பலன் விக்கிரமச் சோழ மாராயன் என்ற கோலார் வழிப் பிறப்பினனான உயர்தர அதிகாரி தனது அரசன் உத்தமச் சோழன் காலத்தில் திருச்சி மாவட்டம் கோவிந்தபுரத்தில் காணப் பட்ட சுண்ணும்புச் செங்கலாலானக் கோவிலைக் கற்றளியாக மாற்றிக் கட்டி, அச் சிவாலயத்தின் பெருமையை உயர்த்தினான் என்பது அவ்வூர்க் கல்வெட்டு சொல்லுகின்ற செய்தியாகும்.

## III. குடும்பம்

ஐந்து மனைவியரைப் பெற்ற உத்தமச் சோழனுடைய வாழ்வில் இவனுடைய தாய் செம்பியன் மாதேவிக்கு அளப்பரிய செல்வாக்கு இருந்தது. ராஜராஜன் காலத்தில் அவனுடைய தமக்கை குந்தவை தேவியாருக்கு இருந்த மதிப்பும் உத்தமச் சோழன் காலத்திலும் ஏனைய மன்னர்கள் ஆட்சியிலும் இவளுக்கு இருந்த அரசர்குல அருள்வாழ்வுச் செல்வாக்கும் ஒன்றையொன்று விஞ்சிக் காணப்பட்டன. 'ஸ்ரீ மதுராந்தக தேவரான உத்தமச் சோழத் தேவரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார்' என்ற மதிப்போடு இவளிடம் அரசியல் செல்வாக்கும் அருள் வாழ்வுப் பெருமிதமும் ஒருங்கே குடிகொண்டன. செம்பியன் மாதேவி என்னும் நாகப்பட்டினத்திற்கு அண்மையில் உள்ள

சதுர்வேதி மங்கலத்தில் இவளால் கட்டப்பட்ட சிவாலயத்திற்கு உத்தமச் சோழனுடைய ஐந்து மனைவியரும் தனித்தனியே நிவந்தங்கள் அளித்து, தங்களுடைய கணவனின் தாயை வழிபட்டுப் போற்றினர்.

உத்தமச் சோழன் அரசுரிமைக்காக ஆதித்த சோழனைக் கொலை புரிந்ததைப் பற்றிக் கூற வந்த பேராசிரியர் சமய வாழ்வின் நிறை நலங்கண்ட பெற்றோருக்கு வாய்த்த சிறுமைச் செயல் புரிந்த உத்தமச் சோழன் எனச் சொல்லுகிறார்கள். இத்தகைய முறையில் உத்தமச் சோழனுடைய தாய்தந்தையர் அறவாழ்வுப் பெருமையில் சிறந்தவராவர். உத்தமச் சோழனுடைய மகனும் இவ்விதமான அறவாழ்க்கையை மேற்கொள்ளும் வகையில் அறக் கட்டளைகளின் மேற்பார்வையாளனாகத்தான் காணப்பட்டான். அறப்பணிகளை மேற்கொள்ளுவது உத்தமச் சோழனுடைய குடும்பத்துப் பாரம்பரியம் (family tradition) எனக் கூறலாம்.

பதின்மூன்றாண்டுகள் ஆண்ட உத்தமச் சோழனுக்குரிய ஒரே மகன் மதுராந்தகன் கண்டராதித்தியன். இந்த மதுராந்த கனுக்குத்தான் நியாயமான முறையில் ராஜராஜனுக்குப் போன அரச பட்டம் வாய்த்திருக்க வேண்டும். ஆனால், உத்தமச் சோழனுக்கும் ராஜராஜனுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் விளைவாக அவனுக்கு அரசபதவி அமையவில்லை. ராஜராஜன் காலத்தில் சோழ அரசினரின் அறப்பணிகளைக் கண்காணிக்கின்ற உயர்தர அதிகாரியாக (Commissioner for Endowments) அவன் விளங்கினான். தனக்கென ஏற்பட்ட ஐந்து கண்காணிப்பாளர்கள் அடங்கிய ஒரு குழுவின் துணை கொண்டு சோழ நாட்டில் அப்போது ஏற்பட்ட கோவிலறம் என்ற பெருமை சான்ற மக்கள் இயக்கத்திற்கு நிர்வாகத் தலைமை ஏற்று, சிறப்பான பணிகளைச் செய்த பெருமை உத்தமச் சோழனுடைய மகன் மதுராந்தகனை வந்தடைந்தது.

## உத்தமச் சோழனும் ராஜராஜ சோழனும்

ராஜராஜ சோழன் (985—1014) அரச பதவி ஏற்பதற்கு முன்பு பதினாறு ஆண்டுகள் அதற்காகக் காத்திருந்தான் என்ற கருத்தும், அவனுடைய சிற்றப்பன் உத்தமச் சோழன் (973 985) ராஜராஜனுடைய தமையன் ஆதித்த கரிகாலனை அரசியல் முறையில் கொலை செய்தான் என்ற கருத்தும் வரலாற்று முறையில் ஆராயப் படல் வேண்டும். திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றாற் போலத் தனது சிற்றப்பனுக்கு எத்தனை ஆண்டுகள் அரசாள

வேண்டுமென்ற அவா இருக்கிறதோ அத்தனை ஆண்டுகள் அவன் சோழ மன்னனாக இருந்துவிட்டுப் போகட்டும் என்ற க்ஷத்திரிய எண்ணத்தின் காரணமாகத் தனக்குரிய அரசுரிமையை விட்டுக் கொடுத்தான் ராஜராஜ சோழன்.

## 1. எப்படிப்பட்ட சிற்றப்பன் ?

ராஜராஜனின் தமையன் ஆதித்த கரிகாலனைக் கொன்றவன் என்ற பழி உத்தமச் சோழனைச் சாரும் என்று வரலாற்று மூதறிஞர் நீலகண்ட சாஸ்திரியவர்கள் கூறுகிறார். இத்தகைய அரசியல் கொலையைச் செய்தவன் அரசனாக இருப்பதற்குரிய அளவிற்குச் சோழ நாட்டின் அரசியலும், குடிமக்கள் மனமும் குறுகிப் போய் நின்றிருக்கவில்லை. இத்தகைய கருத்தைத் தமிழறிஞர் திரு. சதாசிவப் பண்டாரத்தார் கூறுகிறார்.

## 2. இந்த உத்தமச் சோழன் யார் ?

கி.பி. 950 முதல் 957 வரை அரசாண்ட கண்டராதித்திய சோழனுடைய வாரிசு உத்தமச் சோழனாவான். 957-ல் கண்டராதித்தியன் காலமான போது உத்தமச் சோழனுக்குப் பிள்ளைப் பிராயந்தான். ஆகவே, சோழ மன்னர்களின் வரிசையில் ஐந்தாவது மன்னனாகக் கண்டராதித்தியனுடைய தம்பி அரிஞ்சயச் சோழன் (956 – 957) ஆட்சிக்கு வந்த ஓராண்டில் இறந்துபடவே, ஆறாவது சோழ மன்னனாக அரிஞ்சயச் சோழனுடைய மகனான இரண்டாம் பராந்தக சுந்தரச் சோழன் (957—973) அரியணை ஏறினான். இம் மன்னனுடைய மைந்தர்கள் இருவரில் மூத்தவன் இரண்டாம் ஆதித்த சோழன்; இளையவன் அருள்மொழித் தேவன் என்ற ராஜராஜ சோழன். இந் நிலையில் ஓராண்டு மட்டும் ஆட்சி செய்த உத்தமச் சோழனின் சிற்றப்பனான அரிஞ்சயச் சோழன் நீண்ட காலம் ஆண்டு அதன் பின்பு அவனுடைய ஆட்சி உரிமையைத் தன் மகனான சுந்தரச் சோழனுக்குக் கொடுத்திருந்தால் உத்தமச் சோழனுடைய உள்ளக் கிளர்ச்சிக்கு நியாயத்தின் பிடிப்பு ஏதும் இருந்திருக்க முடியாது. ஆனால், அரிஞ்சயச்சோழன் பதவியில் இருந்த காலமோ ஓராண்டுகூட இல்லை. அவன் மகன் சுந்தரச்சோழனாவது தனக்குரிய உரிமையை வழங்கி அருள்வான் என்ற உத்தமச் சோழனுடைய நம்பிக்கைக்கு இடையூறாக 966-ல் சுந்தரச்சோழன் தனது மூத்த மகன் ஆதித்த கரிகாலனை அவனுக்குரிய அடுத்த வாரிசு என்று முடிவு செய்து இளவரசுப் பட்டமும் கட்டினான். இந் நிலையில் 969-ல் முடி சூட்டப்பட்ட இளவரசன் சோழ நாட்டிற்குள்ளேயே உயிரிழந்து போகின்றான். இதையே பெரிய மன உறுத்தலாக எண்ணித் தந்தமை நிலையில்

உள்ள சுந்தரச் சோழன் நான்காண்டிற்குள் தஞ்சையிலிருந்து வடக்கே சென்று காஞ்சி மாநகரில் கட்டப்பட்டிருந்த பொன் மாளிகையில் அமர்ந்த நிலையில் அவனுடைய ஆவி பிரிகிறது. இதையே 'பொன்மாளிகை துஞ்சிய தேவர்' என்ற அடைமொழி கொண்டு சுந்தரச் சோழனைக் குறிப்பிட்டு அழைப்பர். சிற்றப்பன் மகனுக்கு மகனுன அரசியலைப் பொறுத்த மட்டில் வணக்கத்திற்கு உரிய இளவரசனுன ஆதித்த கரிகாலனை உண்மையிலேயே உத்தமச் சோழன் கொலை செய்தானு? அதற்குக் காரண மாக அமைந்தானு? வரலாற்று அறிஞர்களுக்குள் இதுபற்றி கருத்து வேறுபாடு உள்ளது.

### 3. கொலையுண்ட இளவரசன் எப்படிப்பட்டவன் ?

மூதறிஞர் நீலகண்ட சாஸ்திரியாரின் அபிப்பிராயத்தில் அவர் அளிக்கின்ற பல செய்திகளில் ஆதித்த கரிகாலனுடைய ஒப்பரிய குணநலன்களும் அதனுல் அவனுக்கு ஏற்பட்ட அரசியல் ஏற்றமும் தெரிய வருகின்றன. 962-ல் சேவூர்ப் போரில் பாண்டிய வேந்தன் வீரபாண்டியனை, இவ்விளவரசனின் தந்தை சுந்தரச்சோழன் எதிர்த்து வெற்றி பெற்ற போது ஒரு யானையின் மத்தகத்தில் ஏறி விளையாடிய அடலேறு போன்று இவ்விளவரசன் தன் வீரத்தைக் காட்டி நின்றுன் என்ற குறிப்பும், சேவூர்ப் போரில் வெற்றி பெற்றதன் காரணமாகப் 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள்' என்ற பட்டம் வந்தடைவதற்கான போராற்றலும் இவனையே சார்ந்தது. 966-ல் ஆதித்த கரிகாலன் தானே நேரடியாகச் சென்று வீரபாண்டியனை எதிர்த்து ஒழித்ததன் தொடர்ச்சியாக 'வீரபாண்டியனைத் தலை கொண்ட கோப்பரகேசரி வர்மன்' என்ற பட்டத்திற்கும் உரியவன் ஆனுன். அதே ஆண்டு இளவரசனுக இவன் முடிசூட்டப் பெற்றுன்.

பரந்தூர்க் கல்வெட்டு கூறுகின்றுற்போலத் தொண்டை மண்டலத்து அதிபதியாகவும், 'பார்த்த வேந்தரன்' என்ற புகழுக் குரிய பட்டத்திற்குரியவனுகவும் இவன் பெற்ற ஏற்றம் சோழ அரசியலுக்கு வலுவூட்டி நின்றது. இந் நிலையில்தான் 969 ல் இவன் இறந்துபடுகின்றுன். ஆக, இளவரசுப் பட்டம் பெறுவதற் குரிய தகுதியை, அரசாளுகின்ற மன்னன் மகன் என்ற அளவில் அல்லாமல் தனக்கென அமைந்த சொந்தத் திறமையின் காரண மாக, இவன் பெற்ற வளர்ச்சி இவனுடைய பெரிய பாட்டனுரின் மைந்தனுன உத்தமச் சோழனுக்குப் பெருமை ஊட்டி நின்றதில் ஆச்சரியமோ ஐயப்பாடோ இருக்க முடியாது.

உத்தமச் சோழனுடைய கொலைக் குற்றமானது அவனுக்கு முன் அரச பதவியிலிருந்த அனைத்து மன்னர்களின் நல்லியல்பு

களுக்கும் களங்கம் கற்பிக்கிறது. இத்தகைய களங்கத்தைச் சுமந்து நிற்கின்ற உத்தமச் சோழன் அத்தகைய மூதாதையர் வழி வந்தவன் என்ற பெருமைக்குரிய தகுதியை இழந்த வனுவான். இவ்வாறு பேராசிரியர் சாஸ்திரி அவசரத் தீர்ப்பு வழங்குகிருர். இந் நிலையில் உத்தமச் சோழனை ஒரு குற்றவாளியாகவே அவர் கருதுகிருர். உத்தமச் சோழனைக் குற்ற வாளியாகவே ராஜராஜன் கருதினுன் என்ற பேராசிரியரது கருத்து வலுவிழந்து வருகிறது. இதனை வலியுறுத்த இரண்டு செய்திகளை நாம் கூறலாம்: முதலாவதாக, உத்தமச் சோழனுடைய மகனை மதுராந்தக கண்டராதித்தியனை உயர்ந்த பதவியில் அமர்த்திய ராஜராஜ சோழனுக்குத் தன் தமையனுடைய இறப்புக்காகப் பழி வாங்கும் எண்ணம் இருந்திருக்க முடியாது. ராஜராஜன் தன் ஆட்சிச் சிறப்பில் கோவில்களுக்கு அளித்த முக்கியத்துவம் நமக்குத் தெரிந்த விஷயந்தான். குறைகள் மலிந்துபோன சில கோவில்களின் நிர்வாகத்தில் ஐவர் அடங்கிய குழுவின் உதவி யோடு நேரடியாகத் தலையிட்டு அந் நிர்வாகத்தைச் சீர்திருத்தம் செய்வதற்கு உரிய அதிகாரத்தை உத்தமச் சோழனுடைய மகனுக்கு ராஜராஜன் தன்னுடைய ஆட்சிப் பகுதி முழுவதற்கும் பரவலாக்கி அளித்த செய்தி அவ்விருவருக்குமிடையே இருந்த நல்லுறவையே காட்டுகிறது. இரண்டாவதாக, உத்தமச் சோழ னுடைய தாய் செம்பியன் மாதேவியார்க்கு அறக் கட்டளைகளையும் கோவில்களையும் ஏற்படுத்துகின்ற சுய அதிகாரத்தை ராஜராஜன் வழங்கியிருந்தான்; மேலும், 'ஸ்ரீ உத்தமச் சோழத் தேவரைத் திரு வயிறு வாய்த்த ஸ்ரீ செம்பியன் மாதேவி பிராட்டியார்' என்று உத்தமச் சோழனின் தாயைப்பற்றிக் கல்வெட்டுகளில் குறிப் பிடவும் செய்தான். இவ்வாறு மகனையும் தாயையும் ஊரும் உலகமும் போற்றுகின்ற அளவுக்குச் சமூகப் பொருளாதார அரசியல் அந்தஸ்தை அவ்விருவருக்கும் வழங்கி மகிழ்ந்தவன் ராஜராஜன் ஆவான். இவன் தன் தமையன் இறப்புக்காகப் பழி வாங்குவதற்குப் பதினுறு வருடங்கள் காத்திருந்தான் என்று சொல்வது பொருத்தமுடையதாகாது என்ற கருத்தும் திரு. பண்டாரத்தார் போன்ற சில அறிஞர்களிடையே காணப்பெறு கிறது.

## 4. பதினுறு ஆண்டுகளுக்குப் பிறகு நிகழ்ந்தது என்ன ?

ராஜராஜ சோழனுடைய ஆட்சி தொடங்கிய மறு ஆண்டில் இக் கொலையில் சம்பந்தப்பட்டவர்கள் தண்டிக்கப்பட்டார்கள் என்பதைக் காட்டுமன்னுர் கோவில் பக்கமுள்ள உடையார் குடியில் தென்பட்ட கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது. அவ்வாறு தண்டிக்கப்பட்டோர் பாண்டிய நாட்டில் அதிகாரியாக இருந்த பஞ்சவன் பிரமாதிராஜனும், அவனுடைய உடன்பிறந்தோரான

சோமன், இருமுடிச்சோழ பிரமாதிராசன், ரேவதாசகிராம வித்தன் என்போராவர். 'வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பர கேசரி வர்மன்' என்ற பட்டம் பெற்ற இளவரசனைக் கொல்வதில் பாண்டிய நாட்டில் அரசியல் அதிகாரியாக இருந்த பஞ்சவன் பிரமாதிராசனுக்கு ஏற்பட்டிருந்த பொறுப்பைக் கணிக்கின்ற போது, பாண்டியனுக்கு ஏற்பட்டுப்போன இழிவிற்குப் பழி வாங்கிய செயலாக அது இருந்திருக்கக்கூடும் என்ற கருத்து ஆராய்ச்சியாளரிடம் காணப்படுகிறது. தமிழறிஞர் T. V. சதா சிவப் பண்டாரத்தார் அவர்கள் பதினாறு வருடகாலம் தாழ்த்தி ஆதித்த இளவரசனின் கொலைக்கான தண்டனை வழங்கப்பெற்றி ருப்பதன் காரணம் அதுநாள்வரை குற்றவாளிகளைப் பற்றிய ஆதாரப் பூர்வமான புலன்கள் கிடைக்காமைதான் என்று கூறு கிறார். கொலையைப் பற்றிய புலன் துலங்காத காரணத்தால்தான் உத்தமச்சோழன் ராஜராஜன் வழங்கிய அரசநீதியைத் தானே தன் ஆட்சிக் காலத்தில் வழங்குவதற்குரிய வாய்ப்பிழந்து போனான் என்றும் அதே அறிஞர் கூறுகிறார்.

முடிவாக, அரசுரிமையானது அரச குடும்பத்தைச் சார்ந்த இரத்த உறவுள்ள இளவரசர்களுக்குச் செல்லுகின்ற நியதி சோழர் காலத்திற்குரியது. 'தந்தைக்குப்பின் தநயன்' என்ற வாரிசுரிமை சோழப் பரம்பரைக்கு ஒரு வளமையாக இருக்கவில்லை. எல்லா வகையிலும் ஏற்றம் பெற்று, பின்பு இளவரசுப் பட்டங்கூடப் பெற்று விட்ட ஆதித்த கரிகாலனுக்கு விரோதமான முறையில் உத்தமச் சோழன் வெஞ்சினமும் வெறுப்பும் கொண்டு இருந்தான் என்பதில் அரசியல் பூர்வமான நியாயம் இருந்திருக்க வாய்ப்பு இருக்கிறது. 1070-ல் அதிராஜேந்திரனுடைய இறப்பிற்குக் குலோத்துங்கன் I காரணமாக அமைந்தானென்றும், அதன் காரணமாக அரச பதவியை அடைந்தான் என்றும் வரலாற்றாசிரியர் சிலர் கூறுவர். வீழ்ந்துபட்ட ஆதித்த கரிகாலனின் அரசியல் வளர்ச்சியைப் பற்றி விரிவாகக் கூறுகின்ற செய்திகளில் அவனுக்கு மரணம் சம்பவித்த சூழ்நிலை, அது அமைந்த இடம், அங்குக் காணப்பட்ட மக்கள் ஆகியவை பற்றித் தகுந்த ஆதாரங்கள் காணப் படவில்லை.

முழு அளவில் செய்திகள் திரட்டப்பட்ட பின்பு அவற்றில் காணப்படும் உண்மையைத் தெளித்து எடுத்து, அதன் பின்புதான் இக் கொலைக் குற்றத்தை உத்தமச் சோழனுக்கு ஏற்றிச் சொல்ல முடியும். அரசுரிமை பெற இருக்கும் யுவராஜாவை எதிர்க்க உள் நாட்டிலேயே பகைவர்கள் காணப்பெறுகின்ற நிலை சோழ அரசியலில் அடிக்கடி நிகழாவிட்டாலும் அபூர்வமாக நிகழத்தான்

செய்தன. 1063-ல் யுவராஜாவாகப் பட்டஞ்சூட்டப்பெற்ற ராஜாதி ராஜன் II அவனுக்குரிய பலதுறைப் பகைவர்களிடமிருந்தும் பெருமானம்பி என்ற சோழ அமைச்சனுல் பாதுகாக்கப்பட்டான் என்பது பிற்காலச் செய்தியாகும். ஆதித்த சோழனுக்குரிய பகைவர்களாகச் சித்திரிக்கப்படுகின்றவர்கள் யாருமிலர். கொடிய நிகழ்ச்சிகளைக் குறிக்காமல் விடுகின்ற மங்கல முறை சோழர் காலத்தில் நடைமுறையில் இருந்ததால் உண்மையைச் சொல்லும் கல்வெட்டுக் குறிப்புகள் நமக்கு இதுவரை கிடைக்க வில்லை. ஆதித்த சோழனை உத்தமச் சோழன் கொன்ற பின்பு, அவன் அவ்வாறு அரசுரிமை பெற்ற நிலையை ராஜராஜன் ஒப்புக் கொண்டிருக்க வாய்ப்பு இல்லை. ராஜராஜனை உத்தமச் சோழன் தனக்குரிய அடுத்த போட்டியாளனுகவே கருதி இருப்பான். ஆனுலும் இருவரும் மோதிக் கொள்ளவில்லை.

## 5. உண்மை நிலை என்ன ?

ஆதித்த சோழன் கொலையுண்டு போன நிகழ்ச்சியைப் பற்றிய செய்திகள் முழுமையான அளவில் காணப் பெறவில்லை. ஆனுலும், ஆதித்தன் இறந்த பின்பு அவனுடைய தந்தை மகனுடைய பிரிவினுல் ஏற்பட்ட சோகம் தாளாது உயிர்விட்ட பின்பு இளைய மகன் ராஜராஜன் அரச பதவிக்கு வரவில்லை. கண்டராதித்தியன் மகன் உத்தமச் சோழனே அரசனுகின்றுன். பதவியிலிருக்கின்ற சோழ மன்னர்குல இளைய பரம்பரையின் வாரிசான ராஜராஜனுக்குப் போகவேண்டிய அரசபதவி உத்தமச் சோழனுக்குச் செல்கிறது. பதினுறு ஆண்டுகள் கழித்து உத்தமச் சோழனுடைய இறப்புக்குப் பின்பு அரசபதவி இளைய பரம்பரைக் குத் திரும்பிய நிலையில் ராஜராஜனுக்குக் கிடைக்கிறது. மூத்த வாரிசான கண்டராதித்திய மதுராந்தகன் உயர்அதிகாரியாக மாறிக்கொள்கிருன். மேற்சொன்ன பதினுறு ஆண்டுகளில் சோழ அரசியலில் ராஜராஜன் மேற்கொண்ட பணிகளைப் பற்றிய எந்தத் தகவலும் இல்லை. ஆகவே, பதவியில் இருந்த உத்தமச் சோழனை ராஜராஜன் ஆதரிக்கவும் இல்லை; எதிர்க்கவும் இல்லை. ஒப்பந்தப்படி உத்தமச் சோழனுக்குப் பின்பு அவனுக்குரிய பதவி தனக்குத்தான் என்று உறுதியான அளவில் அவனுக்குக் கிடைக் கின்ற வாய்ப்புத் தெளிவாகிப் போன தெம்பிலும், தன் மூத்தோரை இழந்த பரிதாபத்தில் பிறந்த வீராண்மையிலும் சோழ அரசியலை விட்டு ராஜராஜன் I ஒதுங்கி நின்றுன். ஆகவே, உத்தமச் சோழன் ஆதித்தன் கொலையுண்டு போக ஆவன செய்தான் என்பது புலப்படும்.

ராஜராஜன் I தனது கல்வெட்டில் 'ஸ்ரீ உத்தமச் சோழத் தேவரைத் திருவயிறு வாய்த்த' என்றபடி, அவனுடைய அன்னை

யைக் குறிப்பிடுகின்ற காரணத்தால் உத்தமச் சோழன் குற்ற மற்றவனுகத்தான் எண்ணப்பட்டான் என்று முடிவு செய்ய முடியாது. கொலைக் குற்றத்திற்கு மரண தண்டனை வழங்குகின்ற வழக்கம் சோழர் காலத்தில் அவ்வளவாகக் கிடையாது. குறிப்பாக, வேளாளர் அத் தண்டனையை அனுபவிப்பதற்கில்லை. கொலைக் குற்றம் இழைத்தவர்கள் தங்களுக்குரிய தண்டனையாகக் கோவிலில் நந்தா விளக்கை ஏற்றி வைத்தால் போதுமென்ற அளவில் நீதி நிர்வாகம் நிகழ்ந்த அக் காலத்தில் ஒரு சோழ மன்னன் (ராஜ ராஜன்) 'பெரிய தேவர்' என்ற இயல்பான கௌரவத்தோடு அழைக்கப் பெறுகின்ற முன்னுனையச் சோழனை (உத்தமச் சோழனை) அருளுணர்வின் சாயலில் மன்னித்த அளவில் அவ்வாறு குறித்திருக்கலாம். மேலும், மூத்த வழியில்தான் அரசுரிமை செல்ல வேண்டும் என்ற கோட்பாட்டைத் தனக்குச் சாதகமான நிலையில் வலியுறுத்துவதற்காகக் கொலைகூடச் செய்தான் என்ற அவப் பேற்றினை ஏற்றுக்கொள்ளத் துணிந்த உத்தமச் சோழன் அதே கோட்பாட்டின்படி தன் மகனைத் தனக்குப் பின்பு அரசனுக்க முனையவில்லை; மாருக, ராஜராஜனுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி அவனையே மன்னனுகப் பதவி ஏற்க அனுமதித்தான். இத்தகைய சான்ருண்மை ஒப்பந்தம் (Gentlemen's Agreement) உத்தமச் சோழனுடைய அரசியல் விவேகத்தைக் காட்டிற்று. இதனை ராஜராஜன் பாராட்டாமல் இருந்திருக்க முடியாது. ஆகவே, நல்லறஞ்செய்த செம்பியன் மாதேவியாரின் 'திருவயிறு வாய்த்த' என்ற பெருமை உத்தமச் சோழனுக்கு அளிக்கப் பெறுகிறது. இம் மங்கலச் சொல் முறையான சித்திரிப்பு உத்தமச் சோழனுடைய குற்றத்தை மறைத்துவிட முடியாது.

நானூறு ஆண்டுக் காலச் சோழ வரலாற்றில் அரசுரிமை வேட்பாளர்களாக விளங்கிய அரசகுல இளவல்கள் தங்களுக்குப் போட்டியாக வந்தவர்களைக் கொன்ற நிகழ்ச்சிகளின் எண்ணிக்கை மொத்தமே மூன்றுதான். உத்தமச் சோழன் ஆதித்த சோழனையும், குலோத்துங்கன் அதிராஜேந்திரனையும், ராஜேந்திரன் III ராஜராஜனையும் கொல்வதற்குக் காரணமாயினர் என்ற செய்திகளில் முதல் இரண்டையும் பேராசிரியர் சாஸ்திரி ஒப்புக்கொள்கிருர். மூன்ருவதைக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கிருஷ்ண சாஸ்திரி சொல்கிருர் (ARE 1912 II-32). பாண்டியரின் இரு பேரரசுக் காலங்களில் தாயாதிச் சண்டைகள் சர்வ சாதாரணமாக நிகழ்ந்தன. இதனைத் தவிர்ப்பதற்காகவே ஒன்றுக்கு மேற்பட்ட அரசர்கள் ஒரே சமயத்தில் நாட்டின் பல பாகங்களை ஆள்கின்ற ஆட்சி முறைமையை அரசியல் நுட்பத்தோடு

அவர்கள் ஏற்படுத்தி இருந்தார்கள். பல்லவர்கள் தங்களுக்குள் முதலிலேயே தாயாதிச் சண்டையில் திளைத்துநெளிந்து வரலாற்றுப் பாதையில் ஊர்ந்து சென்றார்கள். பாண்டியன் ராஜசிம்மன் I பரமேஸ்வர வர்மன் II பல்லவனின் மகன் சித்ரமாயனைப் பல்லவ அரியணையில் அமர்த்த வேண்டி, தொடங்கிய போரில் நந்தி வர்மன் II பல்லவ மன்னனைக் கும்பகோணம் பக்கமுள்ள நந்திக் கிராமத்தில் முற்றுகையிட்டபோது, நந்திவர்மனின் ஆதரவாளப் படைத் தளபதி உதயச் சந்திரனால் அம் மன்னன் மீட்கப்பட்ட போது, சித்ரமாயன் சிரச்சேதம் செய்யப்பட்டான். இவ்வாறு பாண்டியர்—பல்லவர் நாள்களில் அரச குலத்தாருள் அரசுரிமைப் போர் நிகழ்ந்ததுண்டு. ஆனால், சோழர்களுக்குள் அரசுரிமைப் பூசல் அரண்மனைப் புரட்சியாக மட்டும் (Palace Revolution) நடந்தது. முன்பு சொன்னபடி மூன்று இளவரசர்கள் கொல்லப் பட்டார்கள். புதிய அரசர்கள் பதவிக்கு வந்தார்கள்.

மேற்சொன்ன காரணங்கள் உத்தமச் சோழன் ஆதித்தனைக் கொலை செய்து சோழ ஆட்சியுரிமையைக் கைப்பற்றி இருக்க முடியும் என்ற செய்தி அந் நாளைய அரசியலுக்கு முற்றிலும் ஒவ்வாத முறையில் அமைந்திருக்கவில்லை என்பது புலனாகும். ஆகவே, உத்தமச் சோழன் ஓர் அரசியல் கொலையை நிகழ்த்திய பின்புதான் சோழ அரசுரிமையைக் கைக்கொண்டான் என்று அமைகிற முடிவு சோழ அரசியல் ஒழுகலாற்றுக்கு முரண் பட்டதாக அமையாது. அறவுணர்வு கொண்ட பெற்றோருக்குப் பிறந்தவரை அப்படி அரசியல் கொலை செய்திருப்பான் என்ற வியப்புக்கு அரசியலுலகில் இடமில்லை. மகதப் பேரரசைக் காட்டிய அஜாதசத்ருவைத் தன்னுடைய தந்தையையே கொலை செய்யத் தூண்டியவன் யார்? அகிம்சாமூர்த்தியான புத்தருடைய தாயாதியான (cousin) தேவதத்தன்தான் அதைச் செய்தான்.[5] குடும்பத்தின் பாரம்பரியத்தைக் கொண்டு தனி மனிதனுடைய அரசியல் நோக்கங்களைக் (political motives) கணிப்பதில் பயன் இல்லை எனலாம். ஆகவே, உத்தமச் சோழன் தன்னுடைய அரசியலுரிமையைப் பற்றித் தனக்கென அமைந்த நியாயங்களின் பகைப்புலனில் சிந்தித்த அளவில் அறிவு மங்கித் தன்னிலை இழந்து (indiscretion) ஆதித்தனைத் தன்வழியிலிருந்து அப்புறப்படுத் தினான் என்றும், அக் கால அரசியலுக்குரிய அசாதாரணமான நிகழ்ச்சியாக அது காணப்படுகிறது என்றும் முடிவு செய்யலாம். சோழர் ஆண்ட நானூறு ஆண்டுகளில் இத்தகைய அரசுரிமைப் பூசலும், அதையொட்டிய கொடிய நிகழ்ச்சிகளும் அபூர்வமாகத் தான் தோன்றின என்ற செய்தி இச் சோழர்களின் சான்றாண் மைக்குச் சான்று பகரும் எனச் சொல்லலாம்.

5 Vincent Smith—'The Oxford History of India'—1958—p. 75

# 8. ராஜராஜன் I
# (985—1014)

சோழ மன்னர்களுக்குள் தலையாயச் சிறப்பிற்கு உரியவன் ராஜராஜன் I எனலாம். இந்திய வரலாற்றில் காணப்பெறும் மாமன்னர்களுக்குள் எல்லாத் துறையிலும் வெற்றி பெற்ற முழுமையான மாண்புக்கு உரியவர்களைக் காண்பது எளிதல்ல. சாணக்கியனைத் தவிர்த்து சந்திரகுப்த மௌரியனைப் பார்த்தால் இருட்டறையில் பார்க்கப்படும் ஓவியமாகத்தான் தென்படுவான். 'ரத்னுவளி'யைப் படைத்த ஹர்ஷ சக்கரவர்த்தி நர்மதைக்குத் தெற்கே வரமுடியாமல் சாளுக்கிய மன்னன் புலிகேசியின் வெற்றிப்படை குறுக்குச் சுவராக நின்றது. பேரரசன் கிருஷ்ண தேவராயன் தன்னுடைய கண்களைப் பிடுங்காமல் தன்னை அரசனுக்கிய திம்மராஜனைத் தனக்குரிய அமைச்சனுக்கிப் பின்பு அவனது கண்களையே பிடுங்கினுன். இவை போன்ற அவலப் படலங்கள் காணப்பெருத தனிவாழ்வுச் சிறப்புகளைக்கொண்ட ராஜராஜன் அரசர்களுக்குள் மாண்புக்குரியவனுக விளங்கினுன்.

ஆதித்த சோழன் தொடங்கிவைத்த வல்லடிப் போர்களைத் தொடர்ந்து நடத்தி அதனுல் பெற்ற பேரரசைக் கட்டிக் காத்தவனும் அவனே. அக்பரைப் போன்று பேரரசைக் காக்கும் திறன் படைத்த ஒருவகை அரசியலமைப்பைச் சிறப்பாக உருவாக்கியவனும் அவனே. போர்களில் பெற்ற பெருநிதியங்கள் மக்களைச் சென்று அடைய கோவிலறம் என்ற பழைய முறைக்குப் புதுமை வேகம் கொடுத்த அச் சோழன் சைவ சமயத்திற்குக் கோவில்களும் திருப்பதிகங்களும் உயிர்பெற்றெழுந்து உறுதுணை செய்யச் சோழ அரசியலைச் சிறந்த நிர்வாகத் திறமையோடு வகைப்படுத்தி வைத்தான். அந்தணர்களுக்குத் தனியோர் ஏற்றம் அளித்து, அவர்தம் செந்தண்மை வாழ்வும், சீரிய அறிவும் சமுதாய நலமாகப் பரிணமிக்க அவர்களுக்குச் சதுர்வேதி மங்கலங்களை அவன் அளித்தான்.

இவ்வாறு வல்லரசு கட்டுதல், கோவிலறம் பேணுதல், உயிர்த்துடிப்புடைய தமிழ்ச் சமுதாயத்தை அரசியல் துணையுடன் ஊராட்சி மன்றங்களில் உயிர்நலம் பெறச் செய்தல், நிலவளம் செழிக்க நீர்ப்பாசனம் வகுத்தல், மணியறம் தழைக்க அரசியலாட்சி அமைத்தல் போன்ற பெரும்பணிகளை ராஜராஜன் ஆக்கப்

பூர்வமாகச் செய்தான். பேரரசின் பெருமைக்கும் விரிவாற்ற லுக்கும் ஈடு கொடுக்கின்ற வகையில் இவனுக்குப் பின்வந்த சோழ மன்னர்கள் சாம்ராஜ்யவாதிகளாக மாறி நின்றுர்கள். ராஜராஜன் கட்டிய பேரரசுக்கு அவர்களின் போராற்றலும் ஆளுமைத்திறனும் அடித்தளங்களாக இருக்க வேண்டியதாயிற்று. ஆகவே, அவ்வரச குணங்களைப் பெருத மன்னர்கள் சோழநாட்டின் இழப்புக்கும் நலி விற்கும் காரணமானுர்கள். ராஜராஜனுக்குப் பின்வந்த சோழர் களில் குலோத்துங்கன் I வரை ராஜராஜனைப் போன்று போரிடுந் திறன் பெற்றவர்கள் காணப்பட்டார்கள். குலோத்துங்கன் I சோழ சாம்ராஜ்யத்தின் பேரரசனுக மட்டும் இயங்கவில்லை. சுதந்தரமான சிந்தனை கொண்ட மாமன்னனுகவும் அவன் செயல் ஆற்றினுன். ஈழமும், வேங்கியும், கங்கபாடி என்ற தென் மைசூர்ப் பகுதியும் சோழப் பேரரசை விட்டுப் போன பின்பு சோழ அரசியலின் திறனை வளர்ப்பதில் அவன் ஈடுபட்டான். ஆனுல், குலோத்துங்கன் III போன்ற பிற்கால மன்னர்கள் ராஜராஜ னுடைய வழியில் 'கான மயிலாடக் கண்டிருந்த'வான்கோழியாக'ச் சென்று சோழப் பேரரசை ஆட்டங்காண வைத்தார்கள்.

நாடுகளுக்குள் எல்லாக் காலங்களிலும் இடையருது போர் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. ஏனென்ருல், ஒவ்வொரு நாடும் தனது ராஜதந்திரத்தைச் செயலாக்கிக்கொண்டே இருக்கும் என்பது நடைமுறை உண்மையாகும் என்று கான்ஸ் மார்க்கந்தா என்ற தற்காலத்திய அமெரிக்கச் சிந்தனையாளர் கூறுகிருர். நாட்டின் நலனைப் பேணுகின்ற முறையில் உருவாக்கப்படும் அந்தந்த நாட்டு ராஜதந்திரமானது சில நேரங்களில் போரின் மூலந்தான் நிலைநாட்டப்பட முடியும் என்ற சூழ்நிலை யாவருக்கும் தெரிந்த உண்மைதான். இந் நிலையைப் போரின்மூலம் ராஜதந்திரம் (diplomacy by war) எனலாம். அதாவது, ராஜதந்திரத்தைப் போரின்மூலம் செயல்படுத்துதல் எனப்படும். இதே ராஜராஜன் காலம் தொடக்கம், பிற்காலச் சோழர்கள் அனைவரும் இக் கோட் பாட்டினை வழுவாத கடமையுணர்வுடன் பின்பற்றினர். குலோத் துங்கன் I ஒருவன்தான் சுய விமரிசனம் (self criticism) மூலம் இதனை மாற்றி அமைத்தான். போரிட்டுப் பெறவேண்டிய நாட்டு நலன்களை ராஜதந்திரத்தின்மூலமே அவன் அடைய நினைத்தான். நாடுகளுக்குள் இடையருது காணப்படும் போரினைப் பின்னணி யாக வைத்துப் பார்த்தால், குலோத்துங்கன் நடத்திக் காட்டிய வெளிநாட்டு உறவைப் பற்றி அரசியல் ராஜதந்திரத்தின்மூலம் போர் (diplomacy by war) என்ற வகையைச் சாரும். ஆரவார மற்ற இத்தகைய அரசியலைப் பின்பற்றுவதற்கு அவனுக்குப் பின் வந்த சோழர்குலத் தோன்றல்களுக்கு மனமும் இல்லை; அதற்குரிய

அரசியல் பக்குவமும் ஏற்படவில்லை. அவர்கள் அனைவரும் ராஜ ராஜனையே தங்களுடைய இலட்சியத் தலைவனாக மனதில் வரித்துக் கொண்டு வெளிப்படையாகப் பிரகடனம் செய்து போரார்வ அரசியலை மேற்கொண்டனர்.

வல்லடிப் போர்களுக்கு முடிவே கிடையாது என்ற நிலையில் ஏகாதிபத்திய உணர்வின் நெறி ஏறி உழன்று நின்ற ராஜராஜ னுக்குப் பின்வந்த மன்னர்களின் வரிசை 1070-ல் குலோத்துங்கன் I வந்தவுடன் முடிவடைகிறது. மன உளைச்சலுடைய வல்லடிப் போர் நிகழ்ச்சிகளும் நின்றுவிடுகின்றன. குலோத்துங்கன் ஆற்றிய போர்கள் அவனுடைய சிந்தனைக்கு உட்பட்டவை எனக் கூறலாம். ஏற்கெனவே நிலைபட்டுப் போன இராணுவ ஏகாதி பத்திய அமைப்பு (system of military empire) என்ற அரசியல் முறையின் நிர்ப்பந்தத்தில் குலோத்துங்கன் செயல் பெறவில்லை. இராணுவ வெற்றியைவிட விவேகமான ஆட்சிமுறையும் ஏற் கெனவே அவன் ஆட்சியின்கீழ்க் காணப்பட்ட நாடுகளின் உயர்வுந்தான் பேரரசுக்கான அழகு எனக் குலோத்துங்கன் எண் ணினான். போராற்றலுக்குரிய சாளுக்கிய இரத்தம் அவன் உடலில் தந்தை வழியின் முறையில் ஓடினாலும், தகுதி சான்ற ராஜ தந்திரம் அவனுடைய பேரரசுப் பெருமிதத்திற்குப் புதிய அழகும், சோழப்பேரரசின் வளர்ச்சிப் போக்குக்குப் புதிய பார்வையையும் கொடுத்தது. ஆனால், ராஜராஜனுடைய போரார்வப் பேரரசுத் தத்துவம் தனது கவர்ச்சியை இழந்துவிடவில்லை.

இந்த வகையில் ராஜராஜனே சோழ நாட்டின் பேரரசு அமைப்பு முறைக்கும் அம் முறை வகுத்த இராணுவ ஈர்ப்புக்கும் காரணம் ஆவான். ராஜராஜனின் தொடர்நிழலாக இயங்கியவன் அவன் மகன் ராஜேந்திரன். இவ்வாறு தந்தையும் மகனும் சோழ அரசியலை வல்லடிப் போர்களை நோக்கிச் சாய்ந்து நிற்க வேண்டிய தந்தக் கோபுரமாக (Ivory Tower) ஆக்கி விட்டார்கள். இச் சாய்வைக் கீழ்நோக்கிச் செல்லும் சரிவாக மாற்றியவன் குலோத் துங்கன் III ஆவான். எனவே, ராஜராஜனுடைய பேரரசுப் பார்வை (vision of imperialism) சோழ வரலாற்றில் ஒரு வகை நெடுங்கோட்டு அச்சு (Power Axis) என உருவாகியது. சோழ நாட்டின் வளர்ச்சிப் பருவத்தின் குருத்துகளை இராணுவ நாக்கு கொண்டு அது தீண்டியது. ராஜராஜனுடைய பாணியில் ஏற்பட்ட வல்லடிப் போர்களால் நாட்டின் பொருளாதாரத்தில் ஊனமோ மற்றும் சீர்கேடு போன்றவையோ எதுவும் ஏற்பட வில்லை. அரசியலில்கூடக் காலப்போக்கில்தான் மத்திய அரசின் பலவீனம் ஏற்பட்டது. சோழப் பேரரசின் ஆணிவேரான

இ..ராணுவத்திற்குப் படைவீரர்களைக் கொடுத்துதவியவர்கள் அரசாங்கத் தலைவர்களாகவும் பணி ஆற்றினார்கள். அத்தகைய படைகளை அரசிற்குக் கொடுத்த நிலையில் அரசிடமிருந்து தாங்கள் வாங்கி அனுபவித்த 'காணி' என்ற நிலங்களுக்கு அவர்கள் உரிமையாளர்களானார்கள். ஆனால், இது காலப்போக்கில்தான் நிகழ்ந்தது, படை திரட்டிச் சோழ மன்னன் வேண்டும்போது கொடுத்து உதவிய அவர்களுக்கு ஊதியமாக அமையும்படிச் சில இடங்களில் வரிவசூல் செய்துகொள்ளும் உரிமை அனுமதிக்கப் பட்டது. இப் பிரதேசங்களுக்கு அவர்களே காலப்போக்கில் அரசுரிமையாளர்களாகவும் மாறிக்கொண்டார்கள். இவர்களுடைய அசுர வளர்ச்சியில் சோழப் பேரரசின் உள்நாட்டுத் துறையின் வலிமை நாளடைவில் குன்றியது. இவையெல்லாம் ராஜராஜனுடைய காலத்தில் நிகழவில்லை. ஆனால், இவ்வாறு பிற்காலத்தில் அசுர உருவம் எடுப்பதற்கு வேண்டிய வலிமை (potential civil) அவர்களிடம் இப்பொழுதே சென்றடைந்து விட்டது. ராஜராஜனுடைய பேரரசுத் தத்துவம் சோழ அரசரைப் படை நடத்துகின்ற வல்லடியாளர்களாகவும், போரில் பொருளீட்டுபவர்களாகவும், தான்றேன்றி அதிகாரிகளைப் போர் நடத்த வேண்டிய காரணத்தால் ஆதரிக்க வேண்டியவர்களாகவும் மாற்றி விட்டது.

வல்லடிப் போர்களுக்கு அடிப்படையாகச் சோழ நாட்டின் இராணுவத்தை வலுப்படுத்தினான் ராஜராஜன். கடற்படை வலிமை அடைந்தது. இவன் காலத்தில் உருப்பெற்று உறுதியான வளர்ச்சியை அடைந்த இக் கப்பற்படை இவனுடைய மகன் ராஜேந்திரன் I காலத்தில் வங்கக் கடல் கடந்து கடாரம் என்ற சுமத்திராத் தீவு சென்று அதனை வென்றடிப்படுத்தியது. ஆனாலும், சோழ நாட்டுக்குரிய ஆட்சிப் பகுதியாக அது எப்போதுமே இருந்ததில்லை. வெல்லப்பட்ட பகுதிகளைச் சோழமண்டலத்தோடு அரசியலாட்சி முறையில் சேர்த்துக்கொள்கின்ற முறையை ராஜராஜன்தான் கொண்டு வந்தான். அந் நாடுகளில் சோழ இராணுவப்பாசறைகளை (garrisons) அமைத்து, அங்குள்ள மக்களை அடக்குகின்ற பணியில் அவன் ஈடுபட்டான். வேங்கி நாட்டைப் பொறுத்தளவில் இவனுடைய வெளிநாட்டுக் கொள்கை பெரும் வெற்றி அடைந்தது. மேலைச் சாளுக்கியருக்குத் துணை நிற்கின்ற இனப் பற்றுதலும் இராணுவ நில அமைப்பு போன்ற வசதிகளும் கொண்ட வேங்கி நாட்டை மணவினைத் தொடர்பின்மூலம் சோழ நாட்டின் செல்வாக்கிற்கு உட்படுத்தினான் ராஜராஜன். இத் தொடர்பு குலோத்துங்கன் I சோழ மன்னனாக 1070-ல் வருவதற்குக்

காரணமாயிற்று. குலோத்துங்கன் I தனது கடைசிக் காலத்தில் 1118 அளவில் வேங்கி நாட்டை இழந்த பின்பு இத் தொடர்பு அறுபட்டுப் போயிற்று. குலோத்துங்கன் மகன் விக்கிரமன் அடுத்து பதவிக்கு வந்தபோது வல்லடிப்போர் நிகழ்ந்தது. வேங்கியைப் பிடித்துக் கொண்டதான மயக்கத்தை விக்கிரமச் சோழன் அனுபவித்தான்.

## I. வெளிநாட்டுக் கொள்கை

வெளி நாட்டுக் கொள்கையை நிலைநாட்டுகின்ற முறையில் வெறும் வல்லடிப் போர்களை மட்டும் மன்னன் ராஜ ராஜன் மேற்கொண்டான் என்று சொல்வதற்கில்லை. சுமத்திராத் தீவிலுள்ள ஸ்ரீ விஜயப் பேரரசன் விடுத்த வேண்டுகோளின் படி நாகப்பட்டினப் புத்த கோவிலுக்கு இவன் ஆனைமங் கலத்தில் இருபத்தேழு கிராமங்களை நிவந்தமாக அளித்தான். வெளிநாட்டு உறவில் இத்தகைய பிற மத சகிப்புத் தன்மையை அரசியல் முறையில் பயன்படுத்திய பெருமை இவனைச் சாரும். இந்துக்களை நண்பர்களாக்க வந்த அக்பர் சக்கரவர்த்தி இந்து ராஜபுத்திர மனைவியர்களைத் தன் அரண்மனையிலேயே இந்து கடவுளரின் கோவில்களை அமைத்துக்கொள்ளவும் அவற்றைத் தானும் ஓர் இந்து போல மதிக்கவும் செய்கின்ற அறிவுணர்வு ராஜ தந்திரத்தைக் கைக்கொண்டது போல மதக்கருத்துக்கும், தமிழ் நாட்டில் கோவில் கட்டுவதற்கு அவன் கொண்ட ஆசைக்கும் இடம் கொடுத்த ராஜராஜனின் வெளிநாட்டுக் கொள்கையின் ராஜதந்திரம் அளப்பரியச் சிறப்புக்கு உரியது. புத்தமதம் தமிழ் நாட்டுக்குப் புதியது அல்ல. இருந்தாலும், அதன் ஆக்கத்திற்குத் தமிழ்நாட்டிலுள்ள நாகப்பட்டினத்தில் கடார அரசின் எண்ணப்படி அதனுடைய உதவியோடு புத்த கோவில் அமைப் பதில் ராஜராஜன் காட்டிய ஆர்வம் அவனுடைய வெளிநாட்டுக் கொள்கையில் அவன் காட்டிய ஆழ்ந்த புலமையைக் காட்டிற்று. இக் காரணங்களால் இச் சோழனுடைய வெளிநாட்டுக் கொள்கை உறுதியான வெற்றியைக் கொடுக்கின்ற வகையில் செயல்பட்டது. இந்த வகையான வெளிநாட்டுக் கொள்கை சோழ வரலாற்றில் ஆழமான நிகழ்ச்சிக் கோடுகளைக் கிழித்துச் சென்றது என்பதும் உண்மை. இவ்வாறு ராஜதந்திரத்தையும், அரசியலுக்குப் பயன் படுத்திய ராஜராஜன் மேற்கொண்ட வெளிநாட்டுக் கொள்கையின் உயிர்ப்பிடிப்பாக விளங்கிய வல்லடிப் போர்களையும், அவற்றின் பயன்களையும் பார்ப்போம்:

### 1. காந்தளூர்ச்சாலைப் போர் (988)

சோழ மண்டலம் தொண்டை மண்டலம் என்றளவில் காணப் பட்ட சோழப் பேரரசை விரிவுபடுத்த எண்ணிய ராஜராஜன்



கல்யாணி
கொள்ளிப்பாக்கை
மால்கட்
வேங்கி
கோவா
நெல்லூர்
திருவொற்றியூர்
துவாரசமுத்திரம்
திருவாலங்காடு
தக்கோலம்
காஞ்சி
தலைக்காடு
உத்திரமேரூர்
தகடூர்
எண்ணாயிரம்
அரபிக் கடல்
வங்காள
சிதம்பரம்
காவிரிப்பூம் பட்டினம்
பழையாறை
உறையூர்
திருப்புறம்பியம்
நாகப்பட்டினம்
கொடும்பாளூர்
தஞ்சாவூர்
மதுரை
நெட்டூர்
மகாதித்தா
காந்தளூர்ச்சாலை
விழிஞம்
கோட்டாறு
அநுராதபுரம்
கன்னியாகுமரி
பொலன்னருவா
இந்தியப் பெருங்கடல்
இலங்கை
ரோகணம்
சோழப் பேரரசு
(ராஜராஜன் I - கி.பி. 985-1014)

தன்னுடைய முதலாவது வல்லடிப்போரைக் கேரளத்தின் கொடு முடியான திருவனந்தபுரத்தில் நடத்தினுன்; கேரளத்திற்குச் செல்கின்ற வழியில் பாண்டியரையும் வென்றுன்; பாண்டிநாடு, கேரளம் போன்ற இரண்டு பகுதிகளையும் வென்ற பின்பு இப் பகுதி களுக்கு எல்லாக் காலங்களிலும் உறுதுணையாக நின்ற ஈழத் தையும் பின்பு வென்றுன். இவ்வாறு வடக்கு நோக்கி ராஜராஜன் திரும்புவதற்கு முன்பு தெற்கே தன்னுடைய பேரரசை நிலை நாட்டினுன். கேரளமும் பாண்டிய நாடும் ஈழமும் அவன் வயப் பட்ட பின்பு வடக்கு நோக்கி அவன் படையெடுத்துச் செல்வது எளிதாகி விட்டது. வடக்கில் முதலில் போர் தொடங்கி இருந் தால் தெற்குப் பகுதியிலிருந்து அவனுடைய நிலைகளைத் தாக்கு கின்ற வலிமையைப் பாண்டியர்கள் போன்ற பிறவி எதிரிகள் பெற்றிருப்பார்கள். பேரரசைக் கட்டுகின்ற பெரும்பணியில் அறிவுப் பூர்வமான அரசியல் திறனுடன் ராஜராஜன் செயல் பட்டதன் முழுமுதற்சான்ருகத்தான் காந்தளூர்ச்சாலை என்ற இடத்தில் 988-ல் நிகழ்ந்த கடற்படைப் போரை நாம் கொள்ளல் வேண்டும்.

கடற்படை கொண்டு காந்தளூர் (திருவனந்தபுரத்திலுள்ள வலியசாலை) போர் நிகழ்த்த ராஜராஜன் பாண்டியர்களின் பக்கம் முதலில் திரும்ப வேண்டிய அவசியம் இருந்தது. கேரளம் செல்லும் பாதையில் குறுக்கிட்ட பாண்டியரை அவன் வென்றுன்; பின்பு சேரநாட்டுக்கு நிலமார்க்கத்தை வகைப்படுத்திக்கொண்டு பாண்டியரின் கடற்படையையும் சேர்த்துக்கொண்டு கேரளத் தாரோடு கடற்போருக்கு ஆயத்தமானுன். காந்தளூர் சேரர் களுக்குரிய வலிமையான ஒரு கடற்படைத்தளமாகும். கடற்படை கொண்டு அவர்களை முறியடித்தால்தான் அந் நாட்டை முழுவதும் கவர்ந்ததாக அமையும். ஆகவே, காந்தளூர்ச்சாலைப் போர் கடற் போராக நிகழ்ந்தது. பாண்டியரையும் வென்ற காரணத்தால் இதை ஒரு கடல்நிலப்போர் என்றும் சொல்லலாம்.

சேரன் பாஸ்கர ரவிவர்மன் (978—1036) முன்னைய சோழ-பாண்டிய ஆதிக்கப் போர்களில் பாண்டியர்களுக்கு உதவி புரிந்தவன். மணவினைத் தொடர்பு கொண்ட இந்த இரு அரச பரம்பரையினரை ஒரே நேரத்தில் பதவி இழக்கச் செய்கின்ற சோழரின் இராணுவத் திட்டந்தான் காந்தளூர்ச்சாலைப் போரில் செயல்பட்டது எனலாம். கேரளம் செல்லுகின்ற வழியில் சோழர் படையினரிடம் தோற்ற பாண்டியன் அமரபுயங்கன் சேரன் பாஸ்கர ரவிவர்மன் பக்கம் சேர்ந்து மறுபடியும் போரிட்டான். அவ்விரு நாடுகளின் மன்னர்களும் சோழனிடம் தோல்வியுற் ருர்கள். பின்பு காந்தளூர்ச்சாலையில் கடற்படைப்போர் நிகழ்ந்தது

காந்தளூரில் காணப்பட்ட சேரனின் கடற்படைத்தளம் அழிக்கப் பட்டது. இதனுல் சேரனின் இராணுவ வலிமை வீழ்ச்சியுற்றது.

பாண்டியனுக்குச் சேரனின் இராணுவ ஆதரவு கிடைக்க முடியாதவாறு காந்தளூர்ச்சாலைப் போரில் சேரரை ராஜராஜன் வென்றுன்; இவ்வாறு தனது இராணுவத் திட்டத்தை வகைப் படுத்திக்கொண்ட சோழ மன்னன் பாண்டியன் அமரபுயங்கனை முழுமையான அளவில் முறியடித்தான். பாண்டியன் அமர புயங்கன் பெரிதும் நம்பி இருந்த சேரனே ராஜராஜனிடம் தோல்வியுற்று அடிபணிந்து போன பிறகு சேரனின் இராணுவ ராஜதந்திர உதவியைப் பெற முடியாத நிலையில் இராணுவ வெற்றி யாளனை சோழனின் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டு அச் சோழ மன்னனின் ஆட்சிக்கு வழிவிட்டான். இதனுல் பாண்டிய நாடு 'ராஜராஜ மண்டலம்' என்று சோழ மன்னன் பெயரால் அழைக்கப் படலாயிற்று. 'செழியரைத் தேசுகொள் வர்மன்', 'பாண்டிய குலாசனி', 'மும்முடிச் சோழன்' என்ற பட்டங்களைத் தாங்கி ராஜராஜன் தன் முழு ஆதிக்கத்திற்குப் பாண்டிய நாட்டைக் கொண்டு வந்தான். இவ்வாறு பாண்டிய நாட்டை அடக்கு வதற்குக் காந்தளூர்ச்சாலை வெற்றி பெரிதும் உதவிற்று. காந்த ளூர்ச் சாலை வெற்றி சோழரின் கப்பற்படை வலிமையை நிலை நாட்டியது. காந்தளூர்ச்சாலையில் சோழரின் கடற்படை பெற்ற வெற்றி ஈழ நாட்டை அவர்கள் வென்றடிப்படுத்திக்கொள்ளப் பெரிதும் உதவிற்று. பாண்டியரும் சேரரும் வீழ்ச்சியுற்ற பின்பு அவர்களின் அரசியல் கூட்டாளியான ஈழமும் வெல்லப்பட வேண்டிய அவசியத்தை உணர்ந்த ராஜராஜனுக்குக் காந்தளூர்ச் சாலைப் போரின் வெற்றி ஈழம் நோக்கி இடப்பட்ட முன்னேடிப் பாலமாக விளங்கிற்று.

## 2. விழிஞம், உதகைப்போர் (1008-ஆம் ஆண்டுக்குச் சற்று முன்னர்)

சேரன் பாஸ்கர ரவிவர்மன் காந்தளூர்ச்சாலைப் போரில் தோல்வியுற்று, சேர நாட்டின் பெரும்பகுதியைச் சோழனிடம் இழந்துபட்ட போதிலும் தன் தோல்வியை அவன் முழுமையாக ஒப்புக்கொண்டு விடவில்லை. அதனுல்தான், காந்தளூர்ச்சாலையில் ஏற்பட்ட இராணுவத் தோல்வி என்ற மனக்கசப்பில் ஆழ்ந்திருந்த சேரன், சமாதான முறையில் அவனிடம் தூதுவந்த ராஜராஜ னுடைய அரசியல் அதிகாரியை உதகையில் சிறை வைத்தான். இது பேரரசன் ராஜராஜனை வல்லடிப்போருக்கு வலிந்து இழுக் கின்ற முறையில் அமைந்தது. தூதனுக்கு இன்னல் இழைத்தல்

ஒருவகை போர்ச் செய்கையே (act of war). ஆதிபத்திய பேரரசு உணர்வில் முனைந்து நின்ற ராஜராஜன் இதனை ஒரு வாய்ப்பாகக் கொண்டு மீண்டும் சேரன்மீது படையெடுத்தான். இது 1008ஆம் ஆண்டுக்குச் சற்று முன்னர் நிகழ்ந்தது.

தென்கோடிப் பகுதியிலிருந்த விழிஞம் என்ற காவல் மிக்க கோட்டை சோழப் படையினரால் கைப்பற்றப்பட்டது ; பெரும் அழிவுக்கும் அது உள்ளதாயிற்று. பகைவரால் பலமுறை இக் கோட்டை அழிக்கப்பட்டது போல அவ்வப்போது உடனடியாகவும் அது கட்டப்பட்டது. சோழருடைய ஆதிக்கப் போட்டியின் தென்கோடி வெற்றியாக விழிஞம் விளங்கியது. கடற்படை வெற்றிக்குக் காந்தளூர்ச்சாலையும், நிலப்படை வெற்றிக்கு விழிஞமும் அமைந்ததில் தனிச்சிறப்பு உண்டு. கேரளத்தின் தலைமைத் துறைமுகமும் தென்கோடியிலுள்ள கோட்டையும் மேற் சொல்லப்பட்டபடி வீழ்ச்சியுற்றபோது சோழப் பேரரசின் தென் மேற்கு எல்லையாகக் கேரளத்தின் தென்பகுதி கடற்கரை விளங்கத் தொடங்கியது. இதனால் பல இராணுவ விளைவுகள் ஏற்பட்டன. தென்கோடியிலுள்ள விழிஞத்திற்குச் செல்லும் வழியில் இடைப் பட்ட பாண்டிய நாட்டின் பிறிதொரு பகுதி சோழனால் கைப்பற்றப் பட்டது. தோல்வியுற்ற பாண்டியன் தன் நாட்டை மீட்க முடியாமல் சேர நாட்டில் அடைக்கலம் புகுந்தான். இதன் பின்பு பாண்டிய நாட்டில் மீந்திருந்த பாண்டிய வாரிசுகள் ஐவர் சோழனை எதிர்த்து நின்றிருத்தல் வேண்டும். அவர்களை வென்று அடிபடுத்திய பின்னர்தான் ராஜராஜன் சையமலையைக் கடந்து தன் தூதனைச் சிறை மீட்கின்ற முறையில் சேரனின் செருக் கடக்கச் சென்றான். விழிஞத்தில் அவன் பெற்ற வெற்றியின் பயனாகத் தன் தூதனை அவன் சிறை மீட்டான். தான் வெற்றி கொண்ட சேர நாட்டில் தன்னுடைய பிறந்த நாள் விழாவான 'சதயத் திருநாள் விழாவை' வீழ்ந்துபட்ட சேர மன்னனின் கோட்டையாகிய உதகையில் ராஜராஜன் சிறப்பான முறையில் தானே முன்னின்று கொண்டாடினான். ஆகவே, ராஜராஜன் நேரடிப் பார்வையில் உதகைப்போர் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

இவ்வாறாகப் பாண்டியனும் சேரனும் அடக்கப்பட்ட பிறகு ராஜராஜன் தனது திக்விஜயத்தை நிறுத்திக்கொள்ளவில்லை. கொடுங்கோளூர், கொல்ல தேசம், கொல்லம் போன்ற கேரள இனத்தின் மற்றைய மன்னர்களின் ஆட்சிப் பகுதிகளையும் போரிட்டுக் கைப்பற்றினான். சேர பாண்டிய மன்னர்களுக்கு அடங்கி இருந்த ஏனைய குறுநில மன்னர்களையும் அவன் வென் றான். இவ்வாறு வெல்லப்பட்ட எல்லா நாடுகளையும் இணைத்து

'ராஜராஜ மண்டலம்' என்ற ஆட்சி மண்டலம் ஏற்பட்டது என்பதை முன்னர்ப் பார்த்தோம். சோழரின் மத்திய அரசின் ஆணைக்கு உரிய மண்டலமாக அது தோற்றங்கொண்டது. அந்தப் பகுதிகளில் காணப்பட்ட கோவில்கள், நாடு, நகரங்கள் ஆகியவற்றுக்கு வெற்றியாளனான ராஜராஜனுடைய உறவினர் களின் பெயர்கள் இடப்பட்டன. இவ்வாறு சோழரின் மயமாதல் (cholaisation) என்றளவில் அமைந்த கலாசாரத் திணிப்பு தென்னகத்தின் தென்பகுதியிலும் தொடங்கியது. சோழரின் ஏகாதிபத்தியம் சோழர்படைகளால் வெல்லப்பட்ட நாடுகளி லுள்ள எல்லா மக்கள் மனதிலும் நிலைநிறுத்தப்பட வேண்டும் என்ற கோட்பாடு கொண்ட சோழ அரசியல் திட்டத்தின்படி இத்தகைய கலாசார மாற்றத்திற்கு அந் நாடுகள் உட்படுத்தப் பட்டன. இவ்வாறு இராணுவ முறையில் அரசியல் பிடிப்பை நிலைப்படுத்தி, பின்பு கலாசாரப் படையெடுப்பை நிகழ்த்துகின்ற ராஜதந்திரத்தை ராஜராஜனே தொடங்கி வைத்தான். பிஸ்மார்க் கின் நுட்பமான ராஜதந்திரத்தைப் புரிந்துகொள்ளாத முறையில் அரசியலை நடத்தி முதல் உலகப் போரின் அவலத்தில் தன்னோடு ஜெர்மனியை அமிழ்த்திய பின்பு இழந்துபோன கெய்சர் போல, ராஜராஜனுடைய போர்வகை ராஜதந்திரத்தில் போர்வகையை மட்டும் புரிந்துகொண்ட ஏனைய சோழர்களின் ராஜதந்திரத் திறமையின்மை சோழப் பேரரசை நாளடைவில் ஆட்டங்காண வைத்து அழிவை நோக்கித் தள்ளியது.

## 3. குடமலை கொள்ளல் (991ஆம் ஆண்டுக்கு முன்னர்)

தெற்கே சோழர் படைகள் கொண்ட நிறைவான வெற்றிக்குப் பிறகு ராஜராஜனுடைய திக்விஜயத்தின் போக்கு வடக்கு நோக்கித் திருப்பப்பட்டது. சேர நாட்டுக்கு வடக்கே அடுத்தாற் போலிருந்த குடமலை சோழர்களுடைய படையெடுப்பின் விளைவாக வீழ்ச்சியுற்றது. அக் குடமலை நாட்டு மன்னன் கொங்காள்வார் இனத்தினன் ஆவான். பானசோகே என்ற இடத்தில் சோழரோடு நிகழ்ந்த போரில் இவன் தோற்கடிக்கப் பட்டான். குடமலைநாடு இவ்வாறு சோழன்கீழ் வந்தது. இப் போரில் சோழர்க்கான பெரும் வெற்றிக்குத் துணைநின்ற மனிஜா என்பவனைப் பாராட்டி ராஜராஜன் 'க்ஷத்திரிய சிகாமணி கொங் காள்வான்' என்ற பட்டமும், 'மாளவ்வி' என்ற கிராமத்தையும் செய்நன்றிப் பரிசுகளாகக் கொடுத்தான். பேரரசுத் தத்துவம் இயக்கம் பெறுகின்றபோது எதிரியை வீழ்த்தச் சோழருடன் ஒத்துழைத்தவர்க்குப் பரிசிலும் பதவியும் வழங்குகின்ற முறையை ராஜராஜன் இவ்வாறுதான் தொடங்கி வைத்தான்.

'நடந்தாய் வாழி காவேரி' என்றளவில் குடகு மலையில் உற்பத்தியாகி 500 மைல்கள் கிழக்காக ஓடி வங்கக் கடலில் கலக்கின்ற காவிரி அன்னை சோழ நாட்டுக்குரிய கிராமீயப் பொருளாதாரத்தின் முதுகெலும்பு ஆகும். 'காவிரித் திருநாடன்' என்ற பெயர் பெற்ற சோழர்கள் குடகுமலையையும் தங்களுடைய ஆளுகைக்குரிய இடமாக்கிய பின்பு அவர்களுக்கும் அவர்தம் மக்களுக்கும் நல்வாழ்வு தந்த காவிரியின் நலம் பயக்கும் வள்ளன்மையைத் தடை ஏதும் இன்றி அனுபவிக்கின்ற பேராண்மையைப் பெற்றுர்கள். இந்த அளவில் ராஜராஜனுடைய குடகுமலை வெற்றி சோழநாட்டிற்கு உறுதுணையாக அமைந்தது. 'காவிரியின் மைந்தர்கள்' என்ற நிலையில் அக் காவிரியின் பிறப்பிடம் முதல் கிழக்கே கடலினுள் சென்றடைகின்ற நீக்கம் வரை, காவிரியை முழு உரிமை கொண்டாடுகின்ற வகையில் ராஜராஜனுடைய குடகுமலை வெற்றி அமைந்தது எனலாம். சோழ நாட்டின் நிலவளப் பொருளாதாரத்தின் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு ராஜராஜன் தன்னுடைய இராணுவ நடவடிக்கைகளை வகைப் படுத்திய அறிவுத்திறன் இக் குடமலை வெற்றியில் காணப் பெறுகின்றது.

## 4. ஈழத்தை வெல்லல் (991)

991ஆம் ஆண்டில் ஈழத்தின் வடபாகம் சோழர் வசமாயிற்று. பாண்டியருக்கும் கேரளத்தாருக்கும் எக் காலமும் கிடைத்து வந்த ஈழநாட்டரசனின் உதவி பராந்தகன் I காலத்திலேயே சோழருக்கு விரோதமாக அமைந்து இருந்தது. பாண்டிய நாட்டின் அருகாமையில் படைத்திறனுேடும் பகைஞர் என்ற பாரம்பரியத்தோடும் ஈழம் விளங்குவதற்கு இனிமேலும் விட்டு வைத்திருப்பது சோழப் பேரரசின் வளர்ச்சிக்கும் பாதுகாப்பிற்கும் உகந்தது அல்ல. மேலும், ஈழநாட்டு மன்னன் மகிந்தன் V, பாண்டியருக்குப் படை கொடுத்து உதவிய பின்புகூட எஞ்சியுள்ள படைஞரைக் கொண்டு கடல்வழி ஈழத்துள் வந்திறங்கும் எந்த அந்நியப்படைகளையும் தான் முறியடிக்க முடியும் என்ற தன்னம்பிக்கையுடனும் மனவுறுதியுடனும் பகைவுணர்வுடன் இருந்தான். ஆகவே, சோழரின் எதிர்ப் பகைமையை ஈழநாட்டு மன்னன் பொருட்படுத்தவில்லை. ஆனுல், ஈழநாட்டு அரசியலில் இந்த நேரத்தில் ஏற்பட்ட திருப்பம் சோழருக்குச் சாதகமாக அமைந்தது.

ஈழநாட்டில் கேரள, கன்னடக் கூலிப்படையாளர் சிங்களவர் தலைவருடன் ஈழமன்னனை எதிர்த்துக் கலகம் செய்தனர். இதனுல்

ஈழநாட்டில் பெருங்குழப்பமும் ஏற்பட்டது. இந்தச் சூழ்நிலையின் துணையோடு ராஜராஜனின் ஈழப் படையெழுச்சி நிகழ்ந்தது. ஆதிக்கப்போர் என்றளவில் படையோடு வந்த சோழரின் வெளி நாட்டு ஆக்கிரமிப்பையும் உள்நாட்டில் கிளர்ந்து எழுந்த கலகத் தாரின் எதிர்ப்பையும் ஈழத்தரசன் மகிந்தனால் சமாளிக்க இயல வில்லை. ஈழநாட்டுக்குள் இறங்கிய சோழர் படைக்கு ஈடு கொடுக்க முடியாத முறையில் மகிந்தன் தன் நாட்டின் பெரும்பகுதியைச் சோழனிடம் இழந்தான். பின்பு அவன் ஈழத்தின் தென்பகுதி யான இயற்கை அரணான காடுகள் நிறைந்த ரோகண நாட்டுக்குச் சென்றுவிட்டான்.

இலங்கையின் பெரும்பகுதியைக் கைப்பற்றிக்கொண்ட சோழர் படை, நூறு ஆண்டுகளாகச் சிங்களவரின் தலைநகராக இருந்த பெருமை சான்ற புராதன அனுராதபுரத்தை அழித்தது; பின்பு ஈழநாட்டைத் தனக்கு உரிய முறையில் மாற்றி அமைக் கின்ற ஆக்கப்பணியில் ஈடுபட்டது. ஈழநாடு சோழ மயமாக்கப் பட்டது. ஈழத்தின் மத்தியில் அமைந்த பொலன்னருவாவினைச் ‘ சனநாத மங்கலம் ’ என்ற பெயரிட்டு, அதையே சோழரின் தலை நகராக ராஜராஜன் மாற்றினான். இவ்வாறு ஈழநாட்டின் மையத் திற்குத் தலைநகரைக் கொண்டு சென்றது சோழரின் இராணுவ வலிமையையும் வல்லடித் தனமான போக்கையும் காட்டும். ராஜராஜனின் தாயார் வானவன் மாதேவியின் பெயரால் ‘ வானவன் மாதேவிச்சுவரம் ’ என்ற கோவில் அங்கே கட்டப் பட்டது.

ஈழத்திலிருந்த சோழ அதிகாரி தஞ்சை தளிகுமரன் ‘ ராஜ ராஜேச்சுரம் ’ என்ற கோவிலை மகாதித்தா என்ற ஊரில் எழுப்பினான். சோழரின் கட்டடக்கலை வழியில் பல கோவில்கள் இவ்வாறு எழும்பின. தஞ்சைப் பெரிய கோவிலில் நடக்கின்ற விழா நிகழ்ச்சிகளின் செலவிற்காக 1014-ல் ஈழத்திலுள்ள பல கிராமங்களை ராஜராஜன் அளித்தான். ஈழநாட்டையும் சோழப் பேரரசின் மண்டலமாக்கி, சோழர் ஆட்சியை ராஜராஜன் சார்பில் ஈழத்தில் அவனுடைய அதிகாரிகள் நிறுவினார்கள்.

ராஜராஜனின் சேர, பாண்டிய, ஈழப்படையெழுச்சிகளில் காணப்பெற்ற சிறப்பு நிறைந்த வெற்றிகளின் காரணமாக ராஜராஜன் ‘ மும்முடிச் சோழன் ’ என்ற பட்டத்தைச் சூடிக் கொண்டான். ராஜராஜனின் பேரரசுத் தத்துவம் செயலுக்கு வந்த பின்பு முதன்முறையாகக் கடல்கடந்த நிலையில் சோழர்க்குக் கிடைத்தது ஈழமே அந்த ஈழநாடு ராஜராஜன் கொண்ட

பட்டத்தின்படி 'மும்முடிச் சோழ மண்டலம்' என அழைக்கப் பட்டது. இவ்வாறு சோழநாட்டின் ஓர் அங்கமாக ஈழம் மாற்றப்பட்டது.

இதுவரை ஈழத்தாரோடு தொடர்பு கொண்ட பாண்டியர் போன்றவர்கள் நட்புரிமையும், திருமணத் தொடர்பும் பெற்றிருந் தார்கள். ஆனல், சோழர்கள் தங்களுடைய ஆதிக்க அரசியலை நிறுவினர்கள். ஆகவே, தமிழ் கலாசாரத்தை அரசியலதி காரத்தின் துணைகொண்டு ஈழத்தில் நிலைப்படுத்தினர்கள். இவ்வாறு ஈழநாட்டில் சோழ மயமாக்குதல் (cholaisation) என்ற கலாசாரப் படையெடுப்பு நிகழத் தொடங்கியது.

## 5. கங்கபாடி, நுளம்பபாடி வெற்றிகள் (991ஆம் ஆண்டுக்கு முன்பு)

தெற்கு நோக்கிச் சோழப் பேரரசு கொண்ட விரிவாற்றலின் நிறைவு ஈழத்தின் வெற்றியில் பேராண்மையாகவும் போர்ப்படைத் திறனுகவும் எழுச்சி கொண்டது. தெற்கில் கால்பாவி நின்ற சோழப் பேரரசின் பெருக்கத்திற்கு ஊறு விளைவிக்கக் காத்து நின்ற வடக்கத்திய நாடுகளை நோக்கி ராஜராஜன் தன் கவனத்தைத் திருப்பினுன். கங்கபாடி, நுளம்பபாடி போன்ற வடக்குத் திசை நாடுகளைக் கைப்பற்ற சோழர்படைகள் விரைந்தன. நுளம்பபாடி தனது எதிர்ப்பைக் காண்பிக்காமலில்லை. எனினும், கங்கபாடியும் நுளம்பபாடியும் சோழருடைய படையார்வ அதிரடியில் வீழ்ச்சி யுற்றுப் போயின.

## 6. போரில் ராஜதந்திரம்

ராஜராஜனின் ஆதிக்கப் போர்கள் ராஜதந்திரத்தில் தேர்வு பெற்றவை. ஒரு நாட்டைக் கைப்பற்றும்போது அதன்கீழுள்ள பகுதிகளை முதலில் ஆட்கொள்ளுகின்ற முறை அவனுடைய அரசியல் அறிவின் முதிர்ச்சியைக் காட்டும். இப் படையெழுச்சி தடிகைப்பாடி, தழைக்காடு என்ற பகுதிகளின் வழியே நடந்த காரணத்தினுல் திக்விஜய நெறிமுறைப்படி—வெற்றியினடியாகப் பெறப்படும் ஆட்சியுரிமைப்படி—அப் பகுதிகள் சோழர் வய மாயிற்று. இவ் வெற்றி சோழர்களுடைய இராணுவ முறையிலான அரசியல் பிடிப்பைக் கங்கபாடி, நுளம்பபாடி நாடுகளில் ஒரு நூற்ருண்டுக்குமேல் ஏற்படுத்திய முன்னணி நிகழ்ச்சியாயிற்று. சோழரின் நேரடி ஆட்சிக்கு உள்ளாகிப் போன பின்பு இந்த நாடுகளோடு மேலைச் சாளுக்கியர் அப் பகுதியின் பாரம்பரியமான மேலாளர் என்ற முறையில் கொண்டிருந்த அரசியல் செல்வாக்கிற்

குரிய உறவுகள் அறுந்து போய்விட்டன. இதில் சாளுக்கியருக்கு நியாயமான அரசியல் மனக் கொதிப்பு ஏற்பட்டது. சோழருக்கும் சாளுக்கியருக்கும் ஏற்பட்ட தீராப்பகைமைக்கு வித்து இப்படித் தான் ஊன்றப்பட்டது.

கங்கபாடியும் நுளம்பபாடியும் சோழருக்குரியவையாக ஆக்கிய பெருமை ராஜராஜனுடைய மகன் ராஜேந்திரனைச் சாரும். போர்த்திறனை வெளிக்காட்டி நின்ற தனது மைந்தனையே அப் பகுதியின் ஆட்சித் தலைவனாக 'மாதண்ட நாயகன்' என்ற அரசியல் பட்டத்தோடு அமர்ந்திருக்க ராஜராஜன் ஏற்பாடு செய்தான். போராற்றலோடு ஆட்சித் திறனுக்குரிய பயிற்சி யையும் பெறுகின்ற வகையில், வளர்ந்து வரும் பேரரசின் எதிர் காலச் சோழச் சக்கரவர்த்தி ராஜேந்திரன் இவ்வாறு வெல்லப் பட்ட அந் நாடுகளைச் சோழ அரசாட்சிக்கு உரியவையாக மாற்றுகின்ற பெரும்பணியில் ஈடுபடலாயினன். சோழப் பேரரசின் எல்லை இப்போது வடமேற்கே மைசூர்வரை விரிந்து நின்றது.

## 7. மேலைச் சாளுக்கியரோடு போர் (992லிருந்து 1007 வரை)

சுமார் பதினைந்து ஆண்டுகள் மைசூர்ப் பீடபூமிக்கு உரிமை யாளரான போர்த்திறன் கொண்ட மேலைச் சாளுக்கியரோடு ராஜ ராஜன் போரிட வேண்டியதாயிற்று. நுளம்பபாடி போன்ற சாளுக்கியரின் சார்பு நாடுகளைச் சோழர்கள் கவர்ந்த நிலையில் சோழப் பேரரசின் எல்லை தற்காலத் தெற்குக் கர்நாடகத்தைத் தாண்டி மேலைச் சாளுக்கியரின் நாடுவரை சென்று முட்டி நின்றது. இந் நிலையில் பிறவிப் படைவீரர்களான மேலைச் சாளுக் கியர் காவிரிச் சமவெளியிலிருந்து வந்த ஆதிக்கக்காரர்களை எதிர்க்கத் தலைப்பட்டது வியப்புக்குரிய அரசியல் நிகழ்ச்சி இல்லை.

தக்காணத்தில் முன்பு பேரரசாக விளங்கிய ராஷ்டிரகூடர் களின் அரசியல் வாரிசுகளான இந்த மேலைச் சாளுக்கியர் தைலபன் II (973-997) காலத்தில் மான்யக்கேடகம் என்ற தலை நகரை மையமாக வைத்துச் சோழர்களோடும், வடதிசையில் மாளவத்தின் பரமாரர்களோடும் ஆதிக்கப் போட்டியிட்டு மோதி நின்றனர். அவர்கள் இனத்தாரான வேங்கிநாட்டுக் கீழைச்சாளுக் கியரைச் சோழப் பேரரசு எட்டிப் பிடித்தபோது வேங்கியின் அரசியல் சுயேச்சையைத் தங்களுக்குரிய இராணுவப் பாதுகாப் பாக எண்ணி மேலைச் சாளுக்கியர் செயல்பட்டனர். ராஜராஜன் 985-ல் பதவிக்கு வருவதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன்பு உத்தமச்

சோழனேடு மோதி வெற்றியும் பெற்றதாக மேலைச்சாளுக்கியன் தைலபன் கூறிக்கொண்டான். தைலபனின் மகன் சத்தியா சிரயன் (997-1008) தனது தந்தையின் அரசியல் நடவடிக்கை களுக்குத் துணை நின்முன். சத்தியாசிரயன் ராஜராஜனேடு செய்த போர்கள் வரலாற்றில் இதிகாச மாண்பைப் பெற்றவை எனலாம்.

ராஜராஜனின் ஆனைமங்கலச் செப்பேடுகள் கூறுகிறபடி சோழப் படையினரின் ஆர்ப்பரிப்பான படையெழுச்சியைக் கண்டு அச்சமுற்று சத்தியாசிரயன் போரிடாமல் ஓடிவிட்டான். துங்கபத்திரைக்கும் நர்மதைக்கும் இடைப்பட்ட நாடுதான் மேலைச் சாளுக்கியருக்கு உரியது. சோழர் படைகள் துங்கபத்திரை நதியை யானைப் பாலம் கட்டிக் கடந்தன என்ற செய்தியால் சோழர்—சாளுக்கியர் போர்கள் சாளுக்கியரின் நாட்டுக்குள்ளும் விரிந்து நிகழ்ந்தன எனக் கொள்ளல் வேண்டும்.

இதற்கிடையில் வேங்கியில் கீழைச் சாளுக்கியருக்குள் வாரி சுரிமைப்போர் நிகழ்ந்து தெலுங்கு சோட மன்னன் ஜடாசோட பீமன் வசம் அந் நாட்டின் அரசியல் 27 ஆண்டுக்காலம் (973-1000) சிக்கிக்கொண்டது. சத்தியாசிரயன் 1046-ல் வேங்கி நாட்டின்மீது படையெடுத்துச் சென்முன். அவனுடைய தளபதி பாயல்நம்பி என்பவன் தரணிக்கோடா என்ற அரண்களை அழித்துச் சீப்ரோறு என்ற இடத்தில் மேலைச் சாளுக்கியரின் ஆதிக்கத்தை வேங்கி நாட்டிற்குரியதாக நிலைநிறுத்தினன். வேங்கி நாட்டின் அரசியலில் ஏற்கெனவே ஈடுபாடு கொண்ட ராஜராஜன் தன் மகன் ராஜேந்திரனை மேலைச் சாளுக்கியரின் நாட்டைப் படையெடுத்துத் தாக்குமாறு பணித்தான். ராஜேந்திரன் பிஜப்பூர் மாவட்டம் வரை தனது படைகளை நடத்திச் சென்முன். பெண்டிரையும், சிருரையும், அந்தணரையும் சோழர்கள் இப் படையெடுப்பின்போது கொன்முர்கள் என்றும், பெரும்பொருள் கவரப்பட்டது என்றும் சத்தியாசிரயனுடைய கோட்டூர் கல்வெட்டு (1007ஆம் ஆண்டுக்கு உரியது) கூறுகிறது. ஆனல், மேலைச் சாளுக்கியரின் தலைநகரான மான்யக்கேடகத்தை ராஜேந்திரன் கைப்பற்றி அதனை அழித்தான் என்பதும், ரெய்ச்சூர் இடைகழி நாட்டைப் பிடித்தான் என்பதும் உண்மை யான வரலாற்றுச் செய்திகள்.

இதே சமயம் மற்றெரு சோழர்படை வேங்கி நாட்டின் பக்க மிருந்து சத்தியாசிரயனுடைய நாட்டிலுள்ள கொள்ளிப்பாக்கை (ஹைதராபாது பக்கம்) என்ற கோட்டையைப் பிடித்துக் கொண்டது. இவ்வாறு இருமுனைத் தாக்குதலால் சோழர்கள்

சத்தியாசிரயனை வேங்கி நாட்டைவிட்டுத் தன்னுடு செல்ல வைத்தார்கள். இவ்வாறு போர்த்திறன் மட்டுமல்லாது, திட்டமிட்டுப் போர்புரிகின்ற மதிநுட்பமும் கலந்த போர் முறையே சோழர்களின் வெற்றிக்குக் காரணமாயிற்று.

## 8. வேங்கி நாடு—சோழரோடு முதல் உறவு (982-999)

**(அ) வேங்கி நாட்டின் அரசியல் நிலை :** பிற்காலச் சோழர்களின் ஆதிக்க வரலாற்றில் வேங்கி நாடு முக்கிய பங்கு வகிக்கிறது. வேங்கி நாட்டின் அரச வமிசம் சுமார் 600 ஆண்டுகள் தொடர்ச்சியாக அரசாண்டது. சாளுக்கிய மன்னன் புலிகேசனின் தம்பி விஷ்ணுவர்த்தனன் (624-641) வேங்கி நாடு சென்று சாளுக்கிய அரசை உருவாக்கிய நாள் முதல் 1070-ல் குலோத்துங்கன் சோழ நாட்டதிபதியாகி 1118 அளவில் அதை இழக்கும் வரை சாளுக்கியரின் பிடியில் அந் நாடு இருந்தது. இடையில் ராஷ்டிரகூடர், மேலைச் சாளுக்கியர், தெலுங்குச் சோடர், சோழர் போன்ருேரின் ஆதிக்கம் பெருங்கடலினூடே தலைதூக்கும் தீவுகள் போல அவ்வப்போது அங்குத் தோன்றிய பின்பு மறைந்தன. வேங்கி நாடு கிழக்குக் கடற்கரையோரமாகச் சோழ நாட்டுக்கு நேர் வடக்கே அமைந்த காரணத்தினுல் அது சோழர்களின் கவனத்துக்கு உட்பட்டு விளங்கியது. ஏனென்ருல், சோழருக்கும் மேலைச் சாளுக்கியருக்கும் ஏற்பட்ட இராணுவ மோதல்கள் கீழைச் சாளுக்கியப் பிரதேசத்தில்தான் நிகழ்ந்தன.

வேங்கி நாட்டின் வளர்ச்சி சோழர்களுக்கு எதிர்ப்பாகவும் திரும்ப வாய்ப்பு கொண்டிருந்தது. ஆகவேதான் பிற்காலத்தில் சோழர்கள் வேங்கி நாட்டை வளர விடாமலும் அழிய விடாமலும் பார்த்துக்கொண்டார்கள். ஏனென்ருல், மைசூருக்கு வடக்கே உருவான ராஷ்டிரகூடர், சாளுக்கியர் போன்ற பேரரசுகளுக்கு முட்டிக்கொடுக்கக்கூடிய ஒருவகை இடைப்படு நாடாக (Buffer State) அது அமைந்து இருந்தது. தங்களுடைய பாதுகாப்பின்கீழ்—ஆனுல் தனித்து நிற்கும் ஒரு நாடாக (Subordinate Isolation) வேங்கி நாட்டைச் சோழர்கள் மாற்றினுர்கள். இன ஒற்றுமை கொண்ட மேலைச் சாளுக்கியர் வேங்கி நாட்டினருக்குத் துணைபோகின்ற மனப்போக்கு காணப்படும் தக்காண அரசியல் நிலையை மாற்ற வேண்டிச் சோழர்கள் வேங்கி நாட்டின் அரசியலைத் தங்களுடைய ஆதிக்கத்துள் கொண்டுவர விழைந்தார்கள். ஆகவே, தங்களுடைய கவனத்தை வேங்கிநாடு நோக்கித் திருப்ப வேண்டியது சோழருக்குரிய ஓர் இராணுவ அவசியமாகத் தென்பட்டது.

ராஜராஜன் காலத்தில் வேங்கி நாட்டில் அரச வாரிசு உரிமைபற்றி அந் நாட்டு அரச வமிசத்தாரில் பிளவு ஏற்பட்டு, அதனால் ஏற்பட்ட போர்களில் ஈடுபட்டனர். மேலும் மூன்று நூற்றாண்டுகளாக ராஷ்டிரகூடருடன் போராடிக் களைத்து, அரசுரிமைக் குழப்பங்களுக்கு ஆட்பட்டு, வெளிநாட்டினரின் ஆதரவு வேண்டிய நிலையில் தன் சொந்த வலிமை குன்றி வேங்கி நாடு தேய்ந்து நின்றது.

**(ஆ) வேங்கி நாட்டில் வாரிசுரிமைப் போட்டி (945-970):** கீழைச் சாளுக்கிய மன்னன் அம்மராசன் II (945-970) காலத்தின் இறுதிக் கட்டத்தில்தான் ஆட்சியுரிமைக்கான போட்டியும் குழப்பமும் தொடங்கின. அம்மராசன் 945-ல் அரச பதவிக்கு வந்தபோது அவனுடைய மூத்த சகோதரன் (மாற்றாந் தாய் வழி) பாடபன் என்பவனை விலக்கி வைத்தான். பாடபன் அரச பதவிக்காக உள்நாட்டுக் குழப்பங்களைச் செய்தான். இவனுக்கு ஆதரவாக ராஷ்டிரகூடன் கிருஷ்ணன் III படையெடுத்து வந்து வேங்கி நாட்டின் எல்லைகளைத் தாக்கினான்.

ஆனால், அம்மராசனுக்கு மணவினைத் தொடர்பின்மூலம் ஜடாசோடபீமனும், நட்புரிமையின்படி கொலனு மன்னன் நிருபகாமாவும் ஆதரவு அளித்தனர். கலிங்கர், ராஷ்டிரகூடர் ஆகிய இரு கூட்டத்தாரின் ஆதரவுடன் பாடபன் போரிட்டான். இப் போர்களின் பயனாக வேங்கி நாட்டு அரசுரிமை இருசாரார் கையிலும் மாறி மாறி வந்தது. 970-ல் அம்மராசன் அவனுடைய சகோதரன் தானார்னவனால் கொல்லப்பட்டான்; அரச பதவியையும் தனதாக்கிக்கொண்டான். இதே சமயத்தில் வேங்கிப் பகுதி தெலுங்குச் சோடனும், சாளுக்கிய மன்னன் பீமன் II என்பவனுடைய பேரனுமாகிய ஜடாசோடபீமன் கைக்கு மாறியது. தானார்னவனின் ஆதரவாளர்களான வைதும்ப வேளிர்களின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாத நிலையில் தானார்னவனின் அரச பதவியைப் பீமன் பிடுங்கிக்கொண்டான்.

பின்பு கலிங்க நாட்டில் அடைக்கலம் புகுந்த தானார்னவனை ஜடாசோடபீமன் கொன்றான். தானார்னவனுக்கு உதவி புரிந்து வந்த உறவினன் கலிங்கன் காமார்ணவனையும் அவன் சகோதரன் விநயாதித்தனையும் அச் சோடன் கொன்றான். தானார்னவனுடைய மைந்தர்களான சக்திவர்மன், விமலாதித்தன் என்ற இருவரும் கலிங்கத்தில் அடைக்கலம் புகுந்து, பின்பு சோழ நாட்டை அடைந்தனர். இது 980ஆம் ஆண்டையொட்டி நிகழ்ந்தது. அப்போது உத்தமச் சோழன் சோழ நாட்டரசனாக விளங்கினான்.

ஐந்தாண்டுகளுக்குப் பின்பு 985-ல் சோழ மன்னனுன ராஜராஜ னுடைய உதவியை நாடி, சோழ நாட்டின் தயவில், திருவை யாற்றில், தங்கள் நாட்டை மீட்கின்ற நன்னுளின் வரவிற்காகக் காத்திருந்தனர். ஜடாசோடபீமனுடைய அரசியல் ஆதிக்கக் குறுக்கீடுகள் தொடர்ந்து நிகழ்ந்தன. 973ஆம் ஆண்டில் தானுர்னவன் இறந்த பின்பு சக்திவர்மன் I, 999ஆம் ஆண்டில் அரச பதவியில் நிலைக்கும் வரையுள்ள 27 ஆண்டுகள் வேங்கியின் அரசியல் சீர்குலைவு பெற்றது. 999-லிருந்து சோழப் பேரரசின் அரசியலுக்கு வேண்டிய கூட்டாளியாக வேங்கி மாறியது. 999ஆம் ஆண்டளவில் சக்திவர்மனை, ஆட்சியிலிருந்த ராஜராஜன் வேங்கி நாடு சென்றபோது, சோடபீமன் அவனை எதிர்க்க இரணவீரன் என்ற தளபதியை அனுப்பி வைத்தான். இத் தளபதி யையும், பேதண்ணு, மகாராஜன் என்ற இரண்டு வேளிர்களையும் ராஜராஜன் போரிட்டுக் கொன்றுன். இருந்தாலும், பீமன் வேங்கி மன்னன் சக்திவர்மனுக்குத் தொல்லைகள் கொடுத்து வந்தான்.

1001-ல் சக்திவர்மனை வேங்கியிலிருந்து கிளப்பிக் காஞ்சிபுரம் வரை பீமன் விரட்டிக்கொண்டு வந்தான். வேங்கி நாட்டு மன்னனின் வேண்டுகோளுக்கு ஏற்பச் சோழர் படை பீமனை வென்று விரட்டி அடித்தது. இதோடு பீமனின் இராணுவ வலிமை அடங்கிப்போன பின்பு, சோழ நாட்டினரின் ஆதிக்கம் வேங்கியில் பெருமளவிற்கு வளர்ந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. இத்தகைய எளிதான முறையில் சோழ நாட்டினரின் அரசியல் ஊடுருவல் வேங்கி நாட்டில் நிலைத்து விடுவதை மேலைச் சாளுக்கிய மன்னன் சத்தியாசிரயன் பார்த்துக்கொண்டிருக்க முடியாது என்பது அந் நாளைய அரசியலுக்குரிய இயல்பான விஷயந்தான். ஆகவே, 1006-ல் அவனுடைய படைத்தளபதி பாயல்நம்பி என்பவன் குண்டூர் மாவட்டம் செப்ரோறு என்ற கீழைச் சாளுக்கியப் பிரதேசத்தில் மேலைச் சாளுக்கிய நாட்டின் ஆதிக்கத்தை நிலைநாட்டினுன். இவ்வாறு சோழர்களுக்கும் மேலைச் சாளுக்கியருக்கும் வேங்கி நாட்டைப் பொறுத்தளவில் ஏற்பட்ட அரசியல் போட்டி நின்றபாடில்லை. 1007-ல் ராஜேந் திரனை ராஜராஜன் மேலைச் சாளுக்கியப் பகுதியான இரட்டப் பாடிக்குப் பெரும்படையுடன் அனுப்பி வைத்ததன் காரணம் வேங்கி நாட்டில் சத்தியாசிரயன் மேற்சொன்னவாறு காலூன்றி விட்டதைத் தொடர்ந்துதான் என்பது தெளிவு.

**(இ) திறனுய்வு :** கீழைச் சாளுக்கிய மன்னன் தானுர்ன வனின் இறப்புக்குப் பின்பு, அவனுடைய மனைவி வம்பவையும் இரு

மைந்தர்களான சக்திவர்மனும் விமலாதித்தியனும் கலிங்க நாட்டில் அடைக்கலம் புகுந்து பின்பு அங்கிருந்து சோழநாட்டுக்கு 981ஆம் ஆண்டில் வந்தனர்; 999ஆம் ஆண்டு வரை, 19 ஆண்டுகள் திருவையாறு போன்ற இடங்களில் அடைக்கலமாகச் சோழ மன்னன் உத்தமச் சோழனின் இணக்கப்படி இருந்தனர். 985-ல் அரச பதவிக்கு வந்த ராஜராஜன் கீழைச் சாளுக்கிய அரச குமாரர் களைத் தன்னுடைய பேரரசின் அரசியல் வளர்ச்சிக்குப் பயன் படுத்தத் தீர்மானித்தான். அதன்படிதான் 999-ல் சக்திவர்மன் வேங்கிநாட்டுக்குக் கொண்டு செல்லப்பட்டு மன்னனாக நிலை இருத்தப்பெற்றான். ஏழாண்டுகள் ஆண்ட பின்பு அவன் இறந்து படவே, ராஜராஜன் சக்திவர்மனிடம் செய்துகொண்ட அரசியல் ஒப்பந்தப்படி விமலாதித்தியன் வேங்கியின் அரசனானான். ராஜ ராஜனின் மகள் குந்தவையை மணம் முடித்திருந்த விமலாதித் தியனைக் காக்கின்ற பொறுப்பு ராஜராஜனின் குடும்பப் பாசமாகவும், அரசியல் தேவையாகவும் மாறிக்கொண்டது.

கீழைச் சாளுக்கியரின் அரசியல் இவ்வாறு சோழ நாட்டுக்கும், அதனுடைய அரசியல் பகைவரான மேலைச் சாளுக்கியருக்கும் இடையே காணப்பட்ட அரசியல் சதுரங்கக் காயாக விளங்கியது. இம் மூன்று நாடுகளுக்குரிய எல்லைகள் ஒன்றையொன்றை ஒட்டி நின்றன. இந் நிலையில் வேங்கி நாடு எப் பக்கம் சேர்கிறதோ அந்தக் கட்சியின் வலிமை அதிகமாகிவிடும். ஐரோப்பிய வரலாற்றில் ஏழாண்டுப் போரில் ஃபிரான்ஸ் தன் பக்கம் சேர்ந் தால் தனக்கு வெற்றி என்று ஆஸ்திரியா நினைத்து ராஜதந்திரப் புரட்சி செய்தது போல, ராஜராஜன் திருமணத் தொடர்புடன் கூடிய ராஜிய, இராணுவ, ராஜதந்திர உறவுகளை வேங்கியுடன் வைத்துக்கொண்டான். இவ்வாறு 135 ஆண்டுகள்—குலோத் துங்கன் I 1118-ல் தனது கடைசி காலத்தில் - வேங்கியை இழக் கின்ற காலம்வரை—சோழருக்கும் மேலைச் சாளுக்கியருக்கும் நடந்த வேங்கிநாடு பற்றிய தகராறு முற்றிக்கொண்டே வந்து சோழருக் குரிய இழப்பாகவும் மேலைச் சாளுக்கியரின் ஆதாயமாகவும் மாறிய நின்றது.

## 9. கலிங்கப் போர் (1012—1014-க்குள்)

'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்று தொடங்கும் ராஜராஜனின் மெய்க்கீர்த்தியில் 'குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்' அவனுடைய ஆட்சிக்கு உட்பட்டன என்ற செய்தியில் கலிங்கமும் சேர்த்துச் சொல்லப் பெறுகின்றது. மேலும், தமிழ் மொழியிலும் சமஸ்கிருதத்திலும் எழுதப்பெற்ற தேதி இடப்படாத சோழரின் கல்வெட்டுகள் கோதாவிரிக்கும் மகா

நதிக்கும் இடைப்பட்ட நாடான கலிங்கத்தின் மகேந்திர மலையில் காணப்பெறுகின்றன. இந்த இரண்டு ஆதாரங்களிலிருந்தும் ராஜராஜன் கலிங்கத்தையும் வெற்றி பெற்றிருந்தான் என்பது தெளிவாகிறது. இந் நாட்டை ஆண்ட குலூத மன்னன் விமலா தித்தியன் என்பவனைத்தான் ராஜராஜன் வெற்றி பெற்று அடக்கி இருக்க வேண்டும்.

## 10. மாலத்தீவுகளை வெல்லல் (1012—1014-க்குள்)

கேரளத்தைக் காந்தளூர்ச்சாலை கடற்படைப் போரில் வென்ற பின்பு ஈழமும் சோழருக்கு உரியதானது கேரளத்தின் பக்கமுள்ள மாலத் தீவுகள் முன்னீர்ப் பழந்தீவுகள் என்றும், பன்னீராயிரம் தீவுகள் என்று தொன்றுதொட்டு வழங்கப் பட்டன. அத் தீவுகளின் மன்னன் தன்னைப் 'பன்னீராயிரத் தீவு களின் தலைவன்' என அழைத்துக்கொண்டான். ராஜராஜ னுடைய கடற்படைக்கு இத் தீவுகளைப் பிடிப்பது எளிதான காரிய மாக அமைந்தது.

## II. உள்நாட்டு நிர்வாகம்

ராஜராஜன் இராணுவ வெற்றியாளன் என்ற முறையில் எவ் வகை வினைத்திட்பமும் அரசியல் புலமையும் காட்டினானோ அதே அளவில் தனது உள்நாட்டு நிர்வாகத்திலும் அத்தகைய அரசப் பண்புகள் தோய்ந்த நிலையில் அப் பண்புகளை நாட்டின் நலமாக உயிராக்கம் பெறச் செய்தான். ஐரோப்பிய வரலாற்றில் நெப்போலியனை இராணுவ வெற்றி யாளன் என்பதைவிடத் திறமை மிக்க ஆட்சியாளன் என்று சொல்வது மிகப் பொருத்தமாகும் என்பது போல ராஜராஜனையும் ஆக்கப்பணிகளோடு கூடிய அரசியலாட்சியை வழங்குகின்ற உயர்பணியில் ஒப்பற்று விளங்கினான் எனச் சொல்லலாம். நாட்டை அரசாள்கின்ற பணியில் நாட்டு மக்களை மனதில் வைத்துக்கொண்டு அவர்தம் சிந்தனையைக்கூடத் தன்னுடைய அரசியல் பக்கம் கவர்ந்து இழுக்கின்ற முறையில் சோழநாட்டின் உள்நாட்டு நிர்வாகத்தை ஊராட்சி மன்றங்களிடம் ராஜராஜன் ஒப்படைத்தான். அந்த வகை ஊராட்சி மன்றங்களோடு இணைந்து பணி செய்கின்ற கோவில்களைச் சோழச் சமுதாயத்தின் இரத்த நாளங்களாக வகைப்படுத்தி, அந்தணர்தம் ஆக்கத்தை ஆங்கு ஓடுகின்ற குருதியாக மாற்றி, சோழ மக்களின் சிந்தனைச் சக்தியையே உருவாக்கி அமைத்தான்; இவ்வாறு செயல்பட்டதன் மூலம் மக்களும், மன்னனும் இணைந்து வாழவும் நாட்டின் பொதுமை நலமான அமைதியை அவர்கள் இணை சேர்ந்து வளர்க்கவும் ஏற்பாடு செய்தான்.

மத்திய அரசில் சோழ மன்னனின் நல்லற மேலாண்மை, ஊராட்சி மன்றங்களின் பொறுப்பு உணர்வு, அரசையும் ஊரையும் சேர்த்து வைக்கும் கோவில்கள் கொண்ட சமுதாய ஈடுபாடு, கோவிலறத்தைச் செயல்படுத்திய அந்தணரின் அறவாழ்வு ஆகியவை ராஜராஜனுடைய உள்நாட்டு நிர்வாகத்தின் வளர் நலச் சிறப்புகளாக விளங்கின. மேற்சொன்ன நிறுவனங்கள் ஒவ்வொன்றும் தன்வளர்ச்சித் திறன் கொண்ட இயக்கச் சக்தி (self-generating unit of organisation)) என்றளவில் வளர்ந்து ராஜராஜனுடைய நேரடியான கவனத்தின்கீழ்ச், சோழரின் உள்நாட்டுத் துறையுள் காணப்பட்ட சக்திச்சுனைகளாகச் செயலாற்றின இவற்றின் ஆக்கத்திற்கு வழிகாட்டி நின்ற ராஜராஜனுடைய ஆளுகைத்திறனும் பொதுப் பணியாற்றும் ஆர்வமும், சோழரின் வரலாற்றில் காவிய மாண்போடு விளங்கு கின்றன.

**1. ஆட்சி முறையில் சீர்திருத்தங்கள்—(அ) நில அளவை :** அரச பதவி ஏற்று 16 ஆண்டுகள் கழித்து 1001-ல் சோழ மண்டலத்தை அளக்கின்ற பணியில் குரவன் ராஜராஜ மாராயன் என்ற அதிகாரியை ராஜராஜன் ஈடுபடுத்தினான். இவ்வாறு சோழ ராஜ்யத்தை இவன் அளந்து நில வகைகளைத் தரத்திலும் அளவிலும் வகைப்படுத்தியது போல இவனுக்குப் பின்வந்த மன்னர்களில் குலோத்துங்கன் I போன்றோரும் நாட்டை அளந்து வருவாய்த் துறையின் திறனை வலுப்படுத்தினர். தன்னுடைய அதிகாரியின் பணியைப் பாராட்டி 'உலகளந்தான்' என்ற பட்டத்தை ராஜராஜன் வழங்கினான்.

**(ஆ) பேரரசில் மண்டலப் பிரிவு :** சோழரின் பூர்விக ஆட்சிப் பகுதியை மட்டும் அளந்து நிலவுரிமை, நிலத்தின் தரம் போன்றவற்றை வரையறை செய்த ராஜராஜன் இது நிகழ்ந்த அடுத்த ஆண்டில் (1002-ல்) சோழப் பேரரசைப் பல மண்டலங் களாகப் பிரித்தான். அவற்றில் பல அவனுடைய விருதுப்பெயர் களைத் தாங்கிய முறையில் நிகரிலிச் சோழ மண்டலம் (மைசூர், பல்லாரிப் பகுதிகள்) ராஜராஜ மண்டலம் (பாண்டிய நாடு), மும்முடிச் சோழ மண்டலம் (ஈழம்) என வழங்கப்பட்டன. இம் மண்டலங்களில் சோழ அரசப் பரம்பரையினரோ, பெருந்தர அதிகாரிகளோ சோழரின் மத்திய அரசின் சார்பில் ஆட்சி நடத்தினர். அந்தந்தப் பகுதிகளின் அரசியலுக்குத் தக்கபடி ஆங்காங்கே ஆட்சிமுறை அமைந்தது. சோழரின் ஆதிக்கம் பரவக்கூடிய முறையில் கலாசார மாற்றங்களுக்குரிய

அளவில் சோழர்களின் பெயர்கள் வென்றடிப்படுத்தப்பட்ட நாடுகளின் ஊர்களுக்கும் தெருக்களுக்கும் இடப்பட்டன. கோவில்களைக்கூட அரசன் பெயரில் கட்டுவதைச் சோழ அரசப் பிரதிநிதிகள் தங்களின் அரசியற்பணியாக மேற்கொண்டார்கள்.

சோழருக்குரிய பரம்பரை நிலப்பகுதியான சோழ மண்டலம் உட்பட அத்தனை மண்டலங்களும் வளநாடுகள் என்ற உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. சோழ மண்டலம் என்பது சிதம்பரத்திற்கு வடக்கே ஓடும் வெள்ளாற்றிலிருந்து தெற்கே அறந்தாங்கிப்பகுதி வெள்ளாறு வரை தென்வடலாகவும், மேற்கே திருச்சி மாவட்டம் கோட்டைக்கரையிலிருந்து கிழக்கே வங்கக் கடல்வரை கிழமேலாகவும் அமைந்திருந்தது. இப் பகுதிகள் ஒன்பது வளநாடுகள் என்ற உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. வளநாடுகள் ' நாடுகள் ' என்ற உப உட்பிரிவுகளைப் பெற்றன. நாடுகள் என்பன இன்றையத் தாலூகாக்கள் போன்றன. பல கிராமங்கள் அடங்கிய ' நாடு ' என்ற தாலுகா போன்ற முக்கியத்துவம் பெற்ற நகரங்கள் கூற்றங்கள் என்ற தனிப் பிரிவு களாக அழைக்கப்பெற்றன. தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டி முடித்தபோது ' பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் ' என்று சாசனத்தில் குறிக்கப்பட்டது.

**2. ஊராட்சி மன்றங்கள் :** மாமன்னன் ராஜராஜன் சோழப் பேரரசைச் சோழ மன்னனின் தனியார்வ மேம்பாட்டுக்கு உட்படுத்தி அதனை ஐரோப்பிய ' பைசான்டைன் ' என்ற கான்ஸ்டான்டிநோபிளின் துருக்கியர் சாம்ராஜ்ய ஆரவாரத்தைப் பெற வைத்தான். ஆனல், அரசியலில் எதிர்மறை (political paradox) என்றளவில் அதே மன்னன் அவன் ஆட்சிக் காலத் திற்கு முன்பு ஏற்கெனவே சோழ அரசியலில் காணப்பட்ட ஊராட்சி மன்றங்களை மக்களாட்சிக்குரிய வலிவையும் வனப்பை யும் பெற்று விளங்கவும் செய்தான். சான்ருக, தஞ்சைக் கல் வெட்டுகள் கூறுகின்றபடி, ராஜராஜன் ஊராட்சி மன்றங்களின் ஆளுகைக்குட்பட்டிருந்த கிராமங்களில் வரி கட்ட வேண்டாதப் பகுதிகளைக் கணித்துக் கொடுத்தான். சுடுகாடு, கம்மாளச்சேரி போன்ற கிராம மக்கள் வாழ்வுக்குரிய இடங்களைத் தவிர்த்த நிலையில் ஒவ்வொரு கிராமத்தின் வரி கொடுக்கப்பட வேண்டிய நிலம் கணிக்கப்பெற அரச ஆணைகள் நாடெங்கிலும் சென்றன. இந்த வகை அரச ஆணைகள் ஊராட்சி மன்றங்களின் வாயிலாகத்தான் மக்களை அடைந்தன. இவ்வாறு அத்தியாவசிய மான இடங்களுக்கு வரி விதிப்பிலிருந்து விலக்கு அளித்ததன் மூலம் கிராம மன்றங்களின் சமுதாய நலப்பணி வளர்ச்சி அடைய வழி செய்யப்பட்டது.

நாகப்பட்டினத்து புத்தக் கோவிலுக்குப் பட்டினக் கூற்றம் ஆனைமங்கலம் என்ற கிராமத்தோடு இருபத்தேழு கிராமங்களை அளந்து கொடுக்கின்றபோது பக்கத்திலுள்ள நாடுகள் என்ற தாலூகாக்களின் மக்கள் பிரதிநிதிகளான நாட்டார் என்பவர்களைக் கலந்துதான் ராஜராஜன் கடார நாட்டு மன்னனுக்கான அந்த கௌரவத்தை வழங்கினான். கோவில்களை அமைத்து, அவற்றில் அந்தணர்களைப் பணியில் அமர்த்தி, அக் கோவில்களும் ஊர் மன்றங்களும் இணைந்து பொதுநலம் வளர்க்க ராஜராஜன் செய்த வேலைத் திட்டமும் அதன் செயல்பாடும் பெருவெற்றியாக மலர்ந்தன. இவ்வாறு மக்கள் வாழ்வில் ஓர் அங்கமாக மாற்றப் பட்டுப்போன கோவில்களைச் சார்ந்த அந்தணர்கள் ஊராட்சி மன்றங்களில் அங்கம் வகித்தார்கள். கற்ற கல்வியின் சிறப்பிற்கென வழங்கப்பட்டிருந்த நிலவுரிமையையும், நாலுவேத அறிவையும் தகுதிகளாகக் கொண்டு இந்த அத்தணர்கள் மக்களுக்குரிய ஊராட்சி மன்றங்களில் தர்ம சாஸ்திரத்தை எடுத்துச் சொல்லி நாட்டின் நீதிவழங்கு துறைக்குத் துணை நின்றார்கள். ஊராட்சி மன்றங்களின் செயல்படுந்திறனும் தரமும் இவ்வாறு மேம்படுத்தப்பட்டன. அந்தணர்கள் மட்டும் நிலவுரிமை யாளராக இருந்த பிரமதேயங்களில் காணப்பட்ட சபா என்ற ஊராட்சி மன்றங்களில் அந்தணர்கள் மட்டுமே உறுப்பினர்களாக இருந்தார்கள்.

**3. பொதுப்பணிகள் (Public Works):** கோனேரி ராஜ புரத்திற்குப் பக்கமாக ஓடும் மண்ணியாறு என்ற காவிரிக்கிளைக் கால்வாயை ராஜராஜன் வெட்டினான். இம் மன்னனின் தமக்கை குந்தவை வட ஆற்காடு மாவட்டம் பிரமதேசத்திலுள்ள குந்தவைப் பேரேரியை ஏற்படுத்தினாள். பொது மக்களுக்கு அளிக்கப் பெறும் பொதுப் பயன் அமைந்த சேவைகளை (public utility services) பொதுப்பணிகள் என்று நாம் வரையறுத்தால் ராஜராஜன் கட்டிய கோவில்கள் எல்லாம் இத்தகையப் பொதுப் பணி மன்றங்கள்தான். அது மட்டுமல்ல; பசிப்பிணிக்கு உணவும், உடல்நோய்க்கு மருந்தும், மனதிற்கு இசைந்த கலைகளின் இயலாக்கமும் இக் கோவில்களில் இலவசமாகக் கிடைத்தன என்ற அளவில் கோவிலறம் செயல்படத் தொடங்கியது. ஒரு வகை சமுதாய நெறியாகச் சோழ மன்னருக்கும் பெருங்குடியாள ருக்கும் இக் கோவிலறம் அமைவதற்கு வழி வகுத்தவன் இச் சோழனே ஆவான். 'சோழநாடு சோறுடைத்து' என்றபடி, அதனுடைய செல்வம் குறிப்பிடப்பட்டது போலச் சோழ நாடு கோவில்களுக்குரிய நாடு என்ற பெருமையை உண்டாக்கிய

கோவில் கட்டும் பணியோடு அக் கோவில்கள் சமுதாய நல மன்றங்களாகப் பரிணமம் கொள்ள ராஜராஜனே வழி வகுத்தான். பெரிய கால்வாயும், பாகூர் (பாண்டிச்சேரி பக்கமுள்ளது) நீர்த் தேக்கமும் ராஜராஜன் மேற்கொண்ட கோவில் பணிகளோடு சேர்த்து உண்டாக்கப்பட்டவை. நிலப்பரப்பிலிருந்து உயர்த்தப் பட்ட கட்டட அமைப்பின்மேல் எழுந்த மாடக்கோவிலான தஞ்சைப் பெரிய கோவிலின் பிரம்மாண்டமான கட்டுமானம், அதற் கான கருங்கற்கள், அவற்றைப் பயன்படுத்திய பணியாளர்கள் ஆகிய எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் அதுவே பெரிய தொரு பொதுப்பணியாக அந் நாளில் இருந்திருக்க வேண்டும். பல்லாயிரக் கணக்கானோர் அதை உருவாக்குவதில் பணியாற்றி இருக்க வேண்டும். கோவில் கட்டி முடிக்கப்பட்ட பின்பு பல நூற்றுக்கணக்கானோரைப் பணியில் அமர்த்திக்கொண்ட நிலையில் அக் கோவில் பொதுப்பணி மன்றமாகச் சிறந்த சேவை செய்தது.

## III. சமயக் கொள்கை

அந் நாளைய இந்து சமயம் தூய சைவம் என்றும், அந்தணர் வழிச் சமயம் என்றும் இரு பாதைகளில் சென்றுகொண்டிருந்தது. இவ்விரண்டையும் ராஜராஜன் ஒன்றுக்கினான். இரண்டும் இணைந்து உருவாக்கிய சமுதாய நலத்தில் கோவில்கள் வளர்ச்சி பெற்றன. இவ்வாறு இருவழி சமயங்களின் ஒருமையை உருவாக்கி, கோவில்களில் அதை ஆக்க சக்தியாகச் செயல்படப் பணித்த பெருமை ராஜராஜனுக்குத்தான் உண்டு.

**1. கோவில் கட்டுதல்:** தஞ்சைப் பெரிய கோவில் இவனால் கட்டப்பெற்று இவனுடைய அறிவாற்றல், பேரரசுப் பெருமிதம், அரசாட்சித்திறன் ஆகியவற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங் கியது. ஜெயங்கொண்ட சோழ மண்டலத்திலுள்ள இவனது தந்தையின் பள்ளிப்படை (சமாதிக் கோவில்) அரிஞ்சயேச்சுவரம் இவனால் கட்டப்பட்டது. ஈழத்தில் மாதோட்டம் என்ற ஊரிலும், பழையாறையிலும், திருவலஞ்சுழியிலும் இவன் கோவில்கள் அமைத்து, அவற்றிற்குத் தானங்களும் செய்தான். இதுவரை கற்றளி என்றும் கோவில் என்றும் வழங்கி வந்த கோவில் அமைப்பை ஈஸ்வரம் என்ற விண்ணகரமாக மாற்றிக் கோவில் கட்டும் கலையில் புதிய திருப்பத்தை ராஜராஜன் கொண்டு வந்தான்.

**2. இந்து சமய வரையறை:** அந்தணர்களை அவர்தம் கல்வியைச் சிறக்கச் செய்கின்ற பெரும்பணியில் ஈடுபடுத்துகின்ற வகையில் அவர்களுக்குப் பொருளாதார ஏற்றமும் சமுதாய

அந்தஸ்தும் அளித்தான். தேவதானங்கள் பெற்ற கோவில் நிர்வாகம் அந்தணர்வசம் இருந்தது. பிரமதேயங்கள், ஜீவிதங்கள், பட்டவிருத்திகள் போன்ற நிலங்கள் அவர்களுக்கு வழங்கப்பட்டன. இந்து சமயத்தின் ஜீவநாடியாகவும் கௌதம புத்தர் எதிர்த்துப் போரிட்டதுமான யாகமுறை மாற்றியமைக்கப்பட்டு, தனி மனிதனின் கடைத்தேற்றம் அவன் செய்கின்ற சமுதாய நலம் பயக்கும் தானங்களினுலும் அமையும் என்ற தத்துவம் ராஜராஜன் காலத்தில் புத்துணர்வுடன் செயலுக்கு வந்தது. இதன் அடிப்படையில் நாட்டின் நலனுக்காக அந்தணரின் கல்வியை ஒருவகை இயக்கு சக்தியாக மாற்றுகின்ற அளவில் அவர்களுக்கு நிலவுடைமைகளை ராஜராஜன் அளித்தான். சமூகத்தில் உயர் அந்தஸ்தும் நிலவுரிமைப் பொருளாதார வலிமையும் அந்தணருக்கு அவர்தம் கல்விக்காக மட்டும் பல்லவர் காலத்தில் வழங்கப்பட்டன. ஆனுல் சோழர்களின் காலத்தில் இவ்வந்தணர்களின் தனிப்பட்ட கல்வி உயர்வுக்காக மட்டுமல்லாது அக் கல்வி அறிவு சமுதாய நலமாக உரு எடுக்கின்ற பணியில் அவர்கள் தங்கள் வாழ்வில் இயக்கம் பெறுகின்ற மாட்சிமைக்காக இவ் வகையான நிலங்கள் ராஜராஜன் காலத்தில் வழங்கப்பட்டன.

இவ்வாறு நிலங்களைப் பெற்ற அந்தணர்களின் வேதமுறை சமயம் (Canonical Religion) சோழர்களின் பரம்பரைக்கு உரியதாக மாறுவதற்குக் காரணமானவன் ராஜராஜனே. இச் சமயமுறையின் ஆக்கமாகத்தான் தஞ்சைப் பெரிய கோவில் எழுந்தது. இதன் விளைவாகத் தமிழ் நாட்டில் அந்தணர் காட்டிய சமயக் கொள்கைக்குப் பெரியதோர் ஏற்றம் ஏற்பட்டது. சமஸ்கிருதத்தின் ஆதிக்கத்திற்கு எல்லாவற்றையும் மாற்றுகின்ற கலாசார நடவடிக்கைக்கு அரச முத்திரையோடு கூடிய உயர்குடியாளரின் பெரும் ஆதரவு இவ்வாறுதான் வாய்த்தது.

அந்தணரைப் போற்றிய அதே சமயம் ராஜராஜன் சைவர்களின் ஆதாரமான திருப்பதிகங்களை உலகறியச் செய்தான். நம்பி ஆண்டார் நம்பி என்பவரின் உதவியோடு தில்லைக் கோவிலில் பல நூற்றுண்டுகளாக அடைபட்டுக் கிடந்த அத் திருப்பதிகங்கள் நிரல்படுத்தப்பட்டு, கோவில்களில் அரசினரின் பொருள் உதவியோடு முறைக்காரர்களால் அட்டவணைப்படி ஓதப் பெறும் மாண்பைப் பெற்றன. நம்பி ஆண்டார் அவற்றை இசைப்படுத்தி நாள்தோறும் சோழர்களின் கோவில்களில் தமிழ் உணர்வு ஒளியைச் சிந்தி மலர்கின்ற ஆன்மீயப் பூக்களாக உயிர்க்கச் செய்த பெரும்பணியை ராஜராஜன் ஆற்றினுன்.

இவ் வகையில் இந்து மதத்தின் எதிர்கால வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் சமுதாய ஈடுபாடு அம் மதத்திற்கு ஏற்பட்டது. இவ்வாறு சைவத்தின் உயிராக்கமான திருப்பதிகங்கள் கோவில் களில் இசைக்கப்பட்டுச் சோழர்காலம் சைவத்தின் பொற்காலம் என்றழைக்கப் பெறுகின்ற உயர்வளர்ச்சிக்கு வழிவகுத்த பெருமை ராஜராஜனைச் சாரும்.

**3. கோவில்கள்—ஓர் இயக்கு சக்தியாதல் :** இந்துமதம் நிறுவன முறையில் (Institution) இயக்கம் (Organisation) பெறாத ஒன்று என்ற பழைமை வாதத்தை முறியடித்து அம் மதம் மக்களிடையே இயக்கம் பெறுகின்ற அளவில் மூலபலமாக ஆக்கி வைத்தான் ராஜராஜன். ஆடல்மகளிர் போன்ற கலைவல்லுநர் களான பலதுறைப் பணியாளர்களை வேலை வாங்கும் ஆண்டை யாகவும், கல்வி பரப்பும் படிப்பகமாகவும், தங்கம், வெள்ளி, நெல் போன்றவற்றை மற்றவரிடமிருந்து வாங்கிப் பத்திரப்படுத்திப் பின்பு அவற்றை வட்டிக்குக் கொடுக்கின்ற வங்கியாகவும், ஓவியம் போன்ற கலைகளுக்குரிய கருவூலமாகவும், பிணியாளர்களுக் குரிய மருத்துவச் சாலையாகவும், சோழர்கால கோவில்கள் நீடிய முறையில் செயல் பெறுகின்ற பாரம்பரியத்தை உருவாக்கியவன் ராஜராஜ சோழனே ஆவான். தஞ்சையில் அவன் கட்டிய கோவிலைத் தனது படைகளுக்கு வேண்டிய மனோசக்தியின் ஆதாரமாகவும் அவன் இயங்க வைத்தான். அவனுடைய படை அமைப்புகள் தஞ்சைப் பெரிய கோவிலில் உறுப்பினர்களாகவும், பாதுகாவலர்களாகவும், தங்கம் சேமித்து வைத்த அறப்பணி யாளர்களாகவும் விளங்கின. இவ்வாறு அமைக்கப்பட்ட கோவில்களை நிர்வாகஞ்செய்ய அமைக்கப்பட்ட ஆட்சியாளர் களையும், அவர்தம் கணக்குகளையும் தணிக்கை செய்ய நாடெங் கிலும் அதிகாரிகளை அனுப்பிய முறைமை அந் நாளைய ஆட்சித் திறத்தைக் காட்டிற்று. தனது சிற்றப்பா உத்தமச் சோழனுடைய மகன் கண்டராதித்தியனை இத்தகைய அறப்பணிகளை மேற் பார்க்கும் ராஜீய அதிகாரியாக ராஜராஜன் நியமித்திருந்தான். இவ்வாறு கோவில்களும் மடங்களும் மக்கள் மத்தியில் இயக்கு சக்தியாக வேலை செய்கின்ற அமைப்பைக் கட்டியவன் என்ற முறையில் இந்து மதத்தையும் புத்தமதம் போன்ற இயக்கபூர்வ அமைப்பாக மாற்றிய பெரும்பணியை இவன் ஆற்றியவனாகிறான். இவனுடைய நிர்வாகப் புலமை செறிந்த கோவிலற எண்ணத்தின் பிரதிபலிப்பாகத்தான் இன்றுள்ள கோவில்கள் எல்லாம் தனி வளர்ச்சி ஒற்றையாட்சி நிறுவனங்களாக விளங்குகின்றன.

**4. சமயம்—ஓர் அரசியல் ஆயுதம் :** ராஜராஜ சோழ னுடைய அரசியற்சிந்தனை எப்போதுமே ஆழமும் வேகமும்

கொண்டது எனச் சொல்லலாம். சாதி ஆசாரங்களின் பிடிப்பில் தனிமைப்பட்டுக் கிடந்த கூட்டங்களாக வாழ்ந்து வந்த அவன் காலத்துத் தமிழர்கள் தங்களுக்கென அமைந்த ஓர் அரசு, ஓர் அரசன், ஒரு நாடு, ஒரு மதம் என்ற தேசீய உணர்வுத் தளிர்களைத் தங்கள் வாழ்க்கைப் பாதையில் பெற்றிருக்கவில்லை. இதை நன்கு உணர்ந்த ராஜராஜன் இந்து சமயத்தின் துணையை நாடி அத்தகைய ஒருமிப்பு உணர்வை நிலைநாட்ட விழைந்தான். இதன்படி கோவில்களும் அக் கோவில்களின் மூலவர்களும் சோழ அரசர்களின் பெயர்களாலேயே வழங்கப் பெற்றன. தஞ்சைப் பெரிய கோவில் ராஜராஜேச்சுவரம் என்றழைக்கப்பட்டது. 'உடையார்' என்ற மூலவரின் பெயர் 'உடையார்' என்ற விருதுடைய ராஜராஜனுக்குரியது. இக் கோவிலின் ஒரு வாயில் 'கேரளாந்தகன்' என்றழைக்கப் பெற்று, பேரரசின் இராணுவ வெற்றியின் பெருமையைச் சொல்லியது. பழையாற்றில் இவன் கட்டிய கோவில் இவனது இயற்பெயரைக் கொண்டு 'அருண் மொழித் தேவேச்சுவரம்' என்று அழைக்கப் பெற்றது. சோழ அரசுக்கு அடங்கிப்போன ஈழத்தவருக்குப் பொலனருவாவில் ஏற்பட்ட கோவில் ராஜராஜேச்சுவரம் என்றழைக்கப்பட்டது. சேர நாட்டில் திருநந்திக்கரை என்னும் ஊரிலுள்ள சிவன் கோவிலில் சோழ மன்னர்களின்மேல் பற்று வளர இவ் வகைத் திருவிழாக்கள் நடத்தப்பட்டன. அவனுடைய பிறந்த நாளாகிய 'சதயத் திருநாளை' நாடெங்கிலும் கோவில்களில் கொண்டாடச் செய்கின்ற ஏற்பாடுகளை மேற்கொண்ட பாணியில் தங்கள் மன்னன்பேரிலுள்ள பற்றுதலைக் காட்டத் தலைப்பட்டார்கள் அந் நாளைய அரசியலதிகாரிகள். இவ்வாறு மக்கள் கூடும் திருவிழா மன்னன் பெயரிலேயே எடுக்கப் பெற்றது. இவ்வாறு ராஜராஜனுடைய சமயக் கொள்கை அவனுக்குரிய பொதுநல உணர்ச்சியோடு பின்னி நின்ற அரசியல் சார்பினையுங்கொண்டு விளங்கியது.

ஐரோப்பிய வரலாற்றில் சில நாடுகளில் அரசர்களாகத் தமையன்மார்களும் நாட்டின் அரசியலை அரசர்களோடு பங்கு போட்டுக்கொண்ட திருச்சபைக்குரிய பெரிய ஆயராக (Archbishop) அரசர்களுடைய தம்பிமார்களும் அமைந்த நிலையில் அரசியலும் சமயமும் அரச குடும்பத்திற்குரியவையாக மாறிக்கொண்டதைப் பார்க்கிறோம். இது போன்ற அப்பட்ட மான அரசியல் கலவை சோழர் காலத்திய சமய ஒழுகலாற்றில் ஏற்படவில்லை. ராஜராஜன் அரசியலைச் சமயத்திலிருந்து பிரித்து வைக்காவிட்டாலும் சமயத்தின் பிடிப்புக்கு அரசை உட்படுத்த வில்லை. எனினும், அந்தணர்கள் சோழ அரசுக்குரிய பாது

காவலர்களாக ஆங்காங்கே இயங்கினுர்கள். மக்களுடைய சிந்தனையை உருவாக்குகின்ற சமுதாயச் சார்பான மதக்கருத்துகளை அந்த அந்தணர்கள் சொல்ல, அக் கருத்துகளைப் பிரதிபலித்து நடத்த திருவிழாக்கள் சோழமக்களை ஓரிடம் ஈர்த்து ஒரே கலாசார ஒற்றுமை உணர்வில் திரட்டியது. அவ் வகை ஒற்றுமை உணர்வைத் தன்பக்கம் நோக்கிப் புகட்டக்கூடிய அளவில் அரசன் பெயரிலேயே உள்ள கோவில்கள் அக் காலச் சமூக இயலுக்குரிய ஆதாரச் சக்தியாகப் பரிணமங்கொண்டன. இவ்வாறு சோழ அரசர்களின் உருவ மதிப்பு (image) வினைத்திட்பத்தோடு உருவாக்கப்பட்டது. இதனைச் செய்து காட்டக்கூடிய சிந்தனைத்திறனும் கற்பனைவளமும் கொண்ட ராஜராஜன், 'தீன் இலாஹி' என்ற பெயரோடு தான் உருவாக்கிய பொது மதத்தின் மூலம், பிளவுபட்டுக் கிடந்த இந்தியாவை ஒற்றுமைப்படுத்த முயற்சி செய்து அழகாகத் தோற்றுப்போன அக்பர் சக்கரவர்த்தியைவிடச் செயலாக்கத்தில் சிறந்து விளங்குகிருன்.

**5. துலாபாரம், தானம் செய்தல் :** தானம் செய்தல் இந்து மதத்தின் பொதுமை அறமாக ஆன பின்பு, ராஜராஜன் துலாபாரம் போன்ற தானங்களைச் செய்தான் ; திருவியலூரில் இவனும் இவனுடைய மனைவி தந்தி சக்திவிடங்கியாரும் துலாவின் ஒருபக்கம் உட்கார்ந்து மறுபக்கம் பொன் வைத்து நிறுத்து, அப் பொன்னைத் தானமாகக் கோவிலுக்கும் அந்தணருக்கும் வழங்கினுன் (கல்வெட்டு : 42 of 1907). இவனுடைய மனைவி இரணிய (தங்கம்) கர்ப்பம் புகுந்தாள். பொன்னுலான பசுவின் வயிற்றுள் சென்று மீள்தல் அவ்வாறு அழைக்கப் பெறும். அத்தகைய பொன்பசுவையும் தானமாக அளித்தான். இவ்வாறு 'தானம்' கருத்தை நடைமுறைத் தத்துவமாக ஆக்கியவன் ராஜராஜனே. போரில் கவரப்பட்ட பொருள்கள் சோழ அரசியலைப் பொறுத்தமட்டில் அரசனைத்தான் சாரும். 222 கிலோத் தங்கமும். 266 கிலோ வெள்ளியும் பெரிய கோவிலுக்கு ராஜராஜன் வழங்கிய செய்தியோடு இவனுடைய தமக்கை குந்தவை 44·5 கிலோ தங்கமும் 18,000 காசுகள் பெறுமான பாத்திரங்களும் அதே கோவிலுக்குத் தானமாக அளித்ததை இணைத்துப் பார்க்க வேண்டும். இந்த அரசகுலப் பெண்மணிப் போல ராஜராஜனின் சிற்றப்பன் உத்தமச் சோழனுடைய மனைவி செம்பியன் மாதேவியும் பற்பல அறக்கட்டளைகளைச் செய்ய உறுதுணையாக இச் சோழனே அமைத்தான். இவ்வாறு தானம் செய்வது அரசருக்கு அழகு என்ற அரசகுலப் பாரம்பரியத்தை ஒருவகை 'ஒழுகலாறு என அமைத்துச் சென்றவன் ராஜராஜனே.

**6. அந்தணர் தனிச்சலுகை பெற்றவராதல் :** சதுர்வேதி மங்கலங்கள் அந்தணர்களுக்கு அளிக்கப்பட்டன. அந்தணர்கள் பெரும்பான்மையராய்க் காணப்பெற்ற கிராமங்களில் ஏனைய வகையினரின் நிலங்களும் இருந்தன. அக் கிராமங்களில் செயல் பட்ட ஊராட்சி மன்றங்கள் ஒருமித்த தன்மையில் செயல்பட முடியவில்லை. அந்தணரல்லாதாரின் நிலவுரிமைதான் இதற்குக் காரணம். ஆகவே, 1002ஆம் ஆண்டில் ராஜராஜன் அந்தணரல்லாதார் தத்தம் நிலங்களை அந்தணருக்கு விற்றுவிட வேண்டும் என்ற ஆணையைப் பிறப்பித்தான். அந் நிலங்களை விலைக்கு வாங்க முடியாத அந்தணரின் சார்பில் அந்த நிலங்களை அரசனுடைய தமக்கை குந்தவை வாங்கிக் கோவிலுக்கு அளித் தாள். இவ்வாறு தானம் என்ற தத்துவம் சோழர் காலத்தில் பெற்ற ஏற்றத்தினால் அந்தணர்கள் நிலவுரிமையாளர்களாகவும், தனிப்பட்ட ஊரினராகவும், ஊராட்சி மன்றத்தினராகவும் செயல் பட்டு, சமுதாயத்தின் நலனுக்குத் துணை நிற்க வேண்டிய கடமைக்கு உட்பட்டு விளங்கினார்கள்.

**7. சமயப் பொறை :** இந்துமதத்தில்—அதிலும் குறிப்பாகச் சைவ நெறியில்—மன ஈடுபாடு கொண்ட ராஜராஜன் மற்ற மதங்களையும் ஆதரித்தான். இவனுடைய தஞ்சைப் பெரிய கோவிலில் சமணப் படிவங்கள் செதுக்கப்பட்டன. நாகப் பட்டினத்தில் புத்தகோவிலைக் கட்ட கடாரத்தின் ஸ்ரீ விஜயநாட்டு மன்னன்மாற விஜயதுங்கவர்மன் என்ற மன்னனுக்கு அனுமதி யும், அக் கோவிலுக்கு முற்றூட்டாக ஆனைமங்கலம் என்ற பகுதி யையும் இவன் அளித்தான். இவனுடைய தமக்கை குந்தவை தற்போது தாராபுரம் என்று வழங்கப்பெறும் ராஜராஜபுரத்தில் பொன்னாலான நாமம் போன்ற நகைகள் கொண்ட திருமால் கோவிலையும் சமணக் கோட்டத்தையும் கட்டினாள். நம்பி ஆண்டார் நம்பியால் இசைப்படுத்தப்பட்ட சைவத் திருப்பதிகம் போல நாதமுனியால் நிரல்படுத்தப்பட்ட வைணவத் திருவாய் மொழியும் வைணவக் கோவில்களில் அரசின் ஆதரவோடு பாடி ஓதப்பட்டன. எல்லாச் சிவாலயங்களிலும் விஷ்ணுவுக்கும் இடம் இருந்த முறை பழைமையான பாரம்பரியத்தைச் சார்ந்தது. சிதம்பரத்தில் நடராஜனின் முன்றிலில் கோவிந்தராஜ பெருமாள் சிலையும் காணப்பட்டது.

**8. சமய வாழ்வுப் பெரியோரைப் போற்றல் :** அருள் வாழ்வில் மாமனிதர்களாக விளங்கிய சைவ நாயன்மார்களை வழி படுகின்ற முறையில் அவர்களின் சிலைகள் பெரிய கோவிலில்

வழிபாட்டுக்குரிய முறையில் நிலைத்து வைக்கப்பட்டன. தஞ்சைப் பெரிய கோவிலின் மூலவரான லிங்கமூர்த்தியான பிரக தீஸ்வரர் என்ற பெருவுடையாரைப் பிரதிட்டை செய்யப் பொதிகை மலையினின்றும் சைவப் பெரியார் கருவூர்த்தேவர் ராஜராஜனுல் வரவழைக்கப் பெற்ருர். கோவிலின் செப்புக்குடங்களை அளித்த ஈசான சிவபண்டிதர் அச் சோழனுக்கு அமைந்த ராஜகுரு ஆவார். ராஜராஜனுல் அவைக்களத்தில் பெரிதும் மதிக்கப் பெற்ற நம்பி ஆண்டார் நம்பியின் பாடல்களும் திருப்பதிகத்தில் சேர்க்கப்பெற்றன.

## IV. பொருளாதாரக் கொள்கை

ராஜராஜன் காலத்தில் நில விளைச்சல் கணிசமாக இருந்ததன் காரணமாக 40 சதவீதம் மொத்த விளைச்சலில் அரசிற்குரிய வரியாக வாங்கப்பட்டது. இது நாட்டின் பொருளாதார வளத்தைக் காட்டும். செல்வத்தின் உயர்வில் திளைத்த சமுதாயத்தில்தான் ஏராளமான கோவில்களைக் கட்டக்கூடிய அளவில் முதலீட்டுச் செலவு (Investment Expenditure) செய்ய இயலும். இவ்வாறு ஊர்தோறும் ஏற்படுத்தப்பட்ட கோவில்களே இத்தகைய பொருளாதார மேம்பாடு ராஜராஜன் காலத்தில் நிலவியதைக் காட்டும். விளை நிலத்தை நம்பியிருந்த சோழர் காலப் பொருளாதாரம் வலிமை மிக்க ஆதாரத்தைப் பெற்று விளங்க ராஜராஜன் சில சீர்திருத்தங்களை மேற்கொண்டான்.

**1. நில அளவை :** 1001-ஆம் ஆண்டில் சோழ ராஜ்யம் முழுமையும் அளக்கப் பெற்றது. நிலங்கள் தரத்திலும் பரப்பள விலும் வகைப்படுத்தப்பட்டன. அவற்றின் அடிப்படையில் வரிகள் விதிக்கப்பெற்றன. விளை நிலங்கள் எப்போதுமே பயன்பட வேண்டும் என்ற பொருளாதாரச் சிந்தனையின்படி 1009ஆம் ஆண்டில் ராஜராஜன் வரி கொடாது தொண்டை, சோழ, பாண்டிய மண்டலங்களிலுள்ள கிராமங்களை வெறுத்து வேறிடம் போனவர்களின் நிலங்களை மூன்ருண்டு முடிவிற்குள் அரசு எடுத்துப் பொது ஏலமான 'ஆக்ஞாகிரயம்' செய்யப் பணித்தான். ராஜராஜனின் தமக்கை குந்தவையின் கணவர் வல்லவரையர் வந்தியத் தேவரின் உடையார்பாளையம் பக்கமுள்ள பழுவூரில் ' நந்திபுரத்து ஆதி அளவை ' என்ற அளவையை ' மன்றுபாடு ' என்ற வரியை வாங்குவதற்குப் பயன்படுத்தினுர்கள்.

**2. நீர்ப்பாசன ஏற்பாடுகள் :** மேலே சொல்லப்பட்ட பொதுப்பணித் துறையில் காணப்பட்டது போல மண்ணியாறு,

பெரிய கால்வாய், பாகூர் நீர்த்தேக்கம், குந்தவை நீர்த்தேக்கம் என்பவை வேளாண்மைக்குத் துணை செய்தன.

**3. புது நிலவுடைமையாளர்களைத் தோற்றுவித்தல் :** ராஜராஜன் கோவில்களுக்கு ஏராளமான நிலங்களை தேவதானமாக வழங்கினுன். இவ்வாறு நாட்டின் நிலவுடைமையாளர்களில் கோவில்களும் ஒரு பகுதியாகக் காணப்பட்டன. கோவில்களின் சொத்துகள் சோழ மக்கள் நுகர்கின்ற பொதுப்பணி மன்றங்களாக எல்லா மக்களுக்கும் பயன்பட்ட காரணத்தால் இத்தகைய நிலவுடைமை மாற்றம் நாட்டின் பொருளாதாரத்தை மக்களுக்குரிய நலத்தை வழங்குகின்ற வகையில் மாற்றியது பெருமளவிற்கு நிலங்களைப் பெற்ற அந்தணர்கள் கோவிலறம் பேணவும், கல்விச் சார்பான வாழ்க்கையை மேற்கொள்ளவும், நாட்டுக்கு நல்லறஞ்சொல்லுகின்ற செந்தண்மை கொண்டு சமூகத்தின் நல்லொழுக்கச் சீலர்களாக ஏனைய மக்களுக்கு முன்மாதிரியாக இருக்கவும் ராஜராஜனுல் எதிர்பார்க்கப்பட்டார்கள். செல்வத்தின் தினவில் நிலை பிறழ்ந்து வாழ்கின்ற செல்வந்தருக்கு மத்தியில் ஆன்மவழிச் செல்லுகின்ற எளிமை வாழ்வு அந்தணர்கள் சமுதாயத்தின் மனசாட்சியைக் காப்பவர்களாக (keepers of social conscience) விளங்கிட நிலவுடைமையாளர்களாக ஆக்கப்பட்டார்கள். இவ்வாறு பொருளாதாரம், சமூகவியலின் உயர்வான வளர்ச்சிக்கே என்ற ராஜராஜனின் கருத்து செயலாக்கங்கொண்டது.

**4. சீன நாட்டுக்கு வணிகக்குழு அனுப்புதல் :** 1015-ல் ராஜராஜன் வெளிநாட்டு வணிகத்தின் வளர்ச்சியின்பொருட்டுச் சீனநாட்டுக்கு வணிகக் குழுவினை அனுப்பி வைத்தான். இதைத் தொடர்ந்து 1033-ல் ராஜேந்திரன் I, 1077-ல் குலோத்துங்கன் I ஆட்சிக் காலங்களில் சீன நாட்டுக்கு வணிகக் குழுக்கள் சென்றன. ராஜராஜனுல் நாகப்பட்டினத்தில் புத்தக் கோவில் கட்ட அனுமதியும் நிலக்கொடையும் அளிக்கப் பெற்ற ஸ்ரீ விஜயத் தாரை, இராணுவ முறையில் அவர்கள் நாட்டுக்குக் கடல் கடந்து சென்று தாக்க வேண்டிய அளவில் ராஜராஜனின் மகன் ராஜேந்திரன் காலத்தில் கடல் வாணிபம் வளர்ந்து சிறந்து விளங்கியது. இவ் வகையான வணிகத்தின் வளர்ச்சியின் தொடக்கம் ராஜராஜன் ஆட்சிக் காலத்தில்தான் ஏற்பட்டிருக்க வேண்டும். 1015-ல் சீன நாட்டுக்குச் சென்ற வணிகத் தூதுவின் வெற்றியின் பயன் கணிசமான வணிக வளர்ச்சியாகக் காணப்பட்ட காரணத்தால்தான் பத்து ஆண்டுகளில் (அதாவது 1025-ல்) கடாரப்படையெழுச்சியை நடத்தி, அவ் வணிக வளர்ச்சியைக்

காத்துக்கொள்ள வேண்டிய அவசியம் உண்டாயிற்று. அரசியல் காரணமாக இப் படையெழுச்சி ஏற்படாமல் வணிகத்தின் சார்பாகத்தான் ராஜேந்திரன் தனது கடற்படையை அனுப்பினான் என்ற வரலாற்று உண்மை ராஜராஜன் காலத்தில் காணப்பட்ட வெளிநாட்டு வாணிபத்தின் வளர்ச்சி நிலை உயர்ந்து இருந்தது என்பதைத்தான் காட்டும்.

5. **அளவைகள் நிலை பெறல் :** ராஜராஜன் காலத்திய பொருளாதாரம் ஆற்றொழுக்காகத் தடையின்றி இயங்கியது எனலாம். 'ராஜராஜ மாடை' என்ற பொன் நாணயம் இவன் காலத்தில் வெளியிடப்பட்டது. அது வெகு காலமாக ராஜராஜ சோழன் காசு என்றழைக்கப்பட்ட மற்றொரு நாணயத்தைப் போல நாடெங்கிலும் வழக்காற்றில் இருந்தது. நில அளவில் பயன்படுத்தப்பட்ட பதினாறு சாண் நீளமுள்ள 'உலகளந்த கோல்' மற்ற மன்னர்கள் காலங்களிலும் சோழ நாட்டின் அளவையாக ஒப்புக்கொள்ளப்பட்டது. குலோத்துங்கன் I காலத்தில்தான் இது 'ஸ்ரீ பாத அளவுகோல்' என்று மற்றோர் அளவைக்கு வழி இட்டது.

6. **போரில் கவரப்பட்ட நிதியமும் பொருளாதார நிலையும் :** ராஜராஜன் மேற்கொண்ட வல்லடிப்போர்களால் சோழ நாட்டுக்கு என்ன பயன் ? பயனில்லாமல் பிற நாட்டைப் பிடிக்க அவ்வளவு ஆள்செலவும் பொருள்செலவும் வேண்டுமா ? இந்தக் கேள்விகளுக்குப் பதிலாகச் சோழநாட்டுக்கு வெல்லப்பட்ட நாடுகளிலிருந்து வந்த நில வருமானத்தைத்தான் குறிப்பிட முடியும். இரட்டப்பாடி ஏழரை இலக்கம் என்பது இரட்டப்பாடியின் வருவாய் ; அதனுடைய நிலவள பூமியின் அளவைகளான ஏழரை இலட்சம் பூமி என்று வழங்கப்பட்டது. இத்தகைய வருவாயெல்லாம் போர்களின் விளைவுகளால் வந்தது. போரினூடே சோழருக்குக் கிடைத்த பெருநிதியங்கள் கோவில்களுக்குக் கொடுக்கப்பட்டன. சாளுக்கியப் போர்களில் அபகரித்த பொருள்களில் தங்கமும் வெள்ளியுந்தான் அதிகம். இவை புழக்கத்தில் விடப்பட்டிருந்தால் பணவீக்கம் ஏற்பட்டுச் சோழப் பொருளாதாரத்தில் சீர்கேடுகள் தோன்றி இருக்கக்கூடும். இதை எண்ணியே ராஜராஜன் அவனுக்கு முன்பு ஆதித்த சோழன் கொங்குநாட்டை வென்று கொண்டு வந்த தங்கத்தைத் தில்லைக்குத் தந்தது போல மேலைச் சாளுக்கியரோடு நடந்த போர்களில் கிடைத்த 222 கிலோ தங்கம், 266 கிலோ வெள்ளி ஆகியவற்றைத் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வழங்கினான்.

அரசனைப் பின்பற்றிப் படை அமைப்புகள் (Army Regiments) பலவும் தங்களுக்கு உரிமையான தங்கத்தைப் பெரிய கோவிலில் சேமித்து வைத்தனர்; பொருளாதார வளர்ச்சிக்காக அதை விரும்பிக் கேட்ட கிராமங்களுக்கு அதை வட்டிக்குக் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தனர். டெல்லிச் சுல்தான் அலாவுதீன் கில்ஜி என்ற வல்லாட்சியாளன் தனது படைக்குக் கொடுக்க வேண்டிய சம்பளப்பணம் போதுமான அளவில் கையில் இல்லாத காரணத்தால், போர் வீரர்களுக்கு அவன் அளித்த குறைந்த ஊதியப் பணத்திற்கு அதிகமான பொருள்களைக் கொடுக்குமாறு டெல்லிச் சந்தையினரை வாள்முனையில் மிரட்டிய நிலையில் முரட்டுப் பொருளியல்வாதி (crude economist) என்ற பெயர் பெற்றிருக்கிறான். இல்லாமையை எண்ணி அலாவுதீன் ஓர் அசுரக் குழந்தையாக நடந்துகொண்ட இந்த நிகழ்ச்சியோடு ராஜராஜனுடைய பெருஞ்செல்வத்தையும், ஏற்கெனவே பெருஞ் செல்வத்தின் செலவழிப்பால் உருவான தஞ்சைப் பெரிய கோவிலில் அது சேமிக்கப்பட்டிருந்ததையும், அவனுடைய போர் வீரர்கள் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்த பின்பு எஞ்சியுள்ள தங்கத்தை அதே கோவிலில் சேமித்து வைக்கக்கூடிய பொருளாதார வாழ்க்கைத் தரமுயர்வைப் பெற்றிருந்தார்கள் என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இவ்வாறு பொருள் இல்லாமையால் தன் மனநிலை பிறழ்ந்து நடந்துகொண்ட அலாவுதீனைவிட எல்லாம் இருக்கின்ற பெருமையில் பூரித்து நின்ற ராஜராஜன் அடக்கத்தோடும் நாட்டின் பொருளாதாரச் சீர்மையைக் கருத்தில் கொண்டும் போரில் கவர்ந்த பொருள்களுக்கான ஆன்மீயப் பிராயச்சித்தத்தைத் தன் நினைவில் தாங்கி, இத்தகைய செல்வத்தைக் கோவிலில் சமப்படுத்தப்பட்ட மூலதனம் (neutralised capital) என்ற நிலையில் 'துயில்' கொள்ளச் செய்தான். இந் நிதியங்களின்பேரில் வட்டிக்கு வாங்குவோர் மிகக் குறைவாக இருந்த காரணத்தால், நாடு தழுவியப் பொருளாதாரப் பாதிப்புகள், அவற்றைக் கடனாகக் கொடுப்பதன்மூலம் ஏற்பட வகை இல்லாமல் போயிற்று.

இவ்வாறு தங்கம் போன்ற பணவியலுக்குரிய உலோகங்களை (bullion) கோவிலில் முடக்கி வைத்து நாட்டின் பொருளாதாரத்தைக் காப்பாற்றி அரசாட்சி செய்த சிந்தனைச் செம்மலான ராஜராஜன் பொருளாதாரத் துறையில் ஆன்மீக உணர்விற்கு வேண்டிய நடைமுறைப் பாங்கோடு காட்சி அளித்தான்.

### V. இலக்கியம், கலைச் சேவைகள்

குறிப்பிடத்தக்க இலக்கியப் படைப்பாளிகள் ராஜராஜன் காலத்தில் காணப்படவில்லை என்றாலும் ஓவியக் கலையும், சிற்ப

சாஸ்திரமும் அவன் ஆட்சியில் பெருவளர்ச்சி பெற்றிருந்ததற்குத் தலைசிறந்த சான்று தஞ்சைப் பெரிய கோவில்தான் சைவப் பெருமகன் நம்பி ஆண்டார் நம்பி சில பாடல்களைப் பாடினுர். அவை சைவத் திருமறையாக இடம் பெற்றுள்ளன. திருவாசகம் போன்ற தெள்ளமுத இலக்கிய துடிப்பு கொண்ட ஆன்மீயச் சொல்லருவியைத் தமிழகத்தின் கோவில்களுக்குத் திருப்பிவிட்ட பெருமை ஒன்றே ராஜராஜனுடைய ஆட்சிக் காலத்தின் இலக்கிய வளர்ச்சியின் உயர்வைக் கணிக்கப் போதுமானது. தில்லைக் கோவிலில் தேங்கிக் கிடந்த அப் பதிகங்கள் ராஜராஜனுல் வெளிக் கொண்டு வரப்பெற்றன. தமிழகத்தின் கலாசார வரலாற்றில் நிகழ்ந்த மிக முக்கியமான சம்பவம் இது எனலாம். ஐரோப்பாவில் மறக்கப்பட்டுப் போன இலக்கியங்களுக்குத் திரும்பவும் உயிர் ஊட்டி, ஐரோப்பாவில் மறுமலர்ச்சியைக் (Renaissance) கொண்டு வந்த இத்தாலியின் பெட்ரார்க் போன்று ராஜராஜனும் சைவத்தின் உணர்வுப் பூர்வமான மறுமலர்ச்சிக்குத் திருப்பதிகங்களை உலகறிய வழிகாட்டினுன். பாராட்டுபவர் இல்லையானுல், இலக்கியங்களுக்கு வாழ்வு கிடையாது. ராஜராஜனுடைய ஆணைப்படித் திருப்பதிகப் பாடல்களை நம்பி ஆண்டார் நம்பி இசைப்படுத்திய பின்பு 'ஊன் கலந்து உயிர் கலந்து' பாடப்பட்ட அந்த இலக்கியம் உயிர் பெற்று கோவில்களிலும் மடங்களிலும் ராஜராஜனின் தமிழ்த் தொண்டு சிறந்திட முறையோடும், அளவை இட்ட இசையோடும் பாடப்பெற்றது. இவ்வாறு பல ஆண்டுகளுக்கு முன்பே சைவ மன ஆர்வ மாட்சிமையாக வளர்ந்த இலக்கியம் ராஜராஜன் காலத்தில் உயிர் துலக்கம் பெற்று வாழும் இலக்கியமாக வளர்கின்ற இலக்கிய உணர்வுக்கு ராஜராஜன்தான் வழிகாட்டினுன்.

மெய்க்கீர்த்திகளை இலக்கியம் என்று ஒப்புக்கொண்டால், இவனுடைய கல்வெட்டுகளை அக் காலக் கல்வியின் வளர்ச்சிச் சின்னங்கள் எனலாம். இக் கல்வெட்டுகள் அளவிறந்து காணப்பட்ட கோவில்களில் ஆடல் மகளிர் ஆட, காந்தர்வர் என்ற நட்டுவனுர்கள் அவர்களைப் பயிற்றுவிக்க, பாட்டும், நாடகமும் அரசன் ராஜராஜனின் பெரும் ஆதரவுடன் நிகழ்ந்தேறின. 'ராஜராஜ நாடகம்' என்ற நாடகம் தஞ்சைப் பெரியகோவிலில் ராஜராஜன் காலத்திலேயே நடிக்கப் பெற்றது. ராஜேந்திரன் I தன்னுடைய ஆட்சியின் நான்காவது ஆண்டில் இந் நாடகம் நடத்துகின்றவருக்கு ஆண்டுதோறும் 120 கல நெல் அரசின் மானியமாக வழங்கப் பெற ஏற்பாடு செய்தான். அளவிற்கு அதிகமான முறையில் அந்தணர்வழிச் சமயத்தை (Canonical Religion) ராஜராஜன் ஆதரித்ததன் காரணமாகத் தந்தைக்கும் மகனுக்கும் மனவேற்றுமை ஏற்பட்டுத் தஞ்சைப் பெரிய கோவிலின்

கட்டுமானம் பூர்த்தியாகாமல் போய்விட்டது என்ற ஆராய்ச்சிக் கருத்துக்கு ராஜேந்திரனின் இந்த நாடக மானியம் அளித்த செய்தி சரியான மறுப்பாக அமையும் எனச் சொல்லலாம்.

## VI. மக்களுக்கு உரிய மாமன்னன்

உள்நாட்டு ஆட்சியில் சோழ அரசின் பேராதிக்கத்தைக் கீழ்ப்படிதலுள்ள அதிகாரிகளின் துணைகொண்டு பேரரசு எங்கும் நிலைநாட்டியவன் ராஜராஜன்தான். இவ்வாறு உருவாக்கப்பட்ட உள்ளாட்சியின் வலிமை குலோத்துங்கன் I (1070-1120) காலம் வரை நீடித்தது. குலோத்துங்கன் I காலத்தில்தான் தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தம் பண்ணிக்கொள்ளக் கூடிய நாடாள்வான்களும் தங்களுடைய சுயநல ஆட்சியை மக்கள்மேல் திணிப்பதற்குரிய தனிவலிமைப் பெற்ற 'முதலிகள்' என்ற அதிகாரிகளும் தோன்றுவதற்குரிய அறிகுறிகள் காணப்பெறத் தொடங்கின. குலோத்துங்கன் I அரசாட்சிக் காலத்தில் உருக் கொண்ட இத்தகைய உட்சிதைவு சோழ அரசியலில் யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட அரசியல் குறைபாடாகப் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்றது. ஆகவே, ராஜராஜன் கட்டி வைத்த உள்ளாட்சி முறை அவன் காலத்தில் பெற்ற வலுவின் காரணமாக முன்னூறு ஆண்டுகள் (985-லிருந்து 1218) வரை நலிவுறுமல் நடைமுறையில் இருந்தது எனலாம்.

பேரரசுக்கு என அமைந்த அரசாட்சி முறையின் உண்மையான வலிமை, ராஜராஜனுடைய நேரடிப்பார்வையில் உள்துறை ஆட்சி தன்னியக்கம் பெற்றதில்தான் உருக் கொள்ளத் தொடங்கியது எனலாம். சான்ருக, 1001ஆம் ஆண்டில் மகேந்திர மங்கலம் என்ற பிரம்மதேயக் கிராமத்தின் சபாவினர் தங்களை நீரில் அமிழ்த்தியும், வெயிலில் நிற்க வைத்தும் வரி வாங்கிய படையிலார் என்ற இராணுவத்தினர் செய்த இடர்ப்பாட்டை (வேதனை) ராஜராஜனிடம் முறையிட்டுச் சொல்லத் தஞ்சையம் பதிக்கு வந்தனர். இதுபற்றி அவ்வூர்க் கல்வெட்டு கூறுகிறது.[1] இவ்வாறு குடிகளின் குறை தீர்க்கும் மன்னனுகவும், அக்குறைகளைத் தீர்க்கின்ற தன்னுடைய அரசக் கடமையுணர்வில் சோழ மக்கள் கொண்ட நம்பிக்கைக்குப் பாத்திரமான அரசியல் அறிவாளனுகவும், 'காட்சிக்கு எளியன்' என்ற அளவில் மக்கள் தன்னைப் பார்க்கின்ற முறைமையை மேற்கொண்ட மன்னுயிர் போற்றும் மன்னன் ஆகவும் ராஜராஜன் விளங்கினுன். அவனுடைய ஆட்சியில் உள்நாட்டு ஆட்சித்துறை பெற்றிருந்த வலிமை அவனுடைய இந்தக் கடமையுணர்ச்சியின் காரணமாக நிலைபெற்றது என்பது அவன் காலத்திய ஆட்சிக்குரிய மாட்சிமைக்குரிய பெருஞ்சாதனையாக விளங்கியது.

[1] K. A. N. Sastri—'Cholas'—p. 537; 159 of 1895

## VII. உள்நாட்டு நிர்வாகத்தில் சிற்றரசர்கள், ஆட்சியாளர்கள், அதிகாரிகள்

திருச்சி மாவட்டம் பழுவூரின் பழுவேட்டரையர், கொங்கு நாட்டின் கொல்லி மழவன், நற்றியூரான் பிரதி கண்ட வர்மன், வட ஆற்காடு திருவல்லத்தைச் சார்ந்த சங்கரதேவன், கொடும்பாளூரின் வேளான் சுந்தரச் சோழன், கடப்பை மாவட்டம் வைதும்ப மரபு நன்மைரையன், வட ஆற்காடு மாவட்டம் இலாடப் பேரரையன், தென் ஆற்காடு மறவன் நரசிம்மவர்மன் போன்ற்ேரர் மாமன்னன் ராஜராஜனுக்குக் கப்பங்கட்டிய குறுநில மன்னர்கள் ஆவார்கள். சோழ அரசர்களைத் தங்களுடைய குடும்பத்தில் மணவியரைத் தேர்ந்தெடுக்க அனுமதித்த இந்தக் குறுநில மன்னர்கள் அரச குடும்பத்தின் துணையாளர்களாகத் தங்கள் ஆட்சிப்பகுதிகளைச் சோழ மத்திய அரசின் இசைவிற்கேற்ப நிர்வாகம் செய்தனர்.

ராஜராஜ சோழன் தனக்குரிய அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதில் ஃபிரான்ஸ் நாட்டின் மன்னன் லூயி XIV போன்ற கூர்த்த மதி கொண்டவன். அந்தணரையும், பெருங்குடியினரையும் தனது அதிகாரிகளாக இவன் பொறுக்கி எடுத்த விதம் வலிமை சான்ற உள்நாட்டு ஆட்சி முறைக்கு உறுதுணையாக அமைந்தது. சேனுபதி கிருஷ்ணன், இராமன் என்பானும் மும்முடிச்சோழ போசன் என்பவனும் தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டுகின்ற பணியில் ஈடுபடுத்தப்பட்டனர். தென்னவன் மூவேந்த வேளானும், மாவிரிக் கேசவனும் தஞ்சைப் பெரிய கோவிலை நிர்வாகஞ் செய்த அதிகாரிகள் ஆவார்கள். மதுராந்தகக் கண்டராதித்தியன் என்ற ராஜராஜனின் ஒன்றுவிட்ட தம்பி பேரரசு முழுமைக்கும் அறநிலைய அமைச்சராகச் செயல்பட்டான். இரவன் உலகளந்தான் ராஜராஜ மாராயன் 1001-ல் சோழ ராஜ்யத்தை அளந்து வருவாய்த் துறையின் திறனை வலுப்படுத்தினுன். அமுதன், தீர்த்தகரன், காளுயில் எடுத்தபாதம் போன்ருேர் திருமந்திர ஓலைநாயகம் என்ற அரசனுக்குரிய செயலாளன் (Chief-de-Cabinet) என்றமைந்து பணியாற்றியவர்கள் ஆவார்கள்.

## VIII. குடும்பம்

ராஜராஜனுக்குரிய குடும்ப வாழ்வு தனிவாழ்வு அல்லலோடு தொடங்கியது. 969-ல் இவனுடைய தமையன் ஆதித்த கரிகாலன் அரசியல் கொலையுண்டு இறந்த போது இவன் தந்தை காஞ்சி மாநகர் சென்று மனம் உடைந்த நிலையில் இறந்து போனுன். இவனுடைய தாய் வானவன் மாதேவி உடன்கட்டை ஏறினுள். இவ்வாறெல்லாம் அவலங்கள் நடைபெற முழுமுதற்காரணமாக

இருந்தவன் உத்தமச் சோழன் ஆவான். அரசனுகும் உரிமை கேட்டு அவனே ஆதித்த சோழனைக் கொன்ருன் என்பர். ஆதித்தனுடைய தம்பி அருள்மொழித் தேவன் என்ற ராஜராஜன் இத்தகைய குடும்ப அவலங்களினூடே வாழத் தலைப்பட்டுத் தனது சிற்றப்பாவோடு அரசியல் உரிமை ஒப்பந்தமும் செய்துகொண்டான். அந்த ஒப்பந்தப்படி 985-ல் நிகழ்ந்த உத்தமச் சோழனுடைய இயல்பான இறப்புக்குப் பின்பு அவனே சோழ மன்னனுனுன். இவ்வளவு மனத்துன்பத்தையும் சுமந்து வந்த அவன் தன் சிற்றப்பா உத்தமச் சோழனுடைய மனைவி செம்பியன் மாதேவிக்கு அளப்பரிய மரியாதையை அரசியல் செல்வாக்கோடு அளித்திருந்தான். அவள் பெயரால் தஞ்சைப் பகுதியில் செம்பியன் மாதேவி என்ற சதுர்வேதி மங்கலத்தை அவன் ஏற்படுத்தி அவளைக் கௌரவித்தான். அறக் கட்டளைகளையும் ஏராளமான கோவிற்பணிகளையும் அவள் ராஜ ராஜனுடைய ஆதரவுடன் நாடெங்கிலும் நிறைவேற்றினுள். இவ்வாறு தனிவாழ்வின் துயர்ப்பாடல்களை மறந்து அருள்வாழ்வு உணர்ச்சியுடன் அரசனுகச் செயல்படுகின்ற குடும்பத்தலைவனுக ராஜராஜன் விளங்கினுன்.

குந்தவை ராஜராஜனுடைய தமக்கை; அவனுடைய பெரு மதிப்புக்கு உரியவள் என்பதை அவள் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு அளித்த நன்கொடைகளைத் தன்னுடைய நன்கொடைகளைப்பற்றிய 'நாம் குடுத்தனவும் நம் அக்கன் குடுத்தனவும்' என்ற சாசனச் சொற்குறிப்போடு, ராஜ அந்தஸ்தோடு அக் கோவிலின் கருவறை விமானத்தில் ராஜராஜன் செதுக்கி வைத்தான் என்பதிலிருந்து நாம் அறியலாம். தனது தந்தையைப் பெற்ற பாட்டியாரான செம்பியன் மாதேவியின் நினைவாகத் திருமுக் கூடலில் செம்பியன் மாதேவி பெருமண்டபம் கட்டிய ராஜராஜன் அவ்வூர் மக்கள் அம் மண்டபத்தில் தங்கள் கூட்டங்களைக் கூட்டிச் சமுதாய நலம் தழைக்கச் செய்ய உதவினுன். எல்லாக் குறுநில மன்னர்களோடும் உறவு வைத்துக்கொள்ள வேண்டும் என்ற அரசியல் காரணத்திற்காக அம் மன்னர்களின் குடும்பத்துக்கு ஒருவர் என்ற நிலையில் சுமார் பத்து மனைவியரைப் பெற்ற இவனுக்கு வாய்த்தது ராஜேந்திரன் I என்ற வானவன் மாதேவி பெற்ற ஒரே மகனே. தந்தையைவிடப் புகழ்பெற்ற இம் மகனுடன் பிறந்தோர் இரண்டு பெண்கள் ஆவார்கள். மூத்தவள் மாதேவடிகள். இளையவளான குந்தவை கீழைச் சாளுக்கிய நாட்டரசன் விமலாதித்தியன் 18 ஆண்டுகளாக (981—999) சோழ நாட்டில் தங்கி இருந்தபோது, அவனை மணந்தாள். இம் மணவினை எதிர்

காலத்துக்குரிய வரலாற்றைப் படைக்கின்ற அரசியல் நிகழ்ச்சிகளுக்கு வித்திட்டது. ராஜராஜன் தன்னுடைய மகன் ராஜேந்திரனுக்கு 1012ஆம் ஆண்டில் யுவராஜா பட்டஞ்சூட்டி, அவனை முன்னைவிட அதிகமான அரசியல் அதிகாரத்தோடு சோழ நாட்டின் அரசியலை நேரடியாக நடத்தப் பணித்தான்.

## IX சோழ அரசியலில் ராஜராஜன்—ஒரு முன்னோடி

ராஜராஜனுக்குள்ள தனித்தன்மை (Originality) அவன் முதன்முதலாகச் செய்த சில அரசியல் சீர்திருத்தங்களினால் அறியப்படும். அவையாவன :

(1) தெற்கு நோக்கிச் சோழப் பேரரசு விரிவாக்கம் கொள்வதை வடக்காகத் திருப்பி வடதிசை நாடுகளைப் பிடிக்கத் தீர்மானித்து வல்லடிப்போர்களை ராஜராஜன் தான் தொடங்கினான். இதன்படி துங்கபத்திரை நதிக்கரை வரை சோழநாடு நீண்டு கிடந்தது. மேலைச்சாளுக்கியர் சோழரின் வடக்குப் பேரரசுப் பகுதிகளை உடனுக்குடன் கைப்பற்றிக்கொண்டனர். இதனால் இடையறுத இராணுவப் போராட்டம் ஏற்பட்டது. ஏராளமான ஆள்சேதமும் பொருள்சேதமும் சோழரின் அரசியலுக்குரியவையாக அமைந்தன. இத்தகைய இராணுவப் பிடிப்பைச் சோழ நாட்டுக்குக் கொடுத்தவன் ராஜராஜனே. வல்லடிப்போர்களைச் சோழருக்குரிய அரசியல் ஒழுகலாறு என ஆக்கித்தந்த ராஜராஜன் சோழ நாட்டினரை இராணுவ முனைப்புடையவர்களாக மாற்றிய பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டியவன் ஆவான்.

(2) பாண்டிய, கேரளரைப் பிடித்துச் சோழப் பேரரசுக்கு உட்பட்ட மண்டலங்களாக ஆக்கி, சோழ மத்திய அரசின் நேரடி ஆட்சிக்கு உட்படுத்தியவன் ராஜராஜனே.

(3) 1001ஆம் ஆண்டில் சோழ ராஜ்யத்தை அளந்தது சோழப் பேரரசுக்கு முதன்முறையாக ஏற்பட்ட உள்துறை ஆட்சிச் சீர்திருத்தம் ஆகும். இதனைக் கொண்டுவந்த ராஜராஜனை ஏனைய மன்னர்கள் பின்பற்றிய அளவில் நாட்டின் நிர்வாகத்தைச் சிறக்கச் செய்தார்கள்.

(4) அவ்வாறு அளக்கப்பட்ட பின்பு மண்டலத்துள் வளநாடுகள் ஏற்படுத்தி, வளநாடுகளை உட்பிரிவுகளான நாடுகளாகப் பிரித்தவனும் அவனே.

(5) பிடிக்கப்பட்ட நாடுகளைச் சோழர்மயமாக்குதல் (Cholaisation) என்ற முறையில் கலாசாரப்படையெடுப்பை (Cultural Offensive) ஏற்படுத்திய ராஜராஜன் இராணுவ முறைக்கு உட்பட்ட சோழ ஏகாதிபத்தியத்திற்குக் கலாசாரத்தைச் சாதன

மாக்கினுன். சோழரால் பிடிக்கப்பட்ட நாடுகளில் சோழ அரச பரம்பரையினரின் பெயர்களுக்கு அங்குள்ள நகரங்களின் பெயர்கள் மாற்றப்பட்டன; தெருப்பெயர்கள்கூட மாற்றப்பட்டன. சான்ருக, நெல்லை மாவட்டம் மன்னர்கோவிலில் நடந்த பெயர் மாற்றங்களைச் சொல்லலாம்.

(6) வெளிநாட்டில் தமிழ்க் கலாசாரத்தைப் பரப்புகின்ற பணியைத் தொடங்கியவன் ராஜராஜனே ஆவான். புத்தமதப் பிடிப்பு உள்ள ஈழ நாடு 991ஆம் ஆண்டளவில் வெல்லப்பட்ட பின்பு சோழர் காலத்திய கட்டட முறையில் பல கோவில்கள் அங்குக் கட்டப்பட்டன. 1015-ல் இம் மன்னன் சீன நாட்டைச் சென்றடையச் செய்த தூதுக் குழுவும் ஒரு வகையில் தமிழ்க் கலாசாரத் தூது எனக் கொள்ளலாம். பாண்டியரின் தூதுக்குழு உரோமாபுரிக்குச் சென்றதாக வருகின்ற தமிழ்நாட்டு வரலாற்றுச் செய்திக்குப் பின்பு அத்தகைய முறையில் அன்னிய நாட்டுடன் தமிழகம் கொண்ட தூதுக்குழுத் தொடர்பு பிற்காலத்தில் ராஜ ராஜன் காலத்தில்தான் நிகழ்ந்தது.

(7) பிறநாட்டு மன்னர்களுக்கு மதிப்பு அளிக்கின்ற முறையில் அவர்தம் வேண்டுகோளுக்கிணங்க நாகப்பட்டினத்தில் புத்தக் கோவில் கட்டி அதற்கு ஆனைமங்கலம் போன்ற கிராமங்களை முற்றூட்டுகளாகக் (endowments) கொடுத்த நிலையில் அரசியல் கலந்த சமயப் பொறையுடைமை இவனிடமும் காணப்பெற்றது. இத்தகைய முறையில் மற்றச் சோழ மன்னர்கள் பிற நாட்டு மன்னர்களுக்குச் சோழ நாட்டில் அரசியல் கலந்த கலாசார உதவியை ராஜதந்திர வினைத்திட்பத்தோடு, தன்னுற்றலோடு (orginality) செய்யவில்லை. இவனுடைய ஆனைமங்கல முற்றூட்டை ராஜேந்திரன் I, குலோத்துங்கன் I ஆகிய இருவரும் சாசனப்படுத்தினர். அவ்வளவே.

(8) ஆதித் தமிழ் முறையில் பெண் தெய்வங்களை வழிபடுகின்ற முறையைத் தவிர்த்துக் கற்கோவில் கட்டியவன் ராஜராஜன் ஆவான். தளிகள் என்ற வழிபாட்டு இடங்களைத் தவிர்த்த நிலையில் விண்ணகரம் (ஈஸ்வரம்) என்ற பெரிய கோவில் அமைப்பைச் சோழர் காலத்தின் கட்டடக் கலையாக உறுதிப் படுத்தியவன் ராஜராஜனே ஆவான்.

(9) வேங்கி நாட்டோடு மணவினைத் தொடர்பு ஏற்படுத்தி வேங்கி நாட்டின் அரசியலைச் சோழ நாட்டின் அரசியலோடு பிணைத்தவனும் அவனே.

(10) சோழ மன்னர்களின் வாழ்க்கையில் நிகழ்வுற்ற முக்கியமான நிகழ்ச்சிகளைச் சொல்லுகின்ற மெய்க்கீர்த்திகளைக் கோவில் சுவர்களில் கல்வெட்டுகளாகச் செதுக்கி வைக்கின்ற முறையைச் சோழருக்குரியதாக ஆக்கியவன் இவனே. இந்த மெய்க்கீர்த்திகள் சோழ வரலாற்றைச் சொல்லுகின்ற சரித்திர ஆதாரங்களாக நமக்குக் கிடைக்கின்ற பெரு வாய்ப்பை உண்டாக்கியவனும் ராஜராஜனே ஆவான்.

(11) சோழ மன்னர்களுக்குப் பின்பு அரச பதவிக்கு வருகின்ற யுவராஜாக்களுக்கு அரசியல் அந்தஸ்து கொடுத்து அவர்களையும் அரச அதிகாரத்தை ஆட்சியில் இருக்கும் அரசனோடு பகிர்ந்து கொள்ளக்கூடிய ஏற்பாட்டைச் செய்தவன் ராஜராஜன்தான். இதனால் சோழ அரசிற்குரிய நிர்வாகச் சிறப்பு மேலும் வளர்ந்தது. அதிகாரப் பங்கீடு இவன் காலத்தில் தெளிவான முறையில் திகழ்ந்தது என்பது சிறப்புக் குறிப்பு ஆகும்.

(12) சைவத்தின் உயிர்மூச்சாக விளங்குகின்ற தேவாரம், திருவாசகம் போன்ற பழமை நூல்களைத் தில்லைக் கோவிலிலிருந்து வெளிக் கொண்டுவந்து, அவற்றை நம்பி ஆண்டார் நம்பி என்ற சைவப் பெரியாரின் துணைகொண்டு இசைப்படுத்தி, கோவில்கள் தோறும் அரசியல் அந்தஸ்தோடு ஊதியம் பெற்ற கோவில் பணியாளர்களைக் கொண்டு பாடவைத்தவனும் ராஜராஜ சோழனே ஆவான்.

# 9. ராஜேந்திரன் I

## (1014—1044)

சோழப் பேரரசின் விரிவுக்கு என ஏற்பட்ட வல்லடிப் போர்களை ராஜராஜன் I சோழன்தான் திட்டமிட்டு நடத்தினுன். ஆனுல், அவற்றை அமைதிக் காலத்திற்குரிய வாழ்வு நலன்களாக என்றும் குறைபடாத வண்ணம் நீடித்திருக்கச் செய்த திறன் அவனுடைய ஒரே மகன் ராஜேந்திரனையே சாரும். தந்தை காட்டிய வழியில் வல்லாட்சிப்போர்களை விடாமல் நடத்தி, சோழப் பேரரசின் இராணுவத் தன்மையை அவன் மேலும் செறிவுறச் செய்தான். வெற்றியின் மகிழ்ச்சியோடு இணை சேர்ந்து வந்தடைந்த புதிய நாடுகளும் போரில் கவர்ந்த பொருள் குவியல்களும் (spoils of war) ராஜேந்திரனைப் போரிட்டு வாழ் கின்ற பெரு வீரப் பேரரசனுக வரித்து விட்டன. இவ்வாறு போரிட வேண்டிய அரசியல் அவசியத்தில் சோழ நாட்டை ஈடிபடுத்தியதில் பெரும் பங்கு ராஜராஜனுக்குரியதுதான். ஆனுலும், அவ்வகை இராணுவ முறைமையினுல் ஏற்படுகின்ற பயன்களை நடைமுறை அரசியல் பொருளாதார நலன்களாக மாற்றுகின்ற பெரும் ஆற்றல் ராஜேந்திரனுக்கு இருந்த காரணத்தால், அத்தகைய வல்லாட்சிப்போர்களே பின் வந்த சோழ மன்னர் குலத்தினரின் வாழ்க்கை இலக்கணமாகிப் போய் விட்டன. இந்த முறையில் இராணுவ மனப்பான்மையைச் சோழப் பேரரசுக்கான வளர்ச்சிக் கருவாக ஆக்கிய பொறுப்பு ராஜேந்திரனுக்கு உண்டு. வெற்றிகளின் தலைவன் அவன். அவ் வெற்றிகளே சோழ நாட்டினுடைய வெளிநாட்டுக் கொள்கையின் வல்லடிப்போக்கை உருவாக்கிக் கொடுத்தன. ராஜராஜனுக்குரிய ஒரே மைந்தன் என்றளவில் தனக்குத்தான் அரச பதவி என்று உறுதியாக்கப்பட்ட தன்மதிப்புச் சூழ்நிலையில் அவன் இளமைப் பிராயத்தில் மேற்கொண்ட போர் முறை தழுவிய வாழ்வியல் சோழ நாட்டு அரசியலுக்குரிய எதிர்கால வாழ்வுக்கதியாகப் பரிணமங்கொண்டது. கிரேக்க மன்னன் பிலிப் என்பவனுக்குப் பிறந்த செயல் வீரனை அலெக்சாந்தருக்குச் சமமானவன் ராஜேந்திரன்.

பேரரசு தத்துவத்தை ஏகாதிபத்தியமாக மாற்றுவதில் பெரும் முனைப்பைக் காட்டியவன் ராஜேந்திரனே ஆவான். இராணுவத்தின் செயலாக்கத்தில் முழு நாட்டமும் ஈர்க்கப்பட்ட ஒருவகை அரசியலைச் சோழருக்குரியதாக ஆக்கிய முழுப் பொறுப்பைப் பெற்ற இம் மன்னன் பிற்காலச் சோழ மன்னர்கள் அவ்விதமான இராணுவப் பேரரசைக் கட்டிக் காக்கத் தங்கள் வாழ்வையே இராணுவப் பாசறையில் கழிக்க வேண்டியதிருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கவில்லை. சான்றாக ராஜாதிராஜன் I, சோழன் ராஜேந்திரன் காலத்திலேயே 1018ஆம் ஆண்டில் யுவராஜா ஆகித் தன் வாழ்வின் எழுச்சி மிக்க 36 ஆண்டுகளில் பாதிப் பகுதியைப் போர் முகத்தில் செலவிட்டு, பின்பு தன் வாழ்வையே கொப்பம் போரில் (1054) இழந்தான் ; 'யானைமேல் துஞ்சிய ராஜாதிராஜ தேவர்' என்ற பட்டமும் பெற்றான். அவனுடைய சகோதரன் ராஜேந்திரன் II கொப்பம் போர்முகத்தில் ஈட்டிக் கொடுத்த வெற்றிக்குப் பின்பு சோழ மன்னனாக அன்னிய மண்ணில் முடிசூட்டிக்கொண்டான். மூத்தவன் ராஜேந்திரன் உயிரோடு இருக்க, இராணுவ மனப்போக்குள்ள இளைய மைந்தன் ராஜாதி ராஜனைச் சோழ மாமன்னனாக ஆக்க வேண்டிய அவசியத்தை ராஜேந்திரன் I ஏன் உணர்ந்தான் ? அவனுடைய பேரரசின் இராணுவ அடிப்படையைப் பேணிக் காக்கின்ற படைவீரத்தனம் மிஞ்சிய மன்னனாகச் சோழ அரசன் அமைய வேண்டும் என்ற இலக்கணத்திற்குப் பொருந்திக் காணப்பட்டவன் ராஜாதிராஜன் என்றளவில்தான், அவனை அவன் தந்தை ராஜேந்திரன் தனக்குரிய வாரிசாக வரித்தான்.

இதே இராணுவ மனப்பான்மையை உள்நாட்டு நிர்வாகத்திலும் வெளிப்படுத்தினான் ராஜேந்திரன். பாண்டியர், கேரளர் போன்றோரைத் தன்னுடைய இராணுவத்திறன் கொண்டு அடக்கி மட்டும் வைத்த ராஜராஜனுடைய அரசியல் அமைப்பை மாற்றி, சோழரின் நேரடி நிர்வாகத்தைத் தனிக்கோட்ட அரசியல் அந்தஸ்துடன் ஏற்படுத்தினான். பாண்டிய நாட்டுப் பகுதியை இராணுவ வலிமை நிலவும் (Military Sovereignty) தனி மண்டலமாக்கினான் ராஜராஜன். இதையே இராணுவ முறையுடன்கூடிய ஆட்சி முறையாகச் செயல்படுகின்ற அரசியல் பிடிப்புக்கு (Military Authority) உள்ளாக்கினான் ராஜேந்திரன்; தன் மைந்தர்களில் சுந்தரன் என்பவனைப் பாண்டிய குலத்தாருக்கு என ஏற்பட்ட சடாவர்மன் என்ற தனியார்வப் பட்டத்தோடு மதுரைக்குரிய ஆட்சியாளனாக்கினான். பாண்டியன் என்ற உணர்வு முத்திரையோடு அப் பாண்டிய மண்டலத்திற்குரிய சோழ ஆட்சியாளனாக அவன் அமைவதற்

காகச் சோழ-பாண்டியன் என்ற பட்டமும் அவனுக்கு வழங்கப்பட்டிருந்தது. 'தனி நாடு தனி அரசன்' என்ற தோற்றங்கொள்ளுகின்ற வகையில் அமைக்கப்பட்ட பாண்டிய மாகாணத்தின் அரசைத் தஞ்சையிலுள்ள மத்திய அரசின் எண்ணப்படி ஆள வேண்டிய முதல் இளவரசனுகச் செயல்பட வேண்டிய வரலாற்றுப் பூர்வமான பொறுப்பு அவனுக்குரியதாயிற்று.

தான் உண்டாக்கிய 'கங்கைகொண்ட சோழபுரம்' என்ற நகரத்தில் தன் தந்தை தஞ்சையில் அமைத்த பெரிய கோவிலின் சாயலில் 'சோழேச்சுவரம்' என்ற கோவிலை ராஜேந்திரன் கட்டினுன்; அந்தணரை ஆதரித்த தனது தந்தையின் பாணியில் வங்காளத்தின் மிதிலையிலிருந்து சைவாசாரியர்களைத் தமிழகத்துக்குக் கொண்டு வந்தான்; சைவத்தை ஆதரித்தான்.

I. வெளிநாட்டுக் கொள்கை

போரார்வ ராஜேந்திரன்தான் துங்கபத்திரை நதிவரை நீண்டு கிடந்த பெரும் பேரரசிற்குரிய மாமன்னனுக எடுத்த எடுப்பிலேயே சோழ மன்னர்களுக்குள் முடிசூட்டப் பெற்றவனுவான்; வெளிநாட்டுக் கொள்கையை, வல்லடிப்போர்களின் இயல்பான இராணுவ ஆதிக்கத்தை அடிப்படையாகக்கொண்டு சோழரின் பேரரசை வடக்கே துங்கபத்திரை நதிக்கரை, தெற்கே ஈழம், கிழக்கே கடல் கடந்த கடாரம், மேற்கே கேரளத்தின் பக்கமுள்ள மாலத்தீவுகள் என்றவளவில் நிலைபெறச் செய்தான். இதையே நிறைவான உண்மை என்று ஒப்புக்கொண்டால் ராஜேந்திரன் காலத்தில்தான் விஜயாலய சோழர்களின் அரசியல் வளர்ச்சியின் முதிர்ச்சிப் பருவத்து மேலாக்கம் காணப்பட்டது எனக் கூறலாம்.

முடியரசு வழங்கப்பெறும் நாடுகளில் அயல்நாட்டுக் கொள்கையை அந்தந்த மன்னர்கள் அந்தந்தக் காலங்களில் தனியார்வ நிலையில் உருவாக்கிக்கொள்ள முடியாது. ஏனென்ருல், கடந்த கால வரலாற்று நிகழ்ச்சிகளின் பின்னலில்தான் அயல்நாட்டுக் கொள்கை உருவாகும். ராஜேந்திர சோழனைப் பொறுத்த அளவில் இது உண்மை. இதன்படி ராஜேந்திரனுடைய அயல்நாட்டுக் கொள்கைக்கு அடிப்படைக் கருவை அவனுடைய தந்தை ராஜராஜன் ஏற்படுத்தினுன். 'வடக்கு நோக்கிச் செல்லும் பேரரசு விரிவாக்கம்' என்ற அடிப்படையில் சோழரின் இராணுவ ஏகாதிபத்தியத்தை (Military Imperialism) நிலைநாட்ட ராஜராஜன் பாடுபட்டான். அவனுடைய அரசியல் கூட்டாளி என்று அழைக்கப்படுகின்ற வகையில் சோழ அரசியலைத் தந்தையுடன்

ஒருவகைக் கூட்டுப்பொறுப்பில் நடத்தி வந்த ராஜேந்திரன் தனது தந்தையின் கொள்கையை மாற்றவில்லை.

சோழப் பேரரசு வடக்கு நோக்கி விரிவு பெறப் பணிக்கப் பட்டது. வேங்கியிலும், மால்கட்டிலும் சாளுக்கியர் என்ற ஒரே இனத்தினர் ஆட்சியில் இருந்தனர். இராணுவ முறையில் வலுக் கட்டாய விரிவாக்கம் (Aggressive expansion) என்ற அரசியல் கோட்பாடு உறுதி செய்யப்பட்டு ராஜராஜனால் செயல்படுத்தப் பட்டபோது வெற்றியும் அவனளவில் கிட்டியது. ஆனால், வடக்கு நோக்கி விரிவாக்கம் என்பது பல அரசியல் விளைவுகளைக் கொண்டதாக அமைந்தது. பீஷ்வா பாஜிராவ் வடக்கு நோக்கிய விரிவாக்கத்தில் வீர மராத்தியரைப் பிணித்த காரணத்தால்தான் 1761-ல் மூன்றும் பானிப்பட்டுப் போர் ஏற்பட்டு, மராத்தியர் பேரிழப்புகளுக்கு உள்ளாயினர். மராத்தியப் பகுதியையும் சேர்த்து ஆண்ட சாளுக்கியரை எதிர்த்து வளர வேண்டிய இராணுவ ஏகாதிபத்தியத்தை நீடித்து நிறுவ விழைகின்ற அரசியல் திட்டத்தை இனிவரும் சோழ மன்னர்களுக்குரிய சவாலாக—ராஜராஜனும் ராஜேந்திரனும் சோழரின் பரம்பரைச் சொத்தாக—விட்டுப் போயினர்.

இத்தகைய இராணுவ ஏகாதிபத்தியத்தின் நேரடிப் பயனாக மேலைச் சாளுக்கியருடைய பகைமை மேலும் மேலும் வளர்ந்தது. மணவினைமூலம் கீழைச் சாளுக்கியரைச் சோழரின் குடும்ப உறவுக்குள் கொண்டுவர ராஜராஜன் தன் மகள் வேங்கி நாட்டு மன்னன் விமலாதித்தியனை மணஞ்செய்துகொள்ள அனுமதித்தது போல, இந்தச் சோழ-சாளுக்கியத் தம்பதிகளுக்குப் பிறந்த மகன் ராஜராஜ நரேந்திரனுக்கு ராஜேந்திரன் தன் மகள் அம்மங்க தேவியை மணஞ்செய்து கொடுத்தான். இந்தத் தம்பதிகளுக்குப் பிறந்த ராஜேந்திரன் II (பின்பு குலோத்துங்கன் I) ராஜேந்திரன் II என்ற சோழ மன்னனுடைய மகள் மதுராந்தகியை மணஞ்செய்தான். இவ்வாறு நிகழ்ந்த மூன்று திருமணங்களில் இரண்டாவது ராஜேந்திரன் முறையாகச் செய்து வைத்தது ஆகும். மேலைச் சாளுக்கியர், கீழைச் சாளுக்கியர் என்ற இரு அரச வழியினர் சாளுக்கியர் என்ற ஓரின உணர்வில் இணைந்து நிற்கின்ற திறனில் காணப்பட்ட அரசியல் ஆபத்தைத் தவிர்ப்பதற்காக மணவினைத் தொடர்புக்குரிய ராஜதந்திரத்தைப் பயன்படுத்த விழைந்தான் ராஜராஜன். இனப்பற்றுதலைவிடக் குடும்பப் பற்றுதலே வலிமை படைத்தது என்றவளவில் கீழைச் சாளுக்கிய மன்னர்களைச் சோழரின் பக்கம் சாய்ந்து நிற்க வைக்கின்ற பணியைச் செய்கின்ற அளவில், சோழர்குலப் பெண்மணிகள்

கீழைச் சாளுக்கியரை மணம் முடித்தார்கள். ஆனால் மேலைச் சாளுக்கியர் தங்களுக்குரிய மற்றோர் ஆயுதத்தை அதே கீழைச் சாளுக்கியரிடமிருந்து அவர்கள் குடும்பத்தின் உறவுப்பிடிப்பி லிருந்தே எடுத்தார்கள். அந்த ஆயுதம் கீழைச் சாளுக்கியரின் அரசியல் சக்தியை நொறுக்கிச் சிதறடித்த பங்காளிச் சண்டை என்றமைந்தது. இவ்வாறு இரு சோழர்குலப் பெண்மணிகளிடம் விமலாதித்தியனுக்குப் பிறந்த இரு இளவரசர்களை எளிதாகப் பிரித்து இடையறாமல் மோதவிட மேலைச் சாளுக்கியரால் முடிந்தது.

இவ்வாறு வேங்கி நாட்டின் அரசியலில் எப்போதுமே காணப்படும் அரச குடும்பத்துப் பங்காளிச் சண்டையைப் பயன் படுத்திய மேலைச் சாளுக்கியர், சோழர்களுடைய இராணுவத்தின் பயனாக விளைந்த மனவினைத் தொடர்பு யுக்தியை நேர்முகமாக நின்று முறியடித்தார்கள். கீழைச் சாளுக்கியரின் பங்காளிச் சண்டையை முதலீடு எனக் கொண்டு வேங்கியில் ஆதிக்கம் கொள்ள மேலைச் சாளுக்கியர் ஆயத்தமாயினர்; அதன் தொடர் பாகப் போர்களைத் தங்கள் நாட்டிலும் வேங்கியிலும் சோழருக்கு எதிராக நடத்தினர். சோழர் படைகள் அவ்விரு போர் முனை களிலும் போராடச் சோழநாடு விட்டேகிச்சென்றன. அன்னியரின் நிலத்தில் இருக்கின்றபோது ஏற்படுகின்ற தன்னிச்சையான மூர்க்க மனவுணர்வைத் தாராளமாக அலையவிட்டது போலத் தோற்றமளிக்கின்ற வகையில் சோழப் படைஞர் ஆற்றிய அழிவு வேலைகள் இழிவு ஆகா. அவை அக்காலப் போர்களின் துன்பியல் போக்கைக் காட்டுகின்றன. இவ்வாறு ஏற்பட்ட சாளுக்கியப் போர்களில் நிலவி நின்ற ராஜேந்திரனுடைய அயல் நாட்டுக் கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகள் எல்லாம் இராணுவ ஏகாதிபத்திய வளர்ச்சி என்ற ஒரே மையக் கருத்தாகத் திரண்ட உருக்கொண்டது. இனி வரும் சோழ மன்னர்களையும் இக் கோட்பாடுகள் வயப்படுத்தி, சோழரின் அரசியலுக்குரிய நிலைக்களனாக வளர்ந்தன.

ராஜேந்திரனுடைய இராணுவ ஏகாதிபத்தியக்கொள்கை ஈழத் திலும், கேரளத்திலும், பாண்டிய நாட்டிலும் நிறைவைப் பெற்றது. ஈழம் முழுமைக்கும் சோழரின் ஆட்சி படர்ந்து நிலவியது. கேரள மன்னன் சோழ அரசனுடைய பெயரில் பாண்டிய நாட்டில் கோவில் கட்டி, தன்னுடைய விசுவாசத்தைக் காட்டிக்கொண் டான். பாண்டிய நாடு சோழருக்கு உரியதாக மாறிப்போய்ச் சோழபாண்டியன் என்றழைக்கப்பட்ட சோழ அரசியலதிகாரியான சோழ அரசர்குல இளவல் கையில் அடங்கிற்று. கடாரத்தின்மேல் சென்ற படையெடுப்பு, சோழர்களின் நேரடி அரசை ஆங்கு நிலை

நிறுத்தாவிட்டாலும் சோழருக்குரிய கடல் வாணிபத்தின் வாய்ப்பு களுக்கு உறுதுணையாக அமைந்தது. மொத்தத்தில் ராஜேந்திர னுடைய வெளிநாட்டுக் கொள்கை ஒரு பெரும் வெற்றியாக மலர்ந்தது. இவ் வெற்றிக்கு ராஜேந்திரனின் போராற்றலும் ஆளுகைத் திறனும் அடிப்படையாக விளங்கின. இத்தகைய இராணுவ ஏகாதிபத்தியம் ராஜேந்திரன் மேற்கொண்ட பெரும் போர்களின் மூலம் எவ்வாறு உருப்பெற்று ஈழமும் வேங்கியும் என்றளவில் தெற்கிலும் வடக்கிலும் அகன்று காணப்பட்ட சோழப் பேரரசாக மாறியது என்பதைக் காண்போம்.

1. **மேலைச் சாளுக்கியர் இரட்டபாடி வெற்றி:** 1004ஆம் ஆண்டு 'திருமன்னி வளர' என்று தொடங்கும் ராஜேந்திர னுடைய மெய்க்கீர்த்தி மேலைச் சாளுக்கிய நகரங்களான 'சுள்ளி சூழ் மதிற் கொள்ளிப் பாக்கையும் நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்' வெல்லப்பட்டதாகக் குறிக்கின்றது. மேலைச் சாளுக்கிய மன்னன் சத்தியாசிரயன் (997—1008) செதுக்கிய ஹொட்டூர்க் கல்வெட்டு 1007-ல் ஏற்பட்டது. ஆகவே, ராஜராஜன் I சோழன் (985—1014) காலத்தில் 1012-ல் யுவராஜா பட்டம் பெற்ற ராஜேந்திரனால் 1004-ல் நடத்தப்பட்ட போரினைத்தான் ராஜேந்திரனுக்கு உரியதாக மேலே சொல்லப்பட்ட மெய்க்கீர்த்தி சொல்லுகிறது. மேலைச் சாளுக்கியரின் தலைநகரான மானியக் கேடத்தை நோக்கி இன்றைய கர்நாடகத்தின் வடமேற்குப் பகுதியிலிருந்து 1004ஆம் ஆண்டளவில் சோழர் படையுடன் புறப்பட்டுச் சென்ற ராஜேந்திரன், எவ்வாறு மேற்குப் பக்கம் தள்ளி அமைந்திருக்கும் வனவாசியையும் சேர்த்துப் பிடித்திருக்க முடியும் என்பது இராணுவ முறையில் சாத்தியமாகத் தோன்ற வில்லை. துங்கபத்திரை நதிக்கரை சென்று ரெய்ச்சூர் இடைக்கழி நாட்டையும் ஊடுருவிக் கொண்டு ஹைதராபாத் பக்கமுள்ள கொள்ளிப்பாக்கையையும் மானியக்கேடத்தையும் கைப்பற்றி, பல அழிவு வேலைகளைச் செய்து விட்டு ராஜேந்திரன் சோழ நாடு திரும்பினான்.

இவ்வாறு சோழர் படையினரால் வெல்லப்பட்ட நாடுகளைச் சத்தியாசிரயன் திரும்பவும் பிடித்துக்கொண்டு விட்டதால், 1005-க்குப் பின்பு இரண்டாவது முறையும் அதே போன்று அதே இடங்களை ராஜேந்திரன் படை நடத்திப் பிடித்து இருக்கலாம் என்ற கருத்தும் உண்டு. இராணுவ நடவடிக்கைகளில் பலவித மான அழிவு வேலைகளைச் செய்த ராஜேந்திரன்மேல் ஏற்பட்ட பகைமையைச் சத்தியாசிரயன் தன் குடும்பத்தின் பரம்பரை உணர்வாக மாற்றி வைத்தான். சோழருக்கும் மேலைச்

சாளுக்கியருக்கும் பெருமளவில் நடந்த அநேக ஆதிக்கப் போட்டிப் போர்களுள் முதற்போர் இதுவே ஆகும்.

**2. இரண்டாவது சாளுக்கியப் போர் (1021):** 1004-ல் தொடங்கிய முதலாம் சாளுக்கியப் போருக்குப் பின்பு சோழர்கள் பிடித்த பகுதிகளைத் திரும்பவும் கைப்பற்றிக்கொள்ள முயன்ற சத்தியாசிரயனுக்குப் பின்பு விக்கிரமாதித்தியன் V என்ற சாந்த குணவான் (1008—1015) சாளுக்கிய அரசன் ஆனான். இவனுடைய படைகள் சோழரோடு மோதவில்லை. ஆதலால், 1007-லிருந்து 1021 வரை 15 ஆண்டுகள் சோழர்-சாளுக்கியப் போரில் ஒருதேக்க நிலை ஏற்பட்டது. 1015-ல் சாளுக்கிய அரசனைகப் பதவி ஏற்ற ஜெயசிம்மன் II (1015—1042) இந்தப் பதினைந்து ஆண்டுக்காலத் தேக்கத்தை உடைக்கின்ற வகையில் சோழ நாட்டுக்கு முதற் சாளுக்கியப் போரில் கிடைத்த சாளுக்கிய நாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றத் தொடங்கினான். திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுவதுபோல, ராஜேந்திரன் காஞ்சியிலிருந்து இரட்டப்பாடிக்குப் படையெடுத்துப் புறப்பட்டுச் சென்றான். மாஸ்கி என்று இப்போது அழைக்கப்பெறும் மாசங்கி என்ற நகர்ப்புறத்தில் நடந்த போரில் சாளுக்கியன் ஜெயசிம்மன் தோற்று, காட்டில் போய் ஒளிந்தான். சோழர் தரப்பில் இப் படையெழுச்சியின் வெற்றிகள் குறிக்கப்படுகின்றன. ஆனால், மிராஜ் சாசனம் (1024ஆம் ஆண்டுக்குரியது) ஜெய சிம்மன் இரட்டப்பாடியை 'ஐந்து திராவிடர்களின் தலைவனான சோழனிடமிருந்து' மீட்டுத் தன் கையில் வைத்திருந்த தாகச் சொல்லுகிறது. ஆகவே, இரு பேரரசுகளுக்கிடையில் துங்க பத்திரையே எல்லையாக எப்போதும்போல விளங்கியது எனலாம்.

எல்லாச் சாளுக்கியப் போர்களுக்கும் மேற்குப் போர்முனை துங்கபத்திரைக் கரையிலும், வடக்குப் போர்முனை வேங்கி நகரைச் சுற்றியும் இருக்கும் என்பது பொது நியதி. ஆகவே, இரண்டாம் சாளுக்கியப் போர் நடந்த காலத்தில் வேங்கி நாடான வடக்குப் போர்முனையில் நிகழ்ந்தது என்ன? 999-ல் வேங்கியில் அரச பதவி ஏற்ற சக்தி வர்மன் I, 1014-ல் இறந்த பின்பு, அப் பதவிக்கு வந்த விமலாதித்தியனும் 1019-ல் இறந்துபட, அவன் மகன் ராஜராஜ நரேந்திரன் (ராஜேந்திரன் I, தங்கை குந்தவையின் மகன்) பதவிக்கு வர இருந்தான். அவனுடைய முடிசூட்டு விழாவைத் தடுக்கின்ற முறையில் பங்காளிச் சண்டையை மேலைச் சாளுக்கியன் ஜெயசிம்மன் கிளப்பிவிட்டான். மேதவ மகாதேவி என்ற சோழர்குலப் பெண்மணிக்கும் விமலாதித்தியனுக்கும் பிறந்த விஷ்ணுவர்த்தன விஜயாதித்தியன் VII என்ற பங்காளியை

ஜெய சிம்மன் அரசனுக்கி, வேங்கியின் அதிகாரத்தில் அமர்த்தினன்.

இரண்டு பங்காளிகளின் இழுபறி பதவிப் போராட்டத்தில் வழிவழியாக நைந்து வந்த வேங்கி நாட்டின் அரசியல் இரண்டு பட்டு இன்னலுற்றது. தன்னுடைய தாய்மாமன் ராஜேந்திரனுக்கு ராஜராஜ நரேந்திரன் உதவி கேட்டு அனுப்பிய வேண்டு கோளுக்கு இணங்க, வீரபூரணம் போன்ற விருதுகளைப் பெற்ற அரையன் ராஜராஜன் என்ற சோழச் சேனதிபதியை வேங்கி நாட்டுக்கு ராஜேந்திர சோழன் அனுப்பி வைத்தான். கல்வெட்டு (751 of 1917) கூறுவது போல, இச் சோழர்படைத் தளகர்த்தனைச் சோழப் பேரரசன் அனுப்பி வைத்தான் என்று கேட்ட மாத்திரத்தி லேயே, வேங்கி மன்னன் ஓடியே போய்விட்டான். இவ்வாறு ஓடிப்போன அரசன் விஜயாதித்தியனுகத்தான் இருக்க வேண்டும். இச் சம்பவமும், வேங்கிப் போரில் ராஜேந்திர சோழன் பெற்ற வெற்றியும் சம காலத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும் எனப் பேராசிரியர் சாஸ்திரி சொல்லுகிருர்.[1]

இவ்வாறு ஒரு பங்காளி ஓடிச் சென்ற பின்பு அவனுக்கு உதவி செய்த கலிங்க அரசன், ஒட்ட மன்னன் போன்றவர்களை அடக்கச் சென்றுன் சோழர் படைத்தலைவன். சாளுக்கியர் போன்ற பகையரசர்களிடம் நட்புரிமை கொண்டு சோழருக்கும் பகைஞர்களாகிவிட்டவர்களைத் தண்டிக்கின்ற முறையில் கலிங்கம் சென்ற சோழர்படை, ராஜேந்திரனுடைய எண்ணப்படி கங்கைக் கரை வரை படையெடுத்துச் செல்லத் தலைப்பட்டது. சோழரின் வடக்கத்திய திக்விஜயம் இரண்டாவது சாளுக்கியப் போரின் முடிவுகளில் ஒன்ருகும். பெரு வெற்றியோடு கங்கை சென்று மீண்டு வந்த தனது படைகளைக் கோதாவரிக் கரையில் எதிர் கொண்டழைத்து வந்த ராஜேந்திரன் ராஜராஜ நரேந்திரனை வேங்கி நாட்டு மன்னனுக முடிசூட்டுவதோடு நில்லாமல் தன் மகள் அம்மங்க தேவியை மணம் செய்தும் கொடுத்தான். சோழரின் சாளுக்கியர் பற்றிய தொடர்பு மேலும் வலுவாகியது. சோழ அரசியலில் பின்னிநின்ற இரண்டாவது வேங்கி நாட்டு மணவினைத் தொடர்பு இது. இவ்வாறு அமைந்த முடிசூட்டலும் திருமணமும் இரண்டாவது சாளுக்கியப் போரின் அரசியல் முடிவு களில் முக்கியமானவை என அமையும்.

**3. சாளுக்கியப் போர்களும் இடைக்கழி நாடும் :** பதினுன் காம் நூற்ருண்டில்தான், துங்கபத்திரை நதிக்கும் கிருஷ்ணு நதிக்கும் இடையேயுள்ள இடைக்கழி நாடு விஜயநகரப்

[1] K. A. N. Sastri—'Cholas'—p. 205.

பேரரசுக்கும் பாமினி அரசுக்கும் ஏற்பட்ட ஜென்மப் பகை காரணமாக விளங்கியது என்று சொல்லுவதற்கில்லை. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே சாளுக்கியர் – சோழர் போர்களுக்குரிய இராணுவ அரங்கமாகவும், உரிமைப் பூசலுக்கு உட்பட்ட நாடாகவும் அது காணப்பட்டது. வேங்கி நாட்டின் அரசியலில் ஏற்படுகின்ற அழுத்தத்தின் மேல்கீழ் உந்துதலுக்கு ஏற்ப, சோழ நாட்டுப் படையினர் இந்த இடைக்கழி நாட்டில்தான் மேலைச் சாளுக்கியரோடு 1004-லிருந்து 1070வரை 66 ஆண்டுகள் போராடினார்கள். சோழ நாட்டுக்குள் அல்லது சோழர் தலைநகருக்குள் மேலைச் சாளுக்கியர் சோழ நாட்டைப் பிடிக்க வேண்டும் என்ற படையெடுப்பு இராணுவ முறையில் எழுந்ததே கிடையாது. ஓரிரு சமயம் காஞ்சீபுரம் வரை அந்தச் சாளுக்கியர் வந்ததுண்டு. ஆனால், அவை படையெடுப்புகளாகப் பெரிய அளவில் அமையவில்லை; வெறும் அடிதடிப்பாய்ச்சல் (Raid) என்ற அளவில் நிகழ்ந்தன. சோழர்கள்தான் காவிரிக்கரையிலிருந்து துங்கபத்திரையின் கரைக்குக் கோதாவிரிக் கரைப் பக்கமுள்ள வேங்கி நாட்டினரின் அரசியலைக் காக்கின்ற பணிக்காக வலியச் சென்று போராடினார்கள். பதினான்காம் நூற்றாண்டில் இங்கிலாந்துக்கும் ஃபிரான்ஸுக்கும் நடந்த நூற்றாண்டுப்போரில் ஆங்கிலேயர் அடிக்கடி பாரீஸ் சென்று அமர்ந்து, பின்பு தங்கள் நாடு திரும்பியது போல, மேலைச் சாளுக்கியரின் தலைநகரான மானியக்கேடத்தைச் சோழர்கள் தாக்கினார்கள் ; பல நகரங்களை அழித்ததைப் போல அதையும் அவர்கள் அழித்தார்கள். இத்தகைய இராணுவ ஆக்கிரமிப்பு அழிவுகளிலிருந்து தப்புவதற்காகத் தலைநகரை மலை சூழ்ந்த இயற்கை அரண்கொண்ட கல்யாணிக்கு 1042-ல் சோமேசுவரன் I ஆகவமல்லன் அப்புறப்படுத்திய பின்பும் கல்யாணி நகரத்தையும் சோழர் படைகள் பல முறைகள் படையெடுத்து அழித்தன. இவ்வாறு 1004-லிருந்து 1070வரையுள்ள 66 ஆண்டுகளாகச் சில இடைவெளிகள் விட்டுச் சோழருக்கும் சாளுக்கியருக்கும் ஏற்பட்ட பகைமை ராஜேந்திரன் தனது இரட்டப்பாடியின் படையெழுச்சியை 9 இலட்சம் சோழப் போர்வீரர்கள் கொண்டு 1004-ல் மாமன்னன் ராஜராஜனுடைய எண்ணப்படி நிகழ்த்தியதிலிருந்து தொடங்கிற்று எனலாம்.

**4. ஈழ நாட்டுப் போர் (1017):** 988-ல் ஏற்பட்ட காந்தளூர்ச்சாலை வெற்றியைப் பின் தொடர்ந்து 991-ல் ஈழப் படையெடுப்பை ராஜராஜன் நிகழ்த்தியபோது அதை முன்னின்று நடத்தியவன் ராஜேந்திரன் ஆவான். 981-லிருந்து 991வரை

ஏக ஈழத்திற்கு மன்னனாக இருந்த மகிந்தன் V, 991-ல் ரோகண நாட்டுக்கு ஈழ அரசை மாற்றிக்கொண்ட நாளிலிருந்து வட ஈழத்தில் சோழ அரசும், ரோகண நாட்டில் மகிந்தன் அரசும் என்ற இரண்டு அரசுகளின் ஆட்சி ஈழத்தில் 1017 வரை நீடித்தது. இராணுவ ஏகாதிபத்தியவாதியான ராஜேந்திரன் ஈழத்தை முழுமையாக ஆள நினைத்து, 1017-ல் படையெடுத்து ஈழத்தில் இறங்கினான். மகிந்தன் போரிட்டுத் தோற்றோடிக் காட்டினுள் சென்று ஒளிந்தான் என மகாவமிசம் கூறுகின்றது. தஞ்சை, கரந்தை செப்பேடுகளும் இதுபற்றிக் கூறுகின்றன. கானகத்துள் ஓடி ஒளிவதற்கு முன்பு தன் மனைவியரையும் அவர் தம் மகுடம் போன்ற அணிகலன்களையும் அவன் சோழரிடம் இழந்தான். எல்லாவற்றுக்கும் மேலாகப் பாண்டியன் ராஜசிம்மன் 910ஆம் ஆண்டுப் போருக்குப் பின்பு சோழன் பராந்தகன் I (907—955) கையில் அகப்படாமல் 910ஆம் ஆண்டளவில் ஈழம் சென்று ஈழ மன்னனிடம் அடைக்கலம் செய்வித்த இந்திரமணி ஆரத்தையும் மணிமகுடத்தையும் இப்போது ராஜேந்திரன் கைப்பற்றினான். இவ்வாறு ஒரு நூற்றாண்டு காலமாகச் சோழரின் வரலாற்றில் காணப்பட்ட தோல்வியின் கறை துடைக்கப்பட்டது. 'சங்கிராம ராகவன்' என்ற பட்டத்தை ஈழத்தின் மேல்கொண்ட இராணுவ வெற்றியைப் பொறுத்துச் சூட்டிக்கொண்ட அந் நிலையிலும் அம் மகுடத்தை ரோகண நாட்டுக்குக் கையோடு கொண்டுபோய்விட்ட உதயணனிடமிருந்து வன்முறையில் பெற முடியாத காரணத்தால் பாண்டிய நாட்டு மன்னனாக முடிசூட்டிக் கொள்ளாமலேயே பராந்தகன் I சோழன் இறந்து போனான் என்பதை முன்பு பார்த்தோம். அவனுடைய இந்தத் தாபம் 1017-ல் அம் மணிமகுடத்தை ராஜேந்திரன் I ஈழ நாட்டை வென்று பெற்றபோது தீர்க்கப்பட்டது. இந் நிலையில் பாண்டிய நாட்டோடு ஈழமும் சோழருக்கு உரியதாகிவிட்டது.

மகிந்தன் சோழ நாட்டில் சிறையில் 1017-லிருந்து பன்னிரண்டு ஆண்டுகள் கிடந்து நலிந்து 1029-ல் இறந்த பின்பு கூட, ஈழத்தினரின் தேசிய எழுச்சியைச் சோழர்களால் அடக்கி வைக்க முடியவில்லை. 1029-ல் வெடித்த தேசிய இயக்கமானது மகிந்தனுடைய மகன் காசிபன் தலைமையில் சோழர் படையினரை ஏராளமாகக் கொல்லுகின்ற அளவிற்கு வளர்ந்தது. ஆறு மாதம் நிகழ்ந்த இந்தப் பொதுக் கிளர்ச்சியின் பயனாக ரோகண நாடு சோழரின் பிடிப்பிலிருந்து விடுபட்டது.

விக்கிரமபாகு I என்ற பட்டத்தோடு காசிபன் அங்கே ஈழ நாட்டுக்குரிய பொது மன்னனாகி 1041வரை நீடித்த தனது

பன்னிரண்டு ஆண்டுக் கால ஆட்சியைத் தொடங்கினான். இவனுக்குப் பிறகு கித்தி என்ற மன்னன் 1041-ல் எட்டு நாள்கள் ஆட்சி செய்து இறந்த பின்பு, மகாலான கித்தி என்பவன் 1041-லிருந்து 1044வரை மூன்றாண்டுகள் ஆண்டான். அப்போது சோழர்களின் நெருக்குத் தாக்குதல் ஏற்பட்டு அவன் தோல்வியுற்றான். அரசியலில் இராணுவ முறையில் தோல்வியுற்ற அவன் ஜப்பானிய ' காரகிரி ' என்ற பெரும்பாலும் வயிற்றை வெட்டிக்கொண்டு நிகழ்த்தப் பெறும் அரசியல் தற்கொலையை நிகழ்த்தினான். தன் கையினால் கழுத்தை அறுத்துக்கொண்டு ஈழத்தின் துயருக்குரிய அரசியல் அவலத்தைத் தாங்க முடியாத இழப்பு உணர்விற்கு ஒரு சின்னமாக அவன் இறந்துபட்டான். 1044ஆம் ஆண்டு ராஜேந்திரனுடைய ஆட்சிக்காலம் அவனுடைய இயற்கையான இறப்போடு முடிவடைந்தது. மகாலான கித்திக்குப் பின்பு விக்கமபாண்டு (1044—1047) என்ற மன்னன் ஈழத்தின் எழுச்சிக் குரலாக மாறிச் சோழர்களோடு போர் புரியத் தொடங்கினான். 1047 வரை நீடித்த இவனுடைய போராட்டம் ராஜேந்திரன் காலத்தில் தொடங்கி அவன் மகன் ராஜாதிராஜன் காலத்தில் தீவிரமடைந்தது.

**5. கங்கைப் படையெழுச்சி (1020—1022) :** ராஜேந்திரனுடைய கலிங்கப் படையெழுச்சி ராஜராஜ நரேந்திரனுக்காக ஏற்பட்ட சோழரின் வேங்கிப் படையெடுப்புக்குப் பின்பு 1020 அளவில் ஏற்பட்டது. இக் கலிங்கப் படையெடுப்பில் கலிங்க மன்னனையும் அவனுக்குத் துணைவந்த ஒட்ட (ஒரிஸ்ஸா) மன்னனையும் சோழரின் தளபதி தோற்கடித்தான். இவ்வாறு கலிங்கம் வரை வந்த சோழர் படைகள் வடநாடு புகுந்து கங்கைக் கரை வரை சென்றன. இந்த கங்கைப் படையெழுச்சியில் வட நாட்டில் அரசாண்ட மகிபாலன் போன்ற மன்னர்கள் வெல்லப் பட்டார்கள். வடக்கிலிருந்துதான் அசோகன், சமுத்திர குப்தன், ஹர்ஷன் போன்ற மன்னர்கள் தெற்கே படை எடுத்தது உண்டு. சோழர்கள் காலத்தில்தான், இந்திய வரலாற்றில் சாசனப் பூர்வமான முறையில் நிரூபிக்கப்படுகின்ற, வடநாட்டுப் படையெழுச்சி தென்னகத்திலிருந்து நிகழ்த்தப்பட்டது. கரிகாலனும் பாண்டியன் நெடுஞ்செழியனும் வடநாடு சென்று தமிழ் வீரத்தை நிலைநாட்டியது, இலக்கியச் சான்றுகள் மட்டும் கொண்டவை. ராஜேந்திரனுடைய கங்கைப் படையெழுச்சி சாசனப் பூர்வமாக நிரூபணம் செய்யப்பட்டதாகும்.

**6. ராஜேந்திரனின் கங்கைப்படையெழுச்சியில் வெல்லப்பட்ட நாடுகள் :** கலிங்கத்தைக் கடந்து சென்ற சோழர் படையின் தளபதியின் பெயர் அறிவதற்கில்லை. கங்கையை அடைவதற்கு முன்பு

சோழர் படை கடந்து சென்ற நாடுகளை வகைப்படுத்திப் பார்க்க வேண்டும். சக்கரக் கோட்டம், ஆதி நகர், தக்கணலாடம், கீழ் வங்காளம், உத்தரலாடம் ஆகியவை கடந்து செல்லப் பட்டன. இப் படையெழுச்சி இரண்டு ஆண்டுகளில் நடந்தேறியது. இப் படையினர் வடநாட்டில் போர் செய்கின்றபோது அப் படைளுரோடு தொடர்பு கொள்ளுகின்ற பணியைத் திறனுடன் நடத்துவதற்காக ராஜேந்திரன் கோதாவிரியில் தங்கி, வெற்றியுடன் திரும்பி வந்த படையை எதிர்கொண்டழைத்தான்; தன்னுடைய புதிய தலைநகரான கங்கைகொண்ட சோழபுரத் திற்குத் தன்னுடைய வெற்றிப் படையை முன்னின்று பீடுடன் நடத்திக் கங்கைகொண்ட சோழனுக வந்து சேர்ந்தான்.

'திருமன்னி வளர' எனத் தொடங்கும் ராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தி கீழ்க்கண்டவாறு கங்கைப் படையெழுச்சியை விவரிக் கின்றது : 'விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும்—முதிர்படவல்லை மதுரை மண்டலமும்–காமிடை வளை இய நாமணைக் கோணமும்—வெஞ்சின வீரர் பஞ்சப்பள்ளியும்—பாசடைப் பழன மாசுணி தேசமும்—அயர்வில்வண் கீர்த்தி யாதிநகரகவையிற்—சந்திரன் றொல்குலத் திந்தர ரதனை—விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்—பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்—கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷயமும்—பூசுரர் சேருநற் கோசலநாடும்—தன்ம பாலனை வெம்முனை யழித்து—வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்—இரண சூரனை முரணறத் தாக்கித்—திக்கணை கீர்த்தித் தக்கணலாடமும்—கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்—தங்காத சாரல் வங்காள தேசமும் தொடுகழற் சங்குகொடடல் மகிபாலனை—வெஞ்சமர் வளாகத் தஞ்சவித் தருளி—ஒண்டிறல் யானையும் பெண்டிர் பண்டாரமும்—நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்—வெறிமலர் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்' கைப்பற்றிச் சோழர் படை சென்று திரும்பியது.

ராஜேந்திர சோழன் அனுப்பி வைத்த சோழர் படை கோதாவிரி நதிக்கரையிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லத் தலைப்பட்டு அடுத்தடுத்துப் பிடித்துக்கொண்டுபோன நாடு களையும் அவற்றின் தற்கால அமைப்பையும் பின் வருமாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்;

**(1) சக்கரக் கோட்டம் :** சோழப் பேரரசின் வடக்கெல்லை யாகிய வேங்கி நாட்டினை அடுத்த வடமேற்கே அமைந்திருந்தது சக்கரக் கோட்டம் என்ற நிலப்பகுதி. இது தற்காலத்தில் சித்திரக்கூடம் அல்லது சித்திரக் கோட்டம் என அழைக்கப்படு கிறது. தற்கால விசாகப்பட்டினம் மாவட்டத்திற்கு வடமேற்கே

அமைந்திருந்த அந் நாளைய வத்ச ராஜ்யத்தில் இச் சக்கரக் கோட்டம் இருந்தது. இதனை மாசுண தேசம் (பாம்புகள் நாடு) என நாக வமிசத்தினிரின் 1065ஆம் ஆண்டுக்குரிய பஸ்தார் செப்பேடு கூறுகிறது. இதனை ஆண்ட மன்னர்கள் சிந்திக வகுப்பினர். போகவதிபுரவாரேஸ்வரர்கள் என்று இவர்கள் தங்களை அழைத்துக்கொண்டார்கள். நாகர் குல மன்னர்களான இவர்கள் கி.பி. பத்து, பதினொன்றும் நூற்றுண்டுகளில் இதனை ஆட்சி செய்து வந்தார்கள். ஸ்ரீ புஜகவர பூஷண மகராஜலு என்ற மாமன்னன் இவ் வமிச அரசர்களுள் தலையாயவனுகைச் சக்கரக் கோட்டப் பகுதிகளை ஆட்சி செய்தான் என்று 1140ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது.

சக்கரக் கோட்டத்தை உள்ளடக்கி இருந்த வத்ச ராஜ்யத்தின் ஏனைய உட்பகுதிகளான மதுரை மண்டலம், நாமணைக் கோணம், பஞ்சப் பள்ளி போன்றவையும் சோழர் படையால் கைக்கொள்ளப் பட்டன. இவை மாசுண தேச மன்னர்களின் ஆளுகையின்கீழ்ச் சக்கரக் கோட்டத்தைச் சுற்றிக் காணப்பட்ட ஆட்சிப் பகுதி களாகும். இப் பகுதிகளை வென்ற சோழர் படை அடுத்து ஆதி நகர் சென்றது.

**2. ஆதிநகர் வெற்றி :** சந்திரகுல மன்னன் இந்திரராதன் சோழருடன் நடத்திய ஆதிநகர்ப் போரில் தோற்ற பின்பு, இவனுடைய ஆட்சிக்குரிய பகுதிகளான ஒரிஸ்ஸாவிலுள்ள ஒட்ட நாடும், மகாகோசலம் என வழங்கப்பட்ட தென் கோசல நாடும் சோழர் படைத்தலைவனுல் கைப்பற்றப்பட்டன. பெருநிதியம் சோழரின் வசமாயிற்று. ‘ பூர்வ தேசமும் கங்கையுங் கடாரமுங் கொண்ட ராஜேந்திரன் ’ என்று ராஜேந்திரனுடைய கல்வெட்டு களில் குறிப்பிடப்படும் பூர்வதேசம் மத்திய மாகாணத்திலுள்ள சட்டிஸ்கார்ப் பகுதி என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. தென் கோசலம் போன்ற இந்திரராதனின் ஆட்சிப் பகுதிகளும் பூர்வ தேசத்தில் அடங்கியது என்றும் கொள்ளலாம். இவற்றை வென்ற பின்பு சோழர் படை தண்டபுக்தி நோக்கிச் சென்றது.

**3. தர்மபாலனின் தண்டபுக்தி வெற்றி :** ஆதிநகர் என்னும் கோசல நாட்டைக் கைப்பற்றியவுடன் சோழர்படை தர்ம பாலனின் தண்டபுக்தி நாட்டைக் கைப்பற்றியது. தண்டபுக்தி என்பது வங்காளத்தின் மிதுனபுரி மாவட்டத்தில் அமைந் திருந்தது. வங்காளத்திற்கும் ஒட்ட நாட்டிற்கும் இடையே அமைந்திருந்த இந்த தண்டபுக்தி நாட்டைச் சொர்ணரேகை என்ற நதி இரு கூருகப் பிரித்தது. வங்காளத்தினுள்ள பர்துவான்

பகுதி முன்பு வர்த்தமானபுக்தி என்று அழைக்கப்பட்டது. இதில் அடங்கிக் காணப்பட்ட ஓர் உள்நாட்டுப் பகுதி தண்டபுக்தி மண்டலம் என வழங்கப்பட்டது. தண்டபுக்தியை ஆண்ட தர்ம பாலன் உத்தரலாடத்தை ஆட்சிசெய்த மாமன்னன் மகிபாலனின் உறவினன் ஆவான். மகிபாலனின் ஆதிக்கத்தை ஒப்புக் கொண்டு தண்டபுக்தியை அவன் ஆண்டு வந்தான். தர்ம பாலனைத் தோற்கடித்த பின்பு கங்கையை நோக்கிய பாதையில் காணப்பட்ட மற்றைய மன்னர்கள் சோழரால் வெல்லப் பட்டார்கள்.

**4. தக்காணலாடம், கீழ்வங்காளம் :** தக்காணலாடத்தை ஆண்ட இரணசூரனும், கீழ்வங்காளத்தின் கோவிந்த சந்திரனும் உத்தரலாட மன்னன் மகிபாலனின் பேரரசு ஆதிக்கத்தின் கீழிருந்தனர். இவர்களையும் சோழர் படைத்தலைவன் வென்று, அவர்களுடைய ஆட்சிப் பகுதிகளைக் கைப்பற்றி, கங்கைக் கரை நோக்கி முன்னேறினன்.

**5. உத்தரலாடம் :** மெய்க்கீர்த்தியின்படி உத்தரலாட மாமன்னன் மகிபாலனைச் சோழர்படை போர்க்களத்தில் சந்தித்தது வெற்றி சோழருக்கே. மகிபாலன் என்ற மாமன்னனின் வீழ்ச்சி சோழர் படையினரின் போரிடும் ஆற்றலையும் போர்க் களத்தில் அவர்கள் காட்டிய நிர்வாகத்திறனையும் எடுத்துக் காட்டிற்று.

**6. உத்தரலாட மாமன்னன் நாடுகளின் அமைப்பு :** இரண சூரனின் தக்கணலாடம், மகிபாலனின் உத்தரலாடம் என்ற நாடுகள் தற்காலத்து பீகார், வங்காள ராஜ்யங்களில் பாயும் கங்கை நதியின் தென் கரையில் அமைந்திருந்த பகுதிகளைக் கொண்டவை ஆகும். தக்காணலாடத்திற்குத் தெற்கே தண்டபுக்தி மண்டலமும், இதற்கு வடக்கிலும் கிழக்குப் பகுதி களிலும் உத்தரலாடப் பேரரசும் காணப்பட்டன. 'தங்காத சாரல் வங்காள தேசமும்' என்று மெய்க்கீர்த்தியில் குறிக்கப் படுவது கீழ்வங்காளமாகும். இவை யாவும் 'லாடம்' (ராடம்) என்ற தொன்மைப் பெயருடன் கங்கை நதியின் தென் கரையில் அமைந்த கீழ்வங்காளப் பகுதியிலுள்ள நாடுகளாகும். கங்கையாற்றின் கரை பீஹார், வங்காளப் பகுதிகளில் அமைந்திருந்த உத்தரலாடம் மகிபால மன்னனுடையது. பால வமிசத்தின் ஒப்பரிய மன்னனாக விளங்கிய இவனுடைய ஆதிக்கத்தில் அடங்கிய நாடுகள் வடமேற்கே காசிவரை பரந் திருந்தன. இவனுக்குக் கீழ்ப்பட்டிருந்த மன்னர்களை வென்ற

பின்பு இவனையும் தோற்கடித்த நிலையில் கங்கைக் கரையைச் சோழர் படைத்தலைவன் சென்றடைந்ததாக மெய்க்கீர்த்தி சொல்லுகிறது. கங்கைப் படையெழுச்சி நடந்த சில ஆண்டுகள் கழித்து எழுதப்பட்ட திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகிற படி, கங்கையைத் தொட்டு விட்டுத் திரும்பும் வழியில்தான் பேரரசன் மகிபாலனைச் சோழர்படை வென்றது.

7. **படையெழுச்சியின் விளைவுகள் :** (1) சைவ சமயத்தின் சிந்தனையாளர் பலரை ராஜேந்திரன் கங்கப் படையெழுச்சியை ஒட்டிச் சோழ நாட்டுக்குத் தருவித்தான். சைவநெறியைப் பொறுத்துத் தமிழகத்திற்கும் வடபுலத்திற்கும் ஏற்பட்ட தொடர்பு இவ்வாறுதான் ஏற்பட்டது. இது பற்றிச் சித்தாந்த சராவழி என்ற சைவநூல் குறிக்கிறது.

(2) வங்க நகரம் மிதிலையில் தமிழர்கள் குடியேறினார்கள். வங்காள நாகரிகத்தைத் தழுவிக்கொண்ட இவர்கள் கர்னாடகர்கள் என்ற பெயரில் அங்கு வாழத் தலைப்பட்டார்கள்.

(3) R.D. பானர்ஜி என்ற வரலாற்றாசிரியர் கூறுவது போல, சேன வமிசத்தின் முதல் அரசனான சாமந்த சேனன் என்பவன் கங்கைப் படையெழுச்சியை நடத்தி வந்த சோழர் படைத் தலைவர்களில் ஒருவன் ஆவான். சேன வமிசத்தின் ஆட்சி வங்கத்தில் பிற்காலத்தில் சிறப்புடன் நடந்தது.

(4) 1027-ல் சோமநாதபுரத்தைக் கொள்ளையடித்துச் சென்ற கஜினியையும், அவன் வழி வந்தவர்களையும் கன்னோசி கூர்ஜாரப் பிரதிகாரர்கள் என்றழைக்கப் பெற்ற ராஜபுத்திர மன்னர் பரம்பரை எதிர்க்க வாய்ப்பில்லாமல் போயிற்று ; ஏனென்றால், அவர்கள் வலிமை குன்றிக் காணப்பட்டார்கள். காசி நகர் வரை விரிவாக்கங்கொண்டு முன்னேறி வந்த வங்க தேசத்துப் பாலா என்ற வமிசத்தரசனான மகிபாலன் மேலும் வடமேற்கே சென்றிருந்தால், வலிமை சான்றதோர் இந்து சாம்ராஜ்யம் தோன்றி இருக்க வாய்ப்பு உண்டாகி இருக்கக் கூடும். அதன்மூலம் ஆப்கானிய முஸ்லீம்களின் படையெடுப்பையும், அதைத் தொடர்ந்து இந்தியாவின்மேல் அவர்கள் கொள்ள இருந்த அரசியல் பிடிப்பையும் தவிர்த்து இருக்கலாம். ஆனால், வங்கத்து மகிபாலனின் வடமேற்குத் திசை நோக்கிய திக்விஜயத்தை ராஜேந்திரனுடைய படைகளிலிருந்து பாதுகாக்க வேண்டித் தன்னுடைய வடமேற்குப் படையெடுப்பை இடைவெளியிலேயே கைவிட்டான் என ரொமிலா தாபர் கூறுகிறார்.[2] ஆப்கானிய

[2] Romila Thapar—' A History of India '—1969—p. 224

முஸ்லீம்களின் வருகையைத் தடுத்து நிறுத்துகின்ற வலிமையைக் கொண்ட ஓர் இந்து சாம்ராஜ்யம் வடக்கே உருவாகின்ற வாய்ப்பைத் தடுத்து நிறுத்தி இந்தியாவின் எதிர்காலத் தலை விதியை மாற்றிய ராஜேந்திரனின் வங்கப் படையெடுப்பின் இந்த விளைவு வரலாற்று இயல் முறையில் மேலும் ஆராயப்பட்டால் மேற்கொண்டும் பல உண்மைகள் கிடைக்கலாம்.

(5) இரண்டாண்டுகள் நிகழ்ந்த இப் படையெழுச்சி சமயச் சார்பான இராணுவ வழி நடந்த திக்விஜயம் எனக் கொள்ளப்பட வேண்டும். இந்திய வரலாற்றில் காணப்படும் முதல் தென்னிந் தியப் படையெழுச்சியாக இது நடந்தேறியது. இவ்வாறு இந்த திக்விஜயத்தால் சோழ நாட்டின் இராணுவச் செல்வாக்கு (military prestige) பெருமளவிற்கு வளர்ந்தது. ராஜேந்திரன் புதிதாகக் கட்டிக்கொண்டிருந்த தனது தலைநகருக்கு இத் திக்விஜயத்தின் பெருமையெல்லாம் சேர்த்துக் கங்கை கொண்ட சோழபுரம் என்ற பெயரை வைத்தான். திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுவது போல வெல்லப்பட்ட மன்னர்கள் தங்கள் தலையில் கங்கைநீர் தாங்கிய குடங்களைக் கொண்டுவரப் பணிக்கப்பட்டார்கள். இந் நீர் கொண்டு ராஜேந்திரன் தன்னு டைய புதிய தலைநகரைப் புனிதப்படுத்தினுன். அந்தணர் வழி இந்து மதத்தின் சார்பில் கங்கை நதிக்கு அமைந்த ஆன்மீயப் பிடிப்புக்குச் சோழநாட்டின் பேரரசு உட்பட்டுப் போய் இராணுவச் சிறப்பு மண்டிய சமயச் சார்போடு கூடிய திக்விஜயத்தை வெற்றி யுடன் மேற்கொண்டதைத்தான் இப் படையெழுச்சி காட்டிற்று.

**8. கடாரப் படையெழுச்சி (1025)—நாடும் நகரமும்:** ராஜேந்திரனுடைய கப்பற்படை 1025-ல் வங்கக் கடலைக் கிழக் காகக் கடந்து கடாரம் என்ற மலேசியா, பினுங்கு பகுதியின் கெடாவையும் இந்தோனேஷியாவின் தென்கிழக்குப் பகுதியான ஸ்ரீ விஜயம் என்ற பாலம்பாங் என்னுமிடத்தையும் சென்றடைந்து, அவற்றை வென்றது. ராஜேந்திரனுடைய கடாரப் படை யெழுச்சியை நடத்திச் சென்ற சேனுதிபதியின் பெயர் அறிவதற் கில்லை. இத்சிங் என்ற சீன யாத்திரிகன் (கி.பி. 672—705) இந்தியா விற்கு வருகின்றபோது, வங்கக்கடலில் கிழக்கே இருந்து நுழையும் போதும் அக் கடலை மேற்கே இருந்து கடந்து கிழக்கில் நிலங் காணும்போதும் அவன் கண்ட இடம் ‘ கெடா ’ (Kedah) என்று குறிக்கின்ருன். ஆகவே, சோழர்களும் தங்களுடைய கப்பல் களுடன் வங்கக்கடல் கடந்து சென்றபோது தாங்கள் முதலில் கண்ட நிலப்பகுதியான கடாரத்தின் பெயர்கொண்டு ஏனைய நாட்டுப் பகுதிகளையே அழைத்தார்கள் எனக் கொள்ள வேண்டும்.

இண்டஸ் என்ற சிந்துநதியை மட்டும் தெரிந்து வைத்திருந்த கிரேக்கர்கள் அந் நதியின் பெயரையே நம் நாட்டுக்கு 'இந்தியா' என்று வழங்கி அழைத்தது போல, சோழர்கள் மலாயாவையும் சுமத்திரா தீவு கொண்ட இந்தோனேஷியாவையும் கடாரம் என்றே பொதுவாக அழைத்தார்கள்.

தற்காலத்தில் மலேயாத் தீபகற்பத்தில் பினங் என்றழைக்கப் பெறும் 'கெடா' என்ற கடாரப் பகுதிக்குத் தெற்கேயுள்ள பெருந் தீவான சுமத்திராவின் தென்கிழக்கே ஸ்ரீ விஜயம் என்ற நகர் கெடாவை விட்டுச் சுமார் 600 கிலோ மீட்டர் இடைவெளி கொண்டு அமைந்திருந்த போதிலும் இவ்விரண்டு பகுதிகளையும் கடாரம் என்றே சோழர்கள் அழைத்தார்கள். ஸ்ரீ விஜய நாட்டின் ஆதிக்கம் சுமத்திராத் தீவிலும் மலேயாத் தீபகற்பத்திலும் பரவி நின்றது. கடார வெற்றி ராஜேந்திரன் ஒரே படையெடுப்பில் பெற்ற உயரிய வெற்றி ஆகும். கடாரத்தரசன் என்றழைக்கப் பெற்று ராஜராஜனோடு தொடர்பு கொண்ட மாற விஜயோத்துங்க வர்மன் சூளாமணி வர்மனின் மகன் ஆவான். இவனுடைய மகன் சங்கிரராம விஜயோத்துங்க வர்மன். இவனுடைய காலத்தில்தான் கடாரப் படையெழுச்சி நடந்தது. கடாக(ம்) என வடமொழிக் கல்வெட்டுகளிலும், காழகம் எனப் பட்டினப் பாலையிலும் (வரி 191), 'பரக்கு மேதக் கடாரம்', 'குளிறு தெண்டிரைக் குரை கடாரம்' எனக் கலிங்கத்துப் பரணியிலும் (பாட்டு 138) குறிக்கப் பெறும் கடாரம் இதுவே.

**9. வாணிபமும் படையெழுச்சியும் :** சீன நாட்டோடு சோழருக்குக் கி. பி. 1000 தொடக்கம் பெருவளர்ச்சிக்குரிய வாணிபம் 25 ஆண்டுகள் முனைப்பாக நடந்து வந்தது. ராஜ ராஜன் அனுப்பிய வணிகக்குழு 1015-ல் சீனம் சென்றடைந்ததைச் சூங் மன்னர்குல வரலாறு கூறுகிறது. அதே வரலாறு 1033-ல் ராஜேந்திரன் அனுப்பிய வணிகக்குழு பற்றியும் குறிக்கிறது. 1025-ல் ஏற்பட்ட கடாரப்படை எழுச்சிக்குப் பின்பு வெளிநாட்டு வாணிகம் பெருவளர்ச்சியுற்ற நிலையில் இவ் வணிகக் குழு அனுப்பி வைக்கப்பட்டது. இந் நிலையில் 1025-ல் கடாரப்படை யெழுச்சி ஏற்படுவதற்குக் காரணம் என்ன ? சீனம், காம்போஜம் என்றழைக்கப்பட்ட தற்கால கம்போடியா, வியட்நாம் போன்ற நாடுகளுடன் சோழர்கள் கொண்ட அயல்நாட்டு வாணிபத்தை ஸ்ரீ விஜயத்தார் இன்னல் படுத்தினர். இவ்விடர்ப்பாடுகளைக் களைய வேண்டிச் சோழர் படை கடாரம் சென்றதற்குச் சோழரின் இராணுவப் பாரம்பரியம் பெரிதும் உதவிற்று.

மலேயாவும் சுமத்திராவும் இணைக்கின்ற மலாக்கா ஜல சந்தியின் வழியாகத்தான் சீனம், காம்போஜம் போன்ற நாடுகளுக்குக் கிழக்கே இருந்து கப்பல்கள் செல்ல வேண்டும். இந்த இடத்தை அடைந்த சோழரின் கப்பல்களை ஸ்ரீ விஜயத்தார் தடுத்திருக்கக் கூடும். கான்ஸ்டான்டிநோபிளை 1453-ல் துருக்கியர் பிடித்துக்கொண்ட போது அடைபட்டுப் போன வணிகப் பாதையைத் திரும்பவும் இராணுவப் போராட்டங்கொண்டு திறக்க முடியாத அளவில் கீழை நாடுகளுக்குக் கடல் வழியைக் கண்டுபிடித்தனர் ஐரோப்பியர். மலாக்கா ஜலசந்தியில் அடைபட்டுப்போன வணிகப் பாதையைக் கடல் வழியாகச் சென்று கடற்படை கொண்டு சோழர்கள் துலக்கினுர்கள். கடல் வாணிபத்திற்காகக் கடற்படை கொண்டு போராடிய முதல் இந்திய அரசாங்கம் ராஜேந்திரனுடைய சோழ அரசுதான்.

சீனத்தோடு உறவுகொள்ளப் போன சோழ வணிகக் குழுவினரைச் சாதாரண நாட்டு மக்களையும் மன்னனையும் சேர்ந்தவர்களைப் போன்ற எளிமையான அளவில் ராஜாங்க அந்தஸ்தில் தாழ்த்தி நடத்தினுர்கள் சீனர்கள். இதற்கு ஸ்ரீ விஜயத்தவரே காரணம். சோழ நாட்டைப் பற்றி ஸ்ரீ விஜயத்தவர் நேரடியாக நட்புரிமையோடு தெரிந்திருந்த போதிலும் சீனர்களிடம் உண்மை நிலையினைக் கூறிடாமல் சோழர்களின் ராஜீயப் பொருளாதார மேம்பாடுகளை வேண்டுமென்றே குறைத்து மதிப்பீடு செய்து சீனர்களின் மனதை மாற்றினர். இத்தகைய தந்நலம் தண்டிக்கப்பட வேண்டியது மட்டுமல்ல; தடுக்கப்பட வேண்டியது ஆகும் எனச் சோழரின் கடாரப் படையெழுச்சி நிகழ்ந்தது. பத்தாவது நூற்றுண்டில் சோழ நாடு போன்ற மேலை நாடுகளோடு தீவிரமான வாணிகஞ்செய்யச் சீனர்கள் எண்ணித் துணிந்த காலத்தில், சோழப்பேரரசின் அயல் நாட்டு வாணிபத்திற்கான வசதிகளை இராணுவ நடவடிக்கையின்மூலம் ராஜேந்திரன் ஏற்படுத்த முயற்சி செய்தது ஏகாதிபத்தியவாதியான அவனுக்குப் பொருத்தமானதுதான்.

**10. திக்விஜயமா?** இக் கடாரப் படை எழுச்சியைச் சோழ மன்னனின் கடல் கடந்த திக்விஜயம் என்றும் சொல்வர். 1022-ல் கங்கைப் படையெழுச்சி வெற்றியாக முடிவடைந்த பின்பு 1025-ல் கடாரப் படையெழுச்சி அதனடியாக மேற்கொள்ளப்பட்டது என்ற கருத்தும் உண்டு. காந்தளூர்ச்சாலையையும், ஈழம், மாலத்தீவு போன்றவற்றையும் வென்றிருந்த சோழறகப்பற்படையின் பாரம்பரியமான வலிமையை எண்ணி, சாம்ராஜ்ய நோக்கில் திக்-

விஜயம் செய்கின்ற முறையில், வங்கக்கடலைக் கிழித்துச் சென்ற சோழர்ப்படையினர் ராஜேந்திரனின் பெயரைச் சொல்லிக் கடாரத்தையும் வென்றார்கள். கடாரப் படையெழுச்சியில் வெல்லப்பட்ட பகுதிகள் ஸ்ரீ விஜயத்தாரின் ஆதிக்கத்தில் அமைந்திருந்தவை. ராஜராஜன் I இறந்த சில ஆண்டுகளில் நாகப்பட்டினத்திலுள்ள புத்த கோவிலுக்குரிய ஆனைமங்கலம் முற்றூட்டு ராஜேந்திரனால் ஸ்ரீ விஜய மன்னனின் வேண்டுகோளின்படி புதுப்பிக்கப்பட்டு, சாசனப்படுத்தப்பட்ட பின்பு இவ்விரு நாடுகளுக்குள்ள ராஜீய உறவுகள் முறிவு பெற்றிருக்க வேண்டும். திக்விஜயம் என்பது பல நாடுகளைக் கவர்கின்ற மேலாண்மையின் வெளிப்பாடு எனலாம். ஸ்ரீ விஜயப் பேரரசைமட்டும் அடக்கச் சென்ற இக் கடாரப் படையெழுச்சி இத்தகைய வரையறையில் அடங்க வில்லை. ஆகவே, கடாரப்படையெழுச்சியைத் திக்விஜயம் எனக் கொள்வதற்கில்லை.

**11. படையெழுச்சியும் வெல்லப்பட்ட பகுதிகளும் :** 'திருமன்னி வளர' எனத் தொடங்கும் ராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தி பின்வருமாறு கூறுகிறது: 'அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்—சங்கிராம விசையோத் துங்க வர்ம—னாகிய கடாரத்தரசனை வாகையும்—நிறைசீர் விசயமுந்—துறைநீர்ப் பண்ணையும்—வன்மலையூரெ—யிற் றொன்மலை யூரும்—ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்—கலங்கா வல்வினை இலங்கா சோகமும்—தாப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்—காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்—விளைப்பந் தூருடை வளைப்பந் தூரும் —கலைத்தக் கோப்புகழ் தலைத்தக் கோலமும்—தீதமர் பல்வினை மாதவா லிங்கமும்—கலாமுதிர் கடுந்திற லிலாமுரி தேசமும்— தேனக்க வார்பொழில் மானக்க வாரமும்—தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்—மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பர கேசரி வர்மரான—உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு' என்று அம் மெய்க்கீர்த்தி (பிராசஸ்தி) முடிவடைகிறது. கடாரத்தைப் பற்றிய வெற்றிச் செய்திகளைத் தொகுத்து உரைக்கும் மெய்க்கீர்த்தியின்படி அப் படையெழுச்சியினைப் பார்ப் போம்.

ஸ்ரீ விஜயப் பேரரசின்கீழிருந்து நாட்டுப் பகுதிகள் பின் வருமாறு: (1) ஸ்ரீ விஜயம் (2) பண்ணை (3) மலையூர் (4) மாயிருடிங்கம் (5) இலங்கா சோகம் (6) பப்பாளம் (7) இலிம்பங்கம் ; வளைப்பந் தூர் (8) தக்கோலம் (9) தாமலிங்கம் (10) இலாமுரி தேசம் (11) நக்கவாரம். இப் பகுதிகள் எல்லாம் சோழரால் கைப்பற்றப் பட்டன. அவற்றை வகைப்படுத்திப் பார்க்கலாம் :

(1) **ஸ்ரீ விஜய நாடு :** சொர்ணதீவு என்ற சுமத்திராவின் பாலம்பாங் என்னும் பகுதியில் இந் நாடு பேரரசாக வளர்ந்து இருந்தது. ராஜேந்திரனின் கடாரப் படையெழுச்சியின் முதல் வெற்றி இங்குதான் நடந்தது. கி.பி. எட்டாம் நூற்றுண்டிலிருந்து பதிஞேராம் நூற்றுண்டு வரை மலேயாத் தீபகற்பத்தின் அரசியலிலும் முக்கிய பங்கு வகித்தது ஸ்ரீ விஜய நாடு. இதனை வென்ற பின்பு சோழர்படை பண்ணை என்ற நாடு சென்றது.

(2) **பண்ணை :** ஸ்ரீ விஜய வெற்றியைத் தொடர்ந்து கைப் பற்றப்பட்ட சுமத்திராத் தீவின் கிழக்குப் பகுதியில் பண்ணை அமைந்திருந்தது. தற்காலத்தில் பனி என்றும், பணை என்றும் இது குறிப்பிடப்பட்டு வருகிறது. இதனை வென்ற சோழர்ப் படையின் கவனம் மலையூரை நோக்கித் திரும்பியது.

(3) **மலையூர் :** ஸ்ரீ விஜய ராஜ்யத்திற்கு அருகில் மலையு நதிக்கு அப்பால் இருந்த மலையூர் அடுத்துக் கைப்பற்றப்பட்டது.

(4) **மாயிருடிங்கம் :** ஸ்ரீ விஜய நாட்டின் வடக்கில் காணப் பட்ட இந்த நாடு மலேயாத் தீவின் மையத்தில் அமைந்து இருந்தது எனக் கூறும் சௌ—ஜி—குவா என்ற சீன வரலாற்ருசிரியன் ஜிலோடிங் எனப்பட்ட ஸ்ரீ விஜய நாட்டின் ஆதிக்கத்திற்கு அடங்கியிருந்த ஒரு பகுதி இது என்றும் குறிக்கிருன்.

(5) **இலங்கா சோகம்:** இப் பகுதி மலேயாத் தீவின் 'கெடா' பிரதேசத்திற்குத் தெற்கே அமைந்ததாகவும் லிங்—யா—சௌகியா என்றழைக்கப்பட்டதாகவும் மேலே சொல்லப்பட்ட சீன வரலாற் ருசிரியனுடைய குறிப்பில் காணப்படுகிறது. இதுவும் ஸ்ரீ விஜய நாட்டினருக்கு அடங்கி இருந்தது.

(6) **பப்பாளம் :** மேற்சொல்லப்பட்ட இரு பகுதிகளையும் வென்ற சோழர் படை கைப்பற்றிய அடுத்த பகுதி பப்பாளம். இதனைப் பற்றி இலங்கை லரலாறு மகாவமிசத்திலும் குலோத்துங்க சோழனின் பிள்ளைத் தமிழிலும் சில குறிப்புகள் வருகின்றன. ஒட்டக்கூத்தரின் பிள்ளைத்தமிழ் குறிப்பிடும் ' மாளுவம் சோனகம் பப்பாளம் ' என்பதில் பப்பாளம் எனச் சொல்லப்படுவது இந்த நாட்டைத்தான் எனக் கொள்ளலாம். மகாவமிசம் கூறுவது போல ஈழ மன்னன் பராக்கிரம பாகு I தமிழகப் படைத்தலைவன் ஆதிச்சனை 1165-ல் 'இராமன்ஞ தேசம்' என்ற பர்மாவிற்குப் படை எடுத்துச் செல்லப் பணித்தான். சிங்கள இளவரசனை ஸ்ரீவிஜயத்தார் கடத்திக்கொண்டு போனதால் ஏற்பட்ட இப் படை

யெழுச்சியில் ஆதிச்சன் பப்பாளத்தைதான் முதலில் கைப் பற்றினுன் எனத் தெரிகிறது. இது ராஜேந்திரன் படையெழுச் சிக்குப் பிறகு நடந்த நிகழ்ச்சி ஆகும். இதிலிருந்து பப்பாளம் என்பது கிரா பூசந்திக்கு அருகில் அமைந்த ஓர் ஆட்சிப் பிரதேசம் எனவும் கருதப்படுகிறது.

**(7) இலிம்பங்கம், வளைப்பந்தூர்** என்ற இரு பிரதேசங்களும் இன்னும் அடையாளம் காட்டப்படாத பகுதிகள். இவற்றையும் சோழர்படை வெற்றி கொண்டது.

**(8) தக்கோலம் :** மலிந்த பங்ஹா எனப்படுவதும், கிரேக்க வரலாற்ருசிரியன் தாலபியால் ‘ தக்கோலா ’ என அழைக்கப்படு வதும், சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் ‘ தக்கோலி ’ என்று குறிப்பிடுவதும் இந்த இடமே என்பது ஆராய்ச்சிக் குறிப்பு. மலேயாவின் மேற்கே கிரா பூசந்தியிலிருந்து தெற்கே அமைந் துள்ள தற்காலத்திய தக்கோடா என்ற மாவட்டத்தின் நகர்தான் இந்த தக்கோலம் என்பது உறுதி. இதை வென்ற சோழர் படை அடுத்துத் தாமலிங்கம் சென்றது.

**(9) தாமலிங்கம் :** ஜெரினி என்ற ஆராய்ச்சியாளர் மலேயாவின் கிழக்குக் கரையில் குவாண்டைன் நதி கடலோடு கலக்குமிடத்தில் தெமிலிங் என்னும் நகரம் அமைந்திருந்ததாகக் கூறுகிருர். இதனையும் இலங்கா சோகத்தையும் கடல், நில வழிகள் இணைத்துச் சென்றதாக வரலாற்றறிஞர் கூறுவர். கடல்வழிப் பிரயாண காலம் 6 நாள்கள் எனவும் கூறப்படுகிறது. இதனை வென்ற பின் சோழர்கள் இலாமுரி தேசம் சென்ருர்கள்.

**(10) இலாமுரி தேசம் :** இத் தேசம் சுமத்திராத் தீவின் வட பாகத்தில் அமைந்திருந்ததாகக் கூறப்படுகிறது. அராபிய வணிகர் களை ‘லம்பிரி’ எனவும், சீன வரலாற்று நூலால் ‘லான்வூலி’ எனவும் அழைக்கப்பட்ட பகுதி இதுவே எனலாம். இதனை வென்றடிப் படுத்திய பின்பு தனித் தீவுகளான நிக்கோபார் என்ற நக்கவாரம் வெற்றி கொள்ளப்பட்டது.

**(11) நக்கவாரம் :** தற்கால நிக்கோபாரின் வெற்றியோடு கடார நாட்டுப் படையெழுச்சி நிறைவு எய்துகிறது எனலாம். இக் காலத்தில் நிக்கோபார் என வழங்கப்பட்டு நம் நாட்டின் நேரடி ஆட்சியில் இருக்கும் இப் பகுதி அக் காலத்தில் ஸ்ரீவிஜய நாட்டு மன்னனின் ஆதிக்கத்தில் இருந்தது எனக் கொள்ளலாம்.

**(12) திறனுய்வு :** அயல் நாட்டு வாணிபத்தின் ஆதிக்கத்திற் காக ஏற்பட்ட இப் படையெழுச்சி பற்றி ராஜேந்திரனின்

'திருமன்னி' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி மட்டுமே பேசுகிறது. அதுவே இதற்குரிய வரலாற்றுத் தடயமாக விளங்குகிறது. சுமத்திராவில் பாராஸ், மலேயாவைச் சேர்ந்த பாடாங், லாவாஸ் என்னும் இடத்திலுள்ள போர்வக் தோலக், மஜாபாகிப் என்னும் இடத்திலுள்ள பாண்டர் பாயாகப் என்ற இடங்களின் கல்வெட்டுகள் சோழர் கொண்டிருந்த வணிகத்தைப்பற்றி மட்டும் கூறுகின்றன. கடாரப் படையெழுச்சி பற்றிக் கடாரப் பகுதியில் குறிப்புகள் இல்லை. சோழர்கள் கடாரப் பகுதிகளில் கைப்பற்றிய இடங்களில் அவர்களுடைய அரசியல் வழக்கப்படி நேரடியான ஆட்சிமுறை அமைக்கப் பெறவில்லை. இப் படையெழுச்சியின் வெற்றிக்குப் பின்பு சோழ மன்னனுக்கு அவ்வப்போது கடார நாட்டினர் கப்பம் செலுத்தினர் என நாம் சொல்லிக்கொள்ளலாம். வீரராஜேந்திரன் காலத்தில் ஸ்ரீவிஜய நாட்டரசன் நேரடியாகச் சோழநாடு வந்து வேண்டுதல் செய்தபடி 1068-ல் சோழனுடைய படை கடாரப் பகுதி சென்று அந் நாட்டாரின் அரசுரிமைப் போராட்டத்தில் வெற்றிகரமாகப் பங்கு பெற்றது என்பது பின்னால் வருகின்ற வரலாற்று நிகழ்ச்சி ஆகும். ஆகவே, ராஜேந்திரனுடைய படையெழுச்சிக்குப் பின்பு ஸ்ரீவிஜயப் பகுதி சோழ நாட்டோடு சேர்ந்து இருக்கவில்லை என்பது வரலாற்று உண்மையாகும்.

வங்கக்கடல் சோழர்களின் ஏரியாக மாறுகின்ற அளவிற்குச் சோழரின் கடற்படை கொண்ட வலிமை, சோழரின் அயல்நாட்டு வாணிபம் கொண்ட ஆக்கம், அதன் நலன்களைப் பேணுகின்ற வகையில் ஏகாதிபத்திய முறையில் இயக்கம் பெற்ற ராஜேந்திர சோழனுடைய படையாற்றல் ஆகியவற்றை மட்டும் இக் கடாரப் படையெழுச்சி காட்டவில்லை. தமிழ் நாட்டில் புத்துயிர் பெற்று விளங்கிய இந்து மதத்தின் கருவான ஆன்மீயக் கலாசாரம் கீழை நாட்டில் பரவி வேரூன்றியதையும் இக் கடற்படையெழுச்சி கோடிட்டுக் காட்டுகிறது.

பத்து, பதினொன்றும் நூற்றுண்டுகளில் ஐரோப்பியர் கீழை நாடான ஜெருசலத்திற்குச் சிலுவைப் போர் (crusade) நடத்துவதற்காக வந்து ஓரளவு வெற்றியும் பெற்றனர். கி.பி. 712-ல் அரேபியர்கள் சிந்துநதிக் கரை வரை வந்தார்கள். இவ் வெற்றியாளர்கள் மேற்கிலிருந்து வந்து கீழை நாடுகளின் கலாசாரச் செல்வத்தை அள்ளிக்கொண்டு சென்று தங்கள் நாகரிகங்களின் தொடர் வளர்ச்சிக்குரிய ஆக்கத்தைத் தேடிக்கொண்டார்கள். இவ்வாறு வந்த இராணுவ வெற்றியாளர்கள் தங்களிடம் தோற்றவர்களிடம் கலாசார முறையில் அவர்களாகவே தோற்றுப் போனுர்கள். இவ்வாறு மேற்கு எப்போதுமே கிழக்கிற்குக் கலாசாரத்தைப் பொறுத்த அளவில் கடன்பட்டு

வந்திருக்கிறது. ஆனால், மேலை நாடான தமிழகத்திலிருந்து சென்ற சோழர்கள் கீழை நாடுகளில் கலாசாரச் செறிவை நிலை நாட்டினார்கள். இந்த நிலையில் வெற்றியாளர்களான அவர்கள் வெற்றியாளர்களாகவே 'பெருமளவிற்கு விளங்கினார்கள். இவ்வாறுதான் 'அகண்ட இந்தியா' (Greater India) என்ற இந்தியக் கலாசார விஸ்தரிப்பு கீழை நாடுகளில் ஏற்பட்டது. இது பல காலமாக நிகழ்ந்து வந்ததுதான். ஆனால், சோழரின் கடாரப் படையெழுச்சி இத்தகைய விஸ்தரிப்புக்கு ஆக்கப் பூர்வமான வளர்ச்சிப் பருவத்தின் முதிர்ச்சியை அளித்தது. கடாரப் படையெழுச்சியை இந்த நிலையில் ஒரு வகையான கலாசார திக்விஜயம் எனக் கொள்ளலாம்.

சோழர் காலத்தில் தமிழகத்தின் கலாசாரம் கொண்ட எழுச்சியின் திரண்ட பயன் கீழை நாட்டுக்கும் சென்றடைய உறு துணை செய்தது இக் கடாரப் படையெழுச்சியே. 'ஈந்தவர் அன்றி இருந்தவர் யாரே' என்று சொன்ன கம்பனுடைய சோழ நாட்டிலிருந்து கலாசாரத் தூதுவர்களாக அனுப்பி, இக் கீழை நாடுகளை மற்றோர் இந்துமதக் கேந்திரமாக, கலாசாரத்தைப் பொறுத்த அளவில், மாற்றிக் காட்டிய பெருமை ராஜேந்திரனைச் சாரும். இவ்வாறு இந்துமதக் கலாசார மேம்பாட்டைக் கீழை நாடுகளுக்கு ஈந்த வள்ளன்மையின் பெருமை காரணமாக ராஜேந்திரன் உலக வரலாற்றில் இன்று வரை உயிர்த்திருக்கின்ற சரித்திர நாயகச் செம்மல்களின் வரிசையில் வைத்துப் புகழ்ந்தேத்தப்பட வேண்டியவன் ஆவான். இக் கடாரப் படையெழுச்சி நிகழ்ந்த பகுதிகள் எல்லாம் இஸ்லாம் மதத்தை தழுவிக் கொண்ட பின்பும், இந்துமதக் கலாசாரப் பிடிப்புகளைக் காட்டக்கூடிய வாழ்வு முறைகளை அப் பகுதிகளின் கலாசாரத்தில் இன்றுகூட நாம் பார்க்கின்ற அளவிற்கு அகண்ட இந்தியா என்ற கலாசார விஸ்தரிப்புக்கு முதிர்ச்சியையும் முனைப்பையும் வழங்கியவன் ராஜேந்திரனே என்றளவில் அவனுடைய கலாசார திக்விஜயமான கடாரப் படையெழுச்சி உலகக் கலாசார இயக்கங்களில் ஒன்றாகக் கருதப்பட வேண்டும்.

## II உள்நாட்டு நிர்வாகம்

நேரடி ஆட்சி என்பது சோழ அரசியலுக்குரியதாக வளர்வதற்கு முழுமுதற்காரணமாக விளங்கியவன் ராஜேந்திர சோழனே. பாண்டிய நாட்டை வென்ற பின்பு தனது மகன் சுந்தர சோழனைச் சோழ—பாண்டியன் என்ற பட்டத்தோடு மதுரையில் தனித்த ராஜதோரணையில்—ஆனால், சோழ மத்திய அரசுக்குக் கட்டுப்பட்ட முறையில்—ஆட்சி செய்ய ராஜேந்திரன்

ஏற்பாடு செய்தான். அரசக் குடும்பத்து இளவல்கள் மண்டலங்களை ஆள்கின்ற பொறுப்பினைப் பெற்றிருந்தார்கள். வல்லடிப் போர்களின் ஆதிக்கப் போக்கில் வெல்லப்பட்ட நாடுகளின் தனித் தன்மையை (individuality) அகற்றுகின்ற அளவில் சோழர்மயம் (cholaisation) என்ற ஏகாதிபத்தியக் கலாசாரப் படையெடுப்போடு (cultural offensive) சோழர்களின் நேரடி ஆட்சி வெல்லப்பட்ட நாடுகள் எங்கும் நிறுவப்பட்டன. இந்த வகையான ஏகாதிபத்திய வளர்ச்சிப் பூர்வமான ஆட்சிமுறை ராஜேந்திரனுடைய உள்நாட்டு ஆட்சி முறையின் சிறப்புத் தன்மை என விளங்கியது. கிருஷ்ணன் இராமன், பிரமராயன், சோழிவரையன், அருண்மொழியான், உத்தமச்சோழ பல்லவரையன் போன்ற அதிகாரிகள் இவனுடைய உள்நாட்டு நிர்வாகத்தைச் சிறக்கச் செய்தவர்கள் ஆவார்கள். பாண்டியன் சீவல்லபன், வல்லவரையன், வந்தியத் தேவன், உத்தமச் சோழ மிலாடுடையான், கங்கை கொண்ட சோழ மிலாடுடையான், சத்தியரிய சிகாமணி கொங்காள்வான் போன்ற குறுநில மன்னர்களின் ஒத்துழைப்பு ராஜேந்திரனுடைய உள்நாட்டு ஆட்சிக்கு உறுதுணையாக அமைந்திருந்தது. இத்தகைய அதிகாரிகளும் சோழ அரசியலுக்கு அடங்கிய குறுநில மன்னர்களும் சோழ அரசியலின் இயக்கு சக்திக்கு மூலாதாரமான முறையில் உழைத்த காரணத்தால் ராஜேந்திரன் வலிமை சான்ற மன்னனாகவும் தனக்குவமை இல்லாத அரசியல் விற்பன்னனாகவும் வெளிநாட்டுப் போர்களில் மட்டுமல்லாது உள்ளாட்சித் துறையிலும் பெரு வெற்றியாளனாகத் திகழ்ந்தான்.

பாண்டியராலும் பல்லவராலும் முன் காலத்தில் எளிதில் கைப்பற்றப்பட்டுப் போய் நின்ற தஞ்சையிலிருந்து கங்கை கொண்ட சோழபுரத்திற்குத் தனது தலைநகரை மாற்றியமைத்தான் இச் சோழன். சோழப் பேரரசுக்கு நடுநாயகமாக அமைந்த கங்காபுரி இவனுக்குப் பின் வந்த சோழர்களுக்குரிய தலைநகராக நிலைபெற்றுவிட்டது. இத்தகைய தலைநகர் மாற்றம் இவனுடைய செல்வத்தையும் பேரரசுத் தன்மையையும் மட்டுமல்லாது அரசியல் நிர்வாகத்திலும் இவன் சிறந்த சிந்தனையாளனாக விளங்கியதையும் காட்டும்.

### III பொருளாதாரக் கொள்கை

அயல்நாட்டு வாணிபத்தின் வளர்ச்சிக்காக 1025-ல் கடாரப் படையெடுப்பை ராஜேந்திரன் நிகழ்த்தினான். சீன நாட்டோடு பெரும் அளவிற்குச் சோழரின் வாணிபம் வளர்ச்சியுற்றிருந்த நிலையை அது காட்டுகிறது. 1033-ல் சீன நாட்டுக்கு இவன்

வணிகத் தூதுக்குழுவை அனுப்பி வெளிநாட்டு வாணிபத்திற்கு ஆக்கம் தந்தான். சோழ நாட்டில் வேளாண்மை சிறப்புக்காக இவன் கட்டிய புது தலைநகரான கங்கை கொண்ட சோழ புரத்தின் பக்கம் சோழ கங்கம் என்ற ஏரியை இவன் வெட்டினான். கழுவாயிலிருந்து சுந்தரப் பெருமாள் கோவில் அருகில் பிரியும் முடிகொண்டான் ஆறு என்ற கால்வாயையும் இவன் அமைத் தான். இவ்விரு நீர்ப்பாசன வசதிகள் சோழ நாட்டின் வேளாண் மைக்கு ஊக்கம் தந்தன. சோழ-பாண்டிய ஆட்சிப் பிரதிநிதி சுந்தர சோழ பாண்டியன் 5 வேலி அளவுள்ள பிரம்மதேய நிலத்தை திருவாலீஸ்வரம் கோவிலுக்கு உரியதாக, வெள்ளான் வகை நிலமாக மாற்றினான். இந்த வெள்ளான் வகை நிலங்கள் அவற்றின் வருவாயைப் பொறுத்து ராஜேந்திர சோழன் காலத்தில் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. முதல் வகையில் உள்ள நிலங்களில் கிடைத்த வரிவசூலில் வந்த வருடாந்திர வருவாயை நேரடியாகவே அரசாங்கம் பெற்றுக்கொண்டது. இரண்டாவது வகையில் அரசாங்கமே சில விலக்குகள் அளித்தது; அதாவது வரி பாக்கிகளையும், தவணை முறை வரி செலுத்தலையும் அனுமதித்திருந்தது. அவற்றை அதற்கென்று ஒதுக்கிவிடப்பட்ட கோவில்களிலோ பொது மன்றங்களிலோ செலுத்திக்கொள்ள லாம் என்றும் ராஜேந்திர சோழன் காலத்தில் வகை செய்யப் பட்டிருந்தது. இம் முறைகளில் எது விவசாயிக்கு உகந்த[illegible] இருந்தது என்பது பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

## IV இலக்கியம், கலை வளர்ச்சி

பண்டித சோழன் என்ற பட்டம் பெற்றிருந்த ராஜேந்திரனது ஆட்சியில் இலக்கிய வளர்ச்சி குறிப்பிடத்தக்க அளவில் நடந் தேறவில்லை. பிற்காலச் சோழ மாமன்னர்களில் ஒப்பரிய மேம் பாட்டுக்கு உரியவனாகிய ராஜேந்திரனுடைய ஆட்சியின் உன்னத தன்மைக்கு ஈடான அளவில் இலக்கிய வளர்ச்சி இல்லாமல் போனது வியப்புக்குரிய செய்தியாகும். அவன் அரசாண்ட 33 ஆண்டுகளில் 20 ஆண்டுகள் வெளிநாட்டுப்போர் போன்ற கவனச் சிதைவுக்குரிய நிகழ்ச்சிகள் காணப்பெறவில்லை. ஆகவே, இந்தக் காலப் பகுதியில் இவனால் நாட்டின் ஆக்கப்பணிகளின் மேல் கவனம் செலுத்த முடிந்தது என்றாலும், இவனுடைய ஆட்சியின் உயர்வுக்கு உறை போடக்கூடிய அளவில் இலக்கிய மேம்பாடு ஏற்படவில்லை. ராஜராஜனின் வேண்டுகோளின்படி கருவூர்த் தேவர் என்ற சைவஞானி தஞ்சைப் பெரிய கோவிலின் மூலவரை வந்தனம் செய்து, அம் மூலவரின்மேல் திருவிசைப்பா பாடியது போன்று கங்காபுரி சோழேச்சுவரத்தின் மூலவர்

பெயரிலும் இவர் பாடிய திருப்பதிகங்கள் ராஜேந்திரன் காலத்திய இலக்கிய வளர்ச்சிக்குச் சான்று பகர்கின்றன. கலையைப் பொறுத்த அளவில் சோழர்காலச் சிற்பக்கலையின் மேம்பாடு கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள சோழேச்சுவரத்தில் தன்னுடைய பெருவளர்ச்சி நிலையைக் காட்டி நின்றது. ராஜேந்திரன் அமைத்த மற்றைய கோவில்களெல்லாம் சோழர் காலத்திற்கென்றே ஏற் பட்ட ஏனைய கலைவளர்ச்சியைக் காட்டின. தஞ்சைப் பெரிய கோவிலில் அக் கோவில் கட்டப்பட்ட வரலாற்றைச் சொல்லு கின்ற ராஜ ராஜேச்சுவரம் நாடகத்தைத் தொடர்ந்து நடத்துவதற் காக ராஜேந்திரனால் நெல்மானியம் அளிக்கப்பட்டதை முன்பு பார்த்தோம். இதனால் நாடகக் கலைக்குரிய கூத்தும் பாட்டும் போற்றப்பட்டன என்பது தெரிய வரும்.

## V சமயக் கொள்கை

தன் தந்தை ராஜராஜனைப் போலவே ராஜேந்திரனும் சமயச் சார்பான பணிகளை மன ஈடுபாடு கொண்டு நிறைவேற்றினான். மதாசாரியாரை மதித்தல், கோவில் கட்டுதல் போன்ற சோழர் பரம்பரைக்கான நல்லியல்புகளோடு இவன் தன்னுடைய இராணுவ வெற்றி வாழ்வினூடே நடந்துகொண்டது சோழர் வரலாற்றில் சிறப்புக்குரிய செய்தியாகும்.

**1. சைவாசாரியார் தொடர்பு:** எல்லாச் சோழ மன்னர் களுக்கும் உரியதான சைவநெறியையே ராஜேந்திரனும் மேற் கொண்டான்; (1022-ல் கங்கை கொண்ட வெற்றியினடியாகக் கங்கைக் கரையிலிருந்து சைவாசாரியார்களைத் தமிழகத்திற்குக் கொணர்ந்தான்.) சைவத் திருமறையின் அறிவுப்பூர்வமான தமிழ றிந்த விளக்கவுரைகளுக்குரிய சிந்தனை சக்தி இவர்களிடமிருந்து தான் வெளிப்பட்டது எனக் கருதுவோரும் உண்டு. இவ் வகை சிவாசாரியார்களில் உடையார் சர்வ சிவ பண்டிதர் என்பவர் தஞ்சைப் பெரிய கோவிலில் தம்முடைய சீடர்களோடு வழிபாடு செய்து வந்தார். ராஜராஜனுக்கு ஈசான சிவபண்டிதர் என்பவர் சமயச்சார்பான ராஜ குருவாக விளங்கியது போல, ராஜேந்திர னுக்குச் சர்வ சிவ பண்டிதர் ராஜகுருவாக அமர்ந்திருந்தார். இவருக்கும் இவருடைய சீடர்களுக்கும் ஆரிய தேசம், மத்திய தேசம், கௌட தேசமாகிய வங்கம் போன்ற எந்த இடத்தில் இருந்தாலும் ஆண்டுதோறும் நெல்மானியம் வழங்குவதற்கு ராஜேந்திரன் ஏற்பாடு செய்தான். இத்தகைய வட இந்திய தொடர்புடைய சைவத்தைத் தமிழகத்தில் தழைக்கச் செய்தவன் ராஜேந்திரன்தான். இத் தொடர்பு அவனுக்குப் பின் வந்த சோழ மன்னர்களின் காலத்தில் பெருமளவிற்கு விரிந்தது.

**2. பெண் தெய்வ வழிபாடு:** ராஜராஜன் வேதமுறையிலான அந்தணர் வழி சமயத்தை (Canonical Religion) வலியுறுத்தி அம்மன் இல்லாத பெரிய கோவிலைத் தஞ்சையில் கட்டிய பின்பு ஆதித்தமிழ்க் கலாசார உணர்வின்படி பெண் தெய்வ வழி பாட்டுக்கு ராஜேந்திரன் ஆக்கம் செய்தான் என்பது ஆராய்ச்சிக் குறிப்பு ஆகும். அம்மனுக்குத் தஞ்சைப் பெரிய கோவிலில் இவன் காலத்திலிருந்து தனிக்கோவில் ஏற்பட்டது. இவன் கட்டிய புதிய தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தில் இவன் கட்டிய சோழேச்சுவரம் என்ற கோவிலில் துர்க்கை அம்மன் சிலையை இவன் எடுப்பித்த செய்தி இக் கருத்தை வலியுறுத்தும். தஞ்சைப் பகுதி கண்டியூரின் மங்களாம்பிகை கோவிலிலுள்ள கல் வெட்டின்படி அங்கு ஓர் அம்மன் கோவில் ராஜேந்திரன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டது. எண்ணுயிரம் என்ற ராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் காணப்பட்ட கோவில்களில் அம்மனுக்குரிய உருவச்சிலை ஒன்றும் காணப்பட்டது. இவ்வாறு அம்மனுக்குத் தனிக்கோவில்களும் ஏற்பட்டன. மூலவர் யாராக இருந்தாலும் அம்மனுக்கும் அதனுள்ளேயே திருக்காமக் கோட்டம் என்றளவில் தனிக் கோவில் கட்டும் முறை ராஜேந்திரன் கங்காபுரியின் சோழேச்சுவரத்தில் அம்மன் கோவில் எடுப்பித்ததிலிருந்துதான் வளர்ந்தது என்பது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும்.

**3. கோவில்கள் கட்டுதல்:** கங்கைப் படையெழுச்சி முடிந்த பின்பு வட நாட்டிலிருந்து கொண்டு வந்த கங்க விநாயகர் படிமத்தைக் கும்பகோணம் நாகேசுவரர் கோவிலில் ராஜேந்திரன் பிரதிஷ்டை செய்தான். திருவொற்றியூர் கோவிலின் உட் கோவிலையும் இச் சோழனே அமைத்தான். கங்கை கொண்ட சோழபுரத்தில் இவன் கட்டிய சோழேச்சுவரம் தஞ்சைப் பெரிய கோவில் போன்ற மாடக்கோவிலுக்குரிய எடுப்பும் பெருமையும் கொண்டது. 4 அடி கனம், 600 அடி நீளம், 450 அடி அகலம் கொண்ட மதில் சுவரோடு அமைந்த இக் கோவிலின் 80 அடி உயரமுள்ள கருங்கல் கோபுரமும், மற்றைய கோவிற்பகுதிகளும் சோழர்கால கட்டடச் சிறப்பும் சமய வாழ்வு நலமும் பண்டையப் பொறியியல் பொலிவும் பெற்று விளங்கின. இக் கோவில் 1025-ஆம் ஆண்டு தொடக்கத்தில் கட்டப்பட்டது என்ற செய்தி உண்டு. கங்கைப் படையெழுச்சி 1022-ல் முடிவடைந்தது. ஆகவே, இக் கோவில் கட்டப்படுவதற்கு முன்பே உருவாகி வந்த புதிய தலைநகரைக் கங்கை நீர் கொண்டு புனிதப்படுத்திய பின்பு இக் கோவில் கட்டப்பட்டது என்று சொல்லலாம்.

**4. அறப்பணிகள் :** கங்கைக் கரைவரை சென்று திரும்பிய தனது வெற்றிப் படையைக் கோதாவிரி நதிக்கரையில் எதிர்க் கொண்டழைத்து, தமிழகம் திரும்புகின்ற வழியில் இடைப்பட்ட எல்லாக் கோவில்களுக்கும் நிவந்தங்களும் ஆபரணங்களும் ராஜேந்திரன் வழங்கினுன். அக் காலத்தில் குவலாளயபுரம் என அழைக்கப்பட்ட கர்ஞடக மாநிலத்திலுள்ள தற்காலத்திய கோலாரில் உள்ள துர்க்கை அம்மன் கோவில் கல்வெட்டு கூறுவது போல இவன் அந்தப் பகுதியில் பல கோவில்களை அமைத்தும், அவற்றுக்குத் தேவதானங்கள் அளித்தும் அறப் பணிகள் பல செய்தான். கடார மன்னனுக்கு ராஜராஜன் காட்டிய நட்புரிமையின்படி ஏற்கெனவே வழங்கப்பட்ட நாகப் பட்டின புத்த கோவிலுக்கான ஆனைமங்கல முற்றூட்டு ராஜேந் திரனுல் சாசனப்படுத்தப்பட்டு நிரந்தரப்படுத்தப்பட்டது. இந்து சமயத்தின் கலாசாரப் பிடிப்புக்குத் துணை செய்த கங்கை ஆற்றைச் சோழர் படை சென்று தொட்டது என்பது ராஜேந்திர னுடைய சமயப் பற்றுக்கும் இவனுடைய பேராற்றலில் பிணைந்த பேரரசு இந்து மதத்தின் வழியில் செயல்பட்ட சிறப்புக்கும் சான்ருக அமைந்தது எனக் கொள்ளலாம்.

26 கல்வெட்டுகளைத் தன் பெயரிலேயே தஞ்சைக் கோவிலில் செதுக்கி வைத்த ராஜேந்திரன் தனது தந்தையைக் கௌரவிக்கும் முறையில் அக் கோவிலில் ராஜராஜன் காலந்தொட்டு நிகழ்ந்து வந்த ராஜராஜேசுவர நாடகம் நடத்துவதற்காக நெல்மானி யத்தை ஏற்பாடு செய்தான். (1020-ல் தன்னுடைய பாட்டியும், கண்டராதித்தியச் சோழனுடைய மனைவியுமாகிய அறம் வளர்த்த செம்பியன் மாதேவியின் சிலையை நாகப்பட்டினத்திற்கு அருகாமையில் அவள் பெயரில் ராஜராஜன் காலத்தில் ஏற்பட் டிருந்த சதுர்வேதி மங்கலத்தில் நிறுவி, அக் கோவிலுக்கான வழி பாட்டு நிவந்தங்களையும் இவன் அளித்தான்.)

1038-ல் சேர மன்னன் ராஜசிம்மன் நெல்லை மாவட்டம் மன்ஞர்கோவில் ராஜேந்திரசுவரம் என்ற கோவிலைக் கட்டிய போது, அப்போது காஞ்சியிலிருந்த ராஜேந்திரன் அக் கோவிலுக்குப் பல நிவந்தங்கள் அளித்தான்.

## VI குடும்பம்

ராஜேந்திரனுக்கு வாய்த்த ஐந்து மனைவியரில் பட்டத்தரசி யாக விளங்கியவள் யார் என்று தெரிவதற்கில்லை. ராஜாதிராஜன், வீர ராஜேந்திரன் என்பவர்கள் இவனுடைய மைந்தர்கள் ஆவார்கள். இவனுக்குப் பின்பு இவர்கள் ஒருவர் பின் ஒருவராகச்

சோழ அரசராகப் பதவி ஏற்ருர்கள். ராஜேந்திரன் என்ற மூத்த மகனைவிட ராஜாதிராஜன் என்ற இளையவன் பேராற்றல் பெற்று விளங்கியதால், ராஜேந்திரன் I தான் அரசபதவி ஏற்ற நான்கு ஆண்டுகளில்—அதாவது 1018-ல்—ராஜாதிராஜனுக்கு 'யுவராஜா' முடி சூட்டி வைத்தான். மதுரையை ஆண்ட சுந்தர சோழப் பாண்டியன் என்பவன் இவனுடைய மற்ருெரு மகன் ஆவான். அருள்மொழி நங்கை, அம்மங்கை தேவி என்ற இவனுடைய இரு புதல்வியரில் அம்மங்கை தேவி கீழைச் சாளுக்கிய மன்னன் ராஜராஜ நரேந்திரனை மணஞ்செய்தாள். இவளுக்குப் பிறந்த குலோத்துங்கன் I 1070-ல் சோழ மன்னனுனன். 30 ஆண்டுகள் ஆட்சி செய்த பின்பு 1044-ல் ராஜேந்திரன் தொண்டை மண்டலத்தில் பிரம்மதேசம் என்ற ஊரில் இறந்த பொழுது இவனுடைய மனைவி வீரமாதேவி உடன்கட்டை ஏறினுள். இவனுக்கு அமைந்திருந்த பட்டங்கள் பின் வருமாறு: பண்டித சோழன், விக்கிரம சோழன், கங்கை கொண்ட சோழன், சோழேந்திர சிம்மன், முடிகொண்ட சோழன், கடாரம் கொண்டான் என்பனவாகும். சோழ வரலாற்றில் பெருமளவிற்கு நாட்டுப் பரப்பும் சிறந்த ஆட்சித்திறனும் காணப்பட்ட ராஜேந்திரனுடைய காலத்தில்தான் சோழப் பேரரசு தன்னுடைய உச்ச நிலையை அடைந்தது. ஆகவே, எல்லாச் சோழப் பேரரசருக்குள்ளும் பேரரசன் என்ற பெருமையோடு பெருவீரன் என்ற மாண்பும் அறிவுத் திறன் படைத்த ஆட்சியாளன் என்ற திறனும் பெற்ற ஒப்பரிய மாமன்னன் இவன் என்பதோடு அல்லாமல் அந் நாளையில் உலகெங்கும் மதிக்கப்படுகின்ற அளவில் இந்தியாவில் ஓர் இந்து சாம்ராஜ்யத்தைக் கட்டிக் காத்தவன் ராஜேந்திரனே என்பது வரலாற்று உண்மையாகும். தமிழ் நாகரிகத்தின் அந் நாளைய அரசியல் எழுச்சியின் உயர்தனி வளர்ச்சியில் ராஜேந்திரனுடைய பேரரசும் அதன் சாதனைகளும் அவனுடைய தனிநபர்ச் சிறப்பாக வளர்நலங்கொண்டு விளங்கின. அளப்பரியச் சாதனைகளைப் பல்வேறு துறைகளில் ஆற்றிய தந்தைக்கு உரிய தவப்புதல்வனுக ராஜேந்திரன் தன்னை மேம்படுத்திக்கொள்வதற்குத் தனியார்வத் தனித்திறனை வெளிக் காட்டினுன். அவனுடைய சிந்தனையும், செயலும் தமிழகத்தின் வரலாருக முடிவெடுத்தன. கீழை நாடுகளுக்குப் படை நடத்திய 'அலெக்சாண்டராகவும்', கங்காபுரியைக் கட்டிய 'பீட்டராகவும்', பேரரசுப் போர்களை ஆற்றிய 'நெப்போலியனுகவும்', சைவத்தைப் போற்றிய 'அசோகனுகவும்' அவன் தன் வாழ்வில் நடந்துகொண்ட தனித்திறன் அவனைத் தென்னிந்திய மன்னருள் ஒரு மாமன்னனுக இடங் காட்டுகிறது.

# 10. ராஜாதிராஜன் I
## (1044 – 1054)

ராஜாதிராஜன் I போரார்வ அரசன் (Warrior King) என்ற வகையினைச் சார்ந்தவன். இவனுடைய தந்தை ராஜேந்திரனைப் போலவே இவனும் அரச இளவலாக இருக்கும்போதும், இளவரசனாகப் பதவி ஏற்ற பின்பும் போர்க்களத்தில் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவிட்டான். ராஜராஜனும், ராஜேந்திரனும் உருவாக்கி வைத்த இராணுவப் பேரரசை எப்போதும் படை நடத்திக்கொண்டு இருப்பதன்மூலந்தான் சிறக்கச் செய்ய முடியும் என்ற நிலை அந் நாளையில் இருந்தது. இத்தகைய முறையில் இராணுவ மயமாகிவிட்ட சோழ அரசுக்கு ஏற்ற தானைத் தலைவனாக ராஜாதிராஜன் அமர்ந்திருந்தான். இவன் ஆண்ட பத்து ஆண்டுகளிலும் இவன் கண்ட போர்க்களங்கள் பல; பெரும்பான்மையானவை வடக்கே சாளுக்கியரை எதிர்த்து நிகழ்ந்தவையாகும். சோழப் பேரரசு இராணுவப் பாணியை மேற்கொண்ட பின்பு அப் பேரரசு அரசியலில் ஏற்பட்ட அடிப் படை ஊனத்தை இவனுடைய இறப்பு எடுத்துக் காட்டிற்று. ஏனென்றால், 1054-ல் நடந்த கொப்பத்துப் போரில் சாளுக்கியரை எதிர்த்த நிலையில் சாளுக்கியரால் அப் போரிலேயே கொல்லப் பட்டான்.

போர்ப் பாசறையிலேயே சோழப் பேரரசன் தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டிய அவசியத்தையும், அதன் பின்பு அங்கேயே அவன் மாண்டுவிடுகின்ற நிகழ்ச்சியும் இயல்பான வையே என்று ஏற்றுக்கொள்ளுகின்ற மனப்போக்கு அக் காலத்தில் சோழ மக்களிடையே நிலவியது, அக் காலத்திய சோழப் பேரரசுக்கு ஏற்பட்ட ஊனம் எனலாம். இராணுவப் போக்கு கொண்ட ஏகாதிபத்திய வளர்ச்சிக்குப் பெருவாரியான மதிப்பு சோழ அரசியலாளர்களிடையே காணப்பட்டது. சாளுக்கிய நாட்டில் நடந்த போர்க்களத்திலே ராஜாதிராஜன் இறந்தவுடன் அவன் தம்பி ராஜேந்திரன் அக் களத்திலேயே தன்னை முடி சூட்டிக்கொள்கின்ற நிகழ்ச்சியும் இக் காலத்திலேயே நடந் தேறியது. இவ்வாறு சோழப் பேரரசுக்குப் போர் செய்யும் முறை பிரதானமான அரசியல் போக்காக விளங்கியது. இத்தகைய

அரசியல் வளர்ச்சிக்கு இணையான தன் ஊக்கத்துடன்கூடிய போரார்வப் பேரரசனாக ராஜாதிராஜன் விளங்கினான். இவனோடு இணைசேர்ந்து போர்க்கள வாழ்வைத் தானும் அனுபவித்த வீரராஜேந்திரன் இவனுக்குப் பின்வந்த ராஜேந்திரன் II என்ற மற்றொரு தமையனுடைய ஆட்சிக்குப் பின்பு மன்னனானபோது தன்னை ஒரு நன்கு வளர்ச்சியுற்ற இராணுவ ராஜதந்திரி (Military Diplomate) என வெளிக் காட்டிக்கொள்கிறான். அதாவது தனக்கு முன்பு ஆண்ட இரு தமையன்மார்களின் வல்லடிப் போர்க்கான போரார்வ கண்ணோட்டம் (militarist outlook) நீடித்த பயனைத் தராது என்று அவன் உணரத் தலைப்பட்டான்; சாளுக்கியரோடு மணவினை உறவு கொள்ளத் துணிந்தான். இவ்வாறு ராஜராஜன் காலத்தில் தளிர்விடத் தொடங்கிய இராணுவப் பேரரசு தத்துவமானது அவனுக்குப் பின்வந்த அரசர்களுடைய காலத்தில் உயர்மரமாக வளர்ச்சியுற்றது. பின்பு அது போர்க்களத்தில் நிகழ்ந்த ராஜாதிராஜனின் இறப்பு என்ற பேரிடியைத் தாங்கி ராஜேந்திரன் II காலத்தில் ஒரு வகையாகத் தன்னைச் சமாளித்துக்கொண்டு வீரராஜேந்திரன் காலத்தில் முறிந்து வீழத் தலைப்படுகிறது. அவ்வாறு நிகழவிடாமல் தன்னுடைய ராஜதந்திர நுண்ணறிவு திறம்கொண்டு அதனைப் பதனப்படுத்தினான் வீரராஜேந்திரன். இந்தப் பெருமை அவனைச் சாரும். 985-1070 வரை காணப் பெறுகின்ற 85 ஆண்டுக் கால இராணுவப் பேரரசிற்கான பெருவளர்ச்சியின் மத்திய பகுதியில் ராஜாதிராஜனுடைய படைவாழ்வுத் திறமும், அவன் களத்திலே கண்ட வீரமரணமும் சோழ அரசியலுக்கு மாற்றம் கொண்டு வருகின்ற நிகழ்ச்சிகளாக அமைந்திருந்தன.

உள்நாட்டு நிர்வாகத்தில் பெருமளவிற்குப் பற்றுகொண்டு ராஜாதிராஜன் விளங்குவதற்கு உரிய முறையில் உள்நாட்டு ஆட்சி முறையில் பிரச்சினைகள் தோன்றவில்லை. ராஜராஜனும் ராஜேந்திரனும் ஏற்படுத்திய உள்ளாட்சித் துறை செவ்வனே நடந்து வந்தது. பஞ்சமும் குழப்பமும் இவன் காலத்தில் நிகழவில்லை. தஞ்சைப் பெரிய கோவிலைப் போன்ற கலைக் கட்டடத்தையோ, கங்காபுரியை போன்ற புதிய நகரையோ இவன் நிர்மாணிக்கின்ற மனப்போக்கு இவனுக்கு ஏற்படவில்லை. உரோமாபுரியின் சக்தி அனைத்தும் ஆப்பிரிக்கக் கடற்கரையோரமுள்ள கார்தேஜ் நகரத்தின் இராணுவ எதிர்ப்பை முறியடிப்பதில் செலவிடப்பட்டது போலச் சோழ ராஜ்யத்தின் ஆக்க சக்தியைச் சாளுக்கியரை எதிர்ப்பதில் ராஜாதிராஜன் செலவிட்டான். 'தம்பி உடையான் படைக்கு அஞ்சான்' என்றபடி தன் தம்பியரின் துணைகொண்டு சாளுக்கியப் போர்களில் இவன் ஈடுபட்டான்.

ராஜேந்திரன் I காலத்தில் ஈழத்தின் முழுமைக்கும் ஏற்பட்டுப் போன சோழர்களின் அரசியல் ஆதிக்கம் இவன் காலத்தில் ஆட்டங்காணத் தொடங்கியது. ஆனாலும் சோழப் பேரரசின் பெருமாட்சியை இராணுவ வினையாட்சியாகப் பார்க்கின்ற படை வீரவுணர்விற்குரிய ராஜாதிராஜன் ஈழத்தை அடக்குகின்ற பணியில் முதலில் ஈடுபட்டான்.

## I ராஜாதிராஜனின் ஈழப் போர்கள்

இவன் காலத்தில் ஈழத்தின்மீது மூன்று படையெழுச்சிகள் நிகழ்ந்தன. இவன் தந்தை காலத்தில் ஈழம் சோழருடைய ஆதிக்கப் பிடிப்பிலிருந்து விலகிச் செல்வதற்கான விடுதலை உணர்ச்சியை வளர்த்துக்கொண்டது. இதனை அரசியல் கிளர்ச்சியாக வலுப்படுத்திக்கொள்ளக்கூடிய அளவில் அடிப் படையான பல அரசியல் நிகழ்ச்சிகள் ராஜாதிராஜன் காலத்தில் நிகழ்ந்தன.

**1. ஈழத்தின் நிலை :** ஈழத்தின் வடபகுதியை ராஜராஜன் காலத்திலேயே 991-ல் கைப்பற்றிய சோழர்கள், ராஜேந்திரன் I காலத்தில் ரோகண நாட்டையும் வென்றடிப்படுத்தி, 1017-லிருந்து 1029 வரை ஈழம் முழுவதிலும் தங்கள் ஆட்சியை நிலைநாட்டினர். 1029-ல் ஈழமன்னன் மகிந்தன் V சோழர்களால் தோற்கடிக்கப்பட்டு, சோழ நாட்டில் சிறை வைக்கப்பட்டபோது, அவனுடைய மகன் காசிபனை ஈழத்தினர்கள் வெளிக் கொண்டு வந்தார்கள். இதுகாறும் காடுகளில் சோழருக்குத் தெரியாமல் தலைமறைவாக வளர்க்கப்பட்டு வந்த காசிபன் தலைமையில் கிளர்ந்தெழுந்த ஈழத்தினரின் எழுச்சியான தாக்குதலின் காரணமாகச் சோழர் தரப்பில் பெரும் ஆள்சேதம் ஏற்பட்டது. 1029-ல் ரோகண நாடு காசிபனால் விடுவிக்கப்பட்டது. இவன் விக்கிரமபாகு என்ற பட்டத்துடன் முடிசூட்டிக்கொண்டான். இவ்வாறு 1017-லிருந்து 1029வரை நிலவி நின்ற சோழரின் ஏகாதிபத்திய ஆதிக்கம் தனது ஏகபோகத்தை இழந்து, மீண்டும் வட இலங்கைக்கு உரியதாகக் குறுக்கங்கொண்டது. 1029-லிருந்து 1041 வரை ரோகண நாட்டை ஆண்ட காசிபன், சோழரோடு ஏற்பட்ட போரில் உயிரிழந்தான். மகாலான கித்தி 1041-லிருந்து 1044வரை ரோகணத்தை ஆண்டான். சோழரோடு போரிட்ட போது ஏற்பட்ட தோல்வியின் கொடுமை தாங்காது இவன் தற்கொலை செய்துகொண்ட பின்பு, இவனுடைய மகன் விக்கிரம பண்டு என்ற விக்கிரம பாண்டியன் 1044-லிலிருந்து 1047வரை ஆளத் தலைப்பட்டான். ராஜாதிராஜன் ஈழத்திற்கு அனுப்பிய சோழர் படை இவனோடு போரிடத் தலைப்பட்டது.

**2. ஈழப் போர் I—(1047) :** விக்கிரம பண்டு என ஈழத்து மகாவமிசத்தால் அழைக்கப்படுகின்ற விக்கிரம பாண்டியன் என்பவன் மகாலான கித்திக்கும் பாண்டியத் தாய்க்கும் பிறந்த மைந்தன் ஆவான். சோழரின் கல்வெட்டுகள் இவனைத் தென்னவன் என்றளவில் பாண்டிய மன்னன் என்றும், ராஜாதி ராஜனோடு போர் புரிந்து தனது பாண்டிய நாட்டை இழந்த பின்பு ஈழத்திற்கு வந்து, ஆங்கு மன்னனாக ஆவதற்கு முயற்சித்தவன் என்றும் கூறுகின்றன. 1044-லிலிருந்து 1047வரை ஈழத்தில் இவன் ஆட்சி செய்தான். இவனைச் சோழர் படை தோற்கடித்தது. வடநாட்டிலிருந்து வந்து இலங்கையின் குழப்பமான அரசியலில் ஈடுபட்டிருந்த அரசியல் வீரதீரர்களுக்குள் (political adventurers) அயோத்தி அரசன் ஜகதிபாலன் முக்கியமானவன். விக்கிரம பாண்டியனை இவன் தோற்கடித்துக் கொன்றான்.

**3. வட இந்திய இளவரசர்களும் ஈழமும் :** ஜகதிபாலன் என்பவன் அயோத்தி இளவரசன் என்று மகாவமிசம் கூறுகிறது. கன்யாகுப்ஜத்தின் இளவரசன் வீரசலாமேகன் என்பவனைப் பற்றிச் சோழரின் கல்வெட்டுகள் குறிக்கின்றன. ஜகதிபாலன் விக்கிரமப் பாண்டியனைப் போரில் கொன்ற பின்பு, 1047-லிருந்து 1051வரை ஈழத்தை அரசாண்டான். இவனும் வீரசலாமேகனும் ஒருவனே என்ற கருத்தும் உண்டு. சோழரின் குறிப்புகளின்படி, வீரசலாமேகன் சோழர் படையெடுப்பின் காரணமாக ஏற்பட்ட போரில் உயிரிழந்து போனான். இவ்விருவரையும் சோழர்கள் தோற்கடித்தார்கள் என்பது உறுதி. இருவரும் ஒருவரே என்ற கருத்துப்படி பார்த்தாலும் ஈழத்தினரின் தேசீய எழுச்சிக்கு உறுதுணையாக நின்ற இவர்களைச் சோழர்கள் கடைசியில் கொன்றார்கள் என்பது புலனாகும். வீரசலாமேகன் முதலில் தனது தாய், சகோதரி, மனைவி, செல்வம் அனைத்தையும் சோழரிடம் பறி கொடுத்தான்; பின்பு நடந்த போரில் உயிரையும் இழந்தான். இவ்வாறு சோழரின் ஆதிக்கப் போரில் ஈழத்தின் கிளர்ச்சிக்கு உதவ வந்தவர்கள் மாய்ந்து போனார்கள். வட இந்திய இளவரசர்கள் எவ்வாறு ஈழம் வந்துற்றார்கள் என்பது வரலாற்றுப் புதிர்தான். இத்தாலிய ஒருமைப்பாட்டு இயக்கத்தில் போரிட்ட இத்தாலியத் தளபதி கரிபால்டி தென் அமெரிக்க நாடுகளின் விடுதலைப் போரில் பங்கெடுத்துக்கொண்டது போல இவர்களும் ஈழத்தினரின் விடுதலைப் போரில் தங்களைப் பிணைத்துக் கொண்டார்கள். இவ்வாறு அரசியலிலும் இராணுவ நடவடிக்கைகளிலும் ஈடுபட்ட இவர்களை இராணுவ வீரதீரர்கள் (Military Adventurers) என்றும் நாம் அழைக்கலாம்.

**4. ஈழப் போர் II (1051)—ஜகதிபாலன் வீழ்ச்சி :** விக்கிரம பண்டுவைத் தோற்கடித்த பின்பு 1047-ல் ஈழநாட்டு மன்னனுன ஜகதிபாலனை 1051-ல் சோழர்கள் தோற்கடித்துக் கொன்றுர்கள்; இவனுடைய மனைவி, மகள், பெருநிதியம் எல்லாம் சோழர்கள் கைப்பற்றி, சோழ மன்னன் ராஜாதிராஜனுக்கு அனுப்பி வைத்தார்கள்.

**5. ஈழப் போர் III—1053 ஆண்டு அளவில் :** ஜகதிபாலனுக்குப் பின்பு ஸ்ரீ வல்லப மதனராஜன் என்ற கன்னட தேசத்தவன் ஈழ நாட்டினரின் தேசியப் போராட்டத்திற்குத் தலைமை தாங்கினுன். இவனும் விக்கிரம பாண்டியனின் மகன் பராக்கிரமன் என்பவனும் ஒருவரே என்று சில ஆராய்ச்சியாளர் கூறுவர். இந்த பராக்கிரமன் 1053-ல் இறந்தான் எனச் சோழரின் சாசனச் செய்தி கூறுகிறது. ஆகவே, இவனை 1053-ல் சோழப் படையினர் கொன்றதாகக் கொள்ளலாம். சோழப் படையினரின் இந்த ஈழப் படையெடுப்புதான் ஈழத்தைப் பொறுத்தளவில் நிகழ்ந்த ராஜாதிராஜனுடைய கடைசி இராணுவ நடவடிக்கை எனக் கொள்ளுவது பொருந்தும்.

**6. சாளுக்கியப் போர் I-கொள்ளிப்பாக்கைப் போர் (1044):** 1044 ஆண்டளவில் முதல் சாளுக்கியப் போர் ராஜாதிராஜனுடைய தந்தை ராஜேந்திரன் காலத்தில் ஏற்பட்டது. இதனை ராஜாதிராஜனே முன்னின்று நடத்தினுன். ஆகவே, இப் போர் அவனுடைய ஆட்சிக்குரியதாகக் கொள்ளப்படும். 1042-ல் மேலைச் சாளுக்கிய மன்னனுக அமைந்த சோமேசுவரனுடைய மகன் விக்கிரமாதித்தனையும் விஜயாதித்தியா VII என்ற கீழைச் சாளுக்கியனையும் ராஜாதிராஜன் தோற்கடித்து ஓடச் செய்தான். கொள்ளிப்பாக்கை என்ற இடத்தில் நடந்த இப் போர் ராஜாதிராஜனை அவனுடைய தந்தையைப் போன்ற ஆற்றல் மிக்க படைத்தளகர்த்தனுகவும், ஏகாதிபத்தியச் சிந்தனையாளனுகவும் இராணுவ ராஜதந்திரியாகவும் காட்டிற்று. இவன் பதவி ஏற்ற 1044ஆம் ஆண்டுக்குப் பின்பு மூன்று சாளுக்கியப் போர்கள் நிகழ்ந்தன. 1046-ல் கம்பிலிப் போரும், 1048-ல் பூண்டூர்ப் போரும், 1054-ல் கொப்பம் போரும் ஏற்பட்டன. கொப்பம் போரில் ராஜாதிராஜன் போரிட்ட நிலையிலேயே உயிரிழந்தான்.

**7. சாளுக்கியப் போர் II-கம்பிலிப் போர் (1044—1046) :** 1046ஆம் ஆண்டுக்குரிய ராஜாதிராஜனுடைய மணிமங்கலம் கல்வெட்டு (S.I.I. III 28) இப் போரைப் பற்றிய செய்திகளைத்

தருகிறது. 1044-ல் சோழ மன்னனாக ராஜாதிராஜன் பதவியேற்ற பின்பு அவனே முன்னின்று நடத்திய இச் சாளுக்கியப் போரில் சோழருக்குப் பெரு வெற்றி கிடைத்தது. ஆகவமல்லனின் தளகர்த்தர்களான மதுசூதனன், கண்டர் தினகரன் நாரணன். கணபதி போன்றோர் உயிருக்கு அஞ்சிப் போர்க்களம் விட்டுத் தோற்றோடினர். வெற்றி பெற்ற சோழர் படை பெல்லாரி மாவட்டம் ஹாஸ்பெட் தாலுகாவிலுள்ள கம்பிலி நகரம் சென்று அங்கிருந்த சாளுக்கியரது பேரரசன் வாழ்ந்த அரண்மனையை இடித்துத் தரை மட்டமாக்கியது. சோழர்கள் தங்களுடைய புலி உருவம் பொறித்த வெற்றித்தூணைக் கம்பிலியில் நிறுவினார்கள். இதனைக் 'கம்பிலிச் சயத்தம்பம் நட்டதும்' எனப் பின்னாளில் எழுதப்பட்ட கலிங்கத்துப் பரணி புகழ்ந்துரைக்கிறது.

**8. வேங்கி நாட்டில் ஓர் அரசியல் மாற்றம் (1044):** கீழைச் சாளுக்கிய வேங்கி நாடும் சோழ நாடும் ராஜராஜன் ஆட்சிக் காலத்திலிருந்து நெருங்கிய தொடர்புகளை மணவினை மூலம் கொண்ட அரசுகளாக விளங்கின. 1019-ல் விமலாதித்தியன் இறந்த பின்பு அவனுடைய மகன் ராஜராஜ நரேந்திரன்தான் வேங்கிநாட்டில் பதவிக்கு வர வேண்டியவன். இவனுக்கு எதிராக மேலைச் சாளுக்கிய மன்னன் ஜெய சிம்மன், விஜயாதித்தியன் VII என்ற பங்காளியைத் தூண்டிவிட்டு அரசுரிமைப் போரைத் தொடங்கச் செய்தான். இந்த விஜயாதித்தியனும் சோழர் குலப் பெண் வயிற்றில் பிறந்த வேங்கி நாட்டு இளவரசன்தான். இருந்தாலும், மேலைச் சாளுக்கியரின் ராஜதந்திரம் இரு சோழப் பெண்மணிகள் வயிற்றில் ஒரு தகப்பனுக்குப் பிறந்த இரு சகோதரர்களைப் பங்காளிகளாக மாற்றி, போரிடச் செய்கின்ற சூழச்சியில் வெற்றி பெற்றது. இத்தகைய மேலைச்சாளுக்கிய எதிர்ப்புகளை ராஜேந்திர சோழன் I முறியடித்து, 1022-ல் ராஜராஜ நரேந்திரனை வேங்கிநாட்டு மன்னனாக முடிசூட்டி வைத்தான்; அவனுக்குத் தன் மகள் அம்மங்க தேவியையும் மணம் செய்து கொடுத்திருந்தான்.

1022-ல் ராஜேந்திரனால் அரச பதவியில் இருத்தப்பட்டு, முடிசூட்டி வைக்கப்பட்ட ராஜராஜ நரேந்திரனை 1031-ல் அவனுடைய பங்காளி விஜயாதித்தியன் அரச பதவியிலிருந்து நீக்கி விட்டான். 1035-ல் விஜயாதித்தியனிடமிருந்து வேங்கி நாட்டின் ஆட்சி உரிமையை ராஜராஜ நரேந்திரன் மீட்டான். 1044-ல் ராஜேந்திரன் இறந்த பின்பு ராஜாதிராஜன் வேங்கி நாட்டு

விவகாரங்களில் அவ்வளவாக கவனங்கொள்ளவில்லை. இதன் விளைவாக ராஜராஜ நரேந்திரன் மேலைச்சாளுக்கிய மன்னன் ஆகவமல்லனோடு ராஜீய உறவுகளை மேற்கொண்டான். இத்தகைய ராஜதந்திரத்தின் காரணமாக ஆகவமல்லனின் அமைச்சர் நாராயணப்பட்டர் என்ற இலக்கிய ஆசிரியர் 1047 அளவில் வேங்கி நாட்டின் அரசவையில் பெருஞ்செல்வாக் கோடு காணப்பட்டார். ஆகவமல்லனின் 1053ஆம் ஆண்டுக் குரிய மால்கண்ட் கல்வெட்டு கூறுவது போல, அவனுடைய மகனை சோமேசுவர தேவன் பெல்வோலா முந்நூறு, புலிகிரே முந்நூறு என்ற இடங்களை வேங்கிபுர வாரேஸ்வரா என்ற பட்டத் தோடு ஆண்டு வந்தான். 1046-ல் நிகழ்ந்த கம்பிலிப் போர் இத்தகைய வேங்கி, கல்யாணி உறவுகள் எந்த அளவிற்குச் சோழரின் நலன்களுக்கு எதிராகப் பாதித்து நின்றன என்பது தெளிவுறவில்லை. இவ்வாறு சோழரின் ஜென்மப் பகைவரான மேலைச்சாளுக்கியரோடு ராஜதந்திர உறவுகளை 1044ஆம் ஆண்டு முதல் மேற்கொண்ட ராஜராஜ நரேந்திரன் 1061-ல் தானுக இறக்கும் வரை வேங்கி நாட்டின் மன்னனுகத் தொடர்ந்து ஆள்வதில் வெற்றி பெற்ருன்.

1054-ல் நிகழ்ந்த கொப்பம் போர்க்களத்தில் ராஜாதிராஜன் இறந்த பின்பு ஏற்பட்ட அரசியல் விளைவுகளைச் சமாளிக்கின்ற திறன் ராஜேந்திரன் II சோழனுக்கு இருந்தது. ஆகவே, வேங்கி நாட்டின் அரசியலைப் பொறுத்து ஏற்படுகின்ற சோழர்—மேலைச் சாளுக்கியர் மோதுதல் தன் தடம் மாறி, பேரரசுப் போட்டிக்கான இராணுவ மோதுதலாக உருக் கொண்டது. இது நிகழ்வதற்கு வேங்கி நாட்டரசியலின் காரணமாக பலப் பரீட்சைப் போர்கள் நேரடியாக நிகழத் தொடங்கின.

**9. சாளுக்கியப் போர் III—பூண்டூர்ப் போர் (1048):** கம்பிலிப் போரான இரண்டாம் சாளுக்கியப் போர் 1046 ஆண்டளவில் முடிவடைந்த இரண்டாண்டுகளுக்கு—1048-க்குள்—மூன்ருவது சாளுக்கியப் போர் நிகழ்ந்ததாக மணிமங்கலக் கல்வெட்டு சொல்லுகிறது. வேங்கி நாட்டை ராஜதந்திரத்தால் வளைத்தும், சோழர் முன்பு வென்ற நாடுகளைத் திரும்பவும் கவர்ந்தும், தன்னு டைய பேராற்றலைக் காட்டி நின்ற ஆகவமல்லன் சோழருக்கான முழுமுதல் எதிரியாக வளர்ந்து உயர்ந்தான். இதனை உணர்ந்த ராஜாதிராஜன் ஆகவமல்லனை நேரில் சென்று அவனுடைய நாட்டிலேயே தாக்குவதற்கு முடிவெடுத்தான். இவ்வாறு ஏற்பட்ட மூன்ருவது சாளுக்கியப் போர் பூண்டூரில் நிகழ்ந்தது.

சோழருக்கு வெற்றி கிடைத்தது. கிருஷ்ணு நதியின் தென் கரையில் அமைந்த சாளுக்கியப் படையினரின் பாசறை நகரமான பூண்டுரில் நடந்த கடுமையான போரில் தெலுங்க விச்சயன், அத்திராசன், அக்கப்பையன், கொண்டைய ராஜன், முஞ்சன், தண்ட நாயகன், தனஞ்சயன், வீரமாணிக்கன் போன்ற சாளுக்கியப் படைத்தலைவர்கள் சோழனுல் தோற்கடிக்கப்பட்டார்கள்.

சாளுக்கியரின் பூண்டூர் நகரின் கோட்டைக் கொத்தளங்கள் தகர்த்தெறியப்பட்டன. அழிவுக்கு உள்ளான அந் நகரின் நிலப் பரப்பு கலப்பை கொண்டு உழப்பட்டது ; அங்கே வரட்டிகை என்ற காட்டுச்செடி விதைக்கப்பட்டது. இப் போரின்மூலம் சாளுக்கியருக்கு ஏராளமான அழிவையும், இழிவையும் ராஜாதிராஜன் ஏற்படுத்தி வந்தான். போர்க்களத்தில் காட்டப்படுவது இயல்பான வீரம்; நாடு நகரங்களை அழிப்பது என்பதும் போர்ச் செய்கையே. சோழர்கள் கைக்கொண்ட நாச வேலைகளால் பாதிக்கப்பட்டவற்றுள் சாளுக்கியரின் அரண்மனைகள் போன்ற அரசியற் சார்பானவை அதிகம் காணப்பட்டன. பெண்டிரும் செல்வமும் சோழரால் கைக்கொள்ளப்பட்ட இவ் வகைப் போர்களின் அழிவும் கொடுமையும் தீராத பகைமைக்கு அடிப்படைகளாயின. சோழப் படையினரின் ஆவேசமான தாக்குதல்கள் நாடெங்கும் நிகழ்ந்த போது, ஆகவமல்லன் ராஜாதிராஜனேடு அரசியல் பேச்சுக்குப் பூர்வாங்க நடவடிக்கையாகத் தன்னுடைய தூதர்களைச் சோழனிடம் அனுப்பி வைத்தான். சோழனிடம் அத் தூதர்கள் ராஜீய சம்பிரதாயங்களின்படி மதிப்புப் பெறவில்லை. மாருக, அவர்கள் இழிவுபடுத்தப்பட்டார்கள். ‘ஆகவமல்லன் போரில் தோற்ருேடினுன்’ என அவர்கள்மேல் எழுதப்பட்டது. அவ் வறிக்கைகளைச் சுமந்தபடி அவர்கள் உயிர் பிழைத்து ஓடினுர்கள் எனலாம்.

சோழரின் படையானைகளை (சாளுக்கிய மன்னர்கள் தாங்கள் நீராடுவதற்காகத் துங்கபத்திரை, கிருஷ்ணை, பீமா நதிகளில் அமைத்திருந்த) சிறுதுறை, பெருந்துறை, தெய்வ பீமகாசி போன்ற நீராடு துறைகளில் சோழர்கள் குளிப்பாட்டினுர்கள். ராஜாதிராஜன் இதனை ஒரு வகைப் போர்ச் செய்கையாகவே (act of war) நிகழ்த்திக் காட்டினுன். சாளுக்கியரின் வராகக் கொடி (பன்றிச் சின்னம்) பொறிக்கப்பட்டிருந்த மலைகளில் சோழரின் புலிச் சின்னம் செதுக்கப்பட்டது. வெற்றித்தூண் ஒன்றும் நாட்டப்பட்டது. இதன் பின்பு நுளம்பன், காளிதாசன், சாமுண்டன், கோமையன், வில்லவ ராஜன் என்றழைக்கப்பட்ட படைத்

தலைவர்களை ராஜாதிராஜன் தோற்கடித்தான்; வட இந்தியக் கூர்ஜர நாட்டு அரசனும் மற்றவர்களோடு தோல்வியுற்றான். அவன் தலை துண்டிக்கப்பட்டது. அடைக்கலம் கேட்ட தோற்ற தலைவர்களுக்கு அவர்களுடைய கொற்றக்குடை போன்ற விருதுகளோடு அவர்தம் அந்தஸ்தையும் ராஜாதிராஜன் அறவுணர்வோடு திருப்பிக் கொடுத்தான்.

தோல்வியோடு, தன் நாட்டுக்கு ஏற்பட்ட அழிவையுங் கண்டு உள்ளஞ்சோர்ந்த ஆகவமல்லன் இறுதியாகத் தனது பெற்கடை (அமைச்சன்) ஒருவனைத் தூதனைச் சமாதான பேச்சு வார்த்தைக்காக ராஜாதிராஜனிடம் அனுப்பினான். எவ் வகையிலேனும் சாளுக்கிய ஆகவமல்லனைப் பணிய வைத்துத் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டிச் செல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் சாளுக்கிய நாட்டுக்குப் படையோடு வந்திருந்த சோழன் ராஜாதிராஜன் தன்னுடைய போர்க்குணம் மாறாமல் காணப்பட்டான். பெற்கடையோடு வந்த ஏனைய இருவரில் ஒருவனுக்கு ஐங்குடுமி வைத்து ஆகவமல்லன் எனப் பெயரிட்டும், மற்றவனுக்குப் பெண் ஆடை அணியச் செய்து ஆகவமல்லி எனவும் வேஷமிட்டும் கேலிக்கூத்துக்கு உள்ளாக்கி, அவர்களை ஓடவிட்டு அனுப்பி வைத்தான் (172 of 1894). இதுபற்றி ராஜாதிராஜனுடைய திருக்கழுக்குன்றம் கல்வெட்டு கூறுகிறது. இவ்வாறு அடுத்தடுத்து அழிவையும் இழிவையும் ஆகவமல்லனுக்கு உண்டாக்கிய சோழ மன்னன் கல்யாணி என்ற சாளுக்கியத் தலைநகரையும் படை நடத்திச் சென்று பிடித்துக்கொண்டான். 1042-ல் இவ்வாறு ஏற்படுகின்ற அந்நியரின் படையெழுச்சியிலிருந்து பாதுகாப்பான இடமென்று கருதிய கல்யாணிக்கு மால்கெட்டிலிருந்து ஆகவமல்லன்தான் தலைநகரை மாற்றி அமைத்திருந்தான். அவன் கல்யாணியில் ஏற்படுத்தியிருந்த கோட்டைகள், கட்டடக் கலைச் சிறப்புடன் எழுப்பப்பட்டிருந்த மாட மாளிகைகள் போன்றவற்றைச் சோழர் படை இடித்து அந்நகரைத் தீக்கிரையாக்கியது.

தன்னுடைய வெற்றியைக் குறிக்கின்ற முறையில் சோழ மன்னன் வீராபிஷேகம் எனும் வேள்வியைக் கல்யாணி நகரத்தில் செய்துகொண்டு விஜய ராஜேந்திரன் என்னும் பட்டத்தையும் சூட்டிக்கொண்டான்; கல்யாணபுரத்தை எரித்த பின்னர் அங்குள்ள கோவிலிலிருந்து சாளுக்கியச் சிற்பக் கலையின் மெருகுடன் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்த 'துவார பாலகர்' என்னும் சிலையை எடுத்து வந்து கும்பகோணத்திற்கு அருகிலுள்ள தாராசுரம் கோவிலில் வைத்தான். இச் செய்தி

அச் சிலையின் பீடத்தில் காணப்படுகின்ற 'ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ விஜய ராஜேந்திர தேவர் கல்யாணபுரம் எறிந்து கொண்டு வந்த துவாரபாலர்' என்ற கல்வெட்டுக் குறிப்பின்மூலம் உறுதி செய்யப்படுகிறது.

**10. சாளுக்கியப் போர் IV - கொப்பத்துப் போர் ( 1054) :** 1048-ல் கல்யாணபுரத்துப் போரை அடுத்து ராஜாதிராஜன், தம்பித் துணைச் சோழன் என்றழைக்கப்பட்ட ராஜேந்திரன் II துணைக்கு வர, சாளுக்கிய நாட்டிலுள்ள கொப்பத்துப் போருக்குச் சென்றான். இப் படையெழுச்சி இரட்ட மண்டலத் தாக்குதலுடன் தொடங்கியது. சாளுக்கிய நாடு சென்ற சோழர்படை கிருஷ்ணு நதிக் கரையிலுள்ள தற்கால மாஸ்கிக்கு அருகே அமைந்த கொப்பம் எனும் போர்க்களத்தில் சாளுக்கியப் படைகளுடன் மோதியது. 'செப்பருந் தீர்த்தக் கொப்பத்து' என்ற கல் வெட்டுக் குறிப்பினுல் இது புண்ணிய நீராடல் சிறப்பு வாய்ந்த ஒரு புனிதத் தலமாக இருக்கலாம் எனத் தெரிகிறது.

கொப்பம் போர்க்களத்தில் ராஜாதிராஜன் முன்னணியில் நின்று போரிட்டான். ஆகவமல்லன் போருக்கு வரவில்லை. எண்ணற்ற சாளுக்கிய படைத்தலைவர் ராஜாதிராஜனுடைய படையாற்றலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் திணறினர். ஆனுலும், சாளுக்கியப் படைத்தலைவர்கள் தம் வில்லாளர் பிரிவினரிடம் சோழ மன்னன் ராஜாதிராஜனை மட்டுமே ஒருமிக்கக் குறி வைத்துத் தாக்குமாறு ஆணையிட்டனர். ராஜாதிராஜன் அமர்ந்து போரிட்ட யானை இக் கொப்பத்துப் போரின் சிறப்பு இலக்காக மாறியது. யானைமீதிருந்து போர் செய்தபடியே ராஜாதிராஜன் படுகாயமுற்ற நிலையில் வீரமரணம் அடைந்தான்.

'கல்யாணபுரமும் கொல்லாபுரமும் எறிந்து யானைமேற் றுஞ்சின உடையார் ஸ்ரீ விஜய ராஜேந்திர தேவர்' என்று சொல்லும் சோழர் கல்வெட்டுகள் இந்த நிகழ்ச்சியினைப் பலவாறு பாராட்டிக் குறிக்கின்றன. சாளுக்கிய நாட்டுக்குரிய 1071ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுவது போல, பாண்டியச் சோழன் என்ற பெயர் கொண்ட தமிழ் மன்னன் பெல்வோலா நாட்டினுள் புகுந்து ஏராளமான அழிபாடுகளைச் செய்து சமண சமயக் கோவில்களை அழித்தான்; அதற்கான தண்டனையாகப் போர்க் களத்தில் சாளுக்கியரால் கொல்லப்பட்டான். இவ்வாறு தெரிவிக்கின்ற கல்வெட்டில் சாளுக்கியரின் இழப்புகளைப்பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. பாண்டியச் சோழன் என்று குறிக்கப்படுபவன் ராஜாதிராஜனே. தன் தலைமகனைப் போரின்

நடுவே இழந்த சோழப்படை குழப்பத்திற்கு உள்ளாகியது. சாளுக்கியப் படையினர் முன்னேறவே, தலைவன் இல்லா சோழர் படை சிதறி ஓடத் தலைப்பட்டது.

பாசறையிலிருந்த ராஜேந்திரன் II அப்போது போர்க் களத்தினுள் புகுந்தான்; சோழர் படையை ஊக்கப்படுத்திப் போர் வீரர்களை ஒருநிலைப்படுத்தினான். போர் தொடர்ந்து நடந்தது. சோழர் படை வெற்றி பெற்றது. சாளுக்கியப் படைத்தலைவர்களாகிய ஜெயசிங்கன், புலிகேசி, தசபன்மன், அசோகையன், ஆரையன், மொட்டையன், நன்னி நுளம்பன் போன்றோர் ராஜேந்திரனால் கொல்லப்பட்டனர். வன்னிய ரேவன், துத்தன், கிண்டமையன் போன்றோர் போர்க்களத்திலிருந்து உயிர் பிழைக்க ஓடினர். யானை, ஒட்டகம் போன்ற போர்ச் சாதன விலங்குகளையும் பெருஞ்செல்வத்தையும் ராஜேந்திரன் கவர்ந்து கொண்டான். (சாளுக்கியரின் அரசகுலப் பெண்டிரான சத்தியவ்வை, சங்கப்பை போன்றோரும் சிறை எடுக்கப்பட்டனர். சோழ வரலாற்றுக்குப் புதிதான முறையில் ராஜேந்திரன் II போர்க்களத்திலேயே தன்னைச் சோழ மன்னனாக முடிசூட்டிக் கொண்டான்.)

கொல்லாபுரத்தில் ஒரு வெற்றித்தூண் நிறுவப்பட்டது. அரசனை இழந்த பின் புதிய அரசனைப் பெற்ற சோழர் படை பெரு வெற்றிகளின் மகிழ்ச்சியோடும், ராஜாதிராஜனுடைய இறப்பினால் ஏற்பட்ட துக்கத்தோடும், போர்களில் கவரப்பட்ட பெருஞ் செல்வத்தோடும் சோழ நாடு திரும்பியது. நான்கு முறைகள் மேலைச் சாளுக்கியரைத் தோற்கடித்த போதிலும் சாளுக்கியரின் அரசியல் வலிமையை முறிக்கக்கூடிய அளவில் அவர்களுடைய தோல்விகள் ஆழமாகக் காணப்படவில்லை. அவர்களுடைய நிலப்பகுதிகள் சோழருடைய படை கங்காபுரிக்குத் திரும்பிக் கொண்டன. அடுத்து பதவிக்கு வந்த ராஜேந்திரன் II காலத்தில் மைசூரின் தென்கிழக்குப் பகுதியான கங்கபாடிகூடச் சாளுக்கியரிடமிருந்து சோழர்கள் மீட்ட நிலையில்தான், கூடல் சங்கமம் போரை நிகழ்த்த வேண்டியதாயிற்று. இந்த அளவில் இப் பெரும்போர்களும் அவற்றில் ஏற்பட்ட அழிவுகளும் பயன் ஏதும் இல்லாமல் போய் விட்டன. இவ்வாறு ராஜாதிராஜனுடைய போர்களினால் அரசியல் நன்மை எதுவும் விளைந்ததாகத் தெரிய வில்லை. சாளுக்கியர்—சோழர் போர்களால் ஏற்பட்ட பகைமை தான் தென்னக அரசியலுக்குரிய இறுதிப் பொருளாக மிஞ்சி நின்றது. இதனால் இந்த இரு பேரரசுகளும் தங்கள் வலிமையை உள்ளூர இழந்து நின்றன. அவ் வகையில் அவ்விரு பேரரசுகளும்

மேற்கொண்ட போர்ப்பகையும், பொருள் செலவும், ஆள் சேதமும் அரசியல் பயன் ஏதுமில்லாத வெற்றுப் பெருமிதமாகச் சோழருக்கு அமைந்தன. பிரெஞ்சு மன்னன் லூயி XIV வெறும் இராணுவ வெற்றிப் புகழுக்காக மேற்கொண்ட பயனில்லா ஆதிக்கப் போர்களைப் போன்று ராஜாதிராஜனுடைய சாளுக்கியப் போர்கள் நான்கும் ஒருவகை வெறுமையில் பீடிக்கப்பட்டன. அப் போர்கள் சோழ நாட்டுக்குரிய நீடித்த நன்மையைப் பெற்றுத் தராமல் வெறுமைப் புகழுக்குரிய தானைத்தலைவனுக ராஜாதிராஜனைச் சித்தரித்துக் காட்டுவதற்கு உதவுகின்ற படை நிகழ்ச்சிகளாகவே அமைந்தன.

## II உள்நாட்டு நிர்வாகம்

ராஜாதிராஜனின் உள்நாட்டு நிர்வாகம் ராஜராஜன் I, ராஜேந்திரன் I போன்ருேர் நிறுவிச் சென்ற ஆட்சிமுறையின் தொடர் சாயலாக விளங்கியது; மாற்றமேதும் அதில் நிகழவில்லை. போர் செய்கின்ற பெரும்பணியை எப்போதுமே மேற்கொண்ட நிலையில் பாசறையில்தான் பெரும்பாலும் இவன் வாழ வேண்டியிருந்தது. 1018-ல் யுவராஜாவாக ஆனபின்பு இவன் தந்தை காலத்தில் வாய்த்த 20 ஆண்டுக்கால அமைதி, இவனுடைய தந்தையின் ஆட்சிக்காலக் கடைசிப் பகுதியான 1044 ஆண்டளவில் பல போர்கள் ஏற்பட்ட நிலையில் சிதைந்த பின்பு, இவனுடைய பத்து ஆண்டுக் கால நேரடி ஆட்சியில் உள்துறை நிர்வாகத்தில் பெருமளவிற்கு மாற்றங்கள் ஏற்பட வழி அமையவில்லை.

**1. மண்டலப் பிரிவுகள் :** மத்தியப் பேரரசின் மண்டலங்களை ஆளுகை செய்ய அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களை மத்திய அரசிற்குக் கட்டுப்பட்ட ஆட்சியாளர்களாக இயங்குமாறு பணித்து ராஜாதிராஜன் அனுப்பி வைத்தான். அவனுடைய குடும்பத்தினரில் பதின்மூன்று பேர் வரை ஆட்சியாளராக இயங்கக்கூடிய தகுதியுடையவர்களாகக் காணப்பட்டதால், அவர்களே அதிகாரிகளுக்குப் பதில் ஆங்காங்கே நியமிக்கப்பட்டார்கள். அரச குடும்பத்தினரான இந்த வகை ஆளுநர்கள் மதிப்போடும் மனவளர்ச்சியோடும் காணப்பட்டார்கள். சோழ அரசியலில் நேரடிச் செல்வாக்கும் அவர்களுக்கு இருந்தது. தொண்டை மண்டலத்தில் தம்பித்துணை சோழ வளநாடு என்ற பெயரில் அமைந்த ஆட்சிப் பகுதி இக் கருத்தினை வலியுறுத்தும்; தம்பித்துணை சோழ வளநாடு ராஜேந்திரன் II என்ற இவனுடைய தம்பியைச் சிறப்பிக்க ஏற்பட்டது என்பர்.

**2. அரசியல் அதிகாரிகள் :** ஆட்சித்துறையில் நிறைவான அனுபவம் மிக்க அதிகாரிகள் தாங்கள் ஆற்றிய உயர் கல்விப் பணிகளும், சமுதாய அறம் பேணி நின்ற சமயச் சேவைகளும் பெருகுகின்ற வகையில் தன்முனைப்புடன் தங்கள் ஆட்சியினை மேற்கொண்டார்கள். சான்றாக, 72 வேலி நிலத்தைத் திரிபுவனக் கல்லூரிக்கு நன்கொடையாகத் தானே மனமுவந்து அளித்த புரவலன் சோழ அரசியல் அதிகாரியாகிய மாவலி வணராயன் என்பவன்தான். ராஜேந்திரன் I ஆட்சிக்காலம் முதல் அதிகாரி யாக இருந்து, சோழ ஆட்சியில் அனுபவ முத்திரை பெற்றிருந்த சேனுதிபதிராஜேந்திர சோழ மாவலி வணராயன், தண்டநாயகன் வெண்காடன் சங்கரனுகிய ராஜாதிராஜப் பல்லவரையன், அரசனுக்குரிய ராஜ குருவான வாசுதேவ நாராயணன் என்ற உலகளந்த சோழப் பிரம்மராயன் போன்ற அரசியல் அதிகாரிகள் இவ் வகைப் பணிகளை ஆற்றி, சோழனின் உள்நாட்டு நிர்வாகம் வலிமையும், வளர்ச்சியும் பெற்றிலங்க வழி செய்தனர். சோழ அரசனுடைய தூண்டுகோல் இல்லாமல் இவர்கள் சொந்த முறையில் கோவிலறம், கல்விப் பணி போன்றவற்றில் ஈடு பட்டார்கள்.

**3. நிலச் சீர்திருத்தங்கள்—நில அளவு, நிலவரி:** சோழ நாட்டின் ஒரு பகுதி நிலங்கள் இவன் காலத்தில் அளக்கப்பட்டி ருக்க வேண்டும் என்று ஒரு கருத்து உண்டு. ராஜாதிராஜனுக்கு அமைந்த 'உலகளந்த சோழன்' என்ற சிறப்புப் பெயர் ஒன்று இதனைச் சுட்டிக் காட்டும். நிலங்கள் அளக்கப்பட்டு தரம் பிரிக்கப் பட்டன. நிலத்தின் தரம், உற்பத்தித் திறன், வரி கொடுக்கும் ஸ்தாபனம் இவற்றைப் பொறுத்து நிலவரி வசூல் செய்யப்பட்ட தால் நிலத்திற்கு நிலம் வருவாய் அளவும் இறை விகிதமும் மாறு பட்டு அமைந்தன. சில நேரங்களில் இடத்தைப் பொறுத்து வரி நிர்ணயம் தளர்த்தப்பட்டது. சில வரி விலக்குகளும் அளிக்கப் பட்டிருந்தன. இதற்குச் சான்றாக ஒரு கோவிலுக்குரிய ஒரு வேலி நிலத்திற்கு இறையாக 28 கலம் நெல் பெறப்பட்டது. இதே நேரத்தில் மற்ற நில உரிமையாளர்களுக்கு இறை 19 கலம் என்ப தாக நிர்ணயிக்கப்பட்டிருந்தது.

மொத்தமாக அதிக அளவில் அரசிற்கு வரி செலுத்திய 72 வேலி நிலதாரர் ஒருவருக்கு இறை ஆயம், பாடிக்காவல் கூலி போன்ற துணை வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. உலகளந்த சோழ பிரம்மராயன் என்பவனுக்கு அமைந்த 'உலகளந்த' என்ற அடைமொழி அவனுல் சோழநாட்டுப் பகுதி அளக்கப்பட்டமை குறித்து ஏற்பட்டதா, அன்றி ராஜாதிராஜனுக்கு

அரச பட்டங்குறித்து வழங்கப்பட்டதா ? இது தெளிவாகவில்லை. முன்னைய காரணம் பற்றி என அமைந்தால் ராஜாதிராஜன் காலத்தில் நிலம் அளக்கப்பட்டது என்பது புலனுகும்.

**4. கல்வி :** சைவத்தின் உயர்நிலைக்குப் பெரிதும் ஆக்கஞ் செய்த ராஜராஜன் I, ராஜேந்திரன் I ஆகிய இருவருடைய ஆட்சியின் மறுபதிப்பாக விளங்கிய ராஜாதிராஜனின் காலத்தில் வைணவக் கல்விமுறையில் உயர்கல்வி பரப்பப்பட, பாண்டிச்சேரியை அடுத்த திரிபுவனியில் ஒரு பெரிய கல்லூரி எழுந்தது. 12000 கலம் நெல் வருவாயுள்ள 72 வேலி நிலம் அளித்த மாவலி வணராயன் என்ற வைணவரின் சேவை அவ்வதிகாரியின் கொடைத்தன்மையையும் உயர்கல்வியின் வளர்ச்சியில் அக் கால மக்கள் கொண்டிருந்த நாட்டத்தையும் எடுத்துக் காட்டியது. சோழர் காலத்தில் குறைந்த எண்ணிக்கையில் காணப்பட்ட உயர்கல்விச்சாலைகளின் வரிசையில் முதன்மையானவற்றுள் காணப்பட்ட திரிபுவனக் கல்லூரி ராஜாதிராஜனுடைய ஆட்சிக்குரிய சிறப்புகளில் மேம்பட்டதொன்ருக விளங்குகிறது.

## III சமயம்

ராஜாதிராஜனின் ராஜகுருவான வாசுதேவ நாராயணன் என்ற உலகளந்த பிரம்மராயர் இவனுக்குரிய ஆன்மீயத்துறை ஆசான் ஆவார். சமய நிலையில் அரசியலுக்கு ஏற்பட்ட பிடிப்புகளை இவனுடைய அஸ்வமேத யாகம், வீராபிஷேகம் போன்ற வேள்விகள் வெளிப்படுத்தின. ஏனைய சோழ மன்னர்களைப் போன்று, கோவில் கட்டும் பணியிலும் இவன் தன் திறனைக் காட்டியதற்குச் சான்ருகத் தஞ்சை மாவட்டம் மன்னுர்குடியில் இவன் கட்டிய ஜயங்கொண்ட சோழேச்சுரம், ராஜாதிராஜேச்சுரம் என்ற இரு கோவில்களைச் சொல்லலாம் இவனுடைய வாழ்வின் பெரும்பகுதி போர்முகத்திலேயே கழிந்த காரணத்தினுல் சமயப் பணிகள் ஏராளமான அளவில் நடந்தேறவில்லை எனலாம். எனினும், இவனுடைய அரசாங்க அதிகாரிகள் பெரும் அளவில் தானங்கள் செய்து சமயப்பணி ஆற்றுவதை இவன் மனமுவந்து ஆதரித்து வந்தான்.

**1 அஸ்வமேத யாகம் :** 'திங்களேர் தரு' என்று தொடங்கும் இவனுடைய மெய்க்கீர்த்தி இவன் ஓர் அஸ்வமேத யாகம் செய்ததாகக் குறிப்பிடுகின்றது. 'அஸ்வமேத யாகஞ்செய்து அரசு வீற்றிருந்த ஜெயங்கொண்ட சோழன்' என்று இவனுடைய அந்த மெய்க்கீர்த்தி பேசுகிறது. சோழ மன்னர் வரலாற்றில் முதன்முதலாக அதுவும் இவன் தந்தையான வெற்றிப் பேரரசன்

ராஜேந்திரன் I ஆட்சிக் காலத்திலேயே இவன் இந்த யாகத்தைச் செய்தான் என்பது ஆராய்ச்சிச் செய்தியாகும். (கி.பி. நான்காம் நூற்றுண்டு குப்தர்களின் காலத்துக்குப் பின்பு இந்தியாவில் அரசர்களின் வேள்விகள் அறுகி வந்ததாகவும், ராஜாதிராஜன் நடத்திய யாகந்தான் இந்திய வரலாற்றில் கடைசியாக நடந்த வேள்வி எனவும் கொள்ளல் வேண்டும் என்று A. L. பாஷாம் கூறுகிறுர்.[1]) அரசியல் சார்பான போர் வெற்றிகளுக்குச் சமயப் பூர்வமான உறுதிப்பாட்டிஜ் இதன்மூலம் இவன் ஏற்படுத்திக் கொண்டான். வேதங்களைப் பின்பற்றுகின்ற யாகங்கள் என்ற வேள்விகளைச் சோழ மன்னர்கள் நடத்தியது பற்றி நிறைவான செய்திகள் நமக்குக் கிடைக்கவில்லை. மேலாதிக்க அரசியல் நோக்கும் படைவிடுப்பும் கொண்ட அஸ்வமேத யாகத்தைச் சோழர் வரலாற்றிலேயே ராஜாதிராஜன் ஒருவன் மட்டுந்தான் செய்தான். தண்ட நாயகன் வெண்காடன் சங்கரனுகிய ராஜாதிராஜப் பல்லவராயன் திருச்சி மாவட்டத்திலுள்ள திருப்பைஞ்நீலிக் கோவிலைச் சேர்ந்த செந்தாமரைக் கண்ணன் மடத்திற்கு நிலதானம் அளித்திருந்தான். இம் மடத்தில் தங்கிக் கொண்டு பல சைவ சமய யோகிகள் சமுதாய நலம் சிறக்கின்ற வகையில் ஏராளமான சமயப் பணிகளை ஆற்றி வந்தார்கள்.

(திருபுவனியில் வைணவக் கோவில் திருவிழா நடக்கவும், வைணவ வேதபாடசாலை சரிவர இயங்கவும் ராஜேந்திர சோழ மாவலி வணராயன் நிலக்கொடை அளித்திருந்தான்) என்பது பற்றி முன்னர்க் குறிக்கப்பட்டுள்ளது. வேற்று நாட்டு மன்னனுகிய வேங்கி ராஜராஜ நரேந்திரனும் திருவையாற்றுக் கோவிலுக்கு 300 ராஜராஜ மாடை என்ற தங்க நாணயங்களை அளித்தான் என்ற குறிப்பு உண்டு.

**2. சமயப் பொறையின்மை :** இவன் மேலைச் சாளுக்கியருடன் கொண்டிருந்த பகைமை, சமயத்தை அரசியலிலிருந்து பிரித்துப் பார்க்கின்ற அளவிற்கு உருவாகியிருந்தது. (சாளுக்கிய ஆகவமல்லனைப் பழி முடிக்கின்ற ஆவேசத்தில் கொப்பம் போருக்கு முன்னதாகச் சாளுக்கிய பெல்வோலா நாட்டில் கங்க பெருமானடியால் உருவாக்கப்பட்டிருந்த சமணப் பள்ளிகள் என்ற ஆலயங்கள் பலவற்றை இடித்துத் தரை மட்டமாக்கினுன் என ஆகவமல்லனுடைய 1071ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டுகள் கூறுகின்றன.) தன் முன்னேர் சார்ந்து நின்ற சமயப் பொறையைத் தவிர்த்து, பகைவனைப் பழி தீர்க்கின்ற தீவிரமான போர் ஈடுபாட்டின் அவசியத்தில் அவன் இவ்வாறு ஆழ்ந்து நின்றுன்

[1] A. L. Basham—'The Wonder that was India'—1963—p. 85

எனலாம். மேலைச்சாளுக்கியரின் தலைநகர் கல்யாணபுரத்தில் இருந்து சாளுக்கியரின் கலைத்திறனோடுகூடிய துவார பாலர் சிலையைக் கொணர்ந்து தாராசுரம் ராஜ ராஜேச்சுரமுடையார் கோவிலில் ராஜாதிராஜன் பிரதிஷ்டை செய்தான். சமணக் கோவில்களை இடித்ததன் காரணமாக இச் சோழன் போர்க் களத்தில் உயிரிழந்தான் என்று சாளுக்கியக் குறிப்புகள் பேசுகின்றன. கோவில்களை அழித்தல் போர்ச் செய்கையாகக் கொள்ளப்பட்ட அக் காலத்தில் ராஜாதிராஜனுடைய சைவ நெறிப்பற்று அவ்விதம் சமணரை எதிர்த்து இயக்கம் பெற்றது என்பதும் குறிப்பாக உணரப்படும். வைணவருக்கு எதிரொளியாகப் பௌத்தரும், சைவருக்கு எதிராகச் சமணரும் விளங்கினர். அக் காலத்திய சமய நெறி வளர்ச்சிப் பாதையில் காணப்பட்ட இந்த கசப்பான உண்மை நினைவிலிறுத்தப்பட வேண்டும். ஆகவே, சமயச் சார்பாகவும், இராணுவ முறையிலும் சாளுக்கிய நாட்டில் சமணக் கோவில்கள் சோழர் படையினரால் அழிவுக்கு உட்படுத்தப்பட்டன எனக் கொள்ளலாம்.

சாளுக்கிய நாட்டைத் தன்னுடைய வீரத்தின் விளைநிலமாகக் கொண்டு இவன் பெற்ற வெற்றிகளுக்கு முத்தாய்ப்பாக வீராபிஷேகம் என்னும் வேள்வியைச் செய்து விஜய ராஜேந்திரன் எனும் பட்டமும் சூட்டிக்கொண்டான் ராஜாதிராஜன். இந்த முறையில் அரசியலுக்குரிய சமயச் சார்பான வேள்வியினைக் கல்யாணபுரத்தை அழித்துச் சோழ மன்னர் வரலாற்றில் முதன் முதலாகப் பகைவன் நாட்டிலேயே இச் சோழன் செய்தான்; இத்துடன் அஸ்வமேத யாகம் செய்து வெற்றி வீரனாக வலம் வந்தான். இவனை முன் மாதிரியாகக் கொண்டு பிற்காலத்தே குலோத்துங்கன் III வீராபிஷேகத்தோடு விஜயாபிஷேகமும் செய்தான் என்பது இங்கே குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

## IV குடும்பம்

கன்னியாகுமரிக் கல்வெட்டு குறிப்பிடுகின்றபடி இவனுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களும் ஏனைய அரசகுடும்பத்தினரும் இவனுடைய ஆட்சியில் முக்கிய பங்கு வகித்தனர். ராஜேந்திரன் II இவனுடைய அரசியலில் ஒருங்கிணைந்த ஈடுபாடு காட்டி யுவராஜாவாக 1051ஆம் ஆண்டிலிருந்து சோழ அரசியலில் துணை நின்றதால், அவனைத் தம்பித் துணைச் சோழன் என வரித்துக்கொண்டு தனக்குரிய விருதுப் பெயரில் தம்பித்துணைச் சோழ வளநாடு என்ற ஆட்சிப் பகுதியையும் ஏற்படுத்தியிருந்தான். இதிலிருந்து சகோதரர்களுக்குள்

இருந்த மன உடன்பாடு தெளிவாகத் தெரிகிறது. ராஜாதிராஜ னுடைய பட்டத்தரசி திரைலோகியமுடையார் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவள். ராஜாதிராஜனுக்குரிய பட்டங்கள் பின் வருவன: ஜெயங்கொண்ட சோழன், கல்யாணபுரங்கொண்ட சோழன், ஆகவமல்ல குலாந்தகன், வீரராஜேந்திரன். இவனிடம் அரசாங்க அதிகாரிகளாகப் பணியாற்றியவருள் ராஜேந்திர சோழ பிரம்மராயன், மாவலி வணராயன், வாணகோவரையன், வாசு தேவ நாராயணன், நீலகங்கரையன், வெண்காடன் சங்கரன் ஆகியவர் முக்கியமானோர் ஆவர்.

ராஜாதிராஜனுக்குப் பின் அரச பட்டத்திற்கு வந்த அடுத்த இரு மன்னர்களும் இவனுடைய தம்பிமார்களே. சோழரின் அரசியலுக்கு வேண்டிய பயிற்சியும் மனப்போக்கும் உடையவர் கள்தான், அரசனாகின்ற தகுதி உள்ளவர்கள் என்று அரசியல் ஒழுகலாற்றைச் சோழ அரசகுடும்பம் ஒப்புக்கொண்ட பெருந்தகை மையை இது காட்டுகிறது. இதனை அரசியலுக்குரிய மரபு என்றளவில் இதனையே வளமைப்படுத்திய பெருமை ராஜாதி ராஜனைச் சாரும். தந்தை ராஜேந்திர சோழனுடைய வழித் தோன்றலாக ராஜாதிராஜன் ஆற்றிய அரசியல் பணிகளைத் தொடர்ந்து பின்பற்றுகின்ற மனப்பயிற்சியைச் சோழர் குலத்திற்கு வழங்கியவன் ராஜாதிராஜனே என்பது சிறப்புச் செய்தியாகும்.

## ராஜேந்திரன் II (1054—1063)

ஆதிக்கப் போர்களின் அடிப்படையில் உருவான சோழப் பேரரசை உருவாக்கிய மன்னர்களில் ராஜேந்திரன் II சோழ ஏகாதிபத்தியப் பாரம்பரியத்தைச் சேர்ந்தவன். இவனுக்கு முன்பு ஆண்ட ஏகாதிபத்திய உணர்வு கொண்ட மன்னர்களான ராஜராஜன் I, ராஜேந்திரன் I, ராஜாதிராஜன் I என்ற மன்னர் களோடு இவனை இணைத்துப் பார்க்க வேண்டிய அளவில் இவனும் ஓர் ஏகாதிபத்திய மாமன்னனாக விளங்கினான். இவர்கள் அனைவரும் சோழப் பேரரசின் இராணுவ வலிமையை வளர்த்து, சோழ அரசியலுக்கு ஆதிக்கப் போர்களினால் செழுமை ஊட்டிய வர்கள். இவனுக்குப் பின் வந்த வீரராஜேந்திரன் இதே வகையில் ஆதிக்கப் போர்களை மேலைச்சாளுக்கியரோடு நிகழ்த்தத் தொடங்கி, பின்பு காலப்போக்கில் இராணுவ வினையறத்தோடு கூடிய ராஜ தந்திரத்தைக் கைக்கொண்டான்; இதே ராஜதந்திர உணர்வோடு தனது மகளைச் சோழரின் ஜென்மப் பகையரச குலமான மேலைச்சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனுக்கு மணமுடித்தும் வைத்தான். இந்த நிலையில் ராஜேந்திரன் IIதான்

சோழப் பேரரசின் இராணுவமுறை ஆதிக்கப் போர்களைக் கொண்ட அரசியல் பாரம்பரியத்தின் கடைசி அரசன் என நாம் கருதலாம்.)

கன்னியாகுமரிக் கல்வெட்டு கூறுவது போல, ராஜாதிராஜன் வேங்கி நாட்டு அரசியலைப்பற்றி அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. அவனுக்குப் பின்வந்த ராஜேந்திரன் அவ்வாறே ஓரளவு நடந்துகொண்டான். 1053-ல் நிகழ்ந்த கொப்பம் போருக்கு முன்பே வேங்கி நாடு சோழரின் ஆதிக்கத்திலிருந்து நழுவி விட்டது. 1061-ல் வேங்கி நாட்டு மன்னன் ராஜராஜ நரேந்திரன் இறந்தான். 1053-ல் ராஜேந்திரன் II கலந்துகொண்ட கொப்பம் போரில் மேலைச்சாளுக்கியர் ராஜாதிராஜனைக் கொன்றபோது இவன்தான் சோழருக்கு நேரவிருந்த தோல்வியைத் தன்னுடைய தகுதி சான்ற தலைமையினாலும், தளராத நெஞ்சத்தாலும் வெற்றியாக மாற்றிக் காட்டினான்; போர்க்களத்திலேயே சோழ மன்னனாகவும் முடிசூட்டிக்கொண்டான். சாளுக்கியரோடு பாரம்பரியமான முறையில் முடக்காற்றுப் போரினை ராஜேந்திரன் II நடத்தினான்; அதே மனப்போக்கில் ஈழத்தின்மீதும் படையெடுத்து, அங்குள்ள விடுதலை இயக்கத்தை அடக்கினான். இந்த இருவகைப் போர்கள் மட்டும் ராஜேந்திரன் காலத்தில் நிகழ்ந்த காரணத்தால் தென்பாண்டிப் பகுதியிலும், கேரளத்திலும் அமைதி நிலவியதாகத்தான் கொள்ளல் வேண்டும். இவன் மகன் ராஜமகேந்திரனுக்கு 1059-ல் 'யுவராஜா' முடிசூட்டி வைத்தான். இவன் சகோதரன் வீரராஜேந்திரன் இவனுக்கு வாய்த்த உடன்பிறந்தோரில் சிறந்தவனென்ற முறையில் முடக்காற்றுப் போரில் கலந்துகொண்டான். அரசியலில் உதவி செய்ய இவ்விருவரோடு ஏனைய உறவினர்களும் காணப்பட்டார்கள். ஆகவே, ராஜேந்திரனால் சோழர் பாரம்பரியமான இராணுவ ஏகாதிபத்தியத்தையும், ஆதிக்கப் போர்களையும் திறமையாக மேற்கொள்ள முடிந்தது.

1054-லிருந்து 1063 வரை ஒன்பது ஆண்டுகள் ஆண்ட இவனுடைய ஆட்சியில் உள்துறை, சமயத்துறை போன்றவற்றில் இவன் பெருமை சொல்லுகின்ற அளவில் முக்கியமான சேவைகளை ஏராளமான அளவில் இவன் ஆற்றவில்லை. அவ்வளவு குறுகிய ஆட்சிக் காலத்தில்—இராணுவ ஆயத்தமாக இருக்க வேண்டிய வல்லரசுப் போட்டியின் கெடுபிடியான சூழ்நிலையில்—சமாதான காலத்துக்குரிய அரசியல் பணிகளை இவனால் மேற்கொள்ள முடியவில்லை. இவனுடைய தந்தை ராஜேந்திரன் I காலத்தில் இருபது ஆண்டுகள் போரில்லாக் காலமாக இருந்த காரணத்தால் கங்கைகொண்ட சோழபுர நிர்மானிப்பு போன்ற

சீரிய பணிகள் நடந்தேறின. ராஜேந்திரன் II ஆட்சிக்காலம் இவனுடைய சகோதரன் ராஜாதிராஜன் ஆட்சியைப் போன்று இராணுவ முறையில் நெகிழ்ச்சி கொண்டு அமைந்ததால், சோழ மன்னர்களின் ஆட்சிக்கு உரியதான வகையில் கலை, கல்வி, இலக்கியம், கோவிலறம் போன்றவற்றின் வளர்ச்சி கணிசமான அளவில் நடந்தேறவில்லை. இந் நிலையில் ராஜராஜன் வழிவந்த, ஏகாதிபத்திய உணர்வுகொண்ட, இராணுவத்திறன் நிறைந்த சோழ மாமன்னனாக மட்டும் ராஜேந்திரன் II விளங்கினான் என்பது பொருந்தும்.

## I வெளிநாட்டுக் கொள்கை

ராஜேந்திரன் II ஆண்ட பத்தாண்டுகளில் இரு போர்கள் நிகழ்ந்தன. அவனுடைய அயல்நாட்டுக் கொள்கை சோழரின் பாரம்பரிய கோட்பாடான இராணுவ ஏகாதிபத்திய வளர்ச்சியைப் பேணி நின்றது. 1055-ல் ஈழத்திலுள்ள விடுதலைக் கிளர்ச்சி யாளரை அடக்கியது வழிவழியாக வந்த ஈழக் கொள்கையில் மாற்றம் ஏதும் இல்லாததைக் காட்டுகிறது. 1063 அளவில் மேலைச்சாளுக்கியரோடு முடக்காறு என்றழைக்கப்பட்ட துங்க பத்திரைப் பகுதியில் பெரும்போர் நிகழ்ந்தது. இதில் ஏற்பட்ட சோழர்களுடைய வெற்றி அவர்தம் வெளிநாட்டுக் கொள்கையின் ஆதிக்க உணர்வை வலுப்படுத்தியது. இத்தகைய வல்லடியான போக்குடைய வெளிநாட்டுக் கொள்கைக்கு உறுதுணையாகச் சோழரின் இராணுவம் நல்லதொரு படை எந்திரம் (Military Machine) என்றளவில் அதற்குரிய அனுபவத்தையும், ஆற்றலையும் பெற்றிருந்தது. ராஜேந்திரனுடைய மகன் ராஜ மகேந்திரன், தம்பி வீரராஜேந்திரன், மற்றும் பல உறவினர்கள் இத்தகைய இராணுவ முறையில் அமைந்த வெளிநாட்டுக் கொள்கையை ராஜேந்திரன் தாராளமாகவும், வெற்றியுடனும் பின்பற்றுவதற்குப் பெரிதும் உதவுகின்ற வகையில் ஒற்றுமை யுணர்வோடு செயல்பட்டார்கள்.

**1. ஈழப் போர் (1055) :** ராஜேந்திரன் II ஆட்சிக்கு வந்த நான்காம் ஆண்டான 1055-ல் ('யுவராஜா' பட்டம் பெற்றது 1051-ல் எனக் கொள்ளலாம்.) செதுக்கப்பட்ட அவனுடைய கல் வெட்டுகள் இந்த ஈழப் போர் பற்றிக் கூறுகின்றன. இப் போர் விடுதலைக் கிளர்ச்சிக்காரர்களை ஈழத்தில் அடக்குகின்ற வகையில் ஏற்பட்டதுதான். ராஜேந்திரன் II அனுப்பி வைத்த படை ஈழம் சென்று வீரசலாமேகன் என்ற பெயரில் அழைக்கப் பெற்ற ஈழ விடுதலைக் கிளர்ச்சி மன்னனான வட இந்திய கன்னியாகுச்சனனைப் போரில் தோற்கடித்தது ; தோற்றவனின் தலை துண்டிக்கப்

பட்டது. கலிங்கர்களின் அரசன் என்றும், பெரும்படையன் என்றளவில் பெயர் பெற்றவன் என்றும் பொருள்பட 'விரல் படைக் கலிங்க வர்மன் வீரசலாமேகனைக் கடகளிற்றொருபடக் கதிர்முடி கடிவித்து' என்று 'திருமாது புவிபெறும் பெருமாது இவர்தன்' என்ற முதல் அடியுள்ள ராஜேந்திரனுடைய மெய்க் கீர்த்தி அடிகள் 'இலங்கையருக்கு இறைவன் மானுபரணன் காதலிருவரைக் களத்திடைப் பிடித்து' என்று இலங்கை மன்னன் மானுபரணனின் இரு மைந்தர்கள் கைதிகளாகப் பிடிக்கப்பட்டதைக் கூறுகின்றன. இந்த நிகழ்ச்சிகளைப்பற்றிச் 'சங்கிலி கனத ராவ' என்ற ஈழப்பகுதியில் காணப்படும் ராஜேந்திரனின் ஆட்சிக் காலக் கட்வெட்டு கூறுகிறது. இவ்வாறு ஈழம் ராஜேந்திரனால் அடக்கப்பட்டது. ஆனால், விடுதலைக் கிளர்ச்சியின் மூலபலம் முறிந்து போய் விடவில்லை. ரோகண நாட்டில் விடுதலையாளரின் ஆட்சி வேரூன்றி நின்றது.

1058-ல் கித்தி என்ற இளவரசன் 'விஜயபாகு' என்ற பட்டத்தோடு ஈழத்தரசன் ஆனபின்பு ஈழ நாட்டாரின் இயக்கம் தீவிரமடைந்தது. ஈழத்து விடுதலைக்குத் தலைமை தாங்கிய விஜய பாகுவின் ஆட்சி 1055-க்குப் பிறகு வலிமை பெறும் வகையில் ராஜேந்திரன் ஆட்சி அமைந்தது. ஏகாதிபத்தியம் தன்னைப் புதுப்பித்துக்கொண்டேயிருந்தால்தான் அடக்கப்பட்ட நாடுகள், நடுக்கத்தில் உணர்விழந்து கிடக்கும். ஆனால், 1055-வது ஆண்டுக்குப் பின்பு ஈழ நாட்டோடு சோழர்கள் கொண்ட ஆதி பத்திய உறவுகளில் தேக்க நிலை ஏற்பட்டுப் போனது. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு 1067-ல் ஈழத்தில் இதே விஜயபாகுவோடு ராஜேந்திரனுக்கு அடுத்து, சோழ மன்னனான இவன் தம்பி வீரராஜேந்திரன் நிகழ்த்திய பெரும்போருக்குப் பின்பு ஈழம் சோழரின் கைவிட்டு நழுவத் தொடங்கியது.

**2. மேலைச்சாளுக்கியப் போர்-முடக்காற்றுப் போர் (1063):** 1054-ல் நிகழ்ந்த கொப்பம் போரில் தோற்றுப் போன 'வேக வெஞ்சாளுக்கிய ஆகவமல்லன்' அத் தோல்விக்கு வஞ்சந் தீர்க்க, பெரும்படை திரட்டிக்கொண்டிருந்த செய்தி ராஜேந்திரனை எட்டியது. சோழ நாட்டுக்குள் மேலைச்சாளுக் கியர் படையெடுத்து வரும் முன்பே சோழர்படை அவன் நாட்டுக்குச் சென்றது. இதன் விளைவாக முடக்காற்றுப் போர் நிகழ்ந்தது. முடக்காறு எனப்படுவது 'துங்கை' என்ற ஆறும், 'பத்திரா' என்ற ஆறும் சேர்கின்ற மைசூர்ப் பகுதியிலுள்ள 'கூடலி' என்னுமிடம் எனவும், துங்கபத்திரையும் கிருஷ்ணா நதியும் சேர்கின்ற இடம் எனவும் இரு கருத்துகள் உண்டு.

கொப்பத்துப் போரினால் மேலைச்சாளுக்கியரின் அரசியல் ஆதிக்கத்தில் மாற்றம் ஏற்படவில்லை. கங்கவாடி என்ற தென் மைசூர்ப் பகுதியான சோழரின் ஆதிக்கப் பகுதியிலிருந்து மேலைச் சாளுக்கியரை விரட்டிக்கொண்டு துங்கபத்திரை நதிக்கரை சென்ற சோழர்படையை அங்கே எதிர்த்து நின்ற மேலைச் சாளுக்கியரோடு ஏற்பட்ட போர் 'முடக்காற்றுப் போர்' என்பர். இந்தப் போர் மேலைச் சாளுக்கியர் வேங்கி நாட்டுக்குச் சோழரை எதிர்த்து அனுப்பிய தங்கள் படையெழுச்சியில் மேலைச் சாளுக்கியர் தோற்ற பின்பு ஏற்பட்டது எனவும் பேராசிரியர் கூறுகிறார். இவ்வாறு குறிப்பிடப்படும் 'வேங்கிப் படையெடுப்பு' சோமேசுவரனால் மேற்கொள்ளப்பட்டது.

வேங்கியில் அதனுடைய மன்னர் ராஜராஜ நரேந்திரன் 1022-லிருந்து ஆளத் தொடங்கி, 1031-ல் பதவி இழந்து, பின்பு 1035-ல் தானாகவே அரசுரிமையைத் திரும்பப் பெற்று, மேலைச் சாளுக்கியரோடு ராஜதந்திர உறவுகளை மேற்கொண்ட நிலையில் 1061-ல் இறந்துபட்டான். மேலைச் சாளுக்கியன் விஜயாதித்தியனுடைய மகன் சக்திவர்மன் II என்ற இளவரசனை வேங்கி நாட்டுக்கு அரசனாக்குவதற்காகச் சாளுக்கியத் தளபதி சாமுண்டராயன் என்பவனுடைய தலைமையில் சாளுக்கிய இராணுவத்தை ஆகவமல்லன் வேங்கி நாட்டுக்கு அனுப்பி வைத்தான். சக்திவர்மன் II இவ்வாறு வேங்கி நாட்டுக்கு மன்னனாக்கப்பட்டான். ராஜராஜ நரேந்திரனுடைய மற்றொரு மகனும், ராஜேந்திரன் II சோழனுடைய மகள் மதுராந்தகியை மணமுடித்திருந்தவனும் ஆகிய ராஜேந்திரன் II என்ற பிற்காலச் சோழன் குலோத்துங்கன் I சோழர்களின் பக்கம் சேர்ந்துகொண்டு வேங்கி நாட்டின் புதிய மன்னனாக வந்துள்ள சக்திவர்மன் II என்ற தனது சிற்றப்பாவின் மகனை எதிர்த்து நின்றான். சோழ மன்னன் ராஜேந்திரன் II இவ்வாறு தொடங்கிய சாளுக்கியப் போரின் கிழக்குப் போர்முனைக்குத் தனது படையை அனுப்பிச் சாமுண்டராயனையும், சக்திவர்மனையும் போரில் கொன்ற அளவில் சோமேசுவரன் மேற்குப் போர்முனையைக் கங்கவாடியில் ஏற்படுத்தினான். அவனுடைய மைந்தர்களான விக்கிரமாதித்தனும், ஜெயசிம்மனும் சோழரின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட தென் மைசூர்ப் பகுதியான கங்கவாடியைத் தங்கள் தந்தையின் ஆணைப்படி படையெடுத்துப் பிடித்துக்கொண்டனர். சோழருக்கும், சாளுக்கியருக்கும் ஏற்பட்ட இவ்விரு மோதல்களும் வேங்கியிலும், கங்கவாடியிலும் நிகழ்ந்த பின்புதான் முடக்காற்றுப் போர் இவ் வகை நிகழ்ச்சித் தொடரின் கடைசியில் தோன்றியது.

இவ்வாறு 1063 அளவில் நடந்தேறிய முடக்காற்றுப் போரிணைப்பற்றி ராஜேந்திரன் II காலத்திய ஒன்பதாம் ஆண்டுக் குரிய கல்வெட்டு (87 of 1895) பேசுகிறது. இவனுடைய மகன் ராஜமகேந்திரன். இவன் 1059-ல் 'யுவராஜா' பட்டம் பெற்ருன். இவனுடைய மூன்ரும் ஆட்சியாண்டில் (1062) ஏற்பட்ட திருப்பாதிரிப்புலியூர்க் கல்வெட்டு முடக்காற்றுப் போரில் இவ் விளவரசன் கலந்துகொண்ட பாங்கைச் சித்தரிக்கிறது. இவர் களுடைய இவ்விரு கல்வெட்டுகளைத் தவிர, ராஜேந்திரனுடைய தம்பி வீரராஜேந்திரனுடைய மதுராந்தகம், பெரும்பேரூர்க் கல்வெட்டும் இப் போரிணை விளக்குகிறது. 'கூடல் சங்கமம் போர்' என இப் போரிணை அக் கல்வெட்டுகள் அழைக்கின்றன. 'இரட்ட ராஜாகுல காலன்' என்ற பட்டத்தை இப் போரில் பங்கு பெற்ற அளவில் வீரராஜேந்திரன் பெற்ருன். இவ்வாறு மூன்று சோழர் தலைவர்கள் இப் போரில் ஈடுபட்டார்கள்.

'அடற்களிற்ருல் ஆகவமல்லனை—முடக்காற்றில் முதுகிடு விடுத்து—மற்றவன் சயசிங்கனெடும்—வருதண்டினைப் பொரு தண்டினுல் வெற்றிகொண்டு' என்று வருகின்ற திருப்பாதிரிப் புலியூர்க் கல்வெட்டு ராஜமகேந்திரனை இப் போரோடு இணைக் கிறது. 'முரட்சாளுக்கியரை முடக்காற்றில்—முதுகு கண்டு முனிவாறி—இரட்ட ராஜகுல காலன்—இகல் வீரராஜேந்திரன்—புயல்கொண்டு பொதுநீக்கி—ஆள்கின்ற சயங்கொண்ட மங்கலம்' என்று சொல்லும் வீரராஜேந்திர சோழனுடைய மதுராந்தகம் பெரும்பேரூர்க் கல்வெட்டு முடக்காற்றுப் போர் என்ற முதலாம் கூடல் சங்கமம் போரில் இவன் கொண்ட பங்கினைக் குறிக்கிறது. ராஜேந்திரன் II சோழ மன்னன் என்ற முறையில் இப் போரில் பங்கு பெற்ருன்.

இந்தப் போரின் நிகழ்ச்சிகளைப் பொறுத்து ராஜேந்திரனுடைய கல்வெட்டுகள் பல விவரங்களைத் தெளிவாக்குகின்றன. மேலைச் சாளுக்கிய மன்னன் ஆகவமல்லன், அவன் மகன் விக்கிரமாதித் தன், தளபதி வாலதேவன் போன்ரேர் சாளுக்கியப் படை யோடு போர்க்களம் வந்தனர். படை நடத்திய வாலதேவன் உட்பட பல தளபதிகள் கொல்லப்பட்டார்கள். அரசனும், இளவரசனும், இருகையன் என்ற சிறப்புத் தளபதியும் போர்க் களம் நீங்கி உயிர்தப்பி ஓடினர். இவ்வாறு சாளுக்கியர் தங்களுடைய பழி வாங்கும் எண்ணத்திற்கு ஏற்ற முறையில் இராணுவ வலிமையைப் பெற்றிருக்கவில்லை. ஆகவே, கொப்பம் போரின் தோல்வி அவர்களுக்குரிய மன உறுத்தலாக ஏற்கெனவே தொடர்ந்து வந்தது; அதோடு முடக்காற்றுப் போரின் தோல்வியும் சேர்ந்துகொண்டது.

இப் போரின் விளைவுகள் எல்லாச் சாளுக்கியர்-சோழர் போர்களைப் போலவே உருப்படியாக ஏதுமில்லாத அளவில் அமைந்தன. படைகடல் அலை அடித்த பின்பு எல்லாம் ஓய்ந்து போவது போலச் சோழரின் படைஞர் தாங்கள் பெற்ற வெற்றிகளோடு கூடிய போரில் கவர்ந்த பொருள்களோடு சோழ நாட்டுக்குத் திரும்பிய பின்பு மேலைச்சாளுக்கியர் முன்போலவே தங்கள் ஆதிக்கத்தை நாடெங்கிலும் நிரவிக்கொண்டனர். இதை வீரராஜேந்திரனுடைய ஆட்சியின் போர் நிகழ்ச்சிகளிலிருந்து நாம் அறியலாம். மேலைச்சாளுக்கியரோடு போர் தொடங்கும்போது கங்கபாடியிலிருந்து சாளுக்கியரை அப்புறப்படுத்துவதுதான் வீரராஜேந்திரன் மேற்கொண்ட முதலாவது சாளுக்கியப் போராக அமைந்து விடுகிறது. தன்னுடைய சகோதரன் ராஜேந்திர சோழனுக்குக் கொடுத்த வாக்கை மெய்ப்பிக்க வேங்கி நாட்டைக் கைப்பற்றியதாகத் தனது மெய்க்கீர்த்தியில் கூறிக்கொள்கின்ற வீரராஜேந்திரனுடைய ஆட்சித் தொடக்கத்தில் (1063 அளவில்) வேங்கியும் சோழரின் ஆதிக்கத்தை விட்டுப் போய்விட்டதை அறியலாம். ஏனென்ருல், ராஜேந்திரன் II சோழனுடைய வெற்றிக்குப் பின்புகூட விஜயாதித்தியன்தான் வேங்கி நாட்டு மன்னனுக மேலைச்சாளுக்கியரின் துணையுடன் தொடர்ந்து ஆட்சி செய்தான். 1072-ல் அவன் இறக்கும்வரை தொடர்ந்து நீடித்த விஜயாதித்தியனுடைய ஆட்சியின் கடைசி மூன்ருண்டுகளில் சோழருக்குரிய ஆட்சிப் பகுதியாக வேங்கி வீரராஜேந்திரன் ஆற்றிய ராஜதந்திரப் புரட்சியின் காரணமாக மாறிக்கொண்டது. இவ்விரு பிற்கால நிகழ்ச்சிகளின் பின்னணியில் பார்த்தால் முடக்காற்றுப் போர் அரசியல் மாற்றங்களைச் சாதிக்கவில்லை என்பது புலப்படும்.

## II உள்நாட்டு நிர்வாகம்

ராஜேந்திரன் II மேற்கொண்ட உள்நாட்டு நிர்வாகத்தைப் பொறுத்தமட்டில் குறிப்பிடத்தக்க அமிசங்கள் எதுவும் இல்லை. கொப்பம் போர்க்களத்தில் மன்னனுக முடிசூட்டிக் கொண்டது முதல் சாளுக்கியப் போர்களிலேயும் சாளுக்கிய நாட்டில் சோழ ஆதிக்கத்தை நிறுவுகின்ற முயற்சிகளிலும் இவன் அதிக ஈடுபாடு காட்டினுன். சாளுக்கியப் போர்களைத் தவிர்த்து ஏனைய சோழரின் மேலாண்மையின் கீழிருந்த ஆட்சி மண்டலங்களிலும் நிலவிய அமைதியான அரசியல் போக்கு இவனுடைய நிர்வாகத்திலும் எதுவும் குறைபாடில்லை என்பதனைச் சுட்டிக் காட்டும்.

**1. மண்டல ஆட்சி முறை :** ராஜாதிராஜன் I காலத்திலிருந்த அதே ஆட்சி மண்டலப் பிரிவுகளை ராஜேந்திரன் II அப்படியே

நிலைக்க விட்டிருந்தான். இந்த மண்டல ஆட்சிமுறை ராஜராஜன் I காலத்தில் தொடங்கி ராஜேந்திரன் I காலத்தில் நேரடியான மண்டல ஆட்சியாக மாறிக்கொண்டது. மாற்றங்கள் எதுவும் இன்றி இம் முறையானது நீடித்தது. அரச குடும்ப உறுப்பினர் பதின்மூன்று பேர் இவனுடைய ஆட்சியின் முக்கியப் பங்குகளை வகித்துச் சிறப்புப்பணி பல புரிந்தனர். திருவெண்காட்டுக் கல்வெட்டு கூறுகிறபடி கங்கை கொண்ட சோழன் என்ற தனது மகனைச் சோழ—பாண்டியன் என்ற பெயரில் 1064-ல் பாண்டிய நாட்டுக்கு அதிபதியாக ராஜேந்திரன் அனுப்பி வைத்திருந்தான். சிறிய தந்தைக்கும், நான்கு இளைய சகோதரர்களுக்கும், தம் ஆறு மைந்தர்களுக்கும், இரண்டு பேரன்களுக்கும் ஆக மொத்தம் பதின்மூன்று பேர்களுக்கு இவனுடைய ஆட்சியில் அதிக உரிமைகளுடன்கூடிய பங்கு உண்டு. இவர்கள் அனைவரும் சோழ அரசியலில் இவனுக்குத் துணையாக நின்றனர் என 1058-க்குரிய இச் சோழனுடைய மணிமங்கலம் கல்வெட்டு கூறுகிறது. சோழ பாண்டியன், சோழ கங்கன், சோழ கேரளன் என்று அரச குடும்ப உறுப்பினருக்குப் பட்டப்பெயர்கள் காணப்பட்டன. இவை அவர்கள் அந்தந்த பாண்டிய, கேரளப் பிராந்தியங்களில் சோழ மத்தியரசின் பிரதிநிதிகளாக அரசாட்சி செய்த பேராண்மைக்குக் கட்டியங்கூறுகின்றன.

**2. அறநிலையப் பாதுகாப்பு அதிகாரிகள் :** நாட்டார், பிரம்மதேயக் கிழவர், ஊர்களிலார், நகரங்களிலார் போன்றவர்களும் அறநிலையங்களான கோவில்கள், மடங்கள் போன்றவற்றில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் அரசனது அறப்பணி சம்பந்தப்பட்ட ஆணைகளை ஆங்காங்கே அமுல் நடத்தினுர்கள். தர்ம ஸ்தாபனங்களைப் பரிபாலனம் செய்கின்ற அதிகாரம் இவர்களிடந் தான் இருந்தது. நிலவுரிமை மாற்றங்களை (changes in tenure) மத்திய அரசாங்கம் ஒழுங்கு செய்தபோது அவ்வாணைகளை உடனடியாக இவ்வதிகாரிகளுக்குத்தான் ராஜேந்திரன் அனுப்பி வைத்தான்.

**3. பொருளாதார நிலை—நிலம், வரி :** நிலவுரிமை மாற்றம் என்பது தேவதான அனுபோக நிலங்களையோ, வேறு வகை அற நிலையச் சொத்துகளையோ ஆண்டு அனுபவிக்க உரிமை பெற்றவர்களிடமிருந்து வேறொரு நபருக்கு மாற்றிக் கொடுக்கும் முறைமை பற்றியது ஆகும். பிரம்மதேயங்கள் வெள்ளான் வகைக்கு மாறுகின்ற நிலவுடைமை மாற்றங்கள், நின்றிறை நிர்ணயித்தல் போன்ற வருவாய்த்துறைச் சீர்திருத்தங்கள்

போன்ற நில சம்பந்தப்பட்ட பல விவகாரங்கள் புதிய மாற்றங்களைச் சட்ட பூர்வமாகப் பெற ஆரம்பித்தன. இந்த வகையான மாற்றங்கள் குலோத்துங்கன் I காலத்தில்தான் ஸ்தாபன முறையில் செயல்பட்டன.

**4. நீதி நிர்வாகம்:** ராஜேந்திரன் II காலத்தில் அதிகாரிகள் வரி வசூலிப்பதில் அதிக கெடுபிடி காட்டினர்கள் என்று சொல்லலாம். ஓர் அதிகாரியின் வரிவசூல் கெடுபிடித் தொல்லை 'ஜாம்பை' என்ற தஞ்சைப்பகுதியின் கிராமத்தில் ஒரு பெண் விஷம் குடித்துத் தற்கொலை செய்துகொண்டாள். அவளுக்கு வரிபாக்கி இல்லை என அவளே மறுத்தும் இருக்கிருள் எனவும் கூறப்படுகிறது. அந்த அதிகாரிக்குத் தண்டனையாக 32 காசு அபராதம் விதிக்கப்பட்டு, அதற்கு நுந்தா விளக்கொன்று ஏற்றி வைக்க அவன் பணிக்கப்பட்டான் என 1057-ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது. சோழரின் அருளார்வ முறையிலான குற்றங்கடிதல் முறைமையின்படி அந்த அதிகாரி மற்றையோருக்கு வழங்கப் பெறும் தண்டனையையே தானும் பெற்ருன் என்பது ராஜேந்திரன் II காலத்திய நீதி நிர்வாகத்தின் நடுவு நிலைமையைக் காட்டுகிறது.

விற்படைத் தலைவன் ஒருவனை 'நாடாள்வான்' என்ற அரசியல் அதிகாரி கொலை செய்தான். அக் கொலையைச் செய்த குற்றவாளியை அருள்வழியில் தண்டிக்கிற முறையில் ராஜேந்திரன் II அக் குற்றவாளி 96 ஆடுகளைப் பக்கத்துக் கோவிலுக்கு வாங்கி விட வேண்டும் எனப் பணித்தான்; இதை நிறைவேற்றுகின்ற பொறுப்பை அக் குற்றவாளியின் கிராமத்திற்கு அளிக்கின்ற அளவில் அந்த ஆணையை அக் கிராமச் சபாவிற்கு அனுப்பி வைத்தான். சிவில் சட்டம் எனவும், இராணுவச் சட்டம் எனவும் பிரிவுகள் அக் காலத்தில் கிடையாதென்ருலும் கட்டுப்பாடு காணப்பட வேண்டிய இடமாகிய அரசாங்கத்தில் நாடாள்வான் என்ற அதிகாரி அரசின் இராணுவத் தளகர்த்தனைக் கொன்ற போது ராஜேந்திரன், மனுச்சோழன் போல உடனடியான முறையில் நீதி வழங்கி விடவில்லை; அக் கால வழக்கப்படி அரசாங்கத்தைச் சார்ந்த அந்த இருவர்கள் சம்பந்தப்பட்ட அவ் வழக்கில் தான் கண்ட முடிவைக் கிராமச் சபைக்குத் தெரிவித்தான். அம் மன்னனுடைய அறவுணர்ச்சி அக் கால நீதி வழங்கலுக்கு ஏற்ற அளவில் இயக்கம் பெற்று நாட்டின் தூய நிர்வாகத்திற்கு உறுதுணை செய்தது என்பது இந்த நிகழ்ச்சியிலிருந்து புலப்படும்.

**5. ஊழியர் குடியிருப்புகள் :** அரண்மனையில் பணி புரிந்த ஊழியர்களின் குடியிருப்பு 'வேளம்' என்றழைக்கப்பட்டது. இவர்களுக்கெனத் தனித்தனிக் குடியிருப்புகள் தஞ்சாவூர், கங்கா புரி போன்ற நகர்களில் கட்டிக் கொடுக்கப்பட்டிருந்தன. கங்கை கொண்ட சோழபுரம், கடைவீதிகள் நிறைந்த நகராகக் காட்சி யளித்தது எனத் தஞ்சை மாவட்டம் குத்தாலம் கல்வெட்டு கூறுகிறது.

**6. அரசியல் அதிகாரிகளும் அவர்தம் சமயப்பணிகளும் :** ராஜேந்திரன் II சமயப்பணிகளில் அவ்வளவாக ஈடுபாடு காட்ட வில்லை. அவனுடைய அரசியல் அதிகாரிகளில் இருவர் இவன் ஆணைப்படி திருப்பணிகள் புரிந்துள்ளனர். 'வேளக் கூத்தன் செம்பியன் மூவேந்த வேளாளன்' என்பவன் ராஜேந்திரன் II ஆணைப்படி, திருவாரூர்க் கோவில் கர்ப்பக்கிருகத்திற்குப் பொன் வேய்ந்து அர்த்தசுற்று மண்டபச் சுவர் எழுப்பினான்.

மலையமானாட்டைச் சோழ மத்திய அரசின்கீழ் ஆட்சி செய்த நரசிங்கவர்மன் என்ற குறுநில ஆட்சியாளன் திருக்கோவிலூரி லுள்ள திருமால் கோவிலைக் கற்றளியாக மாற்றினான் எனத் திருக் கோவிலூர்க் கல்வெட்டு கூறுகிறது. மிலாடுடையான் நரசிங்க வர்மன், ஜயமுரி நாடாள்வான், அணமுரி நாடாள்வான், தமிழ்ப் பேரரையன், வேளாளக் கூத்தன், உதியதிவாகரன் போன்றோரில் நரசிங்க வர்மனே குறுநில மன்னனாவான். இவனை இணை சேர்த்து மற்றையோர் அரசாங்க அதிகாரிகளாகப் பணி செய்து சிறந்தார்கள். சோழப் பேரரசு விரிவு கொண்டபோது, அரசாங்கக் காரியங்கள் எண்ணிக்கையிலும் செறிவிலும் வளர்ந்த நிலையில், இத்தகைய அரசாங்க அதிகாரிகளின் தொழில்வழி அரசாகச் (Technocracy) சோழர் அரசு மாறக்கூடிய அளவில் இவ் வகை அதிகாரிகளின் முக்கியத்துவம் காணப்பட்டது.

## III குடும்பம்

ராஜேந்திரன் II சோழனின் அரச குடும்பத்தினரில் சிறிய தந்தை ஒருவர், இளைய சகோதரர்கள் நால்வர், மக்கள் அறுவர், பேரர்கள் இருவர் காணப்பட்டனர். அவர்கள் அனைவரும் இவனது அரசியலிலும் முக்கியப்பங்கு பெற்று அரசாங்கப் பணி புரிந்தனர். சோழ பாண்டியன், சோழன் கேரளன், சோழ கங்கன் என்றளவில் அவர்கள் ஆண்ட பிராந்தியங்களோடு அமைந்த அவர்களுடைய பட்டங்கள்பற்றி முன்னர்க் குறிக்கப் பட்டது. இவனுக்குப் பின்பு அரச பதவியைப் பெற்றது இவனுடைய தம்பியரில் ஒருவனான வீரராஜேந்திரன் ஆவான்.

ராஜேந்திரனுக்குரிய மனைவியரில் கிழானடிகள், திரைலோக்கியம் உடையாள் ஆகியோரைப்பற்றி மட்டும் தெரிய வருகிறது. அவ்வளவே.

ராஜேந்திரனுடைய மகன் ராஜ மகேந்திரன். இவன் யுவ ராஜவாக இருந்த போதே திருவரங்கம் கோவில் அரங்கநாதர் பெருமானுக்குப் பொன், மணி ஆகியவை கொண்டு அரியணையை அமைத்தான். கோவில் திருச்சுற்றுப் பிரகாரம் அமைத்து ராஜ மகேந்திரன் திருவீதியை இவன் ஏற்படுத்தினன். இவன் காலத்தில் நிலத் தீர்வை சீர்திருத்தப்பணி கொல்லி மலை நாட்டில் மேற்கொள்ளப்பட்டதாகக் குலோத்துங்கன் I-ன் 1083ஆம் ஆண்டு சேலம் கல்வெட்டு கூறுகிறது.

## வீரராஜேந்திரன் (1063—1070)

சோழ மாமன்னர்களுக்குள் முழுமையான அளவில் போர்க் கோலந்தாங்கித் தன் வாழ்நாள் முழுவதையும் போர்வீரனுகவும் ராஜதந்திரியாகவும் போராடிக் கழித்தவன் வீரராஜேந்திர சோழன் ஆவான். இவன் 1063 கடைசித்தொடக்கம் ஆண்ட ஆறு ஆண்டுகளிலும் சாளுக்கியர், ஈழத்தவர், பாண்டியர், கேரளர், கடாரத்தவர் ஆகியவரோடு நேரடியாகவும், தனது படைகளை அனுப்பியும் போரிட்டுச் சோழரின் இராணுவ மயமான அரசியல் ஏகாதிபத்தியத்தின் உயர்வைப் பேணுகின்ற பணியில் இவன் சிறந்து விளங்கினன்; ஆனல் மற்றைய சோழப் பேரரசர் களைப் போலல்லாமல் தனது கடைசிக் காலத்தில் ராஜதந்திரத்தை இராணுவ முறையில் மேற்கொண்டான். இவன் எதிர்த்து நின்ற மேலைச்சாளுக்கிய மன்னனுன சோமேசுவரன் I ஆகவமல்லன் இவனைப் போல இராணுவத்திறன் கொண்டவன் அல்லன்; ஆனல் அரசியல், ராஜதந்திரம் கொண்டவன். மேலைச்சாளுக் கியரின் பிரதேசங்களைச் சோழர்களின் வல்லடிப்போர்கள் பேரிழப்புக்கு உட்படுத்திய காலத்தில் தன்னுடைய ராஜதந்திரம் மேலைச்சாளுக்கியரின் அரசியல் பிடிப்பை அது சார்ந்து நின்ற பகுதியில் குன்றிவிடாமல் ஆகவமல்லன் பார்த்துக்கொண்டான். அதற்கும் மேலாகச் சோழருக்குப் பாத்தியமான கங்கபாடி என்ற மைசூர்ப்பகுதியை அவன் கைப்பற்றக்கூடச் செய்தான். வேங்கி நாட்டில்தான் அவனுடைய ராஜதந்திரம் முழு வெற்றி பெற்றது. அந் நாடு அவனுடைய ஆதிக்கத்திற்கு உட்பட்டுப் போயிற்று. இவனை அரசியல் எதிரியாகப் பெற்ற வீரராஜேந்திரன் தானும் ராஜதந்திரத்தைப் பயன்படுத்த வேண்டிய அவசியத்தை உணர்ந்தான்; அதன்படி காலத்தே செயல்பட்டான்.

1068-ல் ஆகவமல்லன் இறந்த பின்பு முதலில் அவனுடைய மகன் சோமேசுவரன் II என்ற மூத்த மைந்தனைவிட ஆளுகைத் திறன் அதிகம் கொண்டவனும், ஆகவமல்லனின் அரசியல் புலமையின் நேரடி வாரிசானவனும் ஆகிய அவனுடைய இரண் டாவது புதல்வன் விக்கிரமாதித்தனோடு வீரராஜேந்திரன் அரசியல் உறவு கொண்டான். 1068ஆம் ஆண்டுக்குப் பின்பு ராஜதந்திரத்தில் இவன் பெற்ற வளர்ச்சியின் பெரும்பயனைச் சோழ அரசு நல்ல முறையில் துய்ப்பதற்கு முன்பு 1070ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இறந்துபட்டான். இன்னும் கொஞ்ச காலம் இவன் வாழ்ந்திருந்தால், சோழ வரலாற்றினுடைய போக்கின் தடம் மாறிப் போயிருக்கும். போர்களிலும், அப் போர்களின் பின்னணியில் உருவான ராஜதந்திரத்திலும், தன் வாழ்நாளைச் செலவிட்ட இம் மன்னனுடைய காலத்தில் அமைதியான ஆட்சிக் குரிய கலை நலமும், கோவிலறமும் வழக்கமான முறையில் பெரு வளர்ச்சி பெறவில்லை.

இராணுவ மனப்போக்கில் முதலிலிருந்து கடைசிவரை இவன் அரசாண்டு, அடுத்தடுத்துப் போர் செய்த வாழ்வு முறையை இவன் இவனுடைய தந்தையான கங்கைகொண்ட சோழன் என்ற ராஜேந்திரனிடமிருந்தும், தமையன்மார்களான ராஜாதி ராஜன், ராஜேந்திரன் II ஆகியோரிடமிருந்தும் கற்றுக்கொண் டான். அவன் வளர்ந்த விதம் அப்படி ; வாழ்ந்த முறையோ இராணுவப் பாசறைப் போக்கின்படி அமைந்தது. எனவே, கிரேக்கத்தில் காணப்பட்ட இராணுவத் தினவு நிறைந்த ஸ்பார்ட்டா என்ற நகரின் தலைவன் போல இராணுவத் தளகர்த் தனுகவே இவனுடைய அரசியல் வாழ்வின் தொடக்கமும் முடிவும் அமைந்தன. இவனுடைய மகன் அதிராஜேந்திரன் 1070-ல் அரச பதவி ஏற்ற சில மாதங்களில் இறந்து போனான். இவனுக்குப் பின்பு சாளுக்கியச் சோழன் குலோத்துங்கன் I சோழ மன்ன ஞகியதால், வீரராஜேந்திரனே விஜயாலயச் சோழ பரம்பரைக்கு உரிய கடைசி மாமன்னனாக விளங்கினான் என நாம் கொள்ள லாம்.

## I அயல் நாட்டுக் கொள்கை

தன் தமையன்மார்களான ராஜாதிராஜன், ராஜேந்திரன் II ஆகியோர் நடத்திய ஆதிக்கப் போர்களைத் தொடர்ந்து நடத்து வதில் வீரராஜேந்திரனுடைய வெளிநாட்டுக் கொள்கையின் ஏகாதிபத்தியச் சார்பு முழுமையாக வெளிப்பட்டது. மேலைச் சாளுக்கியரோடு வேங்கியைப் பொறுத்து இவன் எதிர்த்து நின்றது அவ்வளவாகப் பயனளிக்கவில்லை. இதன் காரணமாக

இவனுடைய வெளிநாட்டுக் கொள்கை தன்னுடைய குறிக்கோள்களைக் கைக்கொள்வதில் தோல்வி அடைந்தது எனக் கூறலாம். சோழருக்குப் போர்களில் வெற்றியும், சாளுக்கியருக்கு அப் போர்களினால் இழப்பின்மையும் என்ற முறையில் இவனுடைய வெளிநாட்டுக் கொள்கை தோற்றத்திலும் செயல்பாட்டிலும் பழுதுபட்டு உள்ளூர நசிவு பெற்றுக் காணப்பட்டது. இராணுவ வல்லாட்சியாளன் (military despot) என்ற முறையில் இவன் வேங்கியிலும், துங்கபத்திரைக் கரையிலும், ஈழத்திலும், தென்பாண்டிப் பகுதியிலும், கேரளத்திலும் தோற்றங்கொடுத்தான்; அந் நாடுகளினூடே கடைந்தெடுத்த ஏகாதிபத்திய வல்லரசு நெறியாளனாகப் படை நடத்தி வலிய வந்தான்.

**1. ராஜதந்திரப் புரட்சி (Diplomatic Revolution) :** வேங்கி நாட்டின் மன்னனாக விஜயாதித்தியன் தொடர்ந்து இருக்க, 1068 அளவில் இச் சோழன் அனுமதித்தது சோழரின் வழக்கமான வெளிநாட்டுக் கொள்கையில் ஏற்பட்ட ஒரு திருப்பம் ஆகும். இது எப்படி நிகழ்ந்தது? 1068ஆம் ஆண்டில் ஆகவமல்லன் இறந்த பின்பு மேலைச்சாளுக்கிய மன்னனான சோமேசுவரன் II அவனுடைய தம்பி விக்கிரமாதித்தனால் எதிர்க்கப்பட்டான். விக்கிரமாதித்தன் வேங்கி நாட்டைச் சோழப் பிரதேசமாக ஆக்குவதற்கு ஒப்புதல் அளித்தான். 1022-லிருந்து அரசாண்டு வந்த வேங்கி மன்னன் ராஜராஜ நரேந்திரன் 1061-ல் இறந்த பின்பு வேங்கி நாட்டின் அரச பதவியை விஜயாதித்தியன் தனக்குத் தக்க வைத்துக் கொண்டான். பின்பு சோழரின் ஆதிக்க மண்டலமாக (vassal state) வேங்கி ஆக்கப்பட்டது. இந்த ஏற்பாடுகளைச் செய்த விக்கிரமாதித்தன் விஜயாதித்தியனைச் சோழருக்குக் கட்டுப்பட்டவனாக நடக்குமாறு பணித்தான்.

தன் சகோதரர்களின் அலட்சியத்தால் வேங்கி நாட்டின் அரசியல், சோழ அரசின் பிடியிலிருந்து வழுக்கிச் சென்றுவிட்டது. இதை ஆற்றுமையோடு உணர்ந்து கனன்று நின்ற வீரராஜேந்திரன் மேற்சொல்லப்பட்ட ராஜதந்திர ஒப்பந்தத்தைப் பேராற்றலோடு வளர்ந்து வந்த விக்கிரமாதித்தனோடு செய்து கொண்டான். அதன்படி, இச் சோழன், விக்கிரமாதித்தனுடைய அண்ணனும், மேலைச்சாளுக்கிய மன்னனாக 1068-ல் பதவி ஏற்றுள்ளவனும் ஆகிய சோமேசுவரனை அவனுடைய தம்பி விக்கிரமாதித்தனுடைய தனிக் கோட்ட அரசியலை ஒப்புக்கொள்ள வைக்க வேண்டும்; அதற்காக அரசியல் முறையில் நிர்ப்பந்தப்படுத்த வேண்டும். மேலைச்சாளுக்கிய அரசாட்சிப் பகுதியை இரு கூறுக்கி, அவ்விரு சகோதரர்களும் அவற்றின் அதிபதிகளாகச் செயல்படுகின்ற திட்டத்தை வீர

ராஜேந்திரன் இந்த ராஜதந்திர ஒப்பந்தத்தின்படி ஒப்புக் கொண்டான். இதனுல் விக்கிரமாதித்தனுடைய ஆதிக்கப் பகுதி சோழ நாட்டின் வடமேற்குப் பகுதியிலுள்ள எல்லே நாடாகி விட்டது. இதன் விளேவாகச் சோழ மன்னன் தொடர்ந்து சாளுக்கியப் படையெடுப்பை மேற்கொள்ள வேண்டாதவாறு ராஜதந்திர உறவுக்குரிய இணக்கமான கூட்டாளியாக அண்டையிலுள்ள சாளுக்கிய நாடு மாறிக்கொண்டது. வேங்கியும் சாளுக்கியரின் நட்பும் கிடைத்த இச் சூழ்நிலேயில் சோழ நாட்டின் அரசியலேக் கவ்விப் பிணேத்திருந்த சாளுக்கியப் போர் என்ற அவலத் தொடர் சங்கிலி இவ்வாறு வீரராஜேந்திரனுல் உடைத்தெறியப்பட்டது. ஆனுல், இம் மாற்றம் சோழ வரலாற்றினுள் ஆழ உழப்பட்டுப் போவதற்கு முன்பு இச் சோழன் இறந்து படுகிருன்.

வேங்கியில் 1063-ல் அரச பதவியைப் பிடித்துக்கொண்ட விஜயாதித்தியனே தொடர்ந்து மன்னனுக இருக்க வேண்டும் என்பது முன் சொல்லப்பட்ட ராஜதந்திர ஒப்பந்தத்தின் தலேயாய ஏற்பாடு ஆகும். பாமுலவாகா செப்பேடும், ரியாலி செப்பேடும், மற்ற கிழக்கத்திய கங்கர்களின் கல்வெட்டுகளும் சொல்வது போல, குலோத்துங்கனே விஜயாதித்தியன் ஆரம்பக் காலம் முதல் எதிர்த்து வந்தான். வீரராஜேந்திரனுடைய தமையன் ராஜேந்திரன் II சோழனுடைய மகள் மதுராந்தகியின் கணவனும் சோழர்களின் நேரடி உறவினனுமான குலோத்துங்கனே ஆதரிக்காது விஜயாதித்தியனே ஆதரித்து அவனேயே வீர ராஜேந்திரன் வேங்கி நாட்டு மன்னனுக ஒப்புக் கொண்டது, சோழரின் வெளிநாட்டுக் கொள்கையில் ஏற்பட்ட அடிப்படையான ராஜதந்திரப் புரட்சியாகும். வேங்கி சோழ மண்டலமாக மாறி, அதன் பின்பு சோழரின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட நிலேயில் அதனே விஜயாதித்தியன் ஆளத் தலேப்பட்டது சோழருக்குச் சாதகமான நிலேதான். ஆனுலும், அது வெறும் அரசியல் மாற்றந்தான். குலோத்துங்கனே வீர ராஜேந்திரன் ஆதரிக்காது கைவிட்டு விட்டதை எந்த விளக்கத்தால் நியாயம் கற்பித்துப் பார்க்க முடியும் என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். ராஜேந்திரன் II சோழனுடைய மகளுடைய கணவன் குலோத்துங்கன். அச் சோழனுடைய தம்பி வீரராஜேந்திரன் தனது மகளே விக்கிரமாதித்தனுக்கு மணம் செய்து கொடுத்து, இந்த வகையில் ஏற்பட்ட ராஜ தந்திரப் புரட்சியின் உறவு நிலேகளுக்கு மனப்பூர்வமான நெருக்கத்தை ஏற்படுத்திக்கொண்டான். விக்கிரமாதித்தனுக்கு ஜென்மப்

பகைவனுன குலோத்துங்கனை வீரராஜேந்திரன் ஒதுக்கியது புது உறவுகளில் விளைந்து நின்ற நிர்ப்பந்தமான சூழலினுலா? இதுவும் ஆராய்ச்சிக்குரிய விஷயமாகும். கொங்கண நாட்டு மன்னன் ஜெயகேசி I என்ற விக்கிரமாதித்தனுடைய நண்பன் காஞ்சிக்கு வந்து வீரராஜேந்திரனிடம் தூது பேசி மேலைச்சாளுக்கியரில் விக்கிரமாதித்தனைச் சார்ந்தவர்களைச் சோழருக்குரிய கூட்டாளி களாக மாற்றினுன்.

வீரராஜேந்திரன் தன்னுடைய கருத்தின்படி உருவாக்கிய இந்த ராஜதந்திர ஏற்பாடுகள் தொடர்ந்து பயனளிக்கின்ற வகையில் அவன் வாழ்வு 1069-க்குப் பின்பும் நீடித்து நிற்கவில்லை. 1070ஆம் ஆண்டு தொடக்கத்தில் அவன் இறந்துபடாமல் இருந்திருந்தால், சோழ நாட்டின் வரலாறு ஆக்கப்பூர்வமான முறையில் மாறுதலடைந்து வளர்ச்சி பெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. இச் சோழனுக்குப் பின்பு சோழ அரச பதவி ஏற்ற அவனுடைய மகன் அதிராஜேந்திரனை அரச பதவியில் எதிர்ப்பின்றி நிலை நிறுத்த விக்கிரமாதித்தன் கங்காபுரிக்குப் படையுடன் வந்ததும், அதிராஜேந்திரன் குலோத்துங்கனுல் ஏற்படுத்தப்பட்ட அரசியல் கலகத்தில் உயிரிழந்து போன பின்பு சோழப் பேரரசனுக முடிசூட்டிக்கொண்ட குலோத்துங்கனேடு முரண்பட்டு நின்ற மேலைச்சாளுக்கியரின் போர்கள் தொடர்ந்து வந்ததும் பிற்கால நிகழ்ச்சிகள் ஆகும். இந்த நிகழ்ச்சிகளுக்கு வீரராஜேந்திரனுடைய வெளிநாட்டுக் கொள்கையே காரணமாக அமைந்தது. இத்தகைய ராஜதந்திர உறவு மாற்றங்களை அச் சோழன் கொண்டு வருவதற்கு முன்பு அவன் நிகழ்த்திய சோழர்—சாளுக்கியர் போராட்டங்களை இப்போது பார்க்கலாம்:

**2. சாளுக்கியப் போர் I—கூடல்சங்கமப் போர் (1063—64):** துங்கா என்ற நதியும் பத்திரா என்ற ஆறும் கூடுகின்ற கூடல் சங்கமம் என்ற மைசூர்ப்பகுதியில் இப் போர் நிகழ்ந்தது. திருநாம நல்லூர், கன்னியாகுமரி, திருவெண்காடு என்ற இடங்களிலுள்ள சோழர் கல்வெட்டுகளும் கலிங்கத்துப் பரணி, விக்கிரமச் சோழனுலா, ராஜராஜ சோழனுலா போன்ற இலக்கியங் களும் இப் போரினைப்பற்றி விவரித்துக் கூறுகின்றன. வடகடல் அனைய பெரும்படையை நடத்திச் சென்று மேலைச்சாளுக்கியரை வீரராஜேந்திரன் இப் போரில் வென்றுன். ஆகவமல்லனேடு இணை சேர்ந்து நின்ற மன்னர்களும் மற்றவர்களும் தோற்கடிக்கப் பட்டார்கள். கோசல நாட்டு மன்னன் சிங்கன் கண்டதுண்ட மாக வெட்டப்பட்டான். சாளுக்கியத் தளபதிகளான கேசவன்,

கேத்தரசன், மாராயன், போத்தரையன், இரேச்சயன் போன்ருேர் போரில் இறந்தனர். மதுவாணன் என்ற பிரதம தளபதி, விக்கிரமாதித்தன், அவன் தம்பி சயசிங்கன், அண்ணுபன், மன்னன் ஆகவமல்லன் ஆகியோர் போர்க்களம் விட்டு உயிர் தப்பி ஓடினர். ஆகவமல்லனின் மனைவியர், குடும்பக் கருவூலம், புஷ்பகம் என்ற பெண் யானை, சாளுக்கியனின் வராகக் கொடி, மகரத் தோரணம், போர் யானைக் கூட்டம், குதிரைகள், முரசங்கள் ஆகியவை வீரராஜேந்திரனுல் கைப்பற்றப் பட்டன.

3. **சாளுக்கியப் போர் II (1066):** சாளுக்கிய நாட்டிலுள்ள ஏதோ ஓர் ஆற்றின் பக்கம் இந்த இரண்டாவது போர் நிகழ்ந்தது. துங்கபத்திரை அல்லது கிருஷ்ணுவாக அந்த ஆறு இருந்திருக்கலாம். இப் போரிலும் வெற்றி பெற்ற வீர ராஜேந்திரன் சாளுக்கியரைச் சேர்ந்த ஏழு தளபதிகளைக் கொன்ருன். மல்லியண்ணன், வங்காரன், மஞ்சிப்பையன், வீமய்யன், பிரம்மதேவன், சத்தியண்ணன், அசோகையன் என்ற ஏழு தளபதிகளின் இறப்பு ஆகவமல்லனை உலுக்கிவிட்டது. இத் தளபதிகளோடு அவனைச் சார்ந்த குறுநில மன்னர்களான கங்கன், நுளம்பன், காடவர் கோன், வைதும்பராயன் போன்றவர் களும் சோழர் படையால் கொல்லப்பட்டார்கள். 1066ஆம் ஆண்டின் கடைசியில் நிகழ்ந்த இப் போரின் இழப்பைப் பொறுக்கமாட்டாத ஆகவமல்லன் வெஞ்சினத்தோடு மறு போருக்கு ஆயத்தமானுன். போருக்கான நாள் குறித்து ஓர் அழைப்பினை வீரராஜேந்திரனுக்குக் கங்காசேத்தன் என்பான்மூலம் ஆகவமல்லன் அனுப்பினுன். அந்த அழைப்பை ஏற்றுப் 'போருக்கு வராதவர் அரசர் அல்லர், புரட்டர் ஆவர்' என எழுதி அனுப்பிய ஆகவமல்லனை எதிர்க்கச் சோழன் துங்கபத்திரை பக்கம் காந்தை அல்லது கரந்தை என்னும் இடத்தில், போருக்குக் குறிக்கப்பட்டு இருந்த நாளுக்கும் மேலாக ஒரு மாதம் வரை, ஆகவ மல்லனுக் காகக் காத்திருந்தான். 'கரந்தையில் வல்லவர்கோனை வரவு காணுதவன்'—'சொல்லிய நாளின் மேலுமோர் திங்கள்' காத் திருந்தும் ஆகவமல்லன் போருக்கு வரவில்லை என்பதறிந்து இரட்டபாடி நோக்கித் தனது படைகளை நடத்திச் சென்ருன்.

4. **சாளுக்கியப் போர் III—இரட்டபாடிப் போர் (1067) :** இரட்டபாடி என்ற இடைத்துறை நாடான துங்கபத்திரை—கிருஷ்ணு இடைப்பகுதியைக் காத்து வந்த சாளுக்கியத் தலைவர் களான தேவநாதன், கித்தி, கேசி என்பார்கள் சோழர் படையிடம் தோற்ருர்கள். ஆளுக்கொரு திசை நோக்கி அவர்கள் ஓடி

ஒளிந்தார்கள். நகரங்களுக்குச் சோழர் படையினர் தீயிட்டுச் சென்றனர். துங்கபத்திரைக் கரையில் வெற்றித்தூண் நிறுவப் பட்டது. ஆகவமல்லனைப் போன்று ஓர் உருவம் செய்து, அதனுடைய மார்பில் ஒரு பலகையை வெற்றியாளனான வீர ராஜேந்திரன் தொங்கவிட்டான். அப் பலகையில் ஆகவ மல்லனும் அவனுடைய மைந்தர்களும் ஐந்துமுறை தோல்வி யுற்றதை அச் சோழ மன்னன் எழுதி வைத்தான். இவ்வாறு சாளுக்கியர் அவமானப்படுத்தப்பட்ட பின்பு வேங்கி நாட்டை நோக்கி வீரராஜேந்திரன் திரும்பினான். ஆகவமல்லனை விளித்து, அவனால் 'தாம் கொண்ட வேங்கை நன்னாடு—மீட்டுக் கொண்டவன் மீள்கிலங் கேட்டுநீ வல்லாளுகில் வந்து காக்கென்று சொல்லெனச் சொல்லிய' நிலையில் வீரராஜேந்திரன் வேங்கி நாட்டைக் கைப்பற்றச் சென்றான்.

**5. சாளுக்கியப் போர் IV—விஜயவாடாப் போர் (1068) :** விஜயவாடா அருகே வீரராஜேந்திரனுடைய வேங்கிப்படை எழுச்சியைத் தடுத்து நிறுத்த மேலைச்சாளுக்கியப் படைத் தலைவர்கள் வழி மறித்து நின்றார்கள். சனநாதன், ராசமையன், திப்பராசன் போன்ற அத் தளகர்த்தர்கள் இப் போரில் உயிரிழந் தார்கள். வேங்கி கைப்பற்றப்பட்டது. இதனோடு மகேந்திர மலையும் கலிங்கமும் சோழர் படையால் கைக்கொள்ளப்பட்டன. "வேங்கி நன்னாடு மீட்டுக்கொண்டு தன் பூங்கழற் கடைக்கலம் புகுந்த படைக்கலத் தடக்கை விஜயாதித்தியன் அருளி"—என் றளவில் 'திருவளர் திரள்புயத் திருநில வலயஞ்' என்ற முதலடி கொண்ட மெய்க்கீர்த்தி சொல்லுவது போல, வீரராஜேந்திரன் தான் வென்றடிப்படுத்திய வேங்கி நாட்டைக் குலோத்துங்கனு டைய சிற்றப்பாவான விஜயாதித்தியனுக்கு அளித்தான். விக்கிர மாதித்தனுடைய செல்வாக்கின்கீழிருந்த கொண்கண நாட்டு மன்னன் ஜெயகேசி I காஞ்சிபுரம் வந்து வீரராஜேந்திரனிடம் பேசி முடித்தபடி விஜயாதித்தியனுடைய அரசுரிமையைச் சோழ மன்னன் ஒப்புக்கொண்டான். இவ்வாறு நடைபெற்ற அரசியல் ராஜதந்திர உறவு மாற்றங்களுக்கு முன்பு மேலைச்சாளுக்கியரோடு ஒரு பெரும்போர் நிகழ்ந்தது. இப் போரில் பெற்ற தோல்வியும் இப்படிப்பட்ட போர்களை நடத்தியதால், சோழருக்கு ஏற்பட்ட அயர்வுதான் இத்தகைய ராஜதந்திரப் புரட்சிக்கு அடிப்படைக் காரணம் எனச் சொல்லலாம்.

**6. சாளுக்கியப் போர் V (1068) :** 1068-ல் சோமேசுவரன் II மன்னனை பின்பு அவன் நல்வழியில் செல்லாமையாலும் குடிகளை மதித்து நடக்காமையாலும் தனக்குரிய மதிப்பை இழந்த

நிலையில், அவன் தம்பி விக்கிரமாதித்தனும் மற்றோர் இளைய தம்பி ஜெயசிம்மனும் மன்னனை விட்டுப் பிரிந்து கல்யாணி நகரம் நீங்கி வனவாசி என்ற பகுதிக்குச் சென்று விட்டனர். மேலைச் சாளுக்கியருக்குள் இவ்விதம் பிளவு ஏற்பட்டது.) முடிசூட்டு வைபவத்தில் அணிந்த காந்திகை என்ற ஆபரணத்தைச் சோமேசுவரன் அவிழ்க்கும் முன்பே சோழரின் படை மேலைச் சாளுக்கியரின் கம்பிலி நகரத்தைக் கைப்பற்றி, அதை எரித்து அழித்தது. கரடிக்கல் என்ற ரெய்ச்சூர் மாவட்டக் கிராமத்தில் வெற்றித்தூணை வீரராஜேந்திரன் நிறுவினான். இந்த இராணுவ வெற்றியை அடுத்து விக்கிரமாதித்தனுக்குப் பாதி அளவு ராஜ்யம் அளித்து யுவராஜா அந்தஸ்தில் அவனை ஏற்றுக் கொள்ளுமாறு, சோமேசுவரனை அச் சோழன் நிர்ப்பந்தப் படுத்தினான். இத்தகைய இராணுவ நிர்ப்பந்தச் சூழ்நிலையில் (military duress) விக்கிரமாதித்தனுக்குச் சார்பான அளவில் மேலைச்சாளுக்கியரின் அரசியலைப் பதனப்படுத்திய வீரராஜேந்திரன் விக்கிரமாதித்தனுக்குத் தன்னுடைய மகளை மணம் முடித்து வைத்தான். பில்கணனின் விக்கிரமங்கதேவ சரிதத்தைத் தவிர வேறு எந்த ஆதாரமும் இத் திருமணத்தைப்பற்றிக் காணக் கிடைக்கவில்லை. பிற்காலத்தில் ஒட்டக்கூத்தரின் தக்கயாகப் பரணி வீரராஜேந்திரன் சோமேசுவரன் என்ற பிரட்டனிடமிருந்து சாளுக்கிய ராஜாங்கத்தைப் பிடுங்கி விக்கிரமாதித்தன் என்ற இரட்டனிடம் (இரட்டபாடியினன்) வழங்கியதாகக் கூறுகிறது.

மேலைச்சாளுக்கியரோடு நடத்தப்பட்ட ஓயாத போர்களும் அவற்றினால் உண்டான வெறுமையான இராணுவக் கீர்த்தியும் சோழரின் மனப்போக்கில் காலமெல்லாம் தைத்து நிற்கவில்லை. அவற்றைப்பற்றிய ஐயப்பாடும் அயர்வும் சோழரின் மனதில் தோன்றி இருக்க வேண்டும். இந்த நிலையில்தான் வீரராஜேந்திரன் ராஜீய உறவுகளில் மாற்றங்கொண்டு வந்தான். இதனுடைய முத்தாய்ப்பாகத்தான் 1070-ல் சோழ மன்னனாக வந்த குலோத்துங்கன் ஈழத்தைத் தனது ஆட்சித் தொடக்கத்திலும், வேங்கியை 1118ஆம் ஆண்டளவிலும் தனது கைநழுவிச் சென்றுவிட்ட பகுதிகள் என்றளவில் அமைதி கொண்டான். ஏகாதிபத்திய உணர்வோடு அவற்றை வலிந்து பிடித்துச் சோழரின் இராணுவப் பிணைப்புக்குள் அழுத்தி வைக்க அவன் முற்படவில்லை. சோழப் பேரரசுத் தத்துவம் (idea of imperialism) இந்த அளவிற்குத் தன்னுடைய இராணுவச் சார்பை இழந்து, உள்நாட்டுப் பணிகளைச் சிறக்கச் செய்கின்ற ஆக்கப் பூர்வமான அரசியலை மேம்படுத்துகின்ற ஒரு வகை உள்துறை மேலாண்மையாகக் குலோத்துங்கன் காலத்தில் மட்டும் பரிணமங்கொண்டது.

இவ்வாறு வீரராஜேந்திரனுடைய அரசியல் ஏற்பாடுகளின் உட் கருத்தை நல்ல முறையில் புரிந்துகொண்டவன் அவனால் புறக் கணிக்கப்பட்டதாகக் கொள்ளப்பட வேண்டிய குலோத்துங்கனே என்பது வரலாற்றுப் புதிராகத்தான் தென்படுகிறது.

இத்தகைய முறையில் சோழப் பேரரசின் இலட்சியமும், இலக்குகளும் மாறிப் போகின்ற அடிப்படை மாற்றத்தைக் கொண்டு வந்தவன் குலோத்துங்கன் I தான் என்றாலும், அதற் குரிய மனப்போக்கைக் கருக்கூட்டி வளர்த்த சிறப்பு வீரராஜேந் திரனைத்தான் சாரும். வெறும் இராணுவ வீரனாக விளங்கிய அவன் இராணுவ வெற்றிகளின் வெறுமையை உணர்ந்த அளவில் ராஜதந்திரத்திற்கு மாறி நின்றபோது சோழப் பேரரசின் வல்லடித் தனமான தோற்றத்திலும் செயல்பாட்டிலும் உள்மாற்றம் நிகழக் கூடிய கருத்து வந்து உறையத் தொடங்கியதைக் காணலாம். இவ்வாறு ராஜராஜனுடைய காலம் முதல் பின்பற்றப்பட்ட சோழப் பேரரசுத் தத்துவத்தின் அடிப்படைகளை மாற்றி அமைக்கின்ற வரையில் சோழரின் ஜென்மப் பகைவர்களான மேலைச்சாளுக்கிய ரோடு ராஜதந்திர உறவுகளை உருவாக்கிக்கொண்ட வீரராஜேந் திரனுடைய கடைசி சாளுக்கியப் போர் ராஜதந்திர மாற்றத்திற்கு உதவக்கூடிய அனுசரணைப் போர் (catalystic war) என அமைந்தது. பாரம்பரியமாக நடந்து வந்த சாம்ராஜ்யத் தினவுடன்கூடிய வல்லடிப்போர்களினின்றும் அப் போர் மாறு பட்டுக் காணப்பட்டது.

வீரராஜேந்திரனுக்குப் பின்பு சோழ அரச பதவிக்கு வந்த குலோத்துங்கன் I காலத்தில் விக்கிரமாதித்தன் சோழரோடு போர் புரிகின்ற அரசியல் மாற்றம் ஏன் ஏற்பட்டது ? அப் போர் ஒரு வகையில் ‘ குலோத்துங்கன், விக்கிரமாதித்தன்’ என்ற மாமனிதர் களின் மோதலில் (clash of personalities) ஏற்பட்டதுதான். 1069-ல் வீரராஜேந்திரன் இறந்த பின்பு, அவனுடைய மகன் அதிராஜேந்திரன் 1070-ல் இறந்துபட, 1068-ல் ஏற்பட்ட இந்த ராஜதந்திரப் புரட்சி கனிந்து தன்னுடைய முழுப் பயனை வழங்குவதற்கு முன்பே செல்லாக் காசாகி விட்டது. இந்த நிலையில் இத்தகைய குறுகிய காலப் பயனைக் கொடுத்த அரசியல் புரட்சிக்காக ஏற்பட்ட இந்த ஐந்தாம் சாளுக்கியப் போர் வரலாற் றளவில் முக்கியமானதுதான் என்றாலும், பயன்பாடு என்றளவில் தானாகவே வீணாகிப் போன சோழரின் முயற்சி என்றுதான் அமையும்.

**7. சிறப்புக் குறிப்புகள் :** மேலைச்சாளுக்கியரின் மேலைக் கடல் நோக்கிய படை விலக்கல் என்ற செய்தியையும் இங்கே

ஆராய வேண்டும். சோழர்களின் படையெடுப்புக் காலத்தில் மேலைச்சாளுக்கியரின் படை விக்கிரமாதித்தனுல் வழி நடத்தப் பட்டு மேலைக்கடல் பக்கம் சென்றது. சோழரின் கல்வெட்டு களில் இத்தகைய படை விலக்கல் மேலைச்சாளுக்கியரின் அச்சத் திற்கு உரியதாகச் சித்தரிக்கின்றன. ஆகவமல்லன் இராணுவ தந்திரத்தில் கைதேர்ந்தவன் என்பது முன்னுல் குறிப்பிடப் பட்டது. இந்தப் படை விலக்கல் நிகழ்ச்சியிலும் அவனுடைய இராணுவ ராஜதந்திரமே செயல்பட்டது எனவும், சோழரைப் போரில் சந்திக்க வருக என முடங்கல் அனுப்பி வடமேற்கு நோக்கிச் சோழர் படைகளை இழுத்து வைத்துக்கொண்டு அதே நேரம் மேற்குக் கடல் பகுதியின் வழியாகத் தெற்காகக் கீழிறங்கிச் சோழ நாட்டை மேற்குப் புறத்திலிருந்து கைப்பற்றப் போடப் பட்ட படைத் திட்டம் அது எனவும் டாக்டர் வெங்கட்டரமணய்யா கருதுகிருர். இத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குத்தான் விக்கிரமாதித்தன் மேல்கடல் பக்கம் படையோடு ஒதுங்கிச் சென்ருன். ஆகவேதான், கரந்தையில் வீரராஜேந்திரனைச் சந்தித்துப் போரிட ஆகவமல்லன் வரவில்லை என்பது ஆராய்ச்சிக் கருத்து. சொல்லி அனுப்பியபடி போருக்கு வராத ஆகவமல்லனைப் போன்று உருவஞ்செய்து அவமானப்படுத்திய தேதி 10, செப்டெம்பர் 1067. இப்போதுதான் மேலைக்கடல் பக்கம் சாளுக்கியரின் படை சென்றிருக்க வேண்டும்.

1068-ல் மார்ச்சு மாதம் 29ஆம் தேதி ஆகவமல்லன் இறக்கிருன். பல நாள்களாகத் தீராத நோய்வாய்ப்பட்டு அவன் கடைசியில் (ஜலசமாதியை) அடைந்தான். பிரம்மயோகம் என்றழைக்கப்பெறுகின்ற விரத முறையில் துங்கபத்திரையில் குருவாட்டி என்னுமிடத்தில் தானகவே தன்னை மூழ்கடித்துக் கொண்டு அவன் தன் வாழ்வை முடித்துக்கொண்டான் என்று விக்கிரமாதித்தனுடைய நட்புரிமைப் புலவன் பில்கணன் இயற்றிய 'விக்கிரமங்க தேவ சரிதம்' கூறுகிறது. இவன் இறந்த செய்தி சக்கரக்கோட்டம், வேங்கி நாடுகளில் திக்விஜயம் செய்து கிருஷ்ண நதிக்கரையில் பாடி இறங்கி இருந்த விக்கிரமா தித்தனுக்குத் தெரிய வந்தபோது, கீழைச்சாளுக்கியப் பகுதியில் மேலைச்சாளுக்கியரின் ஆதிக்கம் நிலவிவிட்டிருந்தது. இந் நிலையில்தான் வேங்கிநாடு சோழ மண்டலமாக மேலைச்சாளுக் கியரால் ஒப்புக்கொள்ளப்பட்டு, அவர்களுக்கு அரசியல் கூட்டாளி யாக விளங்கிய விஜயாதித்தனை வேங்கி நாட்டு மன்னனுக வீரராஜேந்திரன் ஒப்புக்கொண்டான். ஆகவே, வீரராஜேந்திர னுடைய ராஜதந்திரப் புரட்சி இராணுவ முறையில் அவனுக்குரிய வெற்றியைத்தான் கொண்டு வந்தது. மேலைச்சாளுக்கியரின்

ஆதிக்கத்திலிருந்து வேங்கியை விடுவித்து, தன்பக்கம் கொண்டு வந்தது அவனுடைய ராஜதந்திரத்தின் சிறப்பான சாதனை எனக் கொள்ளல் வேண்டும்.

**8. ஆதிக்கப் போர்கள் (1065):** கருவூர்க் கல்வெட்டு கூறுவது போல 1065-ல் கடப்பை நாட்டரசன் பொத்தப்பி என்பவனையும், கேரளனையும், வட இந்திய நாடான தாரா என்பதன் அரசன் ஜனநாதனுடைய தம்பியையும், பாண்டியன் ஸ்ரீ வல்லபனின் மகன் வீரகேசரியையும் வீரராஜேந்திரன் போரில் வென்று கொன்ருன். இந்த அரசர்கள் யாவரும் அச் சோழனுடைய ஆதிக்கத்தை முதலாவது ஒப்புக்கொண்டு, பின்பு சுயேச்சை பெறுகின்ற முறையில் நடந்துகொண்டதால், அத்தகைய அழிவைப் பெற்ருர்கள் என்பது தெளிவான விஷயம்.

**9. கேரளப் போர் (1066):** 1058-ல் கித்தி என்ற சிங்கள இளவரசன் தனது பதினேழாவது வயதில் ரோகண நாட்டை மீட்டு விஜயபாகு என்ற பட்டத்தோடு அரசாளத் தொடங்கினுன். ஈழத்தின் முழுமையான அரசியல் விடுதலைக்கு வேண்டிய ஏற்பாடுகளை விஜயபாகு செய்து வருகின்ற செய்தி தனக்கு எட்டியவுடன் வீரராஜேந்திரன் தனது படைத்தலைவனை ஈழத்தின் புலத்தி நகரத்திற்கு அனுப்பி வைத்தான் என மகாவம்சம் கூறுகின்றது. ரமன்ன தேசம் என்ற பர்மா நாட்டு மன்னனுக்கு ஆள்களையும் விலையுயர்ந்த பொருள்களையும் அனுப்பிய விஜயபாகு பர்மியரிடமிருந்து சூடம், சந்தன மரம் போன்ற பொருள்களைக் கப்பல்களின்மூலம் தருவித்தான்; அவற்றைத் தன்னுடைய படைகளுக்குக் கொடுத்தான். இவ்வாறு அப் படைகளின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்த நிலையில் ஈழத்தை விடுவிக்கும் முயற்சியில் அவன் ஈடுபடத் தொடங்கினுன்.

வட இலங்கையில் சோழருக்கு அடங்கி இருந்த ராஜரத்தா என்ற நகரத்தில் சோழரின் ஆதிக்கத்தை எதிர்த்து ஏற்பட்ட கிளர்ச்சிக்கு விஜயபாகு ஆதரவு அளித்தான். இதனை அடக்கச் சோழ மன்னன் பெரும்படை ஒன்றை அனுப்பினுன். இப் படை மகாதித்தாவில் இறங்கியது; ராஜரத்தாவை வென்றது. பின்பு ரோகணத்தில் புகுந்து விஜயபாகுவின் எதிரிகளோடு அப் படை சேர்ந்துகொண்டது. ஈழ மன்னன் போரில் தோற்ரேடினுன். அவனுடைய மனைவி சிறைப் பிடிக்கப்பட்டாள். இதனைக் கூறுகின்ற 1067ஆம் ஆண்டுக்குரிய சோழக் கல்வெட்டு ஈழ முழுமையையும் சோழர் படை கைப்பற்றியது எனவும் சொல்லுகிறது. ஆனுல், இனி வரும் நான்கு ஆண்டுகளில் ஈழத்தைச்

சோழரின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கின்ற அளவிற்கு விஜய பாகு வலிமை பெற்றிருந்தான். ரோகண நாட்டை விஜயபாகு இழந்திருந்தால், இது நடந்தேறி இருக்க முடியாது. ஆகவே, அனைத்து ஈழமும் சோழரின் அடி பணிந்து விடவில்லை என்பது புலப்படும்.

**10. கடாரப் போர் (1068) :** வீரராஜேந்திரனுடைய ஏழாவது ஆண்டு (1068) கல்வெட்டு (175 of 1894) கூறுவது போல, அச் சோழன் கடாரம் என்ற பொதுப் பெயரிட்டு அழைக்கப் பெற்ற ஸ்ரீவிஜய நாட்டுக்கு அந் நாட்டிலிருந்து சோழ நாட்டுக்கு நேரடியாக வந்து உதவி கேட்டு நின்ற அந் நாட்டு மன்னன் ஒருவனின் வேண்டுதலின்படி, சோழர்படை ஒன்றை அனுப்பி வைத்தான். இப் படை அந் நாட்டை வென்று சோழ நாடு வந்த அந் நாட்டு மன்னனுக்கு அளித்துவிட்டுத் திரும்பி வந்ததாக 'வீரமே துணையாகவும்' என்று தொடங்கும் சிறிய மெய்க்கீர்த்தி கூறுகிறது. சோழ நாட்டுக்கு இராணுவ உதவி இறைஞ்சி வந்த கடாரத்தரசன் யார் என்பதுவும், அவனுக்குரிய அரசுரிமையைப் பறித்தவர் யாவர் என்பதுவும் இன்னும் தெளிவாகவில்லை. 1025-ல் ஏற்பட்ட கடாரப்படையெழுச்சி வீரராஜேந்திரனின் தந்தையான ராஜேந்திரன் I காலத்தில் ஏற்பட்ட பின்பு 43 ஆண்டுகள் கழித்து, 'தன் கழலடைந்த மன்னருக்குக் கடாரம் எறிந்து கொடுத்தருளினன்' என்றளவில் வீரராஜேந்திரனுடைய கடல் கடந்த இப் படையெழுச்சி நிகழ்ந்தது. இதன் பின்பு இத் தகைய முறையில் சோழர் படை கடாரத்திற்குச் சென்றதில்லை. வீரராஜேந்திரன் அனுப்பிய படையில் 1070-ல் சோழ மன்னனை குலோத்துங்கன் என்ற ராஜேந்திரனும் சென்றான் எனக் கலிங்கத்துப் பரணியின் ஆறுவது பாடல் கூறுவது ஆராய்ச்சிக் குரிய விஷயம் ஆகும்.

## II உள்நாடு

'வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்' கொண்டு ஆண்ட வீரராஜேந்திரனுடைய காலத்தில் உள்நாட்டு அரசாட்சி முறையில் அடிப்படையான மாறுதல்கள் நிகழவில்லை. பேரரசுக்கான வல்லடிப்போர்களை ராஜதந்திரப் புரட்சி தொடங்கிய 1068ஆம் ஆண்டுக் காலம் வரை இவன் நிகழ்த்தினன். வேங்கி நாட்டுப் படையெடுப்புக்காக வரிகூட (levy) இவன் வசூலிக்கும் அளவிற்குப் போரார்வம் இவனை உந்திக் கொண்டிருந்தது. ஆகவே, அடிப்படையான சீர்திருத்தங்களை இவன் உள்ளாட்சித் துறையில் கொண்டு வருகின்ற சூழ்நிலை இவனுடைய ஆட்சிக்காலத்தில் உருவாகவில்லை.

மேலும் ராஜராஜன் காலந்தொட்டு ஏற்பட்டுப்போன அரசியல் ஒழுகலாறு தன்னளவில் தானுகவே இயக்கம் பெற்றது. பஞ்சம் போன்ற அவலங்கள் நிகழாத ஆட்சிக் காலத்தின் பெருமை இவனைச் சாரும். தன்மபாலன், மூவேந்த வேளான், விழுப்பரையன், வீரராஜேந்திர பிரமாதிராஜன், வாணவன் பல்லவரையன், நங்கை மகன் சிவலோகநாதன் என்ற அரசியல் அதிகாரிகளின் அரச பற்றுதலோடுகூடிய அயராத உழைப்பு வீர ராஜேந்திரனுடைய ஆட்சியின் சிறப்புக்கு அடிப்படைக் காரண மாக அமைந்தது எனலாம். இவனுடைய தமையன் ஆளவந்தான் என்பவனும் சுந்தரச் சோழன் என்பவனும் அரசப் பிரதிநிதிகளாகப் பேரரசுப் பகுதிகளை நிர்வாகஞ்செய்தனர் என்ற செய்தியிலிருந்து அரச குடும்பத்தாரின் ஒத்துழைப்பும் வீரராஜேந்திரனுடைய உள்நாட்டு அரசியலுக்கு உறுதுணை செய்தது என்பது புலப்படுகிறது.

**1. பொருளாதார நிலை—நிலம், வரி:** 1067ஆம் ஆண்டு திருமுக்கூடல் கல்வெட்டு அவ்வூரிலுள்ள விஷ்ணு கோவி லுக்கான வரவு செலவுத் திட்ட அறிக்கையைப்பற்றிக் கூறு கிறது. அக் கோவிலுக்கு வருகின்ற வருவாய் வகைகளைப்பற்றிக் கூறி, அதன் செலவினங்களையும் அக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. திட்டமிட்ட வரவு செலவு (பட்ஜெட்) முறையில் கோவில்களும் ஊராட்சி மன்றங்களைப் போல நிர்வாகம் செய்யப்பட்டன என்பது சிறப்புச் செய்தியாகும். இக் கோவிலின் வருவாய் கொண்டு ஒரு வேதக் கல்லூரியும், மருத்துவமனை ஒன்றும் பொருளாதாரப் பற்றுக்குறை இன்றிச் சிறப்புடன் செயல்பட்டன. இத்தகைய பொதுநலப் பணிகளை அரசாங்கம் மட்டுமல்லாது கோவில் போன்ற தனி நிறுவனங்களும் ஏற்று நடத்தின என்பது வீரராஜேந்திரன் காலத்துக்குரிய சிறப்புச் செய்தி என்றில்லா விட்டாலும் படை நடத்திப் பெருமிதங்கொண்ட அச் சோழன் ஆட்சியில் கலையும், கல்வியும் வளர வேண்டிய சூழ்நிலையைத் தனியார்வ ஸ்தாபனங்கள் உருவாக்கி மக்கள் நலம் பேணின என்பது குறிப்பிடத் தக்கது.

வீரராஜேந்திரனுடைய 1066ஆம் ஆண்டுக் கல்வெட்டின்படி 'தாலூகா' என்ற அமைப்புக்குரிய 'நாடு'களிலுள்ள கிராமங் களில் வசூலான சிறு வரிகளின் வருவாயினைத் திருவெண்காட்டுக் கோவிலின் நிர்வாகச் செலவுகளை எதிர்கொள்வதற்காக அக் கோவிலுக்கென ஒதுக்கித் தரப்பட்டது. 'கீழ் இறைபாட்டம்' என்ற சிறு வரிகளின் வகையைச் சேர்ந்த மீன் பாட்டம், தட்டார் பாட்டம், இடங்கை-வலங்கை மகமை, திங்கள் மோகம் என்ற

வரிகள் (cesses) வசூலிக்கப்பட்டு அக் கோவிலுக்குத் தரப்பட்டன. அக் கோவிலின் திருவிழாச் செலவு, அரசனின் பிறந்த நாள் விழாச் செலவுகள் போன்றவை இத் தொகையிணைக் கொண்டு அக் கோவிலால் மேற்கொள்ளப்பட்டன. இதே போன்று செங்கல்பட்டு மாவட்டம் அச்சரப்பாக்கம் கோவிலுக்கும் அப் பிராந்தியத்தில் வசூலிக்கப்பட்ட வரியின்மூலம் நிதி ஒதுக்கப் பட்டதாக 1069ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது.

இவ்வாறு கோவிலின் வருமானமும் பொது வரிகளினாலான வருவாய் நிதியிலிருந்து கோவிலுக்குச் சென்றடைந்த வரிநிதி ஒதுக்கீடும் மக்களுக்குரிய நலன்களைப் பேணுவதில் செலவிடப் பட்டன. இவ்வாறு கோவில்கள் ஆக்கப் பூர்வமான பொதுநலப் பணிகளில் ஈடுபடுகின்ற வகையில் அறவுணர்வுடன் செயல் பட்டன. நாட்டின் பொருளாதாரத்தில் இக் கோவில்கள் நேரடி யாகப் பங்கு பெற்றிருந்ததை வீரராஜேந்திரனுடைய உள்ளாட்சி முறைமையின் மேம்பாடுகளில் தலையாயதாக நாம் கொள்ளல் வேண்டும்.

இவன் காலத்தில் தேவதான, பிரம்மதேய நிலங்கள் செறிவாக்கப்பட்டு, ராஜேந்திர சோழநல்லூர் என்ற புதிய ஊர் ஏற்படுத்தப்பட்டது. அவ்வூர் செலுத்த வேண்டிய வரி நிரந்தர மான அளவில் ஒரு குறிப்பிட்ட தொகையாக அமைகின்ற 'நின்றிறை' என்றளவில் வரிவிதிப்பும் தீர்மானிக்கப்பட்டது. திருத்தக்க ஈஸ்வரம் என்ற கோவிலுக்கு 2000 கலம் நெல் நின்றிறையாக அவ்வூர் செலுத்த வேண்டும் என முடிவெடுக்கப் பட்டது. மத்திய அரசின் கண்காணிப்பில் நிகழ்ந்த இந்த நிர்வாகத்திற்குச் சான்றாக, பாண்டிச்சேரி பக்கமுள்ள பாகூர் என்ற கிராமத்தின் வரி வசூலிக்கும் பொறுப்பிணைக் 'காணி' என்ற உரிமை பெற்ற வேளாளர் என்போர் ஏற்றிருந்ததைச் சொல்லலாம்.

**2. படை வரி (War Levy) :** வீரராஜேந்திரன் வேங்கி நாட் மீது படையெடுத்த போது படை நடத்தும் செலவுகளுக்குப் ர் நிதி தேவைப்பட்டது. ஒரு வேலி விளைநிலத்திற்கு ஒரு ;சு பொன் வீதம் தனிப்பட்ட வரி விதித்து, போருக்கான பிணை அவன் திரட்டிக்கொண்டான் எனத் தஞ்சை மாவட்டம் ங்குடிக் கல்வெட்டு கூறுகிறது. இராணுவ வெற்றிகளை ஈட்டித் ன்ற வெளிநாட்டுக் கொள்கையை வெற்றி உடையதாக க மக்கள் வரிப்பணம் கட்ட வேண்டிய நிகழ்ச்சி சோழ ற்றில் அசாதாரணமாக ஏற்படக்கூடியது ஆகும். பாண்டிய

நாட்டுப் படையெடுப்புக்கு முன்னுளைய பராந்தகன் I சோழன் காலத்தில் இவ்வாறு படைக்காசு வாங்கப்பட்டது. சோழ வரலாற்றில் வீரராஜேந்திரன் காலத்தில் இவ் வரி இரண்டாவது முறையாக வாங்கப்பட்டது. படையெடுப்புக்கு மக்களிடம் பணம் கேட்பது சோழ நாட்டரசியலுக்கு உரியதாகக் கொள்ள முடியாது. திருமுக்கூடல் கல்வெட்டு கூறுவது போல, 1 கழஞ்சு பொன் 16 கலம் நெல்லுக்குச் சமமான அளவை நிலவிய அக் காலத்தில் போர்வரி மக்களைப் பெருமளவிற்குப் பாதித்திருக்க முடியாது. என்ருலும். வல்லடிப்போர்களால் பொருள் வரவு என்பது போய்ச் சோழர் தரப்பில் பொருள் செலவு என்றளவில் வெளிநாட்டுக் கொள்கையில் விரிசல் கண்டுவிட்டதை இந்தப் படைக்காசு வரி இனங்காட்டியது எனலாம்.

**3. கல்வி, இலக்கியம் :** தஞ்சைப் பகுதி பொன்பற்றி என்ற நகரின் சிற்றரசன் புத்தமித்திரன் ஆவான்; வீரராஜேந்திரனிடம் பற்று கொண்டவன் ; அம் மன்னனுல் பாராட்டப்பட்டவன். அரசனுடைய விருப்பப்படியே மொழியியல் மரபுக்குரிய ஐந்திலக்கண வகையைச் சார்ந்த அளவில் காணப்பட்ட 'வீரசோழியம்' என்ற இலக்கண நூலைச் சமஸ்கிருத மொழியியலின் நலங்களைப் பெய்து புத்தமித்திரர் இயற்றினுர். இந் நூலுக்கு ஆட்சியிலிருந்த சோழ மன்னனின் பெயர் அமைந்தது. இவ்வாறு அமைந்த வீரசோழியத்திற்கு உரை எழுதிய பெருந்தேவனுர் புத்தமித்திரரின் மாணுக்கர் ஆவார். வீரராஜேந்திரன் ஒரு சிறந்த தமிழ்ப் புலவன் என இவர் அறிமுகப்படுத்துகிருர். 'வெண் குடைச் செம்பியன் வீரராஜேந்திரன்—நாவியல் செந்தமிழ்ச் சொல்' என வீரசோழியம், சந்திப்படலம் ஏழாம் பாடல் பாராட்டிக் கூறுகிறது.

**4. கங்கை கொண்ட சோழபுரம் அரண்மனை :** கங்காபுரியில் வீரராஜேந்திரன் 'சோழ கேரளன் மாளிகை' என்ற புதிய அரண்மனையை எழுப்பியதாக 1068ஆம் ஆண்டுக் கல்வெட் கூறுகிறது. இந்த அரண்மனையின் உள்ளே 'ராஜேந்திர சே மாவலி வாணராயன்' என்ற சிம்மாசனத்தை வீரராஜேந்தி அமைத்தான்.

**5. சமய நிலை :** தில்லை நடராஜனுடைய மகுடத்திற் 'திரைலோக்கியாசாரம்' என்ற மாணிக்கக் கல் ஒன்றை ராஜேந்திரன் நன்கொடையாக வழங்கினுன். சோழ நாடு, து நாடு, பாண்டிய நாடு, கங்கபாடி போன்ற இடங்களில் பி தேயங்களை ஏற்படுத்தி, அவற்றை வேதக் கல்வியில் விற்பன

களாக இருந்த 40,000 அந்தணர்களுக்கு இவன் அளித்தான். இந்த முறையில் சோழர் காலத்திய தானம்மூலம் சமயச் சேவை என்ற கோட்பாட்டிற்கு இவன் அளித்த ஆக்கம் புலப்படுகிறது. புத்தமித்திரரை ஆதரித்ததன் காரணமாகப் பௌத்த மதம் சோழ அரசனுல் போற்றப்பட்டது என்பதும் விளங்குகிறது.

**6. அரசியல் அதிகாரிகளும் அவர்தம் சமயப் பணிகளும் :** மூவேந்த வேளாளன் என்றழைக்கப்பட்ட திருவரங்கன் என்ற அதிகாரி திருவொற்றியூர் படம் பக்கநாதர் கோவிலைக் கற்றளியாக மாற்றி அமைத்தான். அக் கோவிலுக்கு அருகில் வீரராஜேந்திரன் பெயர் தாங்கிய நந்தவனத்தையும் இவன் அமைத்தான். மற்ருேர் அதிகாரியான ஜயசிங்க குலாகல விழுப்பரையன் என்பான் வீரராஜேந்திரன் பிறந்த நட்சத்திரமான ஆயில்ய நாளில் ஒவ்வொரு மாதமும் திருவொற்றியூர்க் கோவிலில் வழிபாடு நடக்க ஏற்பாடு செய்திருந்தான். திருவெண்காட்டு நங்கை மகன் சிவலோகநாதன் என்பவன் திருவெண்காட்டுக் கோவிலில் வீரராஜேந்திரன் பிறந்த ஆயில்ய நாளில் இறைவனுக்குப் பால் அபிஷேகத்துடன் தேன் அபிஷேகம் செய்யவும், மக்களுக்கு அன்னதானம் வழங்கவும் கொடைகள் அளித்திருந்தான். மேலும், இவன் திருவொற்றியூர்க் கோவிலில் சிவபெருமான் எழுந்தருளு வதற்கான கருங்கடல் பீடம் அமைத்து, அதற்கு வீரராஜேந்திர னுடைய பெயர் இட்டிருந்தான். வீரராஜேந்திரன் ஆணைப்படி திருமுக்கூடல் மகாவிஷ்ணு கோவிலில் மாதவன் என்னும் வைசிய குலத்தினன் ' ஜனநாத மண்டபம் ' எழுப்பி, அதன் மூலம் கோவில் அறமாகிய சமுதாய நலன் பேணும் வகையில் ' வீர சோழன் ' என்றழைக்கப்பட்ட மருத்துவசாலையையும், மறை ஓதுவிக்கும் பள்ளியையும், சிற்பக்கலை செறிந்த மண்டபங்களையும் நிறுவினுன்.

**7. சமூக நிலை :** ' சதி ' என்ற உடன்கட்டை ஏறும் பழக்கம் மனத்தளவில் உடன்பாடு கொண்டு காணப்படவில்லை. பெண் ஒருத்தி கணவன் இறந்த பின்னர் உடன்கட்டை ஏறலை நிராகரித்து வாழத் தலைப்பட்டதை வீரராஜேந்திரன் ஆட்சி காலத்திய தென் ஆர்க்காடு மாவட்டக் கல்வெட்டொன்று நித்தியம்புகின்றது.

**குடும்பம்**

இவன் மனைவி உலகமுழுதுடையாள் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற பட்டத்தரசி ஆவாள். மற்ருெரு மனைவி -ய அருண்மொழி மங்கை என்பாள் குலோத்துங்கன் I காலம்

1085ஆம் ஆண்டு வரை உயிர் வாழ்ந்தாள் என அவனுடைய தஞ்சைக் கல்வெட்டு (1085) கூறும். இவனுடைய மகன் அதிராஜேந்திரன் 1068-ல் யுவராஜா ஆக்கப்பட்டு, 1070-ல் அரசனாக இருந்தபோது, அரசியல் கிளர்ச்சியினூடே இறந்து பட்டான். மேலைச்சாளுக்கிய இளவரசன் விக்கிரமாதித்தனுக்குத் தன் மகளை வீரராஜேந்திரன் மணம் முடித்துக் கொடுத்திருந்தான். ராஜசுந்தரி என்ற மற்றொரு மகளைக் கீழைக் கலிங்க மன்னன் ராஜ ராஜன் மணந்திருந்தான். சகலபுவனாஸ்வரையன், மேதினி வல்லவன், மகாராஜாதிராஜன், ஆகவமல்ல குலாகலன், பாண்டிய குலாந்தகன், ராஜேஸ்வரையன், ராஜராஜேந்திரன், வல்லவ வல்லவன், வீரசோழன், கரிகாலன் என்ற பட்டங்களைப் பெற்றிருந்த தமிழ்ப் புலமை சான்ற வீரராஜேந்திரன் 1070ஆம் ஆண்டின் முற்பகுதியில் காலமானான். சோழ மன்னர்களுக்குள் இராணுவ வெற்றிகளின் நாயகனாகவும், ராஜதந்திர நிபுணனாகவும் விளங்கிய வீரராஜேந்திரன் தான் விஜயாலயச் சோழப் பரம்பரைக்கு அமைந்த கடைசி மாமன்னன் ஆவான்.

## அதிராஜேந்திரன் (1070)

வீரராஜேத்திரனுடைய மகன் அதிராஜேந்திரன் 1070-ல் சோழ அரசபதவி ஏற்ற சில மாதங்களில் இறந்து போனான். இவனுடைய சிறப்புக்குக் காரணமாக இவனுக்கு ஏற்பட்ட குரல்வளை நோயை (கிருமிக்கண்டன்) எடுத்துக் கூறுவர். வைணவப் பெரியார் இராமானுஜரைத் துன்புறுத்திய சைவன் இவன் என்றும், சமயப் பொறையின்மையின் காரணமாக இவன் சபிக்கப்பட்டு நோயுற்ற நிலையில் இறந்து பட்டான் என்றும் சொல்லப்படுகிறது. சமயப் பொறையோடு இவன் விளங்கினான் என்பதற்கு ஆதாரங்கள் உண்டு. ஆகவே, இவனுடைய இறப்புக்குக் காரணம் அரசிய கொலையே எனக்கொள்ளலாம். 1068-ல் யுவராஜாவாக ஆக்க பட்ட இவன் 1070-ல் அரச பட்டத்திற்கு வந்தவுடன் நாட்டி இவனை எதிர்த்து அரசியல் கலகங்கள் ஏற்பட்டன. இவனுடைய மைத்துனனான மேலைச்சாளுக்கியன் விக்கிரமாதித்தன், கா சிக்குப் படையுடன் வந்து கலகக்காரர்களை அடக்கிப் பின் கங்காபுரி சென்று அங்கும் கிளர்ச்சிக்காரர்களை அடக்கிய நிலையி அதிராஜேந்திரனை அரியணையில் அமர்த்தி, ஒரு மாதம் அவனே இருந்து விட்டு, தன் நாடு திரும்பினான். இக் கிளர்ச்சிகளை கீழைச்சாளுக்கிய இளவரசன் குலோத்துங்கன் பின்னணி நின்றுகொண்டு நடத்தினான் என்பது வரலாற்றுச் செய்தியா ஒரு சில மாதங்களே அரசாண்ட அதிராஜேந்திரனுடைய ஆட்

காலத்தில் வெளிநாட்டுப் போர்கள் எதுவும் ஏற்படவில்லை. ஆனால், வியப்புக்குரிய அளவில் உள்நாட்டு நிர்வாகத்தில் பெருமளவிற்கு ஆக்கப் பூர்வமான பணிகள் நடந்தேறின.

## I உள்நாடு

(அதிராஜேந்திரன்தான் சோழ மன்னர் மரபிலேயே மிகவும் குறுகிய ஆட்சிக் காலத்தினைப் பெற்றிருந்தவன்.) ராஜராஜன் I காலந்தொட்டு உருவாகி வந்த சோழரின் உள்நாட்டு நிர்வாகம் இவன் காலத்தில் அரசியல் குழப்பங்கள் காரணமாகச் சீர் கெட்டது. இவனுடைய தந்தை வீரராஜேந்திரன் 1070-ல் இறந்த பிறகு சோழப் பேரரசில் இத்தகைய அமைதி குலைவு ஏற்பட்டது. ஆட்சி இயந்திரம் இயங்காமல் போய்விட்டது என்று சொல்வதற்கில்லை. மதத்தின் அடிப்படையில் இயங்கி வந்த மக்கள் இவனுடைய காலத்தில் வைணவப் பெரியார் இராமானுஜர் துன்புறுத்தப்பட்ட போது[2] கிளர்ந்து எழுந்தார்கள். அதனால் குழப்பம் ஏற்பட்டது. இக் குழப்பத்தைக் கீழைச்சாளுக்கிய இளவரசன் ராஜேந்திரன் II என்ற குலோத்துங்கன் தூண்டிவிட்டான் என்ற கருத்தும் உண்டு. ஆனால், சோழர்களைப் பகைவர்களாகச் சித்தரிக்கின்ற பில்கணன் குலோத்துங்கன் சம்பந்தப்பட்டிருந்த கலகத்தையோ பதவியிலிருந்த அதிராஜேந்திரனை அக் கலகம் கொன்றதையோ குறிக்கவில்லை. ஆதலால், சாளுக்கியச் சோழ மன்னர் குலத்தானை குலோத்துங்கன் ஆதரவில் சோழநாடு குழப்பத்தில் ஆழ்த்தப்பட்டது என்பதற்குரிய வலுவுள்ள ஆதாரம் நமக்குக் கிடைக்கவில்லை. அதிராஜேந்திரன் இக் கலகத்தில் தாக்கப்பட்டு உயிர் துறந்தான். இது எவ்வாறு நிகழ்ந்தது என்பது பற்றிய விளக்கம் இதுவரை காணக் கிடைக்கவில்லை. சோதனைக் காலங்களைச் சமாளிக்கின்ற வலிமை வாய்ந்த ஆட்சி முறையைச் சோழர்கள் கட்டிக் காக்கவில்லை என்ற கருத்துதான் இத்தகைய குழப்பங்கள் கொண்டு வந்த அழிவும், அரசனே இறந்துபடுகின்ற அவலமும் தெரியப்படுத்தும் என்றுகூட நாம் சொல்லலாம்.

**1. ஊராட்சி மன்றச் சீர்திருத்தம் :** 1070-ஆம் ஆண்டு சித்தமல்லிக் கல்வெட்டு அவ்வூரின் சபையில் நடந்த 'கிராம வியவஸ்தா பற்றி விவரிக்கிறது. அரசனது பிரதிநிதி முன்னிலையில் நிகழ்ந்த கூட்டத்தில் கிராமச் சபையின் ஆளுகைக் குழுக்களான வாரியங்களில் காணப் பெறுகின்ற உறுப்பினரின் அந்தஸ்து பற்றிய சட்டம் நிறைவேற்றப்பட்டது. சாசனப் பத்தர் என்பவர்களுக்கும் சாசனப்பட்ட மக்கள் என்பவர்களுக்கும்

2 'இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழா மலர்'—சென்னை 1968—சமயம்—பக்கம் 30

அவ் வாரியங்களில் நேரடியாக உறுப்பினராகும் உரிமை வழங்கப் பட்டது. தேர்தல் முறையினுள் இத்தகைய சாசன உரிமையின் காரணமாகப் பிரதிநிதித்துவம் ஏற்றுக்கொள்ளப்பட்டதானது, அரசியலமைப்பு ரீதியில் ஏற்பட்ட மாற்றம் (Constitutional Change) எனக் கொள்ளப்பட வேண்டும்.

**2. பொருளாதார நிலை—நிலம், வரி, விலைவாசி:** திருவல்லம் கோவில் அளிக்கின்ற தகவலின்படி கணிசமான அளவில் காணப் பட்ட வரி பாக்கிகளில் சிலவற்றைக் காலியிறைப் பட்டம், அந்த ராயம் போன்ற பிரிவுகளாக வகைப்படுத்தினர். பின்பு 1000 கலம் நெல்லுக்கு 25 காசுகள் வீதம் வரி வசூலிக்கப்பட்டது. இந்த 1000 கலம் என்பது மொத்த மகசூலில் உள்ள பங்கினைக் குறிக்கிறதா என்பது தெரியவில்லை. இதில் கோவிலுக்கு உரிய பங்கு எவ்வளவு என்பது தெரிவிக்கப்படவில்லை. 1 காசுக்கு 4 கலம் வீதம் உபரி வரி விதிக்கப்பட்டது. சிறு அளவு வரிகளுக்கு 10 சதவீதம் பெறப்பட்டது.

அதிராஜேந்திரன் காலத்தில் ஏற்பட்ட பொருள்களின் பற்றுக் குறை காரணமாக விலைவாசிகள் அதிகமாயின. விலை ஏற்றம் பொருளாதார நிலையில் ஏற்பட்ட சீர்கேட்டினைச் சுட்டிக் காட்டு கிறது. இதன் விளைவாகத்தான் உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டது என்ற கருத்துகூட உண்டு.

**3. சமயம் :** அதிராஜேந்திரனுடைய குறுகிய ஆட்சிக் காலத்தில் இவன் ஆற்றிய சில சமயப்பணிகள் குறிப்பிடத் தக்கவை. தம் முன்னோர்கள் அளித்துச் சென்ற கோவிலறம் என்ற பாரம்பரியத்தைப் பேணுவதிலும் அவர்களால் ஏற்கெனவே வழங்கப்பட்டிருந்த நிலதானங்கள், நிவந்தங்கள் முதலியன எவ்விதச் சீர்கேடுமின்றி நடக்கச் செய்வதிலும் இவன் அதிகம் கவனம் செலுத்தினான்.

**4. கோவிலற ஆய்வுக்குழு நியமனம் :** கோவிற்பணிகள் சிறந்த முறையில் தடங்கலின்றி நடந்து வருகின்றனவா என்பதை மேற்பார்வை செய்ய ஆய்வுக் குழுவினை அதிராஜேந்திரன் அமைத்தான். அக் குழு சோழ நாட்டிலுள்ள ஒவ்வொரு கோவி லாகச் சென்று கணக்குகளைத் தணிக்கை செய்து, சமயப்பணிகள், சமுதாய அறங்கள் நடந்தேறப் பொருளுதவி வேண்டி நின்ற கோவில்களுக்கு மேற்கொண்டு பொருளாதார வசதிகளை ஏற்படுத்திவிட்டு வரவேண்டும் என இச் சோழன் பணித்திருந் தான். பொருளாதார வசதி குன்றிய கோவில்கள் தேவைப்பட்ட

உதவி பெற்று, தம் அறப்பணிகளைத் தொடர்ந்து செய்தன. அரசாங்க ஆணையாளன், படைத்தலைவன் ஆகிய இருவர் அடங்கிய இந்த தணிக்கைக் குழு (Grand Commission) காஞ்சியிலுள்ள கங்கை கொண்டான் மண்டபத்திலிருந்து தொடங்கி திருவல்லம், திருக்காரைக்காடு போன்ற ஏராளமான கோவில்களின் அறநிலைய அலுவல்களை மேற்பார்வை செய்து வந்ததாக மேற்கண்ட ஊர்களின் கோவில்களில் காணப்படும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

அதிராஜேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தில் தங்கி இருந்தபோது திருப்பாசூர் என்னும் தலத்தில் அமைந்த கோவிலுக்குத் தேவதானமாகச் சேலை என்னும் ஊரை இறையிலியாக்கி அளித்து, அதற்குரிய ஆணையைப் பிறப்பித்திருந்தான். பிற சமய வளர்ச்சிப் போக்கில் தடையேதும் ஏற்பட்டுவிடவில்லை. இந்து சமய அறப்பணிகளும் கோவில் பணிகளும் இவன் காலத்தில் ஏற்பட்ட சச்சரவுகளினால் பாதிப்பு ஏதுமின்றி நிறைவுடன் செய்யப்பட்டன.

திருவக்கரையிலுள்ள சந்திர மௌளீஸ்வரர் கோவில் சங்கச் சோழன் கோச்செங்கணானால் கட்டப்பட்டது. இதனுள் காணப்பட்ட வரதராஜப் பெருமாள் என்ற இறைவன் சந்நிதானத்துக்குச் செம்பியன் மகாதேவி கற்றளி எடுப்பித்தாள். அதிராஜேந்திரனின் குறுகிய கால ஆட்சியில் இக் கோவில் மீண்டும் புனர் நிர்மாணம் செய்யப்பட்டுச் சிற்பக் கலையின் செழுமை சேர்ந்த கற்கோவிலாக மாற்றப்பட்டது. இவ்வாறு வைணவத்திற்கும் இவன் ஆதரவு அளித்தான். இந்தச் செய்தியை ஆதாரமாகக் கொண்டு இராமானுஜரை இவன் துன்புறுத்தி இருக்க முடியாது என ஆராய்ச்சியாளர் கூறுவர். ஆனாலும், இவனுடைய இறப்புக்குச் சமயச்சார்பான காரணம் ‘திவ்விய சூரி சரிதம்’, ‘யதிராஜ வைபவம்’ போன்ற நூல்களின் ஆதாரம் கொண்டு கற்பிக்கப்படுகிறது.

## II குடும்பம்

அரச பதவிக்கு வந்த சில மாதங்களில் கொலையுண்டு போன அதிராஜேந்திரனுடைய குடும்ப வரலாறு பற்றித் தெளிவான செய்திகள் காணப்படவில்லை. வட ஆர்க்காடு திருவல்லம் கல்வெட்டின்படி இவனுக்கு உலகமுழுதுடையாள் என்ற மனைவி இருந்தாள் எனத் தெரிய வருகிறது. கலிங்கத்துப் பரணியில் குலோத்துங்கனைப் புகழ்ந்து பாடிய ஜெயங்கொண்டார் அதிராஜேந்திரன் என்ற சோழன் இருந்ததாகவே காட்டிக்கொள்ள

வில்லை. ஆதித்த தேவன், பரநிருப ராக்கநாதன், சேனுபதி இருக்குவேள் போன்றோர் அதிராஜேந்திரனுக்கு வாய்ந்த நல்லுழைப்பு அதிகாரிகள் ஆவார்கள்.

இராணுவ ஏகாதிபத்தியமாக வளர்ச்சியுற்றுப் போன சோழப் பேரரசின் அரசியல் நலன்களைத் துய்க்கின்ற வாய்ப்பும் அதன் வளர்ச்சிக்கு ஆக்கந்தேடுகின்ற அரசாட்சியை மேற்கொள்கின்ற அரசுரிமையும் பெற்ற அதிராஜேந்திரன் குலோத்துங்கனுடைய அரசியல் சதிக்குப் பலியாகிப் போன அவலம் போல மற்ற எந்தச் சோழ மன்னனுக்கும் ஏற்படவில்லை. குறுகிய ஆட்சிக் காலத்தில் ஊராட்சி மன்றங்கள், சமய வளர்ச்சி போன்றவற்றிற்கு நலம் பல சேர்த்த ஆட்சி நல்கிய அதிராஜேந்திரன் தொடர்ந்து பதவியில் இருந்திருந்தால் சோழரின் பரம்பரையான இராணுவ ஏகாதிபத்திய உணர்வு உடைய பேரரசின் வளர்ச்சி, வல்லடிப்போர்களின் வழியாகத் தொடர்ந்து நிகழ்ந்திருக்க வழி இல்லை. ஏனென்றால், இவனுடைய தந்தையின் ராஜதந்திரப் புரட்சியின் பெரும் பயன்களை நாட்டுக்குரிய நலங்களாக மாற்றுகின்ற மாண்புக்கு உரியவனாக இவன் உன்னதம் பெற்றிருப்பான். அரசியல் கிளர்ச்சியை உருவாக்கி இவனை வீழ்த்தி விட்டுச் சோழ அரசுரி மையைக் கைப்பற்றிய குலோத்துங்கனுடைய ஆட்சிச் சிறப்பு இவனுக்குரியதாக மாறி இருக்கும். ஏனென்றால், உள்நாட்டு ஆட்சித்துறைக்கு வேண்டிய தன்முனைப்பையும் வினையாற்றலையும் இவன் ஆண்ட சில மாத ஆட்சிக்காலத்தில் இவன் வெளிக் காட்டினான். ஆகவே, தொடர்ந்து ஆள்கின்ற முழுமையான வாய்ப்பு இவனுக்கு இருந்திருப்பின், குலோத்துங்கனை மிஞ்சி நில்லாவிட்டாலும் குலோத்துங்கனின் உயர்வு சாயலில் இவன் சோழ நாட்டின் நலனை உயர்த்தி இருப்பான் என்று துணிந்து குறிப்பிடலாம். அரச பதவிக்கு வந்த சில மாதங்களில் ஏற்பட்ட சதியினால் உண்டான அரசியல் கொலைக்கு ஆளாகிப்போன இவனுடைய உள்நாட்டு ஆட்சி முறையில் காணப்பெறுகின்ற சமயப் பொறை, கோவிலறம் பேணல், ஊராட்சி மன்ற வளர்ச்சி போன்றவை இவனுடைய அரசவாழ்வின் உயர்விற்குச் சான்று சொல்லும் சாதனையாக விளங்கின.

# 11. குலோத்துங்கன் I
## (1070—1122)

சோழப் பேரரசர்களுக்குள் குலோத்துங்க சோழன் உயர் தனிச் சிறப்புக்கு உரியவன் ஆவான். அனுபவங்களை அறிவாக்கி அதை அரசியலுக்குரிய சாதனமாக உருவாக்கிக்கொண்ட அவனது வினைத்திட்பம், சோழப் பேரரசுக்கு அடிப்படையான மாற்றங்களைக் கொண்டு வந்தது. அவை பின்வருமாறு: (1) ஆதித்த சோழன் காலத்திலிருந்து குலோத்துங்கனுடைய ஆட்சியின் முற்பகுதிவரை சோழப் பேரரசு, வல்லடிப்போர்கள் என்ற இரும்புக்கவசத்தில் தன்னை உட்படுத்திக்கொண்டிருந்தது. பயனற்ற இராணுவ ஏகாதிபத்தியத்தை உருவாக்குகின்ற பணியில் சோழ நாட்டின் ஆக்க சக்தியை விரயமாக்கி வந்தது. இதைக் குலோத்துங்கன் தன்னளவில் உணர்ந்தான். சாம்ராஜ்யம் என்பது போர்களில் பெறப்படுகின்ற இராணுவ மேம்பாடுகளினுல்மட்டும் சிறக்கும் என்ற கருத்தின் வெறுமையை இவன் புரிந்துகொண்ட நிலையில் சோழப் பேரரசின் ஆக்க சக்தியை மக்கள் நலம் பேணுகின்ற வகையில் இவன் திருப்பி விட்டான். இவ்வாறு சோழப் பேரரசு தனது முழுமையான வளர்ச்சியை இவன் காலத்தில்தான் மக்கள் நலம் பேணுகின்ற பயனுள்ள வகையில் அடையத் தலைப்பட்டது. இவன் இவ்வாறு நிர்ணயஞ்செய்த இக் கோட்பாட்டினை இவனுக்குப் பின் வந்த மன்னர்கள் பின்பற்றவில்லை. இந்தக் குறைபாடு சோழப் பேரரசு நாளடைவில் அழிந்து போவதற்குக் காரணமாயிற்று. இவ்வாறு தொலைநோக்கு கொண்ட அனுபவ அறிவு குலோத்துங்கனுக்கு அமைந்தது போல அவ்வறிவினை நடைமுறைப் பயனுக மாற்றுகின்ற வினையறத்தோடு தனியார்வ மனத்திட்பமும் கொண்ட மன்னர்கள் வேறு யாரும் சோழப் பேரரசருள் காணப் படவில்லை.

(2) குலோத்துங்கனுடைய ஆட்சியின் தொடக்கத்தில் ஈழமும், கடைசிக் கட்டத்தில் கங்கபாடியும், வேங்கியும் சோழப் பேரரசிலிருந்து கழன்று சென்றுவிட்டன. இந்த இழப்பைப் பொருட்படுத்தாமல் பேரரசின் ஆக்கசக்தியை மக்கள் வாழ்க்

கைக்கு உரிய நலன்களைத் தேடுகின்ற பெரும்பணியில் குலோத்துங்கன் ஈடுபடுத்தினான். கோவிலறம் பேணுதல், வேளாண்மையைச் சிறக்கச் செய்யச் சோழ நாட்டின் விளைநிலங்களை அளத்தல், வாணிபம் பெருக வேண்டிய சுங்க வரிகளை நீக்குதல், சீன நாட்டுக்கு வணிகக் குழு அனுப்புதல், வல்லடிப்போர்களைத் தவிர்த்தல் போன்ற ஆக்கப்பூர்வமான அரசியல் நடவடிக்கைகள் இவனுடைய ஆட்சியின் உயர்தனிச் சிறப்புகளாக விளங்கின. மேற்சொல்லப்பட்ட இரண்டு பெருஞ்சாதனைகளை ஆற்றிய குலோத்துங்கன் சோழ அரசர் குலத்திற்குக் கீழைச்சாளுக்கிய குலத்தின் புதுமை இரத்தம் செலுத்திய சோழ மன்னனாக விளங்கினான். சாளுக்கியச் சோழன் என்ற முறையில் 1070-ல் பதவிக்கு வந்த இவனுடைய ஆட்சிக்காலம் சோழப் பேரரசின் ஆக்கப்பூர்வமான வளர்ச்சியின் செறிவைச் சுட்டிக் காட்டியது. இவனுடைய வெளிநாட்டுக் கொள்கை சோழப் பேரரசின் அமைப்பைக் காக்கத் தொடக்கத்தில் முனைந்து நின்று, பின்பு காலப்போக்கில் ஏற்பட்ட வரலாற்று மாறுதல்களை ஏற்றுக் கொண்ட அளவில், சுருங்கிக்கொண்ட பேரரசைக் காக்கின்ற ஆக்கப்பணியாக உருக்கொண்டது.

## I அயல்நாட்டுக் கொள்கை

சோழரின் இராணுவ ஏகாதிபத்தியத்தை நிலைநாட்டுவதற்காக மேற்கொள்ளப்பட்ட வல்லடிப்போர்களைக் காலப்போக்கில் குலோத்துங்கன் விட்டொழித்தான். மேலைச்சாளுக்கியரோடு இவன் போர்களை மேற்கொண்டபோது அப் போர்களின் பயனற்ற தன்மையை இவன் உணர்ந்தான். சோழ நாட்டு மக்களின் தியாகமும் வீரமும் அவ் வகை வல்லடிப்போர்களில் விரயமாக்கப்படுவதை இவன் உணர்ந்தான். ஏனென்றால், மேலைச்சாளுக்கியரின் அரசியல் பிடிப்புகளை (சாளுக்கிய நாட்டில் வெற்றிகள் பல பெற்ற அளவில்) வெல்லப்பட்ட பகுதிகளிலிருந்து சோழர்களால் அசைத்துக் காட்ட முடியவில்லை. மேலைச்சாளுக்கியர் எப்போதும் போலவே தங்களுடைய அரசியல் ஆதாயங்களைத் தொடர்ந்து அனுபவித்து வந்தனர். வீரராஜேந்திரன் காலத்தில் அரசியல் ராஜதந்திரத்திற்கு உரிய மதிப்பு கொடுக்கப்பட்டது. இதே ராஜதந்திர பாணியில் குலோத்துங்கன் மேலைச்சாளுக்கிய மன்னன் சோமேசுவரனுக்கு அரசியல் கூட்டாளி ஆனான். ஆனால், சோழ மன்னன் வீரராஜேந்திரன் செய்த ராஜதந்திரப் புரட்சியின் முழுமையான பயன் குலோத்துங்கனை வந்தடையவில்லை.

இதற்குக் காரணம் என்ன ? 1067 அளவில் விக்கிரமாதித்தன் VI வேங்கி நாடு, சக்கரக்கோட்டம் போன்ற பகுதிகளில் திக்விஜயம் செய்தபோது குலோத்துங்கன் அவனை எதிர்த்திருக்க வேண்டும். தனக்குப் பெண் கொடுத்த மாமன் ராஜேந்திரன் II அரசாண்ட பின்பு சோழ அரசனான வீர ராஜேந்திரன் விக்கிரமாதித்தனோடு செய்துகொண்ட ராஜ தந்திர ஒப்பந்தத்தின்படி வேங்கி நாடு சோழநாட்டுப் பகுதியாயிற்று. அதோடு குலோத்துங்கனுக்குச் சேர வேண்டிய வேங்கி நாட்டு அரசுரிமை அவனுடைய பங்காளி விஜயாதித்தியனிடம் 1063-ல் சென்றடைந்தது. வீரராஜேந்திரனுடைய இந்த ஏற்பாட்டைக் குலோத்துங்கன் ஒப்புக்கொண்டானில்லை. ஆனால், சோழ மன்னனாக 1070-ல் அவன் பதவி கொண்ட பின்பு, தனது சித்தப்பாவான விஜயாதித்தியனைத் தொடர்ந்து பதவி வகிக்க அவன் அனுமதித்தான். ஆனால் அவ்வாறு விஜயாதித்தியனை வேங்கிநாட்டு மன்னனாக்குவதற்கு உறுதுணை செய்த விக்கிரமாதித்தன் குலோத்துங்கனுக்கு எதிரியாகவே தொடர்ந்து இருந்து வந்தான் ; குலோத்துங்கனுடைய தாய்மாமன்களில் ஒருவனான வீரராஜேந்திரனுடைய மகளை விக்கிரமாதித்தன் மணமுடித்திருந்தபோதிலும் அரசியல் எதிரிகளாகவே இருவரும் செயல்பட்டனர். ஏனென்றால், வீரராஜேந்திரனுடைய மகன் அதிராஜேந்திரனுடைய அரசுரிமையை எதிர்த்த நிலையில் காஞ்சியிலும் கங்காபுரியிலும் ஏற்பட்ட கலகங்களில் நேரில் தலையிட்டு, அவற்றை விக்கிரமாதித்தன் அடக்கிக் காட்டினான். எனினும், அதிராஜேந்திரன் அரசியல் கொலையுண்டு இறந்துபோனான். குலோத்துங்கனே அக் கொலைக்கான அரசியல் கிளர்ச்சியைச் சமயச் சார்பான வைணவ உணர்ச்சியைக் கிளறிவிட்டு நடத்தினான் என்பது நிரூபிக்கப்படாத — ஆனால் ஒப்புக்கொள்ளப்படக்கூடிய— உண்மை எனலாம். ஆகவே, அதிராஜேந்திரனுடைய இடத்தில் அமர்ந்த குலோத்துங்கன் மேலைச்சாளுக்கியரின் பகைவனாகக் காட்சி அளித்தான்.

காரியவாதியான குலோத்துங்கன் விக்கிரமாதித்தனைப் போரில் சந்திக்கத் திட்டமிட்டுக் காத்திருந்தான். ஐந்து ஆண்டுகள் இரு தரப்பிலும் படை சேர்க்கும் முயற்சி தீவிரமாக நடைபெற்ற பின்பு சோழர்—சாளுக்கியர் போர் நிகழத் தொடங்கியது. ஈழத்தைப் பொறுத்தளவில் குலோத்துங்கன் மாமூலான சோழரின் ஏகாதிபத்திய உணர்வுடன் நடந்துகொண்டபோது ஈழத்தின் புதிய தலைவன் விஜயபாகு சோழர்களை ஈழத்திலிருந்து 1073-ல் வெளியேற்றினான். இந்த இராணுவத் தோல்வியை ஏற்றுக்கொண்டு ஈழத்தின் இழப்பை ஒப்புக்கொண்டுவிட்ட குலோத்துங்கனுடைய

அரசியல் புலமை பாராட்டுதற்குரியது. பாண்டியரும் சேரரும் தங்களுக்குரிய வழக்கப்படி சோழரோடு முரண்பட்டு நின்றனர். இவர்களை அடக்கிய பின்பு, அவர்தம் நேரடி ஆட்சியைக் குலோத்துங்கன் ஊறு செய்யாமல் தன்னுடைய நிலைப்படைகளை (military garrisons) ஆங்காங்கே வைத்துச் சோழரின் ஆதிக்கத்தை அறிவுறுத்திக்கொண்டான். 1116-ல் கங்கபாடியும், 1118-ல் வேங்கியும் இழக்கப்பட்டன. இவ்விழப்பு குலோத்துங்கன் 46 ஆண்டுகள் சோழ நாட்டை ஆண்ட பின்புதான் ஏற்பட்டது என்பது முக்கியமான செய்தி ஆகும். எனினும், குலோத்துங்கனுடைய வெளிநாட்டுக் கொள்கை சோழப் பேரரசின் இழப்புகளைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஏனென்றால், வல்லடிப் போர்களைத் தன்னுடைய வெளிநாட்டுக் கொள்கையின் ஆதாரக் கோட்பாடாக அவன் கொண்டிருக்கவில்லை.

கங்கபாடியைக் கைப்பற்றிய போசளர்கள் மைசூரின் அதிபதிகளாக மாறி, சோழ நாட்டின் அரசியலின் பெரும்பங்கு வகிக்கத் தக்க அளவில் அடுத்த நூற்றாண்டுக் காலத்தில் தென்னகத்தின் அரசியல் சூத்திரதாரிகாளாக மாறி, மதுரைப் பாண்டியர் கட்டிய இரண்டாவது பாண்டியப் பேரரசோடு மோதி நின்றனர். சாளுக்கியர் தளபதி அனந்தபாலா போன்றவர்களின் ஆதிக்கத்திற்கு வேங்கி நாடு உட்பட்டுவிட்டது. 1122-ல் குலோத்துங்கன் இறந்தான். அவன் இறந்து நான்கு ஆண்டுகள் கழித்து விக்கிரமாதித்தன் இறந்தான். விக்கிரமாதித்தன் ஐம்பது ஆண்டுகளுக்குமேல் குலோத்துங்கனுடைய பெரும்பகைவனாக இடையறாது செயல்பட்டான். இவ்வாறு 1070-லிருந்து ஐம்பது ஆண்டுக் காலமாக இப் பகைமை தென்னக அரசியலை ஆட்கொண்டிருந்தாலும் 1074ஆவதுஆண்டோடு சோழர்-சாளுக்கியர் போர் ஏற்பட்டு முடிவடைந்து விடுகிறது. குலோத்துங்கன் இப் பகைமையை அரசியல் ஆதாரத்திற்காக வல்லடிப்போர்களைச் சோழப் பாரம்பரியப்படி நடத்தி மேலும்மேலும் வளர்த்துக்கொள்ளவில்லை. தனக்குச் சாதகமான சூழ்நிலையிலுங்கூட இப் பகைமையைப் பாராட்டி அரசியல் ஆதாயத்தை அவன் தேடவில்லை. சான்றாக, விக்கிரமாதித்தனுடைய தம்பி ஜெயசிம்மன் தன்னுடைய தமையனுக்கு விரோதமாக மாறிக்கொண்டுசாளுக்கிய நாட்டில் அரசுரிமை நாடி உள்நாட்டுப் போரைத் தொடங்கியபோது குலோத்துங்கனிடமிருந்து அவன்—வலிய வந்து—1083-ல் உதவி கேட்டபோதும் குலோத்துங்கன் மனம் நெகிழவில்லை ; அச் சாளுக்கிய அரசியல் நெருக்கடியைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. இவ்வாறு வேண்டாத போர்களைத் தவிர்த்து நின்ற வெளிநாட்டுக் கொள்கையின் பயனாகச் சோழப்பேரரசு சோழ

மண்டலமாகக் குறுகிக்கொண்டது. ஆனாலும் சுய மதிப்போடு கூடிய இச் சோழனின் அறிவு சான்ற வெளிநாட்டுக் கொள்கையின் பயனாகத்தான் இவனுடைய ஆட்சித் தொடக்கம் தமிழகத்தில் நூறாண்டு காலத்திற்கு அரசியல் அமைதி நிலவியது. இவ்வாறு குலோத்துங்கனுடைய அயல்நாட்டுக் கொள்கை வல்லடிப்போர்களற்ற அரசியலுக்குரியதாக மாறிக்கொள்வதற்கு முன்பு பரிணாம முறையில் சாளுக்கியர் போன்ற எதிரிகளோடு நடந்த போர்களை உள்ளடக்கிக் காணப்பட்டது. அப் போர்களை ஆராய்ந்தால், குலோத்துங்கனுடைய பேரரசுத் தத்துவம் கொண்ட உள்மாற்றம் தெளிவாகும்.

**1. சாளுக்கியப்போர்—நங்கிலி (1075) :** குலோத்துங்கன் விக்கிரமாதித்தனுடைய எதிர்ப்பை எதிர்பார்த்து, அவன் பதவிக்கு வந்த 1070-லிருந்து போருக்கான ஆயத்தம் செய்யத் தொடங்கினான். சோழர்களின் ஆதிக்கத்திலிருந்து குவலாளயபுரம் என்ற கோலார்ப் பகுதியை விக்கிரமாதித்தனுடைய படைகள் முதலில் தாக்கின. அப் பகுதியிலுள்ள நங்கிலியில் 1076-ல் போர் தொடங்கியது, விக்கிரமாதித்தன், அவன் தம்பி ஜெயசிங்கன், கொங்கண நாட்டின் அதிபதி ஜயகேசி, திரிபுவனப் பாண்டியன் என்ற வடபுலத்து உச்சங்கி நாட்டதிபதி, வேங்கி நாட்டு மன்னன் விஜயாதித்தன், போசள மன்னன் விநயாதித்தன், அவன் மகன் ஏரகங்கன், தேவகிரியின் யாதவ மன்னன் சேனு II போன்றோர் சோழர் படையினரால் தோற்கடிக்கப்பட்டனர். கற்பாகைகள் உள்ள நங்கிலியிலிருந்து மேலைச்சாளுக்கியப் படைகள் துங்கபத்திரை நதிக்கரை வரை போரிட்டுக்கொண்டே பின்வாங்கி ஓடின. அவை போகும் வழியிலுள்ள மணலூர், அளத்தி என்ற இடங்களிலும் சோழர்படையால் முறியடிக்கப்பட்டன என்று கலிங்கத்துப் பரணி தெரிவிக்கின்றது.

விக்கிரம சோழனுலா கூறுவதுபோலக் கொங்கணத்தையும் கன்னட நாட்டையும் பிடிப்பதற்குமுன்பு மேலைக்கடல்வரைமேலைச் சாளுக்கியரின் படைகளைச் சோழர்கள் அடித்து விரட்டினார்கள். இப் போரில் உண்மையான இழப்புக்கு உள்ளானவன் மேலைச் சாளுக்கிய மன்னன் சோமேசுவரன் II ஆவான். குலோத்துங்கனோடு இவன் ராஜதந்திர உறவும், இராணுவ ஒப்பந்தமும் செய்து கொண்டிருந்தான். தன்னுடைய தம்பி விக்கிரமாதித்தனுக்கு விரோதமாகச் செய்யப்பட்ட இந்த ஒப்பந்தத்தின்படி சோமேசுவரன் தனது தம்பியின் படைகளைப் பின்னாலிருந்து பெரும் படைகொண்டு தாக்கினான். குலோத்துங்கனின் படை முன்பு எதிர்த்து நிற்க ஆற்றல் இல்லாமல், விக்கிரமாதித்தனுடைய

படைகள் தோல்வியுற்றுப் போராடிக்கொண்டே பின்வாங்கிச் சென்ற நிலையிலும், சோமேசுவரனை அவை தோற்கடித்தன. சோமேசுவரன் சிறைபிடிப்பட்டான். இதற்கடுத்த ஆண்டில் 1076-ல் விக்கிரமாதித்தன் தன்னையே மேலைச்சாளுக்கிய மன்னனாக முடிசூட்டிக்கொண்டான். இவ்வாறு போரின் காரணமாகச் சோழருக்குக் கிடைத்த பயன் என்ற அளவில் கங்க பாடியைச் சோழர்கள் மீட்டுக்கொண்டார்கள். நங்கிலி என்னு மிடத்தில் சாளுக்கியரின் இராணுவ இலாகா சேகரித்து வைத்திருந்த ஆயிரம் யானைகளைச் சோழர் படைகள் சாளுக்கிய தளகர்த்தனரிடமிருந்து பிடுங்கிக்கொண்டன. தற்காலத்திய டாங்கிகள் போல அக் காலப் போர்களில் யானைகள்தான் பயன் பட்டன. ஆகவே, ஆயிரம் போர் யானைகள் கவரப்பட்ட நிலையில் சோழரின் இராணுவ வலிமையும் செல்வாக்கும் கணிசமான அளவில் வளர்ச்சியுற்றன. சோமேசுவரன் அரச பதவியை இழந்த பின்பு சோழர்குல எதிரி விக்கிரமாதித்தன் மன்னனாகியது சோழருக்கு ஏற்பட்ட பெரும் தோல்வி என்றே கருதப்பட வேண்டும். 1075-ல் நடந்த நங்கிலிப் போரின் பயனாகப் பிளவு பட்டிருந்த மேலைச்சாளுக்கியரின் அரசியல் விக்கிரமாதித்தன் தலைமையில் தனியொரு நாடாக ஒன்றுபட்டு வலிமை பெற்றது. இது சோழ நாட்டின் நலனுக்கு விரோதமானது என்பது குலோத் துங்கனுக்குத் தெளிவாகப் புரிந்துதான் இருந்தது.

1076-லிருந்து 1126-ல் விக்கிரமாதித்தன் இறக்கும் வரை மேலைச்சாளுக்கிய நாட்டில் நங்கிலிப் போர் அளவிற்குப் பெரும் போர் ஏதும் ஏற்படவில்லை. அவனும் குலோத்துங்கனும் பகைமை பாராட்டி நின்றாலும் மேலைச்சாளுக்கியப் பகுதியில் மேற் கொண்டு எந்தப் போரும் நிகழாவண்ணம் அவ்விரு நாட்டதிபதி களும் அவரவர் பலயீனங்களை உணர்ந்துகொண்டார்கள். நங்கிலிப் போரில் குலோத்துங்கன் மீட்ட கங்கபாடியைப் போசள மன்னன் பிட்டிகன் 1116-ல் கைப்பற்றியதைத் தொடர்ந்து 1118-ல் வேங்கி நாட்டை விக்கிரமாதித்தன் தன்னுடைய தளகர்த்தர்களுக்காகக் கைப்பற்றினான். சோழரின் படைகள், இவற்றைத் திரும்பவும் கைக்கொள்ளுகின்ற முறையில், அவ்விடங் களுக்குச் செல்லவில்லை. இவ்வாறு 1076-லிருந்து 1118 வரை சாளுக்கியப் போர் சோழர் வரலாற்றில் ஏற்படவில்லை. இந்த அளவில் 1075-ல் நடந்த இந்த நங்கிலிப் போர்தான் சாளுக் கியரும் சோழர்களும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள உதவிற்று. அதன் பயனாக, இனி வரும் 43 ஆண்டுகளில் இரு சாராருக்கும் இராணுவ மோதல்கள் ஏற்படாமல் தென்னக அரசியல் நன்னிலை அடைந்தது எனலாம்.

**2. வேங்கி:** வேங்கியின் அரச பதவியில் விஜயாதித்தியனைத் தொடர்ந்து இருக்க அனுமதிக்கின்ற ராஜதந்திர உறவை வீரராஜேந்திரன் விக்கிரமாதித்தனோடு செய்துகொண்டான், இதனைக் குலோத்துங்கன் ஒப்புக்கொண்டான். தனது மகனுக்குக் கொடுக்கின்ற அறவுரையாக வருகின்ற கல்வெட்டுப் பகுதியில் குலோத்துங்கன் வேங்கி நாட்டை விஜயாதித்தியனுடைய விருப்பம் அறிந்து, தானே விரும்பி அரசுரிமையைக் கொடுத்தான் எனக் குறிப்பு வருகிறது. ஆனால், அது உண்மையாக இருக்க முடியாது. வீரராஜேந்திரன் அவனுடைய வெளிநாட்டுக் கொள்கையின் வெற்றியின்பொருட்டு, விக்கிரமாதித்தனோடு செய்த ராஜதந்திர உடன்பாட்டின்படி வேங்கி நாட்டைச் சோழருக்குச் சொந்தமாக்கி பின்பு விஜயாதித்தியனுக்குரியதாக வேங்கி நாட்டு அரசுரிமையை அங்கீகரித்தான் என்பது உண்மை. இந்த ஏற்பாடு வேங்கியை அரசாளுகின்ற உரிமையை வேங்கியின் இளவரசன் குலோத்துங்கனிடமிருந்து பறித்துச் சென்றது. தனது தந்தையின் ஆட்சிக்குப் பின்பு, தானே அரசனாக வர எல்லா அரச இளவல்களும் விரும்புவது இயல்பேயாகும். இந்த எண்ணத்துடன்தான் அவன் சோழர்களோடு இணை சேர்ந்து சாளுக்கியரை எதிர்த்து நின்றான்; எனினும், ராஜதந்திரப் புரட்சியில் அவனுடைய எதிர்காலம் சூனியமாகி விட்டது. 1070-ல் குலோத்துங்கன் சோழ அரசனான பின்பு வேங்கி நாட்டின் அரசியலைக் குழப்ப விரும்பாமல் வாரிசு இல்லாத விஜயாதித்தியனையே அவன் 1076-ல் சாகும் வரை அரசனாக இருக்க அனுமதித்தான். சக்திவர்மன் II என்ற தன்னுடைய மகனை அரசுரிமை பற்றிய இராணுவப் போராட்டத்தில் ஏற்பட்ட போரில் இழந்து போன பின்பு, எஞ்சியவனாகக் காணப்பட்ட விஜயாதித்தியன் பதினைந்து ஆண்டுக் காலம் வேங்கியை ஆண்ட பின்பு, குலோத்துங்கனுக்கு அந் நாடு திரும்பக் கிடைத்தது.

திரிபுரி என்ற வங்கப் பகுதி நாட்டை ஆண்ட கைகேய குல மன்னன் யசாகாண தேவன் வேங்கியின்மேல் 1073-ல் படையெடுத்து வந்தான். இப் படையெழுச்சியை அடக்குகின்ற வகையில் குலோத்துங்கன் தனது படை எதையும் அனுப்பவில்லை. விஜயாதித்தியனோடு அவன் செய்துகொண்ட ஒப்பந்தம் அவ்விருவருக்கும் இடையே இருந்த பழைமையான பகையுணர்ச்சியைத் துடைத்து விடவில்லை என்பதைக் காட்டுகிறது. மேலும், கிழக்கு கங்க மன்னன் ராஜராஜன் குலோத்துங்கனுக்கும் விஜயாதித்தியனுக்கும் இடையே நல்லுறவு ஏற்படுத்த மேற்கொண்ட முயற்சிகளைப்பற்றித் தனது கல்வெட்டுகளில் கூறுகிறான். இவ்விரண்டு ஆதாரங்களைக்கொண்டு வேங்கி நாடும் சோழ நாடும் பரஸ்பர

நல்லெண்ணத்தோடு உறவு கொள்ளவில்லை என்பதை அறியலாம். சோழர்களோடு ஏற்பட்ட 1076ஆம் ஆண்டுக்குரிய இப் போரில் அடைந்த தோல்விக்குப் பின்பு, மேலைச்சாளுக்கிய மன்னனான விக்கிரமாதித்தியன், குலோத்துங்கனுடைய வேங்கி நாட்டரசியலை ஊறுபடுத்துகின்ற முயற்சியை இடையறாது மேற் கொண்டான். எனினும், 1092-ல்தான் அதற்குரிய பயன் கிடைத்தது. சோழ நாட்டுக்கு விரோதமாகத் தென் கலிங்கத் தினரை விக்கிரமாதித்தியன் தூண்டி விட்டான். கலிங்கத்தாரை அடக்கி வரச் சோழப் படையினர் வடதிசை செல்ல வேண்டிய தாயிற்று. இவ்வாறு சோழருக்குக் கட்டுப்பட்டிருந்த மன்னர்களைச் சோழருக்கே பகைஞராக மாற்றுகின்ற கீழைச்சாளுக்கிய ராஜ தந்திரம் பயன் தரத் தொடங்கியது எனலாம்.

இவ்வாறு 1076-லிருந்து 1118 வரை வேங்கி நாடு 42 ஆண்டு களாகச் சாளுக்கிய சோழனான குலோத்துங்கனுக்கு உரிய இயல்பான பாத்தியதையாக விளங்கியது. 42 ஆண்டுகளில் குலோத்துங்கனின் மைந்தர்கள் அரசப் பிரதிநிதிகளாக வேங்கியை ஆண்டார்கள். இவ்வாறு வேங்கியை ஆண்ட ராஜப் பிரதிநிதிகளும், அவர்கள் ஆண்ட காலங்களும் பின் வருமாறு :

| | | |
|---|---|---|
| I | ராஜராஜ மும்முடிச் சோழன் | 1076—1077 |
| II | வீர சோழன் | 1078—1084 |
| III | ராஜராஜ சோழ கங்கன் | 1084—1089 |
| IV | வீர சோழன் (மறுபடியும்) | 1089—1093 |
| V | விக்கிரம சோழன் | 1093—1118 |

மேற்சொல்லப்பட்டவர்களில் முதல் இளவரசன் ஓர் ஆண்டுக் கால ஆட்சிக்குப் பின்பு சோழ நாடு திரும்பிவிட்டான். வேங்கிக்கு இவனை அடுத்துப்போன வீரசோழன் தந்தையோடும் சகோதரனோடும் முரண்பட்ட நிலையில் திருப்பி அழைக்கப்பட் டான். மூத்த மகனான இவன் ஐந்தாண்டுகள் இடைவெளிக்குப் பின்பு திரும்பவும் வேங்கி சென்றான். 1093வரை அவன் ஆண்ட பின்பு—குலோத்துங்கனுக்குப் பின்பு—சோழ அரச பதவி பெற்ற விக்கிரம சோழன் வேங்கிக்குச் சென்று 1118 வரை ஆண்டான். 1118ஆம் ஆண்டுக்குப் பின்பு 1202ஆம் ஆண்டில் ஏற்பட்ட மல்லப்ப தேவர் என்ற பித்தாபுரம் கல்வெட்டின்படி, ஐந்து திரா விடரை ஆந்திரத்தோடு சேர்த்து குலோத்துங்கன் 50 ஆண்டுகள் ஆண்ட பின்பு வேங்கி நாட்டில் அராஜகம் நிலவியது என்பது

தெரிய வருகிறது. ஆந்திர தேசம் குண்டூர் மாவட்டம் கொம்மூறு கல்வெட்டு (1118ஆம் ஆண்டுக்குரியது) கூறுவது போல, வேங்கி பதிலாயிரம் என்ற வேங்கிப் பகுதியை விக்கிரமாதித்தனுடைய தளகர்த்தன் அனந்தபாலன் ஆண்டான். 1118ஆம் ஆண்டளவில் தெலுங்கு நாட்டுக் குறுநில மன்னர் பலர் தம்முடைய தலைவன் மேலைச்சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனே என்று தங்களுடைய கல்வெட்டுகளில் சொல்லிக்கொள்கிறார்கள். ஆந்திர நாடு எங்கும் சாளுக்கியக் கல்வெட்டுகள் காணப்படுவதால் விக்கிரமாதித்தன் சோழருடைய ஆதிக்கத்தை வேங்கியிலிருந்து அப்புறப்படுத்திய அளவில் ஏறக்குறைய பத்தாண்டுகள் (1116—1126) அப் பகுதியின்மேல் தன்னுடைய மேலாதிக்கத்தைச் செலுத்த உரிமையுடைய பேரரசன் என்ற அந்தஸ்தை அனுபவித்தான். 1116-ல் கங்கபாடி என்ற தென் மைசூர்ப் பகுதியை ஏற்கெனவே இழந்திருந்த குலோத்துங்கனுடைய சோழப் பேரரசு, தமிழகம் என்றளவில் குறுகிக்கொள்ள வேங்கியின் இழப்பு பெருமளவிற்குக் காரணமாக விளங்கியது. 1126-ல் விக்கிரமாதித்தன் இறந்த பின்பு குலோத்துங்கன் மகன் விக்கிரம சோழன் வேங்கியைத் திரும்பவும் 1133 அளவில் கைப்பற்றியதை இங்கு நினைவு கூர்தல் அவசியம்.

**3. பாண்டியரோடு போர்கள் (1075, 1081):** வீரராஜேந்திரன் 1070-ல் இறந்த பின்பு அதே ஆண்டில் குலோத்துங்கன் சோழ மன்னனாகத் தன்னை ஆக்கிக்கொள்ளும்வரை இடைப்பட்ட அதிராஜேந்திர சோழனுடைய சில மாத ஆட்சியில் சோழ நாட்டில் அரசியல் குழப்பச் சூழ்நிலை காணப்பட்டது. மத்திய அரசின் அதிகாரம் மங்கியது. இதைப் பயன்படுத்திப் பாண்டிய நாட்டில் அரசியல் சுயேச்சை கிளர்ந்தெழுந்தது. இது பாண்டியருக்குரிய இயல்பான அரசியல் போக்கே. 1075-ல் மேலைச்சாளுக்கியப் போரை முடித்துக்கொண்ட குலோத்துங்கன் அடுத்து பாண்டியரை அடக்கியிருக்க வேண்டும்; பாளைய சிவராம் என்னுமிடத்திலுள்ள குலோத்துங்கனுடைய கல்வெட்டு, பாண்டிய மன்னனுடைய தலை தரையில் உருண்டதாகவும், அதனைக் கழுகுகள் கொத்தியதாகவும் கூறுகிறது. 1080-ல் ஏற்பட்ட இக் கல்வெட்டு 1075ஆம் ஆண்டுக்குரிய இந்த நிகழ்ச்சியைப்பற்றி மட்டும் குறிக்கிறது. இந்த நிகழ்ச்சிக்குரிய போரினைப்பற்றிக் கூறவில்லை.

சமஸ்கிருத மொழியில் சிதம்பரத்தில் காணப்பட்ட தேதி குறிக்கப்படாத கல்வெட்டொன்று ஐந்து பாண்டியர்கள் குலோத்துங்கனை எதிர்த்து அழிந்ததைச் சொல்லுகிறது கோட்டாறு

என்ற நாகர்கோவிலிலுள்ள கோட்டை சோழனால் தீக்கிரையாக்கப்பட்டது. குலோத்துங்கனுடைய மற்றைய தமிழ்க் கல்வெட்டுகள் (S. I. I. III page 147) கூறுவது போலக் குலோத்துங்கன் அனுப்பிய சோழர் படைகளில் கடல் அலையென ஆர்ப்பரிக்கும் குதிரைகளும், குன்றமன்ன நாவாய்கள் போன்ற யானைகளும், பெருங்கடல் நீர் இறைப்பு போன்ற படைஞரும் காணப்பட்டனர். தெற்குப் பெருங்கடலை வடபெருங்கடல் சென்று தழுவிக்கொண்டது போல வந்த இச் சோழர்படை பாண்டியர் ஐவரும் சென்று ஒளிந்த காட்டினை அழித்தது; எத் திசைகளிலும் வெற்றித்தூண்களை நிறுவியது; முத்துசலாபத் துறைகளையும் பொதிகை மலையையும் கைப்பற்றியது. எல்லாப் பெருவழிகளிலும் இராணுவப் பாசறைகள் (garrisons) அமைக்கப்பட்டன. கோட்டாறு போன்ற இடங்களில் அமைந்திருந்த இந் நிலைப் படைகள் வெல்லப்பட்ட பகுதிகளை அடக்கி வைக்கின்ற முறையில் போராயத்தமாக எப்போதுமே காணப்பட்டன. திருவனந்தபுரத்திற்குத் தெற்கே கடற்கரை ஓரமாக அமைந்திருந்த சேரர்தம் கோட்டையான விழிஞத்திலும் திருவனந்தபுரத்துச் சாலையிலும் நடந்த போர்களில் சேரர்கள் சோழர்களால் தோற்கடிக்கப்பட்டதாகக் கலிங்கத்துப்பரணி சொல்கிறது. இராமநாதபுரத்துச் செம்பொன்மாரியும் இத்தகைய போர்க்களமாக அமைந்திருந்தது எனக் குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ் என்ற நூல் குறிப்பிடுகின்றது. பாண்டியர் சேரர் படையணிகளில் வீராவேசத்தோடு போராடுகின்ற இயல்புக்குரியவர்களாகக் காணப்பட்ட சேவேர்கள் (சேர்வைகள்) வெல்லப்பட்டார்கள். ஆனாலும், அப் பகுதியில் சோழருக்கான எதிர்ப்பு அணி வளரத்தான் செய்தது. இந் நிகழ்ச்சிகள் எல்லாம் 1081-ஆம் ஆண்டுக்குரிய சோழர் படையெடுப்பில் ஏற்பட்டன.

பெருவழிகளில் ஆங்காங்கே ஏற்பட்டிருந்த பாசறைகள் குலோத்துங்கனுடைய ஆட்சி முறையில் ஏற்பட்ட மாற்றத்தைக் குறிப்பிடுகின்றது. ராஜராஜ சோழன், ராஜேந்திரன் ஆகிய இருவரின் ஆட்சிக் காலத்தில் சோழரின் நேரடிஆட்சி பாண்டியர், சேரர் பகுதிகளில் ஏற்பட்டன. குலோத்துங்கன் இம் முறையைக் கைவிட்டான். இரத்த நாளங்கள் போன்ற பெருவழிகளில் இராணுவப் பாசறைகள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்ட நிலையில் சோழரின் வலிமை முடிச்சுகளாகவும், சோழரின் மத்திய அரசின் இணைப்புத் தொடர்சங்கிலியாகவும் விளங்கின. நிலைப் படை என்ற பாசறைகளைச் சோழ மயமாக்குகின்ற அளவில் ஊர் போன்றவற்றிற்குப் பெயர் மாற்றம் வருடாந்திரக் கப்பப்பண வசூல்

என அமைந்த வழக்கமான சோழ ஏகாதிபத்திய வழிமுறைகள் தென்பகுதியில் இக் காலப்பகுதியில் மேற்கொள்ளப்பட்டன.

சேரர், பாண்டியர் மன்னர்கள் உள்நாட்டு நிர்வாகத்தில் சுயாட்சி பெற்று விளங்கினுர்கள். குலோத்துங்கனுடைய நேரடியான ஆட்சி இல்லாமல் சோழரின் இராணுவ மேலாண்மை மட்டும் அங்கே ஏற்பட்டது. சோழப் பேரரசின் தென்பகுதியில் அவன் நிர்மாணித்த ஆட்சியின் உள்ளோட்டமாகச் சோழரின் இராணுவம் ஆங்காங்கே அமர்ந்திருந்தது. இந் நிலே பிரிட்டனில் ஏகாதிபத்திய உரோமர்கள் கி. பி. முதலாம் நூற்ருண்டில் ஏற்படுத்திய இராணுவக்கேந்திர அமைப்பைப் போன்றதாகும். இவ்வாறு உள்நாட்டு நிர்வாகத்தில் மட்டும் சுயாட்சி பெற்றிருந்த தென்பகுதி ஆட்சியாளர்கள் தங்களுடைய நிலேயைப்பற்றித் திருப்தி கொள்ளவில்லே. ஆகவே, அரசியல் போராட்டம் நிகழ விடாமல் தடுக்கப்பட வேண்டிய சூழ்நிலே தொடர்ந்து வந்தது.

1075, 1081ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட குலோத்துங்கனின் பாண்டியப் படையெடுப்புகளில் மடங்கிச் சுருண்டு போன தென்பகுதி 1098-ல் கிளர்ச்சியுற்றது. அந்த ஆண்டில் மற்ருெரு படையெடுப்பைக் குலோத்துங்கன் நிகழ்த்த வேண்டியதாயிற்று. வேணுடு என்ற சேரர் பகுதி இக் கிளர்ச்சிக்கு முன்னேடியாக விளங்கியது. கலிங்கராயன் என்றும், நரலோக வீரன் என்றும் பெயர் படைத்த சோழர் படைத்தலேவன் இக் கிளர்ச்சியை அடக்குவதற்காக மேற்கொண்ட போர்களேச் சடாவர்மன் ஸ்ரீவல்லபன் என்ற பாண்டிய மன்னனுடைய கல்வெட்டுகள் கூறுகின்றன. தென் பகுதியில் ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சிகளே அடக்குவதில் குலோத்துங்கன் பெரு விருப்பு காட்டினுன். இதிலிருந்து தென் பகுதி பற்றி அவன் காட்டிய ஈடுபாடு விளங்குகின்றது.

1122-ல் குலோத்துங்கன் இறந்த பின்பு, சோழரின் கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் காணப்பெறவில்லே. 1166-ல் பாண்டியருக்குள் ஏற்பட்ட உள்நாட்டுப் போரில் ராஜராஜன் II என்ற சோழன் குறுக்கிட்டபோது சோழரின் பழைய இராணுவ மயமான நேரடி ஆதிக்கப்பிடிப்பு ஏற்பட வழி துலங்கியது. பாண்டியர்—சோழர் அரசியல் முரண்பாடு இவ்வாறு முற்றிக் கொண்டே போய்க் குலோத்துங்கன் III (1178—1218) காலத்தில் பெருமுகப்பு கட்டியது. சோழரும் பாண்டியரும் ஒருவருக்கொருவர் படையெடுத்து நாடழிப்பு என்ற பேரிழப்பை இழைப்பதில் ஈடுபடலானுர்கள். இத்தகைய தென் பிராந்தியப் போர்களேப் பொறுத்து

ஏற்பட்ட சோழர்களின் ஏகாதிபத்திய பிடிப்பிலிருந்து விடுபடுகின்ற கிளர்ச்சிப் பாதையில் தவழ்ந்து உருவானதுதான் பாண்டியனின் இரண்டாவது பேரரசு (1190—1395) ஆகும். இவ்விதமாகத் தோன்றிய இரண்டாவது பாண்டியப் பேரரசின் வளர்ச்சியின் முதல் படலமாகச் சோழப் பேரரசு 1279-ல் அழிக்கப்பட்டது என்பதை இங்கே நினைவூட்ட வேண்டும்.

**4. ஈழப்போர் (1070—1073):** குலோத்துங்கன் ஈழத்தில் ஆதிக்கப் போரினை நடத்தவில்லை. மாருக, சோழருக்கு ஈழத்தில் ஏற்பட்டிருந்த அரசியல் நலன்களைப் பாதுகாக்கின்ற போராட்டத்தில் அவன் ஈடுபட்டான். ஏனென்றால், குலோத்துங்கன் பதவி ஏற்ற 1070-லிருந்தே ஈழத்தினரின் மன்னன் விஜயபாகு விடுதலைக் கிளர்ச்சியைத் தொடங்கினன். 1058-ல் தனக்கு 17 வயது பருவத்தின்போது ரோகணப் பிரதேசத்தைச் சோழர்களிடமிருந்து மீட்டுக்கொண்ட இம் மன்னன், 'விஜயபாகு' என்ற பட்டத்தோடு சோழரோடு தொடர்ந்து போராடி, 1073-ல் முழு ஈழத்தையும் விடுவித்த பின்பு 1076-ல் ஈழநாட்டுக்குரிய ஏக மன்னனுகத் தனது முப்பத்தைந்தாவது வயதில் நிறை வளர்ச்சித் தோற்றம் கொண்டான். இவ்வாறு மூன்றுண்டுகள் நடத்திய இராணுவப் போராட்டத்தின் பயனுக 1058-லிருந்து தொடங்கப் பெற்ற விடுதலைக் கிளர்ச்சி பதினைந்து ஆண்டுகளில் ஈழத்தினருக்குப் பயனைத் தந்தது.

இவ்வாறு ஏற்பட்ட ஈழ மக்களின் சோழர் எதிர்ப்பு இராணுவப் போராட்டம் பின்வரும் நிகழ்ச்சிகளைக் கொண்டது: (1) 1070-ல் ரோகணப் பகுதியிலிருந்து சோழரின் ஆதிக்கப் பகுதியான வடபுலமான ராஜரத்தாவைக் குறி வைத்து விஜயபாகுவின் இராணுவம் செயல்படத் தொடங்கியது. பலூத்தா என்ற மலையின்மேலுள்ள கோட்டையைப் பாசறையாக்கி விஜயபாகு சோழர்களை எதிர்த்தான். சோழரின் படை தோற்ற பின்பு, சோழரின் படைத்தலைவனது தலை துண்டிக்கப்பட்டது. இதன் பின்பு புலத்தி நகரம் என்ற சோழரின் பிரதான நகரை ஈழத்தினர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள். இது கேட்ட குலோத்துங்கன் அனுப்பிய சோழர் படை அனுராதபுரம் என்ற முன்னுள் தலைநகரின் பக்கம் நிகழ்ந்த போரில் ஈழத்தாரைத் தோற்றேடச் செய்தது. வரககிரி அல்லது வகிரிகலா என்ற தீவைச் சென்றடைந்த விஜயபாகு தன்னம்பிக்கையை இழந்துவிடவில்லை. சோழர்கள் அம் மன்னனுக்கு விரோதமானவர்களைக் கலகம் செய்யத் தூண்டிவிட்டு விஜயபாகுவின் படை இருப்புகளின் பின்புறமுள்ள நிலப்பகுதிகளில் குழப்பம் ஏற்படுத்த

முயற்சித்தார்கள். ஈழ மன்னன் இக் கலகத்தை அடக்கியதோடு மட்டுமல்லாது கலகத்தலைவனைச் சோழர் பக்கம் உயிர்பிழைத்துப் போக விரட்டி விட்டான்.

(2) இரண்டாவது கட்டப் போராட்டத்தில் விஜயபாகுவின் இராணுவத் திட்டம் செயலாக்கப்பட்டது. அத் திட்டப்படி மூன்று படையெடுப்புகளில் சோழ ஆதிக்கப் பகுதியில் அமைந்திருந்த இராணுவ கேந்திரங்கள் அழிக்கப்பட்டன. முதலாவது படையெடுப்பு கடற்கரை ஓரமாக ஊர்ந்து வந்து சோழரின் ஈழத் தலைநகர் பொலனருவாவைப் பிடித்துக் கொண்டது. பின்பு அதற்கு விஜயராஜபுரி என்று ஈழத்தினர் பெயரிட்டார்கள். இரண்டாவது படை அனுராதபுரத்தை மகாதித்தா வழியாக வந்து கைப்பற்றியது. மூன்ருவது படையெடுப்பு ஈழ மன்னன் தலைமையில் மாவல்லிக் கங்கைக்குச் சென்றது.

(3) இவ்வாறு இராணுவ முறையில் வெற்றியடைந்து ஈழ நாடு முழுவதையும் பிடித்துக்கொண்ட விஜயபாகு மூன்று ஆண்டுகள் கழித்து 1076-ல்தான் முடிசூட்டு விழாவை நடத்த முடிந்தது. இதற்குக் காரணம் அப்போது ஏற்பட்ட ஒரு கலகந் தான். இதுபற்றி மகாவம்சம் தெரிவிக்கிறது.

**5. சோழரின் மறைமுக முயற்சியும் தோல்வியும் (1088):** 1073-ல் ஈழத்திலிருந்து சோழரை விரட்டிய பின்பு விஜயபாகுவை அமைதியான முறையில் ஈழத்தில் ஆட்சி செய்யக் குலோத்துங்கன் அனுமதிக்கவில்லை. 991-லிருந்து சோழரின் பிடிப்பில் ஈழத்தின் வடபகுதி உறுதியான முறையில் தொடர்ந்து காணப்பட்டது. 1070-க்குமேல் ஈழம் சுதந்தரம் பெறுவதைக் குலோத்துங்கனுல் சகித்துக்கொள்ள முடியவில்லை. பாண்டியர் – சேரர் கொந்தளித்துக் கிளம்பிச் சோழரை எதிர்க்கத் துணிகின்ற அளவில் ஈழத்தினர் அவர்களுக்கு உதவி செய்கின்ற முறை காணப்பட்ட தென்னக அரசியலைச் சீர்படுத்துகின்ற இடையருத முயற்சியில் ஈழத்தைத் தன் கையில் வைத்திருப்பது தலையாய காரியம் என்று பராந்தகன் I முதல் குலோத்துங்கன் வரை மிக அழுத்தமாக நினைத்தார்கள். இராணுவ வழிகளில் ஈழத்தைத் தன் பிடிப்பில் வைத்துக்கொள்ள முடியாத குலோத்துங்கன் இரகசியமான ராஜதந்திர வேலைகளைக் கையாளத் தொடங்கினுன். ஈழத்தின் கடந்த கால வரலாறு இதனை அவன் மேற்கொள்ளத் துணை நின்றது. 991ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்டுப் போன சோழருடைய ஆதிக்கத்தின் பயனுகத் தமிழர்களின் எண்ணிக்கை.

கணிசமாக ஈழத்தில் காணப்பட்டது. சோழர்களின் வெளியேற்றத்திற்குப் பின்பு தமிழர்கள் ஈழத்தினரான சிங்களவரின் படைகளில் அங்கம் வகித்தார்கள். இந்த இரண்டு விஷயங்களை மனதிற் கொண்டு அத் தமிழர்களைத் தன் பக்கம் தமிழின உணர்ச்சியைத் தூண்டிய அளவில் சேர்த்து அரசியல் ஆதாயம் தேட குலோத்துங்கன் முற்பட்டான்.

1088ஆம் ஆண்டளவில் விஜயபாகுவைச் சந்திக்க வந்த விக்கிரமாதித்தனுடைய தூதர்களை நல்ல முறையில் உபசரித்தும் சோழ மன்னனின் தூதர்களை அலட்சியம் செய்தும் ஈழ மன்னன் நடந்துகொண்டான் என்ற எண்ணம் குலோத்துங்கனுக்கு ஏற்பட்டது. ஈழத்தினரின் பரிசுகளோடு விக்கிரமாதித்தனிடம் சென்றுகொண்டிருந்த சிங்களத் தூதர்கள் சோழ நாட்டின் கடற்கரையில் இறங்கியபோது மூக்கறுக்கப்பட்டு அங்கஹீனம் செய்யப்பட்டார்கள். சோழர்களின் இத்தகைய அடாத செயலைப் பாதிக்கப்பட்ட தூதரின் முறையீட்டில் தெரிந்துகொண்ட விஜயபாகு, சோழ மன்னனின் தூதரைத் தனது அவைக்களத்திற்கு வரச் செய்து, பெண்ணுடை தரிக்கச் செய்தான். குலோத்துங்கனோடு போரிடத் தயாராக உள்ள நிலையை அவர்தம் மன்னனிடம் தெரிவிக்கச் சொன்னான். சோழரோடு தனித் தீவிலாவது, சோழன் குறிப்பிடும் எந்த இடத்திலாவது போர் நிகழ்த்தி பலப்பரீட்சை நடத்தலாம் என்ற சூளுரை கலந்த போர் அறைகூவலை விடுத்த விஜயபாகுவிற்கு அவன் படைகளிடமிருந்தே எதிர்ப்பு வந்தது. தமிழினத்தைச் சேர்ந்த வேளைக்காரப் படை அவனுடைய போர் ஆயத்தங்கண்டு சோழ நாடு சென்று போர் புரிய மறுத்துக் கலகம் செய்தது. மற்றைய இராணுவ வீரர்களைவிட உயிர் துறப்பதற்குக் கூட ஆயத்தமாக இருக்கக்கூடிய ஒரு பயிற்சி முறையும் மனப்போக்கும் கொண்ட போர் வீரர்கள் வேளைக்காரப் படை என்ற பகுப்பில் அடங்குவர். இவர்கள் கலகம் செய்வது நாட்டிற்குப் பெருங்கேடு எனக் கொள்ளல் வேண்டும். இதைத் தான் குலோத்துங்கன் எதிர்பார்த்துக் காத்திருந்தான். குழம்பிய குட்டையில் மீன் பிடிக்கின்ற முறையில் அவன் ஈழத்தின்மேல் படையெடுக்கவில்லை. ஆனாலும், ஈழ நாட்டின் அரசியலில் ஏற்பட்ட கொந்தளிப்பு அவனுடைய ராஜதந்திரத்தைச் சாரும்.

ஈழ மன்னனின் ஆணைக்கேற்ப அவனுடைய இரண்டு படைத் தளபதிகள் மட்டிகாவததா, மகாதித்தா என்ற இடங்களில் கடல் கடந்து படையெடுத்துத் தமிழகம் செல்வதற்கான கப்பல்களையும் தளவாடங்களையும் சேகரித்துக்கொண்

டிருந்தபோது அவர்களை வேளைக்காரப் படையினர் கொன்று விட்டனர் ; விஜயபாகு தங்கியிருந்த பொலனருவாவின் சுற்றுப் பகுதியில் கொள்ளை அடித்து, அந் நகரத்தையும் சூழ்ந்து தாக்கி, மன்னன் அரண்மனைக்குத் தீயிட்டனர் ; மன்னனின் இளைய தங்கையோடு அவளுடைய மைந்தர்களையும் பிடித்துக் கொண்டனர். மன்னன் தெற்கே தப்பிச் சென்று வாதகிரி என்னுமிடத்தில் தன்னுடைய திரவியங்களைப் பாதுகாப்பாகப் புதைத்து வைத்துவிட்டு, பொலனருவாவை நோக்கிப் படையுடன் வந்தான். சிங்கநிகர் நெஞ்சுரங்கொண்ட வீரபாகு என்ற உபராஜாவின் துணையோடு, அந் நகரம் விஜயபாகுவால் கைப்பற்றப்பட்டது. வேளைக்காரப் படையினரின் பின் கைகள் கட்டப்பட்டு, அவர்களால் கொல்லப்பட்ட படைத் தளபதிகளின் தகனத்தில் உயிரோடு எரிக்கப்பட்டார்கள். குலோத்துங்க னுடைய தூண்டுதலில் இனப்பற்றுதலோடு நடந்துகொண்ட தமிழின வேளைக்காரப் படையினரின் கதி இந்த அவலமான சாவில் சென்று முடிந்தது. குலோத்துங்கனின் வரவை எதிர்பார்த்துக் கடற்கரையில் ஈழ மன்னன் காத்திருந்து விட்டு, சோழர்கள் வராததைக் கண்டு புலத்தி நகரம் சென்று தங்கலானுன்.

1088ஆம் ஆண்டளவில் நடைபெற்ற இந் நிகழ்ச்சிகளை ஈழத்தினரின் மகாவம்சந்தான் தெரிவிக்கிறது. ஈழத்தை இழந்தது பற்றியோ மற்றைய செய்திகள்பற்றியோ சோழர்களின் தமிழகக் கல்வெட்டுகள் யாதும் கூறவில்லை. குலோத்துங்கனுடைய கல் வெட்டுகள் ஈழத்தில் காணப்படவில்லை என்பது சிறப்புச் செய்தி யாகும். இவ்வாறு 1070-லிருந்து விடுதலைக் கிளர்ச்சியின் வெற்றி யைச் சந்தித்த ஈழத்தினர்கள் 1088-ல் சோழப் பேரரசுக்கு இராணுவச் சவால் விடக்கூடிய அளவிற்குத் தன்மதிப்பும் சுயவலிமையும் கொண்டார்கள்.

குலோத்துங்கன் 1073-ல் ஈழத்தை இழந்த பின்பு, ஈழம் தன்னுடைய சுயேச்சை அரசியலில் தனியார்வத் துடிப் போடு முன்னேறிய போது, ஆங்குக் குறுக்கிட்ட வேளைக்காரப் படையினரின் கலகம் 1088-ல் நிகழ்ந்தது. இக் கலகம் அடக்கப்பட்டது. இதன் பின்பு, எதிர்தரப்பு ராஜதந்திரத்தைத் தவிர்த்த நிலையில், ராஜதந்திர மணவினை உறவுக்கு ஈழ மன்னனை உட்படுத்தக் குலோத்துங்கன் முயற்சித்து, அதில் வெற்றியும் பெற்றுன். தனது மகள் சுத்தமல்லியாரைச் சிங்கள-பாண்டிய இரத்தக்கலப்புள்ள ஈழ மன்னர்குல இளவலுக்கு அவன் மண முடித்துக் கொடுத்தான். இவ்வாறு ஈழநாட்டின் இழப்பு மனத்

தளவில் தேற்றப்பட்டு விட்டது. பகைவுறுக விளங்கிய மேலைச் சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனுக்குத் தன் மகளை மணஞ் செய்வித்த வீரராஜேந்திரன் எதிர்பார்த்த நல்லிணக்க அரசியல் உறவுகள் சோழர்-சாளுக்கியர் அரசியலில் தோன்றுமலேயே போனது போல ஈழமும் சோழப் பேரரசும் குலோத்துங்கன் மேற் கொண்ட மணவினைத் தொடர்புமூலம் பெயரளவிற்கு நெருக்கம் பெற்றன என்றாலும், அவர்களுடைய அரசியல் உறவுகளில் நல்லிணக்கம் என்ற வளப்பம் காணப்பெறவில்லை. ஈழத்தினர்கள் எப்போதும் போலவே பாண்டியர்கள் பக்கமே சார்ந்து நின்று சோழர்களின் ஏகாதிபத்தியப் போருக்கு எதிரான கூட்டணி சேர்ப்பதில் தனியொரு முனைப்பைக் காட்டிக்கொண்டார்கள். சோழருடைய இராணுவப் பாதுகாப்புக்குப் பாண்டியர்களின் ஒற்றுமையின்மையும் அரசியல் சுயேச்சையின்மையும் அரண்கள் என்று சொன்னால் அப் பாண்டியனின் உதவி ஈழத்தினரின் பாதுகாப்புக்குரிய நேரடித் தேவையாகவும் காணப்பட்டது. இவ்வாறு பாண்டியரின் அழிவு சோழரின் நலமாகவும், அதே பாண்டியரின் ஆக்கம் ஈழத்தின் பாதுகாப்பாகவும் அமைந்து போன தென்புலத்து அரசியலில் குலோத்துங்கன் பாண்டியரோடு ஈழத்தினரையும் சேர்த்து அடக்குவிப்பதற்குக் கொண்ட முயற்சி தோல்வி அடைந்தது. குலோத்துங்கனுக்குப் பின்பு சோழப் பேரரசிற்கும் ஈழத்திற்கும் ராஜராஜன் II (1173—1178) காலத்தில்தான் மோதல்கள் ஏற்படுகின்றன. அரசுரிமைக்காக ஏற்பட்ட உள் நாட்டுப் போரில் ஈடுபட்ட பாண்டியரின் பங்காளிக் கட்சிகளில் எதிரெதிர்ப் பக்கங்களில் சேர்ந்து சம அந்தஸ்து உள்ள அரசுகள் என்றளவில் ஈழமும் சோழப் பேரரசும் மோதிக் கொண்டன. தென்னக அரசியலில் தனித்தனியாகச் செல்வாக்கு தேடுகின்ற ராஜதந்திரப் போராட்டத்தை இராணுவ வழிமுறையில், சோழர் களோடு மோதிக்கொண்ட நிலையில், ஈழத்தினர்கள் தொடங்கினார்கள். வரலாற்று வளர்ச்சிக்கு ஈழம் தன்னை—இத்தகைய தன்னாட்சி உரிமையோடுகூடிய காலப்போக்கில்—தகுதிபடுத்திக் கொண்டது.

**6. கலிங்கப் போர் I—தென் கலிங்கம் வெற்றி (1096) :** 1093-ல் வேங்கி நாட்டுக்குச் சோழ மத்திய அரசின் கடைசி ராஜப் பிரதிநிதியாக விக்கிரம சோழன் சென்றமர்ந்தான். இவ் விக்கிரமனே தன் தந்தை குலோத்துங்கனுடைய எண்ணப்படி சோழ அரசனானான். அவன் வயதில் இளவலாகி இருந்த காரணத்தால் வேங்கி நாட்டுக்கு அடங்கியிருந்த ஏனைய பகுதிகளான எல்லாறு என்று தற்போது அழைக்கப்பெறும் கொலானு என்னுமிடத்தின் தலைவனும், ஸ்ரீகாகுளம் என்னுமிடத்தைத் தலைநகராகக்

கொண்ட குளம் என்ற பெயருடைய நிலப்பகுதியின் அரசனுன பீமன் என்ற பரம்பரைப் பெயர் படைத்த தெலுங்கு பீமனும் வேங்கிமேல் படையெடுத்து வந்தனர். மேலைச்சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனுடைய அரசியல் சூழ்ச்சியின் விளைவாகத்தான் இத்தகைய படையெடுப்பு நிகழ்ந்தது. விக்கிரம சோழனுக்குப் பாண்டிய மன்னன் பராந்தகன் நேரடியாக வந்து நின்று உதவி செய்தான். ஐவர் பாண்டியரைக் குலோத்துங்கன் அடக்கிய பின்பு, இத்தகைய முறையில் பாண்டிய மன்னன் சோழப் பேரரசின் ஆக்கத்திற்குத் துணை நின்ற முறை ஆராய்ச்சிக்கு உரியது ஆகும். சோழ நாட்டுக்குரிய வேங்கிக்கு உட்பட்ட மன்னர்களான கொலானுத் தலைவனும், தெலுங்கு பீமனும் எவ்வாறு தோற்கடிக்கப் பட்டார்கள் என்பது பற்றிய விளக்கவுரை கிடைக்கவில்லை. ஆனுலும், அவர்தம் எழுச்சி அடக்கப்பட்டு, அவர்களுடைய நாடுகள் சோழரின் வேங்கிக்கு அடி பணிந்து போயின என்பதற்கு ஆதாரங்கள் உண்டு. சிம்மாச்சலம் என்னுமிடத்திலுள்ள 1021ஆம் ஆண்டுக்குரிய குலோத்துங்கனின் கல்வெட்டும் திராட்சராமம் என்னுமிடத்தில் காணப்பெறும் ஏனைய கல்வெட்டு களும் சோழரின் ஆதிக்கம் 1096-ல் நிகழ்ந்த தென் கலிங்கப் போருக்குப் பின்பு தென்கலிங்கப் பகுதியில் நிலை நின்றது என்பதைத் தெளிவுறுத்தும்.

**7. கலிங்கப்போர்—வடகலிங்க வெற்றி (1112):** 1096 அளவில் தென்கலிங்கத்தை வெற்றி பெற்ற குலோத்துங்கன் 16 ஆண்டுகள் கழிந்து ஏழு கலிங்கம் என்று அழைக்கப்பட்ட வட கலிங்கத்தை வென்ருன். அதை ஆண்ட அனந்தவர்மன் சோழ கங்கன் என்பவன் குலோத்துங்கனுடைய தாய்மாமனுகிய வீரராஜேந்திரனுடைய மகள் ராஜசுந்தரி என்ற தாய்க்கும் கலிங்க மன்னன் ராஜராஜனுக்கும் பிறந்தவன். அனந்தவர்மன் கப்பங் கட்டாததைக் காரணமாகக் காட்டித்தான் இச் சோழர் படை யெடுப்பு 1112ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. காஞ்சியிலிருந்து பல்லவர் குல வண்டையர் தலைவன் கருணுகரத் தொண்டைமான் தலைமையில் சோழர்படை கலிங்கம் சென்றது. காஞ்சியில் அரசவை நடத்திய குலோத்துங்கனுடைய கவனத்திற்குக் கலிங்க மன்னன் சோழருக்குரிய கப்பத்தைக் கட்டாமல் இருக்கின்ற செய்தி கொண்டுவரப்பட்டபோது, அவனை அடக்கக் கருணுகரன் முன் வந்தான்; அப்போது கலிங்கப் படையெடுப்பு நிகழ்ந்தது என்பது கலிங்கத்துப்பரணி தரும் இலக்கியச் சார்புடைய செய்தி ஆகும். அப் போரிலக்கிய காவியம் கலிங்க மன்னன் கப்பங்

கட்டாமையால் வந்த கலிங்கப் போர் என்றளவில் இப் படையெடுப்புக்கு நியாயம் கற்பிக்கிறது. இதை வரலாற்று ஆதாரமாகவும் நாம் கொள்ளலாம்.

சோழப் பேரரசுக்கு வட கலிங்கம் உட்பட்டிருந்ததற்கு ஆதாரம் எதுவும் இல்லை. திராட்சராமம் என்னுமிடத்தின் சாகா 1003-க்குரிய (கி.பி. 1080) கல்வெட்டில் திரிகலிங்காதிபதியின் பிரதானி என்ற அமைச்சனுடைய மனைவி அளித்த கொடை விஷ்ணு வர்த்தனன் (குலோத்துங்கனின் இயற்பெயர்) ஆட்சிக் காலத்தில் செயல்பட்டதாகக் காணப்படுகிறது. அப்படியாயின், அனந்தவர்மனின் தந்தை ராஜராஜன் காலத்தில் கலிங்கம் சோழருக்கு அடங்கிய நாடாக இருந்திருக்க வேண்டும். விசாகப்பட்டினம் செப்பேடுகள் கலிங்க மன்னன் ராஜராஜன், தான் பங்கு பற்றிய ஒரு தமிழ்ப் போரில் வெற்றி பெற்ற பின்பு தான், சோழ மங்கை ராஜ சுந்தரியை மணம் முடித்தான் எனக் கூறுகின்றன. ஆகவே, தன்மானத்தோடு சோழரிடம் மணவினை கொண்டு, 1074-லிலிருந்து 1150வரை 76 ஆண்டுகளுக்குரிய ஆட்சி செய்து வந்த அனந்தவர்மன், எந்தக் காலத்திலும் சோழருக்குக் கப்பங்கட்டியது கிடையாது என்பது பேராசிரியரின் கருத்து (சோழர்கள், பக்கம் 323). ஆகவே, கலிங்கப்படை எழுச்சிக்கு முழுமுதற்காரணம் சோழரின் ஏகாதிபத்திய உணர்வு தான் என்று கூறலாமா ?

ஈழம் மட்டும் 1070-லிலேயே குலோத்துங்கனுடைய கையை விட்டு நழுவிச் சென்ற பிறகு சேர்ழப் பேரரசை உடைய விடாமல் அதன் தன்னிலையைப் (status quo) பாதுகாக்கக் குலோத்துங்கன் மேற்கொண்ட போர் இந்தக் கலிங்கப் போர் எனக் கொள்ளலாம். 1096-ல் அடக்கப்பட்ட தென்கலிங்கம், அவ்வாறு அடக்கப்படுவதற்கு முன்பு, சோழருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து சோழருக்குரிய வேங்கியைத் தாக்கியதற்கு மேலைச்சாளுக்கியரின் தூண்டுதல்தான் காரணமானது என்பது சோழரின் சிந்தனையை ஈர்த்தது வியப்பில்லைதான். திரும்பவும் வேங்கிக்கு ஆபத்து வட கலிங்கத்தின் மன்னனிடமிருந்து வரக்கூடாது என்பதற்காக வட கலிங்கப்போர் நிகழ்ந்தது என்று கொண்டால், அந் நானைய தென்னிந்திய அரசியலில் நிலவிய ராஜதந்திர உறவுகளைச் சார்ந்த கணிப்பாக அது அமையும். 1108-ல் குண்டூர் மாவட்டம் வேட்பூர்க் கல்வெட்டுக்குரிய கோடர்குல வீமன் என்ற மன்னன், அந்தக் கல்வெட்டில், அவன் கலிங்கத்தை வென்று சோழருக்கு அளித்ததாகச் சொல்லிக் கொள்கிறான். இவ்வாறு வட கலிங்கப் போர் கலிங்கத்தின் வீழ்ச்சியிலும், பின்பு அது சோழரின் உரிமை நாடாக

மாறுவதிலும் சென்று முடிவடைந்தது என்று கூறலாம். ஆனால், 1112-ல் நிகழ்ந்த இப் படையெடுப்பு, நீடித்த முறையில் அரசியல் விளைவுகளை ஏற்படுத்தவில்லை. 1115-லேயே மேலைச்சாளுக்கிய னுடைய நேரடிக் குறுக்கீட்டின் காரணமாக 1118-ல் விக்கிரம சோழன் தனது முதிய தந்தை குலோத்துங்கனுக்கு உதவி செய்ய வேங்கி நாட்டிலிருந்து தாயகம் திரும்பிய பின்பு, வேங்கி நாடு சோழரிடமிருந்து கழன்று சென்றுவிட்டபோது, குலோத்துங்கன் மற்றொரு படையெடுப்பை நிகழ்த்த ஆணை இடவில்லை என்பது சிறப்புச் செய்தியாகும்.

கலிங்கப் போரினை நிகழ்த்த வேண்டிக் கருணாகரன் என்பவன் வாணக் கோவரையன், முடிகொண்ட சோழன் என்ற இரு சோழர் படைத் தளபதிகளின் உதவியோடு பாலாறு, பொன்முகரியாறு, பெண்ணாறு, மண்ணாறு, கிருஷ்ணா, கோதாவிரி, பம்பா, கோதமை போன்ற ஆறுகளைக் கடந்து 'எழு கலிங்கம்' அடைந் தான். கிழக்கில் உட்கலமும் மேற்கே வேங்கியும் கொண்ட பெரு நாட்டையுடையவன் எனத் தன்னைக் கூறிக்கொண்ட அனந்த வர்மனை அவனுடைய அமைச்சன் எங்கராயன் குலோத்துங்க னுடைய முன்னாள் படைவலிமைச் சிறப்புகளைச் சொல்லிப் போரைத் தவிர்க்குமாறு எச்சரித்தான். சோழர் படையினர் அக் கால வழக்கப்படி தாங்கள் கைப்பற்றிய பகுதிகளில் பொருள் கவர்ந்தும், நாடு நகரங்களைத் தீக்கிரையாக்கியும் தம் வழியே சென்றனர். அனந்த வர்மன் போரிடத் தீர்மானித்தான். போரில் தோற்றோடிக் காட்டிற்குள் சென்று ஒளிந்த அவனைக் கருணாகரன் சிறைப்பிடித்துக் குலோத்துங்கன் இருந்த கங்காபுரிக்குக் கொண்டு வந்தான். இச் செய்திகளைக் கூறுகின்ற ஜெயங்கொண்டாருடைய கலிங்கத்துப்பரணியின் வரலாற்றுச் சார்பான உண்மைகளை நாம் வகைப்படுத்திப் பார்க்க வேறு ஆதாரங்கள் நமக்கு விளக்க மாகக் கிடைக்கவில்லை. திருச்சி மாவட்டம் சீநிவாச நல்லூரின் 1112ஆம் ஆண்டுக் கல்வெட்டும் தஞ்சை மாவட்டம் ஆலங் குடியின் 1115ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இப் போரினைப் பற்றிய சிறு குறிப்புகளைத்தான் தருகின்றன. கேத்தணன், மாதவன், மட்டையன், ரச்சனன், ராசணன், ரேத்தனன், தலைமைத் தளபதி தாமயன், அமைச்சன் எங்கராயன் ஆகியோர் இக் கலிங்கப் போரில் மடிந்தனர். 1074-ல் பதவிக்கு வந்த அனந்த வர்மன் 1150 வரை ஆட்சியிலிருந்தான். ஆகவே, வட கலிங்கம் இத் தலைவர்களை இழந்த நிலையில் போரில் தோல்வி யுற்ற போதிலும் குறிப்பிடத்தக்க அரசியல் மாறுதல் எதையும் அடையவில்லை.

**8. கங்கபாடிப் போர் (1116)— கங்கபாடி இழப்பு :** மேலைச்சாளுக்கியரை எதிர்த்து மைசூரின் கன்னடிய மன்னர் குலமான போசளர்கள் அரசியல் வளர்ச்சி பெற்றுர்கள். பிட்டிக விஷ்ணுவர்த்தனன் (1100—1152) காலத்திய 1116ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டில் சோழருக்குப் பாத்தியமான தழைக்காடும் குவளாலயபுரம் என்ற கோலாரும் அவனடிப்பட்டிருந்தன என்ற குறிப்பு வருகின்றது. 1022-ல் நிருபகாமன் என்ற மன்னனுடைய ஆட்சிக் காலத்தில் தொடங்கிய போசள அரசின் வளர்ச்சி பேரரசாகி 1242-ல் முடிவடையும் வரை, தென்னிந்திய அரசியலில் நிலை பெற்றிருந்தது. சோழருக்கும், சாளுக்கியருக்கும், இரண்டாவது பாண்டியப்பேரரசின் மன்னர்களுக்கும் ஈடு கொடுத்து ராஜீய உறவுகளை வளர்த்துக்கொண்டு 200 ஆண்டுகளுக்கு மேலாக அப் போசளப் பேரரசு நீடித்தது. இத்தகைய பேரரசு வளர்ச்சிக்கு முதல் படியாகத் தென் மைசூர்ப் பகுதியான கங்கபாடியைக் குலோத்துங்கனிடமிருந்து போசளர்கள் கைப்பற்றினுர்கள். விஷ்ணுவர்த்தனின் இராணுவத் தளபதியான கங்கராஜன் கங்கபாடியைத் தன் மன்னன் சார்பில் பிடித்து, கொங்குநாடுவரை வந்தான்.

சோழரின் சாமந்தனுக இருந்த தகடூர் அதிகமான் மரபைச் சேர்ந்த அதிகமானின் கண்காணிப்பில் மலைமுடிக் கோட்டை நகரான தழைக்காடு இருந்தது. கங்கபாடியின் தலைநகரம் அது. தாமோதரன், நரசிம்ம வர்மன் என்ற மற்றைய தளபதிகளோடு அதிகமானும் கங்கராஜனிடம் தோற்றனர்; தழைக்காடு கைவிட்டுச் சோழ நாடு வந்தடைந்தனர். கங்கபாடியோடு நீலகிரி, நங்கிலி, கோலார் போன்ற பகுதிகளும் போசளரின் வசமாயின. போசளரின் படையெழுச்சி தெற்கே இராமேசுவரம் வரை சென்று மீண்டது என்பதற்குக் குலோத்துங்கனின் சமகாலத்தினனுன விக்கிரம பாண்டியனுடைய கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன. போசளரின் இராணுவத்தினிடமிருந்து ஆடுதுறையிலுள்ள தெய்வச் சிலைகளை மக்கள் காப்பாற்றினுர்கள் என்று அப் பாண்டியக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

இவ்வாறு கங்கபாடியைக் குலோத்துங்கன் 1116-ல் இழந்த நிலையில் விஷ்ணுவர்த்தனன் மேலைச்சாளுக்கியப் பேரரசன் விக்கிரமாதித்தனையும் எதிர்த்து வட இந்தியா வரை சென்று, பின்பு 1123-ல் மேலைச்சாளுக்கியன் விக்கிரமாதித்தனிடம் தோல்வியுற்று அவனிடமே சரணடைந்தான். கங்கபாடியோடு கொங்கு தேசத்தையும் குலோத்துங்கன் போசளரிடம் இழந்து போனதைவிட அப் பகுதிகளை ஆளத் தலைப்பட்ட போசள மன்னனை விக்கிரமாதித்தன் என்ற சோழரின் பகைவன்

ஆதிக்கம் கொண்டது. அரசியல் அவலமாகச் சோழருக்கு வந்து சேர்ந்தது. வேங்கி நாடும் கங்கபாடியும் விக்கிரமாதித்த னுடைய ஆதிக்கத்திற்கு உட்பட்டுப் போன நிலையில் சோழ நாட்டின் எல்லைகளில் மேலைச்சாளுக்கிய பகைவர்கள் நிலை பெற்று நின்றார்கள்.

## II வெளி நாடுகளோடு தொடர்பு

குலோத்துங்கன் வெளி நாடுகளோடு தானே நேரடியாகச் சென்ற நிலையில் தொடர்பு கொண்டிருந்தான் என்ற செய்தி களுக்கு ஆதாரங்கள் உண்டு. வேறு எந்த சோழப் பேரரசனும் இத்தகைய முறையில் வெளி நாடுகளோடு நேரடித் தொடர்புகள் கொண்ட 'இளங்கோ' பருவத்தைக் கொண்டிருக்கவில்லை. வெளி நாடுகளில் இவன் பெற்ற நேரடி அனுபவங்கள் இவனைச் சிந்தனைத்திறன் மிக்க ஆட்சியாளனாகவும் மனப் பக்குவமுடைய ஏகாதிபத்திய மாமன்னனாகவும் 'நாலுந்தெரிந்த' சோழ நாட்டு மன்னனாகவும் வளர்வதற்கு உறுதுணை செய்தன.

1. **கன்னோசி தொடர்பு:** 'அருந் தோட் கந்தா' எனத் தொடங்கும் சமஸ்கிருத மெய்க்கீர்த்தி {கன்னோசி என்ற கன்யா குப்ஜத்தின் மன்னனான மதனபாலனுக்கும் அவனுடைய மைந்தன் கோவிந்த சந்திரனுக்கும் உரியது. கங்காபுரியில் காணப்படும் நன்கொடைக் கல்வெட்டில் இந்த மெய்க்கீர்த்தி அரசனுடைய பெயரிடப்படாமல் காணப்படுகிறது. இதிலுள்ள சில சமஸ்கிருத சுலோகங்கள் இலட்சுமணபுரிப் பொருட்காட்சியில் உள்ள கோவிந்த சந்திரனுடைய செப்பேடுகளிலும் காணப்படு கின்றன. இந்த ஆதாரங்கொண்டு குலோத்துங்கனுக்குரிய கன் னோசித் தொடர்பை நாம் நிறுவலாம். கன்னோசி அரசர்கள் சூரிய வழிபாட்டை மேற்கொண்டவர்கள் ஆவார்கள். அதே போல அவர்களோடு கொண்ட தொடர்பின் பயனாகக் குலோத்துங்கனும் சூரிய வழிபாட்டில் ஈடுபட்டான் என்று சொல்லத்தக்க அளவில் தஞ்சை மாவட்டம் சூரியனார் கோவில் என்ற ஊரில் சூரியனுக்குக் கோவிலமைத்துப் பல நிவந்தங்கள் வழங்கினான். இக் கோவிலில் காசி விசுவநாதர் விசாலாட்சி என்ற வட இந்தியச் சார்புடைய கடவுளரின் படிமங்கள் அமைக்கப்பெற்றன. இவ்வாறு கன்னோசி ராஜ்யத்தினுடைய அரசர்களின் தொடர்பு குலோத்துங்கனுக்குக் கலாசார முறையில் பயனுள்ளதாக அமைந்திருந்தது. 1070-ல் குலோத்துங்கனுடைய அரசியல் பிடிப்பிலிருந்து ஈழத்தை மீட்டுக் கொண்டான். ஈழ மன்னன் விஜயபாகு ஈழத்தின் கிளர்ச்சிப் போரில் சோழரை எதிர்த்து ஈழத்தில் உயிரிழந்த கன்னோசி

மன்னன் ஜகதிபாலனுடைய மனைவி சோழநாட்டுச் சிறையி லிருந்து தப்பி வந்த பின்பு அவ் வட இந்தியத் தம்பதிகளின் மகளை இவன் திருமணம் செய்துகொண்டான். இவ்வாறு ஈழம் வரை கன்னேசியின் தொடர்பு பல ஆண்டுகளாகவே தொடர்ந்து காணப்பெற்றது. குலோத்துங்கனுக்குரிய தொடர்புகளும் இயல் பாகவே ஏற்பட்டவைதான் என்பதை ஈழத்தின் சான்று கொண்டு நிறுவலாம்.

**2. காம்போஜ நாட்டு மன்னனும் குலோத்துங்கனும் :** 1114ஆம் ஆண்டுக்குரிய குலோத்துங்கனுடைய கல்வெட்டு சிதம்பரத்தில் காணப்படுகிறது. அதில் குலோத்துங்கன் காம் போஜம் என்ற தற்காலத்திய கம்போடிய மன்னனிடமிருந்து விலையுயர்ந்த கல் ஒன்றைப் பரிசாகப் பெற்றதாகவும், அக் கல்லைக் குலோத்துங்கன் தில்லைக் கோவிலுக்கு எதிர்ப்புறமுள்ள மண்டபத்துச் சுவரில் வைத்து அழகு பார்த்தான் என்றும் சொல்லுகிறது. சீன நாட்டுக்குச் செல்கின்ற வழியில் உள்ள காம்போஜத் கிமர் பேரரசோடு குலோத்துங்கன் கொண்டிருந்த இத்தகைய நெருக்கம் முன்னுளையில் அவன் மேற்கொண்ட நேரடி விஜயத்தையும் அரசியல் செல்வாக்கையும் புலப்படுத்தும். குலோத்துங்கன் அனுப்பிய வணிகக்குழு 1077-ல் சீனம் சென்று அடைந்தது. இதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்பு 1068-ல் சீனம் போகும் வழியிலுள்ள காம்போஜத்திற்குக் குலோத்துங்கன் சென்று வந்தான். 1068-ல் வீரராஜேந்திரன் கடாரம் என்று பொதுவாக அழைக்கப்பெற்ற ஸ்ரீவிஜய நாட்டை மீட்டுத் தருமாறு அங்கிருந்து வந்த மன்னனொருவனின் வேண்டுதலுக்கு ஏற்ப, சோழர் படை ஒன்றை அனுப்பி வைத்த போது குலோத்துங்கனும் அப் படை யெடுப்பில் கலந்துகொண்டு அங்குச் சென்றான் என்பது கலிங்கத்துப்பரணி தரும் செய்தியாகும். அவ்வாறு சென்ற குலோத்துங்கன் காம்போஜ நாட்டின் பேரரசனைச் சந்தித்து அக் கல்லைப் பரிசுப் பொருளாகப் பெற்றிருக்கலாம்.

1063-லிருந்து 1070வரை குலோத்துங்கன் கீழைநாடுகளில் தான் தனது இளங்கோப் பருவத்தின் நாள்களைக் கழித்தான் என்றும், அப்போது ஸ்ரீவிஜய நாட்டைச் சோழரின் ஆதிக்கப் பகுதியாக மாற்றினான் என்றும் ஓர் ஆராய்ச்சிக் கருத்து உண்டு. 1090-ல் ஸ்ரீவிஜய நாட்டிலிருந்து வந்த தூதுக்குழுவினரின் விண்ணப்பத்தின்படி நாகப்பட்டினத்துப் புத்த கோவில்கள் இரண்டிற்கு உரிய நிவந்தங்களைச் சாசனம் செய்து கொடுத்த குலோத்துங்கனுடைய உறவுகள் ஸ்ரீவிஜயத்தாரோடு நெடுக்கமும் நீடிப்பும் பெற்று விளங்கின.

**3. பர்மா நாட்டோடும் தொடர்பு உண்டா?** கையான் சித்தா என்ற பர்மிய அரசன் (1084 – 1112) சோழ இளவரசன் ஒருவனைச் சந்தித்துப் புத்த சமயத்திற்கு அவனை மாற்றினான் என்றும், பின்பு அச் சோழனுடைய மகளையும் திருமணம் செய்து கொண்டான் என்றும் பர்மிய வரலாறு கூறுகிறது. குலோத் துங்கனைத் தவிர, கீழைநாடுகளுக்குச் செல்லுகின்ற வாய்ப்பைப் பிற சோழ இளவல்களோடு சேர்த்துப் பார்க்க முடியாத நிலையில் பர்மிய வரலாறு குறிப்பிடும் சோழன் குலோத்துங்கனே என்ற எண்ணம் ஏற்படுகிறது. தமிழகக் கல்வெட்டுகளோ, இலக்கியமோ இந்தச் செய்தியைச் சொல்லாத அளவில் இதுபற்றி முடிவு எடுப்பதற்கில்லை.

மேற்சொன்ன செய்திகளின்படி காம்போஜம், கடாரம், பர்மா ஆகியவற்றுக்குக் குலோத்துங்கன் இளவலாக நேரில் சென்றான் என்றளவிலும் கன்னோசி, சீனம் போன்றவற்றோடு கலாசார வாணிபத் தொடர்புகளைச் சோழப் பேரரசன் என்றளவில் அவன் கொண்டிருந்தான் என்ற முறையிலும் குலோத்துங்க னுடைய வெளிநாட்டுத் தொடர்புகள் அமைந்திருந்தன.

### III. உள்நாடு

வெளிநாட்டுக் கொள்கையில் இவன் ஏற்படுத்திக்கொண்ட மிதமான போக்குக்கு இவனுடைய சீரான உள்நாட்டுப் பணி களின் ஆக்கம் ஈடு கட்டியது. சோழ மன்னர்கள் ஏற்படுத்தி யிருந்த இராணுவப் பாரம்பரியத்தின் வெறுமையை உணர்ந்து இவன் வல்லடிப்போர்களை நிராகரித்தான்; உள்நாட்டுப் பணி களில் அதிக கவனம் செலுத்தி, நாட்டின் பொருளாதார மேம் பாட்டுக்கு வகை செய்தான். மக்கள் நலம் பேணுவதன்மூலம் பேரரசின் பெருமையைச் செறிவுபடுத்தலாம் என்பதைத் தெளி வாக இவன் புரிந்துகொண்டிருந்தான். இத்தகைய முறையில் மாற்றத்திற்கு உள்ளாகிப் போன வெளிநாட்டுக் கொள்கையின் பயனாக இவனுடைய உள்துறை ஆட்சியில் ஆக்கப் பணிகள் சிறக்கத் தொடங்கின.

'மறையவர் வேள்வி குன்றி மனுநெறியனைத்து மாறி, சாதிகள் ஒன்றோடொன்று நிலை தடுமாறி யாரும் ஓதிய நெறியினில்லா தொழுக்கமும் மறந்து போயே' என்று கலிங்கத்துப்பரணி (245) படம்பிடித்துக் காட்டுகின்ற குழப்ப நிலை அதிராஜேந்திரனுடைய ஆட்சியின் காலத்தில் காணப்பட்டதாக நாம் கொள்வதற்கில்லை. ஏனென்றால், அதிராஜேந்திரன் எல்லாச் சோழ மன்னர்களைப் போலவே கோவிலறமும், பொது நலம் பேணும் கொள்கைப்

பிடிப்பும், சமயப் பொறையும் பெற்று விளங்கினன். மௌரியன் அசோகனின் பிற்கால நற்குணங்களுக்கு விளக்கம் கொடுக்கின்ற வகையில் ஆரம்ப நாள்களில் அவன் 99 உறவினரைக் கொன்ருன் என்று பௌத்த வரலாறு கூறுவது போல, உள்துறை ஆட்சியில் பல சாதனைகளைக் கண்ட குலோத்துங்கனுடைய ஆட்சி வருவதற்கு முன்பு பெருங்குழப்பம் இருந்ததாகச் சொல்லிச் செல்கின்ற ஜெயங்கொண்டாரின் இலக்கியச் சிந்தனையில் வரலாற்றின் தடம் பார்க்க முடியவில்லை.

**1. மண்டல ஆட்சிமுறை மாற்றம் :** பாண்டிய சேர நாடுகளில் முன்பிருந்த ஆட்சி அமைப்பில் சில மாறுதல்களைக் குலோத்துங்கன் ஏற்படுத்தினன். சோழ ஆட்சிப் பிரதிநிதிகள் அந்தப் பகுதிகளில் சென்று ஆட்சி புரிவதில் இருந்த சிரமங்களை—அதாவது அந்நாட்டு உரிமையாளர்கள் ஏற்படுத்திய தொல்லைகளை—நீக்கச் சில மாற்றங்களை மண்டல ஆட்சி அமைப்பில் இவன் உருவாக்கினன். அந்தந்த ஆட்சிப்பகுதிகளுக்கு உரியவர்களிடமே அதனை ஒப்படைத்து, சோழரின் மத்திய அரசின் மேலாண்மையின்கீழ் அவர்கள் தங்கள் ஆளுகையைத் தொடருமாறு குலோத்துங்கன் மண்டல ஆட்சியை மாற்றி அமைத்தான். பாண்டிய, சேர நாடுகளில் காணப்பட்ட இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த வழித்தடங்களிலும் குறிப்பிடத் தக்க இடங்களான கோட்டாறு விளிஞம் போன்றவற்றிலும் சோழரின் நிலைப்படைகள் அமர்த்தப் பட்டன. இதன்மூலம் சோழரின் இராணுவ ஆதிக்கம் ஆங்காங்கே நிலைப்படுத்தப்பட்டது. பாண்டியரின் எதிர்ப்புக்குரிய தென் பகுதி மட்டுமல்லாது வடபகுதியிலும் இதே போன்று 1117ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டொன்றின்படி தென்ஆற்காடு மாவட்டம் மடவிளாகம் என்ற தொண்டை மண்டலப் பகுதியைச் சேர்ந்த ஊரில் சோழர்படை ஒன்று நிலைப்பட்டிருந்தது தெரிய வருகிறது.

**2. மத்திய அரசும் சுயவளர்ச்சிப் படைத்தலைவர்களும் :** வெளிநாட்டுக் கொள்கையில் அடிப்படையான மாற்றம் செய்த குலோத்துங்கன் காலத்தில் உள்நாட்டு ஆட்சி முறையிலும் அடிப்படையான ஒரு மாற்றம் நிகழ்ந்தது. உள்நாட்டில் காணப்பட்ட படைத்தலைவர்கள் தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தங்கள் செய்துகொள்ளத் தக்க அளவில் தனியார்வ வளர்ச்சியில் மிதந்து நின்ருர்கள். இந்தப் படைத்தலைவர்கள் சோழப் பேரரசின் போராண்மை வளர்ச்சியில் தோன்றிய அசுரக் குழந்தைகள் ஆவார்கள். ஏனென்றல், சோழப் பேரரசின் ஆக்கத்திற்கு வேண்டிய வல்லடிப்போர்களை நடத்துவதற்குப் படைவீரர்களை இப் படைத்தலைவர்களே சோழ அரசனுக்குக் கொடுத்தார்கள்;

அதற்கு ஈடாகச் சில நிலப்பகுதிகளைப் பெற்று, அதில் வரி வசூலித்து, அதனுல் பெற்ற தொகையைக் கொண்டு போர்வீரர் களை அரசனுக்காக ஆயத்தம் செய்து வந்தார்கள். முன்னுள் சேவைகளுக்கு அளிக்கப்பட்ட நிலங்களோடு, புதிதாகப் படை வீரர் தேவைப்படும் போதெல்லாம் மேற்கொண்டு நிலங்கள் இவர் களுக்கு அளிக்கப்பட்டன. இவ்வாறு சோழ மன்னனுக்குப் படை கொடுத்து உதவுகின்ற படைத்தலைவர்கள் நாடெங்கும் பல பகுதிகளில் அரசியல் அதிகாரம் ஏற்ற நாடாள்வான்களாக மாறிக்கொண்டார்கள்.

ஏற்கெனவே பண்டைக்கால மன்னர்குலத் தொடர்பும் வாரி சுரிமையும் கொண்ட நாடாள்வான்கள் தங்களுடைய பரம்பரைக் கீர்த்திகளைச் சொல்லலானுர்கள்; அவர்களுக்குள் படையெடுத்துப் பூசலிட்டுக்கொண்டார்கள். இவ்வாறு இனிமேல் செய்வதற்கில்லை என்ற நட்புரிமைக் குரலெடுத்தும் பகையுணர்வு உடைப்பெடுத்தும் அமைந்த இராணுவ ஒப்பந்தங்களைத் தங்களுக்குள் அவர்கள் செய்துகொண்டார்கள். இத்தகைய ஒப்பந்தம் குலோத்துங்கன் காலத்தில் 1114ஆம் ஆண்டுக்குரிய இராமநாதபுரம் சிவபுரிக் கல் வெட்டில் காணப்படுகிறது. ராஜேந்திர சோழ துவராபதி என்ற கண்டன் மங்களத்தேவன் என்பவன் இத்தகைய ஒப்பந்தத்தைச் சுந்தரச் சோழன் கண்டன் என்பவனேடு செய்துகொண்டான். இத்தகைய இராணுவக் கூட்டு ஒப்பந்தங்களைக் குலோத்துங்கனுல் தடுக்க முடியவில்லை என்று கொள்ளல் வேண்டும். உள்நாட்டில் இவ்வாறு தன்மூப்புத் தலைவர்கள் குலோத்துங்கன் காலத்தில் தலையெடுத்தார்கள்.

வல்லடிப்போர்களைத் தவிர்த்த நிலையில் சோழப் பேரரசின் அரசியல் வளர்ச்சிக்கு ஏகாதிபத்திய இராணுவ முயற்சிகளை மேற் கொள்ளுகின்ற அவசியம் இல்லாத குலோத்துங்கன் இத்தகைய படைத்தலைவர்களின் உதவியைச் சார்ந்து அரசியல் நடத்த வில்லை. ஆனுலுங்கூட அவர்களுடைய வளர்ச்சியைத் தடுத்து மத்திய அரசின் நேரடியான கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட முடியாத அளவிற்கு அவர்கள் வளர்ந்து விட்டார்கள். விக்கிரம சோழன் காலத்தில் இவர்கள் மேலும் வளர்ச்சியுற்று, குலோத்துங்கன் III ஆட்சிக் காலத்தில் சோழ அரசியலை உள்ளி ருந்தே செல்லரிக்கின்ற போட்டியரசுவாதிகளாக இப் படைத் தலைவர்கள் செயல்பட்டார்கள். சோழ அரசியல் 1178-ல் குலோத் துங்கன் III அரச பதவி ஏற்ற பின்பு உட்சிதைவு கொண்டு இற்றுப்போவதற்குக் காரணமான தொடக்கநிலை—உட்சிதைவு அறிகுறிகள்—குலோத்துங்கன் I சோழன் காலத்தில் மேற்படி இராணுவ ஒப்பந்தங்கள் செய்கின்ற படைத்தலைவர்கள் உருவத்தில் தென்பட்டன.

**3. பொருளாதாரச் சீர்திருத்தங்கள் – (அ) நில வரி :** சோழர் கால ஊராட்சி மன்றங்களில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கியமான விஷயங்கள் சில சமயங்களில் மன்னனுடைய இணக்கத்திற்கும் தீர்மானத்திற்கும் வைக்கப்பட்டன. திரிபுவனியில் அரசினரால் வழங்கப்பட்ட நிலவரி வசூலிக்கின்ற சலுகை அமைந்த 'காணி' நிலங்களைச் சீரமைப்பு செய்வதற்கான திட்டமொன்றினைக் குலோத்துங்கன் வரையறுத்தான் எனத் திரிபுவனியில் உள்ள இரு கல்வெட்டுகள் கூறுகின்றன.

**(ஆ) நில அளவு (1086):** 1086-1088 ஆண்டுகளுக்கிடையில் சோழநாடு முழுவதும் உள்ள நிலங்கள் எல்லாம் 'நாடுவகை செய்யற' என்றழைக்கப்பெற்ற முறையில் அளக்கப்பட்டு, 'தரம் இடுதல்' என்றபடி பகுப்புக்குள்ளாக்கப்பட்டன. நிலப்பரப்பு, நிலத்தின் வளம் கண்டு ஏற்பட்ட தரம், நீர்ப்பாசன வசதி போன்றவற்றைத் தீர்மானிக்க இந்த நில அளவு மேற்கொள்ளப் பட்டது. இதனை அடிப்படையாகக் கொண்டுதான் நிலவரி நிர்ண யிக்கப்பட்டது. குலோத்துங்கனின் ஆணைப்படி இதனை மேற் கொண்ட அதிகாரிகள் திருவேகம்ப உடையானை உலகளந்த சோழப் பல்லவரையன், குளத்தூருடைய உலகளந்த திருவரங்க தேவன் போன்றோர் ஆவர். ராஜராஜன் I சோழன் காலத்தில் 1001-ல் இவ்வாறு நிலம் அளக்கப்பட்ட பின்பு, 85 ஆண்டுகள் கழித்து, சோழ நாட்டுப் பகுதி மட்டும் இவ்வாறு குலோத்துங் கனால் அளக்கப்பட்டது. வாணிகத்தைப் பொறுத்துச் சுங்கந் தவிர்த்தும், வேளாண்மை மேம்பட நிலம் அளந்தும், தொழில் வளம் பெருகத் தொழிலாளர் அவரவர் கிராமங்களில் வேலை செய்ய வேண்டும் என்ற அரசாங்க உத்தரவிட்டும் குலோத்துங்கன் நாட்டின் பொருளாதாரத்தை மேம்படுத்தினான்.

**(இ) நிலவுரிமை மாற்றங்கள் :** அந்தணர்களுக்கு அளித்த பிரம்மதேய நிலம் வெள்ளான் வகை நிலமாக மாற்றி அமைக்கப் பட்டதாக 1081ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது. ராஜேந் திரன் II சோழன் காலத்தில் ஏற்படத் தொடங்கிய நில நிர்வாகச் சீர்திருத்தங்கள் குலோத்துங்கன் காலத்தில் முழுமை பெற்றன. நில மாற்றங்கள் வீரராஜேந்திரன் காலத்தில் ஒருமயப்படுத்தப் பட்டுப் பற்பல அமைப்புகளின்கீழ்ச் செயல்பட்டன. ஆனால், குலோத்துங்கன் காலத்தில் இவை யாவும் ஓரளவு நிறைவு செய்யப்பட்டு நிலவரி, நில மாற்றங்கள் சம்பந்தப்பட்ட காரியங்கள் நிர்வாக உருவம் பெற்று இயங்கின. சாகுபடி நிலங்களைச் சரியான முறையில் பயன்படுத்தி விளைச்சலைப் பெருக்க முயற்சி எடுக்காத குடிவாரத்தாரிடமிருந்து நிலங்கள்

பறிமுதல் செய்யப்பட்டு மற்றவர்களுக்கு அளிக்கப்பட்டன. தேவதான நிலங்களைப் பயிரிட்டு வரும் நிலதாரர்கள் தேவதானத் துக்குச் செலுத்த வேண்டிய மேல்வாரம் பாக்கி வைத்திருந்த காரணத்தினால் இத்தகைய மாற்றம் நிகழ்த்தப்பட்டது. இதற்கான அரச ஒப்புதலையும், அதற்கான ஆணையையும் குலோத்துங்கன் பிறப்பித்ததாக 1112ஆம் ஆண்டுக்குரிய தஞ்சை மாவட்டம் திருமாளம் கல்வெட்டு கூறுகிறது.

இவ்வாறு தேவதான நிலங்களை நிலதாரர்களிடமிருந்து மாற்றி விடுவதற்கு அரச ஒப்புதல் வேண்டும். மாற்றத்திற்குப் பின்பு வழக்கு விசாரங்கள் ஏற்படாமல் தவிர்ப்பதற்கும் இத்தகைய அரசு ஒப்புதல் வேண்டப்பட்டது. குலோத்துங்கன் இதனை ஆதரித்துத் தனது ஒப்புதலை ஆணைகளாக வெளியிட்டான். நீர் வளம், நிலத்தின் தரம், நில அமைப்பு, தனியார் நிலமா, கோவில் நிலமா என்ற விஷயங்கள் வரி நிர்ணயம் செய்யப்படும்போது கவனிக்கப்பட்டன.

**(ஈ) விலைவாசி ஏற்றம் :** குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஆரம்பக் கட்டங்களில் விளைபண்டங்களில் பற்றுக்குறை ஏற் பட்டது. அதிராஜேந்திரன் காலத்தில் ஏற்பட்ட கலகங்களால் விலைவாசிகள் பாதிக்கப்பட்டன. வரி நிர்ணயத்தில் வேறுபாடு களும் தென்பட்டன. திருவொற்றியூரில் காசுக்கு 4 கலம் நெல் கிடைத்தது. இதே நெல் மைசூர்ப் பகுதி கோலாரில் காசுக்கு $2\frac{3}{4}$ கலம் என விற்கப்பட்டது. இதுவே குலோத்துங்கன் இறுதிக்கால ஆட்சி ஆண்டுகளில் தஞ்சாவூர்ப் பகுதியில் காசுக்கு 13 கலம் நெல் கிடைத்தது. இவ்வாறு குலோத்துங்கனின் ஆட்சித் திறனால் நாட்டின் பொருளாதார இடர்ப்பாடு நீக்கப்பட்டுப் பொருள் வளம் சிறக்க உள்நாட்டு நிர்வாகத்தில் சுங்கந்தவிர்த்தல், நில அளவு போன்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

**(உ) கைவினைஞர்களுக்குக் கட்டுப்பாடு :** கைவினைஞரும் மற்றைய தொழிலாளரும் தங்கள் தொழில்களை அவரவர்களுடைய கிராம எல்லைக்குள்தான் மேற்கொள்ள வேண்டும். மற்ற இடங் களுக்குச் சென்று பணி புரிந்தால், அது கடுமையான குற்றமாகக் கருதப்படும் எனப் பாண்டிச்சேரி பக்கமுள்ள திரிபுவனி 1113ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது. இவ்வாறு கிராமப்பொருளா தாரத்தின் தன்னிறைவுத் தன்மை பாதுகாக்கப்பட்டது.

**(ஊ) சுங்கத் தவிர்த்தலும் வாணிபமும் :** 'சுங்கந் தவிர்த்த சோழநல்லூர்' என்ற ஊரினைப்பற்றிய கல்வெட்டு 1098ஆம் ஆண்டுக்குரியது. ஆகவே, இந்த ஆண்டுக்கு முன்பு குலோத்

துங்கன் சுங்க வரிகளை நீக்கினான் எனக் கொள்ளலாம். 'சுங்கந் தவிர்த்திருள் நீக்கி உலகாண்ட ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்' என்பது 1002ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டுச் செய்தியாகும். 'புவிராசராசர் மனுமுதலோர் நாளில்—தவிராத சுங்கந் தவிர்த்தோன்' என்று குலோத்துங்க சோழனுலாவில் ஒட்டக்கூத்தர் கூறுகிறார். உள்நாடு, வெளிநாடு வாணிபத்திற்குப் பெருந்தடையாக விளங்கிய சுங்க வரிகளை நீக்கி, குலோத்துங்கன் கொண்டு வந்த சீர்திருத்தம் இவனுடைய காலத்தோடு முற்றுப் பெற்றுவிடவில்லை. 1194ஆவது ஆண்டுக்குரிய குலோத்துங்கன் III காலத்திய திருவிடைமருதூர்க் கல்வெட்டு 'சங்கமில்லாச் சோழ நாடு' என்று பெறுவதால், குலோத்துங்கன் I காலத்திற்குப் பின்பும் சோழநாடு மட்டும் சுங்க வரிகள் இல்லாமல் விளங்கியது என்பது புலப்படும். பேரரசுப் போர்களை மேற்கொண்டு புதிய நாடுகளின் நிலவரி வருவாயும் போரில் கவர்கின்ற பொருளும் காணக் கிடைக்காத அளவில் சோழ அரசின் வருவாய் சுருக்கங்கொண்டிருந்த அந் நாளில் அச்சமில்லாமல் குலோத்துங்கன் சுங்க வரியை நீக்கியதன் சான்றாண்மையும் விவேகமும் போற்றத் தகுந்தவை ஆகும். சோழர் காலத்தில் வாழ்ந்த பரிமேலழகர், சங்ககால உருத்திரங்கண்ணனார் தமது பட்டினப்பாலையில் 'உல்கு செய்ய குறைபடாது அளந்தறியா பல பண்டம்—புலி பொறித்துப் புறம் போக்கி மதிநிறைந்த மலிபண்டம்' என்ற வரிகளில் கூறும் 'உல்கு' என்ற அதே சொல்லை, மற்றொரு சங்க கால நூலான திருக்குறளில் வரும் 'உறுபொருளும் உல்கு பொருளுந் தன் ஒன்னார் தெறுபொருளும் வேந்தன் பொருள்' என்ற குறளுக்குச் 'சுங்கம் கலத்தினும், காலினும் வரும் பண்டங்களுக்கு இன்றியமையாதது' என விளக்கம் தருகிறார். கடல் கடந்து கப்பலிலும், நிலம் ஊர்ந்து பொதிமாடுகள் போன்ற ஊர்திகளிலும் வருகின்ற பண்டங்களுக்குச் சுங்கம் விதிக்கப்படுவது ஒழிக்கப்பட்டது. இதன் விளைவாக வெளிநாடுகளின் பண்டங்கள் சோழ நாட்டுக்குக் குறைந்த விலையில் கிடைத்தது எனக் கொள்ளலாம்.

**(எ) வெளிநாட்டு வணிகம்—கடாரத் தொடர்பு :** லோபேடுவா என்னுமிடத்தில் காணப்படும் இந்தோனேஷியாவின் சுமத்திராத் தீவிலுள்ள 1088ஆம் ஆண்டுக்குரிய தமிழ் கல்வெட்டு கூறுவது போலத் தென்னக வணிகர்களுக்குக் கீழை நாடுகளில் பல வணிகக் குடியேற்றங்கள் காணப்பட்டன.

**(ஏ) சீனத் தொடர்புகள் :** பார்மோசாத் தீவிற்கு எதிர்ப்புறப் பெரு நிலப்பகுதியிலுள்ள சுவான் சௌ (Chuan Chou) என்ற கடற்

கரைப் பட்டினத்தில் காணப்பெறும் சீனக் கோவிலில் கிருஷ்ணக் கடவுளின் புராண சம்பந்தமான வாழ்க்கை சரிதம் காட்டும் சிலைகள் காணப்படுகின்றன. இவை பன்னிரண்டு, பதின் மூன்றும் நூற்றுண்டுக்குரியவையாகும். எனவே, இக் கோவில் குலோத்துங்கன் காலத்தில் நிறுவப்பட்டிருக்கலாம் எனவும் கொள்ளலாம். இதிலிருந்து சீன நாட்டோடு சோழநாடு குலோத்துங்கன் காலத்தில் கொண்டிருந்த வணிகத் தொடர்பு தெரிய வரும். 1077ஆம் ஆண்டில் சீனநாடு சென்றடைந்த 72 பேர்களடங்கிய வணிகக் குழுவைக் குலோத்துங்க சோழன் அனுப்பியதாகத் தெரிகிறது. இத் தூதுக் குழுவினர் சீனநாட்டுக்குச் செலுத்த வேண்டிய தந்தம் போன்ற பரிசுகளைக் கொண்டு சேர்த்தனர்; மேலும், சோழ நாட்டுப் பொருள்களாகிய அகில், சந்தனம், பெருங்காயம் ஆகிய வாசனைத் திரவியங்கள் போன்றவற்றையும் அளித்தனர். சீன அரசு இவற்றிற்கு மறு பரிசாக 81,800 செப்புக் காசுகளை அளித்தது.

## IV கலை, இலக்கியம் :

திரிபுவனி குலாசனச் சேரியைச் சேர்ந்த திருநாராயண பட்டர் (கவி குமுத சந்திரர்) 'குலோத்துங்க சோழ சரிதை' என்ற வரலாற்றுக் காவியத்தைப் படைத்தார். இந் நூல் எழுதியதற்காக இவருக்குச் 'சர்க்காரம்' என்ற நிலம் பரிசாக அக் கிராம சபையின் மூலம் அளிக்கப்பட்டது. கலிங்கப் போர் பற்றி எழுந்த காவியம் ஜெயங்கொண்டாரின் கலிங்கத்துப்பரணி ஆகும்; கலிங்கப் போர் பற்றி மட்டுமல்லாது அந் நாளைய மக்களின் வாழ்வு முறையை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

அமிதசாகரா என்ற தமிழ்வல்லார் 'யாப்பருங்கலக் காரிகை' என்ற தமிழ் இலக்கண நூலை எழுதினர். இவர் இந் நூலினைக் காரிகை குளத்தூர் என்ற ஊரிலிருந்து எழுதியதாக நீடூர் என்ற இடத்திலுள்ள இரு கல்வெட்டுகள் குறிக்கின்றன. குலோத்துங்கன் இயற்றிய இசை நூலை ஏழிசைப்படுத்திப் பாடியதாக இவனுடைய மனைவி ஏழிசை வல்லியைப் பற்றியக் குறிப்பைக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது. இவ்வாறு இசைக் கலையின் வளர்ச்சி தெரிய வருகிறது.

ஆடல் பாடல் பாணர்களும் குலோத்துங்கன் செய்வித்த பாடல்களைப் பாடினுர்கள் என்று ஜெயங்கொண்டார் கூறுகிருர். அவருடைய பரணி, இப் பாணர்களுடைய புரவலனுக அமைந்த இக் குலோத்துங்கன் பல கலைகளை ஆதரித்த பெருமையை வியந்து பாராட்டுகிறது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலிருந்து

இந்துக்களுக்குரிய சட்டம் மிடாக்ஷரா (Mitakshra) என்ற சட்ட நூலின் துணை கொண்டுதான் நீதிமன்றங்களில் தற்போது விளக்கம் பெறுகிறது. இந் நூல் குலோத்துங்கன் I காலத்தில் வாழ்ந்த விக்னேஸ்வரர் என்ற சட்ட நூல் வல்லுநரால் சாளுக்கிய நாட்டரசவையில் எழுதப்பட்டது என்றாலும் சோழ நாட்டிற்கும் இது செல்லுபடியாகியது.[1]

## V. சமய நிலை :

'திருநீற்றுச் சோழன்' என்றழைக்கப்பட்ட விஷ்ணு வர்த்தனன் என்ற இயற்பெயர் கொண்ட குலோத்துங்க சோழன் ஏற்படுத்திய திருமால் கோட்டம், இப்போதைய மன்னார்குடி ராஜகோபால சுவாமி கோவில்தான் எனலாம். இக் கோவில் குலோத்துங்க சோழ விண்ணகரம் எனவும் அக் காலத்தில் வழங்கப்பட்டது. குலோத்துங்கன் கொண்டு வந்த சூரிய வழிபாடு தமிழருக்கு உரியதுதான் என்பதைச் சூரியக் கடவுளைக் குறிக்கும் சுமேரியச் சொல்லான 'தாமூலம்' என்பதிலிருந்து தமிழ் வந்தது என்ற ஆராய்ச்சிக் குறிப்பிலிருந்து புலப்படும்.[2] சூரியனார் கோவிலில் ஏற்பட்ட ஆதித்த வழிபாடு சோழருக்கு ஆதித் தமிழ் உணர்வில் ஏற்பட்டது என்றும், குலோத்துங்கன் அதற்குப் புத்துயிர் அளித்தான் என்றும் கூறலாம். திருநெல் வேலி மாவட்டம் கொற்கை நகரில் கிடைத்த நிலையில் காணப்படும் சிவன் கோவில் இவன் காலத்தினதாக இருக்க வேண்டும். இவனுக்குப் பிறகு ஏற்பட்ட கல்வெட்டுகளில் இக் கோவில் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மகா மண்டபம், கர்ப்பக் கிருகம், அர்த்த மண்டப அமைப்புகள் கலைச் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றன. பழுவேட்டரையன் தலைவன் கண்டன் மறவன் கட்டிய 'திருத்தோற்றமுடைய மகாதேவர்' என்ற பழங்காலச் செங்கற்கோவில் கற்கோவிலாகக் குலோத்துங்கன் காலத்தில் மாற்றிக் கட்டப்பட்டது. இக் கோவில் போன்றே கார்குறிச்சி திருக்கற்றளி என்ற திருக் கட்டளையிலுள்ள ஆதித்த சோழன் காலக் கோவிலின் அர்த்த மண்டபத்திற்கருகே முகமண்டபம் ஒன்று குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டது.

1106ஆம் ஆண்டில் ஏற்பட்ட குலோத்துங்கனுடைய கல்வெட்டின்படி மூன்று படை பொற்கோவில் கைக்கோளரும் நாட்டுப்படை பலியிலி ஐந்நூற்றுவரும் ஒரு கோவிலுக்கு உரிய

1 K. A. N. Sastri—' A History of South India'—1958—p. 309

2 'இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர்'—சென்னை 1968—வரலாறு—பக்கம் 8

அறநிலையச் சொத்துகளைக் காவல் செய்வதில் ‘நாடு’ என்ற ஊராட்சி மன்ற ஒன்றிப்பு சபையுடன் ஒத்துழைத்தனர் எனத் தெரிகிறது. ராஜகுருவின் அறிவுரைப்படி பிரம்மதேயம் ஒன்றினை 108 சதுர்வேதிப்பட்டர்களுக்குக் குலோத்துங்கன் அளித்தான் என மைசூர்க் கல்வெட்டும், அமாவாசை தினத்தன்று 50 பிராமணர்களுக்கு உணவளிப்பதற்காக வைணவ மடம் ஒன்றினுக்கு இவன் நன்கொடை அளித்திருந்ததாக 1115ஆம் ஆண்டுக் கல்வெட்டும் கூறுகின்றன.

ஸ்ரீரங்கம் கோவிலில் திருப்பள்ளி எழுச்சியின்போது திருவாய்மொழியும் இசைக்கப்பட்டதாக 1085ஆம் ஆண்டுக் கல்வெட்டும், குலசேகராழ்வார் இயற்றிய ‘தேட்டருந்திறள்’ என்று தொடங்கும் பக்திப்பாடலைத் திருவிழாக் காலத்தில் மூன்றுநாள் இரவுகளில் மூலவர் முன்பு இசைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததாக 1088ஆம் ஆண்டுகளுக்குரிய கல்வெட்டும் கூறுகின்றன. குலோத்துங்கனுக்குக் கடார மன்னன் அளித்த கல் ஒன்றை அவன் சிதம்பரம் கோவிலுக்கு எதிர்ச்சாரியிலுள்ள மண்டபச் சுவரில் பதித்துவைத்தான் என்ற செய்தி முன்னால் விளக்கப்பட்டுள்ளது.

**பிற சமயங்களின் நிலை—(அ) சமணர்கள் :** தஞ்சை மாவட்டம் குகூர் என்னுமிடத்திலிருந்த பெரும்பள்ளிக்குக் குலோத்துங்கன் I நிலக்கொடை அளித்தான். அது ‘குலோத்துங்க சோழப் பெரும்பள்ளி’ என அரசனுடைய பெயர் தாங்கி விளங்கியது என்பது குறிப்பிடத்தக்கது. காஞ்சியின் பக்கமுள்ள சமணக் காஞ்சி என்றழைக்கப்பட்ட திருப்பருத்திக்குன்றத்தில் உள்ள ரஷி சமுதாயம் என்ற துறவிகளின் சங்கம் 1116ஆம் ஆண்டளவில் தனது சொந்தப் பணத்தில் நிலம் வாங்கிச் சமயப் பணி புரிகின்ற அளவிற்குக் குலோத்துங்கன் காலத்தில் சமயப் பொறை காணப்பட்டது.

**(ஆ) பௌத்தர்கள் :** நகப்பட்டினம் இவன் காலத்தும் முக்கியமான புத்தமத தலமாகச் சிறந்திருந்தது. கடாரம் என்ற ஸ்ரீ விஜயத்தின் மன்னன் அனுப்பிய ராஜவித்யாதாரா ஸ்ரீசாமந்தா, அபிமானோத்துங்கா சாமந்தா என்ற இரண்டு தூதர்கள் தம் மன்னன் சார்பில் வேண்டியதற்கிணங்க சூடாமணி புத்த விகாரத்திற்கு ஒரு கிராமமே கொண்ட நிலமாக ஏற்கெனவே அளிக்கப்பட்டிருந்ததற்குக் குலோத்துங்கனால் சாசனப்பூர்வமாகத் திட்டஞ்செய்யப்பட்டது. பதவிக்கு வருகின்ற மன்னர்களால் இப்படிப்பட்ட முற்றூட்டுகள் சாசனப்படுத்தப்படுகின்ற வழக்கம் நடைமுறையிலிருந்ததைக் குலோத்துங்கனுடைய இச் செய்கை வலியுறுத்திக் காட்டும்.

**(இ) சூரியன் கோவில் :** வட இந்தியப் பகுதி கன்னோசி நாட்டு மன்னனுடன் குலோத்துங்கன் கொண்டிருந்த தொடர்பு சமயச் சார்பான முறையில் சிறந்து விரிந்தது. கன்னோசி நாட்டினர் வணங்கும் சூரியனுக்கு இவன் ஒரு கோவிலைச் சோழநாட்டில் எடுப்பித்தான். இது குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம் எனப்பட்டது. இந்த ஊரில் சூரியனுக்கு அமைந்த கோவில் காரணமாகத் தற்காலத்தில் சூரியனார் கோவில் என்றே அழைக்கப் பெறுகிறது. சோழர்களுக்குரிய பெயரான ஆதித்தியா என்றழைக் கப்பட்ட சூரியன் கோவில் பஞ்சாபின் மூல்தானில் கி. பி. 640-ல் இருந்ததாக யுவாங்சுவானும், கி.பி. 712-ல் இருந்ததாகப் பரணியும் விளக்கமாகக் கூறுகிறார்கள்.[3] 1113ஆம் ஆண்டு திருவயப்பாடு நாட்டைச் சேர்ந்த மன்றாடியார்கள் தங்கள் மைந்தர்களின் சாந்தி முகூர்த்தம் என்ற 'கட்டிலேறும்' விழாவின்போதும், பெண்மக்கள் தனிக்குடித்தனம் போகும்போதும் கரூர் ஜலாசயனம் விஷ்ணு கோவிலுக்கு ஆளுக்கோர் ஆடு அளிக்கத் தாங்களாகவே ஏற்பாடு செய்துகொண்டார்கள். இந்தக் கொடை அவர்களாகவே முன் வந்து கொடுத்ததுதான். ஆனாலும் சில சமயங்களில் இக் கொடை கட்டாயப்படுத்தியும் வசூலிக்கப்பட்டது. இவற்றை வசூலிக்கும் உரிமை அக் கோவில் நிர்வாகிகளான கங்க பெரு மக்களுக்கும் தேவரடியார்களுக்கும் அளிக்கப்பட்டிருந்தது.

## VI சமூக நிலை

ஸ்ரீ ரங்கம் கல்வெட்டொன்று (1081ஆம் ஆண்டுக்குரியது) கூறுவது போல இடங்கை, வலங்கை என்ற இரு வகுப்பாருக் கிடையே மூண்ட சாதிப்பிரிவினை கலவரத்தின்போது தஞ்சை மாவட்டம் பாபநாசம் வட்டம் ராஜமகேந்திர சதுர்வேதிமங்கலம் என்ற ஊர் தீயிடப்பட்டது. கோவில்கள், வீடுகள் இடிக்கப் பட்டன. கஜானாக்கள் கொள்ளையடிக்கப்பட்டன. இத்தகைய சீரழிவுகளைச் சீர்திருத்தம் செய்ய ஊர் சபா 50 கழஞ்சு கடன் வாங்கி, அதல் ஒரு பகுதியைக் கோவிலைப் புதுப்பிப்பதில் செல வழித்தது. எஞ்சிய நிதியைக் கோவிலுக்குச் சிறிது நிலம் வாங்கு வதற்கும் அந் நிலத்திற்கு வரியில்லாத அந்தஸ்தைப் பெறு வதற்கும் செலவிட்டார்கள்.

## VII குடும்பம்

ராஜேந்திரன் I சோழனுடைய மகள் அம்மங்கைதேவி யினுடைய மகன் குலோத்துங்கன் தனது தாய்மாமன் ராஜேந்திரன் II மகள் மதுராந்தகியை மணம் புரிந்திருந்தான்.

[3] H.M. Elliot—' The History of India ' —Calcutta—1959—p. 129

கம்பமாதேவி, காடவன் மாதேவி, தியாகவல்லி, சோழகுல வல்லி, திரைலோக்கிய மாதேவி, ஏழிசை வல்லி என்பவர் மற்றைய ஆறு மனைவியர் ஆவர். இலங்கை மன்னன் விஜயபாகுவுடன் சமாதான முறையில் போக எண்ணி, இளவரசன் வீரபெருமாளுக்கு 1088ஆம் ஆண்டளவில் குலோத்துங்கன் தன் மகள் சுத்தமல்லியாரை மணஞ்செய்து கொடுத்திருந்தான். அம்மங்கை யாழ்வார் ராஜசுந்தரி என்ற மற்றொரு மகள் கீழைக்கங்க மன்னனை ராஜராஜனை மணந்திருந்தாள். குந்தவை, மதுராந்தகி என்ற இவனுடைய சகோதரிகள் அறப்பணிகள் பல செய்து உள்ளார்கள். முப்பது வயதில் 1070-ல் சோழ மன்னனாகி 52 ஆண்டுகள் ஆண்ட குலோத்துங்கனுக்கு வாய்த்த பட்டத்து இளவரசி 1096ஆம் ஆண்டளவில் இறப்பதற்கு முன்பு பெற்று எடுத்த ஏழு ஆண்மக்கள்தான் குலோத்துங்கனுக்கு வாய்த்த ஆண்வாரிசுகள் ஆகும். ராஜராஜ சோழ கங்கன், ராஜராஜ மும்முடிச் சோழன், வீரசோழன், விக்கிரம சோழன் என்ற நால்வர் பெயர்மட்டும் நமக்குத் தெரிய வருகின்றன. 1118-ல் விக்கிரம சோழன் வேங்கியிலிருந்து திரும்பி அழைக்கப்பட்டு யுவராஜாவாக முடிசூட்டப் பெற்று அரசியலில் நேரடி நிர்வாகத்தை மேற்கொள்ளப் பணித்த குலோத்துங்கனுக்கு அப்போது 78 வயதான முதுமைப்பருவம் வேங்கிநாடு இழக்கப் பட்டுப் போன நிலையிலும் விக்கிரம சோழன் தனது தந்தையை வந்தடைந்ததற்கு அவனுடைய தந்தையின் முதுமைதான் காரணம் என்பது தெளிவு.

குலோத்துங்கனுடைய பட்டங்கள் பின்வருவாறு : திருநீற்றுச் சோழன், சப்தம விருதராச பயங்கரன், கரிகாலன், உலகுய்ய வந்தான், ராஜநாராயணன், சகதரன், அபயன், மனுகுல தீபன், உபய குலோத்தமன், ஜெயதுங்கன், திரிபுவனச் சக்கரவர்த்தி பட்டம் முதன்முதலாகப் புனைந்துகொள்ளத் தொடங்கிய சோழன் குலோத்துங்கன் ஆவான். கீழைச்சாளுக்கியரின் வைணவ பாணியில் 'விஷ்ணுவர்த்தனன்' என்ற இயற்பெயரும், சோழரின் கலாசாரப்படி ராஜேந்திரன் என்ற பெயரும் இவனுக்கு உண்டு. கங்காபுரியோடு 'ஆகவமல்ல குலேகாலபுரம்' என்ற ஆயிரத்தளியும், காஞ்சியும் இவனுக்குரிய இரண்டாவது தலைநகரங்களாக விளங்கின.

## VIII குலோத்துங்கன்—ஒரு முன்னோடி

ராஜராஜன் I காலத்திற்குப் பின்பு சோழ மன்னர்கள் தென்னிந்தியப் பேரரசுக்குரிய மாமன்னர்களாக ஆனார்கள். ராஜராஜ

னுக்குப் பின்பு ஐந்தாவது மன்னனுகக் குலோத்துங்கன் 1070-ல் பதவி ஏற்று, 1122-ல் இறந்தவுடன், சோழப்பேரரசின் 'தனித் தகைமை கொண்ட கடைசி சக்கரவர்த்தி மறைந்தான்' எனக் கொள்ள வேண்டும். குலோத்துங்கன் காலத்திற்குப் பின்பு சோழப் பேரரசு அழியத் தொடங்கியது என்ற கருத்து உண்டு. ஆனுல், குலோத்துங்கன் தனது தனித்தன்மையான ஆளுகைத் திறன் (personality) கொண்டு சோழநாட்டை நிர்வாகம் செய்ய முற்பட்டபோது அவனுக்கு ஏற்பட்ட வெற்றிகள் பேரரசின் புதிய வளர்ச்சிக்குத் துணை செய்தன. இவ்வாறு எல்லா வகை களிலும் புதுமையின் சிந்தனையைக்கொண்டு வந்தவன் அவன். புதுமை என்ற அளவில் அவனுடைய வாழ்வை வகைப்படுத்திப் பார்க்க வேண்டும்.

(1) கீழைச்சாளுக்கியப் பரம்பரையைச் சேர்ந்த குலோத் துங்கன் சோழ நாட்டுக்குரிய மன்னனுக வர வைணவத்திற்குச் சார்பான முறையில் ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சியை உருவாக் கினுன். இவ்வாறு ஏற்பட்ட கலகத்தில் முறைப்படி அரசபதவி ஏற்ற அதிராஜேந்திரன் இறந்துபட்டான். இந்த நிகழ்ச்சி இவனுடைய ஆட்சியின் புகழுக்குக் குறுக்கே நிற்கவில்லை. கலிங்கத்துப்பரணியில் அதிராஜேந்திரன் என்ற மன்னனைப் பற்றிய குறிப்பே இல்லாத அளவில் இவனுடைய 'திருமன்னி விளங்கு' என்ற மெய்க்கீர்த்தி 'குலமணி மகுட முறைமையிற் சூடி' என்று வலிந்து சொல்லுகிறது. தான் பெற்ற சோழ அரசுரிமை தனக்கு இயல்பான முறையில் சேர வேண்டியது என்ற சிந்தனை உரம் பெற்ற நிலையில்தான் 'முறைமயிற்சூடி' என்ற செய்தி அதிராஜேந்திரனுடைய இறப்பினை மறக்கடித்து நம்மை வந்தடை கிறது.

விஜயாலயன் காலம் முதல் மன்னர் குலத்தில் மாற்றம் ஏதும் இல்லை. குலோத்துங்கன் சாளுக்கிய இரத்தக்கலப்பு கொண்ட முறையில் புதுமை உணர்ச்சியைச் சோழ அரசர் குலத்திற்கு வழங்கினுன். இதன் பின்பு புத்துணர்ச்சியுடன் அரசர் குலம் இயங்கத் தொடங்கியது எனலாம். எல்லாம் அறிந்த மாவீரன் என்ற பெயரும் புகழும் குலோத்துங்கனுக்கு ஏற்கெனவே அமைந்திருந்தது. அவனுடைய தந்தையின் இறப்புக்குப் பின்பு சிற்றப்பா விஜயாதித்தியனே வேங்கியின் மன்னனுன பின்பு வேங்கிக்கு வடக்கே சக்கரக்கோட்டம் என்றழைக்கப்பட்ட பஸ்தார் என்னுமிடத்திலுள்ள மாசுண மன்னனைத் தோற்கடித்து, பின் அங்கிருந்து இன்னும் வடக்கே சென்று பூர்வதேசம் என்ற நிலப்பகுதியையும் பிடித்துத் தனக்கென ஒரு ராஜ்யத்தை

இவனுக்கு இவனே உருவாக்கிக்கொண்டான்; 1070-ல் சோழ நாட்டில் மன்னன் வீரராஜேந்திரன் இறந்த பின்பு கங்காபுரி வந்து அரசுரிமையைக் கைப்பற்றிக்கொண்டான். 1063-லிருந்து 1070வரை கீழைநாடுகளான கடாரம், காம்போஜம், பர்மா போன்றவற்றில் இவன் சோழ இளவலாக அரசியல் பண்ணி அலைந்து திரிந்ததாகச் செய்திகள் உண்டு. இவ்வாறு குலோத்துங்கனைப் பலதிறப்பட்ட நாயகனாக (legendary figure) சித்தரித்த நிலையில் அவனுக்குரிய புகழே (personal prestige) அவனுடைய அரசியல் வெற்றிகளுக்கு அடிப்படையாக அமைந்தது எனலாம்.

(2) உள்நாட்டு அரசியலில் ராஜராஜன் I, ராஜேந்திரன் I போன்றோரின் நேரடி நிர்வாகத்தைத் தவிர்த்த குலோத்துங்கன் நிலைப்படை என்ற படைநிலையங்களை (garrisons) வெல்லப்பட்ட நாடுகளில் ஆங்காங்கே ஏற்படுத்தி, சோழப் பேரரசிற்குப் புதிய உருவம் கொடுத்தான்.

(3) உள்நாட்டு ஆட்சித்துறையில் புதிதாக ஏற்பட்ட ஆட்சியாளர்களான படைத்தலைவர்கள் தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தங்களை இவன் காலத்தில் முதன்முதலாக ஏற்படுத்திக் கொள்ளத் தொடங்கினார்கள். இவர்களின் வளர்ச்சி பிற்காலத்தில் சோழரின் உள்ளாட்சிக்குரிய உட்சிதைவாக உருவெடுத்து, அரசுக்குள் அரசாக அப் படைத்தலைவர்கள் தோற்றங்கொள்ளுகின்ற அரசியல் விளைவாக மாறிவிட்டது. குலோத்துங்கன் இப் படைத்தலைவர்களை அடக்குவதற்கு எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாகத் தகவல் இல்லை.

(4) பேரரசுத் தத்துவத்தை வெறும் வல்லடிப்போர்களினால் ஆன இராணுவ ஏகாதிபத்தியமாக நடைமுறைப்படுத்தாமல் பேரரசிற்குரிய சக்திகளை நாட்டின் வளர்ச்சிக்குரிய பொதுநலப் பணிகளில் குலோத்துங்கன் ஈடுபடுத்தினான். ஆட்சித் தொடக்கத்தில் ஈழத்தையும், கடைசியில் கங்கபாடியையும், வேங்கியையும் இழந்த குலோத்துங்கன் அவற்றைத் திரும்பப் பெறுகின்ற வீருப்பு முயற்சியில் இறங்காமல், அவற்றை மறந்த நிலையில், நாட்டின் ஆக்கப்பூர்வமான வளர்ச்சியில் கவனம் செலுத்தினான். இவ்வாறு சோழப் பேரரசின் வளர்ச்சிக்கு ஆக்க முயற்சி என்ற புதுப்பாதையை இவன் அளித்த போதிலும் இவனுக்குப் பின்வந்த மன்னர்கள் இதனைப் புரிந்துகொள்ளாத காரணத்தால் சோழப் பேரரசு உள்ளூர நசித்து உருக்குலைந்து 1279-ல் முழு அழிவு கொண்டது. இந்த வகையில் சாம்ராஜ்ய சிந்தனையில் புதுமை கொண்டு வந்த இவன் அரசியல் புலமையில் தனியார்வ முன்னோடியாக (pioneer) விளங்கினான்.

(5) சோழ சமுதாயத்தில் இவன் காலம் வரை ஒருமிப்பு (integration) காணப்பட்டது. இவன் காலத்திலேயே வலங்கை, இடங்கை என்ற சாதிப் பிரிவுகளின் ஆர்ப்பரிப்பான பிரிவினை விளைவுகள் நடைமுறைச் சமுதாய நிகழ்ச்சிகளாக மாறத் தலைப்பட்டன. இவ்விரு பொதுச் சாதிப்பிரிவுகளுக்குள் அடிதடி மோதல்களும், அவற்றினடிப்படையில் கலகங்களும் தோன்றத் தொடங்கின. சமுதாயத்தின் ஒருமித்த அமைப்பில் ஏற்பட்ட பிரதிபலிப்பாக இக் கலகங்களை நாம் எடுத்துக் காட்டலாம்.

(6) குலோத்துங்கனுடைய 52 ஆண்டுக்கால நீண்ட ஆட்சியில் கலைகளுக்கு இருப்பிடமாக உள்ள எந்த ஒரு புதுக் கோவிலும் கட்டப்படவில்லை. ராஜராஜனுக்குரிய தஞ்சைப் பெரிய கோவில், ராஜேந்திரனுக்குரிய கங்கை கொண்ட சோழபுரம், குலோத்துங்கன் III சோழனுக்குத் திருபுவனம் என்றளவில் அவரவர் பெருமையினைச் சொல்வது போலக் குலோத்துங்கனுக்கு என அமைந்த கலைவளர்கூடம் எதுவும் ஏற்படவில்லை. இலக்கியக் கலையிலும் வளஞ்சான்ற நிலையில் படைப்பாளிகளின் சாதனைகள் இவனுடைய ஆட்சிக்காலத்தில் நிகழவில்லை. ஆனால், இவனுடைய இசைப்பாடல்களை இவனுடைய மனைவி ஏழிசைவல்லியும் ஏனைய பாணரும் பாடிக் கலை வளர்த்தனர். கண்டராதித்தியச் சோழன் இயற்றிய திருவிசைப்பா சமயச்சார்பான அருளுணர்வுச் செறிவுடன் காணப்பட்டது. குலோத்துங்கனுடைய இசைப்பாக்கள் கலை உலகத்திற்கு உரியவை. இந்த வகையில் இசைக் கலைக்குரிய படைப்பாளி என்றளவில் வேறு எந்த சோழ மன்னனும் காணப் பெறவில்லை. ஆகவே, குலோத்துங்கனுடைய பெருமை கலை உலகத்திலும் காணப்பட்டது எனலாம்.

(7) சோழர்களில் உள்ளாட்சித் துறைக்கான அடிப்படையான ஆக்கப்பணிகளைத் தனிப்பட்ட முயற்சியோடும் (initiative) அச்சமில்லாமையோடும் இவன் மேற்கொண்டதற்குச் சான்றாக இவன் சுங்கந்தவிர்த்து, வணிகத்தில் 1098-ல் (ஆட்சிக்கு வந்த 28ஆம் ஆண்டில்) சீர்திருத்தம் கொண்டுவந்ததைச் சொல்லலாம். இவனுடைய இந்தச் சீர்திருத்தம் இவனுக்குப் பின்வந்த மன்னர்களால் நீக்கப்படாமல் வெகு காலம் அமுலில் இருந்தது.

மேற்சொன்ன ஏழு காரணங்களால் குலோத்துங்கன் சுயசிந்தனை கொண்ட முன்னோடிப் பேரரசன் என்ற பெருமைக்கு உரியவன் எனத் தெளிவாகக் கூறலாம்.

# 12. விக்கிரம சோழன்

## (1122—1135)

சோழ வரலாற்றுக்குரிய பேரரசு வளர்ச்சியில் விக்கிரம சோழனுக்கு அமைந்த வெற்றிகள் வல்லடிப்போர்முகத்தே தென்படவில்லை. மாருக, உள்நாட்டின் கலைச்சுவையான அமைதியில் அவன் விளைவித்த அறப்பணிகளிலும் ஆன்மநேய தில்லைநகர் வளர்ச்சியிலும் அவ் வெற்றிகள் காணப்பெறுகின்றன. அரசியல் அமைதிக்கு உரியதான இவனுடைய அரசாட்சிக் காலத்தில் தமிழகக் கலாசாரத்தின் சமயச்சார்பான வளர்ச்சிக்கு பெரும் ஆக்கம் ஏற்பட்டது. அதற்கு நிலைக்களனுக தில்லைச் சிதம்பரம் செல்வமும் கலைத்துடிப்புமுள்ள நகரமாக உரமேறி நின்றது. சோழர்கள் கண்ட தமிழ்க் கலைகளில் சிறந்த கட்டடக் கலையின் பெருவளர்ச்சிக்குப் புது மெருகு ஆங்கு ஏற்பட்டது. அளப்பரிய செல்வமும், சொல்லரிய கலைச்செல்வமும் ஊட்டப் பட்ட திருச்சிற்றம்பலம் தமிழகத்தின் கலாசார வளர்ச்சிப் பாதையில் சமயச்சார்புக்கு ஒரு மெக்காவாகவும், கோவிலறத்திற்கு ஓர் உரோமாபுரியாகவும், இரண்டும் சேர்ந்த அரசிருக்கைக்குரிய பேராண்மைக்கு ஒரு கான்ஸ்டான்டிநோபிளாகவும் உரு மாறியது.

விக்கிரம சோழனுடைய ஆட்சி மூன்று முக்கிய சிறப்பு களைக்கொண்டது. (1) அவனுடைய தந்தை குலோத்துங்க சோழனிடம் காணப்பட்ட அரசியல் ஞானம் இவனிடம் உண்டு. ஏனென்ருல், இவன் தந்தை ஈழத்தையும், கடைசிக் காலத்தில் வேங்கியையும் வலிந்து பெறுதற்கு எந்த முயற்சிகளையும் இராணுவ முறையில் அமைத்துக்கொள்ளவில்லை. அந்த அளவில் நாட்டின் செல்வத்தை வீணடிக்காமல் உண்மையான அரசியல் மேம் பாடான உள்நாட்டு ஆட்சித் திறனைக் குலோத்துங்கன் I (1070—1122) வளர்க்கத் தொடங்கி, தனது ஐம்பத்திரண்டு ஆண்டுக்கால ஆட்சியில் சுங்கம் தவிர்த்து, செல்வமும் கலையும் செழிக்கச் செய்த மேம்பாடு பெற்ருன். இதே அளவில் விக்கிரம சோழனும் நாட்டின் அமைதியை விரும்பிய நிலையில் வல்லடிப் போர்களைத் தவிர்த்தான் ; தன் தந்தை காட்டிய மக்கள் நலம் பேணுகின்ற ஆட்சியமைப்பை வலுப்படுத்துகின்ற வகையில் தனது அரசாட்சியை அமைத்துக்கொண்டான்.

ராஜராஜன் I கட்டிய பேரரசுக்குப் பூரணமான ஆதிக்க உணர்வைக் கொடுத்து, தனது தந்தையைவிட வல்லாட்சியாளனுக வெளிநாட்டுப் போர்களை ஓயாது நடத்தியவன் ராஜேந்திரன் I ஆவான். ராஜராஜனைப் போலக் குலோத்துங்கனும் பீடும் பெருமையும் பெற்ற சக்கரவர்த்தியாகத் (Grand Monarch) தோற்றமளிக்கிருன். ராஜராஜனுக்கு வாய்த்த ராஜேந்திரன் I என்ற வல்லாட்சியாளர் மகனைப் போலக் குலோத்துங்கனுக்கு அமைந்த அவன் மகன் விக்கிரம சோழன் நாட்டின் அமைதியை ஆக்கப்பூர்வமான முறையில் வளர்த்தான். அறப்பணிகளை அருளியல் பாங்கில் ஆற்றுகின்ற மனப்பக்குவத்தை அவன் பெற்றிருந்தான். இது அவனுடைய வாழ்நாளிலேயே அவன் கண்டு அனுபவித்த சிறப்புகளில் தலையாயது எனக்கொள்ளலாம்.

(2) இவனுடைய ஆட்சியின் இரண்டாவது சிறப்பு முன்பு கூறியபடி இவன் தில்லைச் சிதம்பரத்தை இந்து சமயத்தின் எழிற் பீடமாக ஆக்கிய நிலையில் ஆற்றிய கலைப்பணியைச் சாரும்.

(3) மூன்ருவது எனக் கொள்ளப்படும் இவனுடைய 17 ஆண்டுக் கால ஆட்சியின் மற்ெருரு சிறப்பை இவன் மேற்கொண்ட உலாக்களிலும் (சுற்றுப் பிரயாணங்கள்), அவ்வுலாக்கள் விளைவித்த சோழ அரசாட்சித் திறனிலும் நாம் காணலாம்.

## I வெளிநாட்டுக் கொள்கை

வல்லாட்சியாளனுக்குரிய வல்லடிப்போர்களை விக்கிரம சோழன் நடத்தியதாகச் சாசனக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனுல் இவனுடைய தந்தை குலோத்துங்கன் I காலத்தில் இவன் வேங்கி நாட்டை வென்று சோழ அரசியலுக்கு அடிமைப்படுத்தியது இவனுடைய போராற்றலையும் ஆதிக்க உணர்வையும் சுட்டிக் காட்டும். ஆனுலும், அப் போர்கள் எல்லாம் இவன் தந்தையின் ஆணையின்பேரில் வேங்கி நாடு தனக்குரியது என்ற உள்ளத்தகிப்பின் காரணமாகக் கீழைச்சாளுக்கிய மரபில் வந்த குலோத்துங்கன் நடத்தியமை நமக்கு வியப்பை அளிக்க வேண்டியதில்லை. சோழ ஏகாதிபத்தியத்தை நிலைநாட்டுவதற்காகச் சோழ இளவரசனுன இவன் கலிங்கம் வரை படையெடுத்துச் சென்று அதனை வென்று மீண்டான். ஒட்டக்கூத்தர் இவனுடைய கலிங்கப் படையெழுச்சியைக் 'கலிங்கப்பரணி' என்ற இலக்கியப் படைப்பாக ஆக்கிய செய்தியை விக்கிரமனுலாவிலும் தக்கயாகப் பரணிக்கு ஏற்பட்ட உரையிலும் நாம் காணலாம். இக் கலிங்கப்பரணி நமக்குக் கிடைக்கவில்லை.

1118-ல் விக்கிரம சோழன் கங்காபுரிக்குத் திருப்பி அழைக்கப் பட்டு யுவராஜா ஆக்கப்பட்ட பின்பு குலோத்துங்கன் கைவிட்டுப் போய்விட்ட வேங்கி நாடு சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் VI 1126-ல் இறக்கும்வரை சோழநாட்டுக்கு உரிமையாகவில்லை. விக்கிரம சோழனுடைய 1126-க்குப் பிற்பட்ட ஆட்சிக் காலத்தில் வேங்கிநாட்டுப் பகுதிகள் ஒன்றன் பின் ஒன்ருக அவனை வந் தடைந்திருக்க வேண்டும். இதற்குச் சாசனச்சான்றுகள் காணக் கிடைக்கின்றன. மகாமண்டலேசுவரன் நம்பயன் என்ற குறுநில மன்னன் 1127-ல் ஏற்படுத்திய குண்டூர்ப் பகுதியைச் சார்ந்த சாசனத்தில் விக்கிரம சோழனுக்குத் தான் அடங்கி இருந்ததைக் குறிப்பிடுகிருன். 1054-ல் ஏற்படுத்தப்பட்ட நீடுபுரோலு கல் வெட்டுச் சாசனம் வெலநாண்டுக் குறுநில வேளிர்கள் சோழ மன்னனுக்கு அடங்கி இருந்ததைச் சொல்லுகிறது.

சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் VI இறந்த பின்பு, இவ் வேளிர்களுக்கு மேலைச்சாளுக்கிய நாட்டரசின் பாதுகாப்பு மேலாக்கம் (Protectorate) எதுவும் ஏற்புடைத்ததாக இல்லாமற் போன நிலையில், சோழ மன்னன் பக்கம் சாய்ந்தனர் எனக் கொள்ளுவது பொருந்தும். வலிமையாளனின் பாதுகாப்பில் தம்மை ஒப்புவித்தல் (commutation) என்றளவில் இவர்கள் விக்கிரம சோழனிடம் அவர்களாகவே வந்தடைந்தார்கள் என்ற கருத்தும் உண்டு. விக்கிரம சோழன் எந்த நடவடிக்கைகள்மூலம் அவர்களைத் தன்வழி திருப்பினுன் என்பதை விளக்குகின்ற வரலாற்றுத் தடயங்கள் காணப்பெறவில்லை.

விக்கிரம சோழனுக்குரிய அதிகாரிகளின் கல்வெட்டுகள் கங்கபாடியின் சுகட்டூரிலும் (கி. பி. 1122), கோலார் மாவட்டத் திலும் (கி. பி. 1130) காணப்படுகின்றன. போசள நாட்டு மன்னனுடைய தளபதியால் குலோத்துங்கன் I காலத்தில் 1117-ஆம் ஆண்டு அளவில் கைப்பற்றப்பட்ட கங்கபாடியை முழுவளவில் இல்லாவிட்டாலும் ஒரு பகுதியையாவது விக்கிரமன் திரும்பவும் மீட்ட ஓர் அரசியல் நிலையைத்தான் மேற் சொன்ன இரு கல்வெட்டுகளும் எடுத்துக் காட்டும்.

வல்லடிப்போர்கள் இல்லாத விக்கிரமனுடைய ஆட்சிக்குரிய வெளிநாட்டு ஆயுதங்களாக வேங்கியும் கங்கபாடியும் காணப் பட்டாலும், இவற்றை மீட்பதற்காக இவன் எடுத்துக்கொண்ட முயற்சிகளில் இராணுவ நடவடிக்கைகள் காணப்பட்டனவா என்பது ஐயப்பாட்டுக்கு உரியது. தனது தமையனுன சோடன் என்பவனை மிஞ்சிய வகையில் போர் ஆற்றல் பெற்றிருந்த இவன்

தன்னுடைய தந்தை காலத்தின் தொடக்க நாள்களில் ஏற்பட்டிருந்த வல்லடிப்போர்களைத் தொடங்கி இருந்தால், இம் மன்னனைக் குறை சொல்ல அந் நாளைய சோழ நாட்டில் யாரும் இருந்திருக்க முடியாது. ஆனால், ஆதிக்க உணர்வுடன்கூடிய வெளிநாட்டுக் கொள்கை இவனுடைய ஆட்சியில் காணப்பட்டது எனச் சொல்வதற்கில்லை. இந் நிலையில் இச் சோழனுடைய முழுமையான சாதனைகள் எல்லாம் உள்நாட்டு நிர்வாகத்தில் செறிந்து **காணப்படுகின்றன.**

## II உள்நாட்டு நிர்வாகம்

**1. அரச உலாக்கள் :** சோழர்களின் ஆட்சிமுறை மக்களோடு தொடர்பு கொண்டிருந்தது என்பதை விக்கிரம சோழன் கைக்கொண்டிருந்த உலாப்போகும் வழக்கத்தைக் கொண்டு நாம் கணிக்கலாம். சோழ நாடு, தொண்டை மண்டலம் இவ் விரண்டிலுமுள்ள நகர்களில் இவன் உலாச் சென்ற வேளைகளில் தங்கி இருந்ததுபற்றிக் காட்டுமன்னார் கோவில் போன்ற அந்தந்த ஊர்களிலுள்ள கல்வெட்டுகள் சொல்லுகின்றன. இவ்வாறு உலாச்செல்லல் சோழ அரசிற்குரிய ஒரு மரபு எனவும், ஏனைய சோழ மன்னர்கள் முறையாக உலாக்களை மேற்கொண்டது போல விக்கிரம சோழனும் நாடு சுற்றி வந்தான் எனவும் பேராசிரியர் சாஸ்திரி கூறுகிறார்.[1]

விக்கிரம சோழனுடைய உலாக்கள் அவனுக்குரிய செல்வாக்கையும், அவனுக்கு மக்களிடம் காணப்பட்ட ஈடுபாட்டையும் வலுப்படுத்தியது என்பதற்கு, அவன் தில்லையில் செய்யப் புகுந்த அறப்பணியின் நிமித்தம், வேளிர்கள் உட்பட்ட ஏனைய மக்கள் எல்லோரும் அளப்பரிய தங்கத்தை அவனிடம் மனமுவந்து அளித்ததைச் சான்றாகச் சொல்லலாம். இவ் வகை அரச உலாக்களினால் மக்களைச் சந்தித்த விக்கிரம சோழன் தன்னுடைய நாட்டுப் பகுதிகளைத் தெளிவாகப் புரிந்துகொண்டிருந்த அளவில் அவனுடைய ஆட்சியின் திறன் அதிகரித்திருக்க வேண்டும். 'மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய் போல—தண்ணளி பரப்பித் தனித்தனிப் பார்த்து—மண்டுமுதுங் களிப்ப' என்று வருகின்ற இச் சோழனுடைய மெய்க்கீர்த்தி இச் சோழன் மேற்கொண்ட உலாக்களின் பயன்களை நிரல் படுத்திச் சொல்லுகிறது. 'தனித்தனிப் பார்த்து' என்று வருகின்ற சொற்கள் அவனுடைய ஆட்சியின் பொறுப்பு உணர்ச்சியையும், மக்களிடம் அவன் கொண்ட நேரடிப் பரிச்சயத்தையும் சுட்டிக் காட்டுகின்றன.

1 K.A.N. Sastri—'Cholas'—p. 346

**2. சமூக நிலை—பஞ்சம்:** 1125-ல் தொண்டை நாட்டில் பெய்த பெருமழையின் காரணமாகப் பயிர்கள் அழிவுற்றன. பஞ்சம் தோன்றியது. வட ஆற்காடு மாவட்டம் திருவோட்டூர் ஊர் மன்றம் நிலங்களை விற்று அரசனுக்குரிய வரியைக் கொடுத்த தாக அவ்வூர்ச் சாசனம் கூறுகிறது. 1231-ல் மற்றொரு பஞ்சம் ஏற்பட்டது. தஞ்சை மாவட்டம் கோவிலடிக் கல்வெட்டு கூறுவது போலத் திருவாடி மகாசபை ஊர் நிலத்தை விற்று அரசிறையைச் செலுத்தியது. அந்தணர் மட்டும் காணப் பெறுகின்ற மகாசபை என்ற ஊராட்சி மன்றத்திற்குப் போதிய வரிப்பணம் கிடைக்கவில்லை என்றால், அவ்வூரிலுள்ள பெரும்பான்மையான நிலவுரிமை அந்தணர் வரி கொடுக்கின்ற சக்தியை இழந்து காணப்பட்டனர் என்று பொருள்படும். பரம்பரையான நில வுரிமையாளரான அந்தணர் நிலையே இவ்வாறு நலிவுற்ற பின்பு, ஏனைய உடலுழைப்பு மக்களின் ஆற்றுமை அளவிடமுடியாத தாகக் காணப்பட்டிருக்க வேண்டும். திருப்பேர் என்ற ஊரின் மக்கள் பஞ்சந்தாளாது இடம் பெயர்ந்து வேறிடம் சென்றனர்கள். ‘காலம் பொல்லாதாய் நம்மூர் அழிந்து குடி ஓடிப்போய்க் கிடந் தமையால்’ என்று அதே சாசனம் கூறுகிறது. தற்காலத்தில் இருப்பது போன்று பஞ்ச நிவாரண வேலை அரசாங்க அளவில் மேற்கொள்ளுகின்ற வளமுறை அக் காலத்தில் கிடையாது.

ஆங்கில நாட்டில் எலிசபெத் அரசி (16ஆம் நூற்றாண்டு) காலத்தில் திருச்சபை பங்கு என்ற சமயச்சார்பான நாட்டுப் பிரிவினுள் வாழ்கின்ற எல்லா மக்களும் நிவாரண வரி (poor rate) கொடுத்தார்கள். திக்கற்றவரைப் பேணுவதற்கு வழிகாட்டிய இந்த வறியவர் பாதுகாப்புச் சட்டம் (Poor Law) ஊதியம் பெறாத சேவையாளர்களினால் செயல்படுத்தப்பட்டது. இத்தகைய முறையில் வறுமை நிவாரண வரியையோ, வறியவர் பாது காப்புச் சட்டத்தையோ சோழ அரசர்களின் ஆட்சியில் நாம் காண்பதற்கில்லை.

சோழர்கள் ஆண்ட அந் நாள்களில் இயற்கையின் சீற்றத்தால் ஏற்படும் பஞ்சம், பற்றாக்குறை எல்லாம் அப் பஞ்சத்தில் சம்பந்தப்பட்ட மக்களுக்குத் தனிப்பட்ட முறையில் கிடைத்த தெய்வத்தண்டனை என்ற சமயச்சார்பான விளக்கமும் மன அமைதியும் அக் காலத்தில் காணப்பட்டன. இதுவே பொது வான மனப்போக்கு என்றளவில் மலிந்திருந்த போது பெருநிதிய முடைய சோழ அரசனும் ஏனையோரும் பாதிக்கப்பட்டோரின் அல்லலை அகற்றுவதற்குத் தங்களுடைய தனிநபர் சிந்தனை

வழிதான் இயங்கினுர்கள். ஸ்தாபன முறையில் இயங்குவதற்கான சமூக நீதிக் கோட்பாடுகள் தனிநபர் அறவுணர்வு வரம்புகளைக் கடந்த நிலையில் இன்னும் சமுதாய நீதியாகப் பிறப்பு எடுக்க வில்லை. தனிநபர் அறிவுணர்வை அரசாங்க அதிகாரிகளே வெளிக் காட்டினுர்கள்.

**3. சமயப்பணி (அ) நில தானம் :** திருவிடைமருதூர்ப் பக்க முள்ள விண்ணக்குடி என்ற கிராமத்தை 1127-ல் 'தியாக சமுத் திரம் சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் மாற்றி, தேவதான கிராமமாக விக்கிரம சோழன் அளித்தான். அகலிங்கன் என்ற இவனுடைய பெயரினைத் தாங்கி அகலிங்கபுரம் என்ற பெயரில் சில ஊர்கள் இருந்தன.

**(ஆ) தில்லைச் சிதம்பரம் ஆக்கம் பெறல் :** வெளியார்ப் படை யெடுப்பு இல்லாமல் அமைதிக்கு வழி கண்ட இவனுடைய ஆட் சியின் தலையாய சிறப்பாகத் தில்லைநகர் அழகுபடுத்தப்பட்டது. தொண்டை மண்டலத்துப் பகுதியைச் சார்ந்திருந்த போதிலும், தலைநகரான கங்கை கொண்ட சோழபுரம் சிதம்பரத்திற்குப் பக்கம் அமைந்திருந்த காரணத்தால் சிதம்பரம் சோழ மன்னர் களின் சமய உணர்வுக்கு ஏற்ற வகையில் தொன்மைக்கும் அருள் வாழ்க்கைத் தோழமைக்கும் உறுதுணையாக விளங்கியது.

சைவ ஞானிகளால் பாடல் பெற்ற ஸ்தலம் என்றளவில் அல்லாமல், பல்லவர்க்குக் கச்சிமாநகர் போலச் சோழருக்குச் சிதம்பரம் அமைந்து போனது, ராஜராஜன் I, ராஜேந்திரன் II ஆகிய சாம்ராஜ்யச் சிற்பிகளின் அரசதிகாரக் கட்டளைகளின்படி தஞ்சைப் பெரிய கோவிலும் கங்காபுரியின் விண்ணகரமும் நிலங்கீறி முளைத்து எழுந்தன. ஆனுல், தில்லைச் சிதம்பரம் கோவி லானது சங்க காலத்திலிருந்தே தமிழகத்தில் நிலைபெற்றிருந்த தொன்மை சிறப்புக்கு உரியது. தமிழ்மண்ணின் சமயக் காலா சாரத்தின் சின்னமாகவும், தமிழ்மக்களின் ஆன்மீய உணர்வுக்கு வடிகாலாகவும் பண்டைக்காலந்தொட்டு அது அமைந் திருந்தது. 'திருமன்றங் காதலாற் பொன் வேய்ந்த காவலன்' என்ற அளவில் பராந்தகன் I (907—955) மாமன்னன் செய்த திருப்பணியை விக்கிரம சோழன் முழுமை பெறச் செய்தான்.

தொண்டை நாட்டையும் தஞ்சையின் ஒரு பகுதியையும் அலைக்கழித்த 1125ஆம் ஆண்டுக்குரிய பஞ்சம் நீங்கி மூன்று ஆண்டுகள் கழித்து, 1128-ல் அவ்வாண்டுக்குரிய அரசாங்க வருவாயின் பெரும்பகுதியைச் செலவிட்டு திருச்சுற்று மாளிகை,

பலிபீடம், கோபுர வாயில் ஆகியவற்றை விக்கிரம சோழன் உருவாக்கினுன்; கோவிலுக்குப் பொன்னுல் தேர் செய்தான்; கடவுளுக்கு முத்துச் சரங்கள் வழங்கினுன் ; அவன் பிறந்த நட்சத்திரமான உத்திரட்டாதித் திருநாளைப் 'பெரும்பெயர் விழாவாக' மக்களின் ஆரவாரத்தோடு கொண்டாட நிவந்தங்கள் பல அளித்தான். இவனுடைய ஆணையின் பின்னணியில் இருந்த அருளுணர்வைப் பகிர்ந்துகொண்ட முறையில் வேளிர்கள் அனைவரும் தில்லையம்பலத்தின் அழகைச் செழுமைப் படுத்துகின்ற பணிக்கு ஏராளமான தங்கத்தை மனம் உவந்து அவனிடம் அளித்தனர்.

இவன் தந்தையின் கட்டளைக்கேற்ப, நரலோக வீரன் என்பவன் சிதம்பரம் திருப்பணியை ஏற்கெனவே தொடங்கி வைத்திருந்தான். இவ்வாறு தில்லைத் திருப்பணி என்ற மன உணர்வில் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமான பாண்டியரின் இரண்டாம் பேரரசுக்குரிய மாமன்னர்கள் சிதம்பரம் கோவிலுக்கு விக்கிரம சோழன் போன்று பெருநிதியம் பிற்காலத்தில் அளித்தார்கள். இவ் வகையில் சிதம்பரம், அரசியலுக்கு அப்பால் நின்று, சமய, கலை வளர்ச்சியில் சிறப்பு பெற்றது.

**(இ) சமயப் பொறை :** விஷ்ணுவர்த்தனன் என்ற இயற் பெயருடைய தனது தந்தை திருமால் கோட்டம் ஏற்படுத்துகின்ற வைணவப் பாங்கைப் பெற்றிருந்தது போல விக்கிரம சோழனுக்கும் வைணவக் கடவுளரிடம் பற்று ஏற்பட்டதில் வியப்பு ஒன்றும் இல்லை. ஸ்ரீரங்கம் கோவிலுக்கும் இவன் திருப்பணிகள் செய்தான். இராமகடவுளுக்கு ஒரு கோவிலையும், திருவரங்கத்தின் ஐந்தாவது மதிற்சுவரையும் இவனே கட்டினுன் என்பதற்குக் கல்வெட்டுச் சாசன ஆதாரமில்லாவிட்டாலும் இவன் அவ்வாறு வைணவக் கோவிலுக்கும் அரச வருவாயிலிருந்து திருப்பணிகள் செய்ததை 'ஸ்ரீரங்கம் கோவிலொழுகு' எடுத்துச் சொல்கிறது.

**4. அதிகாரிகள் :** விக்கிரம சோழன் காலத்தில் அரசாங்க அதிகாரி அனந்தபாலன் தனது சொந்தச் செலவில் திருவாடு துறையில் திக்கற்ற அனுதைகளுக்கு ஓர் அறச்சாலை நிறுவினுன். மனதிற்கினியான் என்று பெயர் படைத்த மற்ருேர் அதிகாரி தனது ஊதியத்திலிருந்து ஒரு வைத்தியசாலையை நாகப்பட்டினம் பக்கம் திருப்புகலூர் என்னுமிடத்தில் 1128-ல் கட்டி வைத்து அனுதைகளையும் ஆதுரரையும் பாதுகாக்க ஏற்பாடு செய்தான். இவ்வாறு தனிநபர் அறவுணர்வை அரசாங்க அதிகாரிகளே வெளிக்காட்டினுர்கள்.

**5. இலக்கிய வளர்ச்சி :** இலக்கியக் கவிப்பெருங்கோ ஒட்டக்கூத்தரின் இலக்கியப் படைப்பு 'விக்கிரம சோழன் உலா' ஆகும். குலோத்துங்கன் I காலத்தில் சாளுக்கியச் சோழ பரம் பரையின் இலக்கியக் கலை உணர்வு தலைதூக்கத் தொடங்கியது. குலோத்துங்கன் II காலத்தில் அவ்வுணர்வு சோழர் வரலாற்றின் பொற்காலமாக இலக்கிய வளர்ச்சியைப் பொறுத்தளவில் அமைந்தது. இவ்வாறு அமைந்த இருபெரும் குலோத்துங்கன் களினூடே விக்கிரம சோழன் காணப்படுகின்றான். இலக்கிய மறுமலர்ச்சிக்குரிய தொடக்கம் குலோத்துங்கன் I காலத்தில் துளிர் விட்ட பின்பு விக்கிரம சோழன் காலத்தில்தான் சோழர் காலத்திய இலக்கிய வரலாற்றுக்கான மாறுதல் காலம் (Transition) ஏற்படுகிறது. தூய கவித்துவ மன ஓட்டத்தில் அழகுணர்வுடன் கூடிய இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கிய ஒட்டக்கூத்தரைப் பெற்றிருந்த ஒரே காரணத்திற்காக விக்கிரம சோழனுடைய ஆட்சிக்காலம் இலக்கியக்கலை வளர்த்த சிறப்பிற்கு உரியதாகி விடுகிறது. இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு ஒட்டக் கூத்தர் இயற்றிய 'விக்கிரம சோழனுலா'வும், 'கலிங்கப்பரணியும்' சோழர் காலத்திய இலக்கிய வரலாற்றில் தனிநபர்களின் சிறப்பு களைப் போற்றுகின்றன; கவித்துவம் மலர்ச்சியுற்ற அழகியல் இயக்கத்தை (Romantiacisty Movement) அவை வரையறை செய்கின்றன.

## III குடும்பம்

விக்கிரமனுக்கு அமைந்த மூன்று மனைவியர்களான முக்கோ கிழானடிகள், திருப்பதாகை, நேரியன மாதேவி என்பவர்களில் யாருடைய புதல்வனாகக் குலோத்துங்கன் II என்ற இவனுடைய மகன் இருந்தான் என்பது தெளிவுறவில்லை. 1135-ல் விக்கிரம சோழன் இறந்துபட்டான்; தன் மகன் குலோத்துங்கனுக்கு 1133-ல் யுவராஜா பட்டங்கட்டி அரசியலில் இளவரசுத் தகுதியோடு ஈடுபடச் செய்திருந்தான். மண்டலிகர்கள் என்ற அரசாட்சித் தலைவர்கள் விக்கிரமனைப் புடைசூழ்ந்து நின்றார்கள். அந்த வரிசையில் கருணாகரன் பெயரினை ஒட்டக்கூத்தர் தமது விக்கிரம சோழனுலாவில் குறிப்பிடுகிறார். ஆனால், அவனைப்பற்றிய சிறப் பான குறிப்புகள் விக்கிரமன் காலத்துக்குரிவையாகக் காணப்பட வில்லை. எனவே, அக் கருணாகரன் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றிருந்தான் என நாம் கொள்ளலாம்.

## குலோத்துங்கன் II (1135—1150)

குலோத்துங்கன் II காலத்தில்தான் சோழர் காலத்திய பொற்காலம் காணப்பெறுகிறது. கல்வியும், கலையும், கோவிலறமும் செழித்தோங்கிய சிறப்பு இக் காலத்திற்குத்தான் உரியது எனலாம். வல்லடியான ஆதிக்கப்போர்களை விட்டொழித்து, சோழப் பேரரசின் ஆதிக்க சக்திகளை அமைதி காலத்திற்குரிய வாழ்வு நலங்களாக மாற்றுவதற்கான புதிய அரசியல் கோட்பாட்டைச் சோழருக்கு வழங்கிய குலோத்துங்கன் I காலத்திலிருந்து சோழ நாட்டின் உள்நாட்டுப் பணிகள் புதிய வேகத்தோடும், அளப்பரிய வளத்தோடும் வளரத் தலைப்பட்டன. இவ்வாறு தொடங்கிய ஆக்கப்பணிகளின் பெரும்பயன் குலோத்துங்கன் II காலத்தில் முதிர்ச்சியடைந்தது. கிரேக்கர்களில் பெரிப்ளஸ், குப்தர்களில் விக்கிரமாதித்தன், மொகலாயர்களில் ஷாஜஹான், ஆங்கில டியூடர்களில் எலிசபெத் என்பவர்கள் பொற்காலத்தினர் ஆவர். இவர்களுடைய காலங்களில் காணப்பெற்ற ஒருமித்த வளர்ச்சி (Integrated growth) இக் குலோத்துங்கனுடைய காலத்தில் காணப்பெறவில்லை. ஏனென்றால், சோழரின் மத்திய அரசுக்கு இவன் காலத்தில் தளர்ச்சி ஏற்பட்டது. அந்த வகையில் காடவராயர் போன்ற தன்மூப்புக் குறுநில மன்னர்கள் சோழ நாடெங்கும் தோன்றினர்கள். இவ்வாறு சோழ உள்நாட்டு நிர்வாகத்தில் ஏற்பட்ட சுழற்சியை ஒரு குறைபாடெனச் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர். இதன் காரணத்தால் இக் குலோத்துங்கனுடைய காலத்தைப் பொற்காலம் என்று வழங்குவதற்கு இயலாது என்ற கருத்தும் நிலவுகிறது. ஆனாலும், ராஜராஜன் காலந்தொட்டு வளர்ச்சியுறத் தலைப்பட்ட சோழர்களுடைய கலை, இலக்கியம் இக் குலோத்துங்கன் ஆட்சி செய்த காலத்தில்தான் திரண்ட பயனைத் தந்தன. இந் நிலையில் இச் சோழனின் ஆட்சி சமய வளர்ச்சிக்கும், கலை, இலக்கிய மேம்பாட்டிற்கும் செய்த சேவைகளைத் தமிழக வரலாற்றுக்குரிய பொற்காலத்தை உருவாக்கின என நாம் சொல்லலாம்.

### I வெளிநாட்டுக் கொள்கை

1133-ல் யுவராஜா பட்டம் பெற்ற குலோத்துங்கனுக்குத் தனது தந்தை விக்கிரம சோழனுக்குரியதாக இருந்த பேரரசை அப்படியே ஆளக்கூடிய வாய்ப்பைப் பெற்ற வரலாற்றுப் பெருமை உண்டு. சோழப் பேரரசை விரிவாக்கிக்கொள்கின்ற அளவில் புதிதாக ஆதிக்கப்போர்களை இவன் தனது பதினைந்து ஆண்டுக்கால ஆட்சியில் மேற்கொள்ளவில்லை. அதற்குரிய பேரரசு வலிமையும் இவனுக்கு வாய்த்திருக்கவில்லை. ஆதிக்கப்

போர்களை வேற்று நாடுகளில் நடத்திக் காட்டுகின்ற வலிமையை எல்லாச் சோழப் பேரரசர்களும் தங்களுடைய குறுநில மன்னர் களின் ஆதரவிலிருந்துதான் பெற்றார்கள். சோழப் பேரரசுத் தத்துவத்தின் புத்துயிர்ப்புக்குக் காரணமான ராஜராஜன் I நிலை யான இராணுவத்தை (standing army) வைத்திருந்த போதிலும் குறுநில மன்னர்களின் இணக்கமும் சேவையும் அவனுக்குப் பரவலாக அமைந்த நிலையில் அவனுடைய பேரரசு பரப்பிலும் வலிமையிலும் விரிந்தது. ராஜராஜன் I போல குலோத்துங்கன் II இராணுவ மனப்போக்கு கொண்டவன் அல்லன். ஆகவே, இவன் போர்ப்பாசறைக்குச் சென்றதாகச் செய்தி இல்லை ; வெளி நாட்டுப் போர்கள் நிகழ்ந்திருக்க வேண்டிய சூழ்நிலையும் உருவாக வில்லை.

குலோத்துங்கன் II குறுநில மன்னர்களை அடக்கி வைத்த நிலையில் அவர்தம் போர்ப்படை வலிமையை வெளிநாட்டுப் படையெடுப்புகளில் திருப்பிவிட முடியாத நிலையில் இருந்தான். காடவராயன் போன்ற குறுநில மன்னர்கள் அவனை நோக்கித் தங்கள் படைகளைத் திருப்பாவிட்டாலும் தங்களுடைய படைத் திறன், செல்வநிலை ஆகியவற்றில் கண்ட வளர்ச்சியின் பயனாகக் குலோத்துங்கனை அலட்சியம் செய்கின்ற அரசியல் நோக்கு கொண்டார்கள். இந் நிலையில் புதிதாகப் பேரரசுப் பகுதிகளை நாடிச் செல்லுகின்ற போர்ப்படை எழுச்சிகளைக் குலோத் துங்கன் II ஏற்று நடத்த முன்வரவில்லை. ஆனால், இவனுடைய தந்தைக்கு அமைந்திருந்த குறுநில மன்னர்களின் கல்வெட்டு களைவிட ஆந்திர நாட்டில் இவன் ஆட்சிக் காலத்தில் இவனுக்கு அடங்கி இருந்த கந்திரவாடி வீமராசன் போன்ற வேளிர்களின் சாசனங்கள் எண்ணிக்கையில் அதிகம் காணப்படுவதால், இவனுடைய பேரரசு வெளிப்பார்வையில் எல்லா நலன்களையும் பெற்றிருந்த பாங்கில் காணப்பட்டது என்பது வரலாற்று உண்மையாகும்.

வெளிப் பார்வையில் இவ்வாறு பேரரசு விளங்கியதைப் 'பூமன்னு பூத்த ஏழுலகும்' எனத் தொடங்கும் இவனுடைய மெய்க்கீர்த்திகளில் காணப்படும் பின்வரும் அடிகளால் உணரப் படும் : 'பல்லவர்—தெலுங்கர், மாளுவர், கலிங்கர், சேரலர்—சிங்கணர், கொங்கணர், சேதியர், திரிகர்த்தர்—வங்க ரங்கர், வத்தவர் மத்திரர்-கங்கர், சோனகர், கைகயர், சீனரென்று—அறை கழல் வேந்தரும் எல்லா வரைசரும்—முறைமையில் வருந்தித் திறை கொணர்ந்திறைஞ்ச' என்று சீனரும் கப்பம் செலுத்திக் குலோத்துங்கனைப் போற்றினர் என்று இம் மெய்க்கீர்த்தி சொல்லு வது வரலாற்றுச் செய்தியாக அமைய முடியாததுதான். ஆனால்,

சீனுக்காரர்களையும் கப்பங்கட்டுகின்றவர்களாகக் காட்டுகின்ற வகையில் பேரரசின் பெருமித உணர்வு மிதிக்கப்பட்டிருந்தது என்பது புலப்படும். பேரரசிற்கு இவ்வாறு பாரம்பரிய மரியாதை (traditional dignity) இருந்ததே தவிர, அரசியலதிகார மதிப்பு (Political Power) காணப்படவில்லை. வெளிநாட்டுப் போரோ, உள்நாட்டுப் போரோ நிகழாத ஆட்சிக் காலத்திற்குரிய குலோத்துங்கனுக்கு அடங்கியவராக இம் மெய்க்கீர்த்தி எல்லா இந்திய அரசர்களையும் சீனதேசத்தினரையும் சித்தரிப்பது ராஜேந்திரன் I காலத்திலிருந்த பேரரசு என்ற அசலுக்கு நகல் எடுத்த தோரணையில் அமைந்துள்ளது. போரில்லாத அமைதிக்குரிய இவன் ஆட்சியில் இலக்கியமும் சைவமும் பெற்ற பெருவளர்ச்சி கலைப் பேரரசிற்கான மாண்புதனைப் பெற்றிருந்தது என்றளவில் இராணுவப் பேரரசின் சாதனைகளைவிட இக் குலோத்துங்கன் கண்ட கலைப் பேரரசின் சாதனைகள் ஒட்டக்கூத்தரின் நூல்களாகவும், தில்லைக் கோவிலின் எழிலார்ந்த தோற்றமாகவும் இன்றும் நம்மிடையே உயிர்க்கின்றன. இந்த அளவில் குலோத்துங்கனுடைய கலைப் பேரரசின் உயர்வு காலத்தை வெல்லுகின்ற கலை வளர்ச்சியாக என்றும் யாவராலும் எண்ணிப் போற்றப்படும்.

## II உள்நாடு

1. **குறுநில மன்னர்களின் தன்னிச்சை வளர்ச்சி :** பேரரசன் ராஜராஜன் காலத்தில் அந்நியரான பாண்டியரும் சேரருங்கூடச் சோழருடைய மத்திய அரசின் அதிகார வரம்பிற்குள் அடைபட்டுக் காணப்பட்டனர். குலோத்துங்கன் II காலத்தில் அவனுக்கு அடங்கியிருந்த காடவராயர் போன்ற குறுநில மன்னர்கள் அரச மேம்பாடுகளைத் தாங்களாகவே அனுபவிக்கத் தொடங்கினர்கள். அரச நாராயணன், ஆளப் பிறந்தவன் என்ற பட்டங்களைக் காடவராயரின் முதல் தலைவனை ஆட்கொல்லி காடவராயன் என்பவன் சுவீகரித்துக்கொண்டான். மாமன்னன் குலோத்துங்கன் I காலத்திலேயே இத்தகைய படைத்தலைவர்கள் தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தங்களைச் செய்துகொண்டார்கள். இவ்வாறு சோழ மத்திய அரசின் அதிகாரத்தில் ஏற்பட்டுப் போன விரிசலானது குலோத்துங்கன் II காலத்தில் காணப்பட்ட அரசியல் குறைபாடு என்றாகியது. குறுநில மன்னர்களின் சுயேச்சை உணர்வு கட்டுக்கடங்காமல் காணப்பட்டது. காடவராயன் தன்னைக் குலோத்துங்க சோழக் காடவராயன் என அழைத்துக்கொண்டான். பல்லவர் குலத்தின் பழம்பெருமையை மீட்கின்ற பாணியில் இவன் கோவிலறம் பேணியும், படை நடத்திப் பூசலிட்டும் வாழத் தலைப்பட்டான். தென் ஆற்காடு பகுதி காவல் அதிகாரியாக விளங்கிய பல்லவ குலத்தானாகிய

காடவராயனைப் போன்று மற்றைய மன்னர்குல காவல் அதிகாரிகளும் தனிப்பட்ட முறையில் அரசியல் செல்வாக்கை அனுபவிக்கின்ற வழி முறையைத் தேடிக்கொண்ட இராணுவ விற்பன்னர்களாகத் தென்பட்டார்கள்.

வட ஆற்காடு பகுதியில் குறுநில மன்னனான சம்புவ ராயன், தென் ஆற்காடு பகுதி காவல் அதிகாரியான வாணர்குல ராஜ ராஜ மகதை நாடாள்வான், திருக்கோவலூர் சிற்றரசனான சேதி ராயன், திருக்காளத்தியை ஆண்ட யாதவ ராயன், மைசூர்ப் பகுதியை ஆண்ட கங்கர் மரபினனான சீயகங்கன், தகடூரை ஆண்ட அதியமான், சோழருக்கு உட்பட்ட ஆந்திரதேசம் கடப்பைப் பகுதியிலுள்ள பொத்தப்பி என்ற தலைநகரிலிருந்து அப் பகுதியை ஆண்ட சித்தரசன் போன்றவர்கள் சம்புவராயர், யாதவ ராயர், காடவராயர் போன்ற இனப் பாகுபாட்டுப் பெயர்களோடு ஒருவருக்கொருவர் பகையுணர்ச்சியோடு தலையெடுத்தனர். அந்நியப் பகுதியான பாண்டியர்-கேரளர் நாடுகளில் நிலைப்படை (garrison) அமைத்தும், சோழ-பாண்டியன் என்ற பட்டங் கொண்ட நேரடியாக ஆட்சி செய்கின்ற அதிகாரிகளை நியமித்தும் குலோத்துங்கன் I காலம் வரை சோழ மத்திய அரசு தனது வலிமையைக் காட்டியது. இப் பாரம்பரியத்தோடு காடவராயரின் 'அரசுக்குள் அரசு' உண்டாக்கும் தன்னிச்சை ஆட்சியதிகாரத்தை இணைத்துப் பார்க்க வேண்டும். வெளி நாட்டிலேயே அவ் வகையான இராணுவப் பிடிப்புகளை ஊன்றிய சோழ அரசு, குலோத்துங்கன் II ஆட்சிக் காலத்தில் உள்நாட்டில் தன்னிச்சை பெற்று வளர்ச்சியுற்றுக் காணப்பட்ட காடவராயர் போன்றவர்களைச் சகித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இத்தகைய முறையில் சோழப் பேரரசின் அரசியலமைப்பில் ஒரு பிறழ்வு நிலை (Constitutional Perversion) ஏற்பட்டது.

16ஆம் நூற்றாண்டில் ஃபிரான்ஸின் படை மான்ய பிரபுக்களை அடக்கிய நிலையில் தனது வல்லாட்சியை அமைக்க விழைந்த லூயி XIV தனக்குரிய அதிகாரிகளைச் சாமானியர்களின் மத்தியிலிருந்து தெரிந்தெடுத்தான். சோழ நாட்டில் ராஜராஜன் I காலத்திலிருந்து அதிகாரிகளின் மேலாக்கம் தொடங்கப்பட்டு, குலோத்துங்கன் I காலத்தில் முடிவடைகிறது. பின்பு இத்தகைய 'சாமானிய' அதிகாரிகளின் அரசியல் சேவைகளுக்குப் பதிலாகக் காடவராயர் போன்ற அரசகுலப் பெருமை சொல்கின்ற ஆட்சியாளர்கள் அதிகாரிகளாகக் காணப்பெற்றார்கள். குலோத்துங்கன் II காலத்தில் குலவழிப் பெருமை கொண்ட அதிகாரிகள் குறுநில மன்னர்களாகக் காட்சி அளித்தார்கள். இக் குலோத்துங்கனுடைய அரசாட்சியில் கலையும் சைவ சமயமும் பெரு

வளர்ச்சி பெற்றன என்ருலும், சோழ மத்திய அரசின் அதிகாரம் மேலே சொல்லப்பட்ட குறுநில மன்னர்களின் தன்னிச்சையான வளர்ச்சிப் பொலிவின் பின்னணியில் எதிர் விகித அளவில் மங்கிப் போய்விட்டது எனலாம்.

**2. சமயக் கொள்கை :** சிதம்பரத்தில் மற்ெருரு முறை தனது முடிசூட்டு விழாவை நடத்திக்கொண்ட குலோத்துங்கன் அத் தில்லையைத் தனக்குரிய நகராக்கி, அதன் ஆன்மீயச் சூழலை அனுபவித்து சைவத்தின் துணைவனுக எழுச்சியுற்ருன். வைணவரின் கடவுளரான கோவிந்தராஜரின் சிலையை இவன் தில்லைக் கோவிலிலிருந்து அப்புறப்படுத்தினுன் என்பதை ஒட்டக் கூத்தரின் குலோத்துங்கச் சோழனுலா தெளிவாகக் கூறுகிறது. இந்த அளவில் வைணவரின் சீற்றத்துக்கு ஆளாகிப்போன இவன் கிருமிக்கண்டன் (புற்று நோயைக் கழுத்தில் கொண்டவன்) என்றளவில் அவர்களால் புறக்கணிக்கப்பட்டான்.

'தில்லைத் திரு மன்றின் முன்றில் சிறு தெய்வத்—தொல்லைக் குறும்பு தொலைத்து எடுத்து' இச் சோழன் தில்லையைச் சீர்படுத்தினுன் என்று 'குலோத்துங்கச் சோழனுலா' பேசுகிறது. திருமால் சிலையைத் திருச்சிற்றம்பலத்து முற்றத்திலிருந்து பெயர்த் தெடுத்து திருமாலுக்குரிய கடலில் கொண்டு போட்டான் என்பது தக்கயாகப்பரணியில் ஒட்டக்கூத்தர் சொல்வது வரலாற்றுச் செய்தியாகும், இந்தத் திருமால் சிலை நந்திவர்மன் II என்ற பல்லவ மன்னனுல் பல்லவப் பேரரசு காலத்தில் சிதம்பரத்தில் நிறுவப் பெற்றது. வைணவத்தின் எதிரியாகக் குலோத்துங்கன் மாற வேண்டிய அவசியம் என்ன என்பது தெளிவுறத் தெரியவில்லை. தில்லையின் மாண்பில் தனது மனதைப் பறிகொடுத்த இச் சோழன் சிதம்பரத்துக் கோவிலைப் புனர் நிர்மானம் செய்வதற்கு எதிர்ப்பு தெரிவித்த வைணவ அந்தணர்களின் சூழ்ச்சிகளால் மனக்கிளர்ச்சியுற்று இவ்வாறு திருமால் படிவத்தைச் சினமுடன் அப்புறப்படுத்தினுன் என்பது ஆராய்ச்சிக் குறிப்பு ஆகும்.

அதிராஜேந்திரன் ஆண்ட நாளில்தான் இத்தகைய நிகழ்ச்சி நடந்தது எனப் பேராசிரியர் அவர்களும், குலோத்துங்கன் I தான் இதைச் செய்தவன் எனப் பிறிதோர் ஆராய்ச்சியாளரும் சொல்லுகின்ற இந்த நிகழ்ச்சி குலோத்துங்கன் II காலத்தில் நடந்தது என்பதற்கு ஒட்டக்கூத்தரின் 'உலா' வரிகள் சரியான தடயம் ஆகும். இச் சோழன் பெயர்த்தெடுத்தது தில்லைக் கோவிலின் மூல விக்கிரகமில்லை; ஒட்டுறவில் காணப்பட்ட வைணவக் கடவுளுடையது ஆகும். இவ்வாறு அப்புறப்படுத்திய திருமால்

சிலையை விஜயநகரப் பேரரசின் காலத்தில் இராமராயர் திரும்பவும் சிதம்பரத்தில் கொண்டு வைத்த வரலாற்று நிகழ்ச்சி தமிழகத்தில் வைணவத்தின் ஆதிக்கப் பிடிப்பைக் காட்டுகிறது.

**(அ) திருப்பணி :** குலோத்துங்க மன்னன் தில்லைச் சிதம்பரத்தில் திருச்சுற்று மாளிகை, காமக்கோட்டம், அம்பாளுக்குத் தேர் ஆகியவற்றோடு எழுநிலைக் கோபுரத்தையும் அமைத்தான். பராந்தகன், விக்கிரமன் போன்ற தன்னுடைய முன்னோர்களைப் போல அம்பலத்திற்குப் பொன் வேய்ந்தான்; கற்பகத்தரு மரங்களைப் பொன்னால் செய்து, அவற்றைத் திருச்சிற்றம்பலத்தின் பெருமைக்குரியதாக்கினான். திருக்குளம் வெட்டிச் சிதம்பரக் கோவிலின் அழகையும் ஈர்ப்பையும் பெருமுனைப்போடு வளர்த்துக் காட்டிய இச் சோழனைத் 'தில்லைத் திருநகர் சிறப்புடைத்தாகத் திருமுடி சூடிய ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்' என்று திருமாணிகுழி கல்வெட்டு பொருத்தமாக அழைக்கிறது. சைவ சமயக் குரவர் அறுபத்து மூவர்களுக்கு உரிய சிலைகளைத் திருவாரூர்க் கோவிலில் நிறுவச் செய்து, அவற்றுக்கான வழிபாடு, திருவிழா முதலியவை நடத்துவதற்காக இறையிலி நிலங்களை நிவந்தங்களாக இச் சோழன் அளித்தான். சைவ சமய ஞானிகளுக்கு இத்தகைய சிறப்புச் செய்த இம் மன்னன் 'திருநீற்றுச் சோழன்' என்னும் பட்டம் பெற்றமைக்கு உரியவனாகத் தன் பாட்டன் குலோத்துங்கனைவிடப் பொருத்தமான முறையில் தகுதியுள்ளவனானான்.

தில்லையம்பலத்திற்குப் பொன் வேய்ந்த அறப்பணி போன்ற சேவைகளை இவன் தந்தை விக்கிரம சோழன் தொடங்கி வைத்தான். தந்தையின் பாரம்பரியத்தை இவன் பின்பற்றி அப் பணிகளை முடித்து வைத்தான். இவ்விருவருக்கும் முன்பே குலோத்துங்கன் I காலத்தில் நரலோக வீரன் என்ற பல்லவத் தளபதி, தன் அரசனிட்ட ஆணைக்கேற்ப தில்லையில் மேற்கொண்ட திருப்பணியைச் செய்தான். விக்கிரம சோழன் தன் தந்தைக்குரிய முனைப்போடு தொடர்ந்து அப் பணியைச் செய்தான் என்பதும் வரலாற்றுச் செய்திதான். ஆகவே, தில்லை திருப்பணியானது பாட்டன், மகன், பேரன் என்றமைந்த இம் மூன்று சோழ மன்னர்களாலும் பெரு விருப்பத்தோடு மேற்கொள்ளப்பட்ட பெருஞ்சேவையாக விரிவுற்று உன்னதமடைந்தது. அக் காலச் சோழ நாட்டின் செல்வத்தையும், நாட்டில் நிலவிய அமைதியையும், மக்கள் நலம் பேணும் சமயச் சார்பான உணர்ச்சியையும் அது விளக்கிக் காட்டுகின்றது திருமால் படிவத்தைக் குலோத்துங்கன் பெயர்த்தெடுத்த சம்பவம் மட்டும் நாட்டில் நிலவிய அமைதிப் போக்குக்குப் புறம்பானதாகத்

தென்படுகிறது. ஆனாலும், 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு அடியார்' என்றளவில் அமைந்து போன சைவப் பார்வையில் தில்லையின் பாதுகாவலர்களைத் திருப்திப்படுத்திய பெருமை சைவனான குலோத்துங்கன் II சோழனுக்கு உண்டு.

இந்து சமயத்தின் பிளவுகளை அரசியல் வலிமைக்கும் சமூக ஒற்றுமைக்கும் புறம்பானவை என்று ஒதுக்கித் தள்ளிய குலோத்துங்கன் அப் பிளவுகளை வலுப்படுத்திய வைணவத் தீவிரவாதிகளின் தன்மூப்புச் சிந்தனையை ஒடுக்குவதற்காகத்தான் தில்லையிலிருந்து பெருமாள் சிலையை அகற்றினான் என்று சொல்வது பொருத்தமாகும். இவனுடைய பாட்டன் குலோத்துங்கன் திருமால் கோட்டம் கட்டியவன்; இவன் தந்தை விக்கிரம சோழன் அதே சமயப். பொறையைத் தானும் கொண்டு இருந்தவன். குலோத்துங்கன் II மட்டும் ஏன் இச் சமயப் பொறையைக் கைவிட்டான்? இதற்கு இரண்டு காரணங்கள் தென்படுகின்றன. தில்லைச் சிதம்பரம் சோழப் பேரரசின் கலாசார மூச்சாக, சமய வாழ்வின் உயிராக்கமாக விளங்கிய காலத்தில் குலோத்துங்கன் ஆட்சி செய்தான். சைவ நெறியின் ஒருமித்த உயர்வில் நாட்டு மக்களின் எண்ணமும் இயக்கமும் சைவ நெறியாளனான சோழன் குலோத்துங்கனை உயர்த்தின. இவ்வாறு காணப்பட்ட மன இணைவு (emotional integration) வைணவக் கடவுளுக்குரிய வழிபாடுகளைத் தில்லைக் கோவிலில் செய்கின்ற அளவில் தோன்றிய பேதங்களினால் பீடிக்கப்பட்டது. ஆகவே, ஒருவழிச் சமயநெறி என்ற கோட்பாட்டின்படி சைவம் மட்டும் நிலைநிற்பதற்காகத் தில்லையில் மட்டும் வைணவ விலக்குச் சீர்திருத்தம் குலோத்துங்கனால் மேற்கொள்ளப்பட்டது. இரண்டாவது காரணமாக, தில்லைவாழ் வைணவரின் தகுதியற்ற போக்கைச் சொல்லலாம். தில்லைக் கோவிலைப் புதுப்பித்து விரிவாக்குகின்ற திட்டம் செயல்படுத்தப் பட்டபோது வைணவக் கடவுளரின் சிலையை அகற்றி வைக்க வைணவர்கள் இணக்கம் தரவில்லை ; மாறாக, கிளர்ச்சிக்காரர்களைப் போல மனங்கோணி நடந்துகொண்டார்கள். ஒற்றுமையை வளர்க்கின்ற முறையில் பேதங்களைக் களைய முனைகின்ற மன்னனுக்கு —அதுவும் செல்வச் சிறப்புடைய சிவநெறி குலோத்துங்க மன்னனுக்கு —வைணவர்களின்பேரில் ஏற்பட்ட சினம் பெருமாள் சிலைப் பெயர்ப்பாக வெளிப்பாடு கொண்டதில் வியப்பு ஏற்படுவதற்கில்லை. வைணவர்களை இச் சோழ மன்னன் ஸ்தாபன அளவில் எதிர்க்கவில்லை என்பதற்கு இவன் நாடெங்கிலுமுள்ள திருமால் கோவில்களை ஊறுபடுத்தாமல் விட்டு விட்டதை ஆராய்ச்சியாளர் எடுத்துக்காட்டுவார்.

**(ஆ) சைவத்திற்கு ஏற்பட்ட பெரிய புராணம் :** சிவனடியார் வரலாற்றைப் 'பெரிய புராணம்' என்றளவில் படைத்தளித்த சேக்கிழார் பெருமான் குலோத்துங்கனுடைய அவைக்களத்தில் இருந்தவர் என்பது பேராசிரியரின் கருத்தாகும். தமிழ் நாகரிகத்தின் பிற்காலச் சோழர் கால வளர்ச்சிக்கு இலக்கியம்மூலம் அருள் வாழ்வுக் கண்ணோட்டத்தைத் தத்துவ எழிலோடு அமைத்துக் காட்டிய அருந்தமிழ் வித்தகர் இச் சேக்கிழார்தான். இவர் சிதம்பரத்தில் ஓர் ஆண்டு தங்கிப் பெரிய புராணம் என்ற சிவனடியார் சரிதங்களை எழுதி முடித்து, தம் மன்னன் குலோத்துங்க சோழன் முன்னிலையில் அரங்கேற்றி வைத்தார். சைவத்திற்காகவே ஒரு நிலைப்பட்ட மனப்பயிற்சியில் மேம்பட்டுப் போன அவ்வடியார்களின் வரலாறுகள் சோழ நாட்டுக் கோவில்கள்தோறும் இசையோடு எடுத்தோதப்பட்டுப் புதுமை மணம் பெற்ற சைவத்தின் முழக்கமாக எங்கும் ஒலித்தன. தில்லை அம்பலத்தின் சிறப்பை ஏனைய தலங்களின் சிறப்போடு பெரிய புராணம் இணைத்து வைத்தது. நாயன்மார்களின் அருள் வாழ்வுப் பெருமைகளைக் கணிக்கின்ற பெரிய புராணம் என்ற இத் திருத்தொண்டர் புராணம் சைவ சமயத்தின் வழிமுறை நூல் (Manual of Saivism) எனப் பயன்பட்டது. அந்தணர்வழி இந்து சமயத்திற்கு ஏற்பட்டிருந்த புராணங்கள் பெரும்பாலும் வடமொழியில் இருந்த அந் நாளைய நிலையில், பெரிய புராணம், தமிழக ஊர்களில் தவழ்ந்து நின்ற அறவுணர்வுப் பாடல்களையும், அப் பாடல்களைப் பாடிய அடியார்தம் தமிழ் மணக்கும் வாழ்வியலையும், இலட்சியப் பிடிப்போடு தன் நாடு, தன் மக்கள் என விரிந்துபட்ட மாட்சியையும் ஒருசேரப் பிழிந்தெடுத்து கதை வடிவில் கடவுளரின் நேரடியான பரிச்சயத்தில் சைவத்தின் மலர்ச்சியாகத் தந்தது. சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் சோழனையும் வாழ்த்திப் பாடினார். சைவ நாயனாருக்குத் திருவாரூரில் சிலைகள் அமைக்கப்பட்டன. அநபாயச் சோழன் என்று சேக்கிழாரால் தமிழகத்தில் சிரஞ்சீவியாக்கப்பட்ட இக் குலோத்துங்கன் சைவத்தின் இயக்கு சக்தியாகப் பெரிய புராணத்தைத் தமிழ் மண்ணில் பாயவிட்டு சோழருக்குரிய கலையுணர்வை விளைச்சலிட்டான். இத்தகைய சிறப்பு கொண்ட சைவத்தின் மேலாக்கம் இச் சோழனுடைய காலத்தில் மட்டும் கருக்கொண்டு வளர்ந்ததாகக் கொள்ளுவது வரலாற்றுப் பார்வைக்குப் பொருந்தி வராது. மாமன்னன் ராஜராஜன் காலந்தொட்டு சைவ நாயன்மார்களை வழிபடும் முறை வழக்கிலிருந்தது.

**3. இலக்கிய வளர்ச்சி :** சைவத்தின் வளர்ச்சியை இலக்கியச் செழுமையாகக் காட்டியவர் சேக்கிழார் என்றால், சோழ

மன்னர்களின் பெருமாட்சியை அணியலங்காரப் பாடல்களில் தந்தவர் ஒட்டக்கூத்தர் ஆவார். குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ், குலோத்துங்கன் உலா என்ற இரண்டு இலக்கியப் படைப்புகளை ஒட்டக்கூத்தர் குலோத்துங்கனுக்கு இலக்கியக் காணிக்கையாக்கினர். நளவெண்பா எழுதிய புகழேந்தியும் இக் குலோத்துங்கன் காலத்திய இலக்கிய வளர்ச்சியில் பங்கு பற்றியவர்தாம். பல்லவ மன்னன் நரசிம்மன் II (696—722) காலத்தில் தண்டி என்ற சமஸ்கிருதப் பண்டிதரால் வடமொழியில் படைக்கப்பட்ட 'காவிய தர்சனம்' என்ற இலக்கியம் பற்றிய இலக்கணநூல் இக் குலோத்துங்கனின் அவைக்களப் புலவரான தண்டியாசிரியரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

4. **கலை வளர்ச்சி :** பாட்டும் பரதமும் வாழ்வின் இயல்பூக் கங்களாக அமையப் பெற்ற பாணரும் விறலியரும் ஏனைய புலவரோடு சேர்ந்து 'கற்றவர் குடி புடை சூழும் கற்பக வனமே' என்று கூத்தரால் போற்றப்பட்ட இச் சோழனுடைய வள்ளன் மையை நுகர அவனை நாடி வந்தார்கள். 'பெரும்புலவரும் அருங்கவினரும் நரம்புறு நல்லிசைப் பாணரும்' கொண்ட கலை வாழ்வுச் சுற்றம் இச் சோழனுக்கு அமைந்திருந்தது. சங்க காலத்திய மன்னர் கொண்ட கலைவாழ்வுப் பெருமிதம் இவனுக் குரிய பெருமைகளில் பெருமையாக இலங்கியது. இந்து மதத்தின் வளர்ச்சியில் ஆதித் தமிழுணர்வின் உயிராக்கமாகத் தோன்றி வளர்ந்த தூய சைவத்தைப் பரந்த இச் சோழன் தனது கலை வாழ்வில் சங்கத் தமிழகம் போற்றிய பாணர், விறலியர் போன்றோரை ஆதரித்த பெருமைதனைத் தண்டியலங்காரம் 'அன்னபோ லெவ்வுயிருந் தங்கு மனபாயா நின்னையா ரொப்பர் நிலவேந்தர்' என்று வியந்துரைக்கிறது.

ஹர்ஷ சக்கரவர்த்தி போல நாடக ஆசிரியனுகவோ, கிருஷ்ணதேவராயர் போன்று அரசியல் சாத்திரநூல் படைப்பாள னுகவோ, சோழன் கண்டராதித்தியனைப் போன்று திருவிசைப்பா பாடியவனுகவோ குலோத்துங்கன் காட்சி தராவிட்டாலும் ஆய கலைகளைக் கற்றுணர்ந்தவன் என்றளவில் ஒட்டக்கூத்தரின் சீடன் என்ற பெருமைக்குரிய அறிவாற்றல் பெற்று விளங்கினன். இதன் காரணமாக இவனுக்கு 'ஞான கம்பீரன்' என்ற பட்டம் உண்டு. குதிரை சாஸ்திரத்தைப் பாரதத்தின் நகுலன் போல நன்குணர்ந்தவன் என்ற நிலையில் 'துரக வித்யா விநோதன்' என்ற பட்டமும் பெற்றிருந்தான். இவ் வகையான பல்கலை யாளன் இச் சோழன். சோழப் பரம்பரையினரின் கலை இலக்கிய வளர்ச்சி இவன் காலத்தில் முழுமைபெற்ற பெருமைக்கு உரிய

தகுதி இவனுக்குரியதுதான். 'பெரிய பெருமாள்' என்ற இவனுடைய பட்டத்திற்கும் மேற்சொல்லப்பட்ட சமய கலை வளர்ச்சிப் பெருமைகளும் சான்று சொல்லின.

## III குடும்பம்

தியாகவல்லி, முக்கோ கிழானடிகள் என்ற இரண்டு மனைவி களும், ராஜராஜன் II என்றழைக்கப்பட்ட மகனும் குலோத்துங்க னுடைய குடும்ப வாழ்வுக்குரியர்கள் ஆவார்கள். இவ்விரு மனைவி யரில் ராஜராஜனின் தாய் யார் எனத் தெரியவில்லை. 'பூமன்னு பூத்த ஏழுலகந்தான்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி கூறுவது போல, தியாகவல்லி என்ற புவன முழுதுடையாளும் இக் குலோத் துங்கனும் 'இமயப் பாவையும் சிவனும் போல' வாழ்ந்தனர். இவனுக்கு அமைந்த பல விருதுப் பெயர்களில் திருநீற்றுச் சோழன், அபயன் என்ற இரு பட்டங்களும் இவனுடைய பாட்டன் குலோத்துங்க சோழனுக்கு உரியவையாக விளங்கி இவனை வந்தடைந்தன. ஏனைய விருதுகள் பின் வருமாறு: எதிரிலிப் பெருமாள், பெரிய பெருமாள், கலி கடிந்த சோழன், அநபாயன். கங்காபுரி தலைநகரமாக விளங்கியது. தில்லைச் சிதம்பரம் கலை வளர்ச்சிக்குரிய சைவத் தலைநகரமாகத் திகழ்ந்தது. கீழைப் பழுவூர், பிரம்மதேசம், ஏமப்பேரூர் போன்ற ஊர்களில் இவன் நேரடியாகப் பிறப்பித்த ஆணைகள் கல்வெட்டுகளாகக் காணப்படுவதால், இந்த ஊர்களில் இவன் ஆண்டுதோறும் உலா வந்து தங்கி இருந்தான் என்பது தெரிய வருகிறது. தனது தந்தையைப் போலவே உலா எடுத்து வெளிச் சென்று மக்க ளிடையே தொடர்பு கொண்டிருந்த மன்னனுக விளங்கிய இக் குலோத்துங்கன் தனது பதினைந்து ஆண்டுக்கால ஆட்சியில் சோழ வரலாற்றில் காணப்படும் கலை உலகக் கர்த்தா என்ற பெரும்பெயர் ஈட்டிய பின்பு 1150-ல் இயற்கை எய்தினன்.

# ராஜராஜன் II (1150—1173)

மாமன்னர்களாக விளங்கிய சோழ மன்னர்கள் பெயரளவிற்கு மட்டும் அத்தகைய பெருமையை அனுபவிக்க வேண்டிய அரசியல் நிர்ப்பந்தத்திற்கு உள்ளாகிப் போனர்கள் என்பதை ராஜராஜன் II ஆண்ட 23 ஆண்டுகளுக்குரிய அரசியல் நிகழ்ச்சி களைக் கொண்டு நாம் அறியலாம். சோழ அரசியல் அதிகாரிகள் குறுநில மன்னர்களாக மாறிய அரசியல் திரிபு, மாற்ருரோடு போர் புரிந்து காவிரி நீரைக் கொண்டு வந்த பெருமை, பாண்டியரின் உள்நாட்டுப் போரில் தலையிடத் தொடங்கிய தென்னகத்தின்

அரசியல் திருப்பங்கள்—இம் மூன்று நிகழ்ச்சிகளும் இவன் காலத்துக்குரிய சிறப்புச் செய்திகள் ஆகும்.

## I வெளிநாட்டுக் கொள்கை

வேங்கி நாட்டின் திராட்சராமம் என்னும் இடம் வரை ராஜ ராஜனுக்கு அடங்கிய குறுநில மன்னர்களின் கல்வெட்டுகள் காணப்படுவதால், இவனுடைய பேரரசு வேங்கி நாடு வரை விரிந் திருந்தது எனலாம். இது இவன் பாட்டன் விக்கிரம சோழன் காலத்தில் மீட்கப்பட்டது. ஆனாலும், வடக்கே வெலநாண்டு என்ற இடத்தை ஆண்டவர்கள் சோழர்கள் என்றுதான் அழைக்கப்பட்டார்கள். இவர்களுக்குச் சோழ அரசனிடம் ஏற்பட்டிருந்த ஈடுபாடு வெறும் மேல்பூச்சாகத்தான் காணப் பட்டது. அவர்களுடைய சுயேச்சதிகாரப் போக்கு எல்லோ ருக்கும் தெரிந்த அரசியல் முறைமையாக ஒப்புக்கொள்ளப்பட் டிருந்தது. இந் நிலையில் சோழ அரசனும் அதைப் பெரிது படுத்தவில்லை. பேரரசுப் போர்களை வடக்கே நிகழ்த்த முடியாத தன்னுடைய இயலாத் தன்மையை அவன் வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளவில்லை. மேலைச்சாளுக்கியரின் ஆசியோடு வளர்ந்து வந்த போசளர்களின் எழுச்சிக்கு ஈடு கொடுக்கின்ற அளவில் சோழப் பேரரசும் வடக்குப் பகுதியில் சுருங்கிக் கொண்டது. ஆனாலும், தெற்கே சோழரின் சம்பிரதாயமான ஆதிக்கப் பிடிப்பு நீடிக்கத்தான் செய்தது. பாண்டியரோடு இது சம்பந்தமான போர்களும் நிகழ்ந்தன.

**பாண்டியப் போர்:** பாண்டியரையும் சேரரையும் ராஜராஜன் II போரில் வென்றதைத் தக்கயாகப்பரணி சோழ அரசியல் அதிகாரியான பெருமானம்பியின் தனிப்பட்ட சாதனை என எடுத்துக் கூறுகிறது. சோழ அரசுக்கு அடங்கி நடக்க வேண்டிய பாண்டிய சேரர் கப்பம் கட்டாமலிருந்த சூழ்நிலையில் அவர்களை இராணுவ முறையில் அடக்கி வைத்ததை இப் போர் நிகழ்ச்சிகள் கூறுகின்றன. விரிவான அளவில் நடந்த போர்கள் என இவற்றைக் கொள்ள வேண்டியதில்லை. 'பூ மருவிய திருமாதும்' எனவும், 'புயல் வாய்த்து வளம் பெருக' எனவும் பேசுகின்ற மெய்க்கீர்த்திகள் போன்றவற்றிலும் இவை பற்றிய குறிப்புகள் தென்படவில்லை. 'இஞ்சியின் வல்லூறு மேடு கிடந்த— வஞ்சியின் வாகை புனைந்தவன்' எனவும், 'தென்னவர் தென் மதுராபுரி சீறிய மன்னவர் மன்னன்' எனவும் வருகின்ற (இவனுடைய அவைக்களப் புலவர் ஒட்டக்கூத்தரின் தக்கயாகப் பரணியில் முறையே 800, 803ஆம் வரிகள் தரும்) செய்தி

களுக்கு ராஜராஜன் II காலத்திய கல்வெட்டுச் சாசனங்களில் ஆதாரம் காணப்படவில்லை.

பாண்டிய நாட்டில் பதவியிலிருந்த பராக்கிரம பாண்டிய னுக்கும் அவனோடு போட்டிக்கு நின்ற குலசேகரனுக்கும் இடையே தோன்றிய வாரிசுரிமைப் போர், ஈழத்தவர்—சோழர்—பாண்டியர் என்ற மும்முனைப் போராட்டமாக 1169-லிருந்து 1177வரை தமிழக அரசியலை உலுக்கிய முறையில் வெங்கொடுமை அவலத்தோடு நடைபெறத் தொடங்கியது. ராஜராஜன் II ஆட்சிக் காலத்திலேயே—1163ஆம் ஆண்டில்—யுவராஜா பட்டம் பெற்ற ராஜாதிராஜன் II (1173—1178) என்பவன் ஆளுகைத் திறனோடு விளங்கினன். ஆகவே அவனுடைய ஆட்சிக்குரியதாக இப் போர் கருதப்படுவதால், இப் போர் நிகழ்ச்சிகளையும் விளைவு களையும் ராஜராஜனுக்குரிய சிறப்புகளாக வரலாற்றாசிரியர் கொள் வதற்கில்லை.

## II உள்நாட்டு நிர்வாகம்

சோழரின் மத்திய அரசின் அதிகாரம் வலிமை இழந்து காணப் பட்டது. குறுநில மன்னர்களாகிவிட்ட படைத்தலைவர்களின் நேரடியான சுயேச்சையாட்சியில் சோழரின் மத்திய அரசுக்குரிய அதிகாரம் எடுபடவில்லை.

**1. அதிகாரிகளின் தன்னுதிக்கம் :** காவல் துறையினராகச் செயல்பட்டு அதற்குரிய ஊதியமாகப் பாடிக்காவல் என்ற வரியைச் சோழ அரசனால் அங்கீகரிக்கப்பட்ட பிரதேசங்களி லிருந்து வசூலித்து வந்தவர்கள் தன்னிச்சையோடு வளரத் தலைப் பட்டார்கள். அரசர் கேட்கும் படைஞர் பலரைக் கொடுக்கின்ற ஒப்பந்தக்காரர்களும் இவ்வாறு வளர்ச்சி பெற்றார்கள். வரி வசூலிக்கின்ற உரிமையை நிலப் பிரதேசங்களின்பேரில் இவர்கள் பெற்றிருந்தார்கள். தங்களுடைய குலப் பெருமைகளைச் சொல்லிக் கொண்டு குறுநில மன்னர்களாக இவர்கள் நாளடைவில் உரு எடுத்தார்கள். காடவர்களின் தலைவனைக் கூடலூர் ஆளப் பிறந்தான் மோகன் என்பவனும், காஞ்சீபுரத்தின் அதிபதி என்று தன்னை அழைத்துக்கொள்ளும் ராஜேந்திர சோழ பல்லவ ஆதித்தன் என்பவனும் இப்படிப்பட்ட தன்முனைப்பு கொண்ட அதிகாரிகளின் அரசியல் வளர்ச்சிக்குச் சான்றுகளாக இச் சோழன் காலத்தில் காணப்பட்டார்கள். தனியார்வ நிலத்தில் முளைத்தெழுந்து, படை நடத்தி, வேர்விட்டு, இராணுவப் பூச விட்டுத் தழைத்து, தன்முனைப்பு வீம்பில் வளர்ச்சியுற்றுப் போன குறுநில மன்னர்களை மீறிக்கொண்டு ராஜராஜன் II தனது

பேரரசு ஆணைகளை அமுல் செய்ய முடியவில்லை. சட்டமும் அமைதியும் நிலைநாட்டப் பெறுவதற்கு அரசு தனது அடிப்படையான வலிமையை வளர்த்துக்கொள்ள வேண்டும். தன் தலைநகருக்கு அருகாமையிலுள்ள இடங்கள் வரைதான் தனது ஆட்சியின் வலிமை சென்றடைந்தது என்றளவில் இச் சோழனுடைய ஆட்சி உள்நாட்டில் முடமையுற்று முன்னேற வழியின்றி அறுகிக் கொண்டது.

1164-ல் பெரும்பேர் என்னுமிடத்தில் கல்வெட்டுச் சாசனம் செய்த தகடூர் கிழவன் என்பவன் சோழ மன்னனுடைய மேலாதிக்கத்தைப் பெயரளவிற்கு ஒப்புக்கொண்டிருந்த நிலையைக் காண்கிறோம். இவ்வாறு தன்னாட்சி அதிகாரிகளாக மாறிக் கொண்ட எல்லா அதிகாரிகளும் சோழ மன்னனைத் தங்களுடைய தலைவன் என்று ஏற்றுக்கொண்டார்கள்; இதைக் கல்வெட்டு செதுக்கும் போதுமட்டும் காட்டிக்கொண்டார்கள். நடைமுறையில் இந்த வகையான அரச பற்றுதல் ஆழமாக நிலைத்து, சோழ மன்னனையும் இந்த தான்றோன்றி ஆட்சியாளரையும் இணைத்து வைக்கவில்லை. 'நம்மகன்' என்று சோழ மன்னர்கள் தங்களது சொல் கேட்காத முறையில் சுய அதிகாரத்தோடு விளங்கிய குறுநில மன்னர்களைத் தங்களுடைய கல்வெட்டுகளில் குறித்துக் கௌரவித்தார்கள். ஆனால், இது ஒரு வகையான அரசியல் கைக்கிளையாகச் சோழ வரலாற்றில் தோய்ந்து விட்டது.

**2. ஊராட்சி மன்றமும் அதிகாரிகளும் :** ராஜராஜன் I போன்ற பெருமை சான்ற பேரரசர்களின் காலத்தில் மத்திய அரசின் எண்ணத்திற்கு ஏற்ப, நாட்டின் பொதுமையான வளர்ச்சிக்கு ஆக்கம் செய்யும் வகையில், சோழ மத்திய அரசின் அதிகாரிகள் ஆங்காங்கே உள்ள கிராம மன்றங்களையும், வணிகச் சங்கங்களையும் வழி நடத்திச் சென்றார்கள். ராஜராஜன் II காலத்தில் இவ்வாறு நடைபெறவொட்டாமல் குறுநில ஆணையர்களின் விருப்பத்திற்குரிய கிராம ஆட்சி முறையை இத்தகைய தல சுய ஆட்சி நிறுவனங்கள் வழங்கின. இவ்வாறு கட்டுப்படுத்தப்பட்ட நிலையில் அவ்வாணையாளரின் தன்னலம் தழைக்க வைக்கும் அரசியல் கருவிகளாக ஊர் மன்றங்கள் மாறுபட்டுப் போயின.

ராஜராஜன் II காலத்தில் தொடக்கம் பெற்று, குலோத்துங்கன் III (1178—1218) காலத்திற்குப் பின்பு பரந்த சோழ நாட்டின் அரசியல் வலிமையாக அது அமைந்து விட்டது.

**3. காவிரி நீர்ப் போராட்டம்:** மலையமலைப் பகுதிகளில் காவிரி அடைக்கப்பட்டு, சோழ நாட்டுக்கு நீர் கொண்டு வராத வகையில் திருப்பி விடப்பட்டது. இதை இயற்கையின் கோளாறு என்று சொல்வதைவிட மாற்றாரின் 'போர்ச் செய்கை' எனக் கொள்ளல் வேண்டும் என ஆராய்ச்சியாளர் திரு. பண்டாரத்தார் கூறுகிறார். 'சுழியிட்ட காவிரிக்குச் சோணாடு வாழ வழியிட்ட வாள் காண வாரீர்' ('ராஜராஜ சோழனுலா' வரிகள் 169, 170) என்று வருகின்ற குறிப்பில் வாள் வலிமை குறிக்கப் பெறு கிறது. 'கலை கொன்று வருகங்கை வராமல் மேன் மேலடை கின்ற பூதம்—மலைக் கொன்று வழி கண்ட 'கண்டன்'—வர—ராசராசன்கை வாளென்ன வந்தே' என்று தக்கயாகப்பரணி (பாடல் 649) இதே நிகழ்ச்சியை ராஜராஜன் வெற்றியுடன் மேற் கொண்ட காவிரி நீருக்கான போராட்டமாகச் சித்தரிக்கின்றது.

சோழப் பேரரசு ஆதிக்கம் குறைந்து போரினால் வந்த நேரடிப் பாதிப்பாகத்தான் இந்த நிகழ்ச்சியை நாம் கணிக்க வேண்டும். சோழ நாட்டின் வளம் சுருங்கி வாழ்வு நலிவுறும் அளவிற்குக் காவிரி நீர் அடைபட்டுப்போன நிகழ்ச்சிக்கான காரணத்தைக் குலோத்துங்கன் I காலத்திலேயே நாம் தேடிப் புலப்படுத்த வேண்டும். துவார சமுத்திரத்தை மையமாகக் கொண்டு பேரரசாக மாறக்கூடிய அளவில் எழுச்சிபெற்ற விஷ்ணு வர்த்தனன் 1116-ல் தழைக்காடு கொண்ட அந் நாளையிலிருந்து கங்கபாடிப் பகுதி சோழப் பேரரசுக்கு இழப்பாகி விட்டது. குலோத்துங்கன் மகன் விக்கிரம சோழன் காலத்தில் சாளுக்கியன் விக்கிரமாதித்தன் 1126-ல் இறந்த பின்பு அது திரும்பவும் சோழ நாட்டுக்கு உரித்தாயிற்று.

கங்கபாடிப் பகுதியின் நாடாள்வான்கள் தங்களுக்குள் ஏற்படுத்திக்கொண்ட ஒப்பந்தங்களின்படி சோழப் பேரரச னுடைய மேலாதிக்கத்தை ஒப்புக்கொள்ளுகின்ற பாங்கை வரை யறை செய்கின்ற அரசியல் நிலைமை வந்த பிறகு காவிரியின் நீரோட்டம் தடைபடுகின்றது. ஆற்றுப் படுகையில் போர் நிகழ்ச்சிக்கான அளவில் தடை ஏற்படுத்துகின்ற வேளிரோ, மாற்றாரோ அக் காலத்தில் தோன்றியிருப்பதற்கு வாய்ப்புகள் உண்டு. இந்த வகையான பொருளாதாரப் பிரச்சினைக்குரிய தீர்வு காண வேண்டிய நிர்ப்பந்தச் சூழலில் ராஜராஜன் II பெருமுனைப்போடு இத் தடையைக் களைகின்ற பணியில் ஈடுபட்டான். 'சோழ நாடு சோறுடைத்து' என்ற பரம்பரை வளத்திற்கு ஆதாரமான காவிரிக்கு ஏற்பட்ட தடையை உடைத்து, தனது வாள் வலிமைக்கும் வினைத்திட்பத்திற்கும்

பெருமை சேர்த்த ராஜராஜன் II ‘ புயல் வாய்த்து வளம் பெருக ’ என்ற மெய்க்கீர்த்திக்குரிய இராச கம்பீரன்தான் என்பதில் ஐயமில்லைதான்.

**4. சமயக் கொள்கை :** தனது முன்னோர்களைப் போல ராஜராஜன் II தேவதானம் போன்ற பெருங்கொடைகளை வழங்குவதற்குரிய வலிமை பெற்றிருக்கவில்லை. ஆகவே, ஆதித்த சோழன் (906—936) காலத்திலிருந்தே சோழ மன்னர்கள் ஆற்றி வந்த அறப்பணிகளில் ஒரு தேக்கநிலை தானாகவே இச் சோழ மன்னன் காலத்தில் ஏற்பட்டது. இதற்கு முழு முதற்காரணம் குறுநில மன்னர்களே. மாமன்னர்களின் மாட்சிமையைத் தாங்களும் பெற்றுக்கொள்ளுகின்ற மனப்பாங்கில் தானத்தின் மூலம் சமுதாய அந்தஸ்தைத் தேடுகின்ற வழி முறையை அவர்கள் தேர்ந்தெடுத்தது வியப்புக்குரிய விஷயமில்லை. காடவர் ஆளப்பிறந்தான் மோகன். இள வாணசூர் என்ற ஊரின் கோவிலுக்குத் தனக்குச் சேர வேண்டிய பாடிக்காவல் போன்ற வரிகளைக் கொடுத்தான். காரிகைப் பல்லவராயன் பல்லவராயன் பேட்டையில் ராஜராஜேச்சுவரம் உடையார் என்ற கற்கோவிலைக் கட்டினான். ராஜேந்திர சோழப் பல்லவ ஆதித்தன் கோலார் மாவட்டத்திலுள்ள ஒரு குன்றின்மேல் ஒரு கற் கோவிலை அமைத்தான். மூன்னூர், அச்சரப்பாக்கம் போன்ற ஊர்களில் உள்ள கோவில்களுக்கு ராஜநாராயண சாம்புவராயன் என்ற அம்மையப்பன் சில கொடைகளை வழங்கினான்.

இத்தகைய குறுநில மன்னர்களின் அறப்பணிகளுக்கு மேலாக அமைந்த ராஜராஜேச்சுவரம் என்ற கோவிலை ராஜ ராஜன் ஆயிரத்தளி என்னும் தனது தலைநகரில் கட்டினான். ஆயிரத்தளி இவன் காலத்தில் ராஜராஜபுரம் என்று வழங்கப் படுகின்ற அளவில் ‘ செம்பொன் மாடநிரை ராஜராஜபுரி ’ என்று தக்கயாகப்பரணியில் ஒட்டக்கூத்தர் புகழ்கின்ற வளப்பம் கொண்டு விளங்கியது. இதில் அமைந்த மேற்சொன்ன கோவில் மாடக் கோவில் என்ற வகையினைச் சார்ந்தது; இப்போது தாராசுரம் பக்கமுள்ளது. இக் கோவிலின் கருவறைச் சுவரில் அறுபத்து மூவரான சிவனடிச் செல்வர்களின் பெருமை சொல்லும் சிலைகளை இச் சோழன் அமைத்தான் ; திருச்சுற்று மாளிகையில் நூற்றெட்டு சைவாசாரியாரின் படிமங்களை நிறுத்தினான். இக் கோவிலின் திருமண மண்டபம் இவனுடைய விருதுப் பெயர் தாங்கிய ராஜகம்பீர மண்டபம் என்று வழங்கியது.

வைணவத்தை வெறுத்து திருமால் சிலையைத் தில்லையம் பலத்திலிருந்து அப்புறப்படுத்திய குலோத்துங்கன் II காலத்தி

விருந்து மனஞ்சோம்பிக் கிடந்த வைணவர்களையும் இவன் ஆதரித்து வந்தமை பற்றி 'விழுந்த அரிசமயத்தையும் மீள வெடுத்த' பெருமையாக இவனுடைய மெய்க்கீர்த்தி பேசுகிறது.

**5. கல்வி, இலக்கியம் :** ஒட்டக்கூத்தர் இவன் காலம்வரை வாழ்ந்தவராவார். இவனுக்குரிய ராஜராஜ சோழனுலா என்ற நூலை இயற்றி, ஒவ்வொரு கண்ணிக்கும் ஓராயிரம் பொன் பெற்றார் என்பதை 'மூதுலாக் கண்ணிதொறும் பொன்னுயிரஞ் சொரிந்த பூபதியும்' என்று இவனைச் சிறப்பித்து, சங்கர சோழனுலா கூறுகின்ற செய்தியிலிருந்து அறியலாம். ராஜேந்திர சோழ சதுர் வேதி மங்கலம் என்ற காவிரிக்கரை ஊரினரான கேசவ சுவாமி இச் சோழனுடைய விருப்பப்படி வட மொழி அகராதி ஒன்றை 'நானார்தார்ணவ சம்ஷேபம்' என்ற பெயரில் சமஸ்கிருதத்தில் இயற்றினார். தமிழும் சமஸ்கிருதமும் பொலிந்த இலக்கிய மன்றமாகச் 'சொக்கப் பெருமாள்' என்ற பட்டம் கொண்ட இச் சோழனுடைய அவைக்களம் சிறந்து விளங்கியது என்பதை 'ஓவாது— செய்ய தமிழ் முழங்கத் தெய்வப்பொதியிலாய்' என்ற ஒட்டக்கூத்தரின் தூய தமிழுணர்வுச் சித்தரிப்பில் காணலாம்.

**6. கட்டடக் கலை :** சோழேந்திர சிங்கநல்லூர், ராஜ கம்பீர நல்லூர், ராஜகம்பீரன் திருமண்டபம், ராஜகம்பீரன் வீதி போன்றவையும் ஆயிரத்தளியைச் செம்மையாக்குகின்ற முறையில் ஏற்பட்ட ஏனைய கட்டடங்களும் இவன் காலத்தில் தோன்றியவையே.

## III குடும்பம்

புவனமுழுதுடையாள், தரணி முழுதுடையாள், அவனி முழு துடையாள், தென்னவன் கிழானடி எனப்பட்ட நான்கு மனைவி யரும், இரண்டு சிறுர்களும் இச் சோழன் எதிரிலிப் பெருமானைத் தனது வாரிசாகத் தேர்ந்தெடுக்கின்ற போது இம் மன்னனுக்குரிய குடும்பத்தினராக இருந்தனர்.

1163-ல் இம் மன்னன் நோய்வாய்ப்பட்ட நிலையில் தனக்குப் பின் வருகின்ற வாரிசுபற்றி முடிவெடுத்தான். இவனுடைய இரண்டு ஆண்மக்கள் பால பருவ வயதுள்ளவர்களாக இருந்த காரணத்தால் விக்கிரம சோழனுடைய மகள் வயிற்றுப் பேரனும், நெறியுடைப் பெருமாளின் மகனுமான எதிரிலிப் பெருமானைத் தனக்குப்பின் ராஜாதிராஜன் என்ற பெயரோடு அரசனாகின்ற தகுதியுள்ளவன் என்றளவில் ராஜராஜன் தேர்ந்தெடுத்தான். இத்

தேர்வில் இவனுடைய உடன் கூட்ட அமைச்சன் பெருமானம்பி பல்லவராயன் என்பவனுடைய சேவை தலையாயது என்பதை அவனுடைய பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டு கூறுகிறது. இந்தச் சோழன்தான் உடன் கூட்டத்தார் என்ற அமைச்சர் குழாத்தின் இணக்கத்தைப் புதிய வாரிசு நியமனத்திற்குப் பெற்று தந்தவன்.

பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டுச் சொற்களால் நடந்த நிகழ்ச்சியைப் பார்ப்போம் :

'இவ்வாறு பெரிய தேவர் எழுந்தருளியுள்ள நாளிலே (ராஜராஜன் II நோய்வாய்ப்பட்ட போது) 'திரு அபிஷேகத்திற்கு உரிய பிள்ளைகள் இன்றியே இருக்கிறபடியால் பார்த்து' (முடிசூடுகின்ற வயதில் அவ்வரசனுக்கு மைந்தர்கள் இல்லாததை எண்ணி) 'அந் நாளில் காரியம் இருந்தபடி விசாரணை செய்து' விக்கிரம சோழன் (பெரிய தேவர்) தனது பெயரனான குலோத்துங்கன் II சோழனைப் பட்டங்கட்டிய வழிமுறையைக் கேட்டறிந்து முன்மாதிரி நிகழ்ச்சி (precedent) ஒன்றை ஆராய்ந்து, எதிரிலிச் சோழனைக் கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து ஆயிரத்தளிக்கு நோயுற்ற ராஜராஜன் II சோழனிடம் கொண்டு வந்து நிறுத்தினான் பல்லவராயன். இது நிகழ்ந்தது 1163-ல். நான்கு ஆண்டுகள் கழித்து எதிரிலிப் பெருமாளுக்கு யுவராஜா பட்டம் 'ஒரு படையும் பின்னரி' என்றளவில் கட்டப்பட்டது.'

இந்த நான்கு வருட இடைக்காலத்தில் இரண்டு முக்கியமான காரியங்களை அமைச்சன் பல்லவராயன் மேற்கொண்டான். கல்வெட்டு ஆராய்ச்சியாளர் வெங்கோபராவ் அவர்கள் சொல்லுவது போல எதிரிலிப் பெருமாளுக்கு யுவராஜா முடி சூட்டுவதை எதிர்த்தவர்கள் வெளிப்படையாகவும் அந்தரங்கமாகவும் இயங்கி வந்தார்கள். இவர்களின் எதிர்ப்பை இந்த அமைச்சன் சமாளித்தான். மற்றுமொரு காரியமாக இவ்வமைச்சன் அரசனுடைய 'கங்கை கொண்ட சோழபுரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பிள்ளைகளைப் பிரயாணம் பண்ணி விட்டு' என்றளவில் அரசனுடைய மனைவியர் சிறுர்களான பிள்ளைகளையும், அரசக் கருவூலங்களையும் ஆயிரத்தளி படைவீட்டிலிருந்து (இராணுவப் பாசறை) 'எல்லா அட்க்ஷகேடுகளும் வாராத இடத்து' (கோட்டைக்குள்) கொண்டு வந்து சேர்ப்பித்தான். பத்து கோவில் கோட்டுகளைச் சார்ந்த 'அகம்பாடி நியாகம்' (சோழ அரண்மனைப் பரிவாரங்களான பத்து வகையினர்) என்பவரை மேலாண்மை செய்கின்ற 'முன் ஏவல்' (முதன்மையாளன்) என்ற அரசாங்க நிலை கொண்ட 'முதலாளி'

யான (அதிகாரியான) இப் பல்லவராயன் பாண்டிய நாட்டில் செய்த போர்களுக்குச் சன்மானமாக (1117-ல் அவன் இறந்த பின்பு) அவன் மனைவிமார்களுக்கு நாற்பது வேலி நிலம் ராஜாதி ராஜனால் வழங்கப்பட்டது.

## ராஜாதிராஜன் II (1173-1178)

சோழன் விஜயாலயன் வரிசையில் வந்த சோழ மன்னர் பரம்பரை சாளுக்கியச் சோழன் குலோத்துங்கன் I பதவி ஏற்கின்ற 1070-ஆம் ஆண்டுவரை ஆண்டது. பின்பு தொடங்கிய சாளுக்கிய—சோழப் பரம்பரையின் கடைசி அரசனாக வந்த ராஜராஜன் II 1173வரை அரசாண்டான். 1173-ல் அரசனாக வந்த ராஜாதிராஜன் II என்பவன் குலோத்துங்கன் I என்ற சாளுக்கிய—சோழனுடைய மகன் விக்கிரம சோழனுடைய மகள் வயிற்றுப் பேரன் என்றாலும், அவனுடைய தந்தை நெறியுடைப் பெருமாளின் குடும்பவழி தெளிவாகத் தெரியவில்லை. ஆகவே ராஜாதிராஜன் II தனியொரு வமிசத்தின் தனியொரு மன்னனாக ஐந்தாண்டுகள் ஆண்ட அரசன் என்ற அளவில் இவனுக்குப் பின்பு சோழ அரசனாக வந்தவன் குலோத்துங்கன் III ஆவான். குலோத்துங்கன் III யுவராஜா பட்டம் கட்டாமலே நேரடியாக மன்னனானான் எனலாம். இதே போலக் கடைசி சோழ மன்னர்களான ராஜராஜன் III, ராஜேந்திரன் III என்ற இரண்டு மன்னர்களுக்கிடையே உள்ள உறவும் தெளிவாக இல்லை. இவ்வாறு விஜயாலயன் நாளிலிருந்து குலோத்துங்கன் நாள்வரை தூய பழையாறைச் சோழ வமிசமும் குலோத்துங்கனிலிருந்து ராஜ ராஜன் II வரை சாளுக்கிய—சோழ மரபும் ஆண்ட பின்பு ராஜாதிராஜன் II அரசனாகின்றான். இவனுடைய பூர்வோத்திரம் முழுமையான அளவில் தெரியவில்லை. இதே போலத்தான் இவனுக்குப் பின்வந்த கடைசி மூன்று பேரரசர்களுக்குரிய மரபு வழி தெளிவுறத் தெரியவில்லை. ராஜாதிராஜன்தான் இத்தகைய தனியாள் வமிசங்களைத் தொடங்கி வைக்கிறான். இந்த வரலாற்று நிகழ்ச்சி 1163-ல் பெரியானம்பி பல்லவராயன் இவனுக்கு யுவராஜா பட்டங்கட்டிய நாளிலிருந்து தொடங்குகிறது.

அரசுரிமைக்காகப் பாண்டிய மன்னர்களுக்குள் ஏற்பட்ட உள் நாட்டுப் போரில் இவன் சோழப்பேரரசை ஈடுபடுத்தியதன் காரணமாக அப் போர் பாண்டியர்—ஈழத்தினர்—சோழர் என்றமைந்த மும்முனைப் போராட்டமாக மாறிக்கொண்டது. அப் போராட்டத்தின் பொது விளைவாகச் சோழப் பேரரசு இவன் இறந்த நூறு ஆண்டுகளில் வீழ்ச்சியுற்றது. எனவே, சோழ அரசின்

வீழ்ச்சிக்கு இவனே வித்திட்டவன் எனக்கூடக் கூறிவிடலாம். பாண்டியரோடு கொண்ட போர் ஒன்றைத் தவிர, இவனுடைய ஐந்தாண்டுக் கால அரச அந்தஸ்தோடு அமைந்த ஆட்சியில் குறிப்பிடத்தக்க வேறு நிகழ்ச்சிகள் நடைபெறவில்லை.

வெளிநாட்டுத் தொடர்புகளால் இன்னல் உற்றுப்போன சோழப் பேரரசு இவன் காலத்திய 'முதலாளிகள்' என்ற அதிகாரிகளாக விளங்கிய குறுநில மன்னர்களின் சுயேச்சையான அரசியல் நடவடிக்கைகளால் சிதைவுண்டு போனது. சைவத் திற்கும் கோவிலறத்திற்கும் உறுதுணையாகவோ, இலக்கிய வளர்ச்சிக்கு ஆக்கம் செய்ததாகவோ இவனைப்பற்றியக் குறிப்புகள்சாசன அளவில் இதுவரை காணக் கிடைக்கவில்லை.

## I. வெளி நாட்டுக் கொள்கை :

1. **பாண்டியர் போர்:** பாண்டியரோடு சோழருக்கு ஏற்பட்ட தொடர்பு பதினான்காம் நூற்றாண்டில் ஃபிரான்ஸ் நாட்டோடு இங்கிலாந்து கொண்ட உறவு போன்றது. சோழரின் ஆதிக்கக் கொள்கையினால் ஏற்பட்ட மோதுதல் போர்களில் பாண்டியர்கள் தேசிய ஒற்றுமை பெற்று, பின்பு சோழர்களையே ஆட்கொண்டு விட்டார்கள். நூறாண்டுப் போரில் (Hundred Years War-1338-1463) இங்கிலாந்து, பிரான்ஸின் தலைநகரான ஃபாரிஸில் தன் ஆதிக்கக்கொடியை நாட்டியதைப் போலச் சோழரும் மதுரை யில் பாண்டிய நாட்டதிபதிகளாக முடி சூட்டிக்கொண்டனர். பர்கண்டி எனவும், ஆர்லியன்ஸ் எனவும் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து ஃபிரான்ஸின்அரசியலுக்குப் போட்டியிட்டதைப் போல மதுரையில் ஆட்சியிலிருந்த பராக்கிரம பாண்டியனை மற்றொரு தாயாதி குலசேகரப் பாண்டியன் எதிர்த்து நின்றான். ஃபிரான்ஸ் நாட்டின் ஆட்சிக்கு உரிமை கொண்டாடிய ஆங்கிலேயரோடு பர்கண்டியர் சேர்ந்துகொண்டதைப் போல, பாண்டி ஆதிக் கத்தை எப்போதுமே பெறத் துடித்து நின்ற சோழர்களைக் குல சேகரன் துணைக்கு அழைத்தான். பர்கண்டியரையும் ஆர்லி யன்ஸ்காரர்களையும் மாறி மாறி ஆதரித்துத் தனக்கு வேண்டிய உரோமத்தாலான ஆடைகள், ஒயின் போன்ற பொருளாதார ஆதாயங்களைத் தேடிக்கொண்ட இங்கிலாந்து போலச் சோழர்கள் தென்னக அரசியல் சமன்நிலைக் கொள்கை (Balance of Power) என்ற ராஜீய நோக்கத்திற்காகப் பாண்டியப் போட்டியாளரைத் தன்னுடைய பழைய பகையாளி ஈழத்தின் போக்குக்கு ஏற்ப மாறி மாறி ஆதரித்தார்கள்.

பாண்டியரோடு ஈழமும் ஒன்று சேர்ந்தால் சோழருக்கு அரசியல் விளைவுகளைத் தரும் இராணுவ ஆபத்து ஏற்படும். ஆகவே, அவர்களைப் பிரித்து வைக்கின்ற சமநிலைத் தத்துவம் (Balance of Power) நிலைநாட்டப்பட வேண்டும். இந்த வகையில்தான் பாண்டியரின் உள்நாட்டுப் போரில் ஈழம் வந்து ஈடுபட்ட பின்பு, சோழப் பேரரசு பாண்டியருள் குலசேகரனை ஆதரித்துப் பாண்டியர் போரில் ஈடுபடத் தலைப்பட்டது.

**2. போர் நிகழ்ச்சிகள் :** சோழர்களின் எதிர்காலத்தை நிர்ணயித்த இப் பாண்டியப் போரின் நிகழ்ச்சிகளை ஈழத்தின் பௌத்த வரலாறான மகாவம்சம், பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டு, ஆர்ப்பாக்கம் கல்வெட்டு, வட ஆற்காடு கல்வெட்டு ஆகியவற்றின் துணை கொண்டு ஆராய்வோம்.

(அ) மகாவம்சம் கூறுவது போல 1169-ல் மதுரை நகரினுள் இருந்த பராக்கிரம பாண்டியன், தன்னை முற்றுகையிட்டு நின்ற தன் தாயாதி குலசேகரனுக்கு எதிராகத் தனக்கு உதவி செய்யுமாறு பராக்கிரம பாகு I (1153—1186) என்ற ஈழத்தரசனுக்கு வேண்டுதல் அனுப்பினான். ஈழப்படை சிங்கள சேனாதிபதி லங்கபுரா தலைமையில் இராமேசுவரம் வந்து பாடி இறங்குவதற்குள் குலசேகரன் மதுரையைக் கைப்பற்றிப் பராக்கிரம பாண்டியனோடு அவன் குடும்பத்தாரையும் படுகொலை செய்து பாண்டிய நாட்டதிபதி ஆனான். இறந்து போன பாண்டியனின் மகன் வீரபாண்டியன் வெளியில் இருந்தான். இராமேசுவரம் வந்துவிட்ட ஈழப்படை ஜகத் விஜயதாண்டவா என்ற தானைத்தலைவனோடு வந்த புதிய சிங்களப்படைத்துணை கொண்டு குலசேகரனுடைய ஆதரவாளர்களை எதிர்த்தது. வடக்கே புதுக்கோட்டையிலிருந்து தெற்கே திருநெல்வேலிச் சீமைவரை போர்கள் நடந்தன. சிங்களத் தளபதி லங்காபுரா போர்க்கைதிகளைக் கழுவேற்றுகின்ற கொடுமைகளைச் செய்தான். சோழ நாட்டோடு முன்பொரு காலம் ஈழத்தில் நேர்ந்த போர்களில் இடிபட்டுப்போன புத்த கோவில்களைச் செப்பனிடுகின்ற பணியில் ஈடுபடுத்த வேண்டித் தமிழ் போர்க்கைதிகளை ஈழத்தளபதி தன் நாட்டுக்கு அனுப்பி வைத்தான். இவ்வாறு வரலாற்றுப்பகை தீர்க்கின்ற ஈழத்தினராக ஈழப்படை சோழரைத் தமிழகத்திலேயே எதிர்த்து நின்றது.

(ஆ) ஆர்ப்பாக்கம் (செங்கை மாவட்டம்) கல்வெட்டு பின்வருமாறு கூறுகிறது : அக் கல்வெட்டுக்குரிய தலைவன் எதிரிலிச் சோழ சாம்புவராயனின் வேண்டுகோளின்படி உடையார் சுவாமி தேவர் என்ற ஒரு ஞானி இருபத்தெட்டு நாள்கள் பட்டினி கிடந்து,

நோன்பு நோற்றுச் செய்த மந்திர ஜெபத்தாலும், வேள்வியாலும் சிங்களப் படைகள் தோற்றோடின. இராமேசுவரம் கோவிலில் வழிபாடு செய்யவொட்டாமல் தடுத்த இலங்கைப்படை அக் கோவிலின் கருவூலத்தைக் கொள்ளையடித்து ஏனைய அந்தணருக்குத் துன்பம் விளைவித்தது. இக் கொடுமைக்கு உரிய தண்டனையாகச் சிங்களத் தளபதி லங்கபுரா தோல்வியுற்றான்.

(இ) பல்லவராயன் பேட்டை (தஞ்சை மாவட்டம்) கல்வெட்டு குறிப்பிடும் தலைவன் பெருமானம்பி பல்லவராயன் ஆவான். இவன் செய்த போர்ச் சேவைகளைச் சொல்லுகின்ற பாணியில் இது அமைந்துள்ளது. சோழனுடைய உத்தரவுப்படி பாண்டியன் குலசேகரனைத் திரும்பவும் மதுரைக்கே மன்னனாகப் பெருமானம்பி ஆக்கினான். சிங்களப் படையின் தோல்விக்குப் பின்பு இது நிகழ்ந்தது. சோழனுடைய சொற்படி சிங்களத் தலைவன் லங்கபுராவின் தலையை ஏனைய தானைத் தலைவர்களின் தலைகளோடு மதுரை கோட்டை வாயிலில் பெருமானம்பி தொங்க விட்டான்.

(ஈ) வட ஆற்காடு மாவட்டக் கல்வெட்டுக்கு உரியவன் அண்ணன் பல்லவராயன் என்ற சோழர் படைத்தளபதி ஆவான். ஈழத்தரசன் பராக்கிரமபாகு குலசேகரனையும் சோழனையும் எதிர்க்க மாதோட்டம், புலைச்சேரி, வள்ளிக்காமம் போன்ற துறைகளில் தமிழ்ப் படையெழுச்சிக்கான கப்பல்களைக் கட்டத் தொடங்கினான்; படைஞரையும் ஒன்று கூட்டினான். பராக்கிரமபாகுவின் மருமகனார் (அவனுடைய சகோதரி மித்தா என்பவளின் மகன்) ஸ்ரீ வல்லபன் என்பவன் சிங்கள ஆட்சி உரிமை கேட்டு நின்ற கிளர்ச்சியாளன் ஆவான். இவனுடைய துணையோடு அண்ணன் பல்லவராயன் தலைமையில் சோழர்படை ஈழத்திற்குச் சென்றது; அங்கே அதிரடிப்போர் (Raid) ஒன்றை நிகழ்த்திச் சிங்களவரின் படை ஆயத்தங்களைச் சிதறடித்து அழித்தது.

**3. ராஜதந்திரம்—ஒரு சுழற்சி (Cycle of Diplomacy):** சிங்களவரும் ராஜதந்திரத்தில் சளைத்தவர்கள் அல்லர். பராக்கிரமபாகு ராஜதந்திரப் புரட்சி ஒன்றைச் செய்து (Diplomatic Revolution) சோழருக்குரியவனாகப் பாண்டிய நாட்டை ஆண்டு வந்த குலசேகரனைத் தனக்குரியவனாக்கிக்கொண்டான். நன்றி கொன்ற குலசேகரனுக்கு உய்வில்லை என்று சோழ மன்னன் முடிவெடுத்து வீரபாண்டியனை மதுரைக்கு அதிபதியாக்குமாறு அண்ணன் பல்லவராயனுக்குக் கட்டளையிட்டு விட்டான். மதுரைக் கோட்டை வாசலில் தொங்கிய இலங்கைத் தளபதியின் தலையை அப்புறப்

படுத்தியது. சோழ மன்னனிடம் பற்றுதல் காட்டிய அஞ்சு கோட்டை நாடாள்வர் போன்ற எலகாத்தார் (படை) மறப்படைத் தலைவர்களை வெள்ளாற்றுக்கு அப்பால் வடக்கே விரட்டி விட்டது. பராக்கிரமபாகுவோடு கொண்ட கடிதத் தொடர்பு—இவை யாவும் குலசேகரனைச் சோழ மன்னனுடைய எதிரியாக்கி விட்டது. அண்ணன் பல்லவராயன் படை நடத்தி வந்ததன் காரணமாகக் குலசேகரன் தன் அரச பதவியை இழந்தான். சோழர்களால் மதுரை இவ்வாறு வெல்லப்பட்டு வீர பாண்டியனுக்குக் கொடுக்கப் பட்டது. மதுரையை வீர பாண்டியனுக்கு அளித்ததையும், ஈழத்தை முறியடித்ததையும் சிறப்பிக்கின்ற முறையில் 'மதுரையும் ஈழமும் கொண்டருளின்' என்ற பட்டத்தை ராஜாதிராஜன் புனைந்துகொண்டான். இவ்வாறு ராஜாதிராஜன் காலத்திற்குரிய பாண்டியப் போர்கள் முடிவடைந்தன. இவனுக்குப் பின்பு அரச பதவிக்கு வந்த குலோத்துங்கன் III காலத்தில் இப் பாண்டியர் போர்கள் தொடர்ந்து நடந்தன.

**4. வடதிசைப் பகுதிகள் :** தெற்கே பாண்டிய நாட்டில் ஆளத் தலைப்பட்ட வீரபாண்டியன் இச் சோழனுடைய ஆயுள் வரை மதுரைக்குரிய சோழருக்கு உகந்த அன்பனாகவே இருந்தது போல வடக்கே நெல்லூர், காளகஸ்தி, நாந்தளூர் போன்ற இடங்களின் அதிபதிகளும் ராஜாதிராஜனுக்கு உள்ளடங்கிப் பெயரளவிற்காவது இருந்தார்கள். இச் சோழனின் கல்வெட்டுகள் அவ்விடங்களில் காணப்படுகின்றன. புஜபல வீர அமோக மல்லராசன் என்பவன் கங்க மண்டலத்தில் மகாமண்டலிகா (மண்டல அதிபதி) என்ற பதவியில் இருந்தான் என்று காஞ்சீபுரம் கல்வெட்டு கூறுகிறது. இதன்படி கங்கபாடியும் ராஜராஜனுக்குரிய ஆட்சிப் பகுதியாக அமைந்திருந்தது என்று நாம் கணிக்கலாம்.

## II உள்நாட்டு நிர்வாகம்

ராஜாதிராஜன் II சோழன் உள்நாட்டு ஆட்சிக்குரிய தன்னாற்றல் பெற்றிருந்தான். ஆனாலும், அவனுடைய ஆட்சியில் காணப்பட்ட குறுநில ஆட்சியாளர்கள் சுயேச்சை பெற்றிருந் தார்கள். இதன் காரணமாக இவனுடைய உள்துறை ஆட்சி வலிமையற்றுக் காணப்பட்டது. இனி வருகின்ற உள்ளாட்சிக் குரிய சிதைவை (Disintegration) இந்த நிலை கோடிட்டுக் காட்டிற்று. பாடிக்காவல் என்ற காவல் காத்தலுக்குரிய வரியை வாங்கிய நாடாள்வான் எனப்பட்ட காவல்காரர்கள் காலப் போக்கில் இராணுவ வலிமையையும் பொருளாதாரத் திறனும் வாய்த்துப்போன குறுநில மன்னர்களாக மாறிவிட்டார்கள்

என்பதை முன்பே பார்த்தோம். தொன்மைப் புகழுடைய பல்லவர், அதியமான், மலையமான் போன்ற மன்னர்களின் குடும்பங்களைச் சேர்ந்தோருக்கு இத்தகைய காவல் உரிமை சோழர் காலத்தில் இயல்பாகவே வழங்கப்பட்டிருந்தது. அவரவர் இடங்களில் அவர்கள் பழம் பெருமையின் சாயலாக அப்போது பெற்றிருந்த செல்வாக்கின் காரணமாக அவர்களுக்கு இத்தகைய அரசியல் பதவி சோழரிடமிருந்து எளிதாகக் கிடைத்தது. பேரரசுத் தத்துவம் முழுமையாகச் செயல்பட்ட போது, ஐரோப்பிய படைமானியத்திட்ட அமைப்பில் காணப்படுவது போன்று, இத்தகைய குறுநில ஆட்சியாளர்களிடமிருந்துதான் வல்லாட்சிப் போர்களுக்கான போர்வீரர்கள் சோழப் பேரரசின் இராணுவத்தில் அமர்த்தப்பட்டார்கள். வலிமை வாய்ந்த சாளுக்கியர் போன்ற வேற்று நாட்டாரை அவர்களின் நாடுகளிலேயே தோற்கடித்து சோழரின் பேரரசை நிலைநாட்டுகின்ற சாம்ராஜ்யப் போர்களுக்குத் தேவையான பல்லாயிரக் கணக்கான போர்வீரர்களை மத்திய அரசுக்கு வழங்குகின்ற ஒருவகை மன்சப்தார்களாக நாடாள்வான் என்ற அதிகாரிகள் காணப்பட்டார்கள். நாடாள்வான்கள் தங்களுக்கென அமைந்த தானைப்பகுப்புகளைத் (Regiments) தங்களுக்கான பரம்பரைப் பெயரின் தலைப்பில் அழைத்துத் தங்கள் தனித்தன்மையை நிலைக்கச் செய்தார்கள். புதுக்கோட்டை வேளிரின் படை கொடும்பாளூர்ப்படை என்று வழங்கப்பட்டது. தற்காலத்தில்கூட நம் நாட்டின் படைகள் பிராந்திய அளவில் காணப்படும் கலாசாரப் பிடிமானங்களோடு ஜாட்ரெஜிமென்ட் என்பன போன்ற பெயர்களால் அழைக்கப்படுவது போலச் சோழர்கள் காலத்தில் காடவர்களின் படை பல்லவர்களின் கலாசாரப் பின்னணியில் தனித்தன்மை பெற்று இயங்கியது.

படை சேர்த்து வைப்பதற்குரிய ஊதியம் அரசாங்கக் கருவூலத்திலிருந்து பணமாக அவர்களைச் சென்றடையவில்லை. பாடிக்காவல் என்ற வரியை அரசினர் அவர்களிடம் ஏற்பித்திருந்தார்கள். சோழ அரசாங்கம் நியமிக்கும் சில குறிப்பிட்ட நிலங்களில் அல்லது கிராமங்களில் சில சமயங்களில் நாடுகள் என்று வழங்கப்பட்ட தாலூகாக்களில் அந்தப் படைத்தலைவர்கள் அந்த வகை பாடிக்காவல் என்ற வரியை வசூலித்துத் தங்களுடைய படைகளை நடத்துவதற்குரிய ஊதியமாகத் தங்களிடம் வைத்துக் கொண்டார்கள். பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் கவர்னர் ஜெனரல் கார்ன்வாலிஸ் 18ஆம் நூற்றுண்டு வங்காளத்தில் செய்த சாசுவத நிலவரித் திட்டத்தின்படி ஏறுதொகை ஏலதாரர்கள் ஜமீன்தார்கள் என ஆகிப்போனதைப் போலச் சோழர்களின் நியமனத்தால் பாடிக்காவல் வரி பெற்ற அதிகாரிகள் அவர்

களுக்கு அளிக்கப்பட்ட நிலப்பகுதிகளுக்கு எஜமானர்களாக மாறிக்கொண்டார்கள். வரி வசூலிக்கின்ற உரிமையோடு காவல் காக்கின்ற சலுகையும் பெற்ற நிலையில் அவர்கள் அப் பகுதி களுக்குரிய குறுநில மன்னர்களாக உரு எடுத்தார்கள். இதைத் தவிர, சோழ மன்னர்கள் இப் படைத்தலைவர்களின் செயலாற்றலை மெச்சித் தனியாகவே நிலங்களை வழங்கினார்கள். பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டு கூறுவது போல, பெரிய நம்பி பல்லவராயன் இறந்த பின்பு அவனுடைய தலைமையில் நடந்த பாண்டியப் படையெழுச்சியைப் பாராட்டுகின்ற முறையில் குளத்தூரில் ராஜாதிராஜன் II 40 வேலி நிலக் கொடை வழங்கினான். திருவாலங்காடு செப்பேடுகள் கூறுவது போல, ராஜாதிராஜன் II அண்ணன் பல்லவராயனுக்குப் பழையனூரில் பத்துவேலிநிலம் வெகுமதியாக அளித்தான். இவ்விரண்டும் சோழ மன்னன் படைத்தலைவருக்கு நிலம் வழங்கியதற்குரிய சான்று களாகும். இவ்வாறு பெருநிலப் பகுதிகளுக்கு உரிமையாளராகப் போய்விட்ட குறுநில நாடாள்வார்கள் தங்களை மன்னர் களாகவே எண்ணிக்கொள்கின்ற வகையில் அவர்களுக்கு அரச பரம்பரைக்கான கலாசாரப் பின்னணியையும் (cultural heritage) கொண்டிருந்தார்கள். சான்றாக, பல்லவர்குல காடவர்களில் எதிரிலிச் சோழப் பல்லவராயனைச் சொல்லலாம்.

அந் நாளைக்குரிய அரசியல் சக்தியாக இந்தக் குறுநில மன்னர்கள் உருவெடுத்து அரசுக்குள்ளே அரசு என வளர்ச்சி யுற்றுப் போனதை ராஜாதிராஜன் II ஒப்புக்கொண்டதைப் போலத் (reconciliation) தோன்றுகிறது. சான்றாக, அவனுடைய 'கடல் சூழ்ந்த பாரேழுத் திசையெட்டுங் காத்து நின்று' என்ற மெய்க்கீர்த்தியில் 'ஒன்றேடொன்று பகையின்றிப் போர்ப்புலியும் புல்வாயும் புக்கொருதுறை நீருண்ண' என்னும் வரிகளைச் சொல்லலாம். புலி என்ற சோழ மன்னன், அரசியல் வலிமை என்ற நீருண்ணுவதற்குக் குறுநில மன்னர்கள் என்ற மான்களை அவன் நின்ற இடத்திற்கு அருகாமையிலே அனுமதித்தான். இப்படிப்பட்ட விளக்கம் மேற்சொன்ன மெய்க்கீர்த்தி வரி களுக்குப் பொருந்துமானால், அதிலிருந்து கிடைக்கின்ற உண்மை பின் வருமாறு: அக் காலத்திய அரசியலில் ஊனப் பட்டுக் கிடந்த பேரரசுத் தத்துவத்தின் இயலாத் தன்மை மன்னன் முதல் யாவராலும் மனத்தளவில் ஒப்புக்கொள்ளப் பட்டுக் காட்சியளித்தது. உள்நாட்டு ஆட்சியில் ராஜாதி ராஜனுக்குரிய வலிமையைக் காட்டக்கூடிய அளவில் தன்னுடைய அதிகாரிகளை அவன் அடக்கியதாகச் செய்திகள் காணப்பெற வில்லை.

III சமயம்

சோழப் பேரரசன் எப்போதுமே செல்வந்தன்தான். ராஜாதி ராஜன் இந்த அந்தஸ்தை இழந்து போனான். அவனுடைய பொருளாதார வலிமை பாண்டியப் போரில் செலவழிக்கப்பட்டுப் போயிற்று. சாளுக்கியப் போர்களில் ராஜேந்திரன் I சோழன் அல்லது ராஜாதிராஜன் I போன்றோர் தங்கள் இருப்பிடத்திற்குத் திரட்டிக்கொண்டு வந்த பெருநிதியம் போன்று ராஜாதிராஜன் II இப் பாண்டியப் போரில் பொருள்களை ஈட்டிக்கொள்ளவில்லை. பாண்டிய நாட்டில் அமைதியும் உருப்படியான ஒரே அரசாங்கமும் (unitary state) இல்லாத காரணத்தால் வரியோ, கப்பமோ சோழருக்குச் சரிவரக் கிடைக்கவும் வாய்ப்பு இல்லை. இதன் காரணமாக ராஜாதிராஜன் செல்வத்தின் மிகையில் ஏனைய சோழ மன்னர்கள் போலத் திளைக்கவில்லை. ஆகவே, கலைவளர்ச்சி மேம்பாட்டுக்குரிய கோவில்களை இவன் கட்டவில்லை. நிலவரி வருவாய் என்ற துளிமழைநீர் அதிகாரிகளின் குறுநில மன்னர் என்ற அந்தஸ்தைக் காப்பதற்குரிய செலவினத்தை நிரப்பிய பின்பு மன்னனிடம் செல்ல வேண்டியதாயிற்று. இவ்வாறு இருந்த அந் நாளைய சூழ்நிலையில் சோழ மன்னனுக்கு நிலவரி மூலமும் திரண்ட செல்வம் வாய்க்க வழியில்லாமல் போய் விட்டது. சோழப் பேரரசன் இவ்வாறு சோழ மன்னனாகத் தோற்றம் கொண்டான். இவன் ஆற்ற வேண்டிய சமயப்பணி களான கோவில் கட்டுதல் போன்றவற்றைக் குறுநில மன்னர் களும் அதிகாரிகளும் சுவீகரித்துக்கொண்டார்கள்.

குறுநில மன்னர்களாகிவிட்ட அவ்வதிகாரிகள் சமுதாயத்தில் ஏற்றங்காணத் தாங்களாகவே துடித்துக்கொண்டிருந்தார்கள். அந் நாளையில் சமுதாய அந்தஸ்தைப் பெறுகின்ற ஒரே வழி கோவில்களுக்குச் செய்கின்ற சேவைகள்தான் என்றளவில் சோழர்காலச் சமுதாய நெறி காணப்பட்டது. இச் சூழ்நிலையில் இந்தக் குறுநில மன்னர்கள் போன்ற அதிகாரிகள் கோவிலறம் பேணத் தொடங்கினார்கள். அவற்றைப் பார்ப்போம்:

**(1) அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன் :** திருவாரூர், வட ஆலங்காடு கோவில்களுக்கு, ஒவ்வொரு கோவிலுக்கும், இறையிலி நிலமும், மும்மூன்று நுந்தா விளக்குகளுக்கான ஏற்பாடும் செய்தான்.

**(2) ராஜநாராயண சாம்புவராயன் :** தென் ஆற்காடு மாவட்டம் முந்நூர் கோவிலின் திருப்பணிக்காகத் தனக்கு வரவேண்டிய வரிகளை வழங்கினான்.

**(3) கண்டர் சூரியன் பல்லவராயன் :** திருவக்கரையில் சூரியன் திருக் கோபுரம் இவன் கட்டியதே; பள்ளிச்சந்தம் என்ற சமணக் கோவிலுக்கான நிலக்கொடையைச் சிற்றூரி லுள்ள சமணப்பள்ளிக்கு அளித்தான்.

**(4) வேதவதனமுடையான் :** திருவலஞ்சுழி, பழையாறை கோவில்களுக்கு ஐந்தைந்து நுந்தா (வாடா) விளக்குகளுக்கு நிவந்தம் அளித்தவன் வேதவதனமுடையான் என்ற நாடாள் வான்.

**(5) எதிரிலி சோழ சாம்புவராயன் :** பாண்டியர் போரில் சோழ நாட்டுக்குள்ளேயும் படையெடுப்பை நிகழ்த்துகின்ற ஆபத்தை உண்டாக்கும் வலிமையோடு பாண்டிய நாடு வந்த சிங்களப் படைகளைத் தோற்றோடச் செய்ய உமாபதி தேவர் என்ற சிவாசாரிய சுவாமிகளை இவன் வேண்டிக்கொண்டபடி அவர் 28 நாள்கள் இரவும் பகலும் நோன்பு நோற்றார். சிங்களப் படைகளும் தோல்வியுற்றன. இவருடைய மந்திர ஜெபத்தால் பெற்ற வெற்றிக்குச் சன்மானமாக 167 வேலி நிலமுடைய ஆர்ப்பாக்கம் என்ற ஊரையே ஏகபோக வரியிலி என்ற அந்தஸ்தோடு—வரி இல்லாத தனிநபர்ச் சொத்து என்ற அளவில்—சுவாமி தேவருக்கு வழங்கினான் என்பதை இவனுடைய ஆர்ப்பாக்கம் கல்வெட்டு கூறுகின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரை வாழ்ந்த ஔரங்கசீப்கூடப் பன்னிரண்டாம் நூற்றாண்டு சோழர்களைப் போல இராணுவ வெற்றிக்கு மாந்திரிகத்தைப் பயன்படுத்தினான். சத்னாமியர் என்ற மந்திரவாதிக் கிளர்ச்சிக்காரர்களை எதிர்க்கத் துணிவில்லாமல் ஔரங்கசீப்பின் படைகள் துவண்டபோது அவர்களுடைய வெற்றிக்குரிய மாந்திரீகத்தைச் செய்து அவர்களை அவன் அனுப்பி வைத்தான். தங்களுடைய இராணுவ வெற்றி களுக்காகச் சோழர்கள் மாந்திரீகத்தின் உதவி நாடியது சோழர் வரலாற்றில் இதுவே முதலும் கடைசியுமாக நிகழ்ந்த நிகழ்ச்சி யாகும். 167 வேலி நிலத்தை இவ் வகையில் சமய உணர்வோடு ஒரு சமயவாதிக்கு அளிக்கப்பட்டதை, அரசியல் ராஜதந்திரம் காட்டிச் சோழ நாட்டைச் சிங்களப் படையெடுப்பிலிருந்து காப்பாற்றிய அண்ணன் பல்லவராயனுக்குப் பழையனூரில் 10 வேலி நிலம் மட்டும் மன்னன் ராஜாதிராஜன் கொடுத்ததோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இராணுவ வெற்றியால் விளைந்த சோழ நாட்டுப் பாதுகாப்புக்கு அரசியல் பூர்வமான நன்றி செலுத்துகின்ற அளவில் அரசியல் அதிகாரியான சாம்புவராயன் 167 வேலி நிலத்தை ஒரு சமயவாதிக்கு ஏகபோக வெகுமதியாகக்

கொடுப்பதையும், சோழப் பேரரசின் அதிபதி 10 வேலி மட்டும் நில நன்கொடையாக ஓர் அமைச்சனுக்கு வழங்குதலையும் ஒப்புமை செய்தால் ராஜாதிராஜனுடைய உண்மை நிலை நமக்குப் புலனாகும். பேரரசனைவிடப் பேரரசைக் காப்பாற்றுவதில் குறுநில மன்னனாக இருந்த அதிகாரிக்கு அதிக அக்கரை மட்டுமல்ல, அதிகமான பொருளாதார வசதியும் இருந்த நிலை இந்தச் செய்தியில் புலப்படுகிறது.

## IV குடும்பம்

ராஜாதிராஜன் II 1173-லிருந்து 1178வரை ஐந்தாண்டுகள் தான் தன்னாட்சியாள மாமன்னனாக ஆண்டான். 1163-ல் இவனுக்கு 'யுவராஜா' பட்டங்கட்டப்பட்டது. 1173-ல்தான் இவனுக்கு முன்பு ஆண்ட ராஜராஜன் II இறந்தான். 1163-லிருந்து 1173வரை யுவராஜாவாக இருந்த ராஜாதிராஜனின் அரசியல் கடமைகளைப்பற்றி நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ராஜராஜன் II காலத்திலேயே தொடங்கிய—அதாவது 1169-லிருந்து 1177வரை நடந்த—பாண்டியப் போரில் ராஜாதிராஜன் ஈடுபட்டதை அவனுடைய கல்வெட்டுகள் சொல்லுகின்றன. ராஜ ராஜனும், ராஜாதிராஜனும் விக்கிரம சோழனுடைய மகள் வயிற்றுப் பேரன்கள் என்ற கருத்தும் உண்டு. ராஜாதிராஜனுக்குப் பின் பதவிக்கு வந்த குலோத்துங்கன் III இவனைப் 'பெரிய தேவர்' என்று குறிப்பதானது தனக்குமுன் பதவியில் இருந்த பெரியவர் என்றுதான் அமையும் என ஆராய்ச்சியாளர் சொல்வர். ஆகவே, இவனுக்குப்பின் வந்த குலோத்துங்கன் இவன் மகனில்லை எனக் கொள்ளலாம். இவனுக்கு அமைந்த மகப்பேறு பற்றிய தகவல்கள் இதுவரை காணக் கிடைக்கவில்லை.

ராஜராஜனுக்குப் பிறந்த இரண்டு பிள்ளைகளைப் பெருமானம்பி ஆயிரத்தளி கோட்டையில் வைத்துப் பாதுகாத்துப் பேணியது எவரை எதிர்த்து என்று தெரியவில்லை. ராஜராஜன்தான் அக் குழந்தைகளுக்கு எதிரியாக இருந்தான் என்றும், அவனுடைய அரசியல் அதிகாரம் கொண்ட எதிர்ப்பிலிருந்துதான் அப் பிள்ளைகள் பாதுகாக்கப்பட்டார்கள் என்றும் ஒரு கருத்து காணப் படுகிறது. ராஜாதிராஜனுடைய மனைவி பெருமானம்பியினுடைய மகள் என்றும், அவருடைய வயிற்றுப் பிள்ளைகளை அவன் பாதுகாத்தான் என்றும் சொல்லல் தகும் எனப் பேராசிரியர் கூறு கிறார். இவ்வாறு ராஜராஜன் குடும்ப நிகழ்ச்சிகளைப்பொறுத்துத் தெளிவில்லாத விஷயங்கள் பல உண்டு.

தஞ்சை மாவட்டம் ஆத்தூர்க் கல்வெட்டு திரிபுவனச் சக்கரவர்த்தி கரிகாலச் சோழ தேவர் என்பார் 'மதுரையும் ஈழமும் கொண்ட கோராச கேசரி வர்மன்' என்றழைக்கப்படுவதாலும், சிதம்பரம் கல்வெட்டில் 'ராஜராஜ தேவராகிய கரிகால் சோழ தேவர்' எனக் கூறுவதாலும் ராஜாதிராஜனுக்குரிய பட்டம் 'கரிகாலன்' என்பது புலனாகும். 'சென்றிறைஞ்சிப் பார்வேந்தர் திருவாசற் புறநிற்பச்—சேரலருந் தென்னவருஞ் சிங்களருங் கொங்கணரும்—பேரரசு பெற வேண்டிப் பிரியாது சேவிப்பத்—தம்மரசு தாம்பெற்று தமுடனே' என இவனுடைய 'கடல் சூழ்ந்த' மெய்க்கீர்த்தியில் காணப்படுகிறது. 'சுங்கந் தவிர்த்த பிரான்—மகன் மைந்தனை வாழ்த்தினவே' என ஒட்டக்கூத்தர் தமது தக்கயாகப்பரணியில் ராஜாதிராஜனை வாழ்த்துகின்ற போது குலோத்துங்கனுடைய வழிவந்தவன் என்ற பெருமை ராஜாதிராஜனுக்கு அளிக்கப் பெறுகிறது. கூப்பிட்டுவிட்டுக் கொடுக்கப் பட்ட அரசுரிமையைப் பெற்றவன் இவன். உடன்கூட்டம் என்ற அமைச்சர்களைக் கலந்த நிலையில் அமைச்சர் தலைவன் பெருமானம்பியால் இவன் அரசனுக்கப்பட்டான். ஆகவே, ஒரு வகையில் இவன் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசன் (King by Election) என்றுவான்.

அரசுரிமை தருவதற்கு அமைச்சர் அவையும் அரசாளத் துணை செய்ய 'உடனுணையும் திருவாணையும் உடன் செல்ல முடி கவித்தாள்' என்றளவில் 'பெண்பெருமாள்' மனைவியும், அரசாட்சி செய்வதற்குப் பெருமானம்பி, சாம்புவராயன் போன்ற அமைச்சர் உழைப்பும் கொண்டு விளங்கிய ராஜாதிராஜன் 'அதிர்ஷ்டத்தின் குழந்தை' (child of fortune) எனச் சொல்லலாம். மனிதர்களின் உதவி பெற்ற இம் மன்னன் இயற்கையின் கூறுபாடான காவிரியின் வள்ளன்மையையும் பெருமளவிற்குப் பெற்ற பேற்றின் காரணமாக இவன் காலத்தில் பஞ்சமும் பற்றுக்குறையும் ஏற்படவில்லை. 'கடல் சூழ்ந்த' மெய்க்கீர்த்தி கூறுவது போலப் 'பொன்னி நதியும் பொய்யாது பாயலும் புனலார் யாது?—மன்னிய நதிவளம் பெருக்க விளைவயல் எவ்வளஞ் சுரக்கப்—போகபூமி இதுவென்ன போக மெல்லாம் வந்தீண்டி—ஏகவாணை அரசுரிமை' ஏற்றிருந்த ராஜாதிராஜன் தன்னைவிட ஆளுகைத்திறனும் நிறைவுங்கொண்ட குலோத்துங்க சோழனுக்கு வழிவிட்டு 1176-ல் இயற்கை எய்தினன்.

# 13. குலோத்துங்கன் III

## (1178—1218)

சோழப் பேரரசின் முடியுடை மன்னர்களுக்குள் குலோத்துங்கன் III வியப்புக்குரிய ஆற்றலுள்ளவன் என்பதை அவனுடைய ஆட்சிக்குரிய சாதனைகளையும், அச் சாதனைகளுக்கு எதிர்மறையாக நின்ற அரசியல் சக்திகளையும் ஆராய்கின்ற அளவில் நாம் ஒப்புக்கொள்ளலாம். குலோத்துங்கன் I காலத்திலேயே அரசியல் உட்சிதைவு என்றழைக்கப்பெறும் குறுநில மன்னர்களாக விளங்கிய படைத்தலைவர்களின் மேலாக்கம் ஏற்பட்டுவிட்டது. அது நாளடைவில் சோழப் பேரரசின் உயிர் பிடிப்பைச் செல்லரித்து குலோத்துங்கன் III காலத்தில் தன் அழிவு வேலைக்கு நிறைவைக் காண முனைந்து முண்டிக் கொண்டு இருந்தது. இத்தகைய வரலாற்று அலர் போக்கை (Drift of History) தனக்கென அமைந்திருந்த தன்முனைப்புத் திறன் (force of personality) கொண்டு தடுத்து நிறுத்தினுன் குலோத்துங்கன் III. உட்சிதைவில் சரிந்துவிட்ட சோழர்களின் அரசியல்—சமய—கலைவாழ்வுக் 'கோட்டையை'த் திரும்பவும் எடுப்பித்து நிறுத்திய 'ஊமைத்துரையாக' சோழர் வரலாற்றில் குலோத்துங்கன் காட்சி அளிக்கிருன். அந் நாளைய வரலாற்றுப் போக்கில் மிதந்து வந்த 'பனிப்பாறைக் கற்கள்' எனக் காணப்பட்ட குறுநில மன்னர்களின் உள்ளார்ந்த சுயேச்சை சோழ அரசியலுக்குள் எதிர்மறை அரசியலாகிவிட்டது. இந்த எதிர்மறைச் சூழலின் ஊடே எதிர் நீச்சல் காண்பித்துப் பாண்டியரோடும் கொங்காள்வாரோடும் போர்கள் என்ற பேரரசுப் பாணியில் அமைந்த வெளிநாட்டு உறவுகளையும், கோவிலறம் பேணல், கலையும் இலக்கியமும் வளர்த்தல் போன்ற உள்நாட்டுச் சாதனைகளையும் கொண்டமைந்த பின்னல் என இவனுடைய ஆட்சி அமைந்தது. அந் நிலையில் சோழரின் இயல்பான பாரம்பரியங்களும் நிலைநாட்டப்பெற்றன. அணையப் போகும் சுடர் அணைவதற்கு முன்பு மேலெழுந்து பின்பு வீழ்ந்து மறைவது போல முன்னூற்றைம்பது ஆண்டுக்குரிய வளர்ச்சியில் முதிர்ச்சியுற்றுப் போன சோழப் பேரரசின் மாட்சிமைக்குரிய கடைசிப் படலத்தை நடத்திக் காட்டுகின்ற ஏகதலைவன் என்றளவிலும், இடர்ப்பாடுகளைக் களைந்து வினைத்திட்பங் காட்டுகின்ற தனியார்வ மாட்சிமையிலும் குலோத்துங்கன் III

சிறந்து விளங்கினுன். ராஜராஜன் I ஒருவனுக்குத்தான் ஆளுகைத் திறன், பேரரசுப் பெருமிதம், போரார்வம் போன்றவற்றைப் பொறுத்தமட்டில் இவனை ஒப்புமை சொல்லலாம்.

## I வெளிநாட்டுக் கொள்கை

பாண்டியரோடும், கொங்கு நாட்டுப் பாதுகாப்பாளர் கேரளக் குலத்தினரோடும், காஞ்சியில் மேலாண்மை பெற்ற நெல்லூரைச் சேர்ந்த பொத்தப்பி சித்தரசாக்கள் என்ற தெலுங்குச் சோழ ரோடும் குலோத்துங்கன் செய்த போர்களின் தொகுப்பே அவனுடைய வெளிநாட்டுக் கொள்கை என்றளவில் செயல் பட்டது. இப் போர்கள் எல்லாம் சோழப் பேரரசுத்திறனின் சீரழிவை ஈடு கட்டுவதற்காக ஏற்பட்டது (Rejuvenation of Imperialism) என்றும், உள்நாட்டில் தலைதூக்கி நின்ற குறுநில மன்னர்களின் சக்தியை வெளிநாட்டுப் போர்களில் திசைதிருப்பி ஈடுபடுத்துகின்ற மடைமாற்று யுக்திமுறை (diversionary tactics) என்றும் நாம் கொள்ளலாம்.

**1. கொங்குநாட்டுப் போர்:** பாண்டிய நாட்டில் குலோத் துங்கன் மேற்கொண்ட இரண்டாவது படையெழுச்சியின் தொடர் பாக 1190-லிருந்து 1194வரையுள்ள காலத்தில் கொங்கு நாட்டுப் படையெடுப்பு நிகழ்ந்திருக்க வேண்டும். இப் போருக்கான காரணங்களோ, அவை பற்றிய துல்லியமான செய்தி களோ நமக்குக் கிடைக்கவில்லை. ‘குலோத்துங்கன் கோவை’ என்ற நூலும், புதுக்கோட்டைக் கல்வெட்டுகளும் கொடுக்கும் பொதுவான செய்திகளின்படி கொங்கு நாட்டின் தலைநகரான கருவூர் குலோத்துங்கனின் படையெடுப்பால் வீழ்ச்சியுற்றது. அங்குக் குலோத்துங்கன் விஜயாபிஷேகம் பண்ணிக்கொண்டான்.

‘புயல் வாய்த்து’ என்று தொடங்கும் இவனுடைய மெய்க் கீர்த்தி சொல்வதுபோலப் ‘பூழியா கெடக் கொங்கும் பாழ்படப் பொருது புக்குக்—கருவூரிற் சோழ கேரளமென்று மன்னர்தொழ— விசையமா முடிசூடி’ என்று வருகின்ற பாடப்படி ‘வீரகேரளன்’ என்ற பட்டத்தைக் குலோத்துங்கன் சூடிக்கொண்டான். இது கேரள குலத்தினரின் ஆட்சியிலிருந்த கொங்கு நாட்டின்மேல் கொண்ட சோழனுடைய ஆதிக்கத்தைச் சொல்லுகிறது. கங்க நாட்டை வீரசோழ மண்டலம் என்று பெயரிட்ட இக் குலோத் துங்கன் கொங்கு நாட்டை இவ்வாறு மீட்டான். கன்னடியரான போசளரின் செல்வாக்கைக் கொங்கு நாட்டிலிருந்து அப்புறப் படுத்தியதையும் இதற்கு விடுகாதழகிய பெருமாள் என்ற

அதிகமான் குல குறுநில மன்னன் துணைநின்றதும் இது சம்பந்தமாக நமக்குப் புலப்படும் மற்றைய வரலாற்று உண்மைகள் ஆகும்.

**2. காஞ்சியின் மீட்பும் தெலுங்கச் சோழனின் பணிவும் :** 1169-ல் குலோத்துங்கன் காஞ்சியினுள் தன் சினந்தணிக்கின்ற அளவில் இராணுவப் பிரவேசம் செய்தான் என்பது அவனுடைய புதுக்கோட்டைக் கல்வெட்டு தருகின்ற குறிப்பு. செல்லூர், நந்தலூர் வரை குலோத்துங்கனுடைய ஆட்சியின் மேலாண்மையை (Overlordship) ஒப்புக்கொண்ட தெலுங்கச் சோழர்கள் ஆண்டு வந்ததை இச் சோழனின் மேம்பாட்டைக் குறிக்கின்ற அளவில் அமைந்த கல்வெட்டுகள் அங்குக் காணப்படுவதே தக்க சான்ருக அமையும். ஆனுலும், கடப்பைப் பகுதியை ஆண்டு வந்த புஜபலவீர நல்லசித்தன தேவர் என்ற சோழ மகாராஜன் காஞ்சியைக் கப்பங்கட்ட வைத்ததாக 1192-ல் ஏற்பட்ட தன்னுடைய கல்வெட்டில் பெருமையோடு குறிக்கிருன். இவனுடைய முன்னேரில் ஒருவரான தாமுசித்தவன் தன் கல்வெட்டில், அவனுக்கு முன்னேரான ஒரு நல்ல சித்தன் காஞ்சியைக் கைப்பற்றி இருந்தான் எனச் சொல்லுகிருன். இந்த அளவில், புஜபலவீர நல்லசித்தனை அடக்கி 1169-ல் குலோத்துங்கன் காஞ்சியை மீட்டுக்கொண்டான் என்பது தெளிவு.

**3. வேங்கிநாட்டுப் படையெழுச்சி உண்மையில் நடந்ததா?** 1208-ல் திரும்பவும் குலோத்துங்கன் வடக்கில் படையெடுத்துச் சென்ருன். செயலூக்கமுள்ள வடுகரை அடக்கி வேங்கி மண்டலங் கைக்கொண்டு உறங்கை என்னும் நகரத்திற்குள் புகுந்தான் இச் சோழன் என்று ‘புயல் வாய்த்து’ என்று தொடங்கும் இவனுடைய மெய்க்கீர்த்தி சொல்லுகிறது. (‘முனி வாறிக் கச்சி புக்கு முழுதரசையுந் திறைகவர்ந்து—தாங்கரும்போர் வடுகை வென்று வேங்கை மண்டலந் தனதாக்கி—பொன்மழையெய் துறந்தையென்னும் பொன்னகர் புக்கருளி’ என்பது அந்த மெய்க்கீர்த்திப் பாடம்) வாரங்கை (ஒற்றைக்கல் அல்லது உறங்கை) என்ற நகரத்தின் காகேதீய மாமன்னன் கணபதி 1199-ல் பட்டத்துக்கு வந்த பின்பு 1208-ல் குலோத்துங்கனேடு மோதி இருக்க வேண்டும். இந்தப் போரின் விளைவாக வேங்கி மண்டலம் குலோத்துங்கன் வசம் ஆகிவிட்டதா ? நெல்லூருக்கு வடக்கே இச் சோழனுடைய கல்வெட்டுகள் காணப்படாததால், இவ் வகையில் வேங்கியை வென்றடிப்படுத்தியதை நாம் வரலாற்றுப் பூர்வமான உண்மை என்று ஒப்புக்கொள்வதற்கில்லை.

**4. பாண்டியப் போர்கள்:** ராஜாதிராஜன் II காலத்தில் முதல் கட்ட பாண்டியப் போர் நடந்து முடிந்திருந்தது. உள்நாட்டுப் போராகத் தொடங்கிய நிலையில் ஈழத்தினரின் வருகையால் சோழரும் அதில் சம்பந்தப்பட வேண்டிய அளவில் அது ஒருவகை சமநிலை கொள்கைக்கான (Balance of Power) போர் என அமைந்திருந்தது; 1178-ல் அது முடிவடைந்தது. சோழப் பேரரசன் முதலில் தன்னிடம் வந்த குலசேகரனையும், பின்பு அவன் ஈழத்தினர் பக்கம் சாய்ந்ததற்கு அப்புறம் வீரபாண்டியனையும் அரச பதவியில் அமர்த்தினன். இவ் வீரபாண்டியனும் ஈழத்தாரிடம் கைக்கோர்த்துக்கொண்டான். எவ்வாறு சோழர்களின் நலனுக்கு விரோதமாக அவன் செயல்பட்டான் என்பது தெளிவாகவில்லை. ஆனுலும் அவனைப் பதவியிலிருந்து நீக்குவதற்கும், அரசுரிமைப் பெற்றுத்தர சோழனிடம் யாசித்து நின்ற விக்கிரம பாண்டியன் (குலசேகரனுடைய மகன்) பாண்டிய மன்னனுக ஆக்கப்படுவதற்கும் சோழன் குலோத்துங்கன் பாண்டியர் போரைத் தொடங்கினன்.

**(1) முதல் படையெழுச்சி—(1182ஆம் ஆண்டு அளவில்):** 'மதுரையையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய' என்ற பட்டத்தைக் குலோத்துங்கன் III 1182-லிருந்து புனைந்து கொள்வதால் முதல் படையெழுச்சி இச் சோழன் பதவிக்கு வந்த 1178-லிருந்து நான்காண்டுகளுக்குள் நடைபெற்றது எனக் கணிக்கலாம். வீரபாண்டியனுடைய ஆட்சி பாண்டிய நாட்டில் வேரூன்றி நின்றதை அவனுடைய சுசீந்திரம் கல்வெட்டிலிருந்து நாம் அறியலாம். வீரபாண்டியனின் தந்தையை எதிர்த்துக் கொன்று அரசுரிமை கவர்ந்த குலசேகரனுக்குப் பாண்டியநாட்டில் பெருமளவிற்கு ஆதரவு இருந்தது என்ற செய்தியை நினைவிலிருத்தி வீரபாண்டிய நாட்டில் சோழர் உதவியால் மட்டுமே நிலை பெற்றதை எண்ணிப் பார்த்தால் அவன் சோழருக்குச் செலுத்த வேண்டிய நன்றிக்கடனின் பரிமாணம் தெரியவரும். சிங்களவரோடு சேர்ந்துகொண்ட வீரபாண்டியனைப் பதவி விலகச் செய்யக் குலோத்துங்கன் முதல் படையெழுச்சியை மேற்கொண்டு வீரபாண்டியனுடைய ஈழக படை, மறப்படை என்ற மறவர் சேனை ஆகியோரையும் அவனுக்குத் துணை வந்த சிங்களப்படைஞரையும் தோற்கடித்தான். தனது மகனையும் மதுரையம்பதி ஆட்சியுரிமையையும் இழந்து போன வீரபாண்டியனுக்குப் பதிலாக விக்கிரம பாண்டியன் 1180-ல் மதுரை மன்னனுக்கப் பட்டான். மதுரையில் வெற்றித்தூண் நிறுவிய குலோத்துங்கனுக்குப் பாண்டியநாடு சோழரின் பாதுகாப்புக்குரிய நாடாகி (Protectorate) விட்டது. 'புயல் வாய்த்து' எனத் தொடங்கும்

மெய்க்கீர்த்தி பின் வருமாறு கூறுகிறது: 'தண்டொன்ருல் வழுதிமைத்தனை மூக்கரிந்து தமிழ்மதுரை—கொண்டு விக்கிரமப் பாண்டியனுக்குக் கொடுத்து மீண்டதற்பின் பரிபவத்தா லெடுந்து வந்து நெட்டூரில் எதிர்த்த வீரபாண்டியன்.'

இவ்வாறு முதல் படையெழுச்சியின் தோல்வியை ஈடு கட்ட மறுபடியும் போருக்காக நெட்டூரில் வீரபாண்டியன் வந்து நிற்க, பாண்டியப் போரின் இரண்டாம் கட்டம் தொடங்கியது.

**(2) இரண்டாவது படையெழுச்சி (1189ஆம் ஆண்டு அளவில்) :** முன் சொன்ன மெய்க்கீர்த்தி அறிவிப்பது போல வீரபாண்டியன் படை திரட்டி நெட்டூருக்கு வந்தான். முதன் முதலில் இப் போர் பற்றிச் சொல்லும் சிதம்பரம் கல்வெட்டு 1189-ல் ஏற்பட்ட காரணத்தால் இப் போர் அந்த ஆண்டுக்கு முன்பு நிகழ்ந்திருக்க வேண்டும். வீரபாண்டியனின் பாண்டியப் படைகளைக் குலோத்துங்கன் நெட்டூரில் முறியடித்தான் ; பாண்டிய மணிமுடியையும் பறித்துக்கொண்டான். தோல்வி யுற்ற வீரபாண்டியன் வேணாடு (கேரளம்) ஏகி, கொல்லம் சென் றமர்ந்தான். கேரளத்தினனும் பாண்டியனும் சோழரின் பகை மையை எண்ணி அஞ்சியோ, அப் பகைமையை உறவு என மாற்றுகின்ற அரசியலறிவு ஆர்வம் பற்றியோ குலோத்துங்கனிடம் வந்து சேர்ந்து நட்புரிமை வேண்டி நின்றனர். சோழனும் மனமிரங்கி நெட்டூரில் தோற்ற பாண்டியனுக்குப் பாண்டி மண்டலத்தில் ஒரு பகுதியையும், கேரள மன்னனுக்கு அரச நிதியமும் கொடுத்து அவர்களை அவரவர் நாடுகளுக்கு அனுப்பி வைத்தான். சோழருக்கு விசுவாசமாகக் கடைசிவரை இருந்த விக்கிரம பாண்டியனுக்குப் பின்பு 1190-ல் பட்டத்திற்கு வந்த சடாவர்மன் குலசேகரன் தன்முனைப்பாக நடந்துகொண்டு பாண்டிய மீனுக்கு முன்பு கொடும் புலியும் (சோழனும்), வில்லும் (சேரனும்) அச்சமுற்று ஓடி ஒளிந்துகொண்டன என மெய்க் கீர்த்திகளில் குறிக்க ஆரம்பித்தான்.

இத்தகைய ஆணவத்தை எதிர்க்கின்ற முறையிலும், கருவூரில் ஏற்கெனவே விஜயாபிஷேகம் பண்ணிக்கொண்டதைத் தொடர்ந்து மதுரையில் வீராபிஷேகம் செய்துகொள்ள வேண்டும் என அவா பற்றியும் குலோத்துங்கன் III பாண்டிய நாட்டுக்குப் படையோடு வந்தான்.

**(3) மூன்ருவது படையெழுச்சி (1205ஆம் ஆண்டு அளவில்):** மதுரைக்கு வந்த குலோத்துங்கன் மட்டியூர், கழிக்கோட்டை

போன்ற இடங்களில் மறவர் படையைத் தோற்கடித்து மதுரையில் உள்ள பாண்டிய முடிசூட்டு மண்டபம் உட்படப் பல கட்டடங்களை இடித்துத் தகர்த்தான்; மதுரையிலிருந்து தன்னுடைய தாய், மக்கள் ஆகியவரோடு காடு நோக்கி ஓடிப் போய் விட்ட பாண்டியன் குலசேகரனுக்கே அவன் நாட்டைத் திருப்பிக் கொடுத்தான். வெற்றிக்குரிய உரிமையோடு (Title of Conquest) சில ஆண்டுகள் பாண்டிய நாட்டை ஆண்ட பின்பு தான் குலோத்துங்கன் அதனை இவ்வாறு திருப்பிக் கொடுத்தான்.

**(4) பாண்டியப் போரின் மூன்று படையெழுச்சிகள்—ஒரு திறனாய்வு:** (1) பாண்டியருக்குள் ஏற்பட்ட உள்நாட்டுப் போரில் சோழர்கள் ஈடுபட்டதற்கு முழுமுதல் காரணம் என்ன? அரசியல் வலிமை தென்னகத்தில் சமன்நிலை (Balance of Power) கொண்டிருக்க வேண்டும் என்பது பொதுக் கோட்பாடு ஆகும். குலோத்துங்கன் தயவில் ஆட்சிக்கு வந்த வீரபாண்டியன் நன்றி மறந்து போவது அரசியல் குற்றமாகக் கருதப்பட்டது. அவன் அறிய கட்சி மாறிய குலசேகரனுக்கு அளித்த தண்டனையை எண்ணிப் பார்க்க மறுத்த நிலையில் குலோத்துங்கனுக்கு வீர பாண்டியன் எதிரியாகி விடுகிறான். இவ்வாறு முதலில் குலசேக ரனும், பின்பு வீரபாண்டியனும் சோழருக்கு விரோதமாக மாறிக் கொண்டது சிறப்புச் செய்தி அல்ல. 400 ஆண்டுகள் ஆண்ட சோழ வமிசத்தில் ஒரு திருமண உறவுகூடச் செய்துகொள்ளாத அளவிற்கு உள்ளத்தால் ஒதுங்கி நின்ற பாண்டியர்—சோழர் குலங்கள் ஒன்றுகூடாமலேயே போனது தென்னக சரித்திரத்தின் அவலப் படலமாகவே தென்படுகிறது. இத்தகைய முறையில் அரசியல் பிழைப்பு நடத்திய அக் காலப் பாண்டியர்கள் தங்க ளுடைய அண்டை நாட்டினரான சிங்களவர்கள், சேரர்கள் போன்றவரோடு சேர்ந்துகொண்டு குலோத்துங்க சோழனை எதிர்த்து நின்றபோது அதற்குரிய அரசியல் விளைவுகளை எதிர் பார்த்துத்தான் காத்திருந்தார்கள். அரசியலில் இத்தகைய மன மாற்றம் சாதாரணந்தான். இருப்பினும், இராணுவப் பலாத் காரத்தில் அழிந்து போக வேண்டிய அந் நிலையிலும், வலிமை சான்ற சோழர்களைப் பாண்டியர்கள் எதிர்த்தது தென்னக அரசியலில் காணப் பெறுகின்ற எத்தனையோ புதிர்களில் வியப்புக் குரியது எனக் கொள்ள வேண்டும்.

பேராசிரியர் கூறுவது போலப் பாண்டியர்—சிங்களவர்—சேரர் என்பவர்கள் அணி சேர்ந்து எப்போதுமே தென்கோடியில் தங்களது அரசியலைப் பெருமளவிற்குக் காலமெல்லாம் நடத்தி வந்தார்கள். ஆகவே, இந்தக் கூட்டணியின் எதிர்ப்பில் சோழப்

பேரரசின் சுதந்தரமும் சாம்ராஜ்யச் செல்வாக்கும் அழிந்து விடாமல் காப்பதற்கு சமன்நிலைக் கொள்கை (Principle of Balance of Power) குலோத்துங்கனுடைய போர்நிறை அரசியலுக்கு ஆணி வேராயிற்று ; அடுத்தடுத்து 1182ஆம் ஆண்டு அளவிலும், 1189ஆம் ஆண்டு அளவிலும், 1205ஆம் ஆண்டு அளவிலும்-என மூன்று படையெழுச்சிகள் பாண்டிய நாட்டின்மேல் ஏற்பட்டன. பாண்டியருடைய செருக்கை அழிக்கவும், வீராபிஷேகம் பண்ணிக் கொள்ளவும் மூன்ருவது படையெழுச்சியைக் குலோத்துங்கன் நடத்தினுன். சோழ வரலாற்றின் அரசியலுக்குரிய ஆழமான அடிப்படைக் கோட்பாடுகள் குலோத்துங்கனின் வீம்பு உணர்ச்சியின் அசுரப் பாய்ச்சலுக்கு வழியிட்டு ஒதுங்கிக்கொண்டதைத் தான் இப் படையெழுச்சி சுட்டிக் காட்டுகிறது. ஆனுல், குலோத்துங்கன் மதுரையில் கட்டடங்களை நாசஞ்செய்தது ஏன் ? 'செய்நன்றி கொன்ற' பாண்டியரின் முன்னேற்றங்கண்டு உள்ளுறப் பொருமினுன் குலோத்துங்கன். அப் பொருமலின் வேகந்தான் அவ்வாறு மதுரை நகர்க் கட்டட இடிபாடாக வெளித் தோற்றம் கொண்டது எனக் கூறுவது பொருத்தமே.

(2) பாண்டியர்களை உள்நாட்டுப் போர்களிலே எந் நாளும் ஈடுபட வழி செய்திருந்தால் சோழப் பேரரசு அவ்வளவு எளிதிலும் குறுகிய காலத்திலும் அழிந்துப்பட்டிருக்காது. விக்கிரமப் பாண்டியன் சோழரால் பதவியில் அமர்த்தப்பட்ட 118-லிருந்து பாண்டிய நாட்டை முன்னைய பாண்டியரைவிட நன்முறையில் ஆளத் தலைப்பட்டான். திருச்செந்தூர் தாலூகா கட்டாரி மங்கலத்தில் 64 அந்தணர் அடங்கிய சதுர்வேதி மங்கலத்தை நாட்டையே துவட்டி எடுத்த உள்நாட்டுப் போருக்குப் பின்பு உருவாக்குகின்ற அளவில் அவன் தன்நாட்டில் அமைதியையும் ஆட்சித் திறனையும் நிலைநாட்டினுன்.[1] சேரரசுச் சோழர்கள் தங்களுடைய பேரரசுப் பார்வையில் 'ஒரே நாடு, ஒரே மன்னன்' என்ற தத்துவத்தைக் காலமெல்லாம் உழன்று கிடந்த 'பஞ்ச பாண்டியர்' புகழ் பாண்டிய நாட்டுக்கு இராணுவ வழியில் புகட்டினுர்கள். இந்த அரசியல் தவற்றுக்குத் தங்களுடைய பேரரசையே ஒரு வகையில் சோழர்கள் ஈடு கொடுக்கக்கூடிய காலம் 1252-ல் சுந்தர பாண்டியப் படையெடுப்போடு வந்தது. இதன் பயனுக அவர்களின் அரசு நிலை தடுமாறி அழிவை நோக்கிச் சரியத் தலைப்பட்டது.

இந் நிலையில் சோழரால் உண்டாக்கப்பட்ட பாண்டிய நாட்டின் சீர்பட்ட அரசியலில் ஒற்றுமைக்குரிய சின்னமாகப்

[1] Dr. K. V. Raman— 'Some Aspects of Pandian History in the light of Recent Researches'—Madras University—1972—p. 25

பரிணமித்த விக்கிரம சோழன் பாண்டிய சுதந்தரத்தின் அக்னி குஞ்சு எனவும், சுந்தர பாண்டியன் பாண்டியப் பேரரசின் தீச்சுடர் எனவும் பிற்காலத்தில் மாறுகின்ற அரசியல் கருவை உண்டாக்கிய பொறுப்பு குலோத்துங்க சோழனையே சாரும். ஜெர்மனியைத் துண்டு துக்காணி நாடுகளாகவே எந் நாளும் வைத்திருப்பதற்குக் கார்டினல் ரிச்லூ என்ற ஃபிரான்ஸ் நாட்டின் முதன்மந்திரி (17ஆம் நூற்றுண்டு) தன்னுடைய கத்தோலிக்க மத அபிமானத்தை, அரசியல் தேவையை, முன்னிட்டு ஒறுத்து நின்ற ராஜதந்திர தொலைநோக்கு குலோத்துங்கனுக்கு இல்லாத குறையால்தான் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கு உடனடிக் காரணமாகப் பாண்டி நாடு உருப்பெற்றது எனக் கூறலாம்.

(3) குலோத்துங்கன் III தனது பேரரசு ஆதிக்க உணர்ச்சிப் போக்கில் இப் பாண்டியப் போர்களை நடத்தும்போது பிற்காலப் பாண்டியரின் பழி வாங்கும் உணர்ச்சிக்குத் தூண்டுதலாக அமைந்த மனிதாபிமானம் இல்லாத செய்கைகள் உள்ளிட்ட போர்ச் செய்கைகள் பின் வருமாறு :

**1. முதல் படையெழுச்சி :** (1) மதுரையில் வெற்றித்தூண் நிறுவுதல். (2) 'வழுதி மைந்தனை மூக்கரிந்து' என்ற முறையில் பாண்டிய அரச இளவலின் மூக்கறுத்தல்.

**2. இரண்டாவது படையெழுச்சி :** (1) வீரகேரளன் கை விரலைத் துண்டித்தல். (2) 'புயல் வாய்த்து' என்ற குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி சொல்வது போல 'நெட்டூரில் எதிர்த்த வீரபாண்டியன்—முடித்தலைக் கொண்டு அமர் முடித்தவன் மடர் கொடியை வேளமேற்றி' என்றளவில் தோற்றவர் தலையில் சால் வைத்தல், தோற்ற பாண்டியன் மனைவியரைத் தனது அந்தப் புரத்தில் (முஸ்லீம் மன்னன் அல்லாவூதினை நினைவறுத்துவது போல) சேர்த்துக்கொள்ளல்.

**3. மூன்றுவது படையெழுச்சி :** (1) 'தாக்கிய போர் வலி விருதர் மூக்கிழந்து முகம் அழிய' என்றளவில் எதிர்ப்படையினரின் மூக்கை எல்லாம் அறுத்தல். (2) 'படைக்கடல் வளைய —பெரு வழுதியரும் தம்பியவரும் பெற்ற தாயாரும் பேருரிமையும் பொருவரு துயர் துணையாக வேறு வேறு சுரம்படரத்—தென் மதுரை பதிபுக்கு வந்ததையெல்லாங் கொடுத்து—பொடிபடுத்தி வழுதியர்தம் கூட மண்டபம்—கழுதை ஏரிட உழுது புகழ்க்கதிர் விளையக் கவடிவித்து' என்றளவில் பாண்டியனும், பிள்ளைகளும், பெற்ற தாயும், மனைவியரும் ஆளுக்கொரு காடு புக வைத்தும்

(சுரம்படர) முடிசூட்டு மண்டபத்தை இடித்துத் தரைமட்டமாக்கிக் கழுதை வைத்து உழுது எள்ளும் எருக்கலையும் என்ற வகை கவடி விதைத்தும் என வழங்கும் போர்ச் செய்கைகளைக் கி. மு. மூன்றில் நடந்த பியூனிக் போர்களின் கடைசியில் உரோமானியர்கள் கார்த்தேஜ் என்ற ஆப்பிரிக்கத் துறைமுகத் தலைநகரை இப்படித் தான் தரைமட்டமாக்கி உழுது 'எள்' விதைத்து வரலாற்றிலிருந்தே துடைத்து எறிந்தார்கள் என்ற செய்தியோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். (3) மதுரைக் கோவில் மலை போலத் தங்கத்தில் மின்னப் பொன் வேய்ந்த இதே குலோத்துங்கன் கேரளத்திலும் பாண்டிநாட்டிலும் தங்கத்தையும், இறையிலி நிலங்களுக்கான வரிகளையும் பொதுவான வரித்தண்டமாக வசூலித்து, அதனைச் சோழ நாட்டுக் கோவில்களான சிதம்பரம், திருவாரூர், திரிபுவனம் ஆகியவற்றுக்கு அளித்தான். (4) தென்னவனைப் பாண்டியன் என்ற பட்டத்தைப் புனையக்கூடாது என்ற முறையில் பாண்டியன் என்ற பட்டத்தைத் தன்னுடைய வீரத்தைப் பாட வந்த ஒரு பாணனுக்கு அளித்து, அவனையே பாண்டியன் என அழைத்தது ; இதன்மூலம் பாண்டியனுடைய குலத்தை அவமதித்தது. (5) பாண்டிய நாட்டைச் 'சோழ பாண்டிய மண்டலம்' என்றும், மதுரை நகரை 'முடித்தலைக் கொண்ட சோழபுரம்' என்றும் மாற்றியது.

இம் மூன்று படையெழுச்சிகளால் காணப்பெறும் மனித நிந்திப்பில் டெல்லிச் சுல்தான்களைக் காலத்தால் முந்திக்கொண்ட அளவில் மனிதாபிமானம் இழந்து தோற்றமளிக்கும் குலோத்துங்கனின் இவ் வகை அழிவுச் செயல்களே பாண்டியர்களைப் பழி வாங்கும் எண்ணத்தோடு வளர்த்து விடுவதற்கு வழி காட்டின. மேலைச் சாளுக்கியரோடு நடந்த போர்களில் ராஜேந்திரன் I போன்றோர் மாற்றாரான மராட்டியப் பேரரசரோடு மோதி நின்ற நாளில் இச் செய்கைகள் இருதரப்பாருக்கும் இயல்பாகவே உண்டு. ஆனால், குலோத்துங்கன் அண்டை வீட்டாரான பாண்டிய மன்னர்களோடு இவ்வாறு மேற்கொண்ட போர்க் காரியங்கள் வரலாற்றுப் படுகையில் பதியம் போட்டு வைக்கப் பட்ட பழிவாங்கும் உணர்ச்சிக்கான நச்சு மரங்களாகத்தான் வளர்ந்தன என நாம் கொள்ளலாம்.

**4. கடைசிப் பாண்டியப் போர் :** 1216-ல் நடந்த இந்தப் போரின் விளைவு முற்பகல் செய்யின் பிற்பகல் 'அரசியலிலும்' விளையும் என்ற உண்மையைக் குலோத்துங்கனுக்கு உணர்த்தியது. 1216-ல் பதவிக்கு வந்த சுந்தர பாண்டியன் ஆயிரத்தளி,

உறையூர் போன்ற நகரங்களின் மணி மண்டபங்கள், நடன சாலைகள், மாடமாளிகைகள் போன்றவற்றை இடித்துத் தரை மட்டமாக்கிக் கழுதைகளை வைத்து உழுது கவடியும் விதைத் தான்; சோழனின் முடிசூடும் மண்டபத்தில் வீராபிஷேகம் பண்ணிக்கொண்டான். முன்னொரு சமயம் வீராபிஷேகம் செய் வதற்காக மதுரைக்கு மூன்றாவது முறை படையெடுத்து மதுரை யைக் கடிந்த குலோத்துங்கனைப் பாண்டியன் இப்போது 'ஆட் கொண்டான்'. 'இதோ என் மகன்; உங்கள் பெயரை விட்டிருக் கிறேன்' எனக் குலோத்துங்கன் தன் மகனோடு பாண்டியன் காலில் விழுந்ததாகச் சுந்தர பாண்டியனுடைய கல்வெட்டுகள் பெருமை அடித்துக்கொள்கின்றன. குலோத்துங்கன் சோழபதி என்ற பட்டத்தோடு சோழ மன்னருரிமையைச் 'சோணாடு வழங்கி அருளிய'ப் பட்டம் கொண்ட சுந்தர பாண்டியனிடம் பெற்றுக்கொண்டான்.

## II உள்நாட்டு நிர்வாகம்

அரசாங்க அதிகாரிகள் தன்மூப்புக் குறுநில மன்னரானார்கள். குலோத்துங்கன் I காலத்திலேயே சோழர்களின் நிர்வாகத்தில் நாடாள்வான் என்றளவில் அதிகாரியாக அமைந்த காவற்பணி யாளர்கள் குறுநில மன்னர்களுக்குரிய மேலாக்கம் பெற்று தங்க ளுக்குள் ஒப்பந்தங்கள்கூடச் செய்துகொண்டார்கள். இது சோழர்களின் உள்ளாட்சி அமைப்பில் தோன்றிய சுகக்கேடு என்று கொள்ள வேண்டும். குலோத்துங்கன் III காலத்தின் இத் தகைய குறுநில மன்னர்களின் எழுச்சி முழுமை பெற்றுவிட்டதை வகைப்படுத்திப் பார்க்கலாம்.

**1. வாணர்கள் :** சேலம், தென் ஆற்காடு மாவட்டப் பகுதிகள் அடங்கிய மகத மண்டலப் பகுதியில் 'பொன் பரப் பினான்' என்ற பட்டம் பெற்ற வாணர்குலத் தலைவன் மகதேசன் என்பவன் மன்னர்க்குரிய மாட்சியில் திருவண்ணாமலைக் கோவிலில் பொன் வேய்ந்தும், கிழூரில் கோவில் கட்டப் பணித்தும் சிறப்புடன் ஆட்சி செய்தான்.

**2. மலையமான்கள் :** வடபுலத்து அரசின் வழிவந்தவர் என்றளவில் சேடிராயர் என்ற பெயரேற்றும்' சிசுபாலன், வழி வந்தவர் என்பதைக் கோவலராயர் என்ற பட்டம் புனைந்தும் புராணப் பெருமையோடு பல பட்டங்கள் சூட்டிக்கொண்ட குறுநில மன்னர்கள் திருக்கோயிலூர் சார்ந்த தென் ஆற்காடு மாவட்டத்தின் ஆட்சிக்குரியவர்கள். ஆதியூர் நாடாள்வான், வாணக்கோவரையன், பொன் பரப்பினான், கிள்ளியூர் மலையமான்

போன்ருேர், சார்ந்த பல வகுப்பார்கள் சார்ந்த குறுமுடி அரசர்கள் (Princes) என்ற அளவில் இவர்கள் சோழ மன்னர்களுக்கு அடங்கிய ஆட்சியாளர்களாக விளங்கினுர்கள். ஆனுல், இவ்வாறு வலிமை பெற்று வளர்ச்சியுற்ற இவர்களுடைய அரசியல் நிலை சோழர்களின் உள்நாட்டு அரசாட்சியில் கீறல் விழுந்து விட்டதைத்தான் காட்டிற்று.

3. **அதிகமான்கள் :** இந்தக் குலத்தின் முக்கிய மன்னன் தகடூரை ஆண்ட ராஜராஜ தேவன். இவன் மகன் விடுகாதழகிய பெருமாள் சங்க கால எளினி என்ற அரச பரம்பரையினன் என்றும், பாலாறு, பெண்ணுறு, காவேரி போன்றவற்றிற்குத் தானே அதிபதி என்றும் தன்னுடைய ஆட்சியின் 22 ஆண்டுக்குரிய (கி. பி. 1200) கல்வெட்டில் இவன் கூறிக்கொள்கிருன். இவனும், ஆடையூர் நாடாள்வான் என்பவனும், செங்காணி மரபு விக்கிரம சோழ நாடாள்வான் என்பவனும் இராணுவ ஒப்பந்தம் செய்து கொள்கிருர்கள். இத்தகைய ஒப்பந்தம் சோழரின் உள்ளாட்சி நசித்து வந்ததைத்தான் சுட்டிக் காட்டியது.

4. **கங்கர்கள் :** மைசூர்ப் பிராந்தியத்தின் கங்கர் நாட்டிலுள்ள கங்கர் குல குறுநில மன்னர்களில் முக்கியமானவன் அமராபர்ணு சீலகங்கன். இவனும் இவனைச் சார்ந்தோரும் குலோத்துங்கனுக்கு அடிபணிந்தோர் எனப்பட்டாலும், சோழப் பேரரசில் காணப்பட்ட ஏனையவரைப் போலச் சுயேச்சையை வெளிக்காட்டாமல் சம்பிரதாயமாகச் சோழனுடைய ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டார்கள்.

5. **காடவராயர்கள் :** வட, தென் ஆற்காடு, செங்கை, சித்தூர் ஆகிய மாவட்டங்களைச் சார்ந்த இவர்களுடைய ஆட்சி குலோத்துங்கனுக்குரிய எதிர்ப்போடு அரசுக்குள் அரசு (imperium in imperio) என்ற அளவில் தனிப்பட்ட முறையில் செயல்பட்டது. 1136-ல் வட ஆற்காடு திருமாண்குழியில் கருக்கொண்ட இந்தக் குறுநில மன்னர் பரம்பரை அரச நாராயணன் வீரசேகரன் என்பவன் காலத்தில் அதிகமானுக்குரிய கூடல் நகரத்தை 1186-ல் போரிட்டுப் பெற்ற காரணத்தால் 'கூடல் அவனியாளப் பிறந்த' என்ற பட்டமுடைய மன்னர்களைக் கொண்டது. வட வேங்கடத்தின் அதிபதி என்றும், 'காஞ்சிக்குரிய பல்லவன்' என்றும் தன்னைச் சொல்லிக்கொள்கின்ற அழகிய பல்லவனுடைய மகன் கோப்பெருஞ்சிங்கன் குலோத்துங்கன் III என்பவனுடைய மகள் சிலாவதியை மணம் முடித்தவன். குலோத்துங்கன் III சோழனுக்குப் பின்பு வந்த ராஜராஜன் II

இந்த கோப்பெருஞ்சிங்கனால் 1232 அளவில் சிறைப்பிடிக்கப் படுகின்ற அளவில் இக் காடவர்களின் வளர்ச்சியின் மத்நீர் மிகுந்து போயிற்று.

**6. திறனாய்வு :** கங்காணியர் என்ற சம்புவராயர், காடவ ராயர், சேடியராயர் போன்றோரால் தொண்டை மண்டலமும் சித்தூர்ப் பகுதியும் தனியுரிமைக் கோட்டமாகச் சோழப் பேரரசுக் குள்ளேயே இயங்கத் தொடங்கியது. இவர்களை வளரவிட்டு விட்ட ராஜராஜன் II, ராஜாதிராஜன் III போன்ற சோழர்கள் செய்த அரசியல் தவறு இடையூறு இல்லாமல் தொடர வேண்டிய சூழ்நிலையில் குலோத்துங்கன் பதவிக்கு வந்தான். இங்கிலாந்தின் முதல் நார்மானிய மன்னன் வில்லியம் I 11ஆம் நூற்றாண்டில் தன்னுடைய பிரபுக்களின் நிர்வாகப் பகுதிகளை ஓரிடச் செறிவாக இல்லாமல் நாடெங்கிலும் பிரித்துக் கூறுகளாகப் போட்டது போலக் குலோத்துங்கன் செய்வதற்கு வரலாற்றுப் பூர்வமான பக்குவம் சோழ அரசியலுக்கு அமைந்திருக்கவில்லை. ‘ராசாக்கள் தம்பிரான்’ என்று அவன் கொண்ட பட்டத்திற்கு ஏற்ப, அவன் உள்நாட்டில் ஏனைய தெய்வங்களின் நடுவே கோவிலுக்குரிய மூலவர் போலப் பல மன்னர்கள் நடுவே சோழ மன்னனாகக் காட்சி தந்தான். குலோத்துங்கனுடைய அதிகாரிகள் நடத்த விழைந்தது அரசாங்கத்தை அல்ல; மாறாக, அவர்கள் அரசியல் நடத்த முற்பட்டு அதற்குரிய போர்ப்பூசலும் ஒப்பந்தங்களும் அடக்குவார் யாருமின்றிச் செய்துகொண்டார்கள். ஆனாலும், சோழப் பேரரசன் தனக்குள்ள வெற்றுரு மேலாக்கத்தைக் கூறுகின்ற அளவில் இந்த வகை மண்டலிகாக்களை ‘நம்மகன்’ என்றே கல்வெட்டில் கூறிவந்தனர்.

மதுரை, கருவூர், காஞ்சி, வேங்கி போன்றவற்றை வென்ற படையெழுச்சிகளை நடத்திப் பிறநாட்டு அரசியலில் சுயேச்சை யைக் காட்டிய அந்நிய மன்னர்களை அடக்கியவன் குலோத் துங்கன் ஆவான். ஆனால், தான் கொண்ட சொந்த அரசாங் கத்தில் பதவி வகித்த அதிகாரிகள் அத்தகைய சுயேச்சையை மித மிஞ்சிய அளவில் பெற்றிருந்ததும், அதனை அவன் அடக்காமல் விட்டதும் சோழ வரலாற்றில் காணப்படும் அக் காலத்திய அங்கதந்தான் (Historical Irony). அவனுடைய அதிகாரிகள் சோழ மன்னன் கண் முன்பே படை நடத்தித் தங்களுக்குள் பூச லிட்டுப் பின்பு ஒப்பந்தங்களும் செய்துகொண்டு அத்தகைய சுயேச்சையைத் தங்களுக்குள் வளர்த்துக்கொண்டார்கள் என்பது உண்மை. இது குலோத்துங்கனுடைய அரசியலின் இயலாத் தன்மையைத்தான் காட்டும். இத்தகைய படை நடத்து

அதிகாரிகள் (Leiutenants of War) படை கொண்ட தன்னாட்சியாளர் (War Lords) என்ற வளர்ச்சி பெற்று தங்களுக்குள் இராணுவ முறையில் பூசலிட்டு ஒருவர் இடங்களை மற்றவர்கள் மன்னர் தோரணையில் பிடித்துக்கொள்வதைக் குலோத்துங்கன் காலத்தில் நாம் பார்க்கிறோம். சான்றாக, காடவராயர்கள் அதிகமானுக்குரிய கூடல் என்ற இடத்தை 1186-ல் (குலோத்துங்கன் பட்டத்திற்கு வந்து எட்டு ஆண்டுகள் கழிந்த நாள்களில்) படை நடத்திச் சென்று பிடித்துக்கொண்டதைக் ' கூடல் அவனியாளப் பிறந்த ' என்ற காடவருடைய பட்டத்தாலும், ' காஞ்சியின் பல்லவன் ' என்ற மற்ற விருதுகளாலும் நாம் அறியலாம்.

(அ) டெல்லிச் சுல்தான் அல்லாவுதீன் வல்லாட்சியாளனாகித் தன்னுடைய பிரபுக்களை வாய்பேசாமல் சைகைகளால் பேச வைத்த அளவிற்குத் தன் அதிகாரத்தை நிலை நிறுத்தினான். உள் நாட்டில் சோழப் பேரரசின் உறுதி வாய்ந்த அரசியலாட்சியைத் திரும்பவும் நிலைநாட்டுகின்ற அளவில் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டும், ஒப்பந்தங்களை ஒழுங்கு செய்துகொண்டும் வளர்ந்த அரசாங்க அதிகாரிகளை அடக்கி வைக்கின்ற முயற்சியைக் குலோத்துங்கன் ஓரளவேனும் மேற்கொள்ளவில்லை. அவ்வாறு அவன் மேற்கொள்கின்ற காலம் கடந்து விட்டது என அவனுக்குத் தெரியும் போலும். வீரகேரளனுடைய விரலை வெட்டுகின்ற போர்ச் செய்கையை மற்றொரு நாட்டின் அந்நியனின் சுயேச்சையைக் கண்டிப்பதற்காக நடத்துகின்ற அதே குலோத்துங்கன் தன்னுடைய அரசாங்கத்தின் ஆட்சிப் பொறுப்பு அதிகாரிகள் அவ்வாறு சுயேச்சையை மேற்கொண்ட போது அதே முறையில் தண்டித்ததாகச் செய்திகள் ஏதுமில்லை. குலோத்துங்கனின் வெளிநாட்டுப் போர்கள் எல்லாம் இவ் வகையான தன்மூப்பு நாடாள்வான்களைப் போர்முகத்துக் கொண்டு செல்கின்ற திசைமாற்றுத் தந்திரம் என்றமைந்தது என வேண்டுமானால் எண்ணிக்கொள்ளலாம். இந்த வகையில் இப் பிரச்சினையைக் குலோத்துங்கன் தீர்க்க நினைத்தது அவனுடைய கையாலாகாத் தன்மையை இனங்காட்டி அவனுக்குரிய இயல்பான பலவீனத்தைக் காட்டியது.

(ஆ) குறுநில மன்னர்களாகத் தங்கள் குலப் பெருமைகளைச் சொல்லிக்கொண்டு தன்மூப்புடன் வளர்ந்த அதிகாரிகளை மட்டுமல்லாமல் மற்றைய அதிகாரிகளையும் இச் சோழனால் அடக்க முடியவில்லை. அரசியல் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்ட ' காணி ' என்ற நிலங்களினின்றும் ஏராளமான வரிகளை இந்த அதிகாரிகள் வாங்கத் தலைப்பட்டபோது சம்பந்தப்பட்ட மக்கள்

இன்னலுற்றுர்கள். இதைக் கண்டித்துக் குலோத்துங்க சோழன் அதிகாரிகளைத் தண்டித்ததாகச் செய்திகள் கிடையா. ‘அரசியல் அதிகாரிகளுக்கும் நாட்டுத் தலைவர்களுக்கும் காணியாகக் கொடுக்கப்பட்ட நிலங்களில் அவர்கள் மக்களிடம் வரி வசூலிக்குமிடத்துக் கைக்கொண்ட கடுமையான முறைகளின் காரணமாகக் குடிகள் ஊரை விட்டுப் போக நேர்ந்தது எனக் கருதுவதற்கு உரிய இடமுளது’ என ஆராய்ச்சியாளர் திரு. T. V. S. பண்டாரத்தார் கூறுகிருர்.[2] 1213ஆம் ஆண்டு (அதாவது குலோத்துங்கன் III பதவிக்கு வந்து 35 ஆண்டுகள் ஆண்ட பின்பு) தொண்டை மண்டலத் திருவொற்றியூர் நாடு என்றமைப்பின் அதிகாரி யாதவ ராயன் என்பவன் தனது தண்டுவான் என்ற கீழ்நிலை அதிகாரியின் துணைகொண்டு புன்னை வாயிலில் வரி கொடுக்க முடியாதவர்களைச் சிறையிலிட்டான்.

குளத்தூரில் காணப்பட்ட குடியிருப்பு வீடுகளையும் 80 வேலி நிலத்தையும் விற்றுத் தங்கள்பேரில் விதிக்கப்பட்ட வரிகளை அவ்வூர்ச் சபாவின் தீர்மானப்படி மிகுந்த கஷ்டத்தோடு மக்கள் செலுத்திஞர்கள். இவ்வாறு குலோத்துங்கனுடைய ஆட்சியில் மக்கள் வரி கொடுக்க முடியாத காரணத்தாலும் அதிகாரிகளின் கொடுமையாலும் ஊரை விட்டுச் செல்கின்ற இன்னலுற்றுர்கள். எல்லா இடங்களிலும் இவ்வாறு நிகழவில்லை. ஆனுல், இவை நிகழ்ந்த இடங்களில் சோழ மன்னன் மக்களின் மேலாளன் என்றளவில் மக்கள் சார்பில் குறுக்கிட்டுச் செயல்பட்டதுபற்றிக் குறிப்புகள் இதுவரை கிடைக்கவில்லை. மத்திய அரசின் அதிகாரத்தைப் பிரயோகம் செய்து, இன்னலுற்றவரை, இந்த இராணுவ மனப்போக்குடைய சோழ மன்னன் காப்பாற்றினுன் என்பதைக் கேட்டறியாத மக்கள் ஸ்தாபன அளவில் திரண்டு தங்கள் எதிர்ப்பை அடாது வரிவசூல் செய்த அதிகாரிகளுக்குத் தெரிவித்தார்கள். ஊர்ச்சபைகளில் ஒன்றுகூடிச் சோழ மன்னன் செய்யத் தவறியதைத் தங்களுடைய சொந்த எதிர்ப்பின்மூலம் வரிக் கொடுமை செய்யும் அதிகாரிகளை மக்கள் சமாளித்தார்கள். இருந்தாலும், வரிக்கொடுமையைவிட அதிகாரிகளின் கொடுங்கோன்மைதான் அவர்களை அவர்களுடைய கிராமங்களைவிட்டு விரட்டிற்று என்று கொள்ளல் பொருத்தமாக அமையும்.

(இ) நிலத்தை விட்டுவிட்டு வெளியே சென்றுவிட்டவருக்கு நிலம் திரும்பவும் கிடைக்காது எனக் கிராம வழக்காறு இருந்த நிலையிலும் பாதிக்கப்பட்ட மக்கள் வேதனையோடு வேற்றிடம் அகன்றுர்கள். இவ்வாறு மக்களுடைய நலன்களைப்

2 ‘பிற்காலச் சோழர் சரித்திரம்’—பாகம் III. 19/1. பக்கம் 64.

பாதிக்கக்கூடிய அளவில் தன்போக்கில் வளர்ந்துபோன அதிகாரிகளைக் கட்டுப்படுத்துவதற்கு இயலாத குலோத்துங்கனின் மத்தியப் பேரரசு அவன் பதவி ஏற்ற நாளிலிருந்து இறக்கும்வரை வெளியாரோடு போர் நடத்திக்கொண்டிருந்தது. அவ் வகைப் போர்கள் நிகழ்ந்த அதே நேரம் உள்நாட்டு ஆட்சியின் சிதைவு ஆழமாகி வந்தது. வல்லாட்சிப் போர்களிலே ஈடுபடுகின்ற எல்லா அரசுகளும் அப் போருக்குரிய அதிகார எழுச்சியோடு உள்நாட்டிலும் அளவிறந்த முறையில் தங்களை வலுப்படுத்திக்கொள்ளும் என்பது எந் நாட்டவருக்கும் பொதுவான அரசியல் பாடம் ஆகும். ஆனால், சோழப் பேரரசில் குலோத்துங்கன் காலம் முதல் இவ்வாறு அமையவில்லை என்பது வரலாற்றுப் புதிர்தான். ஸ்தாபன முறையில் திரண்டெழுந்துவிடக்கூடிய மக்களைக் கட்டுப்படுத்துகின்ற வகையில் இடம் பெயர்ந்தோருக்கு நிலமில்லை என்ற அரச ஆணைகள் இவனுடைய உள்ளாட்சித் துறையில் இச் சோழன் மேற்கொண்ட ஒரு பக்கப் பார்வையைப் புலப்படுத்தும். மொத்தத்தில் குலோத்துங்கன் காலத்தில் நாடாள்வான்கள் தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தங்களும், போர்ப்பூசல்களும், நாடு பிடிக்கின்ற அரச தோரணைகளும் பெற்று உள்ளாட்சித் துறையில் உட்சிதைவு ஏற்படுத்தினார்கள். ஏனைய அதிகாரிகளில் சிலர் மக்களை வரிப்பணம் கேட்டு வருத்தியபோது மத்திய அரசு தலையிட்டு நிலைமையைச் சீர் செய்யவில்லை. அதிகாரிகளின் கெடுபிடியைத் தாங்க முடியாதவர்கள் இடம் பெயர்ந்து சென்றால், அவர்தம் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. இவ்வாறு மத்திய அரசு நடந்துகொண்டது ஓர் இராணுவ மனப் போக்குடைய மன்னன் காலத்தில்தான் என்பது சிந்தனைக்குரியச் செய்தியாகும்.

7. **ஊராட்சி மன்றங்கள் சீர்திருத்தம் :** 1185-ல் குலோத்துங்கன் தஞ்சை மாவட்டம் தலைஞாயிறு என்ற சபாவிற்கு ஓர் அரசியல் தாக்கீது அனுப்பினான். அதன்படி ‘ வித்துவான் ’ என்றளவில் நற்கல்வியும், ‘ சமர் ’ என்ற முறையில் நடுநிலைமைச் சிந்தனையும் கொண்ட நாற்பது வயதிற்கு மேற்பட்டோர்தான் சபாவின் உறுப்பினராகலாம் என்ற நியதி ஏற்பட்டது. வேத கல்வியில் சிறந்ததன்பொருட்டு அரசினரால் நிலம் வழங்கப்பட்ட அந்தணர் மட்டும் காணப்பெறும் சபாவிற்கு இத்தகைய தாக்கீது இப்போது வரக் காரணம் என்ன ? அரசாங்க அதிகாரிகள் அரசினராக விளங்காமல் அரசியல் நடத்த விழைந்து, வரிவசூல் கொடுமையில் மக்களை ஆங்காங்கே ஈடுபடுத்தி வந்த அந் நாளில், இத்தகைய சபாக்கள்தான் அவ்வதிகாரிகளுக்கான எதிர்ப்பை

ஸ்தாபன முறையில் உருவாக்குகின்ற வாய்ப்பு பெற்றவை. இப் புதிய உத்தரவின்படி இவற்றின் இயல்பான உறுப்பினர்கள் 'வித்துவான்', 'சமர்' என்ற தகுதிகள் இல்லாத முறையில் அருகிவிடுவார்கள். கடந்த பத்தாண்டுகள் பதவியில் இருந் திராத நாற்பது வயதிற்கு மேற்பட்டவர்கள்தான் உறுப்பினர்கள் ஆகமுடியும் என்று இப் புதிய சட்டம் கூறியது. இதன் விளைவாக வயதிலும் சிந்தனையிலும் மேம்பட்ட பெரியவர்கள்தான் சபா விலே காணப்படுவர் என்ற உறுதிப்பாடு ஏற்படுத்தப்பட்டது. உள்நாட்டின் ஆட்சி முறை நாடாள்வாரால் சிதைக்கப்பட்டு மத்திய அரசின் அதிகாரம் பெருமளவிற்கு மந்தப்பட்டுப்போன அந் நாளில் கிராமச் சபைகள் நன்முறையில் அவசியம் இயங்க வேண்டும் என்பது இதன் தாக்கீதினுல் உணரப்பட்டிருந்தது. வரிக்கொடுமை, அதிகாரிகளின் தன்னிச்சைப் போக்கு ஆகிய வற்றின் விளைவாக உள்ளூர உருவாகி வந்த குழப்பச் சூழ் நிலையைச் சரிக் கட்ட இத்தகைய சபாக்களை உண்டாக்கக் குலோத்துங்கன் நினைத்திருக்கலாம். இந்த ஏற்பாடு அவனுடைய அரசியல் புலமையைக் காட்டும்.

**8. பஞ்சம் :** குலோத்துங்கன் காலத்தியப் பொருளாதார நிலையில் நெகிழ்ச்சி ஏற்படுத்துகின்ற அளவில் இரண்டு முறைகள் பஞ்சம் ஏற்பட்டது. இவன் ஆட்சிக்கு வந்த 12, 13ஆம் ஆண்டுகளில் (1190) முதல் பஞ்சமும், பன்னிரண்டு ஆண்டுகள் இடைவெளி விட்டு 1202-ல் மற்ருெரு பஞ்சமும் ஏற்பட்டன. முதல் பஞ்சம் பெருமழையினுல் ஏற்பட்ட வெள்ளத் தின் சேதத்தாலும், இரண்டாவது பஞ்சம் மழை இல்லாத தால் ஏற்பட்ட வறட்சியாலும் தோன்றின. மழையும் மழை யின்மையும் பஞ்சம் கொண்டு வருவது நமது நாட்டில் காணப் படும் பரம்பரை இடர்ப்பாடுகளில் நமக்கு நெருங்கிய உறவு கொண்ட நிகழ்ச்சிதான். இப் பஞ்ச காலத்தில் உணவு போன்ற அவசியப் பண்டங்கள் வாங்கும் சக்தியை மக்களுக்கு அளிக்கும் குளம் வெட்டுதல் போன்ற நிவாரண வேலையைத் தனிநபர்களைத் தவிரச் சோழ அரசாங்கம் மேற்கொள்ளவில்லை. இரண்டாவது ஏற்பட்ட பஞ்சத்தின் கொடுமையைத் தஞ்சை மாவட்டம் திருப் பாம்புரம் கல்வெட்டுக் கூறுகிறது. காசுக்கு $\frac{1}{4}$ படி அரிசி பெற்ற அந்தப் பஞ்ச நாளில் 28 படி அரிசிக்குச் சமமான 110 காசுக்குத் திருப்பாம்புரத்திலுள்ள மடத்திற்கு உழவுத்தொழில் வேளாளர் ஒருவர் தமது இரண்டு பெண்மக்களையும் தம்மையும் அடிமை களாக விற்றுக்கொண்டார் என்பது உண்மைச் செய்தியாகும். மேற்சொல்லப்பட்ட நிகழ்ச்சி நடந்த அக் காலப் பகுதியில் குலோத்துங்கன் (கருவூரில் விஜயாபிஷேகம் பண்ணிக்கொண்

டதைத் தொடர்ந்து) மதுரையில் வீராபிஷேகமும் செய்துகொள் வதற்காகப் படையெடுத்துப் பாண்டிய நாடு சென்ருன். சோழப் பேரரசை அழிக்கின்ற வகையில் பாண்டியரின் பகைமையைத் தூண்டிய அளவில் சோழனின் இப் படையெழுச்சி அமைந்தது. தஞ்சைப் பகுதியில் ஏற்பட்ட பஞ்சங்கூடச் சோழ மன்னனை மனத்தளவில் பாதிக்கும் அளவிற்கு இராணுவ ஈடுபாடு அவனிடம் ஆழமாகக் குடிகொண்டிருந்ததுபோலும்.

## III நில அளவு

குலோத்துங்கனின் 38ஆவது ஆட்சியாண்டில் (1216-ல்) சோழ நாட்டின் விளைநிலங்கள் வருவாய்த்துறை நடவடிக்கை யாக அளக்கப் பெற்றன என்ற செய்தி குலோத்துங்கனுக்குப் பின் அரசனுன ராஜேந்திரன் III காலத்திய கோவிலூர்க் கல்வெட்டிலுள்ளது என ஆராய்ச்சியாளர் பண்டாரத்தார் கூறுகிருர். இதுபற்றிய வேறு ஆதாரங்கள் காணப்பெறவில்லை. ஆனல், குலோத்துங்கன் ஆட்சியின் ஆருவது ஆண்டில் —அதாவது 1184-ல்—ஏற்பட்ட தஞ்சை மாவட்டம் திருமங்கலம் என்ற ஊரில் காணப்பட்ட கல்வெட்டுக்கொப்ப இச் சோழனு டைய வருவாய்த் துறையானது நில அளவையிலும், அதன் அடிப்படையில் எழுகின்ற வரிவிதிப்பிலும் காலப்போக்கில் ஏற்பட்டுப் போன மாறுதல்களுக்குரிய முறையில் பல மாற்றங் களைச் செய்துகொண்டதை எடுத்துக் காட்டுகிறது. நில அளவு களின் குறிப்புகளை அந் நாளைய உண்மை நிலவரப்படி ஒழுங்கு செய்யவும், வாய்க்கால் போக்குப் பாதையையும் வழித் தடத்தை யும் சில குடியானவர்கள் சட்ட விரோதமாக ஆக்கிரமிப்புக் கொண்டதை விலக்கவும் இந் நில அளவு மேற்கொள்ளப்பட்டது. மேலும், விக்கிரம சோழப் பேராறு தன்னுடைய போக்கை மாற்றிக் கொண்ட பின்னரும், ஏனைய குடியானவர்கள் தங்களுடைய நிலங்களின் பழைய நில அளவுக்கான வரிகளைத் தொடர்ந்து செலுத்தி வந்தார்கள். இந்த முறைகேடு நிவர்த்தி ஆகின்ற முறையில் இப் புதிய நில அளவு நடத்தப்பட்டது. இதிலிருந்து குலோத்துங்கனுடைய அரசாங்க வருவாய்த் துறையானது அவ்வப்போது காணப்பட்ட குறைபாடுகளை நீக்குகின்ற அளவில் திறமையும் நியாயவுணர்வும் மேலிட்டு உயிராக்கமாய் (dynamism) நடந்துகொண்டது தெரியவரும்.

ஆனல், வரிவிதிப்பில் பல முறைகேடுகள் காணப்பெற்றன. சான்ருக, 1213-ல் (குலோத்துங்கனின் 35ஆவது ஆட்சி ஆண்டில்) செதுக்கப்பட்ட திருவொற்றியூர்க் கல்வெட்டு சொல்வதுபோல, யாதவராயன் என்ற தொண்டைமண்டலக் குறுநில ஆட்சியாளன்

தன்னுடைய வரிவசூல் அதிகாரியின் வாயிலாக ஒவ்வொரு வேலி என்ற உழவு நிலத்திற்கும் கால்மாடை என்ற பொன் வரியை வாங்கினன். ஆதிநாள் தொட்டுக் குடிபெயர்ந்து போன நகர் எல்லைப்புறப்பகுதிகளைத் தவிர்த்த முறையில்தான் வரிவிதிப்பு நிகழ்வது வழக்கம். இந்த வகையான அக் கால இயல்புக்கு எதிராக எல்லா நிலங்களுக்கும் சகட்டுமேனியாக வரி தீட்டப் பட்ட முழு அளவான வரிப்பளுவைத் தாளாத புன்னைவாயில் என்ற ஊரின் சபா உறுப்பினர்களை யாதவராயனின் அதிகாரி வன்முறையில் சிறை வைத்தான். 80 வேலி நிலத்தையும் குடியிருப்புகளையும் விற்று வரிப்பாக்கியைச் செலுத்தினர்கள் இக் கிராம மக்கள் என்பது சாசனச் செய்தியாகும்.

இவ்வாறு நிகழ்கின்ற சமுதாய அநீதிகளை அரசாங்கம் தடுத்து நிறுத்துவதற்கான அதிகார பலம் குலோத்துங்கனுடைய அரசாங் கத்திற்கு அமைந்திராத காலம் அது. ஆகவே, புன்னைவாயில் சபா உறுப்பினர் விற்கச் சொன்ன ஊர்மக்கள் சொத்துகளை ஒரு தர்ம சிந்தனையாளன் விலைக்கு வாங்கி உள்ளூர்க் கோவிலுக்கு ஒப்படைத்தான் என்பது வரலாற்றுச் செய்தியாகும். சமுதாய அநீதியாக வந்த சொத்து இழப்பு, கோவிலுக்குரியவையாக அச் சொத்துகள் மாற்றப்பட்ட பின்பு, சமுதாய நலனுக அவை பரிணமித்ததைப் பேராசிரியர் சுட்டிக் காட்டுகிருர். இவ்வாறு சோழ சமுதாயத்தில் அமைந்திருந்த சமுதாய அறமானது பொருளாதாரக் குறைபாடுகளையும் அரசியல் பலவீனங்களையும் விழுங்கிக்கொண்ட, ‘நீலகண்டமாக’ச் செயல்பட்டதைப் பார்க்கிறேம். சொத்துரிமைப் பேணலில் தர்மகர்த்தா என்ற பொருளாதாரச் செயல்பாட்டு நல்லறத்தில் அச் சோழ செல்வந் தர்கள் தாமாக முனைந்து நின்ற மாண்பு நிலையை நாம் கண்டு வியக்க வேண்டியுள்ளது.

குலோத்துங்கனுடைய நாளில் காணப்பட்ட வரிப்பளுவி லிருந்து யாவருக்கும் பொதுவான கோவிலுக்குக்கூட விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. சான்ருக, 1215-ல் மாமல்லபுரம் பக்கமுள்ள சாளுவன் குப்பம் கல்வெட்டு கூறுவதுபோல அவ்வூர்க் கோவில் தன்னுடைய நிலத்தை விற்று தன்னுடைய சொத்துகளின் பேரில் ஏற்பட்ட வரிகளைக் கட்டியது.

## IV சமயம்

உள்நாட்டு அரசியலில் பிடிப்பு இல்லாத முறையில் ராஜாதி ராஜன் II கோவில்கள் கட்டாமல் சென்றுவிட்டதைப் பெருமள விற்கு நிவர்த்திப்பது போல, குலோத்துங்கன் திரிபுவனக்

கோவிலையும், ஏற்கெனவே இருந்த கோவில்களுக்குப் புது அமைப்புகளையும் உருவாக்கினான். சிற்பக் கலையின் தனிப் பெரும் வளர்ச்சி சோழருக்குரியது என்ற அளவில் குலோத் துங்கன் காலக் கோவில் சிற்பங்கள் சோழர் காலச் சிற்பத்திற் குரிய நிறைவு வளர்ச்சியைக் காட்டுகின்றன. வெறும் கட்டடங் களாக அமைகின்ற சுற்றுப் பிராகாரங்களின் சுவர்களில்கூடச் சிற்பங்களைச் செதுக்குகின்ற வழியையும் கலையார்வத்தையும் இவன் காட்டினான். புதுக்கோட்டைச் சேரனூர்க் கல்வெட்டும் திருவிடைமருதூர் சமஸ்கிருதக் கல்வெட்டும் இச் சோழனுடைய கோவில் கட்டிய பணிகளை விவரித்துக் கூறுகின்றன.

1202-ல் பாண்டிய நாட்டின்மேல் இவன் மூன்ருவது முறை யாகக் கொண்ட படையெழுச்சியின் வெற்றிப் பெருமிதத்தின் அடையாளமாகவும் அப் போரில் கவர்ந்து வந்த பொருள்களுக் கான நற்பயனாகவும் விளங்கக்கூடிய திரிபுவன வீரேச்சுவரம் என்ற சிவன் கோவில் திருவிடைமருதூர்ப் பக்கம் இச் சோழனால் கட்டப்பட்டது. தஞ்சைப் பெரிய கோவில்போலத் தோற்றங் கொண்ட இக் கோவில் தனக்கென அமைந்த சிற்பக் கட்டடச் சிறப்புக் கூறுபாடுகளைக் கொண்டது. இதனால்தான் குலோத் துங்கன் III சோழர் காலக் கட்டடக் கலைக்கு வழங்கிய புதுப் பார்வையாக இக் கோவிலைக் கலைவல்லுநர் கணிக்கின்றனர். திருச்சுற்றுச் சுவர்கள் உட்பட்ட எல்லாச் சுவர்களிலும் இராமா யணக் கதை சொல்லுகின்ற சிற்ப அமைப்புகளும் மற்றைய சிற்ப வடிவங்களும் இக் கோவிலில் மண்டிக் கிடக்கின்றன. சோழ மன்னருக்கு இணக்கமான ஈஸ்வரசிவர் என்ற பெரியார்தான் இக் கோவிலைத் தெய்வ சமர்ப்பணம் செய்தார். மதுரையை வெற்றி பெற்று ‘திரிபுவன வீரதேவர்’ என்ற பட்டம் பெற்ற இச் சோழனுடைய பெரு வீரத்தின் உயர்விற்கு ஏற்பத் ‘திரிபுவனம்’ என்ற பெயரோடு இது விளங்கியது. சிவனூர்க்குரிய சோழர் காலக் கோவில் சிற்பக் கலையில் ஏற்பட்ட பேரெழுச்சியின் கடைசி வளர்ச்சிப் படலமாகவும், அதன் உயர்நலச் சிறப்பாகவும் இன்றும் திரிபுவனக் கோவில் கலைநுகர்வாரைக் கவர்கிறது.

மதுரையைக் கைப்பற்றிய குலோத்துங்கன் மதுரையின் ஆலவாய் அப்பன் என்ற மூலவருக்கு நகைகள் பல கொடுத்தான். அக் கோவிலைத் தங்க மலையென உயர்த்திய அளவில் அக் கோவில் முகட்டில் பொன் வேய்ந்தான்; அக் கோவிலை அடுத்துத் தன் பெயரில் அமைந்த திருப்பெருவீதியில் மூலவர் உற்சவராக எழுந்தருளி உலாப் போகத் தன் பெயராலேயே திருவிழா ஏற்படுத்தி, அதற்கான பல நிவந்தங்களையும் அளித்தான்.

880-ல் விஜயாலய சோழன் காலம் முதல் குலோத்துங்கன் III ஆட்சிக் காலம்வரை—320 ஆண்டுகளில்— சோழ நாட்டின் சிற்பக்கலை பல நிலைகளில் வளர்ச்சியுற்றது எனக் கொண்டால், அந்த வளர்ச்சியின் கடைசிக் கட்டமாக இக் குலோத்துங்கனின் கோவில் பணிகள் அமைந்தன. கட்டடம், சிற்பம் போன்ற கலைகள் ஏற்கெனவே சிறப்பான அளவில் அமைந்திருந்த தில்லைக் கோவில் போன்ற பழம்பெரும் ஆலயங்களுக்குப் புது வளப்பமும் புதுப் பொலிவும் இக் குலோத்துங்கனால் சேர்க்கப்பட்டன. அந்தந்தக் காலத்தின் வளர்ச்சி நிலைகளைப் பிரதிபலிக்கின்ற அளவில் சோழப் பேரரசர்கள் ஒவ்வொருவரும் தத்தம் காலத்திற் குரிய கலைப்பக்குவத்தின் தளிர்களாக அவர்களுடைய கலைச் சேவைகள் அமைவதற்கு வழி கண்டனர். குலோத்துங்கன் காலத்தில் அழகுவழிப் பாணி (decorative style) என்ற கலைவளர்ச்சி ஏற்பட்டது. இந்தப் பாரம்பரியத்திற்கு ஏற்ப, குலோத்துங்கன் III சிதம்பரம் கோவிலுக்குரிய அம்பலவாணர் என்ற சபாபதிக்கு முகம மண்டபம் கட்டி அம்பலவாணருக்குரிய 'ஏக பக்தன்' என்ற விருதினைப் பெற்றான்; அம்மன் சிவகாமிக்குக் கோபுரமும் திருமுற்றத்தைத் தொடும் தாழ்வாரமும் அமைத்தான்.

காஞ்சியில் ஏகாம்பரேஸ்வரர் கோவில், திருவிடை மருதூர், தாராசுரம் பக்கமுள்ள ராஜராஜேச்சுவரம் போன்ற சிவாலயங்கள் இவனால் நன்கு பேணப்பட்ட நிலையில் புதிய பொலிவு பெற்று விளங்கின. திருவாரூர் தியாகராஜப் பெருமானுக்குச் சஷ்டி மண்டபமும் பெரிய கோபுரமும் அமைத்து, இவன் அப் பெருமானுக்குரிய 'நம் தோழன்' என்ற அரச விருதின் பெருமைக்குத் தகுதி கொண்டான். 'புகழ்க் கொடி எடுத்துத் தியாகக் கொடி திசையெட்டிலும் ஏக' என்று வரும் 'புயல் வாய்த்து' என்ற மெய்க்கீர்த்தி அடிகளில் கண்டவாறு இவன் ஆற்றிய கோவில் பணிகள் இன்றும் வழங்குகின்ற ஒப்பற்ற சிறப்பை இவன் பெற்றான். கலையார்வத் துடிப்பிலும் அருள் சேர்ந்த கோவிலறத்திலும் மேம்பட்ட இவனுக்குரிய 'தனி நாயகன்' பட்டம் இவனுக்குப் பொருத்தமானதாக அமைந் திருந்தது.

விஷ்ணுவர்த்தனனான குலோத்துங்க சோழன் I போன்று இவனும் வைணவத்தைப் போற்றினான் என்பதற்கு இவன் தென் ஆற்காடு மாவட்டம் வேலூரிலுள்ள திருமால் கோட்டத்திற்குத் தன் பெயரிட்டு குலோத்துங்கச் சோழ விண்ணகரம் என்று அழைத்ததும், அக் கோவிலுக்குப் பல நிவந்தங்கள் அளித்ததும் சான்றுகளாகும். சமணப்பள்ளிக்குப் பள்ளிச்சந்தமென்ற

இறையிலி நிலம் இவன் வழங்கிய செய்தியிலிருந்து இவனுடைய சமயநோக்கு பொறையுடைமையோடு விளங்கியது தெரிய வரும்.

இவன் ஆட்சியின் 22ஆம் ஆண்டு (1200-ல்) சைவ சாதுக்கள் வாழ்ந்து வந்த குகைகளை மக்கள் இடித்துத் தகர்க்கின்ற ஒரு கலகம் நிகழ்ந்தது. சான்ருக, திருத்துறைப்பூண்டியிலுள்ள குகைவாழ்த் தவக்கோட்டத்தின் சொத்துகள் அழிக்கப்பட்டன. இச் சோழன் காலத்தில் தென்னிந்திய சைவர்களுக்கும் வடபுலத்துச் சைவ நெறியாளருக்கும் தொடர்பு இருந்தது. செங்கை மாவட்டம் திருப்பாசூர்க் கல்வெட்டும் பந்தநல்லூர்க் கல்வெட்டும் அந்தந்த ஊர்களில் காணப்பெற்ற இராவலர் என்ற சைவாசாரியர்களுக்குரிய காசிநகர்த் தொடர்புகளைச் சொல்லுகின்றன. அவர்களுடைய வடபுலத்து ஆசிரியர்களைப்பற்றிய குறிப்புகளும், காசி மடத்திலிருந்து வந்து தமிழகத்தில் சமயச் சேவை செய்ய முற்பட்ட செய்திகளும் தென்புலமும் வடபுலமும் ராஜேந்திரன் I காலமுதல் தொடங்கிய சைவசமயத் தொடர்புகள் நீடித்து நின்றதைக் காட்டுகின்றன. சுத்த சைவர்களான இச் சாதுக்கள் ஒருபுறம்; அந்தணர்வழி நின்ற சைவ மடாதிபதிகளும் சோழ மன்னருக்குரிய குருமார்களும் மற்ெருரு புறம். இவர்களிடையே காணப்பட்ட சமயச் சார்பான மனவேற்றுமையின் வெளிப்பாடாக இக் குகையிடிக் கலகத்தைக் கொள்ள வேண்டும் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகிருர்கள். இக் கலகத்தால் சைவத் துறவிகளின் குகைவாழ்த் தவம் பின்னடைந்து விடவில்லை. சோழர் காலத்திய சமயச் சார்பான இயக்கங்களில் ஒன்ருக இத் துறவிகளின் குகைவாழ் இயக்கம் தொடர்ந்து வந்தது என்பது வரலாற்றுச் செய்தியாகும்.

பாண்டிய நாட்டைக் குலோத்துங்கன் தனது மூன்ருவது படையெழுச்சியின்போது வெற்றி பெற்றுக் கைப்பற்றியதைத் தொடர்ந்து தன்னுடைய சோழ நாட்டுக்குரிய சிதம்பரம், திருவாரூர், திரிபுவனம் என்ற கோவில்களுக்கு ஏராளமான சொத்துகளைக் கொண்டுவந்து சேர்ப்பித்தான். ஒரு வகையில் அரசியல் கலந்த கோவிற்பணி இது ஆகும் எனச் சொல்லலாம். கொங்கு நாட்டை வென்று, அங்குக் கவரப்பட்ட தங்கத்தை விஜயாலயன் மகன் ஆதித்த சோழன் தில்லை அம்பலத்திற்குப் பொன் வேய்வதற்குப் பயன்படுத்திய நாளிலிருந்து பிற்காலச் சோழர்கள் தங்களுடைய இராணுவ வெற்றிகளைத் தங்கள் நாட்டுக்குரிய கோவில்களின் ஆக்கமாக மாற்றுகின்ற பாரம்பரியத்தை வளர்த்துக்கொண்டே வந்தார்கள். இக்

குலோத்துங்கனும் தனக்கு அடிபணிந்து போன பாண்டியர், சேரர் பகுதிகளில் திரட்டிய கப்பத்தையும், பொன்னையும் (gold levy), இறையிலி என்ற வரிவிலக்கு செய்யப்பட்ட நிலங்களுக் குரிய வருமானத்தையும் மேற்சொன்ன கோவில்களுக்கு வழங்கினுன். ‘ சிறை கொண்ட புனல்வையைச் சேரபாண்டியன் மண்டலத்து—இறைகொண்ட பசும்பொன்னும் இறையிலியும்...... ......ஆடுமம்பலவாணர்...........பைம்பொன் மதிள் திருவாரூர் வானவற்குந் திரிபுவன வீரச்சுரம் அருந்தவற்கும்...........திருவால வாய்ச் செழுஞ்சுடர்க்கும் கொடுத்தருளி—மந்திர் மறைய முழுதுணர்ந்த அந்தணர்க்கு அறம் ஏற்றி ’ என்று வரும் குலோத் துங்கனின் ‘ புயல் வாய்த்து ’ என்ற மெய்க்கீர்த்தி வரிகள் இதை உறுதிப்படுத்தும்.

அதே மெய்க்கீர்த்தியின் வரிகளின்படி ‘ செயல் வாய்த்த மனுநூலும் செங்கோலும் திசை நடப்பக்—கொற்றவையுந்திருவும் வாழக் கொடுங்கலிகெடக் குளிர்வெண்குடை’க்கீழ்க் குலோத் துங்கன் வழங்கிய ஆட்சியில் கொற்றவையும் (போர்களும்), திருவும் (செல்வமும்) சேர்ந்து விளங்கினர். ‘ செயல் வாய்த்த மனுநூலும் செங்கோலும் ’ என்றபடி, குலோத்துங்கனுடைய சமயக் கொள்கையில் அவனுடைய அரசியலுக்குரிய ஆதாரம் காணக் கிடந்தது.

சமயச் சார்பான அறப்பணிகளைக் குலோத்துங்கன் காலத்திய நாடாள்வான்களான காடவராயர் போன்ற குறுநில மன்னர்களும், ஏனைய அதிகாரிகளும் தங்களுடைய அரசியலில் ஒரு பகுதி யாகவே ஏற்று நடத்தினுர்கள். குலோத்துங்க மன்னன் கருவூரில் விஜயாபிஷேகமும் (வெற்றி முடிசூட்டு விழா), மதுரையில் விஜயாபிஷேகத்தோடு வீராபிஷேகமும் (வீரக்கழல் அணிந்து மன்னர் மாட்சியை அறிவுறுத்தல்) செய்துகொண்டதுபோல இக் குறுநில மன்னர்கள் தங்களுக்கான அளவில் பல கோவில்களுக்கு முற்றூட்டுகள் அளித்து முறைப்படி சடங்குகளை மேற்கொண்டு தங்களுக்கான பட்டங்களைச் சூடிக்கொண்டார்கள். சான்ருக, தகடூரின் அதிகமானுக்குரிய கூடல் என்ற இடத்தைப் பிடித்த பின்பு, ‘ கூடல் அவனியாளப் பிறந்த ’ என்ற பட்டத்தைக் காடவராயர் தங்களுக்குச் சூட்டிக்கொண்டார்கள்.

வீரசேகரக் காடவராயன் குலோத்துங்கனின் ஆட்சியின் 13ஆம் ஆண்டில் (1191-ல்) திருவண்ணுமலை மூலவருக்கு ‘ ஏகலடம் ’ என்ற ஒரு கழுத்தணியை வழங்கினுன். வடபுலத்துச்

சேடியர் ராஜ்யத்தின் வழித்தோன்றல்களெனப் புராணச் சிந்தனை யோடு மதச் சார்பாகத் தங்களை அழைத்துக்கொண்டவர்களும், புராணத் தலைவன் சிசுபாலனைத் தங்கள் மூதாதை எனச் சொல்லிக் கொண்டவர்களுமான சேடிவராயர்களின் தலைவன் மகத தேசன் திருவண்ணுமலைக் கோவிலுக்குப் பொன் வேய்ந்த காரணம்பற்றி அவனுக்கமைந்த 'பொன் பரப்பினுன்' என்ற பட்டம் அவனுடைய சந்ததியினருக்கும் வழிவழியாகச் சென்றது. இவன் வழியில் வந்த மற்ருெரு தலைவன் தென் ஆர்க்காட்டில் அவனுக்கு அளிக்கப்பட்டிருந்த காணி என்ற வரிவசூல் உரிமை வாய்த்த இடத்தில் ஸ்ரீ கைலாசம் என்ற கோவில் மண்டபம், கோபுரம், திருச்சுற்றுவழி ஆகியவற்றைக் கட்டினுன்; 'பொன் பரப்பின ஈஸ்வரர்' என்று வழங்கப்பட்ட கடவுள் சிலையையும் மக்கள் வழிபட அமைத்தான்.

தகடூரின் அதிகமான்களில் பெயர் பெற்ற ராஜராஜதேவன் திருவண்ணுமலைக் கோவிலுக்குத் தகடூர் பிராந்தியத்தில் பெண் ணுற்றின் வடகரையிலுள்ள மலையனூர் என்ற முழுக் கிராமத் தையே நன்கொடையாக அளித்தான். இவனுடைய மகன் சாமந்தன் (சோழப் பேரரசுக்குரிய அதிகாரி) விடுகாதழகிய பெருமாள் குலோத்துங்கனுடைய 19ஆம் ஆட்சி ஆண்டில் (1197-ல்) திருமாணிக்குழிக் கோவிலின் மூலவருக்குப் பொன்னு லான முற்றம் அமைத்தான்; சங்ககால எளினி என்ற மன்னனின் பரம்பரை என்று தன்னை வழங்கிக்கொண்டு, அந்த எளினி கட்டியது எனச் சொல்லப்பட்ட திருமலை மலையில் இருந்த சமணக் கோட்டத்தின் பக்கமுள்ள யக்ஷன்-யக்ஷி என்ற ஐயனுர் பரிமாணச்சிலை உருவங்களை அவன் செப்பனிட்டான். இதிலிருந்து குலோத்துங்க சோழன் காலத்தில் யக்ஷன்-யக்ஷி வழிபாடு சேரர்வழி மனப்போக்கில் அமைந்திருந்தது என்பது புலனுகிறது.

கண்டர் சூரியன் சம்புவராயன் என்ற படைத்தலைவன் திருவக்கரையில் காணப்பட்ட சிவாலயத்தில் சூரியனுக்குத் திருக் கோபுரம் அமைத்துக் கண்டர் சூரியன் என்று வழங்கப்பட்ட ஆயிரங்கால் மண்டபமும் கட்டினுன். சேந்தமங்கலமுடையான் என்ற எதிரிலிச் சோழன் 1187-ல் குலோத்துங்க சோழன் நியாய பரிபாலன சதுர்வேதி மங்கலம் என்ற ஊரை அந்தணருக்குரிய தாக ஆக்கினுன். பரகேசரி நல்லூரியில் (சிதம்பரம் பக்க முள்ளது) விக்கிரம சோழேச்சுரம் என்ற கோவிலையும் அவன் கட்டினுன்.

## V கட்டடக் கலை

கட்டடக் கலைக்கான வளர்ச்சி சோழருக்கே உரியது என்ற அளவில் உறையூரிலும் தஞ்சையிலும் அரண்மனைகளிலும் மாட மாளிகைகளிலும் மிகுந்து காணப் பெற்றன. 1218ஆம் ஆண்டளவில் சுந்தர பாண்டியனுடைய படையெழுச்சியின்போது 'தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி' என்று வரும் சுந்தர பாண்டியன் மெய்க்கீர்த்தியின்படி அவை அழிக்கப்பட்டன. ஆனால், கரிகால் பெருவளத்தான் உருத்திரங்கண்ணனார் என்ற தமிழ்ப் புலவருக்கு உறையூரில் பரிசிலாக அளித்த பதினாறுகால் மண்டபம் மட்டும் பாண்டியப் போர்வீரர்களால் அழிக்காமல் விடப்பெற்றமை அந் நாளைய போர்க் கொடுமையினூடே காணப் பெற்ற தமிழ்ப்பற்றை விசித்திரமான அளவில் சுந்தர பாண்டியனுடைய திருவெள்ளறைக் கல்வெட்டு காண வைக்கிறது. ஆப்கானிஸ்தான் கோரி முகம்மதுவின் மூதாதையர், கஜினி மகமதின் சமாதி மண்டபந்தவிர மற்றையவற்றை எல்லாம் அழித்த போது இந்தியாவைப் படையெடுத்த முஸ்லீம் என்றளவில் கஜினிக்குரிய மரியாதையை மதச்சார்பாக அவர்கள் வழங்கினார்கள். வரலாற்றுக் குழப்பங்காரணமாக 1799-ல் நிகழ்ந்த மோதலில் வீழ்ச்சியுற்ற கட்டபொம்மன் கோட்டையையும், கோட்டைக்குள் இருந்த அத்தனை அரண்மனை போன்ற கட்டடங்களையும் தரை மட்டமாக இடித்து விடுதலைப் போரின் வீரத்தைக் கருவிலேயே தீய்த்துவிட முனைந்து நின்ற ஆங்கிலேய வெற்றியாளரின் தீராக் கொடுமை வேற்று நாட்டாரின் வெறியைக் காட்டிற்று. ஆனால், கஜினி நகரம் விழ்ந்துபோன நிகழ்ச்சிக்குப்பின் நூறாண்டு காலங் கழித்து நடத்தப்பட்ட பாண்டியர் படையெடுப்பில் தமிழ்ப் புலவருக்கான மண்டபம் போரழிவின் மத்தியில் தமிழ் உணர்ச்சியின் பெயரால் விட்டுவைக்கப் பெற்றது. போர் நிகழ்ச்சிகளுக்கு ஊடேயும் தலைதூக்குகின்ற தமிழ் நாகரிகத்தின் உயிர்மூச்சாக அந் நாளையத் தமிழ் நின்ற பெருமை புலப்படுகிறது.

மதுரையில் பாண்டியனுடைய மண்டபத்தை அழித்த குலோத்துங்கனுடைய முன்யோசனை இல்லாத போர் முறையின் விளைவாகச் சோழப் பேரரசின் பெருமிதம் எல்லாம் திரட்சி கொண்டிருந்த செல்வத் திருவுருவக் கட்டடங்களும் மணிமண்டபங்களும் பிற்காலத்தில் படையெடுத்து வந்த பாண்டியர்களால் இடித்துத் தகர்க்கப்பட்டன. ஆங்கில நாட்டில் பல மாளிகைகளும் கோட்டைகளும் அந் நாட்டின் வரலாற்றைச் சொல்வதற்கு இன்று வரை மிஞ்சி நிற்பது போல, செல்வத்தின் ஏற்றத்தில் கலையழகை எல்லாம் கொட்டி உருவாக்கப்பட்ட சோழரின் வண்ண

மாளிகைகள் பாண்டியரின் பகைமை பாராட்டுகின்ற வெஞ்சின உணர்வுக்குப் பலியாகிப் பாழாகிக் காலத்தின் சுவட்டில் தோற்றத்தையும் வளர்ச்சியையும் தாமுகை இழந்து போயின. இதற்குக் காரணமாக அமைந்தவன் குலோத்துங்கச் சோழனே ஆவான்.

## VI இலக்கியம், கல்வி, கலை வளர்ச்சி

'குலோத்துங்கன் கோவை' என்ற இலக்கியம் குலோத்துங்கன் III சோழனைப் பற்றிப் பாடப்பட்டதாகும். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தொண்டை மண்டலத்தின் அருகம்பாக்கம் விதிரராஜன் என்ற குலோத்துங்கனின் அரசியல் அதிகாரி சமஸ்கிருதத்திலுள்ள மகாபாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தார். இது காலத்தே மறைந்தொழிந்துவிட்டது. இச் சோழன் காலத்தில் கலையின் வளர்ச்சியைக் காட்டுவது போலக் கால விநோத நிருத்தப் பேரரையனுன பாரசவன் பொன்னன் என்பவர் திருக்கடவூர் கோவில் சமூகத்தில் 'நட்டுவ நிலை' என்ற பட்டம் பெற்றுர்; சோழனுடைய அவைக்களப் புலவராக விளங்கிய குணவீர பண்டிதர், வீராந்தகப் பல்லவரையர் என்பவருள் இரண்டாமவரின் வேண்டுதலுக்கொப்பக் குலோத்துங்கன் இப் பட்டத்தைக் கோவிலில் வழங்கினுன். இச் சோழன் காலத்தில் கங்கர் நாட்டுக் குறுநில மன்னன் அமராபரண சீயகங்கனின் ஆதரவில் மைசூர் மாவட்டம் சாரநாதபுரத்துப் பவணந்தி முனிவர் நன்னூல் என்ற தமிழிலக்கண நூலைச் செய்தார். 1213-ல் ஏற்பட்ட திருவொற்றியூர்க் கல்வெட்டு சொல்வது போல, அவ்வூர்க் கோவில் மண்டபத்தில் வியாகரணம் என்ற சமயத் தத்துவ விளக்கஞ்செய்யும் பள்ளிக்கூடம் ஒன்றை நடத்தவும் அந் நிகழ்ச்சி நடைபெறுகின்ற மண்டபத்தைப் பழுதற நிர்வாகிக்கவும் 65 வேலி நிலம் அறக் கட்டளையாக வழங்கப்பட்டது. கவிச்சக்கரவர்த்தி கம்பர் இவனுடைய அவையில் காணப்பட்டதாக ஒரு கருத்து உண்டு. உறுதி செய்யப்படாத இச் செய்தியைக் கொண்டு இக் குலோத்துங்கனுக்குரிய இலக்கியச் சேவையை மேம்படுத்திப் பார்க்க இயலவில்லை.

**கலை வளர்ச்சி—திறனுய்வு :** குலோத்துங்கனுடைய நாற்பது ஆண்டுக் கால நீண்ட ஆட்சியில் (1178 முதல் 1218 வரை) இலக்கியம், கல்வி ஆகியவற்றின் வளர்ச்சி அளவினில் சுருங்கி, பொலிவினில் எளிமை கொண்டு காணப்பட்டது. பரதக் கலைக்கு அரச கௌரவம் கிடைத்திருந்தது. நாட்டியக் கலையை ஆதரித்தது போலப் பரிசில் வாழ்வு நடத்தும் பாடல்பாணரையும் சோழன் ஆதரித்தான். சான்ருக, அவனுடைய மூன்ருவது

பாண்டியப் படையெழுச்சியின் முடிவில் பாண்டியனுடைய 'பாண்டியன்' என்ற அரசகுலப் பெயரினைப் (அப் படையெழுச்சியைப்பற்றி) பாடத் தன்னோடு வந்த பாணனுக்கு அவன் அளித்தான். போர்முகத்துக்குப் பரிசில்வாழ் பாணரை அழைத்துப்போகும் சங்ககால வழக்கம் இச் சோழனாலும் மேற்கொள்ளப்பட்டிருந்ததில் காணப்பெற்ற தமிழ்வழிச் சிந்தனை இச் சோழனைக் கலை வாழ்வில் தமிழறங்கண்ட பெருமிதத்தின் 'முடிவழங்கு சோழன்'தான் எனக் காட்டும். ஆராய்ச்சியாளர் பண்டாரத்தார் இக் குலோத்துங்கன் காலத்தில் சேக்கிழார் தமது பெரிய புராணத்தை இயற்றினர் எனச் சொல்லி, இச் சோழனுக்கு அநபாயன் என்ற பெயரில் ஏற்பட்ட பெருமையை எடுத்துச் சொல்கிறார்கள். பேராசிரியர் அவர்கள் சேக்கிழார் குலோத்துங்கன் II (1135—1156) காலத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லியுள்ளார்கள். திரிபுவனம் என்ற ஒரே ஒரு கோவிலும், கட்டடக் கலைக்குச் சிதம்பரம், திருவாரூர் போன்ற கோவில்களுக்கு ஏற்படுத்தப்பட்ட சேர்க்கைகளும் குலோத்துங்கன் காலத்திய சிற்பக் கலைக்கும் கட்டடக் கலைக்கும் சான்று சொல்வதிலுள்ள மாண்பின் உரம் இச் சோழனுடைய காலத்தின் இலக்கிய வளர்ச்சியில் காணப்படவில்லை. 'புயல் வாய்த்து' போன்ற மெய்க்கீர்த்திகளில் காணப்படுகின்ற இலக்கியச் சார்பான நலங்கள் அவற்றைக் கலைப்படைப்புகளாகக் காட்ட முயல்கின்றன. ஆனால், குலோத்துங்கனுடைய மெய் என்ற உடலிய உலகியல் வாழ்வின் புகழ்பாட வந்தவை இக் கீர்த்திகள். இந்த அளவில் பாட்டுடைத் தலைவனுடைய மாட்சிமை பற்றிய ஒரங்க விசாரத்தில் இலக்கியத் துடிப்புகளை இயல்பாகவே இழந்து, கலையின் கலை மெலிந்து, அவை காணப்படுகின்றன.

## VII குடும்பம்

நாற்பது ஆண்டுகள் ஆண்ட குலோத்துங்கன் அவனுக்கு முந்திய சோழன் ராஜாதிராஜன் II காலத்திலேயே குமார குலோத்துங்கன் என்ற பெயரில் அரசியலுக்குரிய செல்வாக்கோடு இருந்தான். சான்ருக, 'பெரிய தேவர்' என்று குறிப்பிடப்படும் ராஜாதிராஜன் II என்ற சோழன், யுவராஜா அல்லது அரச பதவிக்கு வந்த மூன்றும் ஆண்டு (முறையே 1166-ல் அல்லது 1176-ல்), காலத்திலேயே நன்கொடைகள் வழங்கிய நிலையில், திருவழுந்தூர் நாடு என்ற பகுதியில் குமார குலோத்துங்கச் சோழச் சதுர்வேதி மங்கலம் என்ற கிராமம் ஒன்று குலோத்துங்கன் III பெயரில் காணப்பெற்றது. 'சங்கரச் சோழனுலா' என்ற இலக்கிய நூலின் சங்கரச் சோழன் என்பவன் எந்த வகையில் சோழ

மன்னர் குலத்தைச் சார்ந்தவன் என்பது தெரியவில்லை. இச் சங்கரச் சோழன் கொங்கு நாட்டுச் சோழக் குடும்பத்திய வீரசைவ னுவான் என ஆராய்ச்சியாளர் பண்டாரத்தார் கூறுகிறார். 'குலோத்துங்கன் கோவை' என்ற தற்போது கிடைக்காத அக் கால நூலின் நாயகனுன சங்கரச் சோழனுடைய தமையனுன குமார மகிதரன்தான் இக் குலோத்துங்கன் III ஆவான் என்ற கருத்தும் உண்டு.

ராஜராஜன் II என்ற சோழ மன்னன் எதிரிலிப் பெருமாள் என்ற இயற்பெயர் கொண்ட ராஜாதிராஜன் II என்ற சோழனுக்கு 1163-ல் யுவராஜா பட்டம் சூடும்போது பெற்றிருந்த இரண்டு இளம் சிறுர்களில் ஒருவனே இக் குலோத்துங்க சோழன் என்ற கருத்துக்கு எதிராக அதே ராஜராஜன் II காலத்திய கல்வெட்டு குமாரக் குலோத்துங்கன் பெயரில் இருந்த சதுர்வேதி மங்கலத் தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆகவே, ராஜாதி ராஜன் II சோழனைப் போலக் குலோத்துங்கனும் சோழ வமிசத்தின் நேரடி வாரிசு இல்லை என்பது தெளிவு.

குலோத்துங்கன் 1218-ல் இறந்தான். 1216-ல் யுவராஜா பட்டங்கட்டப்பட்ட இச் சோழனுடைய மகன் என்று கொள்ளக் கூடிய ராஜராஜன் III இவனைப் போல ஆளுகைத் திறன் இல்லாதவன் என வரலாற்று ஆசிரியர்களால் ஒருங்கே சித்தரிக்கப் படுகிறுன். 'புயல் பெருக' என்று வருகின்ற மெய்க்கீர்த்தியில் 'செம்பொன் வீர சிங்க தனத்துப்—புவன முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய—ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு' என்று முடிவுறுவதால், இச் சோழனுடைய மனைவியருள் ஒருத்தி புவனமுழுதுடையாள் என்பது உணரப்படும். 'நம் பிராட்டியாரில் இளைய நம் பிராட்டியார்' என்று வருகின்ற கல்வெட்டு (Inscription 458 of 1913) சொல்வது போலக் குலோத்துங்கனுக்கு மற்றொரு மனைவியும் இருந்தாள். முடித்தலை கொண்ட பெருமாள், உலகுடைய நாயனுர், முடிவழங்கு சோழன், வீர ராஜேந்திரன், திரிபுவன வீரதேவன், இராசாக்கள் தம்பிரான், தனிநாயகன், சோழ கேரள தேவன் என்ற விருதுகளைச் சூடி இருந்த இச் சோழனுேடு சோழ வரலாற்றின் எழுச்சி மிக்க வினை யாற்ற மாட்சிமை இணைந்து பொலிந்து காணப்பெறுகிறது. பாண்டிய நாட்டில் அவன் மேற்கொண்ட போர்க்குணச் செய்கை களின் விளைவாக ஏற்பட்ட பாண்டியரின் சோழநாட்டுப் படை யெழுச்சியின் அவலமான நிகழ்ச்சிகளால் மன நெகிழ்ச்சியுற்ற நிலையில் 1218-ல் இறக்கின்ற இக் குலோத்துங்கன் சோழ அரசர்க்குள் தனிச் சிறப்பு, ஆளுகைத் திறன், போரார்வ வீரம்,

கலையுணர்வோடுகூடிய பொறை சார்ந்த சமயக் கொள்கை போன்றவற்றில் சிறந்து விளங்கியவன் ஆவான்.

சோழ வரலாற்றுக்கு வாய்த்த சூல் தந்த அசுரக் குழந்தைகளில் ஒன்ருன பேரரசுத் தத்துவத்தின் இராணுவ மனப்போக்கைக் குலோத்துங்கன் தன்னுள்ளே சீராட்டி வளர்த்தான். சோழப் பேரரசன் என்றளவில் வல்லடிப்போரினுகைத் தான் இயக்கம் பெற வேண்டும் என்ற வரலாற்றுச்சார்பான எண்ணம் அவனைக் கவ்விப் பிடித்திருந்தது. ஐரோப்பிய வரலாற்றில் பதினும் லூயி அவனுக்கு முந்திய பதினுலாம் லூயி ஏற்படுத்திய வல்லாட்சி முறையைத் தானும் மேற்கொண்டு பிரெஞ்சுப் புரட்சியில் அழிந்து போனது போல, குலோத்துங்கனும் பேரரசுப் பாணியில் போர் செய்து, பாண்டியரைப் பகைஞராக்கி, சோழ நாட்டரசு அழிந்து போகக் காரணமாக அமைந்தான். ஆனல், அதே சமயம் கோவிலறம், இலக்கியம், கலை ஆகியவற்றைப் போற்றிய நிலையில் சோழ வரலாற்றின் உண்மை நாயகனுக அவன் விளங்கினுன். இந்தத் திறனுய்வின்படி குலோத்துங்கனுடைய மாட்சியும் வீழ்ச்சியும் சோழ வரலாற்றினூடே ஊர்ந்து வந்த சக்திகளின் பிரதிபலிப்பு என நாம் கணிக்கலாம்.

# 14. ராஜராஜன் III
## (1218–1256)

சோழப் பேரரசர்களின் கடைசி அரசனுக்கு முந்திய அரசன் என்ற அளவில் ராஜராஜன் III முக்கியமானவன் என்று சொல்வதைவிடச் சோழ அரசின் வீழ்ச்சிக்கு வழிகண்ட அரசியலை நடத்தியவன் என்று கூறுவது பொருந்தும். சோழ அரசியலை அழிக்கின்ற முக்கியமான நிகழ்ச்சிகள் இவன் காலத்தில் நிகழ்ந்தன. முதலாவதாக, பன்னிரண்டு ஆண்டுக் கால இடைவெளியில் இரண்டு பாண்டியப் படையெழுச்சிகள் இவன் காலத்தில் நடந்தன. 1216-ல் இவன் யுவராஜாவாக முடிசூட்டப் பெற்றான். அந் நாளையில் நடைபெற்ற மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய சோழ நாட்டுப் படையெழுச்சியின் அவலப் படலங்களை நேரடியாகப் பார்த்தவன் இவன். பொன் அமராவதியில் வெற்றியாளனாகக் கொலு வீற்றிருந்த அப் பாண்டியனின் முன்பு 'உங்கள் பெயரிடப்பட்ட என் மகன் இதோ' எனச் சொல்லிக் குலோத்துங்கன் III பாண்டியனின் காலில் விழுந்து வணங்கியபோது அங்குக் காணக் கிடைத்த மகன் ராஜராஜன் III தான் என்ற கருத்தும் உண்டு. பாண்டியனுடைய மேலாண்மையை எதிர்த்துப் பன்னிரண்டு வருடங்கள் கழித்து ராஜராஜன் காட்டிய தன்முனைப்பு முயற்சியின் காரணமாக, மாறவர்மன் சுந்தர பாண்டியன் இவன் நாட்டின்மேல் படையெடுத்தான். ஆகவே, இரண்டு பாண்டியப் படையெழுச்சிகளின் துயரை மேற்கொண்ட சோழன் இவன் எனச் சொல்லலாம்.

இரண்டாவதாக, பாண்டியரோடு மோதுகின்ற போது இவனுக்கு உதவி செய்ய வந்த துவார சமுத்திரத்து (மைசூர்) கன்னடியரான போசளர்கள் இவன் நாட்டில் சோழரின் பாதுகாப்பாளர்கள் என்ற முறையில் அரசியல் குந்தகம் செய்தார்கள். மூன்றாவதாக, இவனுடைய ஆட்சியில் நாடாள்வான் என்ற அதிகாரிகளான குறுநில மன்னர்களின் சுயேச்சை உச்சக் கட்டத்தை நெருங்கியதால் சோழ அரசியலின் உள்ளாட்சித் துறையின் செயலற்ற தன்மை இவன் காலத்தில் தெளிவாகத் தெரியத் தொடங்கியது. நான்காவதாக, உள்நாட்டில் மக்களின் அதிருப்தி அதிகரித்த அளவில் உள்நாட்டுக் கலகமும் சட்டத்தின்

சீர்கேடும் ஏற்பட்டன. ராஜத்துரோகம், சிவத்துரோகம், கிராமத் துரோகம் முதலியன ஏற்பட்டு மக்களுடைய வாழ்வியலில் தேக்கநிலை ஏற்பட்டது. அரசினரால் மேற்கொள்ளப்பட்ட சட்ட நிர்வாகப் பரிகாரங்கள் சோழ அரசனுடைய கையாலாகாத் தன்மையை வெளிக்காட்டியது. ஐந்தாவதாக, இச் சூழ்நிலையில் ராஜராஜன் III சமயச் சார்பான சேவைகளையோ, இலக்கியப் பணிகளை மேம்படுத்துகின்ற சோழப் பரம்பரைக்குரிய அரச கடமைகளையோ மேற்கொள்ள முடியவில்லை. ஏற்கெனவே காணப்பட்ட வளர்ச்சி நிலைகள் சரிந்து விடாமலிருக்கச் செய்கின்ற முயற்சியில் ஈடுபட்டால் போதும் என்றளவில் நிலைமை நெகிழ்ச்சியுற்றுக் காணப்பட்டது. இதை ஆற்றுவதற்குக்கூட ராஜராஜனுக்குத் தனி நபர்ச் சக்தியும் வரலாற்றுப் பூர்வமான நேரப் பக்குவமும் வாய்த்திடவில்லை என்பது வரலாற்றுக் குறிப்பு ஆகும்.

## I அயல்நாட்டுக் கொள்கை

பாண்டியரோடு செய்த போர்களின் காரணமாக, பாண்டியர்களின் ஆதிக்கம் ஏற்பட்டபோது, பாண்டியர்க்கு எதிராகத் தென்னக அரசியலில் தங்களுக்குரிய அரசியல் நலன்களை 'வேட்டையாட' மைசூரிலிருந்து வந்த போசளர்கள் முனைந்த போது அவர்களின் கைப்பாவையாகச் சோழன் மாறுகின்ற அவலம் நிகழ்ந்தது. அவ்வாறு துணைக்கு வந்த கன்னடியர்கள் சோழ நாட்டு மக்களின் வாழ்வில் இழைத்த இன்னல்கள் பல. முதலில் பாண்டியருக்கு எதிராகச் சோழனையும், பின்பு சோழன் ராஜராஜன் III தானுகவே முன்வந்து யுவராஜாவாக முடிசூட்டி வைப்பதற்கு முன்பே தன்முனைப்புச் செயல்வீரனுக மாறி நின்ற ராஜேந்திரன் III நடத்திக் காட்டிய அரசியல் பிரவேசத்திற்குப் பின்பு ஏற்பட்ட சோழ எழுச்சிக்கு எதிராகப் பாண்டியர்களையும் அக் கன்னடியப்பேரரசர்கள் மாறிமாறி ஆதரித்தார்கள்; இவ்வாறு பிளவுபடுத்தப்பட்ட தென்னக அரசியலில் தங்களுக்கான பிடிப்பை வலுப்படுத்திக்கொண்டார்கள். இந்தச் சூழலில் பாண்டியராலும் போசளராலும் அலைக்கழிக்கப்பட்ட நாடு எனச் சோழநாடு உரு மாறிப் போயிற்று. உள்நாட்டின் குறுநில மன்னர்களாக விளங்கிய அரசியல் அதிகாரிகள்—சான்றுக, காடவர் தலைவன் கோப்பெருஞ்சிங்கன்—இவ் வகை இரண்டு வகை மாற்றுரோடும் உறவாடிக்கொண்ட நிலையில் சோழ நாட்டுக்குரிய வலிமையை அந் நாட்டின் குறுநில மன்னர்களின் ஒத்துழைப்பில் ராஜராஜனுல் உருவாக்க முடியவில்லை. தன்மூப்பு கொண்ட அவ் அதிகாரிகள் படையெடுத்து வந்த பாண்டியனேடு உறவாடினூர்கள். சோழ நாட்டின் வரலாற்றில் ஏற்பட்ட இந்த நெருக்கடிக்

காலத்தில் சோழர் குலத்திற்கு அவர்கள் உதவி செய்ய முன்வர வில்லை; இவ்வாறு சோழ நாட்டின் அரசை ஊறுபடுத்தினுர்கள்.

இந் நிலையில், மாற்ருரோடு சேர்ந்த உட்பகைவர் என்ருகி விட்ட சோழ அரசியல் தலைவர்களைக் கொண்டு ராஜராஜன் III தனது அயல்நாட்டுக் கொள்கையின் பிடிமானங்களுக்குரிய இராணுவ வலிமையைச் சேகரித்துக்கொள்ள முடியவில்லை. புதுச்சேரி என்ற வருவாய் வளமில்லாத பகுதியிலிருந்து ஃபிரான்ஸ் நாட்டுக்குரிய பேரரசைக் கட்டுகின்ற பணியில் ஃபிரெஞ்சுக் கவர்னர் டூப்ளே தோற்றது வியப்பில்லை; மாவீரன் நெப்போலிய னுல்கூட அப் பகுதியிலிருந்து கொண்டு வளமிக்க வங்கத்திலிருந்து வியாபித்து வந்த ஆங்கிலேயரை எதிர்த்து எதிர்ப் பேரரசைக் கட்டியிருக்க முடியாது. இவ்வாறு வரலாற்ருசிரியரால் வழங்கப் பெறும் பொதுவான கருத்தோடு ராஜராஜன் III மேற்கொண்ட அயல்நாட்டுக் கொள்கையின் பசையற்றுப் பழுதுற்றப் பின்னணியை ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். நாட்டுணர்வு கொண்ட உள்நாட்டு மக்களின் ஆதரவோ, எல்லாக் குறுநில மன்னர்களின் நேரடியான ஒத்துழைப்போ இல்லாமல் ராஜராஜனுல் பேரரசுப் பாணியில் போர்களை மேற்கொள்கின்ற அயல்நாட்டுக் கொள்கையை வரித்துக்கொள்ள முடியவில்லை. இதற்கு மாருக, வேற்ருரின் பேரரசுப் போட்டியில் சிக்கிக் கொண்ட அளவில் ராஜராஜன் தன்னையே பாதுகாத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இவ்வாறு பராந்தகன் I காலத்திலிருந்து ஆதிக்கப் போர்களைப் பெருமளவிற்கு நிகழ்த்தத் தொடங்கிய மன்னர்களின் பாரம்பரியத்தைக் கைவிட்டுச் சோழ நாட்டைப் பிறருடைய பேரரசுப் போர்களினின்றும் பாதுகாக்கின்ற புதிய பொறுப்பை ஏற்றுக்கொண்ட ராஜராஜனுக்கு ராஜேந்திரன் III ஆற்றிய உதவி கணிசமானதே. ஒரு காலத்தில் பேரரசுப் போர்களை நிகழ்த்திய சோழ மன்னர்களின் பெருமையைத் தாங்கி நின்ற ராஜேந்திரன் III என்ற சோழ மீட்பாளன் குலோத் துங்கன் III காலத்தின் இறுதியில் பாண்டியப் பேரரசுக்கு உட் பட்டுப்போன சோழ நாட்டை மீட்கின்ற பெரும்பணியில் ஈடுபடத் தொடங்கினுன். இவ்வாறு தன்னுடைய ஆட்சியின்போதே மற்ருெரு சோழ இளவலான ராஜேந்திரனுக்கு இடங்கொடுத்து வாழ வேண்டிய வரலாற்றுப் பேதலிப்பின் காலத்தில் ராஜ ராஜன் III தனது வாழ்க்கைக்காகப் போராடித் தன் திறனை இழந்தான்.

**1. பாண்டியரோடு மீட்புப்போர் (1230):** 1230-ல் பாண்டி யர்கள் சோழ நாட்டின்மேல் படையெடுத்து வந்தார்கள்.

இதற்குக் காரணம் ராஜராஜன் III தன்னுடைய படைகளைப் பாண்டியரை எதிர்க்க அனுப்பியதுதான். ‘படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உடையான்’ என்றில்லாத போது ‘அரசருள் ஏறு’ போல நடக்கத் துணிந்த இச் சோழனுடைய மனப்போக்கைப் ‘படைமடம்’ படுவதற்கான வகை எனச் சொல்லுபவர்கள் உண்டு. எந்தப் பாண்டிய மன்னன் 1216-ல் சோழ நாட்டில் பேரழிவுகளைத் தனது வெற்றிக்குக் கட்டியங்கூறுகின்ற முறையில் நடத்திக் காட்டினுனே அதே சுந்தர பாண்டியன் (1215-ல் அரசுரிமை) பதவியிலிருக்கின்ற போது அவனுக்குச் செலுத்த வேண்டிய கப்பப் பணத்தைக் கட்டாமல் ராஜராஜன் நிறுத்திவிட்டான்.

1216—1218-லிருந்து பாண்டியருக்கு அடங்கிப் போய்விட்ட சோழ நாட்டை ராஜராஜன் III, 1230 ஆண்டளவில் விடுதலை செய்யத் துணிந்தான்; 1230-ல் தன்னுடைய பேரணி என்ற பிரதானப் படையைப் பாண்டியர் நாட்டுக்குள் நடத்திச் செல்வதற்கு முன்பு தூசிப்படை என்ற முன்செல்படை (Scouts) ஒன்றை இவன் அனுப்பி வைத்தான். சுந்தர பாண்டியன் (மாறவர்மன் பட்டமுடையவன்) இச் சோழர் படைகளை எளிதாக எதிர்த்துத் தோற்கடித்தான். சோழநாடு மீண்டும் பாண்டியரின் ஆதிக்கநாடு என உறுதி செய்யப்பட்டது. ராஜராஜனின் இப் படையெழுச்சி அவனுடைய விவேகமற்றத் தன்மையை (foolishness) எடுத்துக் காட்டும் எனப் பேராசிரியர் கருதுகிருர். போதிய ஆயத்தமில்லாமல் ராஜராஜன் எந்த மனநிலையில் இத் தகைய படையெழுச்சியைப் பேராற்றல் கொண்ட பாண்டியரின் மேல் தொடுப்பான்? இது நியாயமான ஐயப்பாடு ஆகும்.

**2. ராஜராஜனின் ‘படைமடம்’—திறனய்வு:** காரணமில்லாமல் ராஜராஜன் இப் படையெடுப்பை நிகழ்த்தி இருக்க மாட்டான் என்பது உறுதி.

**(அ)** பாண்டியரின் வலிமையை நேரடியாக அறிந்திருந்த அனுபவங்கொண்டவன் ராஜராஜன் ஆவான். ஏனென்ருல். 1216-ல் பாண்டியர்களின் படையெடுப்பை நேரில் கண்டவன் அவன். ஆகவே, பாண்டியர்களுடைய இராணுவ வலிமையைக் குறைத்து மதிப்பிட்டு மோதிய நிலையில் ராஜராஜனுக்கு இந்தத் தோல்வி 1230-ல் நிகழவில்லை.

**(ஆ)** ‘சோழ மண்டல பிரதிஷ்ட சாரியன்’ என்ற பட்டத்தை ஏற்கெனவே தனக்குச் சூட்டிக்கொண்டிருந்த போசள மன்னன் நரசிம்மனுடைய போசளப் படைகளைத்

துணைக்கு அழைத்த நிலையில் இப் படையெழுச்சியை ராஜராஜன் நிகழ்த்தி இருக்கக் கூடும். போசளர்களின் உதவி வராத காரணத்தால் இந்தத் தோல்வி நிகழ்ந்திருக்க வேண்டும் எனக் கூறலாம். 1815-ல் நடந்த வாட்டர்லூ போரில் பிரஷ்யர்களின் வருகை வெலிங்டனுக்கு வெற்றியைத் தந்தது அல்லவா? போசளர்களோடு செய்துகொண்ட இராணுவ ஏற்பாடுகளின் தெம்பில்தான் இப் படையெடுப்பை அச் சோழன் மேற் கொண்டான். இப் படையெழுச்சி தோல்வியுற்றதால்தான் ராஜ ராஜன் பழித்துக் கூறப்படுகிறான். 1230-ல் காஞ்சியை மைசூரின் போசள அரசன் வீர நரசிம்மன் ஆண்டு வந்தான். சோழ மன்னர்களுக்குரிய ஆதரவாளன் என்ற முறையில் அவனுடைய உதவி மெல்லவும் முடியாமல் துப்பவும் முடியாமல் என்று அமைந்து போனதை ராஜராஜன் III தனக்குரிய அரசியல் உறுதிப்பாடு என எடுத்துக்கொண்டான் என்றுதான் சொல்ல வேண்டும். காடவர்க்குலக் குறுநில மன்னன் கோப்பெருஞ் சோழன் பாண்டியப் படையெழுச்சி 1216-ல் நடந்த நாளிலிருந்து அப் பாண்டியரோடு அரசியல் முறையில் ஒப்பந்தம் செய்து சோழர்க்கு எதிரியாகக் காட்சி அளித்தான். 1223-ல் செங்கை மாவட்டம் ஊரட்டி என்ற இடத்தில் யாதவராயன் குலத்தினனான வீரநரசிங்க தேவனுக்கும் காடவராயனுக்கும் போர் நிகழ்ந்தது. இக் காடவராயன் கோப்பெருஞ்சிங்கனாகவோ, அவனுடைய தந்தையாகவோ இருந்திருக்கலாம். இதே காலத்தில் காடவராயன் போசளர்களோடும் மோதி நின்றான். இவ்வாறு போசளர் களின் பாதுகாப்பு காஞ்சி வரை எட்டியிருந்த நிலைமையில், பாண்டியருக்கும் அவர்களுடைய கூட்டணியாளனான கோப் பெருஞ்சிங்கனுக்கும் இடையே காணப்பட்ட சோழநாட்டைப் பாண்டியப் பேரரசின் பிடிப்பிலிருந்து விடுபட வைக்க ராஜராஜன் எண்ணமிட்டு, பாண்டியன்மேல் போர் தொடுத்தான்; தோற்றான்.

(இ) சரிசமமான போர்த்திறனோடுதான் எதிரியோடு மோதிப் பார்க்க வேண்டும் என்ற இராணுவக் கோட்பாடு உலக வரலாற்றில் எந்நாளும் வழுவாத முறையில் செயலாக்கம் பெற்ற தில்லை. கர்னாடக நவாபை எதிர்த்துப் ஃபிரெஞ்சுப் படையானது அளவிற்சிறியதானாலும் அடையார் போரில் வெற்றி கொண்ட தல்லவா? 1757-ல் நிகழ்ந்த பிளாசி யுத்தம் 'ஒரு கேவலமான சம்பவம்' என்றளவில் ஒதுக்கப்பட்டாலும், வெற்றி சிறு பான்மையாரான ஆங்கிலேயருக்குத்தானே? ராஜராஜன் வெற்றி பெற்றிருந்தால் கிளைவ் 'ஆற்காட்டு வீரன்' என்றழைக்கப்படு வதைப் போலச் சோழ நாட்டின் மீட்பாளன் என்று சித்தரிக்கப் படுவான். இத்தாலி நாட்டு ஒற்றுமை இயக்கத்திற்கு முன்னோடி

யாக, நாட்டு விடுதலைக்காக. பியட்மான்டின் மன்னன் ஆல்பர்ட் பேராற்றலுள்ள ஆஸ்திரியாவைப் பகைத்துத் தோல்வியுற்றதை விவேகமின்மை (foolishness) என்று யாரும் சித்தரிப்பதில்லை. கவுன்ட் கவூர் ஃபிரான்சின் உதவியோடு ஆஸ்திரியாவை எதிர்த்து வெற்றி பெற்றதைச் சமநிலை வலிமை பெற்ற பின்பு நிகழ்ந்ததாகச் சொல்வதற்கில்லை.

(ஈ) தோல்வியுற்ற ராஜராஜன் வெற்றிபெரும் வாய்ப்புகளை எவ்வாறு கணக்கிட்டான் என்பதுதான் நமக்குத் தெரிய வேண்டிய விஷயம். தூசிப்படை, பேரணி என்ற இரு அமைப்புகளோடு படையெடுத்துச் சென்ற ராஜராஜன் வெறும் வீறுப்பு உணர்ச்சிக்கோ அன்றி அரசியல் பேதலிப்புக்கோ (political frustration) தன்னை இழந்து விடவில்லை என்பது விளங்கும். சோழ நாடு பாண்டியருடைய ஆதிக்கத்திற்கு உட்பட்டுப் பன்னிரண்டு ஆண்டுக் காலத்திற்குப் பின்புதான் ராஜராஜனின் மீட்பு முயற்சி நிகழ்கிறது என்பது முக்கியமான செய்தி ஆகும்.

வெற்றியாளர்க்குரிய சோழ அரசியல் தோல்வியுற்ற ராஜராஜனைத் தண்டிக்கத்தான் செய்தது. 1246-ல் யுவராஜா பட்டம் பெறுவதற்கு 16 ஆண்டுகளுக்கு முன்பே ராஜேந்திரன் III என்ற வினைத்திட்பமுடையவனுடைய கைக்குள் சோழ நாட்டு அரசியலின் பிடிப்புகள் சென்றடைந்தன. இவ்வாறு இவனுடைய அதிகாரத்தை ராஜேந்திரன் மட்டும் பங்கு போட்டுக் கொள்ளவில்லை. சோழருடைய அரசியலமைப்பில் காண முடியாத புதுமை ஏற்பாடாக ராஜராஜனுடைய மனைவி புவனமுழுதுடையாள் என்பவள் இவனுடைய அரசியலதிகாரத்தைப் பகிர்ந்துகொண்டாள் என்பது இவனுடைய மெய்க்கீர்த்தி சொல்கின்ற வரலாற்றுச் செய்தி ஆகும். இவ்வாறு அவனுடைய வாழ்வினில் கண்ட ஓர் இராணுவ இழப்பானது தன்னிறைவு இல்லாத வாழ்வாகவும், அரசியலதிகாரப் பங்கீடாகவும் உருக்கொண்டு அவனை வருத்தியது.

**3. போர் நிகழ்ச்சிகள் :** ராஜராஜனால் வலிந்து இழுக்கப்பட்ட பாண்டியனுடைய படைகள் சோழ நாட்டில் புகுந்து பல அழிவுகளைச் செய்தது. இப் போர் நிகழ்ச்சிகளைப் பாண்டியனுடைய 1236ஆம் ஆண்டுக்கான திருவேந்திபுரம் கல்வெட்டில் காணப்படும் மெய்க்கீர்த்தி சொல்லுகிறது. சோழனின் ‘தூசி’ என்ற முன்னணிப்படை தோற்கடிக்கப்பட்ட பின்பு சோழனுடைய ‘பேரணி’ என்ற பிரதான இராணுவத்தையும் பாண்டியர் படை முறியடித்தது. குதிரையும் யானையும் பெரும் எண்ணிக்கையில்

அழிந்தன. போரில் மாய்ந்த சோழப் போர்வீரனின் இரத்தம் பாய்ந்த சோழர்புலத்தில் கவடி என்ற காட்டுப் பயிர் விதைக்கப் பட்டு, பாண்டியரின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது. சோழ மன்னனின் மனைவியர் சிறைப்பிடிக்கப்பட்டு, பட்டமகிஷி உட் படப் பாண்டியனின் வெற்றி ஊர்வலத்திற்கு முன்பு மங்கலமான நிரம்பிய குடங்களைச் சுமந்து செல்லப் பணிக்கப்பட்டனர். சோழத் தலைநகரான ஆயிரத்தளி என்ற முடிகொண்ட சோழபுரத்தில் பாண்டியன் விஜயாபிஷேகம் செய்துகொண்டான்.

காலகல்பகன் என்பவன் இயற்றிய கத்தியகர்ணாமிர்தம் என்ற மனமகிழ்க் காதை இதன் பின்பு நடந்தவற்றைத் தொகுத்து உரைக்கிறது. தோல்வியுற்ற ராஜராஜ சோழன் மனமுடைந்து குந்தள நாட்டிற்குப் (கோலார்) புறப்பட்டுப் போனான். வழியில் தெள்ளாறு என்ற இடத்தில் காடவராயன் கோப்பெருஞ்சிங்கன் அவனை மடக்கிப் போரிட்டு வென்றான்; அச் சோழனைச் சிறைப் பிடித்தான்; சேந்தமங்கலம் என்ற தனது தலைநகர்க் கோட்டை யில் சோழனைச் சிறை வைத்தான்.

சோழச் சக்கரவர்த்தி பாண்டியனுக்கு ஆதரவாளன் ஆன கோப்பெருஞ்சிங்கனால் சிறைவைக்கப்பட்ட செய்தி 'சோழ மண்டல பிரதிஷ்டாசாரியன்' ஆன போசள மன்னன் நரசிம்மன் (1220—1238) காதிற்கு எட்டியபோது சோழனை விடுதலை செய்யும் வரை தன்னுடைய எக்காளத்தை ஊதுவதில்லை என்று சூளுரைத்து, தெற்கே தனது படைகளை அவன் நடத்தி வந்தான்; பாண்டியனுக்கும், காடவராயனுக்கும் துணை நின்ற யாதவனைப் போரில் வென்ற பின்பு ஸ்ரீரங்கத்திற்குப் பக்கம் பாகடன் என்ற இடத்தில் பாசறை அமைத்துக்கொண்டான். அங்கிருந்து அப்பண்ணன், சமுத்திர கோபய்யா என்ற இரண்டு தளகர்த்தர்களைக் கோப்பெருஞ்சிங்கனுடைய நாட்டை அழித்து, இராணுவ முறையில் அக் காடவராயனை, சோழனை விடுவிக்கு மாறு, நிர்ப்பந்தப்படுத்த ஆணையிட்டான். அவ்வாணையின்படி, இவ்விரு தானைத்தலைவர்களும் எல்லேரி, கல்லையூர்மூலை என்ற கோப்பெருஞ்சிங்கனுடைய இடங்களைத் தகர்த்தெறிந்தார்கள்; தொழுதடகையூர் என்ற இடத்தைப் பாதுகாத்து நின்ற சோழ கோன் என்பவனையும், பராக்கிரமபாகு என்ற இலங்கை நாட்டு அரசிளங்குமரனையும் வென்று கொன்றார்கள்; சிதம்பரம் வரை சென்று, அங்குள்ள நடராஜப்பெருமானை வழிபட்ட பின்பு, தொண்டைமாநல்லூர், திருவாடி, திருவாக்கரை முதலிய இடங்களை அழித்தார்கள். பெண்டிரைச் சிறைப்பிடித்தும், வயல்களில் பயிர்களை அழித்து, ஊர்களைக் கொள்ளையிட்டும் அவர்கள் கோப்

பெருஞ்சிங்கனுடைய நாட்டை இன்னல்படுத்தினுர்கள்; இதன் பின்பு சேந்தமங்கலத்தை நெருங்கி, அதை முற்றுகையிட ஆயத்த மானுர்கள். இந்த அழிவுகளைக் கண்ட காடவராயன் சோழப் பேரரசனை விடுதலை செய்ய முடிவு எடுத்து, அம் முடிவை நரசிம்ம னுக்குத் தெரிவித்தான். நரசிம்மனும் போசளப் படைகளைத் தங்க ளுடைய அழிவு வேலைகளை நிறுத்துமாறு கட்டளையிட்டான். ராஜ ராஜன் விடுதலை செய்யப்பட்டு மீண்டும் சோழ மாமன்னனுக ஆயிரத்தளி சென்றடைந்தான்.

சோழ மன்னனுக்கு உரிய நிலப்பகுதியைப் பாண்டியன் சில மாதங்களுக்குள் திருப்பிக் கொடுத்தான் என ஆராய்ச்சியாளர் பண்டாரத்தார் கூறுகிருர். ஆனுல், 1236-ல் காணப்படுகின்ற பாண்டிய நாட்டின் கல்வெட்டு ஒன்றில் இளையான்குடி மக்களைத் துன்புறுத்தாமல் இருக்க அதற்குரிய பணயப் பணத்தைப் போசளரின் இராணுவத்தின் போகதண்ட நாயகன் என்பவன் அப் பகுதி மக்களிடமிருந்து வரியாக வாங்கினுன் என்று கூறுகிறது. 1230-ல் ஏற்பட்ட பாண்டியப் படையெழுச்சி முடிவடைந்த பின்பு 6 ஆண்டுகள் ஆகியும் முழுமையான அளவில் சோழநாடு சோழனுடையதாகப் பாண்டியனுல் ஆக்கப் படவில்லை என்பதுதான் மேற்சொன்ன கல்வெட்டின் செய்தி அறிவிக்கும் உண்மை எனக் கொள்ளலாம். ‘சோழ ராஜ்ய பிரதிஷ்டாசாரியன்’, ‘பாண்டிய கஜகேசரி’, ‘சோழர்குல ஏகரட்சகன்’ என்ற பட்டங்களைச் சூடிக்கொண்ட வல்லாளன் II என்ற போசள மன்னன் பாண்டியரிடமிருந்து சோழ நாட்டை மீட்டு ராஜராஜனுக்குத் தந்தான் என உருத்திரப்பட்டர் என்பவர் எழுதிய ஜகநாத விலாசம் என்ற நூல் கூறுகிறது.

போசளர்கள் இவ்வாறு தென்னகத்தின் அரச கர்த்தாக்கள் (King-makers) ஆனுர்கள். இதன் பயனுக 1230-லிருந்து அவர்களுடைய தென்னக ஆதிக்கம் வலுப்பெற்றது. இவர் களுக்கும் காடவராயனுக்கும் உள்ள பகைமை சோழ மன்ன னுடைய விடுதலையோடு முடிவடைந்துவிடவில்லை. நரசிம்மன் (1220—1238) என்ற போசளனுடைய மகன் சோமேஸ்வரன் (1233—1267) விருதாச்சலம் பக்கமுள்ள மங்கலம் என்ற இடத்தில் பாசறை அமைத்து இருந்த செய்தியும், காடவராயனை எதிர்க்க அவன் படை எடுத்து வந்த வரலாறும் கல்வெட்டுச் சாசனம் மூலம் உறுதியாகின்றன. கோப்பெருஞ்சிங்கனுடைய ஆட்சி ஆண்டு 1246-ல் தொடங்கி 1279-ல் முடிவடைகிறது. ராஜ ராஜனுக்குப் பின்பு சோழ அரசனுன ராஜேந்திரன் III யுவராஜா

பட்டங்கட்டியது 1246-ல்தான். 1279வரை அவனைப்பற்றிய வரலாற்றுக் குறிப்பு காணப்படுவதால் கோப்பெருஞ்சிங்கனுக்குரிய எழுச்சிக் காலமும், சோழர் காலத்திய கடைசி அரசனுடைய தன்னாட்சி எழுச்சிக்கு உரிய முயற்சி நடந்த காலமும் இரண்டு இணைநேர்க் கோடுகளாகச் சென்றன. இக் கோப்பெருஞ்சிங்கன் 'பாண்டிய மண்டல ஸ்தாபன சூத்ரதாரா' (பாண்டிய மண்டலத்தை நிறுவுகின்ற முயற்சியில் நட்சத்திரம் போன்றவன்) என்ற பட்டத்தை மேற்கொண்டான். இவ்வாறு சோழரின் புத்துயிர்ப்புக்கு எதிரானவர்கள் சோழ நாட்டுக்குள்ளேயே காணப்பட்டார்கள்.

**4. ராஜேந்திரன்—ஒரு மீட்பாளன்:** இந் நிலையில் ராஜராஜனுக்குத் துணை நின்ற ராஜேந்திரன் III சோழ இளவரசனைப் பற்றி நாம் ஆராயத் தலைப்பட வேண்டும். 1246-ல் யுவராஜா பட்டம் பெறுவதற்கு முன்பே இவன் சோழ அரசியலை மேம்படுத்த முனைந்து நின்றான் என்பதற்குப் போசளரின் சாசனங்களே ஆதாரங்கள் ஆகும். ராஜராஜனுக்குரிய அரசாட்சியை இவன் தான் நடுநாயகமாக நின்று நடத்திக் காட்டியவன் (de facto ruler). ராஜராஜனுக்கு இரண்டு மகுடங்களை இவன் அளித்தான் என்பது திரிபுராந்தகம் கல்வெட்டுச் செய்தியாகும். இச் செய்தியின்படி 'இருவர் பாண்டியர் முடித்தலை கொண்டருளின்' என்ற பட்டம் ராஜேந்திரனுக்கு அமைகிறது. இதன்படி இரண்டு பாண்டியர்களை வென்று அவர்களுடைய மகுடங்களை ராஜராஜனுக்கு ராஜேந்திரன் அளித்தான். ராஜராஜன் இத்தகைய பெருமையை மூன்று ஆண்டுகள்தான் அனுபவித்தான். இது பாண்டியரின் இயலாத் தன்மையைக் காட்டும். மாறவர்மன் சுந்தர பாண்டியன் II காலத்தில்தான் இது நிகழ்ந்திருக்க வேண்டும். மகுடம் இழந்த மற்றொரு பாண்டியன் யாரெனத் தெரியவில்லை. பாண்டியரின் இத் தோல்வி சடாவர்மன் சுந்தர பாண்டியன் I என்ற பேராற்றல் பெற்ற பாண்டிய மன்னன் 1252-ல் பதவிக்கு வருவதற்கு முன்பு நடந்தேறி இருக்க வேண்டும்.

கிருஷ்ண சாஸ்திரி என்ற கல்வெட்டு ஆராய்ச்சியாளர் ARE 1912 II, 32 என்ற கல்வெட்டின் அடிப்படையில், ராஜேந்திரன், பாண்டியன், கேரளன் என்ற இரண்டு மன்னர்களை வென்று அவ்விரண்டு மகுடங்களையும் தன்னுடைய மகன் ராஜராஜனுக்குக் கொடுத்திருக்கலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால், பேராசிரியர் அவர்கள் பாண்டியனின் தோல்வியினால் ராஜராஜனுக்குக் கிடைத்த சுயேச்சையின் காரணமாக அவனுக்கு என

அமைந்த சோழ மகுடத்தையும், மற்றைய பாண்டிய கேரள மகுடங்களையும் சேர்த்து மூன்று மகுடங்கள் என வரவேண்டும் என்ற கருத்தைச் சொல்கிறார். இவ்வாறாக, ராஜராஜன் பாண்டியரின் மேலாக்கத்திலிருந்து சோழ நாட்டை விடுவித்துக் கொண்டான் என்பது சிறப்புச் செய்தியாகும்.

**5. போசளர்கள் பாண்டியரோடு இணைதல் :** போசளர்கள் தங்களுடைய தந்நல அரசியலைக் காட்டத் தொடங்கினார்கள். சோழர்களின் எழுச்சி முழுமைப் பெற்றுவிட அவர்கள் அனுமதிக்கத் தயாரில்லை. பாண்டியரையும் சோழரையும் பிரித்து வைத்து இருவருக்கும் பகைமையை வளரச் செய்து, ஒருவர் மாற்றி ஒருவர் தங்கள் உதவியைச் சார்ந்த நிலையில் தென்னகத்தில் உருப்படியான ஓர் அரசியல் அமைப்பு ஏற்படாத வண்ணம் பார்த்துக்கொள்வதுதான் அவர்களுடைய ராஜதந்திரத்தின் தலையாயக் கோட்பாடு ஆகும். இதன்படி போசளர்களின் மன்னன் சோமேஸ்வரன் (1233—1267) பாண்டியர்க்கு அரசியல் கூட்டாளி ஆனான். மைசூர்ப் பகுதியில் காணப்படும் சாசனங்களில் சோமேஸ்வரன் தன்னுடைய வலக்கை பாண்டியர் குலத்தைக் காக்கும் என்று சொல்லிக்கொள்கிறான். ('பாண்டிய குல சம்ரக்ஷண தாசக தக்ஷிண பூஜா' என்பவை அச் சாசனச் சொற்கள் ஆகும்.)

புதுக்கோட்டை கல்வெட்டுகளும் நெல்லைச் சாசனங்களும் இப் போசளர் பாண்டிய நாட்டில் ஊடுருவி நின்றதைச் சுட்டிக் காட்டுகின்றன. ராஜராஜனுக்கு அடங்கி நெல்லூரில் குறுநில மன்னனாக ஆட்சி செய்த தெலுங்குச் சோழன் கண்டகோபாலன் என்ற திக்கா I என்பவன் சோழருக்கு உற்ற நண்பனாகவும் ராஜ விசுவாசமுள்ளவனாகவும் விளங்கினான். 1240-ல் ஏற்பட்ட போசளக் கல்வெட்டு ஒன்று கண்டகோபாலன் தனக்கென வரித்துக்கொண்ட 'சோழ ஸ்தாபனச் சார்யன்' (சோழரை நிலைநிறுத்துபவன்) என்ற பட்டத்தின்படி சோழருக்கு ஆதரவாக நின்ற காலத்தில் சோமேஸ்வரனின் படையெடுப்புக்கு உள்ளானான் எனக் கூறுகிறது. திக்கண்ண சோமயாஜி என்ற புலவருடைய எழுத்துகளிலிருந்து போசளரின் இப் படையெழுச்சி தோல்வியடைந்தது என அறிகிறோம். கண்டகோபாலன் வடக்கே காகதிய மன்னன் கணபதிக்கும் உகந்த குறுநில மன்னனாக விளங்கினான். ராஜராஜன்—ராஜேந்திரன்—கண்டகோபாலன் என்ற ஓர் அணியும், போசளன் சோமேஸ்வரன்—பாண்டியன் சுந்தர பாண்டியன் II-கோப்பெருஞ்சிங்கன்—அவனோடு மணவினைத் தொடர்பு கொண்ட சோடிரயர் என்ப

வர்கள் அடங்கிய மற்ருேர் அணியும் தென்னிந்திய அரசியலில் காணப்பட்டன. இந்த வகையான அணிதிரட்டு தனக்குரிய அரசியல் விளைவுகளை உண்டாக்கு முன்பு பாண்டியன் மாற வர்மன் சுந்தர பாண்டியன் II இறந்துபட, சடாவர்மன் சுந்தர பாண்டியரின் I, 1252-ல் அரச பதவிக்கு வந்தான். இதன் பின்பு பாண்டியரின் மேலான ஆதிக்கத்தில் தென்னகத்தின் மொத்த அரசியல் மதுரைக்கு உரியதாகிவிட்டது. இரண்டாவது பாண்டியப் பேரரசின் எழுச்சி மிக்க அரசனுகச் சடாவர்மன் சுந்தர பாண்டியன் 1252-லிருந்து தென்னிந்தியாவைத் தனது படையாற்றலால் வளைத்துப் பிடித்தான். போசளர்களின் நிலை இவ்வாறு ஊறுபடுத்தப்பட்டது. இப்போது பாண்டியர்க்கு எதிராக அவர்கள் திரும்பினுர்கள்.

**6. திரும்பவும் சோழர்—போசளர் அணி:** நெல்லூரில் நிலை பெற்ற தெலுங்குச் சோழர்களின் உதவியுடன் 1238-லிருந்து 1250வரை சோழர்களுக்குரிய எழுச்சியை முன்னின்று நடத்திய ராஜேந்திரன் 1252-க்குப் பின்பு போசளர்களோடு கூட்டுச் சேர வேண்டியது அவசியமாயிற்று. இதுபற்றி ராஜேந்திரனைப்பற்றிய தனிப் பகுதியில் விளக்கமாகப் பார்க்கலாம்.

**7. ராஜராஜனுடைய கடைசி நாள்கள் :** ராஜராஜன் பாண்டியர் படையெடுப்புகளை 1216, 1230 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் நேரில் பார்த்தவன். 1238-1253 வரை சோழர்கள் அரசியல் சுயேச்சை பெறுவதற்கு பெருமுனைப்புடன் நடத்திய முயற்சிகள் (1252-ல் சடாவர்மன் சுந்தர பாண்டியன் பதவிக்கு வரும் வரை நடந்தவை) பயனற்றுப் போகத் தொடங்கியதைப் பார்த்த அளவில் ராஜராஜன் III 1256-ல் இறந்தான். அரசியல் போட்டியின் காரணமாகப் பாண்டியரோடு கொண்ட உறவு நிலைகளின் அடிப்படையில் சோழ அரசின் வெளிநாட்டுக் கொள்கை உருவாகி நின்றது. ஆகவே, சோழ—பாண்டியர் உறவுகளைக் கணிக்கின்றபோது ராஜராஜனுடைய வெளி நாட்டுக் கொள்கையின் ஊடுபாவுகள் தெளிவாகின்றன. 1230-ல் நடத்தப்பட்ட ராஜராஜனுடைய விடுதலை உணர்வுப் படையெழுச்சியின் காரணமாக ஏற்பட்ட பாண்டியரின் தண்டனைப் படையெடுப்பில் சோழநாடு நைந்து போன நாள் முதல் அரசியலில் தன்னுதிக்கம் இல்லாமல் ஒதுக்கப்பட்டுக் கிடந்தவன் ராஜராஜன் ஆவான். இந்தப் புறக்கணிப்புக்குப் பின்பு அவனுக்குரிய அரசியல் கொள்கையின் அடிப்படைப் போக்குகளை உருவாக்கியவன் ராஜேந்திரன்தான் என்பது வரலாற்று உண்மை. ஐரோப்பிய வரலாற்றில் இத்தாலிய ஒற்றுமை இயக்கக் காதையில் பியட்மான்ட் நாட்டின் மன்னன்

ஆல்பர்ட் ஆஸ்திரியாவோடு வலிந்து படையெடுத்துச் சென்று முட்டிக்கொண்டபோது ஏற்பட்ட தோல்வியின் காரணமாக முடிதுறப்புச் செய்தவுடன் விக்டர் இம்மானுவேல் பதவிக்கு வந்து ஆவன செய்தது போல 1230ஆம் ஆண்டுப் படையெடுப்பின் தோல்வி அவலத்தில் அரசியலைவிட்டு ஒதுங்கிய நிலையில் ராஜராஜன் 1256-ல் இறக்கும் வரை ராஜேந்திரனுக்கே மேலாதிக்கம் ஏற்பட்டது.

## II உள்நாட்டு நிர்வாகம் :

நாடாள்வான் என்ற அரசாங்க அலுவலாளர்கள் குறுநில மன்னர்களாக மாறித் தங்களுக்குள் அரசியல் ஒப்பந்தங்கள் செய்துகொண்ட நிகழ்ச்சிகள் குலோத்துங்கன் III (1178—1218) காலத்தில் உள்ளாட்சித் துறையின் வலிமைக்கு ஊறு செய்தன. ராஜராஜன் III காலத்தில் தஞ்சைப் பகுதிக்கே இத்தகைய இராணுவ ஒப்பந்தங்கள் செய்கின்ற வழக்கம் வந்து விட்டது. இச் சோழன் பதவிக்கு வந்த மறு ஆண்டான 1219-ல் தஞ்சை மாவட்டப் பகுதியைச் சேர்ந்த மூன்று தலைவர்கள் தங்களுக்குள் இத்தகைய உடன்பாடு செய்துகொண்டார்கள் (கல்வெட்டு எண் 23 of 1897). குறுநில மன்னர்கள் போன்று நடந்துகொண்ட இத் தலைவர்கள் சோழப் பேரரசனுடைய மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்டார்கள் என்றாலும், சோழனுக்குரிய அதிகாரத்தைக் கட்டுப்படுத்தக்கூடிய அளவில், அவர்களுடைய தனிநபர் வளர்ச்சி அரசியல் வடிவம் கொண்டு காணப்பட்டது.

உள்நாட்டில் சட்ட ஒழுங்கீனங்களும் குற்றங்களும் அதிகமாகிவிட்டன. ராஜதுரோகம் என்ற சட்டமறுப்பும், சிவதுரோகம் என்ற கோயிலறப் புறக்கணிப்பும், கிராமத்துரோகம் என்ற ஊர் மீறலும் அன்றாட நிகழ்ச்சிகளாகி விட்டன என்பதற்குக் கல்வெட்டு ஆதாரங்கள் உண்டு. 1224-ல் ஏற்பட்ட தஞ்சை மாவட்டம் சீயாழி கல்வெட்டின்படி ராஜதுரோகிகளுடைய நிலங்கள் ஏலத்தில் விடப்பட்டு, அப் பணத்தை அரசாங்கம் அபராதத் தொகையாக ஏற்றுக்கொண்டது. 'ராஜ துரோகத்துக்கு உட்பட்டாரும்' என்ற வகையைச் சேர்ந்த மேற்சொன்ன துரோகிகளுடைய சுற்றத்தார், வேலையாள்கள், அடிமைகள் போன்றோரும் இன்னலுற்றனர். ஊர்நெறிப்பட நிற்காதவர்களைக் கூடச் சோழ அரசு ராஜ துரோகிகள் என்றழைத்தது. அவர்களுடைய சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. தஞ்சை மாவட்டம் சிவபுரம் என்ற ஊரில் இரண்டு சிவப்பிராமணர்கள் உள்ளூர்க் கோவிலில் பூசாரிகளாக இருந்தார்கள்; அம்பிகைக்குரிய நகைகளை எடுத்து தங்களுடைய காமக்கிழத்

திக்குக் கொடுத்தார்கள்; கோவிலிலிருந்து பெற்ற நிலங்களுக்கான வரிகளைச் செலுத்த மறுத்தார்கள். அவர்களுடைய தீய நடத்தையைக் கண்டித்துப் பிறப்பிக்கப்பட்ட அரச ஆணைகளை மதிக்காமல் அவ்வாணைகளைக் கொண்டு வந்த அரச தூதர்களை நையப் புடைத்து, தண்ணீரில் அமிழ்த்தி எடுத்தார்கள்; போசளரான கன்னடியப் போர் வீரர்களின் துணைகொண்டு பெருந்தொகையை ஈட்டினார்கள். இவர்களிருவரின் சொத்துகளை ஊர்க்கோவில் நிர்வாகஸ்தர்களான மகேஸ்வரர்கள் (ஊர்மன்றத்திற்குரிய அரசியல் அந்தஸ்து பெற்றவர்கள்) விற்று, அந்தத் தொகையை அபராதமாக எடுத்துக்கொண்டார்கள்.

இந்த வழக்கு பல விஷயங்களைத் தெரிவிக்கிறது. உள்நாட்டில் கோவிலுக்குரிய அறங்கள் கோவிலில் வேலை பார்க்கின்றவர்களாலேயே நலிவுறக்கூடிய அளவில் குற்றங்கள் மலிந்து போயின. சமூக விரோதிகளாக மாறியவர்களுக்கு உதவப் போசளர் போன்ற போர்வீரர்கள் துணை சென்றார்கள் என்பதும் தெரிய வருகிறது. மேலே சொல்லப்பட்ட சீயாழி, சிவப்புரம் வழக்குகள் தஞ்சைப் பகுதியிலேயே நடந்ததைப் பார்க்கும்போது, சோழ மன்னன் ராஜராஜனுடைய உள்ளாட்சித் துறை எந்த அளவிற்கு வலிமை இழந்து காணப்பட்டது எனத் தெரியவரும்.

சோழ சாம்ராஜ்யத்தில் காணப்பட்ட நாடாள்வான் என்ற அதிகாரிகளாகக் குறுநில மன்னர்கள் வாணர், வைதும்பர், நுளம்பர், கங்கர் என்ற அளவில் பற்பல வகுப்பாராகக் காணப்பட்டனர். அவர்கள் சோழ மன்னனின் மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்ட அளவில் அவனுடைய ஆட்சி ஆண்டை முதன் முதலில் குறிப்பிட்டுத்தான் தங்கள் கல்வெட்டுகளைச் செய்தார்கள். ஆனாலும், சோழன் ராஜராஜனுக்குரிய நேரடியான ஆட்சி தஞ்சைப்பகுதியில்கூட வலிமையற்றுப் போய்விட்டது. 1230-ல் கோப்பெருஞ்சிங்கன் சோழனைச் சிறைபிடித்த பின்பு போசளரின் வருகையால் மீட்சியுற்ற நிலையில் அச் சோழனின் செல்வாக்கு பெருமளவிற்கு மங்கிப் போய்விட்டது. சோழன் பெயரளவிற்கு மன்னனாக இருந்தான். உள்நாட்டு ஆட்சியில் அவன் ஓர் அரசியற்சக்தியாக இயக்கம் பெறவில்லை என்பது தெளிவு. மைசூரிலிருந்து வந்த அந் நாளைய அந்நியர்களான போசளர்கள், உதவி செய்ய வந்த இடத்தில் அடாது நடந்து கொண்டது பற்றிய பல செய்திகள் உண்டு. காஞ்சியில் அவர்களுடைய நிலைப்படை (garrisons) ஒன்று இருந்தது. திருமழபாடி, திருக்கோகர்ணம் போன்ற ஊர்களிலும் போசளர்

களின் ஆதிக்கம் நிலவி நின்றதை அவ்வூர்க் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

**1. உள்நாட்டுக் கலகம் :** ராஜராஜன் பதவிக்கு வந்து ஐந்தாம் ஆண்டில் (1221-ல்) தஞ்சைப் பகுதியில் பெரும்மக்கள் கலகம் ஒன்று நிகழ்ந்தது. இதுபற்றித் தலைச்சங்கோடு, திரு வேள்விக்குடி, உடையாளூர் என்ற ஊர்களின் கல்வெட்டுகள் சொல்லுகின்றன. ஊர்களிலுள்ள நிலவுரிமைக் கணக்குச் சொல்லும் வருவாய்த்துறைக் கணக்குப் புத்தகங்களும் நிலவுரிமைப் பத்திரங்கள் என்ற ஆவணங்களும் இக் கலகக்காரர்களால் அழிக்கப்பட்டன. ஆராச்சியாளர் பண்டாரத்தார் 1221-ல் வாணக்கோவரையன் சேலம், தென் ஆற்காடு மாவட்டங் களின் பகுதிகளை ஆண்ட மகதநாட்டுக் குறுநில மன்னனின் தஞ்சைப் பகுதிமேல் கொண்ட படையெடுப்பில் இவ்வாறு நிகழ்ந்தது எனக் கூறுகிறார். அவனுடைய இராணுவப் படையெடுப்பில் நிகழ்ந்து போன போர்ச் செய்கையாக இக் கணக்குப் புத்தகங்களின் அழிவைச் சொல்வதா? சோழ அரசினரான அதிகாரிகளின்மேல் அதிருப்தி கொண்ட மக்களால் மேற்கொள்ளப்பட்ட கலகத்தின் திட்டமிட்ட விளைவாக அதைக் கொள்ளுவதா? என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். இவ்வாறு நிலவுரிமையைப் பாதிக்கின்ற முறையில் வன்முறைச் செயல் சோழர் வரலாற்றில் நடந்தது இதுவே முதல் முறை எனலாம்.

1232-ல் கோப்பெருஞ்சிங்கனிடமிருந்து மீட்கப்பட்ட தஞ்சைப் பகுதியின் நீடூர் என்ற ஊரைச் சேர்ந்த கிராம மக்கள் அவ்வூர்ச் சபாவிடம் சென்று தங்களுக்கான பொருளாதார இடர்பாட்டைப் பற்றி முறையிட்டார்கள். தங்களுடைய நிலங்களின் சொந்தக் காரர்களான பெருங்குடிகள் தங்களிடமிருந்து பணமாகவோ, தானியமாகவோ பெற வேண்டிய வரிப்பாடுகள் பற்றிய புது நிர்ணயம் ஒன்றைச் செய்யுமாறும், அவ்வாறு அமைகின்ற புதிய ஒழுங்கு முறைப்படி வன்முறை வரிவசூலில் பெருங்குடிகள் ஈடுபடக்கூடாது என்றும் அக் குடியானவர்கள் கோரினார்கள். இச் செய்தியைச் சொல்லும் நீடூர்க் கல்வெட்டுடன் தஞ்சைப்பூமியின் மையப் பகுதியிலுள்ள மன்னார்குடிக் கல்வெட்டுகளை (1238, 1239ஆம் ஆண்டுகளுக்கு உரியன) இணைத்துப் பார்த்தால், ராஜ ராஜன் III காலத்தில் உள்துறை ஆட்சி எந்த அளவில் நசித்துப் போய் இருந்தது என்பது தெரிய வரும். மேலே குறிப்பிடப்பட்ட மன்னார்குடிக் கல்வெட்டுகளின்படி மக்கள் ஸ்தாபன முறையில் ஒன்று கூடினார்கள். கொடுங்கோன்மையான முறையில் அநீதி யான வரிகளை வசூலிக்கின்ற பற்பல அதிகாரிகள் அடக்கப்பட்டு

நிலைமை சீர்திருந்தினுல் ஒழிய, தாங்கள் வேளாண்மைத் தொழிலைச் செய்வதில்லை என உழவுத் தொழிலைக் கைவிட முடிவு எடுத்தார்கள். மன்னர்குடியைப் போலத் திருஞான சம்பந்த சதுர்வேதி மங்கலமும் பக்கத்திலுள்ள ஊர்களைக்கூட்டி இத் தகைய முடிவுகளை எடுத்தது.

நாட்டில் ஒழுங்கும் சட்டமும் பரவலான அளவில் முறை தவறிப் போய்விட்டதற்கு 1221-ல் ஏற்பட்ட தஞ்சை மாவட்டம் தலைச்சங்கோடு கல்வெட்டு சான்று சொல்லுகிறது. இக் கல் வெட்டுக் கூறுவது போலப் பாடிக்காவல் என்ற காவல் வரியை வாங்குகின்ற பாடிக்காவல் என்ற காவல்காரர்களுக்குக் கிராமங்களி லேயே தங்குவதற்கு வீடுகள் அமைக்கப்பட்டன; இவ் வகையான இருக்கை வசதிகள் அவர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த ஏனைய ஊதியங்களுக்கு மேற்கொண்டு வழங்கப்பட்டவை ஆகும். காவல்காரன் என்ற காவலாளி ஊர்மன்றத்தாரின் பணியாளஞக இருந்த நிலையில் பாடிக்காவல் அதிகாரியின் சேவையையும் எதிர் பார்க்கின்ற அளவிற்கு 'முறைகேடுகள்' மலிந்து போனதை இச் செய்தி காட்டும் எனக் கொள்ளலாம்.

**2. ஊர்மன்றங்கள்** : உள்கூட்டு ஆட்சித் துறையின் அரசியல் அடிப்படைகள் வெளிப்படையாக உலுப்பப்பட்ட நிலையில், ஊராட்சி மன்றங்கள் வலிமை இழந்து போய்விட்ட அந்த நாளிலும் ஊர்மன்றங்களுக்கான சட்ட திட்டங்கள் சீர்திருத்தப்பட்டன. தஞ்சை மாவட்டம் செங்கனூர் என்ற இடத்திலிருந்த மகாசபாவானது 'பூர்வ புருசாக்கள் செய்தபடிக் கிடக்க' என்ற முறையில் பாரம்பரியமான வழக்கங்களை மேற் கொண்டது. 'ஒரு பொருளுக்கு' 2000 காசக்குமேல் செலவிட எழுத்துப் பூர்வமான இணக்கத்தை மகாசபாவிடமிருந்து 'கூட்டம்' பெற வேண்டும் எனவும், தவருன முறையில் கணிக்கப் பட்ட வரிகளை வாங்கிய குற்றத்திற்காக அவ்வாறு வாங்கப்பட்ட வரித்தொகை போல ஐந்து மடங்கு தொகையை வாரியத்தார் அபராதமாகக் கட்ட வேண்டும் என்றும் வரையறை செய்யப் பட்டது. இச் செய்திகளிலிருந்து ராஜராஜன் காலத்தில் ஊர் மன்றங்களின் வேலைகள் திறமையுடன் நடந்துவர வரவு செலவுத் திட்ட வரையறைகளுக்காகச் (budgetary regulations) சட்ட திட்டங்கள் செய்யப்பட்டன என்பது தெரிய வருகிறது.

## III சமய நிலை

'சீர்மன்னு மலர்மகளும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி கூறுவது போல, 'ஒப்பரிய மறைநாலும் உரைதிறம்பா மனு நூலுஞ்—செப்பரிய வடகலையும் தென்கலையுந் தலையெடுப்ப—நீதி

தரு குலநான்கு நிலைநிற்ப—ஆதியுகங் குடிபுகுத அறுசமயந் தழைத்தோங்க' என்றளவில் ராஜராஜன் III காலத்தில் சமயச் சார்பான சமுதாய வாழ்வு அமைய வேண்டிய கற்பனை எண்ணம் காணப்பட்டது.

பொருளாதார வலிமை குன்றிப் போய்விட்ட காலத்திலும் சோழப் பரம்பரையின் இயல்பான சேவையான கோயில்கட்டும் தொழிலை இவன் ஒரு சிறிது மேற்கொண்டான். இவனுடைய ஆட்சிக் கால 18ஆம் ஆண்டில் (1264-ல்) திருவந்தியம் என்ற ஊரில் ஓர் அம்மன் கோவிலை இம் மன்னன் கட்டினான். திருக்கச்சூர், துறையூர், கோனேரி ராசபுரம், சமயபுரம், திருப்பத்தூர், கோவிலூர், திருவீழிமிழலை, திருக்காரவாசல் என்ற ஊர்களில் காணப்படும் இவனுடைய கல்வெட்டுகளால் இவன் அவ்வூர்க் கோவில்களுக்குச் செய்வித்த நிலதானங்களும் விளக்குத்தானங்களும் அறியப்படும்.

இவன் காலத்தில் வாழ்ந்த கோப்பெருஞ்சிங்கன் என்ற காடவ அரசனுடைய கர்நூல் பகுதி திரிபுராந்தகம் கல்வெட்டு கூறுவது போலச் சிதம்பரம் கோவிலுக்குரிய கிழக்குக் கோபுரம் அவனால் கட்டப்பட்டது. போரில் பெற்ற ஊதியத்தை இவ்வாறு அவன் பயன்படுத்தினான். சிதம்பரம் கிழக்கு, மேற்குக் கோபுர வாசல் நிலைகளிலுள்ள 108 பரதநாட்டியக் கலைநுணுக்க மாதிரிச் சின்னங்கள் சிற்பங்களாகக் காணப் பெறுகின்றன. இவற்றோடு தில்லைக் கோவிலில் காணப்பெறும் அவனுடைய 15 கல்வெட்டுகளும் அவனுடைய பணிகளைச் சொல்லுகின்றன.

சிவஞானபோதம் என்ற சைவநெறி விளக்கம் செய்வித்த மெய்கண்ட தேவர் என்பவர் ராஜராஜ நல்லூரில் சிவபெருமானுக்குத் தன்னாலியன்ற அளவில் கோவில் அமைத்து, அவ்வூரில் மெய்கண்ட தேவப் புத்தேரி என்ற நீர்நிலையையும் ஏற்படுத்தினார். அக் கோவிலுக்குரிய இறையிலி நிலத்தையும் இவர் வழங்கியது குறித்து 1232ஆம் ஆண்டுக்குரிய திருவண்ணாமலைக் கல்வெட்டு (1232) பேசுகிறது.

## IV குடும்பம்

'சீர்மன்னு மலர்மகளும்' என்ற மெய்க்கீர்த்தி உரைப்பது போலச் 'செருவலியில் முருகனென்றும், திருவடிவில் மதனன் என்றும்—பெருகொளியில் பருதிவென்றும், பெருந்தகைமையிற் தருமன் என்றும்—தண்ணளியில் மதி என்றும் தனம் தருதலில் ஆய் என்றும் பெயர் பெற்ற ராஜராஜன் III இரண்டு மனைவியரைப் பெற்றிருந்தான். முதலாமவள் வாணர் குலத்தவளான

புவனமுழுதுடையாள் ஆவாள். இரண்டாமவள் போசள நாட்டு மன்னன் நரசிம்மனுடைய மகள் என்பது போசளனை இச் சோழன் 'மாமடி' என்று கல்வெட்டில் குறிப்பதால் தெரிய வருகிறது.

மேற்சொல்லப்பட்ட அதே மெய்க்கீர்த்தி புவனமுழுதுடையாளைப்பற்றிப் பின் வருமாறு கூறுகிறது: 'அலகில் பெரும் புகழாகரம் மங்கையருக்கு அரசாகி—உலகுடைய பெருமாளுடன் ருக்குமணி முடிகவித்தாள் உறந்தை வளநகரம் போல உலகமொரு பதினென்கும்—பிறந்துடையாள் ராஜராஜன் பிரியா வேளைக்காரி—இயல்வாழ்வும் இசைவாழ்வும் இமயமலை மகளறத்தின் செயல்வாழ்வும் ராஜராஜன் திருத்தாலி பெற்றுடையாள்—அரசு இறைஞ்சி அழகன் அருள் நிறைந்த உலகதனில்—உரை சிறந்த தனிஆணை உடன்ஆணை பெற்றுடையாள்' என்று வரும் செய்திகளில் புவனமுழுதுடையாள் சோழ நாட்டின் அரச அதிகாரத்தைச் சோழ அரசியல் வளமுறைக்குப் புதுமையான முறையில், அரசனுடன் பங்கிட்டுக்கொண்ட அளவில் ராஜராஜனுக்குரிய மனைவியாகவும் அரசியல் சகாவாகவும் விளங்கினாள். 'வாணர்குல நிலைவிளக்கு' என்று சொல்லப்படுவதால் அவள் வாணர்குல மக்கள் என்பது தெளிவு.

ராஜராஜனுக்குரிய மகப்பேறு பற்றிக் குறிப்புகள் இல்லை. ராஜேந்திரன் III இவனுடைய மகனே எனக் கூறுவார் உண்டு; மகன் இல்லை, சகோதரன் என்றும் ஒரு கருத்து உண்டு. மொத்தம் முப்பத்தெட்டு ஆண்டுகள் (1218—1256) ஆட்சியிலிருந்த ராஜராஜனுடைய கடைசிக் காலம் அவனுக்கு முந்திய மன்னன் குலோத்துங்கனுடைய கடைசி நாள்களைப் போல மகிழ்ச்சியுற்றுக் காணப்பட்டது. 1246-ல் யுவராஜாவாக வருவதற்கு முன்பே ராஜேந்திரனுடைய அரசியல் மேலாக்கம் சோழ நாட்டில் யாவரும் ஒப்புக்கொள்ளப்பட்டதாக அமைந்துவிட்டது. 1256-ல் ராஜராஜன் இறக்கின்றவரை ராஜேந்திரனே சோழ அரசியலின் நிலைக்களனாக நின்றவன்.

பாண்டிய நாட்டின்மேல் அவன் படையெடுத்து அதனால் அனுபவித்த அரசியல் தோல்வியின் முழுமையான பாதிப்பில் இச் சோழனுடைய வாழ்வின் நலங்கள் எல்லாம் பெரும் இழப்புக்கு உட்பட்டு விட்டன. ராஜராஜன் II காலத்தின் கடைசிப் பகுதியில் குலோத்துங்கனைக் குமாரக் குலோத்துங்கன் என்ற பெயரில் சோழ அரசிற்கான இயக்கு சக்தியாகப் பார்க்கிறோம். இதே முறையில் ராஜராஜன் III காலத்திலும் ராஜேந்திரன் III சோழ அரசனுடைய பக்கம் அமர்ந்த நிலையில் உண்மையான

அரசியற்சக்தியாளஞக (de facto ruler) காணப்பெறுகின்ற அளவில் ராஜராஜன் வாழ்வு அரசியல் ஒளியற்றுக் காணப்பட்டது. 'சீர்மன்னி இருநான்கு' என்று தொடங்கும் இவனுடைய மெய்க் கீர்த்தி அறிவிப்பது போல ராஜராஜன் 'நடுவுநின்று குடிகாத்து, நன்ருற்றுந் திறம்பொருது—கடிதிறைத்த உட்பகையும் புறப் பகையு மறக்கடிந்து' 'அருமறைகள் நெறிவாழ அருந்தமிழோர் கிளைவாழப்—பொருவில்மனு நெறிவாழப் பொன்மகுடம் கவித் தருளி' ஆண்டான் என நாம் கொள்ள வேண்டும்.

## ராஜேந்திரன் III (1250—1279)

விஜயாலயச் சோழன் தோற்றுவித்த சோழவமிச அரசருள் ராஜேந்திரன் III தான் கடைசி மன்னன் ஆவான். 1246-ல் யுவராஜா பதவி வகிக்கத் தொடங்கு முன்பே இவன் சோழ அரசியலில் மேலாண்மை கொண்டான். 1230-ல் ராஜராஜன் III பாண்டியர்மேல் படையெடுத்துச் சென்று தோல்வி அடைந்த பின்பு சோழ அரசியல் வானில் ஒளி இழந்த நிலாவாக அவன் தோற்றமளித்தான். ராஜேந்திரன் சோழ நாட்டின் அரசியல் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டான். 1258-ல் சடாவர்மன் சுந்தர பாண்டியன் சோழ நாட்டின்மேல் படையெடுத்து வந்த போது அதனுல் ஏற்பட்ட அழிவுகளை நேரில் அனுபவித்தவன் இவனே. ஆனுல், இந் நிகழ்ச்சிக்கு முன்பு இரு பாண்டியரை வென்று ராஜராஜனுக்கு அளித்த செய்தி பற்றிய விளக்க உரையை முன்பு பார்த்தோம்.

ராஜேந்திரனுக்கும் ராஜராஜனுக்கும் உள்ள தொடர்புகளை ஆராய்வோம் :

(அ) 1900-ல் தனது ஆராய்ச்சிக் குறிப்பை எழுதிய வெங்கையா என்ற கல்வெட்டு ஆராய்ச்சியாளர் 1892ஆம் வருடத்திய 64வது, 66வது கல்வெட்டுகளின் துணைகொண்டு மேற்சொல்லப்பட்ட இரு சோழர்களும் தனித்தனியாகச் சோழ நாட்டைப் பங்கு போட்டு ஆண்டு வந்ததாக அபிப்பிராயப் படுகிருர். ஏனென்ருல், மேற்சொல்லப்பட்ட ஸ்ரீரங்கம் கல் வெட்டுகள் திரிபுவன சக்கரவர்த்தி ராஜேந்திரன் என்பவன் தனியாட்சி செய்து வந்ததாகக் குறிப்பிடுகிறது.

(ஆ) பாண்டியரை வென்று இரு மகுடங்களைத் தனது சகோதரன் ராஜராஜனுக்குக் கொடுத்த பின்பு மூன்ருண்டுகள்

கழித்து ராஜேந்திரன் தனது சகோதரனைக் கொன்றுவிட்டான்; இவ்வாறு மற்றோர் ஆராய்ச்சியாளரான கிருஷ்ண சாஸ்திரி குறிப்பிடுகிறார்.

(இ) ஆராய்ச்சியாளர் பண்டாரத்தார் ராஜராஜனின் மகன் ராஜேந்திரன் எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறு கொள்வதில் தடை ஏதும் இல்லை எனப் பேராசிரியரும் கருத்து தெரிவிக்கிறார்.

## I வெளிநாட்டுக் கொள்கை

உத்திர இலங்கை என்றழைக்கப்பெற்ற சாம்புவராயரின் தொண்டை நாட்டுப் பகுதியை ராஜேந்திரன் ராஜராஜனின் சார்பில் வென்றான். உத்திர இலங்கை என்பது தொண்டை நாட்டுப் பகுதியே என்பது திண்ணம். ஈழத்தையோ, ஆந்திர தேசத்துக் கோதாவிரிக் கழிமுகத்துப் பகுதியையோ அது குறிக்கும் எனக் கொள்ளல் ஆகாது. புறநானூற்றின் 176வது பாடல் சொல்வது போல, சங்க காலத்திய மன்னன் ஒய்மா நாட்டு நல்லியக்கோடன்மா இலங்கையை ஆண்டான். ஆகவே, இலங்கை என்ற பெயரில் தொண்டை மண்டலத்தில் சங்க காலந்தொட்டு வழங்கப்பட்டு வந்த நிலப்பகுதியைச் சாம்புவராயச் சேடிராயன் ஆண்டு வந்தபோது ராஜேந்திரன் அதனைத் தனது படையெடுப்பால் பிடித்துக்கொண்டான். சாம்புவரையர் தங்களை வீரராட்சகன் என்று கூறிக்கொள்கிறார்கள். இப் படையெடுப்பில் சோழனுக்குத் தெலுங்குச் சோழன் கண்ட கோபாலன் உதவி செய்தான் என்பதைத் தெலுங்கு இராமாயணம் எழுதிய திக்கரு சோமயாஜி என்ற புலவர் தமது நூலில் குறிக்கிறார்.

1252-ல் பாண்டிய அரசனாகிய சடையவர்மன் பேராற்றல் பெற்றவனாக விளங்கியபோது பாண்டியருக்கு எதிர்ப்பாகப் போசளர்களின் அரசன் சோமேஸ்வரன் ராஜேந்திரனோடு சேர்ந்துகொண்டு பாண்டியரின் எழுச்சிக்கு எதிர்ப்பு அணி திரட்டினான். சோமேஸ்வரன் 1254-ல் தனது ஆளுகைக்கு உட்பட்ட போசளப் பேரரசை இரு பகுதிகளாக்கி, வடபகுதியைத் தனது மூத்த மகன் நரசிம்மன் III (1254—1292) என்பவனுக்கும், தமிழகப் பகுதியை உட்கொண்டிருந்த தெற்குப் பாகத்தைத் தனது இளைய மகன் இராமநாதன் (1254—1295) என்பவனுக்கும் அளித்துத் தானே எல்லாப் பகுதிக்கும் மேலாளனாக அமர்ந்து இருந்தான். இராமநாதனுக்குத் திருச்சியை அடுத்த அன்பில் என்ற இடம் வரையுள்ள பகுதி கட்டுப்பட்டிருந்தது என்பது

சாசனச் செய்தியாகும். ஸ்ரீரங்கத்தை அடுத்த கண்ணனூர்க் கொப்பம் என்ற ஊர் போசளப் பேரரசு 1362-ல் அழியும் வரை அவர்களுடைய தென்பிராந்தியத் தலைநகராக விளங்கி வந்தது.

1262-ல் சடாவர்மன் சுந்தர பாண்டியன் வடக்கு நோக்கிப் படையெடுத்து வருமுன்பே ராஜேந்திர சோழனை அடக்கித் தனக்குக் கப்பம் கட்ட வைத்துவிட்டான்; கண்ணனூர்க் கொப்பத்தின் கோட்டையையும் கைப்பற்றி, சிங்கணன் என்பவனையும் சேர்த்துப் பல போசளத் தளகர்த்தர்களைக் கொன்றான். கோப்பெருஞ்சிங்கனுடைய சேந்தமங்கலம் கோட்டையும் வெல்லப்பட்டது. 1262-ல் போசளப் பேரரசன் சோமேஸ்வரனை இப் பாண்டியன் போரிட்டுக் கொன்றான்; பின்பு சிதம்பரம் சென்று வழிபட்டான். வாணர் நாட்டையும், கொங்கு நாட்டையும் கவர்ந்த பின்பு இப் பாண்டியன் வடக்கே சென்று கண்ட கோபாலனைப் போரில் வென்று கொன்றான்; காகதிய மன்னன் கணபதியையும் அவனுக்குத் துணை வந்த ஏனையத் தெலுங்கு மன்னர்களையும் நெல்லூர் மாவட்டம் முடுகூர் என்னும் இடத்தில் வென்றான். கணபதி மன்னன் வடக்கு நோக்கித் தன்னுடைய நாடான வாரங்கலுக்குச் சென்றுவிட்டான். வெற்றியாளனான பாண்டியன் நெல்லூரில் வீராபிஷேகம் செய்துகொண்டான். பாண்டியரின் இரண்டாவது பேரரசின் மேலாக்கத்தைப் போற்றுவது போல இப் பாண்டியன் சிதம்பரம், ஸ்ரீரங்கம் என்ற இரண்டு கோவில்களிலும் அறப்பணிகள் பல செய்தான்; இந்தப் பணிகளில் தனக்குப் போர்களினால் கிடைத்த செல்வத்தைச் செலவழித்து, சோழ மன்னர்களின் பரம்பரைக்கு ஏற்பட்ட இயல்பான புகழைத் தனதாக்கிக்கொண்டான்.

1268-ல் இப் பாண்டியன் இறந்துபட்ட பின்பு பாண்டிய அரசனாக விளங்கிய மாறவர்மன் குலசேகரன் காலத்தில் ராஜேந்திரனும், போசளன் இராமநாதனும் பாண்டியரிடம் கொண்ட பகைமை முற்றாமல் பார்த்துக்கொண்டாலும், 1279-ல் ஏற்பட்ட மோதுதலில் பாண்டிய மன்னனால் அவர்களிருவரும் தோற்கடிக்கப்பட்டார்கள். சோழ நாடு பாண்டிய நாட்டின் பகுதியாக மாற்றப்பட்டுவிட்டது. ராஜேந்திரனைப் பற்றியக் கடைசிக் குறிப்புகள் 1279-ல் (33-வது ஆட்சி ஆண்டில்) ஏற்பட்ட வேதாரண்ணியக் கல்வெட்டுக்குப் பின்பு காணப்பெறவில்லை. இதன் காரணமாக—கடைசி 1279வது ஆண்டுதான்—ராஜேந்திரனுடைய வாழ்நாளின் கடைசி வருடம் எனக் கொள்ளல் வேண்டும்.

## II உள்நாட்டு நிர்வாகம்

1259-ல் செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டு ஆந்திர தேசம் கடப்பை மாவட்டம் நந்தனூரிலும், 1261-ல் செதுக்கப்பட்ட மற்றொரு கல்வெட்டு கர்நூல் மாவட்டம் திரிபுராந்தகத்திலும் காணப்படுவதிலிருந்து ராஜேந்திரனுடைய மேலாண்மையைப் பெயரளவிற்குத் தெலுங்கச் சோழர்கள் ஒப்புக்கொண்டிருந்தார்கள் என்பது தெரிய வருகிறது. 1261-க்குப் பின்பு இச் சோழனுடைய கல்வெட்டுகள் சோழ மண்டலத்தில் மட்டும் காணப்பெறுகின்றன. கோவிலூர், திருவீழிமிழலை, ஸ்ரீரங்கம் போன்ற இடங்களில் காணப்படுகின்ற கல்வெட்டுகளில் இச் சோழனுக்குரியவையாகச் சில விளங்குகின்றன. படையெடுப்புகளால் அலைக்கழிக்கப்பட்ட அந்த நாள்களில் உள்நாட்டில் சீரான அமைதி காணப்பெறவில்லை என்பது தெளிவானதோர் உண்மையாகும்

## III சமய நிலை

குலோத்துங்கன் III, ராஜராஜன் III ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் தொடங்கப்பட்ட காமக்கோட்டம் கட்டுகின்ற வழக்கம் இவன் காலத்திலும் தொடர்ந்து காணப்பட்டது. கோவில்களில் மூலவருக்கு அடுத்த சிறப்பு அம்மனுக்குக் கொடுக்கின்ற வழக்கத்தை இது சுட்டிக் காட்டுகிறது. சோழப் பேரரசு தன்னுடைய எல்லா வலிமைகளையும் இழந்து போய் விட்ட காலம் ராஜேந்திரனுடைய ஆட்சிக் காலம். ஆகவே, சோழப் பரம்பரைக்கு ஏற்புடைத்தாற்போலக் கோவில்களைக் கட்டுகின்ற பெரும்பணியை இச் சோழன் தனி வேலையாக மேற்கொள்ளவில்லை.

## IV குடும்பம்

களப்பாளன், வீரசோழ பிரமராயன், விழுப்பாதராயன். சோழிவரையன் போன்றோரைத் தன்னுடைய அரசாங்க அதிகாரிகளாகப் பெற்ற ராஜேந்திரனுக்குச் சோழகுல மாதேவி என்ற மனைவி இருந்தாள் என்பது 1263ஆம் ஆண்டின் திருவெண்ணைநல்லூர்க் கல்வெட்டால் தெரிய வருகிறது. கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த இந்தச் சோழ மன்னனுக்கு ராஜபரமேஸ்வரன், ராஜபரம மகாதேவன், வீரராட்சகன், லங்காரமன், திரிபுவனச் சக்கரவர்த்தி என்ற பட்டங்கள் அமைந்து இருந்தன. கல்வியிலும் இசையிலும் இவன் மேம்பட்டு விளங்கியதாக இவனுடைய கல்வெட்டுகள்

உயர்த்திக் கூறுகின்றன, அணைந்து போன சோழப் பேரரசு என்ற விளக்குப் பொறியில் மிச்சமாகி மின்னும் சுடர்க்கங்கு போல இந்த ராஜேந்திரன் காணப்பெற்ருன். சோழரின் பரம்பரை மாண்பைத் திரும்பவும் எடுப்பிக்க இவன் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் நீடித்த பயனைத் தரவில்லை.

ராஜேந்திரனுக்கு மகன் யாரும் வாய்த்திருக்கவில்லை என்பது வரலாற்றுச் செய்தி. சேமப்பிள்ளை என்பவனை ராஜேந்திரனுடைய மைந்தன் எனச் சிலர் கொள்ளுகின்றனர். தேதி இடப்படாத திருக்கண்ணபுரம் கல்வெட்டில் சேமப்பிள்ளையை ராஜேந்திரன் 'நம் பிள்ளை' எனக் கூறுகிருன். சோழப் பேரரசர்கள் தங்களுக்கு அடங்கியிருந்த குறுநில மன்னர்களையெல்லாம் 'நம் மகன்' என்ற சொல்லால்தான் குறிக்கின்றனர். இக் குறுநில மன்னர்களை அடக்கி ஆண்ட மேலாண்மை கொண்டிருந்த தந்தையராக (Peternal Suzerains) இச் சோழர்கள் விளங்கியதை இச் சொல்லாட்சி குறிக்கும். ஆகவே, பாண்டிய மன்னன் வீரபாண்டியனுக்கு அடங்கி இருந்த குறுநில மன்னனுக மற்றோர் இடத்தில் குறிப்பிடப்படும் இச் சேமப்பிள்ளை ராஜேந்திர சோழனுடைய மகனுக இருக்க வேண்டும் என்பதற்கு 'நம் மகன்' என்ற அடைமொழி மட்டும் ஆதாரமாக அமைய முடியாது.

# 15. சோழப் பேரரசின் வீழ்ச்சி—ஒரு திறனாய்வு

கி.பி. 880-ல் நிகழ்ந்த திருப்புறம்பியப் போரில் மோதிக் கொண்ட பாண்டியர்—பல்லவர் பேரரசுகள் உடனடியாக வீழ்ச்சி யுற்றபோது தஞ்சையம்பதியில் நிலைகொண்டிருந்த விஜயாலயச் சோழர்கள் தங்களுக்குரிய அரசியல் ஆதாயத்தைத் தங்களுக்கே உரிய முறையில் பெருக்கிக்கொண்டார்கள் ; சோழ அரசைப் பேரரசாகக் கட்டத் தொடங்கினார்கள். இதற்கு ஆதித்த சோழன் காரணமாவான். போரார்வ முறையில் இராணுவ வலிமையை வளர்த்துக்கொண்டு ஆதிபத்தியப் போர்களில் ஈடுபட்டு, பேரரசைக் கட்டத் துணிந்தவன் அவனேயாவான். இத்தகைய போர்ரார்வ போக்கே சோழப் பேரரசு தோன்றுவதற்கான காரண மாக அமைந்தது. கி.பி. 880-லிருந்து 1279-வரை தமிழகத்தை மட்டுமல்லாது தென்னிந்திய அரசியலையும் தழுவி நின்ற சோழப் பேரரசின் சுமார் 400 ஆண்டுக்கால வாழ்வில் ராஜராஜன் I பதவி ஏற்ற 985ஆம் ஆண்டில்தான் விறுவிறுப்பான பேரரசுப் பார்வை (vision of imperialist empire) தோற்றங்கொண்டது. சுமார் 130 ஆண்டுகள் பேரரசுக்குரிய பெருமிதம் அத்தனையும் அனுபவித்துவிட்டுக் குலோத்துங்கன் III ஆண்டபோது அது பிரகாசமாகச் சுடர்விட்டுப் பின்பு அவனுடைய ஆட்சி முடிவுற்ற 1216ஆம் ஆண்டில் பாண்டியர் படையெடுப்பின் விளைவாக அணைந்துவிட்டது. இவ்வாறு நானூறு ஆண்டுகள் (880-லிருந்து 1279-வரை) சோழ அரசாக விளங்கிய தஞ்சை அரசு 130 ஆண்டுகள் (985-லிருந்து 1216வரை) பேரரசாகவும், பெரு வளர்ச்சியுற்றுத் தனியோர் அரசியலாகவும் பொலிந்தபோது பல் வேறு உள்ளுறை முரண்பாடுகள் (inner contradictions) அதனுள் தோன்றின.

சோழப் பேரரசிற்குரிய உள்ளுறை முரண்பாடுகளில் தலையாய தாகச் சோழப் பேரரசின் இராணுவப் போக்கையும் அது வளர்த்த இராணுவ ஏகாதிபத்தியத்தையும் (military imperialism) நாம் குறிப்பிடலாம். 1190-ல் தொடங்கிய இரண்டாவது பாண்டியர் பேரரசும், கர்நாடகத்தின் இந்து நாகரிகத்தை வளர்க்க வேண்டும் என்ற பொதுமையான வாழ்வுமுறைக் கோட்பாட்டை அந்நியராக

வந்த படையெடுப்பாளர்களும் ஏற்றுக்கொண்டு தங்களுடைய அரசியல் கடமையாக அதனைச் செயல்படுத்தியபோது அந்த அந்நியர்கள் அந்நியர்களாகக் காணப்பெறவில்லை. இந்த நிலையில் சோழர்களின் அரசியல் வாழ்வைப் பாதுகாக்க வேண்டியதற்கான அக்கறை ஆங்கு மக்களிடையே காணப்படவில்லை. எல்லோருக்கும் பொதுவான இந்து தர்ம முறையில் அமைந்த அரசியலைச் சொந்தமாக்கி அனுபவிக்கத் துடித்து நின்ற சோழர்—பாண்டியர்—போசளர் என்ற மூன்று பேரரசுகளில் முதுமை கொண்டிருந்த சோழப் பேரரசு முதலில் தோல்வி அடைந்தது. மற்றைய இரண்டும் மேலாக்கம் பெற்றன. 1807-ல் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்த மாலிக்காபூர் 1206-ல் டில்லியில் ஏற்பட்டிருந்த வல்லாட்சிக்குரிய முஸ்லீம் கலாசாரத்தைத் தமிழகத்தில் பரிச்சயமாக்கினான். அதைத் தொடர்ந்து பாண்டியரும் போசளரும் தமிழகத்தில் வீழ்ச்சியுற்றனர். வல்லாட்சிக்குரிய வீரியமானப் போக்கினை உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் செயலாக்குகின்ற முஸ்லீம் வழி ஆட்சி 1330-ல் மதுரையில் மதுரை சுல்தானிய அரசாக (Madurai Sultanate) நிறுவப்பட்டது.[1] கோவிலறமும் மக்களாட்சி முறையும் அமைந்திருந்த பண்டைய நாகரிகத்தின் நெகிழாத் தன்மைதான் (rigidity) முஸ்லீம்கள் ஏற்படுத்திய அரசியல் மாறுதல்களுக்கு உதவியாக அமைந்தது. காலத்திற்குத் தக்க மாருத சோழப் பேரரசு வீழ்ச்சியுற்றபோது நிகழாத இந்து சமய நாகரிகத்தின் சரிவு சோழ அரசின் வீழ்ச்சியை அடுத்து 25 ஆண்டுகளில் ஏற்பட்டது முஸ்லீம்கள் வரும் வரை தமிழகத்தில் வேற்று நாகரிகத்தாரின் தாக்குதல் நடைபெறவில்லை. ஆகவே, பாண்டியரும் போசளரும் இந்து நாகரிகத்தைத் தாங்கி நின்ற காரணத்தால் போராட்ட உணர்வோடு வெறுக்கப்படவில்லை. இந்தச் சூழ்நிலையில் சோழர்களையே சார்ந்து நின்ற அரசியல் அவசியம் சமுதாயத் தேவையாகச் சோழ மக்களுக்கு அமையவில்லை. ஆகவே, சோழர்களின் துவார சமுத்திரத்தில் நிலைகொண்டு எழுந்த போசளப் பேரரசும் தமிழகத்தில் ஆதிக்கந்தேடியபோது சோழ மண்டலம் பாதிக்கப்பட்டது. அவ்விரு பேரரசுகளின் படையெடுப்புகளால் நாட்டின் மாமூல் வாழ்க்கையில் அடிப்படையான மாறுதல்கள் எதுவும் நிகழவில்லை. கோவிலறத்தையும் கிராம மன்ற முறையையும் அவ்விரு சாராரும் நன்கு ஆதரித்தார்கள். இவ்விரண்டுந்தான் மக்களுக்குரிய ஆதார நலன்கள்; அந் நாளைய இந்து மதத்தின் நாகரிகத்தின்—இயல்பூக்கங்கள் (Ethical Instincts of Hindu Civilisation) என அமைந்திருந்தன. சோழ நாட்டின்மீது படையெடுத்து வந்த அந்நியர்கள் இவற்றைப் பெரிதும் போற்றி

[1] K. A. Nilakanda Sastri—'The Pandian Kingdom'—1929—p. 211

னார்கள். சோழப் பேரரசு முழுவதும் முறிந்து வீழ்ந்த ஆண்டான 1216-ல் சோழ மண்டலத்தின்மீது படையெடுத்த சுந்தர பாண்டியன் சிதம்பரம், ஸ்ரீரங்கம் கோவில்களுக்குப் பொன் வேய்ந்தான். இந்து தர்மம் சோழருக்கும் பாண்டியருக்கும் போசளருக்கும் பொதுவாக அமைந்திருந்த காரணத்தால் படையெடுப்பாளர்களை அந்நியர்களாகக் கருதி மக்கள் அவர்களை வெறுத்துப் போராட வேண்டிய அவசியம் அங்கு ஏற்படவில்லை. பதினொன்றும் நூற்றாண்டில் இங்கிலாந்தைப் படையெடுத்துப் பிடித்து ஆளத் தொடங்கிய நார்மானியர்கள் அதற்கு முன்பு அந்நாட்டில் இருந்த ஆங்கிலோ—சாக்ஸானியரின் தனிமனித சுதந்தரத்திற்கு வழிவிடுகின்ற அரசியலை அடியோடு மாற்றினார்கள்; வல்லாட்சி முறையை அங்கே திணித்தார்கள். இதனால் பாதிக்கப்பட்ட சாக்ஸானியர் பல நூற்றாண்டுகள் வரை எதிர்த்துப் போராடிய பின்பு களைத்து ஓய்ந்தன. பாண்டியரும் போசளரும் சோழ மண்டலத்தைக் கூறுபோட்டுக்கொள்ளுகின்ற வகையில் படையெடுத்து ஆளத்தலைப்பட்டபோது சோழ மக்களுக்குரிய வாழ்வு முறையை மாற்றி அமைக்கின்ற அரசியலை அவர்கள் திணிக்கவில்லை. எனவேதான், சோழப் பேரரசின் வீழ்ச்சி தமிழகத்தில் நிகழ்ந்த ஓர் அரசியல் மாற்றம் (a political change) என்றுதான் கூற வேண்டும். ஒரு நாகரிகத்தின் வீழ்ச்சி (fall of civilisation) அல்ல அது எனலாம். சோழர்களின் வீழ்ச்சியைத் தடுக்க சோழ மக்கள் போராட முன்வரவில்லை. இவ்வாறு சோழப் பேரரசின் வீழ்ச்சியானது தமிழகத்தில் இந்து நாகரிகத்தின் வளர்ச்சியில் வாய்த்த முதிர்ச்சியை எடுத்துக் காட்டுகிறது என நாம் கொள்ளலாம். சோழரின் அரசியல் வீழ்ச்சிக்கு உரிய காரணங்களைக் கீழ்க்கண்டவாறு நாம் ஆராயலாம் :

**1. நிறுவன மாற்றம் நிகழாமை (Absence of Institutional Change) :** சோழப் பேரரசு காலத்தோடு மாறுபட்டு வளரவில்லை. அதனுடைய நிறுவனங்களில் மாற்றங்கள் ஏற்பட வழியும் இல்லை. உரோமப் பேரரசு அழிவதற்குரிய காரணங்களை ஆங்கில ஆசிரியர் கிப்பன் (Gibbon) வகைப்படுத்தியபோது இத்தகைய நிறுவன மாற்றுமுறை அளவிற்கு அதிகமாக நடந்ததை எடுத்துக் கூறுகிறார். பெருமளவிற்கு உரோமப் பேரரசை மக்களாட்சி முறையின் செனட் சபை கொண்டு ஆளமுடியாது என்பதற்கு ஜூலியஸ் சீசரின் மாட்சியும் வீழ்ச்சியும் சாட்சியம் சொல்லுகின்றன. தென்னகம் எங்கும் பரவி நின்ற சோழப் பேரரசைத் தஞ்சையில் வாழ்ந்த சோழ மன்னன் தனிப்பட்ட முறையில் ஆளத்தலைப்பட்டான்.

பாண்டியரைத் தனியே விட்டு வைத்ததால் அவர்கள் வலிமை பெற்றுர்கள்; சோழ—பாண்டிய மண்டலமாக்கி நேரடி யான ஆட்சி முறைக்கு உட்படுத்தி வைத்ததால் அவர்கள் விடுதலைக் கிளர்ச்சி செய்தார்கள். நேரடியான இறைமையை (Direct Sovereignty) ஈழம் முதல் கிருஷ்ணையாறு வரை நிலை பெறச் செய்வதற்கு முயற்சி செய்து வெற்றியும் பெற்ற சோழ அரசியலாளர் தங்களுடைய பேரரசின் வளர்ச்சிக்குரிய முறையில் அங்குக் காணப்பட்ட நிறுவனங்களையும் வளர்த்துக்கொள்ள வில்லை. இராணுவப் பாசறைகளை விழிஞத்திலும் (திருவை நாடு), கோட்டாற்றிலும் (நாஞ்சில் நாடு) அமைந்தது போல விஜய வாடாவிலும், வேங்கியிலும் (ஆந்திரம்) சோழர்கள் நிறுவி இருந்தார்கள். ஆதிக்க அரசியலைக் கட்டிய அவர்கள் இராணுவ மனப்போக்கு கொண்டு பேரரசுப் பகுதிகளை நேரடியாக ஆள்வ தற்குப் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள். இத்தகைய ஏகாதி பத்திய அரசியல் செயல்படுகின்ற போது அதற்குரிய குறைகளைத் தெரிவிக்கின்ற நிறுவனங்களைச் (institutions) சோழர்கள் உண் டாக்கவில்லை. அக் குறைகள் ஆயுதந்தாங்கிப் போராடுபவரின் கலகங்களின்மூலந்தான் வெளிப்படையாகத் தெரியவரும் என்ற அமைப்பு முறை அக் காலத்துக்கு உரியதானதுதான். அவ்வாறு தான் சோழருக்கான எதிர்ப்பு பாண்டிய தேசத்திலும் தொண்டை மண்டலத்திலும் தோற்றங்கொண்டது. ஆங்காங்கே தங்களுடைய இராணுவ ஆக்கிரமிப்புக்குரிய நடவடிக்கையோடு இணைந்த சோழர்கள் மேற்கொண்டிருந்த கோவிலறம் அத்தகைய இராணுவப் போக்கின் தீவிரத்தை மட்டுப்படுத்தவில்லை. 'ஒரே உலகம் உருவாக ஒரே கலாசாரமுடைய அரசியல்'—என்ற கோட்பாட்டை நிலைநாட்டுகின்ற பெருமுயற்சியின் காரணமாக நாடு பிடிக்கப் புறப்பட்டு இந்தியாவிற்கு வந்த ஐரோப்பிய மாமன்னன் அலெக்சாண்டர்கூடப் போரஸ் எனப்படும் புருஷோத் தமனின் நாட்டை அவனுக்கே திருப்பிக் கொடுத்து அரசியலுக் குரிய தனது மதிநுட்பத்தை வெளிக்காட்டினன். ராஜேந்திரன் I ஈழத்தில் நடத்திய போரில் தோற்ற மகிந்தன் என்ற ஈழத்து மன்னனைத் தமிழகத்தில் 12 ஆண்டுக் காலம் அவன் இறக்கும் வரை சோழர்கள் சிறையில் வைத்திருந்தார்கள். மகிந்தனுடைய இறப்பு ஈழத்தினரின் விடுதலை உணர்ச்சிக்கு உரமிட்டது என்பது வியப்புக்குரிய செய்தி இல்லை. காலத்தின் போக்குக்குத் தக்க தங்க ளுடைய நேரடி இறைமையை (Direct Sovereignty) மறைமுக ஆட்சி முறையான மேலாண்மையாக (Suzerainty) சோழர்கள் மாற்றிக்கொண்டிருந்தால், சோழப் பேரரசின் வீழ்ச்சி அவ்வளவு குறுகிய காலத்திற்குள் நிகழ்ந்திருக்க வாய்ப்பு ஏற்பட்டிருக்காது எனலாம்.

பொருளாதாரத் துறையிலும் சோழர்களின் பேரரசு நிறுவன மாற்றங்களைச் செயலாக்கவில்லை. ஆதிக்கப் போர்களின் காரணமாகச் சோழ நாட்டுக்கு வெளியே இருந்து அரசனால் கொண்டுவரப்பட்ட தங்கம் போன்ற பெருந்தனத்தை முதலீடு பண்ணித் தொழிலபிவிருத்தி செய்கின்ற முயற்சி மேற்கொள்ளப் படவில்லை. ஈழத்திலிருந்து கரிகாலன் கொண்டு வந்த பொருள் குவியல்களைச் செலவிட்டார்கள். இதன் காரணமாகத் தொழில் களின் வளர்ச்சி விரிவாக்கப்படவில்லை. கீழை நாடுகளுக்கு ராஜராஜன் I, ராஜேந்திரன் I போன்றவர்கள் கப்பற்படையை அனுப்பிப் பாதுகாக்கப்பட வேண்டிய அளவிற்கு வெளிநாட்டு வணிகமும் நானாதேசியர் போன்றவர்களின் கடல் கடந்த நடமாட்டமும் வளர்ந்திருந்தன. அதாவது, அந்த அளவிற்கு பண்டங்களின் ஏற்றுமதி நடந்தேறியது. பண்டங்களின் உற்பத்தி பெருகவில்லை. ஆனால் கிராமியப் பொருளாதாரமாகவே சோழர்களின் வாழ்வுமுறை தொடர்ந்திருக்க வேண்டியதாயிற்று. ஏனென்றால், பொருளுற்பத்தி முறையை முதிர்ச்சியடையச் செய்வதற்கு முதலீடு போன்ற வழிவகை செய்யப்படவில்லை. அந்தந்தக் கிராமத்தின் கைவினையோர் ஆங்காங்கே 'கொத் தடிமைத்தன' நிலைக்கு ஈடுபாடான முறையில் கிராமங்கள் தோறும் பிணிக்கப்பட்ட நிலை சில ஊர்களில் சோழ மண்டலத்தில் காணப்பட்டது. தொழில் வல்லுநரின் முடக்கம் (labour freeze) ஒரு பக்கம்; வணிகம் வளர வேண்டிய அவசியம் மற்றொரு பக்கம். இவ்வாறு காணப்பட்ட சூழ்நிலையில் உற்பத்திக்கு உதவு கின்ற அளவில் முதலீடுகளோ, தொழில் வல்லுநருக்கு வேண்டிய தொழிற்சுதந்தரமோ அவ்வளவாகக் காணப்படவில்லை. இந்தச் சூழ்நிலையில் பொருளாதார நிறுவனங்கள் (economic institutions) மேலும் வளர்ச்சியடையக்கூடிய முறையில் மாற்றமேதுமல்லாது காணப்பட்டது. இதுவும் சோழப் பேரரசின் உள்ளுறை முரண் பாடுகளின் வரிசையில் காணப்பட்டது. ஏனென்றால், வலிமை சான்ற கடற்படை, தென்னகந்தழுவிய அரசியலதிகாரம் போன்ற பெருமைகள் பல இருந்தும் பொருளாதாரப் புதுமை உணர்வோடு பொருளுற்பத்தி போதிய வளர்ச்சி அடையவில்லை. அதன்மூலம் உள்நாட்டில் தழைக்க வேண்டிய போர்த்திறன் (Home Front) பெருகவில்லை. ஆனாலும் சோழப் பேரரசு தன்னை வளர்த்துக்கொண்டே போயிற்று. மண் சுவற்றில் ஏற்றி வைத்த பாராங்கற்களைப் போலப் பேரரசுப் பெருமைகளான இராணுவ வளர்ச்சி, வல்லடிப்போர்கள் போன்றவை ஏற்கெனவே மெலிந்து போய் நின்ற கிராமப் பொருளாதாரத்தை அழுத்தி நின்றன. மேலும் மேலும் அதனுடைய அழுத்தம் அதிகமாகிய போது சோழப் பேரரசு அழிவை நோக்கிச் சரியத் தொடங்கியது.

சமுதாய அளவிலும் நிறுவன மாற்றங்கள் ஏதும் நிகழவில்லை. இராணுவ முறையில் போரிட்டுத்தான் பேரரசைப் பரப்ப வேண்டும் என்ற நிலை ஏற்பட்ட பின்பு இராணுவத்தைப் பரவலாக்குகின்ற முறை ஏற்பட்டதாகத் தெரியவில்லை. கைக்கோளர் போன்ற வகுப்பினர்தான் சோழப் பேரரசிற்கான போர்வீரர்களாக அமைந்தனர். வகுப்புவாத அடிப்படையில் இராணுவம் (Communal Regiments) அமைந்த பின்பு 'வீட்டுக்கு ஒரு வீரர்' என்ற முறையில் சோழ நாட்டுக்குரிய படை உருவாக்கப்பட வழி இல்லை. ஆனால், சங்க காலத்தில் அவ்வாறுதான் சோழ நாட்டில் மக்கள் இயங்கினார்கள். பாண்டியரும் போசளரும் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நாட்டுவதற்காகப் படையெடுத்து வந்து நாசவேலைகளில்கூட ஈடுபட்டபோது சோழ மக்களிடையேயுள்ள சமூக வேறுபாடுகள் கைவிடப்படவில்லை. முற்றிலும் அந்நியரான கலிங்கநாட்டு (ஒரிஸா) கணபதி வமிசத்தாரும் பாண்டியர்—போசளரைப் போலப் படையெடுத்துச் சோழப் பேரரசைத் தாக்கியபோது சோழப் பேரரசிற்குரிய அனைத்து மக்களும் ஒன்றுசேர்ந்து பகைவரை எதிர்க்கின்ற முறையில் சோழரின் இராணுவ அமைப்பு முறை சமூக அளவில் விரிந்து கொடுக்கவில்லை. நாட்டின் அன்றைய தேவைக்குத் தகுந்த 'இந்து சுயராஜ்யம்' என்ற இலட்சியப் போக்குக்குப் பெரும்பான்மையான இந்துக்களால் உருவாக்கப் பெற்றிருந்த சத்ரபதி சிவாஜியின் இராணுவம் பிற்காலத்தில் எல்லா மக்களும் சேர்ந்து எதிரிகளோடு போராடக் கூடிய பொதுமை இராணுவமாக (National Army) மாற்றப் பட்டது. இது போல, சோழர்களுடைய இராணுவம் அமைய அதனுடைய வகுப்புவாரி அமைப்பும் இடங்கை, வலங்கைப் பிரிவுகளும் இடங்கொடுக்கவில்லை. ஜப்பானில் 'மெய்ஜிப் புரட்சி'க்குப் பின்பு 'சாமுராய்' என்ற படையார்வ மக்களினம் சமுதாயத்திற்கு நலனளிக்க வல்ல நல்லியல்புகளில் தன்னைப் பயிற்றுவித்துக் கொண்டது. சோழருடைய வரலாற்றில் இது நிகழ்வதற்கில்லை. சோழநாட்டில் படைத்தொழில் செய்தவர்கள் பாடிக்காவல்காரர்களுடனும் குறுநில மன்னர்களுடனும் சேர்ந்துகொண்டு உள்நாட்டில் குழப்பம் ஏற்படுத்தத் துணை நின்றார்கள். குலப்பிறப்பினால் போர்வீரர்கள் ஆனவர்களே காணப்பட்டார்கள். அவர்கள் போர்த்தொழிலைக் கைவிடுகின்றபோது சமுதாய நலன் பேணுகின்ற ஆள்களாக அவர்களை ஏற்றுக்கொள்கின்ற வகையில் சோழர்களின் சமுதாயத்தில் நிறுவன முறையிலான நெகிழ்ச்சி ஏற்படவில்லை. அடிமை முறை, செல்வச் செருக்கு உடைய தனியார் வீடுகளிலும், நாடெங்கிலுமுள்ள கோவில்களிலும் காணப் பட்டது. கொத்தடிமை முறையும் (Bonded Labour) அங்கு

உண்டு. அடிமைகளைக் கோவிலுக்குக் கொடுத்தவர்களைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் காணப்பெறுகின்றன. அடிமை முறையின் அவலத்தை நினைத்துப் பார்த்த அளவில் மனிதாபிமான உணர்வோடு அவ்வடிமைகளுக்கு விடுதலை வழங்கியவர்களைப்பற்றியோ, விடுதலைக்கான உதவி செய்தவர்களைப்பற்றியோ கணிசமான செய்தி இதுவரை காணக் கிடைக்கவில்லை. ஆனால், உரோமப் பேரரசின் காலத்தில் செனகா (Seneca) அந் நாட்டின் அடிமைகளுக்காக வாதிட்டான்.[2] தங்களுடைய அவல வாழ்வை வெறுத்து நின்ற அடிமைகளின் எதிர்ப்பும் பயனில்லாமல் போய்விட்டது என்ற செய்தியைத் திருவாலங்காட்டுக் கல்வெட்டு நமக்குச் சொல்லுகிறது [3] (94 of 1926). இப்படி அந்தந்தச் சாதியாரும் அந்தந்த வகுப்பாரும் அவரவர்க்கென அமைந்த நெறியின்படி நடந்தாக வேண்டிய அந் நாளையச் சூழ்நிலையில் பேரரசின் பெரு வளர்ச்சிக்குத் தக்க சோழ சமுதாயம் தன்னை மாற்றியமைத்துக்கொள்ளவில்லை. இதன் காரணமாக, மத்திய காலத்தில் உலக சாம்ராஜ்யங்கள் எல்லாம் அழிந்தது போலச் சோழப் பேரரசும் நிறுவன முறையில் மாற்றங்களைச் செய்துகொள்ளக்கூடிய வலிமையற்றுப் போய் உள்ளுக்குள்ளே முரண்பாடுற்று நலிவுகொண்டு நாளடைவில் அழிந்தது.

**2. சோழ அரசு இராணுவ ஏகாதிபத்தியமாதல்—அதன் விளைவுகள் (Military Imperialism and Its Imbalance) :** வல்லடிப்போர்கள்மூலந்தான் பேரரசை விரிவாக்க முடியும் என்ற நியதி நிலவி நின்ற அந் நாள்களில் சோழப் பேரரசு இராணுவ முறையில் வளர்ந்ததைப்பற்றி வியப்பு ஏற்படுவதற்கில்லை. ஆனால், அதே இராணுவப் போக்கின் பேதலிப்பின் காரணமாகச் சோழப் பேரரசு அழியத் தொடங்கியதுதான் சிறப்புச் செய்தி ஆகும். ஆதித்த சோழன் உருவாக்கிய இராணுவ ஏகாதிபத்திய போக்கினை ராஜராஜன் I சோழ அரசிற்குரிய வாழ்வுப் பாதையாக்கினான். இதனால்தான் ராஜேந்திரன் I போன்ற மன்னர்கள் போராடிக்கொண்டே வாழ வேண்டிய நிலை ஏற்பட்டது. ராஜேந்திரனின் மைந்தர்களில் போரார்வமுடைய ராஜாதிராஜனுக்கு மகுடம் கிடைத்தது. பத்தாண்டுக் காலம் பாசறையிலேயே வாழ்ந்த அம் மன்னனுடைய வீரம், உள்நாட்டு நிர்வாகத்திற்கும் பயன்பட வழி இல்லாத அளவில் அன்றுள்ள இராணுவச் சூழ்நிலை அமைந்திருந்தது. போர்க்களத்திலேயே அச் சோழன் இறந்துவிடுகின்ற

2 K. A. N. Sastri—' Cholas '—1955—p. 556

3 K. K. Kusuman's ' Slavery in Travancore'—1973—p. 12

அளவிற்குச் சோழப் பேரரசின் இராணுவப் போக்கு வளர்ந்து மதர்ப்புக்கொண்டிருந்தது. இந்த வளர்ச்சியின் விளைவாகப் படை நடத்துகின்ற தானைத்தலைவர்கள் சோழரின் அரசாங்கத்திற்கு இன்றியமையாதவர்களாகி விட்டார்கள்; அவர்களைச் சார்ந்து நிற்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் சோழ மத்திய அரசு சிக்கிக்கொண்டது. இத்தகைய படைத்தலைவர்களும் பாடிக் காவல்காரர்களும் நாளடைவில் அரசியலதிகாரம் செய்யத் தொடங்கினார்கள்; குறுநில மன்னர்களாக ஆகி விட்டார்கள்; குலோத்துங்கன் I காலத்திலேயே தங்களுக்குள் இராணுவ ஒப்பந்தங்கள் செய்துகொள்ளத் தொடங்கினார்கள். இவர்களைச் சேர்ந்த காடவராயரில் ஒருவரான கோப்பெருஞ்சிங்கன் தன்னுடைய அரசனை ராஜராஜன் III சோழனையே சேந்தமங்கலத்தில் சிறை வைத்தான். அந்நியர்களாக வந்த பாண்டியர்—போசளர் படையெழுச்சிகளின்போது அவ்வந்நியரோடு சேர்ந்துகொண்டு சோழ அரசுக்கும் சோழ மக்களுக்கும் விரோதமாகச் செயல்படுகின்ற அளவிற்கு அக் குறுநில மன்னர்கள் வளர்ச்சியுற்றிருந்தார்கள். இந்த அளவிற்கு இக் குறுநில மன்னர்கள் வளர்ச்சியுற்றுப் போனதால் சோழப் பேரரசு அழிய நேரிட்டது.

**3. சோழப் பேரரசின் விரிவாற்றலும் அதன் விளைவுகளும் (Chola Empire's Vastness and its Unwieldy Growth):** ராஜராஜன் I காலத்தில் சோழப் பேரரசு தென்னகமெங்கும் பரவி நின்றது. துங்கபத்திரை தொடக்கம் கோதாவரியின் தென் கரையைத் தொட்டுவிட முனைந்து நின்ற எல்லை வடக்கே அமைந்திருந்தது; காவிரியின் உற்பத்தி இடமான குடகு நாடு தொடங்கி மேற்குத் தொடர்ச்சி மலை தெற்கே முடிந்த நிலையில், தென்னிந்திய தீபகற்பத்தின் தென்பகுதி அனைத்தும் பேரரசிற்குரியதாயிற்று. இப் பேரரசின் 'தனி முடி கவித்தாளும்' சிறப்பு கடல் கடந்து ஈழத்திற்கும் சென்றமர்ந்தது. இவ்வளவு பெரிய பேரரசைக் கட்டிக் காப்பதற்குரிய நிர்வாகத் திறனை அவர்கள் பெற்றிருந்தார்கள் என்பது உண்மைதான். கிராமப் பஞ்சாயத்து முறையும், வணிகர் போன்றவர் குழுக்களின் ஆட்சி முறையும் மத்திய அரசின் ஆட்சிப்பளுவை வெகுவாகக் குறைத்தன என்பதும் உண்மையாகும். ஆனாலும், அகன்ற சாம்ராஜ்யத்தை அந் நாளையில் காணப்பெற்ற திறனற்ற தொடர்புச் சாதனங்களைக் (Means of Communications) கொண்டு நிர்வாகம் செய்வது கடினமான செயலாகும் என்பது ஐயமில்லை. இந் நிலையில் சோழப் பேரரசின் எல்லைப்புறப் பகுதிகள் மத்திய அரசின் பிடிப்பிலிருந்து வல்லரசின் வலுக்குன்றிய உடனேயே கழன்று

சென்று விட்டன என்பது வியப்புக்குரிய செய்தி அல்ல. மத்திய காலத்தில் ஏற்பட்டிருந்த எல்லாப் பேரரசுகளைப் போலவே சோழப் பேரரசும் அளவிற்கு மேலாக விரிவாக்கம் கொண்டு அதன் காரணமாகச் சிதறலுற்று அழியத் தொடங்கியது எனலாம்.

4. **ஆதாயமில்லாத வெளிநாட்டுக் கொள்கை (Fruitless Foreign Policy):** சோழப் பேரரசர்களின் இராணுவ வலிமை யானது பெரும் பேரரசை உருவாக்கிக் கொடுத்தது எனலாம். அவர்களுடைய வெளிநாட்டுக் கொள்கை இராணுவ வெற்றிகளைப் பெறுகின்ற வகையில் வல்லடிப்போர்களைத் தொடங்கியது. அப் போர்களின்மூலம் இராணுவ ஏகாதிபத்தியத்தை (Military Imperialism) சம்பாதித்த பிறகு அதனைக் காப்பதற்கு எப்போதும் போராயத்த நிலையிலேயே இருக்க வேண்டியதாயிற்று. ' சிறந்த பாதுகாப்புக்கு உரிய சிறந்த வழி யாதெனில் எதிரியை வலிந்து சென்று தாக்குதலே' பேரரசு கட்டிய உரோமானியர் தம்மு டைய போராற்றலை இவ்விதமாகத்தான் வளர்த்துக்கொண் டார்கள். அது போல ராஷ்டிரகூடரையும் சாளுக்கியரையும் சோழர்கள் வலியச் சென்று தாக்கினார்கள்; இதற்குக் காரணம் என்ன? மாற்றாரால் சோழ நாட்டினருக்கு நேரிடவிருந்த இன்னலைத் தடுத்து நிறுத்துவதற்குத்தான் சோழரின் படை யெடுப்புகள் நிகழ்ந்தன என நாம் பொருள் கொள்ள வேண்டும். ஆனாலும், இத்தகைய தாக்குதல்களைச் சாளுக்கிய நாட்டில்தான் பெருமளவிற்குச் சோழர்கள் நடத்தினார்கள். இதற்குக் காரண மாக அவர்களுக்கிருந்த போரார்வ வீரத்தையும் படைநடத்தும் ஆற்றலையுந்தான் நாம் கூற முடியும். சாளுக்கிய நாட்டுக்குள்ளே சென்று, நாடு நகரங்களைப் பெருநாசத்துக்கு உள்ளாக்கிய போதிலும், அந் நாட்டினை அவர்களால் கவர்ந்து ஆட்சி செய்ய முடியவில்லை; இரட்டபாடி ஏழரை இலக்கம் என்று ரெய்ச்சூர் இடைக்கழி நாட்டை அதனுடைய கிராமங்களிலிருந்து வரும் வருமானத்தைக் குறித்துச் சொல்வர். அந்த இரட்டப்பாடியும் மற்றைய நிலப்பகுகளும் சோழரின் படைகள், தமிழகம் திரும்பிய வுடன் சாளுக்கிய மன்னனிடமே திரும்பிக்கொண்டன. ஆகவே, அவற்றிலிருந்து சோழருக்கு நேரடியான வருவாய் எதுவும் (State Revenue) அமையவில்லை. போரில் கவரப்பட்ட பொன்னும், பொருளும், அடிமைகளும் சோழ நாட்டில் பொருளாதார ஆக்கத்தை உருவாக்குகின்ற வகையில் பயன்படுத்தப்படவில்லை. ராஜராஜன் I காலத்தில் அத்தகைய முறையில் ஈட்டப்பட்ட தங்கம் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வழங்கப்பட்டது என்பதை முன்பு பார்த்தோம். உள்நாட்டில் பெரிய கோவில்களைக் கட்டு வதற்காக வல்லடித்தனமான வெளிநாட்டுக் கொள்கையைப்

பின்பற்ற வேண்டுமா ?—இது கேள்வி. ஆனால், சோழர்களின் வெளிநாட்டுக் கொள்கை செயல்பட்டபோது சோழருக்குக் கிடைத்த நலன்களில் அது ஒன்றுதான் கவர்ச்சியாகக் காணப் பட்டது.

வேங்கி நாட்டின் பாதுகாப்புக்கு உறுதி செய்யச் சோழ அரசு 'காப்பு'க் கட்டிக்கொண்டது. அந்த நாட்டைச் சாளுக்கியரிட மிருந்து பாதுகாக்கின்ற பொறுப்பைச் சோழப் பேரரசு தன்னுடைய இராணுவப் பாதுகாப்புக்காக மேற்கொண்டது என்ற கருத்தும் உண்டு. வேங்கி நாட்டைத் தன்னுடைய பாதுகாப்புக் குடை (Protective Umbrella) கொண்டு தாங்கி நின்ற இராணுவத் தோரணையைச் சோழப் பேரரசின் ஆளுகைத் திறன் வெளிப்பாடு (Manifest Destiny) என நாம் சித்தரிக்கலாம். அமெரிக்கா விற்கு வாய்த்த மன்ரோ கொள்கை (Munroe's Doctrine) போல வேங்கிப் பகுதிக்கு வாய்த்த ராஜராஜன் கொள்கை (Rajaraja's Doctrine) என்றளவில் அந் நாளையச் சோழரின் வெளிநாட்டுக் கொள்கை வேங்கியின் பாதுகாப்புக்குத் துணை சென்றது. இவ்வாறு பேரரசுக்குரிய பெருமிதத்தைக் காட்டிய நிலையில் சோழ நாட்டுக்கு நீடித்த பயன் ஏதும் விளையவில்லை. சோழரின் படைகள் போவதும், வெற்றி கொள்வதும், பின்பு அவை நாடு திரும்பிய வுடன் வேங்கிநாடு சாளுக்கியர் வசமாகி விடுவது என்பதும் நடை முறை வழக்கமாகி விட்டது. குலோத்துங்கன் I சோழ மன்னனான போது சாளுக்கிய இரத்தம் பாய்ச்சப்பட்டுச் சோழ அரச பரம்பரை வீரியமடைந்தது. இது ஒன்றுதான் வேங்கியைப் பாதுகாக்க முனைந்து நின்ற சோழரின் வெளிநாட்டுக் கொள்கையில் விளைந்த நேரடி நன்மை என நாம் கூறலாம். கங்கை நதிக்கரை வரை படையெடுத்துச் சென்று மீண்ட சோழரின் படைகள் சோழ நாட்டுக்குரிய அரசியல் ஆதாயம் ஏதேனும் பெறுவதற்காக அவ் வளவு பெரிய இராணுவ நடவடிக்கையை மேற்கொள்ளவில்லை. ரைன் நதிவரை ஃபிரான்ஸ் நாட்டின் எல்லையை விரிவாக்கி, தன்னாட்டிற்கு இயற்கையான எல்லையைக் கொடுப்பதற்குத்தான் (வெறுமையான இராணுவக் கீர்த்தியைமனதில் எண்ணிச் செயல் பட்ட) லூயி XIV கூட முயற்சித்தான். இந்தியாவின் பதுக்கல் செல்வங்களைக் கொள்ளையிட வந்த கஜினி முகமதுகூடப் பஞ்சா பின் ஒரு பகுதியில் நிலைநின்ற கஜினிப் பேரரசை நிலைநாட்டி விட்டுச் சென்றான். இவ்விரண்டு வல்லடிப்போர் மன்னர்களுக்கும் அரசியல் ஆதாயமிருந்தது. இது போலல்லாமல் ராஜேந்திரன் I சோழனுக்கு அரசியல் ஆதாயமில்லாத கங்கைநீர் கொணர் கின்ற புனிதப் பயணப் போராகக் கங்கைப் படையெழுச்சி அமைந்தது. சிலுவைப் போரைப் புனிதப் போராக நடத்திய

ஐரோப்பியர்களுக்குப் படைமானியத் திட்டத்தை உருக்குலைக்கின்ற வகையில் பிரபுக்கள் இறத்தல். மேலே, கீழை நாட்டுக் கலாசாரப் பரிமாற்றம் போன்ற நன்மைகள் வாய்த்தன. இது போன்று கங்கைப் படையெழுச்சி சோழ நாட்டுக்குரிய ஆதாயங்களைத் திரட்டித் தரவில்லை. கங்கை நதிப் புறத்து சைவசாரியார்கள் தமிழகத்துக்கு வருகை தந்தது, மதிலையில் தமிழ் குடியிருப்பு, 'சேனு' என்ற வங்க நாட்டரசியலுக்குரிய வம்சா வமிசத்தினரின் தோற்றம் போன்றவை சோழ நாட்டுக்குப் பிரதானமான ஆதாயங்கள் ஆக மாட்டா. இராணுவ வெற்றிப் பெருமிதம் மிதந்து நின்ற 'கங்கை கொண்ட' என்ற பட்டம் ராஜேந்திரனுக்கும், அவன் புதிதாகக் கட்டிய நகரத்திற்கும் சோழ நாட்டின் இராணுவக் கீர்த்தியின் (Military Prestige) சாயலாகக் காணக் கிடைத்தது. அவ்வளவே. சேரன் செங்குட்டுவன் கனக விஜயரைக் கல்லேற்றி வந்த கலாசாரப் பெருமிதத்தைத் தாங்கி நின்ற சங்க காலம் போன்ற தன்னுணர்வுக் காலம் (Heroic Age) விஜயாலயச் சோழர்கள் ஆண்டபோது தமிழகத்தில் நிலவவில்லை. தனியாரும் அரசினரும் தன்முனைப்புக் கொண்டு தந்நலமோடு வாழப் பழகிக்கொண்ட உலகியற்குரிய காலம் சோழரின் காலம். 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்ற கோட்பாட்டுக்கு ஆயிரமாயிரம் வீரர்கள் அணிவகுத்துப் போர் செய்த சங்க காலத்திய உணர்ச்சிப் பூர்வமான வாழ்வு நியதியை அப்படியே பின்பற்றுகின்ற முறையைத்தான் கங்கைப் படையெழுச்சியில் நாம் பார்க்கிறோம். புகழ் என்ற சமூகவுணர்விற்குப் பதிலாகச் சமயச் சார்பான அருளார்வம் சோழர் காலத்தில் நிலை கொண்டது. இவ்வாறு நாட்டுக்கு நேரடியான நன்மை செய்ய இயலாத படையெழுச்சிகளைச் சோழர்கள் நடத்தியபோது நாட்டினுடைய ஆக்க சக்தி (creative energy) சிதறடிக்கப்பட்டது. புனிதநீர் கொண்டுவரப் படைநடத்திச் செல்லுகின்ற அளவிற்கு ராஜேந்திரன் I அரசியலை எளிமைப்படுத்தினான். இந்த நிலையின் பின்னணியில் அதனுடைய பிற்கால அழிவின் நிழலாட்டத்தை நாம் உய்த்துணர வேண்டும்.

இராணுவ அடக்கு முறைதான் சோழரின் வெளிநாட்டுக் கொள்கையில் உயிர்நாடியாக விளங்கியது எனலாம். அவ்வாறு அடக்கப்பட்ட மக்கள் தங்களுடைய தனிவுணர்வை (self-identity) இழக்குமாறு செய்ய வேண்டிய கலாசாரத் திணிப்பையும் சோழர்கள் மேற்கொண்டார்கள். அவர்கள் கைப்பற்றிய நாடுகளிலெல்லாம் 'சோழர்மயமாக்குதல்' (cholaisation) என்ற திட்டத்தின்படி சோழ அரசர்களின் பெயர்களால் ஆங்காங்கே உள்ள ஊர்கள், தெருக்கள், கோவில்கள் அழைக்கப் பெற

லாயின. இந்தக் கொள்கை அரசியல் விவேகமுடையதாகக் காணப்பெறவில்லை. பண்டைய உரோமப் பேரரசு, தான் கைப் பற்றிய பகுதிகளில் அப் பகுதிகளுக்கான கலாசாரத்தைக் குலைக்க எத்தனிக்காத காரணத்தால் இஸ்ரேலியர்கூட ஏசுபிரான் காலத்தில் உரோமானியரை அரசியல் பூர்வமாக எதிர்க்கவில்லை என்பது வரலாற்றுக் கருத்து. ஆனால், கலாசாரத் திணிப்பு செய்த சோழர்களோடு ஈழத்தாரும், பாண்டியரும் போரிட்டு, பகை வளர்த்து சோழர்களுடைய வலிமைக்கு ஊறு ஏற்படுத்தியது பிற்கால நிகழ்ச்சியாகிச் சோழரின் அழிவுக்கு வழிகாட்டியது.

சைலேந்திரர்களோடு போராடுவதற்காகச் சுமத்திராத் தீவி லுள்ள ஸ்ரீவிஜயநாட்டிற்குச் சோழருடைய கடற்படை ராஜேந் திரன் I காலத்தில் சென்று வெற்றியுடன் மீண்டது. காலனி ஆதிக் கத்தை அங்கு நிலைநாட்டிச் சோழருக்குரிய பொருளாதார ஆதா யத்தை அரசியல் முறையில் வகுத்துக்கொள்ள அவர்கள் எண்ணமிடவில்லை. நாகப்பட்டினத்தில் ஸ்ரீவிஜயத்தாரின் மனதிற்கிசைந்த முறையில் புத்த விகாரத்திற்கு ராஜராஜன் I காலத்தில் ஆணைமங்கல முற்றூட்டுக் கொடுக்கப்பட்டு ராஜேந் திரன் I காலத்தில் உறுதி செய்யப்பட்ட பிறகுகூட அந் நாட்டின ரால் சோழருக்கு இடர்ப்பாடு ஏற்பட்டது. சீனர்களிடம் சோழரைப் பற்றிய நல்லெண்ணம் வளரவிடாமல் அவர்கள் தடுத்தார்கள். ஆகவே, கீழை நாடுகளைப் பொறுத்த அளவில் சோழர்கள் பின்பற்றிய பகை உணர்வும், நேசபாவமுங்கூடிய வெளிநாட்டுக் கொள்கையின்மூலம் அரசியல் ஆதாயங்களோ, பொருளாதார நலன்களோ அவ்வளவாகப் பெறப்படவில்லை.

'தோற்றவரே வென்றார்' என்ற முறையில் கீழைநாடுகள் தான் கலாசார வளர்ச்சியைச் சோழர்களிடம் பெற்றுக்கொண்டன. இராணுவ ஏகாதிபத்தியத்தை நிலைநாட்டுவதற்குரிய வெளி நாட்டுக் கொள்கையில் ராஜதந்திரத்திற்கு உரித்தான குறைவு பெருமளவிற்குக் காணப்படவில்லை. சான்றாக, பாண்டியர்—சேரர்—சிங்களவர் என்ற மூன்று நாடுகளின் அரசியல் ஒருங் கிணைவு (Tripolity) சோழருக்கு ஒரு சவாலாகத் தோற்றம் அளித்தபோது சோழர்கள் இராணுவ முயற்சிகொண்டு அதனை அழித்து வெற்றிகொள்ள நினைத்தார்கள். ராஜராஜன் I காலந் தொட்டு தொடங்கப்பட்ட இந்த இராணுவ முயற்சி பேரரசுக்குரிய எழுச்சியான காலமான 130 ஆண்டுகளும் இடைவிடாது காணப் பெற்றது; ஆனால் பயனில்லை. சோழர்களால் பாண்டிய மன்னர் களாக மதுரையில் அமர்த்தப்பட்ட அத்தனை பேரையும் சிங்களவர் தங்கள் பக்கம் எளிதாக இழுத்துக்கொள்கின்ற அளவிற்குப்

பாண்டியர்—சிங்களவர்—சேரர் இணைவு உரங்கொண்டு விளங்கியது. இதைச் சரியான கண்ணோட்டத்தில் எடைபோட முடியாத இயலாமையைச் சோழரின் வெளிநாட்டுக் கொள்கை வெளிக்காட்டியதன் காரணமாகச் சோழப் பேரரசை அழிக்கின்ற இரண்டாவது பாண்டியப் பேரரசு 1190-ல் தோற்றங்கொண்டு வளர்ந்தது. பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த லூயி XIV வல்லடிப்போர்களை ஏற்படுத்தி இராணுவ வெற்றிகளைப் பெற்று அதன் புகழை அனுபவிக்கின்ற பழுதுபட்ட வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்றினான். அது போல, படை நடத்திப் பல நாடுகளைப் பிடித்த போதிலும் போதுமான ஆதாயங்களைத் தேடிக் கொள்ளப் பின்தங்கி விட்ட வெளிநாட்டுக் கொள்கையால் சோழப் பேரரசிற்கு ஆதாயங்கள் கிடைக்கவில்லை; மாறாக இழப்புகளே அதிகம் எனலாம். பிழைபட்டுக் காணப்பெற்ற வெளிநாட்டுக் கொள்கையின் காரணமாகவும் சோழப் பேரரசு அழியத் தொடங்கியது.

**5. குலோத்துங்கன் I கைக்கொண்ட பேரரசுக் கோட்பாடு பின்பற்றப்படாமை (Kulotunga I's Neo-imperialism and Impopularity):** ராஜராஜன் I தொடங்கிய சோழப் பேரரசின் வீரியமான வளர்ச்சியானது சோழரின் இராணுவ முயற்சியில் உயர்ந்தோங்கிய பின்பு, வீரராஜேந்திரன் ஆண்ட காலத்தில் சலிப்பு அடையத் தொடங்கியது. இதை அடுத்து அரசபதவிக்கு 1070-ல் வந்த குலோத்துங்கன் I வல்லடிப்போர்களைக் கைவிட்டான். 'சுங்கந்தவிர்த்தருளி' நாட்டின் பொருளாதாரச் சமுதாய நலன்களைப் பேணுகின்ற ஆக்கப்பணிகளில் சோழப் பேரரசின் சக்தியைத் திருப்பிவிட அவன் முடிவு செய்து அதனைச் சாதித்தும் காட்டினான். இவ்வாறு இவனால் ஒருவகை புதுமைப் பேரரசுக் கோட்பாடு (neo-imperialism) சோழ அரசியலில் நிறுவப்பட்டது. இவனுக்குப் பின்பு ஆட்சிக்கு வந்த சோழ மன்னர்களில் ஒரு சிலரைத் தவிர, மற்றவர்கள் இக் குலோத்துங்கனைப் பின்பற்ற முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. இராணுவப் போக்கின் அடிப்படையில் பெறப்படுகின்ற புகழை எண்ணி வல்லடிப்போர்களை அவர்கள் தொடர்ந்து நடத்தினார்கள். குலோத்துங்கனை அவர்கள் பின்பற்றாத காரணத்தால் ஆக்க வேலைகளுக்குக் கிடைக்க வேண்டிய வளம் அனைத்தும் 'விழலுக்கு இறைத்த நீராக' வல்லடிப்போர்களைச் சென்றடைந்தது. ஏற்கெனவே வலிமை குன்றி வந்த சோழப் பேரரசில் எஞ்சி நின்ற வளமும் போர்களில் வீணடிக்கப்பட்ட சூழ்நிலையில் சோழப் பேரரசின் அழிவிற்கான காலம் விரைவு படுத்தப்பட்டது என நாம் கருதலாம்.

**6. சோழப் பேரரசு அழிவதற்குக் குலோத்துங்கன் III சோழனுக்குரிய தனிப்பட்ட பொறுப்பு (Personal Responsibility of Kulotunga III) :** சோழப் பேரரசின் வலிமை குன்றிய காலத்தில் சோழப் பேரரசனாகவே என்றும் விளங்குவதற்காகக் குலோத்துங்கன் III (1078—1218) பற்பல முயற்சிகளை மேற்கொண்டான் ; பற்பல தவறுகளையும் அவன் செய்தான். உள்நாட்டில் தன்னாப்பு அரசதிகாரம் செய்ய எழுச்சியுற்றுத் துடித்துக் கொண்டிருந்த குறுநில மன்னர்களின் போராவேசத்தைத் திசை திருப்பிவிடுகின்ற பாணியில் பாண்டிய நாட்டின்மேல் இக் குலோத்துங்கன் படையெடுத்துச் சென்றான். படையெழுச்சி நடத்துதல் என்பது குற்றமில்லைதான். ஆனால், அப் படையெழுச்சியின்போது மதுரையை அழிக்கின்ற செயலை அவன் மேற்கொண்டான்; பாண்டியனுடைய அந்தப்புரத்தின் பெண் பாலாரைக் கட்டுப்படுத்தினான். இவை அனைத்தும் போர்ச் செய்கைகளே (Acts of War). ஆனால் 1190ஆம் ஆண்டு தொடக்கம் பேரரசாக வளரத் தலைப் பட்ட பாண்டிய நாட்டில் 1209-ல் இக் குலோத்துங்கன் இவ்வாறு நடந்துகொண்டதானது பாண்டியரின் தீராப் பகையுணர்ச்சிக்கும், பழி வாங்கும் எண்ணத்திற்கும் உரமிட்டது. 1216-ல் சுந்தர பாண்டியனின் படையெடுப்பால் சோழ நாட்டின் உறையூர் தீ கொளுத்தப்பட்டது. 1279-ல் பாண்டியரின் மற்றொரு படையெடுப்பால் சோழநாடு என்ற பெயர்கூட இழந்தது ; பாண்டிய நாட்டின் அங்கமாகச் சோழர்களுடைய மண்டலம் மாறிவிட்டது.

**7. பாண்டியர்—போசளர் படையெடுப்பு மோதலில் சோழ நாடு நசுங்கல் :** பாண்டியரின் இரண்டாவது பேரரசின் வடக்கு நோக்கியப் பாய்ச்சலும் போசளருடைய சாம்ராஜ்யத்தின் தெற்கு நோக்கிய விரிவாற்றலும் சோழ நாட்டின்மேல்தான் ஒன்றையொன்று சந்தித்தன. அதன் விளைவாகச் சோழ அரசு நசுக்கப் பட்டுப் போயிற்று. பாண்டியரும் பல்லவரும் ஒன்பதாம் நூற்றாண்டில் மோதிக்கொண்டபோது காவிரிப் பகுதியில்தான் போசளரும் பாண்டியரும் போரிட்டுக்கொண்டனர். ஃபிரெஞ்சுக் காரர்களோடு போரிட்ட ஜெர்மானியர் டச்சுக்காரர் போன்றோர் பெல்ஜியத்தை ஐரோப்பாவின் கோழிச் சண்டைப் பிரதேசமாக (Cockpit of Europe) ஆக்கியதைப் போலத் தென்புலத்துப் பாண்டியர் பேரரசுப் போட்டிக்காக வடபுலத்துப் பேரரசர் களோடு சோழ நாட்டின் மேலாகத்தான் எப்போதும் போரிட்டது. சோழ நாடு அவர்களுடைய போர் அரங்கம் (theatre of war) என்றாகிவிட்டது. இது காரணமாகச் சோழ அரசினுடைய வலிமை குன்றியது. நாட்டு மக்களின் உடைமைகளுக்குப் பாதுகாப்பு

கொடுக்கச் சோழ அரசாங்கத்தால் இயலாமல் போய்விட்டது. சான்றாக, போசளரின் இராணுவ நடமாட்டம் காரணமாகக் கோவில் சிலைகள்கூட அப்புறப்படுத்தப்பட்டன. வரிக்கணக்குப் புத்தகங்கள் படைஞர்களால் தீக்கிரையாக்கப்பட்டன என ஆராய்ச்சியாளர் திரு. பண்டாரத்தார் குறிப்பிடுகின்றார்.[4] உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு கொடுக்க முடியாத அளவிற்குச் சோழ நாட்டில் அந்நியரின் இராணுவ ஊடுருவல்கள் நிகழ்ந்தன. 1239ஆம் ஆண்டுக்குரிய சிவபுரம் கல்வெட்டு (279 of 1927) கூறுகிற செய்தியிலிருந்து சோழ மண்டலத்தின் தஞ்சைப் பகுதியை ஆயுதந்தாங்கிய கன்னடியப் போர்வீரர்கள் (போசளர்) தங்களுக்குப் பணம் கொடுத்த தீயவரின் ஆணைக்கேற்ப மக்களைத் துன்புறுத்தினார்கள் என்ற ஆராய்ச்சிக் கருத்தைப் பேராசிரியர் அவர்கள் குறிப்பிடுகின்றார்.[5] இதன் காரணமாகவும் சோழ அரசாங்கத்தின் வலிமை குன்றியது. இவ்வாறு சோழ அரசு அழிவதற்கான காரணங்களில் பாண்டியர்—போசளரின் இராணுவ நடவடிக்கைகளின் காரணமாக உள் நாட்டில் ஏற்பட்ட நலிவுகளையும் சேர்த்துக் கூறலாம்.

**8. சாதி முறையினால் சக்தி இழந்த சோழச் சமுதாயம்:** சோழருடைய அரசு வீழ்ச்சியுறுவதைத் தடுத்து நிறுத்த சோழ நாட்டு மக்கள் தன்னிச்சையாகச் செயல்படுவதற்கு வழி இல்லை. ஏனென்றால், சாதிமுறையின் காரணமாக அவர்களுடைய வாழ்வு நலங்கள் அவரவர்களின் இருப்பிடங்களிலுள்ள வர்ணாசிரம தர்மத்தின்படி வரையறுக்கப்பட்டன. அவரவர்க்கு என அமைந்த வாழ்வு முறையில் அவர்கள் பிணைக்கப்பட்டுப் போயிருந்தார்கள். அந்த அளவில் சோழ நாட்டின் சமூக சக்தியானது (social energy) குறுநிலைச் சுழற்சி (short circuit) பெற்று விரிவாக்கம் இல்லாமல் உள்குமைச்சலாக உருமாறிக் கொண்டது. மிகவும் கடினமான சாதிக் கட்டுப்பாடுகள் நிலை பெற்றன; சாதி ஆசாரத்தின் ஆணிவேர் அறுபடவே இல்லை. புதுமையோடுகூடிய சமுதாயப் பார்வைக்குரிய மனப்பக்குவம் ஏற்படக்கூடிய காலமும் அது அல்ல. எனவே, சமுதாயத்தில் சாதி ஆசாரத்தை எதிர்த்து நடக்கின்ற போராட்டங்கள் காணப் படவில்லை. சமுதாய இயைபு (social harmony) பெரும்பாலும் காணப்பட்டது; ஆனாலும் சமுதாயச் செயலூக்கம் (social dynamism) காணப்பெறவில்லை எனலாம். சாதிப் பிரிவினைக்கு மேலே மற்றொரு பிரிவினை இடங்கை, வலங்கை வகுப்பார்

4 Supra Chapter II—Vol. I-p. 527
5 K. A. N. Sastri—' Cholas '—p. 427

என்றளவில்—அந் நாளையச் சமுதாயத்தைக் கூறு போட்டது. அந்தணர்கள் உழக் கூடாது என்றும், வேளாளருக்கு மரண தண்டனை வழங்கக் கூடாது என்றும் சமுதாய நியதிகள் சட்டங்களாக்கப்பட்டு நிலைபெற்றன. வீட்டு வாசலில் மலர் வைத்துக் கொள்வதும், தோளில் ஆடை அணிந்து கொள்வதும் அரசினரால் கம்மாளருக்கு விசேஷச் சலுகைகளாக வழங்கப்படுகின்ற அளவிற்குச் சாதி ஆசாரம் கடுமையாக இருந்தது. இந்த நிலையில் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி அந்நியப் படையெடுப்பாளரை எதிர்க்க எப்படி அணி திரளுவார்கள்? அது அவர்களால் இயலாத காரியம் ஆகும். ஸ்காட்லாந்து நாட்டின் ஹைலாந்தியர்கள் (Highlandiers) மத்திய காலத்தில் தங்கள் நாட்டரசைக் காப்பதற்கு என இங்கிலீஷ்காரர்களை எதிர்த்து நின்ற வரலாற்று நிகழ்ச்சிக்கு உரித்தான வீரத்தைச் சோழ மக்களும் செயல்படுத்துவதற்கு வழிவகை செய்கின்ற சமுதாய அமைப்பு அந்த நாளில் தமிழகத்தில் காணப்பெறவில்லை.

**9. ஸ்தல சுயாட்சி முறையின் சீர்மையின் நிழலாக வந்த தீமை:** சோழப் பேரரசிற்குரிய தலையாய நலன்களுக்கு மேம்பாடுடையதாகக் கிராமக் குடியரசு முறையை எடுத்துச் சொல்வர். இங்கிலாந்து போன்ற நாடுகளில் மன்னனுக்குப் பணம் கொடுத்து வாங்கப்படும் சாசனம் (charter) துணைகொண்டு நகரங்களில் மக்கள் குடிமக்களுக்குரிய உரிமைகளை (civil liberties) அனுபவிக்க முடிந்தது. சோழ நாட்டு மக்கள் அத்தகைய உரிமைகளைத் தங்களுக்கென ஏற்கெனவே அமைத்திருந்த இயல்புரிமைகளாக (natural rights) அனுபவித்து வளர்ந்தார்கள். கிராமக் குடியரசிலும் நகரத்தின் 'ஊர்' என்ற நகராண்மை மன்றத்திலும் அவர்களுடைய வாழ்வின் அனைத்து இலட்சியங்களும் நிறைவு எய்தின. இம் மன்றங்களைக் கடந்து செயலாகிக்கொண்டிருந்த சோழ நாட்டுக்குரிய பொது வாழ்வைப் (destiny of the land) பற்றிய அக்கறை கொள்ளாமலேயே அவர்கள் நிறைவாக வாழ முடியும் என்ற நிலைமை அன்று எங்கும் காணப்பட்டது. இந்த நிலையில் சோழருடைய மத்திய அரசைப்பற்றிய எண்ணம் மக்களுக்கு ஏற்படவில்லை. கோவில்களில் மன்னர் பற்றிய விழாக்கள், காலட்சேபங்கள் நடந்த காலங்களிலும், ஊர்மன்றத்தைக் கண்காணித்த மத்திய அரசின் அதிகாரிகளைச் சந்திக்கின்ற போதும், அரசன் உலா வந்த காலங்களிலும், போர் நடந்த நாள்களிலும் மத்திய அரசைப்பற்றிய நினைவு மக்களுக்கு ஏற்பட்டது. மற்றபடி ஊர்மன்றமே அவர்களுக்குரிய உலகமாக விளங்கியது. நீதி நிர்வாகம், வரி விதிப்பு போன்ற—வாழ்க்கையைப் பாதிக்கக்கூடிய—காரியங்களை மேற்கொள்ளு

கின்ற அதிகாரம் கிராம மன்றங்களுக்குத்தான் உண்டு என்றாகிய பின்பு சோழ அரசைப்பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படவில்லை. இங்கிலாந்தின்மேல் டென்மார்க் தேசத்தினர் படை எடுக்கும்போது டேன்கெல்ட் (Danegeld) என்ற போர் வரியைக் கிராம மன்றங்கள் கொடுத்தன. ஆனால், சோழ நாட்டிலோ போர்க்காலங்களில்கூட மத்திய அரசு அம் மன்றங்களை நிர்ப்பந்தப்படுத்தவில்லை. ஆதலால், மத்திய அரசின் போர் நடவடிக்கைகள்கூடக் கிராம மக்களைப் பாதிக்கவில்லை இவ்வாறு கிராம மக்கள் சுதந்தரமாகத் தங்களுக்காகத் தாங்க ளாகவே வரையறைப்படுத்திக்கொண்ட வாழ்வின் நலன்களை பிறரின் இடர்ப்பாடின்றிக் கிராம ஆட்சி முறையிலேயே துய்க்கக் கூடிய வாய்ப்பைப் பெற்றிருந்தார்கள். 'எம் நாடு சோழ நாடு' —என்ற உணர்வு கொண்டு செயல்பட்டாக வேண்டுமென்ற கட்டாயம் அங்குக் காணப்படவில்லையாதலால், இத்தகைய தனிமை வாழ்வு (life in isolation) சாத்தியமாயிற்று. இத் தனிமை வாழ்வின் நேரடிப் பாதிப்பாகச் சோழ அரசு நாட்டுக் குரிய நலன்களைப் பேணுகின்ற முறையில் மக்களிடையே நேரடி யான முறையில் செயல்பட முடியாமற்போனதைக் குறிக்கலாம். இதே காரணத்தால்தான், சோழரின் அரசும் சோழ மண்ணில் வேர்ப்பிடிப்பில்லாமல் சாய்ந்தது.

**10. சோழ மத்திய அரசின் வலிமை குன்றியது :** தஞ்சாவூ ரிலிருந்து தென்னிந்தியாவை அடக்கி ஆளத் தலைப்பட்ட சோழர்களின் மத்திய அரசிற்கு ராஜராஜன் I, ராஜேந்திரன் I போன்ற வலிமை வாய்ந்த பேரரசர்கள் ஆண்டபோதுதான் பெருஞ்செல்வாக்கு (Prestige) காணப்பட்டது. குறுநில மன்னர்கள் எல்லோரும் அச் சோழ மாமன்னர்களுக்கு அடங்கிக் கிடந்தார்கள். இராணுவப் போக்கினால் சோழப் பேரரசின் எல்லைகள் விரிவாகிய பின்பு குறுநில மன்னர்களை நம்பி அரசாட்சியை நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது இது இயல்பானதுதான். இந்தச் சூழ்நிலையில் குறுநில மன்னர்களின் விருப்பு வெறுப்புக்கு ஏற்ப மத்திய அரசுக்கும் ஏனைய பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்கும் உள்ள தொடர்புகள் வலிமையாகவோ, தொய்வு கொண்டோ காணப்பட்டன.[6] கிராம மன்றத்தினர் சோழப் பேரரசனுடைய அரச ஆணைகளைச் (Royal Writes) சிரசினில் தாங்கிப் பெற்றுக்கொண்டனர். சாம்புவராயர், காடவராயர் போன்ற குறுநில மன்னர்கள் வளர்ந்த பின்பு அரச ஆணைகள் முன்பு போல மதிக்கப் பெறவில்லை. சோழ மன்னர் களின் செல்வாக்கு மங்கிப் போனதைத்தான் இது காட்டும்

6 T. V. Mahalingam—'South Indian Polity'—1967—p. 9

குனியார்கள் தங்களுடைய அரசியலதிகாரத்தைப் பயன்படுத்திக் கொடுமையான வரிவசூலில் இறங்கினார்கள். இந்த அடாத செய்கை மக்களைப் பாதித்தபோது கிராம மன்றத்து மக்கள் சோழ அரசனை நிந்திக்கவில்லை; சமுதாய மரபுகளுக்கு மதிப்பு கொடுத்து அவற்றை மீறுதலை 'நாட்டுத் துரோகம்' என்றுதான் அழைத்தார்கள். இவ்வாறு உள்நாட்டில் சட்டப்பராமரிப்பும் அமைதியும் குலைந்தபோது சோழ மன்னனுடைய அதிகாரத்தை மக்கள் துணைக்கு அழைக்கவில்லை. பேரரசு வலிமையாக இருந்த நாள்களில் அவ்வாறு அவர்கள் மத்திய அரசை நாடினார்கள் என்பதற்குச் சான்றாகக் கீழ்வரும் நிகழ்ச்சியைக் கூறலாம்: ராஜ ராஜன் காலத்தில் அரசியலதிகாரியின் கொடுமை நிகழ்ந்தபோது சோழனிடம் கிராம மக்கள் ஆளனுப்பித் தெரிவித்தார்கள். அவனும் அதற்குப் பரிகாரம் செய்தான்.[7] குலோத்துங்கன் I பின்புள்ள ஆட்சிக் காலத்தில் சோழ மன்னர்கள் தனி ஆணைத் திறன் கொண்டு விளங்காத போது யாதவராயன் போன்றவர்கள் வரிவசூல் கொடுமையைச் செய்தார்கள்.[8]

குறுநில மன்னர்களின் இணக்கத்தின்பேரில்தான் வரிவசூல் கொடுமைகளை ஏனைய அதிகாரிகள் நிகழ்த்தினார்கள். குறுநில மன்னர்களைப் பல வகைகளிலும் வளர்த்தவர்கள் சோழர்களே ஆவார்கள். 'நம்மகன்' என்றழைத்த வண்ணம் சோழர்கள் தங்களுக்குக்கீழிருந்த குறுநில மன்னர்களைத் தங்களைப் போன்ற எல்லா விதமான நலன்களையும் அனுபவிக்க அனுமதித்திருந் தார்கள். கோவில் கட்டுதல், கோவிலுக்குப் பொன் வேய்தல் போன்ற சேவைகள் எல்லாம் அச்சிறு மன்னர்களுக்குச் சமுதாயச் செல்வாக்கைப் பெற்றுத் தந்தன எனலாம். மக்களுக்கான பொதுப் பணியை எவரும் செய்யலாம் என்ற பெருந்தன்மையைச் சோழர்கள் கொண்டிருந்தார்கள். விக்கியண்ணனுக்குப் பல்லக்கில் போதல் போன்ற அரச விருதுகளை அனுபவித்துக்கொள்கின்ற அனுமதியை ஆதித்த சோழன் வழங்கிய செய்தியானது பழங் காலத்தில் சோழ மத்திய அரசின் வலிமையையும் அத்தகைய வலிமையின் உருவகமாக விளங்கிய சோழப் பேரரசனுடைய தன்னிகரற்ற மாட்சிமையையும் சுட்டிக்காட்டும். தாங்கள் கட்டிய கோவில்களில் தங்களுடைய பெயர்களையே மூலவருக்குரியதாகச் சூட்டியதோடு அறப்பணிகளையும் செய்து சோழர்கள் தங்களைச் சமுதாயத்தின் தலைமையாளர்களாக ஆக்கிக்கொண்டதைப்

7 Supra Chapter 5—Vol.-I—p.279

8 இது பற்றி அத்தியாயம் 5 (பொருளாதார நிலை—வரிகளும் வரிவிதிப்பும்) —Vol. II—p. 261- ல் பார்க்க.

போலக் குறுநில மன்னர்களும் அத்தகைய அந்தஸ்தைக் கோவில் கட்டிய நிலையில் அனுபவித்தார்கள். இத்தகைய நடவடிக்கைகள் எல்லாம் அரச பாவனைகள் (Royal Pretensions) என்றளவில் அமையவில்லை; மாறாக, அக் குறுநில மன்னர்களுக்குச் செல்வாக்கைப் பெற்றுத் தருகின்ற பொதுப் பணிகளாகவே அவை கருதப்பட்டன. இவ்வாறு கோவில் கட்டுதல் போன்ற பொதுப் பணிகளை இந்த வகையில் வளர்ந்திருந்த குறுநில மன்னர்கள் யாவரும் சோழ மத்திய அரசின் அலுவலாளராக—நாடாள்வான்களாக — செயல்பட்டார்கள் என்ற உண்மை நாளடைவில் மறக்கப்பட்டது; அவர்களுடைய நடவடிக்கைகளைக் கண்காணிக்கின்ற வகையில் எந்த விதமான நிறுவன ஏற்பாடுகளையும் சோழ மன்னர்கள் செய்திருந்ததாகத் தகவல் இல்லை. அலுவலாளர்கள் ஆங்காங்கே அரசதிகாரம் செய்யத் தொடங்கிய காலம் 13ஆம் நூற்றாண்டின் தொடக்கம் எனலாம். 14ஆம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசு எழுந்த காலத்திலும் இந்த வகையான அலுவலாளருடைய பிராந்திய அதிகாரம் தொடர்ந்து நிலைபெற்றது. இத்தகைய அலுவலாளர்களான நாயகர்களைக் (Nayakas) கட்டுப்படுத்துவதற்கு என விஜயநகர மன்னர்கள் அத்தகைய நாயகர்களிடமிருந்து பணய ஆள்களை வரவழைத்து, தங்களுடைய அரண்மனையில் தங்க வைத்தார்கள். நாயகர்கள் இவ்வாறான பிணைப்பில் இருத்தப்பட்டார்கள். இந்தப் பிரச்சினையை இவ்வாறு சோழர்களுக்குப் பின்னால் வந்த விஜய நகரத்தார் சமாளித்தது போல,[9] தமிழகத்தில் நிலைபெற்றுவிட்ட அரசியல் குறைபாடாக வளர்ந்த இத்தகைய அலுவலாளர் அதிகாரத்தைச் சோழர்கள் தங்கள் காலத்திலேயே அதற்கொரு தீர்வு காணவில்லை. இதன் விளைவாகச் சோழர்களின் மாகாண முறை ஆட்சி (provincial administration) நாளடைவில் சோழரின் மத்திய அரசின் கட்டுப்பாட்டுக்குள் தொடர்ந்து செயல்படவில்லை. ராஜேந்திரன் I காலத்தில் ஏற்பட்ட சோழ பாண்டியன் என்ற இளவரசு முறையும் அதற்கு முன்பு ராஜ ராஜன் I ஆட்சியின்போது நிறுவப்பட்ட ஒன்பது மண்டல ஆட்சி முறையும் நாளடைவில் இராணுவ வலிமை மிக்க நாடாள் வான்கள், குறுநில மன்னர்கள், அரசியலதிகாரிகள் போன்றோரால் உள்ளூர அரிக்கப்பட்டு, தன்மூப்புக்குரியவர்களின் தனிப்பட்ட ஆட்சிக்குரிய தனித்தனித் திட்டுகள் என ஆகிவிட்டன. 1219-ல் ராஜராஜன் II ஆட்சிக் காலத்தில் இந் நிலையில் சோழர்களின் மத்திய அரசு தன் வேர்களை இழந்த மரம் போலச் சாய்ந்தது.

9 T. V. Mahalingam—'South Indian Polity'—Madras University—1967—page 334

பஞ்சம் போன்ற பொதுவான இடர்ப்பாடுகள் தோன்றிய போது மக்களின் துயர் துடைக்க நிவாரணப் பணியில் மத்திய அரசு ஈடுபட்டதாகத் தகவல் இல்லை. தனியார் நிவாரணப் பணியில் ஈடுபட்டிருந்தபோது அரசும் அவ்வாறே செய்திராமல் வாளா இருந்திருக்க முடியாது என்ற முடிவை அனுமானமாகப் பேராசிரியர் சாஸ்திரி குறிப்பிடுகிருர்.[10] பஞ்சம் நிகழ்ந்த காலத்தி லேயே பிறநாட்டுப் படையெடுப்புகளை வல்லடியாக நடத்திய சோழ மன்னர்களுக்குச் சான்ருக, குலோத்துங்கன் III சோழனை நாம் குறிப்பிடலாம். 'குடியுயரக் கோனுயரும்' என்பது ஔவை வாக்கு; அர்த்த சாத்திரமும் இதையே வலியுறுத்தும். தன்மூப்பு கொண்டு, வரிவசூல் கொடுமைகள் இழைத்து, அரசதிகாரத்தை யும், சமூகச் செல்வாக்கையும் அரசனுக்குரிய தோரணையில் அனுபவித்து, பின்பு சோழ அரசனையே எதிர்த்து நின்ற குறுநில மன்னர்களால் சோழ மத்திய அரசின் அதிகாரம் முடக்கப்பட்டது. இதன் காரணமாகச் சோழ அரசின் மூலாதாரமான அதன் இறைமை (sovereignty) அழியத் தொடங்கியது. ஆகவே, சோழ அரசு நாளடைவில் அழிய நேரிட்டது.

**11. சட்ட நிர்வாகத்தின் கடுமையின்மை :** சோழ நாட்டில் குற்றங்கள் மலிந்தபோது அவற்றுக்குரிய தண்டனைகள் கடுமையாக இல்லை. ஒப்புமை நோக்கில் கீழ்க்கண்ட இரண்டு சான்றுகளைப் பார்ப்போம் : ராஜராஜன் III ஆண்ட காலத்தில் கோவில் நகைகளைத் திருடிய இரு பூசாரிகள் 'ராஜ துரோகம்' 'சிவ துரோகம்' என்ற குற்றஞ்சாட்டப்பட்டனர். அவர்களை விசாரணை செய்து, அவர்களுடைய உடைமைகளைப் பறிமுதல் செய்ததாக 1219ஆம் ஆண்டுக்குரிய சிவபுரம் (தஞ்சை மாவட்டம்) கல்வெட்டு கூறுகிறது (279 of 1927). நகைக் களவுக் குற்றத்தைப் பெரிதுபடுத்தி ராஜதுரோகம் என்றழைத்து உடைமைகளைப் பறிக் கின்ற மேற்சொல்லப்பட்ட சோழ நாட்டுச் சட்டத்தோடு விஜய நகரத்தாரின் சட்டத்தை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். திருச்சி மாவட்டம் நெய்வாசல் கல்வெட்டு கூறுவதுபோல, கோவில் நகை களைத் திருடிய உள்ளூர்க்காரனைச் சிறை செய்து, அவனுடைய ஒரு கரத்தைத் துண்டித்து, அவனுக்குரிய நிலங்களைப் பிடுங்கிக் கொண்டு கிராமத்தை விட்டே வெளியேறச் செய்தனர். சோழ நாட்டில் காணப்பட்ட சட்டம் எவ்வளவு மென்மையாக இருந்தது என்பது இப்போது இந்தச் சான்றுகளிலிருந்து புலப்படும். கொலைக்குற்றம் சாட்டப்பட்ட ஒரு குற்றவாளி தன் குற்றத்திற்

10 K. A. N. Sastri—'Cholas'—page 399, (560 of 1902)

காக மரணமடைய வேண்டாம் என்று நீதிபதி சொன்னதை[11] வைத்துக்கொண்டு பேராசிரியர் குற்றவாளிகளுக்கு மரண தண்டனை வழங்குவது என்பது சோழ அரசாட்சியில் உண்டு என்று வாதிடுகின்ற அளவிற்கு மரண தண்டனையைப்பற்றிய செய்திகள் நமக்கு அவ்வளவாகக் கிடைக்கவில்லை.[12] 15ஆம் நூற்றாண்டில் வந்த சௌ-ஜி-குவா என்ற சீனநாட்டு ஆசிரியன் சொல்வது போல, சோழ நாட்டில் குற்றவாளிகளை யானையின் காலால் இடறச் செய்தார்கள். சோழருக்குப் பின்பு வந்த விஜய நகரத்து கிருஷ்ண தேவராயர் மரண தண்டனைக்குத் தகுதியான கைதிகளை நரபலி கொடுத்த நிலையில் சட்டத்தின் கடுமை புலப் படுத்தப்பட்டது.[13] ராஜராஜன் I போன்ற மாமன்னர்களின் சோழப் பேரரசு பெருஞ்செல்வாக்கோடு இருந்த நாளிலேயே குற்றங்களுக்குப் போதுமான தண்டனை வழங்கப் பெறவில்லை. மத்திய அரசின் வலிமை குன்றிய பின்பு குற்றங்கள் இழைக்கப் பட்டபோது, ஆங்காங்கேயுள்ள ஊராட்சி மன்றங்களைத் தனியார்கள் கட்டுப்படுத்தி[14] 'கிராமத் துரோகம்' செய்தார்கள். இதனால் நியாயம் வழங்குதலில் தேக்கமும் திரிபும் ஏற்பட்டிருக்க வேண்டும். சட்டத்தின் மேலாதிக்கம் வலிமையோடு உடனுக் குடன் நிலைநாட்டப் பெறவில்லை. சட்டப் பிரயோகமும் வீரியமாக இல்லை. காலப்போக்கில் தானாகவே ஏற்பட்டுப் போன தீர்வு களின் காரணமாகப் பல பூசல்கள் முடிவடைகின்ற நிலைமையும் சோழநாட்டில் காணப்பட்டது. இதனை உணர்த்துகின்ற முறை யில் பேராசிரியர் சாஸ்திரி கீழ்க்கண்ட செய்தியைக் குறிப்பிடு கிறார்:[15] ஸ்ரீகாந்த சதுர்வேதி மங்கலத்தின் ஊராட்சி மன்றமான சபாவுக்கும், திருவெறும்பியூர் ஊர்மன்றத்திற்கும் ஏற்பட்ட எல்லைத் நகராறைத் தீர்த்து வைக்கின்ற முறையில் அந்த எல்லை நிலத்தை அப் பகுதியைச் சார்ந்த தலைவன் ஒருவன் வாங்கினான். அவ்வூர்க் கோவிலுக்குத் துதிப்பாடல்கள் பாடுவோருக்குக் கொடுக்கப்படும் ஊதியத்திற்குரிய அறக்கட்டளையாக அந்த நிலத்தை அவன் வழங்கினான் (129 of 1914). இந் நிலையில் சோழ மத்திய அரசுக்குரிய செல்வாக்கு பெரிதும் பாதிக்கப்பட்டது. இதன் காரணமாகத் தேவையற்றுப் போன சோழப் பேரரசு வற்றி உலர்ந்து உதிர்ந்துவிட்டது (**'withering' away**). நாடாள் வான்கள் போன்றோரின் தன்னிச்சையான ஆட்சியிலிருந்தும், வரி வசூலில் கொடுமை இழைப்பவர்களிடமிருந்தும், பஞ்சத்தி

11 64 of 1900.

12 K. A. N. Sastri—op. cit., p. 478

13 T. V. Mahalingam—'Administration and Social Life under Vijayanagar—1969—p. 134

14 89 of 1932

15 K. A. N. Sastri—op. cit. p. 311—312

லிருந்தும் எளிதான தண்டனை வழங்குகின்ற சோழ நாட்டுச் சட்டத்தைப் பயன்படுத்திக் குற்றங்களைப் புரிந்தோரிடமிருந்தும் மக்களைப் பாதுகாக்கச் சோழ மத்திய அரசு தவறிவிட்ட காரணத்திற்காக மக்களுடைய ஆதரவை (Mandate of People) அது நாளடைவில் இழந்தது. இந் நிலையில் அது அழிந்தது. 'கிராமத் துரோகம்' போன்ற குற்றம் செய்பவர்களுக்கு அனுசரணையாக வேலை செய்பவர்களைக் கத்தியால் குத்திக் கொல்ல வேண்டும் என்று நாட்டு மக்களின் நிறுவனக் கூட்டங்களில் தீர்மானிக்கப்பட்டது.[16] இது சட்டத்தை மக்கள் தங்கள் கையில் எடுத்துக்கொண்டதைத்தான் காட்டும். மொகலாயப் பேரரசின் அழிவை ஆய்கின்றபோது, அது அழிந்ததற்குக் காரணம் பற்றி ஆராய்வதைவிட, பல்வேறு குறைபாடுகளோடு அப் பேரரசு எவ்வாறு அத்தனை நூற்றாண்டுகள் நீடித்திருக்க முடிந்தது என்ற வியப்புக்குரிய செய்தியை உய்த்துணர வேண்டும் என்று வின்சென்ட் ஸ்மித் என்ற வரலாற்றாசிரியர் கூறுகிறார்.[17] 1070-ல் பதவிக்கு வந்த குலோத்துங்கன் I காலத்திலேயே படைத்தலைவர்களின் தனிப்பட்ட ஒப்பந்தங்கள் நிகழத் தொடங்கிய பின்பு ஏற்பட்ட அரசியல் திரிபு (political perversion) சோழப் பேரரசை உள்ளூர ஊனமாக்கியது; இந் நிலையில் இரண்டு நூற்றாண்டுகளில் மேலும் வலு குன்றி, 1279-ல் அறவே வீழ்ச்சியுற்றது.

**12. வலிமையற்ற மன்னர்களின் பதவியேற்பு :** அரச பதவிக்காக மொகலாயர்கள் தங்களுக்குள் வாரிசுரிமைப் போர் களிட்டுக்கொண்டதன் காரணமாகவும் அப் பேரரசு அமைந்தது எனக் கூறுவது போல, சோழர்களைப்பற்றி நாம் குறிப்பிட முடியாது. உத்தம சோழன், குலோத்துங்கன் I, ராஜேந்திரன் III போன்றோர் தங்கள் பதவிகளைத் தங்களுடைய தனிப்பட்ட பேரார்வம் (personal ambition) காரணமாக அரசாளுகின்ற உரிமையைப் பெற்றார்கள். அதனால் தீமையான அரசியல் விளைவுகள் ஏற்படவில்லை. ஆனால், வலிமையற்ற மன்னர்கள் பிற்காலத்தில் அரசாள வந்தபோது சோழப் பேரரசுக்குப் பெரும் இழப்பு ஏற்பட்டது. குலோத்துங்கன் I ஆண்ட பின்பு சோழப் பேரரசிற்கு வாய்த்த மன்னர்கள் பேரரசர்களாக விளங்குவதற்குரிய தகுதியை—அரசியல் திறமையை—பெற்றிருக்கவில்லை. குலோத்துங்கன் I ஆற்றல் மிக்கவன் ஆவான்; அவனுடைய மகன் விக்கிரம சோழன் தந்தையின் பெருமைக்குரிய நிழலாகத்தான்

16 92 of 1918

17 Vincent A. Smith's—'The Oxford History of India'—1970—p. 442

தென்படுகிறான். பின்பு அரச பதவிக்கு வருகின்ற குலோத்துங்கன் III தொடக்கம் ராஜேந்திரன் III முடிவுள்ள ஏழு மன்னர்கள் அரசியல் திறமை இல்லாதவர்களாகக் காணப்பட்டார்கள். கி.பி. 880-லிருந்து வளரத் தலைப்பட்ட சோழ அரசு 985-லிருந்து பேரரசாகப் பெருமாட்சி கொண்டு, 1122-ல் முடிவுற்ற குலோத்துங்கன் I ஆட்சியோடு தன்னுடைய எழுச்சிக் குரிய காலத்தை முடித்துக்கொண்டது; இந்தக் காலப்பகுதியிலேயே அதனுடைய வளர்ச்சி தனது முதிர்ச்சியை (maturity) அடைந்துவிட்டது எனலாம். ஆகவே, 1122ஆம் ஆண்டுக்குப் பின்பு உள்ள சோழப் பேரரசின் வாழ்வை 'இலையுதிர்க் காலமாக' நாம் கொள்ள வேண்டும். அரசியல் சூழ்ச்சிகள் போன்ற பல்வேறு உள்ளுறை முரண்பாடுகளும், பஞ்சம் போன்ற சமுதாயச் சஞ்சலங்களும் மொகலாய நாட்டில் பரவலாக இருந்த போதிலும் ஷாஜஹானுடைய ஆட்சியை மொகலாயரின் பொற்காலம் என நாம் ஏற்றுக்கொள்வது போலக் குலோத்துங்கன் II ஆண்ட காலத்தில் காணப்பட்ட சோழரின் அரசியல் வலிவிழந்து காணப்பட்டாலும் கலை, இலக்கிய வளர்ச்சியில் மாட்சியைப் பொறுத்தளவில் அது சோழரின் பொற்காலமாகக் கொள்ளப்பட வேண்டும். இந்தச் செய்தியைத் தவிர, சோழரின் பெருமைக் குரியதான எந்த நிகழ்ச்சியும் 1122-க்குப் பின்புள்ள காலத்தில் நடந்தேறவில்லை. குலோத்துங்கன் III ஆற்றிய வல்லடிப்போர்கள் அவனுடைய வீரத்தைக்காட்டிலும் வீறுப்பு உணர்ச்சியையும் வெளிக்காட்டின; இதன் காரணமாகவே பாண்டியரின் பழி வாங்கும் உணர்வு தோன்றியது குறித்து முன்னர்க் குறிக்கப் பட்டது. இந்த நிலையில் அரசியல் விவேகம் இல்லாத காரணத் தால் இக் குலோத்துங்கச் சோழனும் 'கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்' என அமையவில்லை. ஆகவே, வீரம் நிறைந்த இவனும் அரசியலுக்குரிய வலிமையற்றவனே என நாம் குறிப்பிடலாம்.

கடைசி அரசனான ராஜேந்திரன் III தனது ஆற்றலை வெளிக் காட்டுவதற்கு முன்பு சோழ நாட்டுக்கு அளப்பரிய அழிவையும் இழிவையும் கொண்டு வந்தவன் ஆவான். காஞ்சியில் 1230-ல் நிலைபெற்றிருந்த போசளரின் ஆதரவு அவனுக்கு இருந்தது; இச் சோழன் 1216-லிருந்து சோழரை அடக்கி வைத்திருந்த பாண்டியரின் மேலாண்மையை வீழ்த்துவதற்கான படை முயற்சியை மேற்கொண்டதைக் காரணமாகக் காட்டி பேராசிரியர் இம் மன்னனை வலிமையற்றவனாகவும், மடமையுள்ளவனாகவும் (not only weak but foolish). விளங்கினான் என்பார்.[18] சோழ

18 K.A.N. Sastri—op. cit., p. 421

ருக்கு அடங்கிய காடவராயக் குறுநில மன்னனுன கோப்பெருஞ் சிங்கனுல் 1230-ல் சிறைபிடிக்கப்பட்ட இச் சோழனின் அவல நிலையை ஆதாரமாகக் கொண்டு சோழப் பேரரசின் அந் நாளைய நலிவை நாம் எளிதில் எடைபோட முடியும். பதவியில் அமர் கின்ற மன்னர்கள் திறமையற்றவர்களாக அமைந்து விடுவதைத் தடுக்கின்ற முறையில்தான் திறமையுள்ளவருக்கு மட்டும் அரச பதவி என்றளவில் டில்லியின் முஸ்லீம் ஆட்சியாளர்களின் அரசியல் ஒழுகலாறு விரிந்து கொடுத்தது. சோழர் அரச குடும்பத்தாரிடையேயும் இந்தக் கோட்பாடு ஓரளவு நிலைபெற்றது. எனக் கூறலாம். குலோத்துங்கன் III, ராஜேந்திரன் III ஆகியோர் அவர்களுக்கு முன்பு பதவியில் இருந்த மன்னர்களின் நேரடி வாரிசுகள் அல்லர். அவர்கள் அரச பதவிக்கு வருவதற்கு முன்பே ஏராளமான அரசதிகாரங்களைப் பெற்றிருந்தார்கள். ஆற்றலில்லாதவரை விலக்கிவிட்டு வந்த இந்த ஆற்றலுற்றவர் களால்கூடச் சோழ அரசின் நலிவைத் தேற்றி நாட்டிலுள்ள குழப் பத்தைத் தெளிவாக்க முடியவில்லை. அந்த அளவிற்குச் சோழ அரசிற்கான நலிவுகள் பல்கிக் காணப்பட்டன. அவை சோழர் களுக்கு ஒரு சவாலாக (challenge) அமைந்திருந்தன. சோழர்கள் அச் சவாலினை ஏற்றுச் செயல்படுகின்ற திறமை (response) பெற்றிருக்கவில்லை. சவாலை ஏற்கின்ற மக்களுக்கான திறமையின் உயர்வுக்கு ஏற்ப எல்லா நாகரிகங்களும் வாழும் அல்லது வீழும் என்று ஆர்னுல்டு டாய்ன்பி என்ற ஆங்கில மேதை உலக வரலாற்றைக் கணித்துக் கூறினுர் (Mechanism of Challenge and Response). தென்னகத்தில் இந்து நாகரிகத்தில் தோன்றிய சவாலைச் சமாளிக்கின்ற திறன் சோழருக்கு இல்லாமலிருந்தது. ஏனென்ருல், சோழ அரசமைப்பில் (Chola Polity) காணப்பட்ட எப்போதும் நன்மை பயக்கின்ற சிற்சில அங்கங்கள் சோழருக் குரிய மேம்பாடுகள் (assets) என்ற நிலையிலிருந்து திரிபு கொண்டு திறமையின்மையை அரசாங்கத்துக்குக் கொண்டு வருகின்ற பளு (liability) என்ருகி விட்டன.

பண்டைய இந்து நாகரிகத்தின் வழித்தோன்றல்களான சோழர்கள் தங்களுடைய உள்நாட்டு அரசாட்சியில் மனிதாபி மானத்தைப் போற்றுகின்ற கோவிலறம், கிராம சுயாட்சி ஆகிய வற்றை அடிப்படையாக அமைத்திருந்தார்கள். ஆனுல், அதே நேரத்தில் வெளிநாட்டுறவு நிலையில் போர்க்குணங்கொண்டு வல்லடிப்போர்களை நிகழ்த்தி இராணுவப் பேரரசைக் கட்டுவதற் குச் சோழ மன்னர்கள் அயராது முனைந்து நின்ருர்கள். இவ்வாறு உள்நாட்டாட்சியின் மனிதாபிமான கோட்பாடுகளும் வெளிநாட் டுறவுக்குரிய வன்முறைக் கொள்கைகளும் எதிரெதிர்த் திசைகளில்

செயல்பாடு (croso-purpose) கொண்டன. இதன்படி பார்த்தால் சோழப் பேரரசின் அரசியலமைப்பானது முரண்பாடுகளின் கோப்பு (Bundle of Contradictions) போன்று காணப்பட்டது என நாம் கூறலாம். ஆனால், இந்த முரண்பாடுகளைச் சமாளித்து மேற்சொன்ன உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளுக் கிடையே ஒரு சமநிலையைச் (Balance of Power) சோழ அரசாங்க அரங்கத்திலேயே உருவாக்கி அதை நிலைநாட்டிக் காட்டிய அரசர்கள்பலர் தோன்றினார்கள். இவர்களில் தலையாய மன்னனாக ராஜராஜனைச் சொல்லலாம். இத்தகைய சமநிலையை எப்போதுமே உன்னிப்பாக நடைமுறைப்படுத்துகின்ற ஆற்றலில்லாத மன்னர்கள் சோழப் பேரரசின் கடைசி நாள்களில் பதவிக்கு வந்தார்கள். சோழப் பேரரசின் எழுச்சிக்கு உரிய காலங்களில் வளர்ச்சி பெற்றுவிட்ட சோழ அரசியலதிகாரியான நாடாள் வான்கள் போன்ற தன்மூப்புத் தலைவர்களிடமிருந்தும் பேரரசுக் குரிய எதிரிகளாகப் படைநடத்திச் சோழ மண்டலத்துக்குள் ளேயே வந்த பாண்டியர், போசளரிடமிருந்தும் சோழ அரசின் அதிகாரத்தைப் பாதுகாப்பதற்கு உரிய வலிமையை அச் சோழ மன்னர்கள் பெற்றிருக்கவில்லை. இத்தகைய வலிமையைப் பெற்ற 'நெப்போலியன்' என்றளவில் தீரமான செயல்பாடு கொள்ளத் துடித்து நின்ற கடைசி மன்னன் ராஜேந்திரன் III மேற்கொண்ட முயற்சிகள் யாவும் காலங்கடந்து வந்தவையாகவும், பயனற்ற வையாகவும் காட்சி அளித்தன. இவ்வாறு கடைசியாக வந்த ஏழு மன்னர்களின் திறமையின்மை காரணமாகவும், திறமையற்ற வர்களால் பாதிக்கப்படாத அளவிற்குச் சோழநாடு தனக்கென அமைந்த தன்னாற்றல் (inner strength) பெற்றிராத காரணத்திற் காகவும் சோழப் பேரரசு தன்னுடைய அரசுரிமை நலத்தைச் சிறுகச் சிறுக இழந்து 1279-ல் வீழ்ச்சியுற்றது.

# 16. சோழர்–மேலைச் சாளுக்கியர்–வேங்கி சாளுக்கியர் அரசியல் உறவுகள்

மேலைச்சாளுக்கியரின் இரட்டப்பாடியை 1006-ல் யுவராஜா ராஜேந்திரன் I கைப்பற்றினன். 1008-ல் சத்தியாசிரியன் இறந்த பின்பு அவனுடைய தம்பி தாசவர்மனின் மகன் விக்கிரமாதித்தன் V (1008—1015) சாளுக்கிய சோழரின் பகைமையை அவ்வளவாகப் பாராட்டவில்லை. ராஜராஜனுல் வேங்கி நாட்டில் ஜடாசோட பீமனுக்குப் பதில் 999-ல் அரசனுக்கப்பட்ட சக்திவர்மன் I 1014-ல் இறந்த பின்பு அவனுடன் ராஜராஜன் செய்திருந்த ஏற்பாட்டின்படி விமலாதித்தியன் பதவியேற்று 1018 வரை ஆட்சியிலிருந்தான். மேலைச்சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் V 1015வரை ஆண்ட பின்பு ஜெயசிம்மன் II (1015—1042) என்பவன் அரசனுகின்ருன். இவன் விஜயாதித்தியன் VI என்ற கீழைச்சாளுக்கிய இளவரசனை அரசனுக்க முயற்சி செய்தான். விமலாதித்தனுக்கு மேதவ மகாதேவி என்ற சோழர்குல இரண்டாவது மனைவிக்குப் பிறந்தவன் விஜயாதித்தியன் ஆவான். மற்ருெரு மனைவியான குந்தவை ராஜேந்திரனுடைய சகோதரி ஆவாள். அவளுக்குப் பிறந்தவன் ராஜராஜ நரேந்திரன். இவனுக்கும் விஜயாதித்தியன் VII என்பவனுக்கும் அரசுரிமை பற்றி எழுந்த போட்டியில் ராஜேந்திரன் I தனது தங்கை மகன் ராஜராஜனுக்குத்தான் ஆதரவு அளிக்க வேண்டியதிருந்தது. ஏனெனில், ராஜராஜ நரேந்திரனுக்குத் தனது மகள் அம்மங்க தேவியை அவன் மணமுடித்து வைத்திருந்தான். ஜெயசிம்மன் V விஜயாதித்தியனை வேங்கி நாட்டு அரசனுக்குகின்ற திட்டத்தைச் செயல்படுத்த முனைந்து விஜயவாடாவை விஜயாதித்தியன் கைப்பற்றிக்கொள்ள உதவி செய்தான்.

இவ்வாறு ராஜராஜ நரேந்திரன் வேங்கி நாட்டு மன்னனுகை முடிசூட்டிக்கொள்ள முடியாதபடி எதிர்ப்பு இயக்கமும் விஜயவாடாவில் போட்டி சர்க்காரும் பங்காளி விஜயாதித்தியனுல் ஏற்படுத்தப்பட்டன. ஜெயசிம்மன் மேற்குப் பகுதியிலும் போர்முனை ஏற்படுத்தினன். துங்கபத்திரைக்கும் கிருஷ்ணுவிற்கும் இடைப்பட்ட ரெய்ச்சூர் கிடைக்கழிப் பகுதியில் மேலைச்சாளுக்கியப் படை பாடி இறங்கியது. மாங்கியில் ராஜேந்திரனுடைய படை

ஜெயசிம்மனைத் தோற்கடித்தது (1021). துங்கபத்திரை நதிக்கரை இரு சாரார்க்கும் அமைந்த எல்லையாக ஆயிற்று. கீழைப்போர் முனையில் விஜயாதித்தியனைச் சோழர்ப் படை தோற்கடித்தது. கலிங்கத்திற்கும் சோழர்படை சென்றது. கிழக்குக் கலிங்க நாட்டின் அரசன் மதுகர்மார்ணவா (1019—1038) ஜெயசிம்ம னோடு சேர்ந்துகொண்டு ராஜராஜ நரேந்திரனை எதிர்த்ததுதான் கலிங்கப்படை எழுச்சிக்குக் காரணம். 1022-ல் ராஜராஜன் வேங்கிநாட்டின் அரசனாக முடிசூட்டிக்கொண்டான்.

ஒன்பது ஆண்டுக்கால ஆட்சிக்குள் 1031-ல் ராஜராஜன் தன் பதவியை விஜயாதித்தியனிடம் பறி கொடுத்தான். ஜெயசிம்மன் அவனுக்கு எதிராக அவனுடைய பங்காளிக்கு உதவி செய்தான். ஆனால், 1035-ல் ராஜராஜன் திரும்பவும் தன் பதவியை அடைந்தான். இவன் அமைதியாக ஆட்சி செய்ய முடியவில்லை. 1042-ல் சோமேசுவரன் I ஆகவமல்லன் (1042—1068) மேலைச் சாளுக்கிய அரச பதவிக்கு வந்த பின்பு தன்னுடைய அவைக் களத்தில் அடைக்கலம் புகுந்திருந்த விஜயாதித்தியனை ஆதரித்து வேங்கி நாட்டின்மேல் படையெடுத்தான். முதுமை காரணமாக ராஜேந்திரன் I தனது மூன்று தளபதிகளை வேங்கி நாட்டுக்கு அனுப்பிக் காளிதிந்தி என்ற இடத்தில் போர் செய்ய வைத்தபோது யாருக்கும் நிலையான வெற்றி கிட்டவில்லை. மேற்குப்போர் முனையில் ராஜேந்திரனுக்குப் பின்பு சோழ அரசுப் பட்டத்திற்கு வந்த அவனுடைய மகன் ராஜாதிராஜன் I 1044-ல் சோமேசுவர னுடைய மகன் விக்கிரமாதித்தனையும் கீழைச்சாளுக்கியன் விஜயாதித்தியனையும் தான்யக்கடகா என்ற இடத்தில் தோற் றோடச் செய்தான்.

இதன் பின்பு கொஞ்ச நாளைக்கு வாய்த்த சமாதானத்தை அனுபவித்த பிறகு ராஜாதிராஜன் மேற்கில் படையெடுத்துச் சென்று கம்பிலி நகரத்திலுள்ள சாளுக்கிய அரண்மனையை அழித்து, பின்பு பூந்தூர் என்ற இடத்தில் சாளுக்கியரைத் தோற் கடித்தான். வேதகிரியில் வெற்றித்தூணை நாட்டிவிட்டு, ராஜாதி ராஜன் சாளுக்கியரின் தலைநகரான கல்யாணியை (மான்யக் கேடத்திலிருந்து இந்த இடத்திற்குச் சோமேசுவரன் 1042-ல் மாற்றிய தலைநகர்) அழித்து வீராபிஷேகம் செய்துகொண்டு விஜய ராஜேந்திரா என்ற விருதினையும் சூடிக்கொண்டான். தாராசுரம் என்னும் ஊரிலுள்ள கோவிலில் காணப்படும் துவார பாலர் சிலை இங்கிருந்து சோழர்கள் எடுத்துப் போனதுதான். ஆனால் சோமேசுவரன் 1050-ல் சோழர்களை வேங்கியிலிருந்தும், துங்கபத்திரைக் கரையிலிருந்தும் விரட்டியதோடு நில்லாமல் காஞ்சீபுரம் வரை படையெடுத்தும் வந்தான். ராஜாதிரராஜன்

யாது காரணம்பற்றிப் பதிலடி கொடுக்காமல் இருந்தான் என்பது தெரியவில்லை.

ராஜாதிராஜனும் அவனுடைய சகோதரன் ராஜேந்திரன் II-ம் 1053-ல் கொப்பம் போரைச் சோமேசுவரனுக்கு விரோதமாக நிகழ்த்தினார்கள். சோழ மன்னனை அவன் இருந்த யானையின் மேல் வைத்து சாளுக்கியர்கள் கொன்றார்கள். தலைவனில்லாமல் சிதறி ஓடத் தலைப்பட்ட சோழர் படைகளைப் பின்னணியில் ஆயத்த நிலையில் இருந்த ராஜேந்திரன் II உற்சாகப்படுத்திப் போரில் ஈடுபடச் செய்து தோல்வியின் தோற்றத்தை வெற்றிக் குரிய முடிவாக மாற்றினான். போர்க்களத்திலேயே தனது யுவராஜா அந்தஸ்தைச் சோழ மன்னனாக மாற்றுகின்ற முறையில் அவன் முடிசூட்டிக்கொண்டான். சோழர்களுக்கு ஏராளமான பொன்னும், பொருளும், குதிரையும், யானையும் கிடைத்தன. அரசக் குடும்பத்தின் பெண்களும் சிறைப்பிடிக்கப்பட்டார்கள். கொல்லாபுரத்தில் வெற்றித்தூணை நிறுவி விட்டு ராஜேந்திரன் II சோழநாடு திரும்பினான்.

வேங்கியில் ராஜராஜ நரேந்திரன் 1061-ல் இறந்துபோன பின்பு விஜயாதித்தியனுடைய மகன் சக்திவர்மன் II என்பவனை வேங்கி நாட்டு மன்னனாக்கச் சாமுண்டராயன் என்ற சேனாதி பதியின் துணையோடு முயற்சித்து சோமேசுவரன் வெற்றியும் பெற்றான். சோழர் படைகள் கிளர்த்தெழுந்து வேங்கி சென்றன; சாமுண்டராயனையும், சக்திவர்மனையும் போரில் கொன்றன. வேங்கி நிகழ்ச்சிகளை ஒட்டிக் கங்கபாடிக்குச் சோமேசுவரன் அனுப்பி வைத்த அவனுடைய மைந்தர்களான விக்கிரமாதித் தனையும் ஜெயசிம்மனையும் துங்க நதியும் பத்திரை நதியும் சேருமிட மான கூடல் சங்கமம் என்ற இடத்தில் நடந்த போரில் (1066) சோழர் படைகள் தோற்கடித்தன. கொப்பம் போரினுக்குப் (1053) பழி வாங்க வந்த சோமேசுவரன் கூடல் சங்கமத்தில் திரும்பவும் தோற்றுப் போனான்.

சோழ யுவராஜா ராஜ மகேந்திரனும், அவன் தந்தை ராஜேந்திரன் II சோழனும் இறந்து போனதால், வீரராஜேந்திரன் என்ற சோழ மன்னனின் தம்பி 1063-ல் அரசனானான். சோமேசுவரன் இராணுவ வலிமையில் சிறந்தவனில்லை; ஆனாலும், ராஜதந்திரத்தில் எப்போதுமே மேம்பாடு காட்டியவன்; வேங்கி நாட்டின் போட்டி அரசை விஜயவாடாவில் தாரா நாட்டின் அதிபதி ஜனநாதனைக் கொண்டு இயங்கச் செய்தான்; மேற்குப் போர்முனைக்குத் தனது படைகளை அனுப்பினான்.

துங்கபத்திரை நதிக்கரையில் 1066-ல் அப் படைகள் வீரராஜேந்திரனால் தோற்கடிக்கப்பட்டன. ஆனால் சோமேசுவரன் திரும்பவும் போர் புரிய வருமாறு சோழனுக்குச் சவால் விட்டான். இந்த முறையும் துங்கபத்திரைக் கரையில் சாளுக்கியர் தோற்றேடினர். அங்கிருந்து வீரராஜேந்திரன் வேங்கி நாடு சென்றான்; விஜயவாடாவிற்கருகே நடந்த பெரும்போரில்விஜயாதித்தியனைத் தோற்கடித்தான். கலிங்கமும் சக்கரக் கோட்டமும் சோழர்களால் தாக்கப்பட்டன. விஜயாதித்தியன் கீழை கங்கமன்னன் வஜ்ராந்தகன் மகன் ராஜராஜன், மேலைச்சாளுக்கியன் விக்கிரமாதித்தியன் எதிர்தரப்பிலும், ராஜராஜ நரேந்திரனின் மகனும் ராஜேந்திரன் II சோழனுடைய மகளுடைய கணவனுமான ராஜேந்திரன் (பின்பு குலோத்துங்கன் I) சோழர் பக்கமும் நின்று போரிட்டனர். வெற்றி சோழர்க்கே. உடல்நலம் இல்லாததால், குறிப்பிட்டபடி சோழர்களுக்கு எதிராகப் போரிடப் போர்க்களத்திற்குச் செல்ல முடியாததை நினைத்து மனமுடைந்து சோமேசுவரன் துங்கபத்திரையில் குருவாடி என்னுமிடத்தில் பிரமயோகம் என்றழைக்கப் பெற்ற ஜலசமாதியில் ஆழ்ந்து உயிர் துறந்தான். ஆனாலும், வீரராஜேந்திரன் சாளுக்கியரை அமைதியாக இருப்பதற்கு விடவில்லை. குத்தி என்ற நகரின் முற்றுகையையும் கம்பிலி என்ற நகரின்மேல் தாக்குதலையும் சோழர்கள் தொடங்கினார்கள். சோமேசுவரனின் மூத்த மகன் சோமேசுவரன் II (1068—1076) அரசனாக இருந்தாலும், அவனை எதிர்த்த அவனுடைய தம்பி விக்கிரமாதித்தனைவிட ஆற்றலில் குறைந்தவன்; தன் அண்ணனுக்கு எதிராக அவனுடைய வேளிர்களை (feudal lords) விக்கிரமாதித்தன் மனந்திருப்பினான் ; இவ்விரு சகோதரர்களும் சாளுக்கிய நாட்டைச் சம அளவாகப் பிரித்து ஆள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். வீரராஜேந்திரன் யுவராஜர அந்தஸ்தில் சுயேச்சை அரசனாகிவிட்ட விக்கிரமாத்தனுக்கும் கீழைக் கலிங்க இளவரசன் ராஜராஜனுக்கும் சோழ மன்னன் தன் இரு புதல்விகளை முறையே மணம் முடித்துக் கொடுத்தான். வேங்கி நாட்டில் விஜயாதித்தியன் சோழருக்கு அடங்கிய மன்னனாக இருக்க அனுமதி கொடுத்த வீரராஜேந்திரன் 1070-ல் இறந்துபடாமலிருந்திருந்தால் தென்னகத்தின் வரலாறு வேறு விதமாக உருக்கொண்டிருக்க வாய்ப்பு உண்டு.

வேங்கி நாட்டைத் தனக்கு அளிக்கவில்லை என்ற மனக் கசப்பில் ராஜேந்திரன் என்ற குலோத்துங்கன் வேங்கி நாட்டையும் சோழ நாட்டையும் கவர்கின்ற திட்டங்களை உருவாக்கி, அதனைச் செயல்படுத்தினான். வீரராஜேந்திரன் 1070-ல் இறந்த பின்பு, அவன் மகன் 1068ஆம் ஆண்டிலிருந்து யுவராஜாவாக அரசியல்

போட்டியிலிருந்தும் மக்கள் கலகத்திலிருந்தும் தனது மைத்துனன் அதிராஜேந்திரனைக் காப்பதற்கு விஜயாதித்தியன் படைகளோடு காஞ்சீபுரம் வந்தான்; அங்குக் கலகக்காரர்களை அடக்கிய பின்பு, கங்காபுரி சென்று அதிராஜேந்திரனை மன்னனுக்கிவிட்டு ஒரு மாதம் கழித்துத் துங்கபத்திரைக்குத் திரும்பினான். அப்போது அதிராஜேந்திரன் கலகத்தில் இறந்துபட்டதையும் கீழைச்சாளுக்கியன் ராஜேந்திரன் சோழ மன்னனுகி விட்டதையும் அவன் கேள்விப் பட்ட நிலையில் தனது படைகளை நடத்திக்கொண்டு அவன் கங்காபுரிக்குத் திரும்பி வந்து போரிடவில்லை.

தன்னுடைய சகோதரனுடனும் தன்னுடைய பகையாளி குலோத்துங்கனுடனும் போராட வேண்டிய அவசியத்தை உணர்ந்த நிலையில் அயர்ந்து போகாத விக்கிரமாதித்தன் மற்றைய நாட்டு மன்னர்களைத் தன்பக்கம் சேர்ப்பதிலும் படை திரட்டுவதிலும் கருத்து கொண்டான். இவனுடைய தமையனும் குலோத்துங்கனும் இவனுக்கு எதிராக ஒன்று சேர்ந்தார்கள். ஐந்தாண்டுகள் யுத்தமேகம் கவிந்து கிடந்தது. கோலார்ப் பகுதியில் 1075 அளவில் சோழர்கள் படைகள் சாளுக்கியரோடு மோதின. விக்கிரமாதித்தன் தோற்கடிக்கப்பட்ட அந் நிலை யிலும் போராடிக்கொண்டே துங்கபத்திரைவரை பின் வாங்கினான். பின்பக்கமிருந்து தன்னைத் தாக்கிய தன் தமையன் சோமேசுவரனைத் தோற்கடித்தான் விக்கிரமாதித்தன்; பின்பு அவனைச் சிறையிலிட்டான். 1076-ல் தன்னை மேலைச்சாளுக்கிய அரசன் ஏகமன்னனுக முடிசூட்டிக்கொண்டான்; பின்பு 1083-ல் தம்பி ஜெயசிம்மன் கிளர்ச்சி செய்தபோது அவனைச் சிறைப்பிடித்தான். இதன் பின்பு விக்கிரமாதித்தன் VI (1076—1126) வேங்கி நாட்டின் அரசியலை அமைதியாக நடைபெறவிட வில்லை.

வேங்கி நாட்டு மன்னன் விஜயாதித்தியன் குலோத்துங்கனின் தந்தையினுடைய தம்பி என்ற காரணத்தால் குலோத்துங்கன் அவனையே அந் நாட்டை ஆள்வதற்கு விட்டுவிட்டான். 1076-ல் விஜயாதித்தியன் இறந்த பொழுது குலோத்துங்கனுடைய மைந்தர்கள் வேங்கி நாட்டின் அதிபதிகளாகக் கீழ்க்கண்ட ஆண்டுகளில் அரசாளத் தொடங்கினுர்கள்: ராஜராஜ மும்முடிச் சோழன் (1076—'78), வீரசோடன் (1078—'84), ராஜராஜ சோடகங்கன் (1084—'89), வீரசோடன் திரும்பவும் 1089-லிருந்து 1118 வரை அரசாண்ட பின்பு தனக்குப்பின் அரசனுகின்ற வாரிசு என்ற முறையில் கங்காபுரிக்குக் குலோத்துங்கன் அவனை அழைத்துக்கொண்டான். இதற்கிடையில் 1097-ல் ஏற்பட்ட கொலனு நாட்டதிபதியின் கிளர்ச்சியைப் பாண்டியன் பராந்தகன்

துணைகொண்டு விக்கிரம சோழன் அடக்கினன். அவனுடைய நாடும் அவனுக்கு உதவி செய்த அனந்தவர்மன் சோடகங்கன் நாடும் அழிவுக்கு உள்ளாக்கப்பட்டன. இவ்வாறு இவ்விரு மன்னர்களும் சோழருக்கு அடங்கிப்போய்விட்டார்கள்.

1115ஆம் ஆண்டிலிருந்து விக்கிரமாதித்தன் VI வேங்கி நாட்டரசியலில் தலையிட்டான். 1118-ல் விக்கிரம சோழன் சோழ நாட்டுக்குத் திருப்பி அழைக்கப்பட்ட பிறகு விக்கிரமனுடைய அனந்தபாலன் என்ற சேனதிபதி, வேங்கி நாட்டின் அதிபதி என்ருகி, வேங்கி நாட்டின் அரசியலைக் கட்டுப்படுத்தத் தொடங்கினன். இந்த நிலை 1126-ல் விக்கிரமாதித்தன் இறக்கும் வரை நீடித்தது. குலோத்துங்கன் 1122-ல் இறந்த பின்பு சோழ மன்னனான விக்கிரம சோழன் வேங்கியைத் திரும்பக் கைப்பற்றும் வேலையில் 1127-லிருந்து ஈடுபட்டான். 1133-ல் சோழர் படைகள் மேலைச்சாளுக்கிய மன்னன் சோமேசுவரன் III (1126—1138) படைகளைக் கோதாவிரிப் போரில் தோற்கடித்தன. சோழர் தரப்பில் வேலநாண்டு சோட கொங்கன் II என்பவன் மேலைச் சாளுக்கியரையும், அவர்களுக்குத் துணைவந்த கலிங்க மன்னன் அனந்தபாலனையும் அறவே முறியடித்துவிட்டான். மேற்குப் போர்முனையில் கங்கவாடியின் சில பகுதிகளை (கோலார்ப் பகுதி உட்பட) விக்கிரம சோழன் திரும்பப் பிடித்துக்கொண்டான். மேலைச்சாளுக்கியர்கள் போசளரின் எழுச்சியில் தங்கள் அரசின் ஆதிக்கத்தை இழந்தார்கள்.

வேலநாண்டு சோடர்கள் என்ற வேங்கி நாட்டவர் பிற்காலத்திய ராஜராஜன் II காலத்தில் சுயேச்சை பெற்றுவிட்டார்கள். 1208-ல் வாரங்கல் என்ற இடத்தை ஆண்ட காகதீய மரபினனான கணபதியைக் குலோத்துங்கன் III (1178—1218) தோற்கடிக்க வேங்கி வந்தான். இவனுக்குப் பின்பு வேங்கி நாடு அதற்கு வடக்கே காணப்பட்ட வாரங்கல்லை ஆண்ட கணபதி, அவனுடைய அரசியல் மேலாளன் நெல்லூர் மன்னன் கண்டகோபாலன் என்பவர்களின் ஆதிக்கத்திலிருந்தது. கண்டகோபாலன் கடைசி சோழனுக்கு முந்திய சோழ மன்னனான ராஜராஜன் III காலத்தில் சோழ நாட்டுக்குத் துணை நின்றவன். 1254-ல் அரசபதவி ஏற்ற சடாவர்மன் சுந்தர பாண்டியன் கண்டகோபாலனைப் போரில் கொன்றபோது அப்போரில் தோற்ற காகதீய கணபதி தன்னுடு ஓடிச் சென்ருன். இந்தச் செய்திதான் வேங்கி நாட்டைப்பற்றிய சோழருக்குத் தொடர்பான கடைசி வரலாற்று நிகழ்ச்சியாக அமையும்.

திறனாய்வு : 643-ல் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு புலிகேசி மன்னனால் தொடங்கப்பட்ட சாளுக்கியப் பேரரசின் சாயலாக மற்றொரு கடற்கரையான கீழைப்பகுதி வேங்கியில் புலிகேசனின் தம்பி விஷ்ணுவர்த்தனன் தனியோர் அரசைத் தன் தமையனின் ஆசியுடன் தொடங்கினான். இதுவே வேங்கி நாடாகும். 643-லிருந்து வளரத் தலைப்பட்ட இந் நாடு 1173-ல் அதனுடைய அரச பரம்பரையின் கடைசி மன்னனான விஜயாதித்தியன் VII இறக்கும்வரை அதாவது 530 ஆண்டுகள்-தென்னிந்திய அரசியலில் இடையறாத அரசியல் பொலிவுடன் காணப்படுகிறது. இத்தனை ஆண்டுகள் தென்னிந்தியாவில் நிலைபெற்ற ஒரேவோர் அரசு என்ற சிறப்பு வேங்கி நாட்டுக்குத் தான் உண்டு. வேங்கி நாட்டின் அரசியலுக்குரிய நலங்களைப் பாதுகாக்கின்ற முறையில் சோழரும் மேலைச்சாளுக்கியரும் சாளுக்கிய நாட்டிலும் வேங்கியிலும் 1133-வரையுள்ள (998-முதல்) 135 ஆண்டுக் காலம் இராணுவ முறையில் போராடி ஓய்ந்தார்கள். சோழர்களுடைய படை வலிமையும் வீர ராஜேந்திரன் காலத்தில் அரும்பிய அரசியல் ராஜதந்திரமும் இந்தச் சாளுக்கியர்—சோழர் போட்டியின் கடுமையைக் குறைக்க வில்லை. சோழர்களுக்கு வேங்கியின்மேல் செலுத்த வேண்டிய அரசியல் ஆதிக்கம் கௌரவப் பிரச்சினையாக மட்டும் அமைய வில்லை. மாறாக, சோழ நாட்டின் பாதுகாப்புக்கு வேங்கி இரு வகைகளில் முக்கியமானதாக விளங்கிற்று. சோழப் பேரரசின் வடக்கு எல்லையிலிருந்த வேங்கியின் அரசியல் சோழருக்கு அடங்கியிருந்தால் பூகோள முறையில் ஏற்படும் இயைபு சோழ நாட்டுக்குத் துணை செய்யும். சாளுக்கியர் என்ற ஒரே இனத்தைச் சேர்ந்த மேலைச்சாளுக்கியரும் வேங்கி நாட்டினரும் ஒன்று சேர்ந்து சோழ நாட்டைப் படையெடுக்க அனுமதிக்கக் கூடாது என்ற கருத்தில் சோழ நாடு வேங்கியின் அரசியலுக்காகத் தன்னுடைய படைகளை நடத்தி வேற்று நாட்டு மண்ணில் போரிட்டது.

மேலைச்சாளுக்கியர் தங்களுக்கு வாய்த்த வட இந்திய எதிரியான கன்னோசிய பராமரர்களை எதிர்த்துப் போராடிக் கொண்டே சோழர்களையும் சமாளித்தனர். சோழர்கள் பெரிதும் வேண்டி நின்ற அதே அரசியல் சமன்நிலை அமைப்பு (System of Balance of Power) வேங்கி நாடு சோழருக்கு உரியதாகிவிட்ட பின்பு வெகுவாகப் பாதிக்கப்படும் என்று எப்போதுமே ராஜ தந்திரத்தில் சோழர்களைவிட மேம்பட்டவர்களான மேலைச் சாளுக்கியர் நினைத்ததில் தவறு ஒன்றுமில்லை. வேங்கியை நோக்கி நின்ற இந்தச் சோழரும் சாளுக்கியரும் மன ஒற்றுமை

யோடு ஒன்று சேர்ந்திருப்பின், இத்தகைய இழுபறிப் போராட்ட அரசியல், தொய்வாகித் தானாகி நீங்கும். இந்த வாய்ப்பு ஒரு முறைதான் ஏற்பட்டது. 1068-ல் வீரராஜேந்திரனுடைய ராஜ தந்திரப் புரட்சிதான் அந்த வாய்ப்பை ஏற்படுத்தியது. விக்கிரமாதித்தனும் வேங்கிக்கு வடக்கேயுள்ள கீழைக் கங்க மன்னன் ராஜராஜனும் அச் சோழனுக்கு மருமக்களாக ஆகிப் போனபோது வேங்கி நாட்டரசியலைப் பொறுத்தளவில் சோழருக்கு ஏற்பட்டிருந்த அரசியல் மனயீர்ப்பு மறைத்தது. வேங்கியும் சோழ நாட்டுக்குரியதாக (vassal state) மாறிக்கொண்டது. 1070-ல் சோழ மன்னனான குலோத்துங்கனுக்குரிய தனிப்பட்ட எதிரியான விக்கிரமாதித்தன் வீரராஜேந்திரனுடைய ராஜதந்திர ஏற்பாடுகளைக் கைவிட்ட நிலையில் மேலைச்சாளுக்கிய மண்ணில் நிகழ்ந்த சோழர் சாளுக்கியர் இராணுவப் போராட்டத்தின் கடைசி மோதல் நிகழ்ந்தது. மேலைச்சாளுக்கியரின் ஊடுருவல் வேங்கி நாட்டில் 1115-லிருந்து நிகழத் தொடங்கியது. குலோத்துங்கன் 1118-ல் தனது மகன் விக்கிரமனைத் திருப்பி அழைத்த வேங்கி நாட்டைச் ‘ செலவெழுதி ’ விட்டான். ஆனால், 1126-ல் விக்கிரமாதித்தன் இறந்த பின்பு விக்கிரமச் சோழன் அதை 1133-ல் திரும்பவும் கைப்பற்றிக்கொண்டான்.

இவ்வாறு 1006-ல் ராஜேந்திரன் I நடத்திய இரட்டப்பாடி படையெழுச்சியிலிருந்து தொடங்கிய சோழர்—சாளுக்கியர் பேரரசுப் போராட்டம் வேங்கியின் ஆதிக்கத்திற்காக மேற்கொள்ளப்பட்ட போட்டியாக மாறி 1068-ல் வீரராஜேந்திரனுடைய ராஜதந்திர புரட்சியில் சிறிதளவு நெகிழ்ச்சியுற்று பின்பு குலோத்துங்கன் காலத்தில் தனிமனித வீருப்பு உணர்ச்சியின் காரணமாக முகப்பு கட்டி உடனேயே உலைந்த நிலையில் 1133-ல் விக்கிரமச் சோழனால் புதுப்பிக்கப்பட்டு உடனேயே மறுபடியும் தேய்ந்து போனது. 998-லிருந்து 1133வரையுள்ள 135 ஆண்டுகளாகச் சோழர்—சாளுக்கியர் இராணுவப் போராட்டம் பேரரசுகளின் இராணுவப் போராட்டமாகவும் தனிநபர்களின் மோதுதலாகவும் நடைபெற்று இதில் சம்பந்தப்பட்ட மூன்று நாடுகளையும் பாதித்து நின்ற போதிலும் இப் போராட்டம் சோழருக்குரிய இராணுவ மேம்பாடாக, காவியப் பெருமையோடு (epic grandeur) காணப்பெறுகிறது.

# 17. சோழர்களும் ஈழத்தவரும்

சோழப் பேரரசின் விரிவாக்கத்திற்கு உட்பட்ட தென்னிந்தியாவின் தென்பகுதியில் ஈழநாடும் உட்பட்டுப் போயிற்று. தென்னிந்திய தீபகற்பத்தை விட்டுக் கடல் கடந்த நிலையில் ஈழத்தைச் சென்றடைய வேண்டிய அவசியத்தைச் சோழர்கள் உணர்ந்தார்கள். ஈழநாடு தென்னிந்தியாவைப் பொறுத்த அளவில் தனிமைப்பட்டுப் போன நாடாக இயங்கவில்லை. சோழர்களின் படையாற்றலில் தன்னுரிமை இழந்து போன ஈழநாடு தென்னிந்தியாவுடன் தொன்றுதொட்டு கொண்டிருந்த தொடர்புகளை ஆராய்வது நலம்.

## 1 முன்னாளையத் தொடர்புகள்

கி. பி. 173 அளவில் சங்க காலத்தில் சோழ நாட்டை ஆண்ட கரிகாற்பெருவளத்தான், சங்க நாள்களில் பேரரசைச் கட்டுகின்ற பெருமிதத்திற்கு அரசியல் உருவம் கொடுத்தான். இச் சோழனுடைய கடற்படைப் படையெழுச்சினால் ஈழம் சோழர்க்குரியதாக மாறிப்போனதாக வரலாற்றுக் குறிப்புகள் தெளிவான முறையில் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் கரிகாலனுடைய கடற்படை ஈழத்தைப்பிடித்து அங்குள்ள 12000 மக்களை அடிமைப்படுத்தி, தமிழ் நாட்டுக்குக் கொண்டுவந்தது என்பதை ஈழத்தின் மகாவம்சம் கூறுகிறது. சங்க காலத்திற்குப் பின்பு ஏற்பட்ட களப்பிரர் காலத்தில் ஈழத்தைப்பற்றிய செய்திகள் நமக்கு வரலாற்று முக்கியத்துவத்தோடு இதுவரை கிடைக்கவில்லை. கி. பி. 600-ல் ஏற்பட்ட பல்லவரின் பேரரசில் ஈழம் தொடர்புபடுத்தப்பட்டது. நரசிம்மவர்ம பல்லவன் (கி.பி. 630—668) தனது தலைநகரான மகாபலிபுரத்திலிருந்து இரண்டு கடற்படை எழுச்சிகளை மேற்கொண்டான். பல்லவர்களின் பேரரசுக்குச் சமமான காலத்தில் தென்பகுதியில் எழுச்சியுற்ற முதலாம் பாண்டியப் பேரரசில் ஈழத்தின் தொடர்பு தெரியவருகிறது. பாண்டியன் ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லபன் ஈழநாட்டின்மீது படையெடுத்துச் சென்று அங்குள்ள பெருநிதியத்தைக் கவர்ந்தான். ஈழ முழுமையும் அவனுடைய ஆட்சி நிலவியதாக வரலாற்றுச் செய்தி உண்டு.

## II சோழர்—ஈழத்தவர் போராட்டம்—காரணங்கள்

பல்லவர்—பாண்டியப் பேரரசுகள் கி. பி. 880-ல் நிகழ்த்த திருபுறம்பியப் போருக்குப் பின்பு வீழ்ச்சியுற்றபோது தென்னக அரசியல் தஞ்சையின் விஜயாலய சோழரின் வயப்பட்டது. அவ்விரு பேரரசுகளின் அரசியல் வாரிசாகச் சோழர்கள் தென்னிந்தியாவில் தங்களுடைய பேரரசைக் கட்டத் தொடங்கினார்கள். தென் பகுதியிலுள்ள சேரர்—பாண்டியர் பகுதிகளை அவர்கள் கைப்பற்றியபோது ஈழத்தையும் தங்களுடைய ஆதிக்கத்திற்கு உட்படுத்தினார்கள். இவ்வாறு ஈழத்தைச் சோழர்கள் கைக் கொள்ள வேண்டிய அரசியல் சூழ்நிலை எவ்வாறு ஏற்பட்டது? அதற்கான காரணங்களை ஆராய்வோம்:

**1. சேரர்—பாண்டியர் ஈழத்தவர் முக்கூட்டு அரசியல் (Chera—Pandya—Lanka Tripolity):** தென்பாண்டிய நாட்டிலுள்ள கொற்கையில் நிலைபெற்றிருந்த பாண்டியர் அரசு கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்பே மதுரைக்கு வந்தமைந்தமையை அறிஞர் கால்டுவெல் 'மொதுர பெஸிலியோன் பாண்டியோனிஷ்' (Modoura Basileion Pondionis) என்ற பண்டைய கிரேக்க மொழித்தொடர் கொண்டு நிறுவுகிறார்.[1] மதுரைக்கு வந்த பிறகு பாண்டியர் சோழரோடு மோதுகின்ற நிலை தென்னக அரசியலுக்குரிய அங்கமாக உருவெடுத்தது எனலாம். இப் பாண்டியர்களின் உறவுக்குப் பாத்திரமாகத் தென் கேரளந்தான் விளங்கியது. வராகமிகிர் வட கேரளத்தை ஆரியகம் என்றழைப்பதைச் சுட்டிக் காட்டித் தென் கேரளந்தான் தமிழரின் இசைவுக்கு உரியதானது எனக் கால்டுவெல் கருத்துரைக்கிறார்.[2] பாண்டியரும், தென் கேரளத்தாரும், ஈழத்தாரும் மணவினைத் தொடர்பு கொண்டு அரசியல் விழிப்புணர்வுடன் ஒற்றுமை கொண்டு இயங்கினார்கள். பொது எதிரியை எதிர்க்கின்றதிறனை வளர்க்கின்ற அரசியலறிவின் முதிர்ச்சியாக அவர்களுக்குள் நிலவிய அவ்வொற்றுமை சோழப் பேரரசின் விரிவாக்கத்திற்குத் தடையாகத் தோற்றங்கொண்டது. பூகோள முறையிலும் தொடர்பு கொண்டிருந்த சேர—பாண்டிய—ஈழத்தவர் ஒற்றுமை சோழருடைய இராணுவ ஆதிக்கத்தை எதிர்க்கின்ற பெருஞ்சக்தியாகவும் காணப்பட்டபோது, சோழரின் படைபலம் எல்லாம் அவ்வெதிர்ப்பை முறியடிக்கத்தக்க அளவில் தீவிரமாக்கப்பட்டது. இதைப் பொறுத்து சேர—பாண்டிய—சிங்களவரின் மண்டலஞ்சேர் கொள்கை வலுப்படுத்தப்பட்டிருந்தது. இத்தகைய முக்கூட்டு அரசியல் தென்பகுதியில்

1 கால்டுவெல் ஒப்பிலக்கணம்—கிரியர்ஸன்—கழக வெளியீடு—1966—p. 131

2 bid—p. 133 – 134

வலிமையோடு காணப்படும்வரை சோழர்களின் ஏகாதிபத்திய வளர்ச்சிக்கு விரிவாக்கம் கிடையாது என்றாகிப் போனது. ஆதித்த சோழன் கொங்கு நாட்டை வென்று காவிரிக்கு வடக்கே சோழப் பேரரசை நிலைநிறுத்தினான். காவிரிக்குத் தெற்கே வந்த அவனுடைய மகன் பராந்தகன் I பாண்டியரோடு போரிட்டபோது ஈழத்தவரும் பாண்டியர்களோடு கலந்து நின்று போராடினார்கள்.

பராந்தகனுக்குத் தென்பகுதியிலிருந்த முக்கூட்டு அரசியலின் பூதாகாரத்தன்மை அப்போதுதான் நேரடியான பரிச்சயத்தில் தெரிய வந்தது. ஈழத்தையும் வெற்றி பெற்றாக வேண்டும் என்ற அரசியல் தேவை அவன் மனதில் குடிகொண்டதன் காரணமாகச் 'சங்கிரம இராகவன்' என்ற பட்டத்தைத் தனக்குச் சூட்டிக்கொண்டான். இச் சோழரிடம் தோற்றோடிய பாண்டியன் ராஜசிம்மன் ஈழநாடு சென்று தன்னுடைய அரச நகைகளான மணிமுடி போன்றவற்றை ஈழமன்னனிடம் அடைக்கலம் என வைத்து விட்டுத் தனது தாய்வீடான கேரளத்திற்குச் சென்றுவிட்டான். சோழ நாட்டினரோடு ஈழத்தார் நேரடியாக மோதித் தனக்கு ஏதாவது அரசியல் ஆதாயந்தேடித் தருவர் என்ற நம்பிக்கையை, அவன் பல நாள்கள் காத்திருந்து இழந்த பின்புதான், கேரளம் சென்றான். இதிலிருந்து அறியப்படுவது என்ன? ஈழத்தார் சோழமன்னனோடு பாண்டியனுக்காக மோதுவதற்கு ஆயத்தங் கொள்ளவில்லை என்ற கருத்து புலப்படுகிறது. ஆனால் பேரரசின் ஆதிக்கவுணர்வோடு பராந்தகனுடைய படைகள் ஈழநாடு சென்று ஈழ மன்னனைப் பாண்டியனுடைய நகைகளைக் கேட்டளவில் போரிட்டுத் தோற்கடித்தன.

நகைகளைக் கவருவதற்காகச் சோழர்படை சென்றநிலை மேலெழுந்தவாரியாகச் சொல்லப்படுவது ஆகும். உண்மையான காரணம் தென்புலத்தின் அரசியல் சம்பந்தப்பட்டது ஆகும். பாண்டியர்கள் சோழர்களோடு போரிட்டபோது ஈழத்தாரும் தங்கள் நாட்டிலிருந்து பாண்டியநாடு வந்து பாண்டியரோடு சேர்ந்துகொண்டார்கள். இது ஓர் அரசியல் குற்றம். தோற்றோடிய பாண்டியன் ராஜசிம்மன் ஈழநாட்டில் சென்றமர்ந்திருந்தான். இந்தச் சூழ்நிலையில் முக்கூட்டு அரசியல் இயக்கம் பெறும் என்று சோழர்கள் எண்ணியதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆகவே, ஈழத்தாரைத் தண்டிக்கின்ற முறையில்தான் பராந்தகனுடைய படைகள் ஈழநாடு சென்றன. உரோமர்களின் இராணுவ ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு, ஈழத்தினரைப் போன்ற தனித் தீவு ஆன பிரிட்டனிலிருந்து பிரிட்டானியர் இராணுவ உதவி செய்தபோது, கி. மு. 55-ல் ஜூலியஸ் சீசர் பிரிட்டன்மீது படையெடுத்துச் சென்று அதனை அடிமைப்படுத்து

கின்ற முதல் முயற்சியைத் தொடங்கி வைத்தான். அதைப் போல, சோழர்களும் தண்டனைப் படையெழுச்சியாக (punitive expedition) தங்கள் படைகளை ஈழநாட்டில் கொண்டிறக்கிப் போர் செய்ய வைத்தனர். அந் நாட்டைப் பிடித்து ஆள வேண்டும் என்ற எண்ணம் அப்போது அவர்களுக்கு ஏற்படுகின்ற அளவிற்கு அவர்களுடைய பேரரசுத் தத்துவம் (spirit of imperialism) முழுமையான உருவாக்கத்தைக் கொண்டிருக்கவில்லை.

நகைகளைப் பெற்றுக்கொண்ட ஈழமன்னன் தப்புலனுக்குப் (923—934) பின்வந்த உதயணன் IV (943—955) அடைக்கலம் என்று வந்த பாண்டியனுடைய நகைகளைப் பாதுகாக்கின்ற முயற்சியில் தன்னுடைய அரசுரிமையையும் அரண்மனை வாழ்வையும் இழந்து, இராணுவ முறையில் முறியடிக்கப்பட்ட நிலையில், காட்டுக்குள் சென்று ஒளிந்தான். ஈழமன்னர்களின் அரசியல் நேர்மையும் வாக்கு வாய்மையும் இந்த நிகழ்ச்சியிலிருந்து சோழர்க்குப் புரிந்த நிலையில்கூட, ஏகாதிபத்திய முறையில் படை எடுப்புகள் பின் வரும் காலங்களில் நிகழத்தான் செய்தன :

**2. பேரரசுத் தத்துவமும் ஈழமும் :** பராந்தகனுடைய ஈழப் படையெடுப்பு 944-ல் நிகழ்ந்தது. 47 ஆண்டுகள் கழித்து ராஜராஜன் I தனது படைகளை 991-ல் ஈழத்திற்கு அனுப்பி வைத்து ஈழத்தின் வடபகுதியைப் பிடித்துக்கொண்டான். 991-லிருந்து 1070-வரை இத்தகைய பேரரசு ஆதிக்கத்திற்கான வல்லடிப் போர்கள் ஈழத்தில் நடைபெறத் தொடங்கின. ஈழத்தினரும் தங்களுடைய விடுதலைக்காகக் கிளர்ச்சியுற்றுப் போராடினார்கள். ஆங்கிலேயர்களுடைய ஆதிக்கத்தை எதிர்த்து ஐரிஷ்காரர்கள் போராடியதைப்போலச் சோழர்—சிங்களவர் போராட்டம் 80 ஆண்டுகள் தொடர்ந்து நிகழத் தொடங்கியது. இவ்வாறு பேரரசின் விரிவாக்கத்திற்கு ஈழமும் உட்பட்ட நிலையில் ஈழத் தொடர்புகள் சோழரின் இராணுவ நடவடிக்கைகளுக்கு வழிவகுந்து கொடுத்து ஆதிக்க அரசியலின் அவலங்களைத் தாங்கி ஈழத்தை வருத்தி நின்றது.

**3. அரசியல் சமன்நிலைக் கோட்பாடும் (Principle of Balance of Power) ஈழமும் :** பாண்டியரை வெல்லப்போன சோழர்கள் பாண்டியருக்குத் துணைசெய்ய வந்த சேரரையும் ஈழத்தாரையும் போரிட்டு அடக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருந்தது. இந் நிலையில் ஈழம் தனித்த முறையில் விடப்பட்டால் தென் புலத்தில் அரசியல் சமன்நிலை (Balance of Power) ஏற்படுவதற்குரிய வழி தடைப்பட்டுப் போகும். தீபகற்பத்தைத் தங்களுடைய

நேரடி ஆதிக்கத்தில் கொண்டு வந்த சோழர்கள் ஈழத்தீவு தன்னிச்சையாகச் செயல்பட்டுத் தெற்கே ஓர் அரசியல் சக்திாக விளங்குவதற்கு அனுமதித்திருக்க முடியாததுதான். இந் நிலையில், சோழர்களின் ஈழக் கொள்கை அவர்களுடைய தனியரசு அந்தஸ்தை நீக்குவதற்காக ஏற்பட்டது எனக் கூறலாம்.

**4. வடக்கே செல்லுவதற்குத் தெற்கில் மூலபலம் (Home Front in the South for War Front in the North) :** சோழப் பேரரசு வடக்கு நோக்கி விரிவாக்கங்கொள்கின்ற அமைப்புக்குக் காரணமானவன் சோழன் ராஜராஜனே. இவனுடைய காலத்தில் தான் மேலைச் சாளுக்கியரை அவர்களுடைய நாட்டிலேயே சோழர்படைகள் சென்று தாக்கின. வடக்கில் பேரரசுப் போராட்டம் வலுவுடன் நிகழ்வதற்குத் தெற்கில் மூலபலம் சரியாக அமைய வேண்டும் என்ற எண்ணம் ராஜராஜனுக்கு ஏற்பட்டது. சேர நாட்டை 988-ல் அவன் வென்றபோது அந் நாட்டுக்கு அப்பாலுள்ள மாலத்தீவுகளையும் கடற்படை கொண்டு பிடித்துக் கொண்டான். சேர நாட்டிலுள்ள சோழர்களுக்குரிய ஆதிக்கப் பிடிப்பு அப்போதுதான் வலுப்பெறும் என்றளவில் மாலத் தீவுகளைக் கைப்பற்றுகின்ற தொலைநோக்கு இராணுவம் ராஜ தந்திரம் ராஜராஜனிடம் காணப்பட்டது. ஆகவே, பாண்டிய நாட்டுக்கு உறுதுணையாக நின்ற ஈழத்தை அடக்கிச் சோழ நாட்டோடு அவன் சேர்ந்தான். தொண்டை மண்டலமும் சோழ மண்டலமும் சோழப் பேரரசர்களின் நேரடியான பார்வையில் ஆட்சி செய்யப்பட்டன. தெற்கே பாண்டியரையும், சேரரையும், ஈழத்தினரையும் தனக்கு அடங்கியவராக மாற்றிக்கொண்டால், வடக்கே சாளுக்கியரை எதிர்த்துப் போராடுவதற்கு வலிமையான பின்னணி (**Home Front**) ஏற்படும் என்று ராஜ ராஜன் I அரசியற்புலமையோடு நம்பினான். இந்த நம்பிக்கையின் செயல்பாடாகத்தான் ஈழத்தைச் சோழர்கள் கைப்பற்றினார்கள்.

மேலே சொல்லப்பட்ட முக்கூட்டு அரசியல் எதிர்ப்பு, பேரரசுத் தத்துவத்தின் செயலாக்கம், அரசியல் சமன் நிலைக் கோட்பாடு, வடக்குப் போர்முனைக்குத் தெற்குப் பின்னணி மூல பலம் என்ற நான்கு காரணங்களைக்கொண்டு சோழர்களுடைய ஈழக் கொள்கை வரையறுக்கப்பட வேண்டும். இந்த நான்கு கொள்கைகளை இயக்கிக் காட்டிய சோழர்களுக்கு ஈழத்தாரைப் பூரணமான முறையில் அடக்கிவிட முடியவில்லை. சோழப் பேரரசர்களின் ஆதிக்கப் போர்களை ஆராய்ந்தால் இந்த உண்மை தெளிவாகும்.

**5. சோழரின் ஆதிக்கப் போர்கள்:** ராஜராஜனுல் ஈழம் 991-ல் படையெடுக்கப்பட்டு, அத் தீவின் வடபகுதி சோழர்க்கு உரிமையாக்கப்பட்டது. சோழர்களுடைய இராணுவச் செருக்கை வெளிப்படுத்துவது போல, ஈழத்தின் மத்திய பாகத்தில் காணப் பட்ட பொலனருவாவைச் சோழர்கள் தங்களுடைய ஆதிக்கக் கேந்திரமாகக் கொண்டார்கள். சோழரிடம் தோற்ருேடிய சிங்கள அரசன் காடுகளை அரணுகக் கொண்ட ரோகண நாட்டுக்குச் சென்று விட்டான். அங்கு அவனுடைய ஈழ நாட்டரசு தொடர்ந்து செயல் பெற்றது. சோழரின் அரசும் ஈழ அரசும் ஈழத்தை ஆளத் தலைப்பட்டன. இவ்விரண்டு அரசுகளில் ஈழ மன்னனுக்கு அவனுடைய மக்களது நேரடியான ஆதரவு காணப்பட்டது. சோழர்கள் ஆதிக்கக்காரர்களாகவே ஈழத்தில் செயல்பட்டார்கள். சோழருக்குட்பட்ட ஈழநாட்டுப்பகுதி மும்முடிச் சோழ மண்டல மாக்கப்பட்டது. சோழ அரசின் மத்திய ஆட்சி முறைமைக்குள் உட்பட்ட மண்டலமாக அது காணப்பட்டது.

பாண்டியரையும் சேரரையும் வென்ற ராஜராஜன் அவர் களுடைய அரசுரிமையைப் பறிக்கவில்லை; அவர்களை அரசர் களாகவும் செயல்படவிடவில்லை. சோழரின் நேரடி ஆட்சியைச் சுட்டிக் காட்டுகின்ற வகையில் சேர பாண்டிய நாடுகள் ராஜராஜ மண்டலம் என்ற சோழ அரசாட்சிப் பகுதியாக மாற்றப்பட்டு விட்டன. ஆனுல் கடல் கடந்து சென்று அந்நிய நாட்டரசனைக் காட்டுக்கு அனுப்பிய ராஜராஜன் நல்லிணக்கமான முறையில் அந்த ஈழத்தரசன் துணைகொண்ட மேலாண்மை அரசை (Suzerainty) உருவாக்கவில்லை. மாருக, ஈழம் சோழரின் நேரடி ஆட்சிக்கு உரியதாக மாற்றப்பட்டது. இந்த மாற்றத் திற்கு முத்தாய்ப்பாக ராஜராஜனுடைய மகன் ராஜேந்திரன் I ஆட்சி ஏற்பட்டது. 1017-லிருந்து 1029-வரை ஈழத்தின் முழுமைக்கும் சோழரின் நேரடியான ஆதிக்க ஆட்சி ஏற்பட்டது. சோழர்—சிங்களவர் வரலாற்றில் இந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலந்தான் சோழரின் பேரரசு முழுமையான அளவில் ஈழத்தில் செயல்பட்டது. ராஜேந்திரனிடம் தோல்வியுற்ற மகிந்தன் V என்ற ஈழ மன்னனைச் சோழ நாட்டில் 1029வரை சோழர்கள் சிறை வைத்திருந்தார்கள். தலைவனில்லா ஈழம் சோழருக்கு இவ்வாறு அடிமைப்பட்டுப் போயிற்று. ஆனுலும் கிளர்ச்சிக் காரர்கள் தலை எடுத்தார்கள்.

## III ஈழத்தவரின் விடுதலைப் போர்கள்

1029-ல் மகிபாலன் இறந்த பின்பு, அவனுடைய மகன் காசிபன் என்பவன் விக்கிரமபாகு I என்ற பட்டத்தோடு தனது

பன்னிரண்டு ஆண்டுக் கால சுயேச்சை ஆட்சியைத் தொடங்கினன். ரோகண நாடு அவனுல் மீண்டும் ஈழத்தின் விடுதலைப் பாசறையாக ஆக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான தமிழர்களைக் கிளர்ச்சித் தொண்டர்கள் கொன்ருர்கள். 1041-ல் எட்டு நாள்கள் ஆட்சி செய்த கித்தி என்பவனுக்குப் பின்பு அரசனுன மகாலான கித்தி தன்னுடைய மூன்ருண்டுக் கால ஆட்சியின் முடிவில் தற்கொலை செய்துகொண்டான். ஈழத்தின் விடுதலைக் கிளர்ச்சியை வலுவாக நடத்த முடியாத ஆற்ருமையின் காரணமாக அவன் தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொண்டான். இவனுக்குப் பின்பு விக்கிரமபாண்டு (1044—1047) என்ற பாண்டிய நாட்டு இளவல் ஈழக்கிளர்ச்சியாளர்க்குத் தலைவன் ஆனுன்.

சோழரின் ஆதிக்கம் ஏக ஈழத்திற்கும் என்ருகி, 1017-லிருந்து 1029வரை விரிந்த பின்பு மறுபடியும் வடபுலத்திற்குரியது என்றளவில் அது குறுகிக்கொண்டதை ராஜேந்திரனுடைய மகன் ராஜாதிராஜன் மனத்தளவில் ஒப்புக்கொள்ளவில்லை. பிறவிப் போர்க்குணங்கொண்ட அவனுடைய படையெழுச்சிகள் 1047, 1051, 1053 ஆண்டுகளில் ஏற்பட்டன. பாண்டியத் தாய்க்கு மகாலான கித்தி பிறந்த விக்கிரமபாண்டு என்ற விக்கிரமப் பாண்டின் சோழர்களிடம் தோற்ருன்.

## IV வட இந்திய இளவரசர்களும் ஈழ விடுதலை இயக்கமும்

சிங்கள மன்னர் பரம்பரையினரும், பாண்டியரும் ஈழத்தை விடுதலை செய்ய முடியாத இந் நிலையில், வட இந்தியாவிலிருந்து ஈழத்திற்கு வந்திருந்த சில அரச குமாரர்கள் ஈழத்தாரின் கிளர்ச்சிக்குத் தலைமை தாங்க முன்வந்தார்கள். இவர்களுக்குள் அயோத்தி இளவரசன் ஜகதிபாலன் முக்கியமானவன். இவனுடைய தலைமை 1047-லிருந்து 1051வரை நீடித்தது. சோழர்களிடம் தோற்று இவன் உயிரிழந்தான். வீரசலாமேகன் என்பவன் கன்னேசி தேசத்து அரசகுமாரன். இவனைப்பற்றிச் சோழரின் கல்வெட்டுகள் பரவலாகக் கூறுகின்றன. இவனும் ஜகதிபாலனும் ஒருவரே என்ற கருத்தும் உண்டு. ஆனுல், வீர சலாமேகன் 1055-ல் போரில் கொல்லப்பட்டான் என ராஜாதி ராஜனுக்குப் பின்பு சோழ அரச பட்டத்திற்கு வந்த அவன் தம்பி ராஜேந்திரன் II சோழனுடைய கல்வெட்டுகள் கூறுகின்றன.

## V பேரரசுத் தத்துவத்தின் முடிவு

991-ல் தொடங்கப்பட்டு 1077வரை நிகழ்த்தப்பட்ட வல்லடிப்பிடிப்போடுகூடிய ஆதிக்க அரசியலில் ஈழத்தின் வட

பகுதி மட்டும் காணப்பட்டது. ராஜேந்திரனுடைய பேரரசுப் பெருமிதத்தின் காரணமாக 1017-லிருந்து 1029வரை ஈழம் முழுமையும் சோழரின் நேரடி ஆட்சிக்கு உரிமையாகிவிட்டது. 1029-லிருந்து ஈழத்தாரின் விடுதலைக் கிளர்ச்சி இயக்கம் சிறுகச் சிறுக வலுவடைந்தது. ராஜேந்திரனுடைய ஆதிக்கப் போர்களைப் பாராட்டி, அவற்றின் புகழுக்காக வாழ்ந்த அவனுடைய மூன்று மைந்தர்களும் (ராஜாதிராஜன், ராஜேந்திரன் II, வீரராஜேந்திரன்) ஈழத்தைப்பற்றி முழுமனதுடன் நினைத்துப் பார்க்கவில்லை. 1054-ல் நிகழ்ந்த கொப்பம் போரில் இறந்துபட்ட ராஜாதிராஜனுக்குப் பின்பு அரச பதவிக்கு வந்த ராஜேந்திரனால் 1055-ல் வீரசலாமேகனை எதிர்த்து நிகழ்த்தப்பட்ட போர்கள், ஈழத்தில் மேற்கொண்ட முழுமையான கடைசி இராணுவ நிகழ்ச்சி எனக் கூறலாம்.

1042-லிருந்து சாளுக்கிய நாட்டை ஆளத் தொடங்கிய சோமேசுவரனும் அவன் மகன் விக்கிரமாதித்தனும் பெருமளவிற்கு இராணுவ தந்திரிகளாகவும் இருந்ததால், அவர்களுடைய பேரரசுப் போட்டிக்குப் பதிலடி கொடுக்கின்ற பெரும்பணியில் தங்களுடைய கவனத்தைச் செலுத்தத் தொடங்கினார்கள் அச்சோழர்கள். இந் நிலையில் ஈழத்தவர்களின் சுதந்தர அரசு தன்னிச்சையாக வளரத் தலைபடத் தொடங்கியது. இவ்வாறு அமைந்த சூழ்நிலையின் காரணமாக 1055-லிருந்து 1070வரையுள்ள காலப்பகுதியில் சோழப் பேரரசுக்கு உட்பட்ட ஈழத்தின் வடபகுதிக்கும் ரோகண நாட்டுக்கும் இராணுவப் போராட்டம் நிகழவில்லை. இந்த 25 ஆண்டுக்காலப் பகுதியில் ஈழத்தவர் தங்களுடைய இராணுவ வலிமையை வளர்த்துக்கொண்டார்கள். சோழ ஆதிக்கக்காரர்களை நாட்டைவிட்டு வெளியேற்றுகின்ற முயற்சிக்குரிய இராணுவத் திறனைப் போட்டி மனப்பான்மையோடு வளர்க்கின்ற நாட்டுப் பணியில் அவர்கள் முழுமூச்சுடன் ஈடுபடலானார்கள்.

## VI ஈழ விடுதலைப் போரின் வெற்றி (1070)

1070-ல் சோழ மன்னன் குலோத்துங்கன் I ஈழநாட்டை அடக்கி வைக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தான். ராஜேந்திரனுடைய காலத்திலிருந்து பாண்டிய—சேரப் பகுதிகள் சோழ அரசாட்சியின் நேரடி பிடிப்புக்குள் உட்பட்டுப் போன நிலையில் சேரர்—பாண்டியர்—ஈழத்தவரின் ஒற்றுமைக்குரிய மூலபலம் முறிந்து விழ்ந்தது. ஆனால், பாண்டியர்களின் விடுதலைக் கிளர்ச்சி அணையாத நெருப்பாக உள்ளூரக் கனன்றுகொண்டு

இருந்தது. ராஜேந்திரனுக்குப் பின்பு வந்த மன்னர்கள் பாண்டியர்களை அவ்வப்போது இராணுவ முறையில் அடக்கி வைக்க வேண்டிய அளவிற்குப் பாண்டியரின் போராட்டவுணர்வு தலை காட்டியது. சிங்களவருக்குத் தலைவனாக இருந்த விக்கிரமப் பாண்டு பாண்டிய நாட்டில் செய்த விடுதலைக் கிளர்ச்சி தோற்ற பின்புதான் ஈழம் சென்றடைந்து அங்கே தனது அரசுரிமையை மேற்கொள்ள விழைந்தான் எனச் சோழர் தரப்புச் செய்திகள் சாசன அளவில் கூறுகின்றன. இவ்வாறு பாண்டியரும் ஈழத்தாரும் சோழரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை வேண்டி நின்ற போது மனத்தளவில் இணைந்து நின்றனர்; செயலளவில் ஒன்று சேர்ந்து அவர்கள் போராட முனைவதற்கு முன்பு ஈழந்தாரைக் குலோத்துங்கன் அடக்க எண்ணினான்.

அனைத்து ஈழத்திற்கும் சோழரின் ஒரே அரசாட்சி என்ற ஆதிக்கநிலை 1017-லிருந்து 1029வரை நடந்தேறிய பின்பு ஈழக் கிளர்ச்சிக்காரர்களால் ஈழத்தின் எந்தப் பகுதியிலும் காலூன்றி நின்று சோழர்களை எதிர்க்க முடியவில்லை. 29 ஆண்டுகள் ஈழத்தில் அரசியலாட்சிப் பிடிப்பில்லாமல் அக் கிளர்ச்சிக்காரர்கள் போராடியபோது 1058-ல் விஜயபாகு என்ற சிங்கள மன்னன் ரோகண நாட்டை விடுவித்தான். இந் நிகழ்ச்சிக்குப் பின்பு பன்னிரண்டு ஆண்டுக்காலத் தனியாணைக் கோட்டமாக ரோகண நாடு விளங்கியபோது ஈழமுழுவதையும் மீட்க வேண்டியதற்கான முழுவிடுதலைப் போருக்கான ஆயத்தங்கள் ஏற்படத் தொடங்கின. குலோத்துங்கன் அரசபதவி ஏற்ற 1070-ல்தான் இவ் விடுதலைப் போர் தொடங்கியது. வீரராஜேந்திரனுடைய இறப்பும், அதிராஜேந்திரனுடைய அரசியல் கொலையும், அதனடியாக ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பங்களும், பின்பு நடந்த குலோத்துங்கனின் அரசபதவி ஏற்பும் 1070-ல்தான் நிகழ்ந்தன. இச் சூழ்நிலையினூடே ஈழத்தார் சோழர்களிடமிருந்து விடுதலை பெறுவதற்கு முயற்சி செய்தது அவர்களுக்குரிய அரசியலறிவைக் காட்டியது.

## VII சோழரின் பேரரசு உரிமைப் பாதுகாப்புப் போர் (1070)

குலோத்துங்கன் தனது படைகளை ஈழத்திற்கு 1070ஆம் ஆண்டளவில் அனுப்பினான். பேரரசுக்குரிய ஆதிக்கவுணர்வோடுகூடிய வல்லடிப்போர்களை நடத்துவதற்காகச் சோழர் படைகள் இம் முறை ஈழம் போகவில்லை. ஏற்கெனவே சோழரின் கைவசம் இருந்த ஆட்சிப்பகுதிகளைக் காப்பாற்றிக்கொள்வதற்காகத்தான் அப் படைகள் அவ்விடம் சென்றன. இந்த அளவிற்கு ஈழ அரசியலில் நேர்மாறான வகையில் மாற்றம் ஏற்பட்டுப்

போயிற்று. தாக்குதல் நடத்திய சோழர்கள் தாக்குதலுக்கு உட்பட்டுப் போனார்கள். கையில் இருப்பதைப் பேணுகின்ற செயல்முறை (Maintenance of Status Quo) ஏகாதிபத்தியத்திற்கு மாறுபாடு கொண்டது அல்ல. இந்த முறையிலும் ஏகாதிபத்திய வல்லமை தன்னை இனங்காட்டிக்கொள்ளும் என ஹான்ஸ் மார்கந்தா என்ற அமெரிக்க வெளிநாட்டுறவு சாஸ்திரப் பேராசிரியர் குறிக்கிறார். இந்தக் கருத்தின்படி குலோத்துங்கனுடைய ஈழப்படையெழுச்சி சோழ அரசாட்சியினுடைய பிடிப்பை வலுப்படுத்துவதற்காகக்கூட இல்லை; அதை இழந்து விடாமல் தடுப்பதற்காகவே ஏற்பட்டது.

ஈழ மன்னன் விஜயபாகு போர்ப்பயிற்சி பெற்ற தனது இராணுவத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து, சோழரின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட பகுதிகளில் வலுத்தாக்குதல் நடத்தி, சோழர்களைத் தோற்கடித்தான். பொலனருவா வீழ்ச்சியுற்றதும் ஈழத்தவரின் பாரம்பரியமான தேசீயத்திற்கு நிலைக்களனாக இருந்த பழங்கால தலைநகரான அனுராதபுரத்தில் விஜயபாகுவின் ஆட்சிபீடம் அமைக்கப்பட்டது. ஈழம் முழுமைக்கும் உரிமையாளனாக வளர்ச்சியுற்றுப் போன விஜயபாகு ஈழ மன்னனாக முடிசூட்டிக் கொள்ளுவதற்குத் தடையாக ஒரு கலகம் ஏற்பட்டது. விஜயபாகுவின் நேரடித் தாக்குதலுக்கு ஈடு கொடுக்க முடியாமல் சோழர் படைகள் ஈழத்தைவிட்டு 1073 அளவில் முழுவதுமாக வெளியேறிய பின்பு, குலோத்துங்கனுக்கு ஈழத்தின் விடுதலை நீங்காத மன உறுத்தலாக அமைந்தது. படைநடத்திப் பெறமுடியாத வெற்றியை ராஜதந்திரத்தின்மூலம் பெறுவதற்குக் குலோத்துங்கன் முடிவெடுத்துக்கொண்டான்.

ஈழம் முழுமைக்கும் மன்னனாகிவிட்ட விஜயபாகு சோழர்களின் ஜென்மப்பகைவனான மேலைச்சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனோடு ராஜதந்திர உறவு கொண்டான். முழு விடுதலை பெற்றுவிட்ட நிலையில், 'சக்தி பிறக்குது மூச்சினிலே' என்ற உணர்வுப் பெருமிதத்தில் ஈழநாடு தனியரசு ஆகியது. இத் தனி அரசு அந்தஸ்தை அனுபவிக்கத் தொடங்கியிருந்த காலத்தில், (ஈழ நாட்டின் 80 ஆண்டுக்காலச் சோழ ஆதிக்கம் ஓய்ந்த பின்பு) சோழ தூதர்களோடு சாளுக்கியநாட்டுத் தூதர்களும் அடுத்தடுத்து ஈழமன்னன் அவைக்கு வந்தார்கள். சாளுக்கிய தூதர்களுக்கு ஈழமன்னன் சிறப்பான வரவேற்பு கொடுத்தான். ஆனால், சோழ நாட்டுத் தூதருக்குச் சரியான கௌரவத்தை அளிக்கவில்லை என்ற காரணத்தைக் காட்டி குலோத்துங்கன் ஈழத்தாரோடு இருந்த பழைய பகைமையைப் புதுப்பித்துக்கொண்டான்.

சாளுக்கிய நாட்டிற்குச் சென்றுகொண்டிருந்த சிங்கள தூதரை, அவர்கள் சோழ நாட்டுக் கடற்கரையில் இறங்கியபோது, மானபங்கப்படுத்தி, அவர்தம் மூக்கரிந்து, ஈழ நாட்டுக்குக் குலோத்துங்கன் விரட்டியனுப்பினன். ஒருநாட்டு மக்களைப் பிறநாட்டு அரசாங்கம் இன்னல் படுத்துவது போர்ச்செய்கைக்கு ஒப்பாகும் என்று கருதுவது உண்டு. அதிலும் அரசு அந்தஸ்தைப் பெற்ற தூதரை இன்னலுக்குள்ளாக்குவது கலப்படமற்ற போர்ச் செய்கையே. தனது தூதனைச் சிறைசெய்த உதகையை ஆண்ட சேர மன்னனைத் தண்டிக்க ராஜராஜன் I படையெடுத்துச் சென்றதையும், தான் அனுப்பிய தூது குழுவிற்குச் சரியான அந்தஸ்தையும் மரியாதையையும் சீனர்கள் அளிக்காத முறையில் அச்சீனர்களிடம் சோழரின் அந்தஸ்தைக் குறைத்துச் சொல்லிய ஸ்ரீ விஜயத்தாரைத் தண்டிக்கின்ற முறையில் ராஜேந்திரன் I மேற்கொண்ட கடாரப் படையெழுச்சியையும் இவ்விடத்தில் நினைவு கூறுதல் வேண்டும்.

ஈழமன்னன் விஜயபாகு இயல்பான முறையில் வெகுண்டெழுந்து சோழநாட்டின்மேல் படையெடுத்துத் தாக்கத் தீவிர முனைப்பு காட்டினன்; மட்டிகாவதித்தா, மகாதித்தா என்ற இரண்டு இடங்களில் கப்பல்களையும் தளவாடங்களையும் அவனுடைய ஆணையின்படி இரு தளபதிகள் சேகரிக்கத் தொடங்கினர்கள். வல்லரசுப் போரினைத் தவிர்க்கின்ற மனப்போக்கு குலோத்துங்கனுக்கு ஏற்பட்டிருந்தது. ஆகவே, அச் சோழ மன்னன் ராஜதந்திரத்தைப் பயன்படுத்திச் சிங்களவரின் இராணுவத்திறனை ஒழிக்க முடிவெடுத்தான். 991-லிருந்து 1070வரையுள்ள 80 ஆண்டுகள் தமிழர்கள் ஈழத்தில் குடியேற்றப்பட்டார்கள். இவர்களுடைய இனப்பற்றுதலைத்தான் தனக்குரிய அரசியல் ஆதாயத்திற்குக் குலோத்துங்கன் திசைத்திருப்பினன். ஈழத்தை விட்டுச் சோழர்கள் 1070-ல் வெளியேறிய பின்பு 18 ஆண்டுகள் கழித்து, 1088-ல் விஜயபாகுவின் படையிலிருந்த தமிழினத்தைச் சார்ந்த வேளைக்காரப் படையினரைக் குலோத்துங்கன் ஈழ மன்னனை எதிர்த்துக் கலகம் செய்யத் தூண்டிவிட்டான். ஈழ மண்ணில் ஈழமன்னனிடம் ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு அவனுக்கெதிராகவே அவ் வேளைக்காரப்படையினர் கிளர்ச்சி செய்தபோது, அவர்களால் கொல்லப்பட்ட இரு தளபதிகளின் தகனச்சிதையினுள் கை, கால் கட்டப்பட்ட நிலையில் உயிரோடு தள்ளப்பட்டு அவர்கள் எரிக்கப்பட்டார்கள். சோழத் தூதர்களைக் கூப்பிட்டனுப்பி, தன்னுடு போர் செய்ய வருமாறு குலோத்துங்கனுக்கு விஜயபாகு சவால் விடுத்தான். குலோத்துங்கன் அச் சவாலை ஏற்றுப் போருக்கு வரவில்லை. 1067-ல் மேலைச்சாளுக்கிய மன்னன்

சோமேசுவரன் I போருக்கு வராததை அடுத்து அவனைப் போன்ற உருவச்சிலைக்கு அவமானத்தை உண்டுபண்ணிய வீரராஜேந்திர சோழனைப் போல் விஜயபாகு இந்தச் சந்தர்ப்பத்தில் நடந்து கொள்ளவில்லை. தன் தலைநகரம் திரும்பி ஆக்கப் பூர்வமான முறையில் ஈழநாட்டை அவன் ஆளத்தலைப்பட்டான். எந்தச் சூழ்நிலையிலும் ராஜ விசுவாசத்தை மறக்கக்கூடாத மனப்பயிற்சியும் போர்த்திறப்பாரம்பரியமும் பெற்றிருக்க வேண்டிய அவ் வேளைக்காரப்படையினர், தமிழர் என்ற இன உணர்ச்சியோடு தமிழ் மன்னன் குலோத்துங்கனுடைய தூண்டுதலுக்கு உட்பட்டு, கிளர்ச்சிக்காரர்களாக நடந்துகொண்டதானது விஜயபாகுவிற்கு ராஜதந்திரத்தின் பயன்பாடு பற்றிய உண்மையை உணர்த்தியது எனலாம். அதோடுகூட மற்றோர் உண்மையையும் அக் கலகம் புலப்படுத்திற்று. ஈழத்தில் குடியேறிய தமிழின மக்களைத் தழுவிச் செல்ல வேண்டியதை அரசியற்கடமையாக விஜயபாகு ஏற்றாக வேண்டியதாயிற்று. இந்த இரு உண்மைகளையும் உணர்ந்த நிலையில் செயல்படுகின்ற எண்ணங்கொண்டிருந்த அந் நாளில் தான் குலோத்துங்கனுக்கும் அவனோடு மணவினைத் தொடர்பு கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது.

## VIII சகவாழ்வுக் கொள்கை செயலாதல்

ஈழத்துத் தமிழர்களைத் தன் ஆட்சியில் மனத்தளவில் ஈடுபாடு (emotional identification) கொள்ளுவதற்கு ஆவன செய்ய விழைந்து நின்ற விஜயபாகுவிற்குக் குலோத்துங்கன் நீட்டிய நேசக்கரம் அவனுக்குரிய அரசியல் ஆதாரத்தை வழங்கியது. இந் நிலையில் குலோத்துங்கனுடைய மகள் சுத்தமல்லி விஜயபாகுவினுடைய உறவினன் வீரப்பெருமாளை மணம் செய்தாள். இந்த மணவினைத் தொடர்பானது ஈழமும் சோழப் பேரரசும் சகவாழ்வு முறைக் கொள்கையை ஒப்புக்கொண்டதை எடுத்துக் காட்டிற்று.

**சகவாழ்வுக் கொள்கையின் வீழ்ச்சி:** 1169-ல் சோழ மன்னன் ராஜராஜன் II பாண்டிய நாட்டு அரசுரிமைப் போரில் ஈடுபட்டபோது ஈழத்தரசும் சோழருக்கு எதிர்க்கட்சியில் சேர்ந்து சோழப் பேரரசை எதிர்த்தது. இந் நிலையில் 1088-லிருந்து 1169 வரை சுமார் 80 ஆண்டுகள் நிலவிய சகவாழ்வுக் கொள்கை முடிவடைந்தது. தாங்கள் ஆதரித்த வீரபாண்டியனைக் கைவிட்டு விட்டு அரசாட்சியிலிருந்த குலசேகரனை ஈழநாடு ஆதரித்தது. எப்படி? சோழருடைய இராணுவ வலிமையின் மேம்பாட்டின் காரணமாகக் குலசேகரன் பாண்டியநாட்டு மன்னனானபோது ராஜதந்திரத்தால் ஈழத்தார் அவனைத் தன்பக்கம் இழுத்துக்கொண்

டனர். சோழர்கள் தாங்கள் முன்பு எதிர்த்த வீரபாண்டியனைப் பாண்டிய நாட்டதிபதி ஆக்கினார்கள். ஏனென்றால், தங்களை முன்பு எதிர்த்த லங்கபுரா என்ற சிங்களத் தளபதியைச் சோழர்கள் கொன்று, அவனுடைய தலையை மதுரை கோட்டை வாசலில் தொங்க விட்டிருந்தனர். அத் தலையை அப்புறப்படுத்திய நிலையில் குலசேகரனும் ஈழத்தாரோடு சேர்ந்துகொண்டான்.

சோழன் ராஜாதிரான் II கொடுத்த உத்தரவின்படி சோழ அமைச்சன் பல்லவரையன் குலசேகரனைப் பதவியிலிருந்து நீக்கி வீரபாண்டியனைப் பாண்டிய அதிபதியாக்கினான். 'மதுரையும் ஈழமும் கொண்டருளின' என்ற பட்டத்தை ராஜாதிராஜன் இந்த நிகழ்ச்சியைக் கொண்டாடுகின்ற முறையில் புனைந்து கொண்டான். சோழ நாட்டைச் சிங்களவர்கள் படையெடுத்து அழிக்கின்ற ஆபத்துகூட அந் நாளில் காணப்பட்டது. அவர்களுடைய தோல்விக்கே சுவாமிதேவர் என்பவருடைய மந்திர ஜெபந்தான் காரணமாயிற்று என்றளவில் அம் மதாசாரியாருக்கு ஆர்ப்பாக்கம் என்ற இறையிலி கிராமம் வழங்கப் பெற்றது. ஒரு காலத்தில் சோழருக்கு அடிமைப்பட்டுப் போன ஈழத்தார்கள் சோழ நாட்டுக்குள் வந்து சோழர்களைத் தாக்குகின்ற அளவில் வளர்ச்சிகொண்டிருந்தார்கள்; இராணுவ முறையில் மட்டுமல்லாமல் மந்திர தந்திரங்களாலும் அச் சிங்களவரின் படையெடுப்பு ஆபத்தைத் தடுக்க முயல்கின்ற அளவிற்கு ஈழத்தார்கள் வளர்ச்சியுற்றுப் போனார்கள். தென்னக வரலாற்றுப் பாதையில் காணப்படுகின்ற ஒரு விந்தையான நிகழ்ச்சி.

சோழர்களால் அரசபதவியில் அமர்த்தப்பட்ட வீரபாண்டின் ஈழத்தாருடைய ராஜதந்திரப் பேச்சிற்குச் செவிசாய்த்து, சோழருக்கு எதிர்ப்பாக ஈழத்தாரோடு சேர்ந்துகொண்டான். 1082ஆண்டளவில் குலோத்துங்கன் III வீரபாண்டியனைப் பதவி விலக்கம் செய்தான்; வீரபாண்டியனுக்குப் பதிலாக விக்கிரம பாண்டியனைப் பாண்டிய மன்னனாக்கினான். இந்த விக்கிரம பாண்டியனுடைய வழியினன் மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழ நாட்டின்மேல் 1216-ல் படையெடுத்து வந்து சோழ மன்னனை வென்று சோழ நகரங்களை அழித்தான்; தனது காலில் விழுந்து வணங்கிய குலோத்துங்கனுக்குச் சோழ நாட்டைத் திருப்பிக் கொடுத்தான். இத்தகைய வளர்ச்சிக்குப் பாண்டிய நாட்டை உட்படுத்திய சுந்தர பாண்டியன் ஈழத்தாருக்கு விரோதமாகச் சோழர்களால் பாண்டிய மன்னனாக்கப்பட்ட விக்கிரமப் பாண்டியனின் வழியினன் என்றளவில், சிங்களவரின் ராஜதந்திரத்தின் விளைவாகத்தான் சோழநாடு கடைசியில் அழிவுறுகின்ற அளவிற்குத் தென்னக

அரசியலில் சங்கிலித் தொடராகப் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இவ்வாறு சோழ நாட்டைப் படையெடுப்பதற்கும் படை நடத்துகின்ற இராணுவ வலிமை மட்டுமல்லாது சோழ நாட்டு அரசியலையே மாற்றி வைக்கின்ற வல்லமை கொண்ட ராஜதந்திர செயலாக்கம் கொள்வதற்கும் ஈழத்தார் சோழப் பேரரசின் தலை விதியை நிர்ணயிக்கின்ற அளவிற்கு வளர்ச்சியுற்றிருந்தனர் என்பது வரலாறு தரும் ஆராய்ச்சிச் செய்தியாகும்.

சோழ வரலாற்றில் ஈழ நாட்டைப்பற்றிய குறிப்பு 1230ஆவது ஆண்டளவில் மறுபடியும் வருகிறது. மாறவர்மன் சுந்தர பாண்டியனோடு வலிந்து போரிடச் சென்ற சோழன் ராஜ ராஜன் III காடவத் தலைவன் கோப்பெருஞ்சிங்கனால் சிறை பிடிக்கப்பட்டபோது அச் சோழனை விடுதலை செய்வதற்குப் போசள நாட்டிலிருந்து வந்த போசளப் படைகள் ஈழமன்னன் பராக்கிரமபாகு என்பவனைத் தோற்கடித்துச் சிறைபிடித்தார்கள். இந்தச் செய்திதான் சோழர்களைப் பொறுத்த அளவில் ஈழநாடு கொண்ட உறவினைக் கூறுகின்ற கடைசி விவரமாக நமக்குத் தெரியவருகிறது. 1279-ல் சோழநாடு பாண்டிய நாட்டினுள் ஒரு பகுதியாக அடங்கிப் போன பின்பு பாண்டிய மன்னன் குலசேகரன் தன்னுடைய சேனாதிபதி ஆரியச் சக்கரவர்த்தி என்பவனை ஈழ நாட்டுக்கு அனுப்பி வைத்தான். இந்த பாண்டியப் படைகளிடம் தோற்ற ஈழத்தாரிடமிருந்து புத்தபிரானின் (வழி பாட்டுக்குரிய) பல்லையும், ஏராளமான பொருளையும் இப் பாண்டியப் படைகள் கவர்ந்து வந்தன. இவ்வாறு சோழர்களுடைய பாணியில் பாண்டியர்களும் நடந்துகொண்டார்கள் என்பது புலப்படுகின்றது. இதுபற்றி 1277ஆம் ஆண்டுக்குரிய ஸ்ரீரங்கம் கல்வெட்டும் மகாவம்சமும் தெரிவிக்கின்றன.

## IX ஈழப்பகுதியில் சோழர் ஆட்சியின் விளைவுகள்

சோழர்களின் வல்லரசுப் போர்களைத் தாங்கி நின்ற ஈழம் சோழரின் ஆதிக்க அரசியலில் பல மாற்றங்களுக்கு ஆளாகிப் போனது. அவ் விளைவுகளைப் பின் வருமாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்:

**கலாசாரப் படையெழுச்சி:** சோழர்கள் தங்களுடைய அரசியல் ஆதிக்கத்தை வலுப்படுத்த இந்துமத கலாசாரத்தை ஆயுதமாகப் பயன்படுத்தினார்கள். ஈழத்திலும் சோழர் மயமாக்குதல் (cholaisation) என்றளவில் இக் கொள்கை பின்பற்றப் பட்டது. ஊர்களின் பெயர்களை மாற்றுதல், சிவநெறிக்

கோவில்களைக் கட்டுதல், தமிழர்களைக் குடியேற்றஞ்செய்தல் போன்ற கலாசார நடவடிக்கைகளைச் சோழர்கள் ஈழத்தில் நிகழ்த்தினார்கள். பொலனருவா என்ற தலைநகர் ஜனநாத மங்கலம் என்றழைக்கப்பட்டது. அங்குக் கட்டப்பட்ட சைவநெறிக் கோவிலுக்குச் சோழப் பேரரசனான ராஜராஜனுடைய பெயரையே சோழர்கள் வைத்தார்கள். இவ்வாறு கலாசாரப் படையெடுப்பை நிகழ்த்தியதன் விளைவாகத்தான் குலோத்துங்கன் I தன்னுடைய ராஜதந்திரத்தால் 1088-ல் ஈழ மன்னன் விஜயபாகுவிற்கு எதிராக அவனுடைய வேளைக்காரப்படையையே கிளர்ச்சி செய்ய வைக்க முடிந்தது. சேர பாண்டியரோடு கொண்டிருந்த முக்கூட்டு அரசியலைப் பொறுத்து மணவினைகள்கூடக் கொண்டிருந்த சிங்களவர் தமிழர்களை வெறுக்கவில்லை. ஆனால், சோழர்கள் ஈழத்திற்கு ஆதிக்கக்காரர்களாக வந்தார்கள். ஆகவே, ஆயிரக்கணக்கான தமிழர்களைக் கொல்வதன்மூலம் தங்களுடைய சோழர் எதிர்ப்பை 1030 அளவில் ஈழத்தார் தெரிவித்துக்கொண்டார்கள். பாண்டியரோடு மணவினை இணக்கமும் சோழர்களோடு நேரடியான மோதலும் கொண்ட நிலையில் ஈழத்தாரின் அரசியல் போராட்டம் கலாசார உறவுகளுக்கு அப்பாற்பட்டு விளங்கியது.

**1. ஈழத்தின் பொருள் இழப்பு (Economic Drain) :** மகாலான கித்தி போன்ற ஈழ மன்னர்கள் ஒவ்வொருவரையும் சோழர் படைகள் எதிர்த்துத் தோற்கடித்தபோதெல்லாம் அம் மன்னர்களுடைய கொற்றக்குடை, நகைகள் போன்ற விலையுயர்ந்த பொருள்கள் சோழர்களால் பறிக்கப்பட்டுப் போயின. பராந்தகச் சோழன் முயற்சித்துப் பெற முடியாமல் போன பாண்டிய நாட்டு அரச நகைகளை ராஜேந்திரன் I ஈழத்தாரைத் தோற்கடித்த நிலையில் கவர்ந்துகொண்டான்.

**2. ஈழம் காலனியாக நடத்தப்படுதல் :** தஞ்சைப் பெரிய கோவிலுக்கு ஈழத்திலுள்ள சில கிராமங்கள் முற்றூட்டுகளாக ராஜராஜ சோழனால் வழங்கப் பெற்றன. பாண்டிய நாட்டிலும் கேரளத்திலும் ஏற்படுத்தப்பட்ட கோவில்களுக்கு ஆங்காங்கே உள்ள கிராமங்கள் கொடைகளாக அளிக்கப் பெற்றன. பொது நீதிக்கு மாறுபட்ட தன்மையில் ஈழத்தின் கிராமங்களிலிருந்து வந்த வருவாய் தஞ்சைப் பெரிய கோவிலில் நடைபெற்ற திருவிழாக்களின் செலவிற்குச் சென்றடைந்தது. குலோத்துங்கன் III பாண்டிய கேரள நாடுகளில் பொன்வரி விதித்து, தில்லை அம்பலத்தையும் ஸ்ரீரங்கத்தையும் அழகுபடுத்தினான். ஸ்தலம் போற்றும் இந்து மதத்தைச் சார்ந்த தென்புலத்து மக்கள் அவ்வாறு வசூலிக்கப்பட்ட நன்கொடையின் பளுவைப் பெரிதும் உணர

வில்லை. புத்தமதச் சார்புடைய சிங்களவரின் வரிப்பணம் சோழ நாட்டின் தலைநகரிலுள்ள சிவநெறிக் கோவிலுக்குச் செலவிடப் பட்டது கண்டு ஈழ மக்கள் மனநெகிழ்ச்சி உற்றார்கள்.

**3. வங்கக்கடல் சோழர் ஏரியாதல் :** ஈழ நாட்டாரின் சுதந் தரம் சோழரால் பறிக்கப்பட்டுப் போன பின்பு அவர்களுடைய கடற்படையின் இயக்கம் தடைப்பட்டுப் போய்விட்டது. காந்தளூர்ச்சாலைப் போரில் சேரரின் கடற்படையைச் சோழர்கள் வெற்றி பெற்ற பின்பு, மாலத்தீவும் ஈழமும் சோழருக்குரியதாயிற்று. இந் நிலையில் கடல் வாணிபத்திற்குப் போட்டியாகத் தென்னிந்தி யாவில் எந்த ஒரு நாடும் சோழரை எதிர்க்க முன்வரவில்லை. வங்கக்கடலைக் கடந்து கீழைநாடுகளுக்குச் சோழருடைய கடற் படை ராஜேந்திரன் I காலத்தில் வணிக மேம்பாட்டுக்காகவும், வீரராஜேந்திரன் காலத்தில் அரசியல் ஆதாயத்திற்காகவும் சென்றது. சோழர்களுக்கு ஈழம் அடிமைப்பட்டுப் போன பின்பு வங்கக்கடலில் ஏற்பட்ட சோழரின் பேராதிக்கம் இந்திய வர லாற்றில் காணப்படுகின்ற ஒரே ஒரு கடற்படைப் பேரரசாகச் சோழநாட்டைச் சித்தரித்துக் காட்டுகிறது.

**4. ஆட்சி முறையின் விரிவாக்கம் :** வடக்கே வேங்கியும், தெற்கே மாலத்தீவும், தென்கிழக்கே ஈழமும், தென்மேற்கே துங்க பத்திரையும் சோழப் பேரரசின் எல்லைகளாக விளங்கின. இதில் ஏற்பட்ட மண்டல ஆட்சி சோழப் பேரரசின் ஆட்சிச் சிறப்பிற் குரிய ஆதாரமாக அமைந்தது. ஈழம் மும்முடிச் சோழ மண்டல மாகச் சோழ நாட்டார் அரசாட்சியில் அங்கம் வகித்தது. சோழரின் நேரடி ஆட்சிக்கு உட்பட்டுப் போன ஈழம் சோழ மத்திய அரசின் நிர்வாகத் திறனுக்கு ஆக்கம் செய்தது.

**5. நாணயப் புழக்கம் :** சோழ நாட்டு நாணயங்களில் ஈழக் காசு என்ற ஓர் அளவை நாணயம் (Deuomination) காணப் பட்டது. நாட்டின் பொருளாதாரத்தின் நேரடிப்பங்கு பெற்றிருந்த நாணயங்களில் ஈழக்காசு சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஈழத்தின் பெயரால் வழங்கப்பட்ட இக் காசுகள் சோழ நாட்டிலும் ஈழத் திலும் பரவலாக வழங்கப்பட்டன.

## X ஈழத்தில் சோழர்கள் தோல்வியுற்றதற்குரிய காரணங்கள்

பராந்தக சோழனுடைய 944ஆம் ஆண்டுக்குரிய ஈழப்படை யெடுப்பு ஒரு தண்டனைப் படையெடுப்பாக அமைந்தது. இதன் பின்பு 47 ஆண்டுகள் கழித்து ராஜராஜனுடைய ஈழப்படை யெடுப்பு 991-ல் நிகழத் தொடங்கிய நாளிலிருந்து சுமார் 80

ஆண்டுகள் ஈழத்தின் வடபகுதி சோழர்க்கு அடிமைப்பட்டுப் போயிற்று. இதில் 1017-லிருந்து 1029வரை ஈழம் முழுமைக்கும் சோழர் ஆட்சி ஏற்படுத்திய கங்கை கொண்ட சோழனுடைய இராணுவத்திறனை அவனுக்குப் பின் வந்த மன்னர்கள் பெற்றிருத காரணத்தினாலும் விடுதலைக் கிளர்ச்சியாளர்களின் போராட்டத் திறன் வளர்ச்சியுற்ற காரணத்தினாலும் 1029-க்குப் பின்பு சோழர்க் கான அரசாட்சி ஈழத்தின் வடபுலத்திற்கு மட்டும் எனக் குறுகிப் போனது. 1029-லிருந்து 1070வரை 41 ஆண்டுகள் நடந்த கிளர்ச்சிக்காரர்களின் போராட்டங்களின் விளைவாகச் சோழ அரசு ஆட்டங்கண்டது. இதன் முடிவில் (1070—1073) அளவில் சோழரின் பிடிப்பிலிருந்து ஈழம் ஆயுதந்தாங்கிப் போராடிய நிலையில் தன்னை விடுவித்துக்கொண்டது. 1070-லிருந்து 1088வரையிலுள்ள 18 ஆண்டுகளில் சோழருக்கும் ஈழத்தாருக்கும் ஏற்பட்டிருந்த பகை மூட்டத்திற்குப் பின்னால் அவரவர்களின் நாடுகளில் தனிப்பட்ட அரசியல் வளர்ச்சிகள் தம்தம் போக்கில் ஏற்பட்டு வந்தன. 1088-ல் குலோத்துங்கன் I ஏற்படுத்திய மண உறவின் காரணமாக, ஈழநாடு சோழப் பேரரசுக்குச் சக நாடாக 1169-வரையுள்ள 80 ஆண்டுகள் விளங்கியது. 1169-க்குப் பின்பு 1205 வரை 36 ஆண்டுகள் தென்னக அரசியலில் சோழர்க்குரிய போட்டியாளராகப் பாண்டியர்களை ஆதரித்து, தங்களுடைய இராணுவ வலிமையையும் ராஜதந்திரத்தையும் ஈழத்தார்கள் வெளிக்காட்டினார்கள். சோழருக்கும் ஈழத்தவருக்கும் ஏற்பட்ட அரசியல் தொடர்புகள் மொத்தம் 944-லிருந்து 1205வரையுள்ள 261 ஆண்டுகளினூடே காணப்படுகின்றன. இதில் 136 ஆண்டுகள்தான் நேரடியானப் பின்னல் பிணைப்புகளோடு காணப்பட்டன. 136 ஆண்டுகளில் காணப்படும் நேரடித் தொடர்புகளை ஆராய்கின்றபோது, ஈழநாட்டில் சோழர்கள் தங்கள் பேரரசைக் காட்டுகின்ற முயற்சியில் தோற்றுப் போனதற் கான காரணங்களைக் கீழ்க்கண்டவாறு நிரல்படுத்தலாம்:

1. **சோழரின் ஏகாதிபத்திய வல்லரசின் அமைப்பு :** சோழர் களால் ஈழம் வெல்லப்பட்ட பின்பு தென்புலத்தின் ஒரு பகுதியாகத் தான் அதை அவர்கள் கருதினார்கள். தனித்தீவில் கலாசாரத்தின் ஆதாரமான புத்த மதத்தை ஈழத்தார் பின்பற்றி வாழ்கின்ற வரலாற்றுப் பூர்வமான தனித்தன்மையைச் சோழர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. தங்களுடைய மத்திய அரசிற்கு உட்பட்ட மண்டலமாக அதை அவர்கள் மாற்றிவிட்டார்கள். பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்து ஸ்காட்லாந்தை தன்னுடைய ஒருமிப்பு ஆட்சியில் (unitary state) இணைத்துக்கொண்டதைப் போல ஈழமும் சோழரின் அரசியலமைப்பில் ஓர் அங்கமாக மாற்றப்

பட்டது. கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்க நூற்றுண்டுகளில் ஐரோப்பாவின் முன்னணி நாடுகளிலும் ஆசியாமைனரிலும் உரோமர்கள் தங்கள் பேரரசை நிறுவியபோது ஆங்காங்கே உள்ள மக்களின் பாரம்பரியங்களுக்கு ஏற்ப அத்தகைய ஆட்சி முறையை அமைத்தார்கள். ஆனால் சோழர்களின் கையில் ஈழம் தன்னுரிமையை மட்டுமல்லாது தனது தனித்தன்மையைப் பொருளாதாரம், கலாசாரம் போன்றவற்றிலும் இழந்து போனது. அமெரிக்கக் காலனிகளைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசு புறக் கணித்து நடத்தியபோது அந்த அமெரிக்கர்கள் விடுதலைக் கிளர்ச்சி செய்தது போல, ஈழம் சோழப் பேரரசின் பிடிப்பில் அகப்பட்டுக்கொண்டபோது, ஈழத்தாரும் தங்களுடைய மீட்புக் காகப் போராடத் தலைப்பட்டார்கள். பாண்டியர்களை வெற்றி கொண்ட சோழர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பாண்டிய மன்னர் களை ஆட்சி செய்ய ஒரே நேரத்தில் அனுமதித்தார்கள். இவ்வாறு சிங்கள அரசனையும் ஆட்சியில் தொடர்ந்திருக்கச் செய்கின்ற மேலாண்மை ஆட்சி முறை (protectorate) நிறுவப் பட்டிருந்தால் ஈழத்தின் எதிர்ப்பு தவிர்க்கப்பட்டிருக்கலாம். ஆனால், சோழர்களோ கலப்படமற்ற ஏகாதிபத்தியப் பேரரசை நிறுவினார்கள். அதற்கான எதிர்ப்பும் இயல்பான முறையில் ஏற்பட்டுச் சோழர்களைத் தீவிலிருந்து வெளியேற்றுகின்ற அளவில் வளர்ச்சியுற்றது.

**2. ஈழமக்களின் எதிர்ப்பு :** இங்கிலாந்தின் ஆதிபத்தியத்தை எதிர்த்து நின்ற ஐரிஷ்காரர்களைப் போல ஈழத்தாரும் சோழர் களின் ஆதிக்க அரசியலின் அடக்கு முறையை எதிர்த்துப் போராடினார்கள். மன்னனும் அவனைச் சார்ந்த மேல்குடியாளரும் மட்டும் ஈழத்தின் விடுதலைப் போரில் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. தமிழர்களை ஆயிரக்கணக்கில் கொல்லுகின்ற அளவிற்கு அவர் களுக்கு எதிர்ப்பு உணர்ச்சி வளர்ந்து இருந்தது. அவர்களுடைய மன்னனை மகிந்தன் V 1017-லிருந்து 1029வரை சோழ நாட்டில் சிறை வைக்கப்பட்டான். இந்திய சுதந்தரப் போரில் திலகரை நாடு கடத்திய செய்தியை ஆவேசமான உணர்ச்சியில் எடுத்துக்காட்டுகின்ற மனநிலைக்கு இணையானதை மகிந்தனைச் சோழர்க்குரிய கைதியாக இழந்து நின்ற ஈழமக்களும் பெற்றிருந் தார்கள் என்பது பொதுவான உண்மை ஆகும். ஈழக் கிளர்ச்சி யாளன் ஜகதிபாலன் (1051—1054) தோற்றபோது அவனுடைய மனைவியும் சோழ நாட்டில் சிறை வைக்கப்பட்டாள். அவள் சிறையிலிருந்து தப்பி ஈழம் சென்றபோது அவளுடைய மகளை ஈழ மன்னன் விஜயபாகு மணம் செய்துகொண்டான். சோழர் களால் துன்புறுத்தப்பட்டவர்களை ஈழமன்னன் ஆதரித்தபோது

சோழர்களுடைய ஆதிக்கவுணர்ச்சியை அவர்கள் இனங்காட்டி னர்கள். அரசனில்லாத ஸ்பானிய மக்கள் நெப்போலியனை எதிர்த்தது போல, ஈழ மக்கள் சோழர்களை வெறுத்தபோது, ஈழத்து மண்ணில் சோழர்க்குரிய அரசியல் பிடிப்புக்கு ஆணி வேர் கிடைக்கவில்லை.

**3. கலாசார வேறுபாடும் திணிப்பும் :** சோழர்கள் ஈழப் படைகளைத் தூண்டிவிட்டு அவர்களுடைய மன்னனை எதிர்த்துக் கலகஞ்செய்ய வைக்கின்ற ராஜதந்திரத்தை மேற்கொண்ட போது தமிழினச் சார்பான சிந்தனையைத் தங்களுக்குரிய ஆதாய மாகக் கைக்கொண்டார்கள். 991-லிருந்து 1070வரை தொடர்ந்து ஈழத்தில் குடியேறி வந்த கலாசார தனித்தன்மை கொண்ட தமிழர்களால் ஈழத்தார்களின் மனதில் இடம் பிடித்திருக்க முடியும். சோழர்களின் கலாசார ஆதிக்கம் அதைத் தடுத்தது. ராஜதித்தாவில் ராஜராஜேச்சுவரம் கட்டப்பட்டது. சோழர்களின் பாரம்பரியத்திற்கு விரோதமான முறையில் இத்தகைய கலாசார ஆதிக்கம் ஏற்பட்டது எனலாம். ஏனென்றால், நாகபட்டினத்தி லுள்ள இரண்டு புத்தமதக் கோவில்களில் ஒன்றை ராஜேந்திர புத்த விகாரம் என்றழைக்கும் திறனோடு சோழரின் பெயரைக் கொண்டு விளங்கியது. இவ்விரு புத்த பள்ளிகளுக்கும் வழங்கப் பட்ட முற்றூட்டுகளைச் சாசன முறையில் புதுப்பித்துக்கொள் வதற்கு ஒப்புதலை அளிக்கின்ற நேரடியான ஆதரவை ராஜேந் திரன் I, குலோத்துங்கன் I ஆகியோர் தந்தனர். புத்த மதத் திற்குத் தமிழ்நாட்டில் அளிக்கப்பட்ட இச் சலுகைகளை முதன் முதலாக வழங்கியவன் ராஜராஜனே ஆவான். ஈழநாட்டின் மேல் சோழர்கள் மேற்கொண்ட ஆதிக்கத்தை முறையே இராணுவ முறையில் ராஜராஜன் I உருவாக்க ராஜேந்திரன் I அதை முழுமைப்படுத்தி ஈழ முழுமைக்கும் உரியதாக்கினன். இராணுவ முறை தோல்வியுற்றபோது கலகஞ்செய்யத் தூண்டு கின்ற நாசவேலை செய்கின்ற இராணுவ ராஜதந்திரத்தையும், பின்பு மணவினைத் தொடர்பு கொண்ட உறவின்முறை ராஜ தந்திரத்தையும் குலோத்துங்கன் கைக்கொண்டான்.

இவ்வாறு இந்த மாமன்னர்கள் பல்வேறு முறைகளில் தங்களுடைய பேரரசைக் கட்டுகின்ற பாங்கைப் பார்க்கின்றோம். ஆனால், இம் மூவராவது மற்றைய மன்னர்களான ராஜாதி ராஜனோ, இரண்டாம் ராஜேந்திரனோ, வீரராஜேந்திரனோ புத்த மதத்தார்க்கு ஈழத்திலேயோ, தமிழ்நாட்டிலேயோ சிங்களவரின் மனதை ஈர்க்கின்ற வகையில் புத்த கோவிலைக் கட்டியதுபற்றிய குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால், புத்தமதக்

கோவில்கள் ஈழத்தில் நடந்த போர்களில் அழிந்து போயின. இதனை நாம் பிற்கால வரலாற்றில் தெரிந்து கொள்கிறோம். ஏனென்றால், 1163-ல் நடந்த பாண்டியநாட்டு வாரிசுரிமைப் போரில் எதிரெதிர்த் தரப்பில் சோழர்களும் ஈழத்தார்களும் அணி சேர்ந்து போரிட்டுக்கொண்டபோது லங்கபுரா என்ற சிங்களச் சேனாதிபதி தமிழகத்தில் தமிழர்களைக் கைதிகளாகப் பிடித்து ஈழ நாட்டுக்கு அனுப்பினான். கடந்த காலத்தில் சோழரின் ஆதிக்கப் போரில் தமிழர்களால் அழிக்கப்பட்டுப் போன புத்த கோவில்களை அக் கைதிகளைக்கொண்டு புதுப்பித்துக் கட்டுகின்ற திட்டம் அப்போது ஈழ அரசால் செயலாக்கப்பட்டது.

சோழர்களின் கலாசாரத் திணிப்பு (cholaisation) எல்லாப் பகுதிகளிலும் நிறைவேற்றப்பட்டதொன்றுதான். ஆனால், ஈழத்தில் அதற்கு நேரடியான அரசியலுருவம் சோழர்களாலேயே கொடுக்கப்பட்டது. மேற்சொல்லப்பட்ட போர் நிகழ்ந்தபோது ஈழத்தாரால் இராமேசுவரக் கோவில் அழிக்கப்பட்டது; பின்பு அவர்களாலேயே திரும்பவும் கட்டப்பட்டது. இத்தகைய முறையில் மதமும் கலாசாரமும் வேறுபட்டுப் போன நிலைமை ஏற்கெனவே இருந்ததுதான். இதே நிலையில்தானே பாண்டியரும் சேரரும் ஈழத்தாரோடு மணவினை, ராஜீயத் தொடர்புகளைக் கொண்டிருந்தார்கள்! அப்படியானால், சோழர்களுக்கு மட்டும் ஏன் அத்தகைய உறவுகளை மக்களிடையே உருவாக்க முடியாமற் போயிற்று? இதற்கு விடையாகச் சோழரின் அரசியற்பூர்வமான கலாசாரத் திணிப்பைத்தான் நாம் சொல்லலாம். விஜயபாகுவின் வேளைக்காரப்படையையே கலகஞ்செய்யத் தூண்ட வைக்கின்ற அளவிற்கு இனப்பாகுபாட்டு உணர்ச்சியைத் தூண்டிவிட்டு அரசியல் ஆதாயந்தேடுகின்ற குலோத்துங்கனின் ஆதிக்கத்தை முதலிலேயே விலக்கிக்கொண்ட ஈழமக்களின் மனப்பீடத்தில் சோழர்களின் ஆதிக்க அரசியல் தோய்ந்த கலாசாரத் திணிப்பு வேண்டாத பாரமாக அழுத்தி நின்றது. இந்தியக் கலாசாரத்தை மதிக்காத முறையில் இராணுவத்தில் நிர்வாகத்தை மேற்கொண்ட ஆங்கிலேயரை இந்தியச் சிப்பாய்கள் 1857-ல் புரட்சி செய்து வீழ்த்த முயற்சித்ததற்கு இத்தகைய கலாசாரத் திணிப்புத்தான் காரணம் என்பதோடு சோழர்களின் கலாசாரப் படையெடுப்பை ஒத்திட்டுப் பார்த்தால், ஈழமக்கள் சோழரின் ஆதிக்கத்தை வெறுத்து ஒதுக்கியதற்குக் காரணமாக அமைந்த கலாசார முரண்பாட்டின் தன்மை தெளிவாகப் புலப்படும். இந்து—முஸ்லிம் ஒற்றுமையை ஏற்படுத்திவிட்ட கலாசாரத் திணிப்பை வாபஸ் வாங்கிக் கொண்ட அளவில் 1858-ல் விக்டோரியா மகாசாசனம் இந்திய அரசியலாட்சியைச் செப்பனிட்டுக்கொள்கின்ற அளவிற்குப்

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசுக்கு இருந்த நிர்வாக நெகிழ்ச்சித் திறன் (elasticity of institution) சோழர்களுடைய ஏகாதிபத்திய அரசிற்கும் இருந்திருந்தால், அவர்களுடைய ஆட்சி ஈழத்தில் நிலைப்படுத்தப்பட்டிருக்க வாய்ப்புப் பிறந்து இருக்கும். ஆனால், ஈழத்தாரின் கலாசாரத்தை ஒப்புக்கொள்ளாதது மட்டுமல்ல; தங்களது கலாசாரத்தை அரசியல் பூர்வமாக ஈழத்தில் நிலைப் படுத்த முனைந்த சோழப் பேரரசின் ஆதிக்கத்தை ஈழமக்கள் ஒப்புக்கொள்ளவில்லை என்பது வரலாறு கண்ட உண்மையாகும்.

**4. ஈழத்தாருக்குப் பிற நாட்டினர் ஒத்துழைப்பு :** அயோத்தி நாட்டு இளவரசன் ஜகதிபாலன், கன்னோசி இளவரசன் வீர சலாமேகன், கன்னட தேசத்து ஸ்ரீவல்லபதேவன், பாண்டிநாட்டு விக்கிரமபாண்டு போன்றோர் ஈழநாட்டு மக்களின் விடுதலைக் கிளர்ச்சியில் பங்கு பெற்றனர். இவர்கள் அனைவரும் ஈழத்தை அரசர்களாக ஆட்சி செய்கின்ற அளவிற்கு அவர்களுடைய சேவை ஈழமக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. பத்தொன் பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இலத்தீன் நாடுகள் ஸ்பானியப் பேரரசின் பிடிப்பிலிருந்து விடுபடக் கிளர்ச்சி செய்த போது இத்தாலிய வீரன் கரிபால்டி போன்றோர் இலத்தீன் அமெரிக்கா சென்று அவர்களுக்கு உதவி செய்தது போல ஈழத்தாருக்குப் பிறநாட்டு இராணுவ வீரர்கள் துணை செய்தார்கள். சோழர்களுடைய ஆதிக்கம் அவர்களுடைய இராணுவ வலிமை யின் அடிப்படையில் கட்டப்பட்டிருந்த நிலையில், இத்தகைய பிற நாட்டு இராணுவத் தீரர்களின் தலைமையில் ஈழநாட்டு மக்கள் தங்கள் எதிர்ப்பை வலுப்படுத்திக்கொண்டார்கள். ஆகவே, சோழர்களுடைய இராணுவ வலிமை சிறுகச்சிறுக தளர்ச்சி பெறத் தொடங்கியது.

**5. ஈழமன்னர்களின் குணநலன்கள் :** மகிந்தன் V போன்ற ஈழமன்னர்கள் அனைவரும் சோழருக்கு எதிர்ப்பாளர்களாகவே கடைசி வரை விளங்கினார்கள். ஈழத்தை ஆண்ட எந்த மன்னனும் சோழர்களோடு அரசியல் முறையில் இணைந்து போக வில்லை; தாழ்ந்து கொள்ளவும் இல்லை. சோழர்களோடு போரிட்டுத் தோற்றுப்போன அவலந்தாங்காமல் மகாலான கித்தி தன் கழுத்தைத் தானே அறுத்துக்கொண்டு உயிர்விட்டான். இத்தகைய முறையில் சோழரின்மேல் எதிர்ப்பு உணர்ச்சியை ஈழ மன்னர்கள் வளர்த்துக்கொண்டிருந்தார்கள். இராணுவ வலிமை மிக்க சோழர்களோடு ராஜதந்திரமாக இணைசேர்ந்து பின்பு அவர்களை எதிர்க்கின்ற வேலைத்திட்டம் அவர்களுடைய நேர்முறை வீரத்திற்கு (code of chivalry) மாறுபட்டதாக விளங்கியது. இந்த நிலையில் சோழர்களால் தோற்கடிக்கப்பட்ட

போது, தங்களுடைய கொற்றக்குடையும், பெண்டுகளையும் இழந்த போதிலும் ஆதிக்கக்காரர்களோடு சமாதானம் செய்து கொண்டு மடங்கிப் போகின்ற மனப்பக்குவம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கவில்லை. ஆரம்பக் காலத்திலிருந்து கடைசிவரை போராட்டக் கண்ணோட்டத்துடன் சோழர்களின் ஆதிக்க அரசியலைப் பார்த்துப் பழகிப்போன ஈழமன்னர்களை அவர்களுடைய பிரஜைகளும் பின்பற்றியது அந் நாளைய அரசியல் சிந்தனைக்கு உகந்ததாகத்தான் அமைந்திருந்தது. மகிந்தனைச் சோழ நாட்டில் சிறை வைத்திருந்தபோது, அவனுடைய மகன் விஜயபாகுவைச் சோழர்கள் அறியாதவண்ணம் காட்டிலேயே வளர்த்து பின்பு அவனையே ஈழமக்கள் மன்னனுக்கினார்கள். சோழருடைய ஆதிக்கத்தை நேரடிச் சவாலாக ஏற்றுக்கொண்ட மன நிலையில் இயங்கிய ஈழமன்னர்களின் இடையருத எதிர்ப்பின் காரணமாகச் சோழருடைய ஈழப் பேரரசு உள்ளூர நைந்துப் போனது.

**6. வடக்கில் சாளுக்கிய போட்டிக்குரிய ஈழத்து எதிரொலி:** ஈழத்தின்மேல் சோழர்கள் கொண்ட பிடிப்புத் தளர்வதற்குச் சோழர்களுடைய அரசியலில் ஏற்பட்ட மாற்றங்களும் காரணமாயின. வீரராஜேந்திரன் காலத்தில் மேலைச்சாளுக்கியரைப் பற்றிய மனஈர்ப்பு அதிகமாகியது. சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் சோழப் பேரரசுக்கு அமைந்த முழுமுதல் எதிரியாக வடக்கில் செயல்பட்டபோது, சோழர்கள் கொண்டிருந்த ஈழத்தைப்பற்றிய கவனத்தில் ஒரு வகைத் தொய்வுநிலை ஏற்பட்டது. இந்தக் காலப்பகுதியில் ஈழமக்கள் தங்களை வளர்த்துக்கொண்டார்கள். அதிராஜேந்திரன் ஆண்ட குறுகிய காலத்தின் கடைசிப் பகுதியில் ஏற்பட்ட குழப்பங்களின் காரணமாகவும் ஈழம் தனது விடுதலைப் போர் வீரர்களை ஆயத்தம் செய்கின்ற பணியில் பெரிதும் ஈடுபடுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. மொகலாய மன்னன் ஔரங்கசீப் 29 ஆண்டுகள் தென்னிந்தியாவில் தங்கி மகாராஷ்டிரர் போன்றவரை அடக்க முயற்சித்த போது வடக்கில் பஞ்சாபியரான சீக்கியர் தம்முடைய அரசியல் மனப்போக்கை வளர்த்துக்கொண்டது போல, ராஜேந்திரன் II, வீரராஜேந்திரன் போன்ற சோழ மன்னர்கள் 1055-க்குப் பின்பு 1070வரை சாளுக்கியரை எதிர்த்து வடக்கே தங்களுடைய முழு கவனத்தைச் செலுத்தியதால் ஈழம் தன்போக்கில் விடப்பட்டுப் போயிற்று. இந்தச் சூழ்நிலையில்தான் 1070-ல் ஈழத்தாரின் இராணுவத் தாக்குதலில் சோழரின் ஆதிக்கம் சிதைக்கப்பட்டு, பின்பு ஈழத்திலிருந்து விலக்கப்பட்டது.

**7. சோழருடைய ஈழம் பற்றிய எண்ணத்தின் தீவிரமின்மை:** கலிங்கத்தை வெற்றி கொண்டபோது சோழநாட்டில் கலிங்கத்துப் பரணி தோன்றியது; கங்கையை அடைந்து மீண்ட காரணத்தால் கங்கை கொண்ட சோழபுரம் என்ற நகரம் புதிதாக எழுந்து தலைநகரமாகவும் ஆயிற்று. ஆனால், ஈழத்தை வெற்றி கொண்ட களிப்பைச் சோழ மக்கள் அவ்வளாகக் கொண்டாடவில்லை. 'சிங்களாந்தகன்' என்ற பட்டத்தைச் சோழ மன்னர்கள் புனைந்து கொண்டார்கள். கலிங்கத்தைப் பிறநாட்டினர் பிடித்துக்கொண்டால், வேங்கிக்கும் பின்பு அதனடியாகச் சோழ நாட்டுக்கும் இராணுவ ஆபத்து ஏற்படும் நிலை இருந்த அக் காலத்தில் கலிங்கம் பிடிபட்டுப் போனபோது அரசியல் பூர்வமான மன ஈடுபாடு அங்கே ஏற்பட்டிருந்தது. ஈழத்திற்கு அப்பால் வேறு நாடு கிடையாது. அத் தீவுக்குத் துணைபோகின்ற வரலாற்றுப் பாரம்பரியம் உள்ள சேரரும் பாண்டியரும் ஏற்கெனவே சோழருக்கு அடங்கி விட்டார்கள். இந் நிலையில் சோழர்கள் ஈழத்தைப்பற்றிப் பெரிதாக நினைக்கவில்லை. 1163-க்குப் பின்பு தென்பகுதியில் பாண்டிய வாரிசுரிமைப் போர் நிகழ்ந்தபோது சோழருக்குச் சமமான முறையில் ஈழமும் வந்து எதிர்ப்பு அணியாகக் கலந்துகொண்ட போதுதான் சோழர்களுக்குத் தாங்கள் செய்த வரலாற்றுத் தவறான ஈழநாட்டைக் கைவிட்ட செயலின் நீண்டகால விளைவு தெரிய வந்தது. இவ்வாறு சோழருக்கு ஈழநாட்டைப்பற்றிய எண்ணத்தில் காணப்பட்ட தீவிரமின்மை காரணமாகக் குலோத்துங்கன் I ஈழ நாட்டை இழந்தபோது அதைப் பேரிழப்பாகச் சோழமக்கள் கருதவில்லை. துங்கபத்திரையும் கிருஷ்ணாவும் எல்லைகளாக அமைக்கப்பட்ட இடைக்கழிநாடு என்ற ரெய்ச்சூர்க் கழி நிலத்தைப் பிடிப்பதற்குச் சோழர்களின் சிந்தையில் ஏற்பட்ட ஆர்வம் ஈழ நாட்டைப் பொறுத்தளவில் தோன்றிருக்கவில்லை.

**8. குலோத்துங்கச் சோழனின் புதுப்பார்வைப் பேரரசு (Neo-imperialism):** வல்லடிப்போர்களைத் தவிர்த்த நிலையில் குலோத்துங்கன் I சோழருடைய பேரரசுக் கொள்கையை ஒரு பெரிய மாற்றத்திற்கு உள்ளாக்கினான். ஆதித்த சோழன் காலம் முதல் வீரராஜேந்திரன் ஆட்சிவரை வல்லரசுப் போக்கில் ஆதிக்கப் போர்களைச் சோழர்கள் நிகழ்த்தியதிலுள்ள அரசியல் சூனியத்தைக் குலோத்துங்கன் தனது அரசியல் புலமையின் சிறப்பின் காரணமாக உணர்ந்தான். சோழரின் பேரரசு உண்மையான பேரரசாக விளங்குவதற்கு வல்லடிப்போர்களற்ற ஆக்கப் பூர்வமான உள்நாட்டுப் பணிகளைச் சிறக்கச் செய்வதே ஆகும் என்ற புதுப்பார்வைப் பேரரசை அவன் கட்டத் தொடங்கியதற்குக் கண்திறப்பாக ஈழநாட்டின் இழப்பு ஏற்பட்டது. 1070-ல் ஈழநாடு

தன் கைவிட்டுப் போனபின்பு குலோத்துங்கன் இராணுவமுறை யில் அதனை வலிந்து பிடிக்க முடியவில்லை; பதினெட்டு ஆண்டுக் கால இடைவெளிக்குப் பின்பு அவன் தூண்டிவிட்ட வேளைக்காரப் புரட்சி ஈழத்தில் தோற்ற பின்பு மணவினை தொடர்பு கொண்டு ஈழத்தைச் சகவாழ்வுக்குரிய நாடாக அவன் அங்கீகரித்தான். இவ்வாறு குலோத்துங்கனுடைய புதிய பேரரசுக் கொள்கை ஈழநாட்டைச் சோழர்களிடமிருந்து கைநழுவிச் செல்லக் காரண மாயிற்று.

**9. பூகோள முறையில் அமைந்த தடைகள் :** சோழர்களின் படைகள் பாண்டிய நாட்டுக்குள் எளிதாகப் போனது போல ஈழம் செல்ல முடியவில்லை. தமிழகத்திற்கும் ஈழத்திற்கும் இடையே யுள்ள மன்னார்கடல் சோழப் பேரரசின் கடற்படைக்கு ஒரு பொருட்டல்ல என்றாலும், கடல்வழி செல்ல வேண்டிய அவசியம் ஒரு தடையாக விளங்கியதில் ஐயமில்லை. மேலும், ஈழநாட்டுக் காடுகள் இயற்கை அரண்களாகச் சோழரை எதிர்த்து நின்ற கிளர்ச்சியாளருக்கும் ஈழமன்னனுக்கும் உதவின. 991-லிருந்து தொடக்கம் பெற்ற சோழரின் ஆதிக்கம் 1070 வரையுள்ள 80 ஆண்டுக் கால நேரடி ஆட்சியில் காடுகள் செறிந்த ரோகண நாடு 1017-லிருந்து 1029வரைதான் சோழருக்குக் கட்டுப்பட்டு இருந்தது. மத்தியகால இங்கிலாந்து வரலாற்றில் வேல்ஸ் காணப்பட்டது போல ரோகண நாடு தன்னிச்சையாக விளங்குவதற்கு அதனுடைய காடுகளே காரணம். இவ்வாறு கடலும் காடுகளும் குறுக்கிட்ட நிலையில் சோழரின் ஆதிக்கப் பிடிப்பு உரங்கொண்டு வளர்வதற் குரிய வாய்ப்புகள் ஈழநாட்டில் ஏற்படவில்லை. பேரரசைக் கட்டு வதில் இத்தகைய இயற்கைத் தடைகள் வெற்றி கொள்ளப்பட வேண்டும் என்பது வரலாறு கண்ட உண்மை ஆகும். பிரிட்டிஷ் காரர்களின் இந்தியப் பேரரசுக்குள் மலைவாழ்மக்களான நேபாளி யரும் பர்மியரும் சேர்த்துக்கொள்ளப்படுவதற்கு முன்பு அவர் களுடைய காடடர்ந்த நாடுகளைப் பிரிட்டிஷ் இராணுவம் சிரமத் தோடு வெற்றி கொண்டது நினைவிலிருத்தப்பட வேண்டும். சோழர்கள் கேரளத்தின் வேணாடு போன்ற காடுகளைக் கொண்ட நாட்டுப்பகுதிகளை வென்றடிப்படுத்தியவர்கள்தாம். புத்தமதம், அரசியல் எதிர்ப்பு போன்ற வேறுபாடுகள் மலிந்துபோன அன்னிய நாடான ஈழத்தில், காடுகளைக் கண்காணித்து அவற்றுக்குள் பதுங்கிக் கிடந்த கிளர்ச்சியாளர்களைச் சோழர்களால் அடக்க முடியவில்லை; அந்தரங்கமாகப் போர்ப்பயிற்சியை அக் காடுகளில் பெற்ற பின்பு அக் காடுகளினின்றும் வெளியேறி, சோழர்களைத் திடீரென்று அவர்கள் தாக்கினார்கள். அப்போது சோழர்களுடைய இராணுவ அமைப்பு தட்டலைந்து போயிற்று. இந்த வகையில்

இயற்கைத் தடைகளால் சோழருடைய ஈழநாட்டு ஆதிக்கம் ஊறு படுத்தப்பட்டு உருக்குலைந்தது.

**10. பரிவுணர்ச்சியற்ற சோழரின் அரசாட்சி** (Unsympathetic Administration): 991-லிருந்து 1070 வரையுள்ள 80 ஆண்டுக் கால ஆட்சியில் சோழர்கள் தங்கள் நாட்டில் மேற் கொண்ட பொதுப்பணிகளான ஏரி வெட்டுதல், கால்வாய் தோண்டுதல் போன்றவற்றைக் குறிப்பிடத் தகுந்த அளவில் ஈழத்தில் மேற்கொள்ளவில்லை. 12,000 ஈழ அடிமைகளைக் கொண்டு வந்து காவிரிக்கரையெழுப்பிய கரிகாலன் செய்த வரலாற்றுப் பிழைக்குப் பிராயச்சித்தமாக ஏதாவது ஒரு பொதுப்பணியை, ஈழநாடு நன்றியுடன் நினைக்கின்ற முறையில், செய்கின்ற வரலாற்று வாய்ப்பைச் சோழர்கள் சரியான முறையில் பயன்படுத்திக்கொள்ளவில்லை. வெறும் இராணுவ அடக்கு முறையை நிலைநாட்டுகின்ற வழிமுறைகளைத் தேடுகின்ற பெரும்பணியில் அவர்கள் தங்களுடைய அரசாட்சியின் சக்தியைச் செலவிட்டார்கள். சைவநெறிக் கோவில்களைச் சோழர்கள் கட்டத்தான் செய்தார்கள். ஆனால், அக் கோவில்கள் புத்தமதத்தினரான சிங்களவர்களின் மத்தியில் கட்டப்பட்டன என்பதை மறந்துவிடக் கூடாது. ஈழத்தில் குடியேறிய தமிழர்களுக்குத்தான் அக் கோவில்கள் கட்டப்பட்டன என்றளவில் ஈழத்தார்கள் ஒதுங்கி நின்றார்கள்.

சோழர்காலக் கோவில்கள் தங்களுடைய அன்றாட இயக்கத்தில் பொதுப்பணி மன்றங்களாகச் செயல்படுகின்ற அருமைப்பாடு ஈழமக்களுக்கு உரியதாக அமைந்துவிடவில்லை. இதற்குக் காரணம் சமயவேறுபாடுதான். புத்தமதத்தினரைச் சோழர்கள் இந்துமதத்திற்கு மாற்றியதாகக் குறிப்பு கிடையாது. இந்தச் சூழ்நிலையில் சோழர்களுடைய அரசாட்சி பெரும்பான்மையான ஈழ மக்களுக்கு உதவுவதாக அமைந்திருக்கவில்லை. தொண்டை நாட்டின் காடுகளை அழித்துக் கழனி நிலமாக்கிய கரிகாலனைப் பின்பற்றி ரோகணக் காடுகளை வெட்டி வேளாண்மை குடியேற்றங்களை இராணுவ நோக்கத்திற்காகக்கூடச் சோழர்கள் ஏற்படுத்தவில்லை என்பது செய்தி. ஆளுபவருக்கும் ஆளப்படுபவருக்கும் இடையே உள்ள வேறுபாடு சமயச் சார்பாகவும் அரசியல் பகையாகவும் விளங்கிய அந் நாள்களில் ஈழத்தில் சோழர்களுடைய ஆட்சி முறைக்கு வளர்ச்சிப்பருவம் வாய்த்திடவில்லை. இந் நிலையில் சோழர்களுடைய ஆதிக்க அரசியலுக்கு ஈழத்தில் நேரடிப் பிடிமானங்களும் ஏற்படவில்லை.

**11. ஈழத்தாரின் இராணுவ மேம்பாடு :** சோழர்களுடைய படையெடுப்புகளுக்கு ஈடுகொடுத்துப் போராடிக்கொண்டே

ஈழமக்கள் தங்களுடைய மன்னர்களின் தலைமையில் வளர்ந்து வந்தார்கள். கடற்படை கொண்டு ஈழத்தை வந்தடைகின்ற சோழர்களைத் தடுத்து நிறுத்த ஈழத்தாருக்குக் கடற்படை வலிமையை உருவாக்குகின்ற வாய்ப்புப் போதுமானதாகக் கிடைக்கவில்லை. சோழருடைய கடற்படை இலங்கையைச் சூழ்ந்துநின்ற அந் நாள்களில் நிலப்படை ஆற்றலை ரோகணக்காடுகளில் ஈழத்தார் வளர்த்துக்கொண்டார்கள். நாட்டுப்பற்றோடு போராடுகின்ற உணர்ச்சி அவர்களை வலுவான போர்வீரர்களாக ஆக்கியதில் வியப்பில்லைதான். 1070-லிருந்து தொடங்கப்பட்ட அவர்களுடைய இராணுவ எதிர்ப்பு மூன்று ஆண்டுகளில் முற்றுப்பெற்ற அளவில் பெருவெற்றியாக அவர்களுக்கு ஈழநாட்டின் விடுதலை கிட்டியது. விஜயபாகு ரோகணநாட்டிலிருந்து வெளி வந்து நடத்திய மும்முனைத் தாக்குதலில் சோழரின் இராணுவம் பின்வாங்கியது. தோல்வியை ஒப்புக்கொண்ட நிலையில் ஈழத்திலுள்ள சோழ அரசினர் தம்முடைய இராணுவத்தோடு தமிழகம் வந்து சேர்ந்தனர். இராணுவத்திறனால் வெல்லப்பட்ட ஈழத்தை இராணுவத்திறனால் நிர்வாகஞ்செய்த சோழர்களை அதே இராணுவத்திறனால் தோற்கடித்து ஈழநாடு நீங்கச் செய்தார்கள் ஈழநாட்டு மக்கள். மன்னன் விஜயபாகு இந்தப் போராட்டத்தின் மூலபலமாக விளங்கினான். இராணுவ முறையில் உருவாக்கப்பட்ட சோழ நாட்டின் ஈழ அரசாட்சி இவ்வாறு முற்றுப் பெற்றது.

# 18. சோழர்—பாண்டியர் அரசியல் உறவுகள்

களப்பிரரிடமிருந்து தென்தமிழ் நாட்டைக் கி. பி. 575-ல் விடுவித்த பாண்டியன் கடுங்கோலனால் தொடங்கப்பட்ட பாண்டிய நாட்டு அரசியல் 867-ல் ஆளத் தொடங்கிய வரகுணன் I தலைமையில் சோழ மண்டலத்தையும் வெற்றி பெற்று ஆண்ட முதலாவது பாண்டியப் பேரரசாக வரகுணன் II காலம் வரை விரிந்தது. இது 880-ல் நிகழ்ந்த திருப்புறம்பியப் போரில் பல்லவர்—தஞ்சைச் சோழர்—கங்கா கூட்டணியோடு மோதித் தோல்வியுற்று நலிந்து மறைந்தது. பாண்டியரின் தோழரான தஞ்சை முத்தரையரிடமிருந்து தஞ்சைப் பகுதியைப் பழையாறைச் சோழன் விஜயாலயன் பிடித்துக்கொண்டதையொட்டி ஏற்பட்ட சோழரின் எழுச்சியை அடக்க வந்த பாண்டியன் வரகுணன் இடவையில் சோழரைத் தோற்கடித்தான். இதன் விளைவாகத் தான் திருப்புறம்பியப் போர் நிகழ்ந்தது. இவ்வாறு இடவைப் போரைத் தொடர்ந்து திருபுறம்பியப்போர் என்றளவில் பாண்டியரின் எதிர்ப்பு சோழருக்கு ஏற்பட்டது. சோழரின் ஆக்கத்திற்கு இவ்வாறு ஏற்பட்ட பாண்டிய எதிர்ப்பு விரைவிலேயே அடங்கிவிட்டது. பாண்டியன் வலிமை குன்றியதே இதற்குக் காரணம். ஆதித்த சோழன் கொங்கு நாட்டைப் பிடித்தபோது பாண்டியன் பராந்தக வீரநாராயணனும் அதன் ஒரு பகுதியை ஆள்வதற்கு உடன்பட்டான். ஆதித்தனுக்குப் பின்பு வந்த பராந்தகன் I (907—953) சோழன் காலத்தில்தான் பாண்டியரை எதிர்க்கின்ற சோழரின் ஏகாதிபத்தியப் பேரரசு தன் முழு உருவத்தை அடைந்தது.

சோழரின் ஏகாதிபத்தியத்திற்குப் பாண்டியரின் தென்னரசு எதிர்ப்பு இயக்கமாக அமைந்திருந்தது. பாண்டியர்களோடு கேரளரும் ஈழத்தாரும் மணவினை உடன்பாடுகளோடு இராணுவ ராஜீய உறவுகளையும் மேற்கொண்ட முறையில் முக்கூட்டு அணியாகத் தென்பகுதியில் அம் மூவரும் செயல்பட்டனர். ராஜசிம்மன் III (900—920) என்ற பாண்டியனைச் சோழன் பராந்தகன் வென்றான். கி.பி. 915-ல் சோழரிடம் வெள்ளூர்ப் போரில் தோற்றோடிய அப் பாண்டியன் அடைக்கலமடைந்த உதயணன் IV என்ற ஈழ மன்னனிடமிருந்து அப் பாண்டிய

னுடைய மணிமகுட நகைகளைக் கவர்ந்துகொள்ளப் பராந்தகன் கொண்ட முயற்சி ஈழ மன்னனின் தோல்வியில் முடிந்தது. ஆனால், அந் நகைகள் கிடைக்கவில்லை. அதனால் பாண்டிய மன்னனாக முடிசூட்டிக்கொண்டுதான் ஏற்கெனவே மேற்கொண்டிருந்த 'மதுரை கொண்ட' என்ற பட்டத்திற்கு அழகு சேர்க்கப் பராந்தகனால் இயலவில்லை. ஆனாலும் 20 ஆண்டுகள் சோழர்கள் நடத்தியப் போர்களின் பயனாகப் பாண்டிய நாடு அடக்கப் பட்டது. 920-லிருந்து, 946-ல் வீரபாண்டியன் (946—966) திரும்பவும் பாண்டிய அரசைத் தோற்றுவிக்கின்ற வரை 20 ஆண்டுகள் சோழர்களின் ஆட்சி பாண்டிய நாட்டில் எதிர்ப்பின்றி நடந்தது. வீரபாண்டியனை 962-ல் நிகழ்ந்த செல்லூர்ப் போரில் தோற்கடித்த பின்பு நான்கு ஆண்டுகள் கழித்து பராந்தகன் II சுந்தரச் சோழனுடைய மகன் ஆதித்தன் II போரில் கொன்றான்; 'வீரபாண்டியன் தலைகொண்ட' பட்டமும் பெற்றான். 575-ல் உருவாகி 867-ல் வலிமை சேர்க்கப் பெற்று வளர்ச்சியுற்ற முதலாம் பாண்டியப் பேரரசு இவ்வாறு 966-ல் வீழ்ச்சி அடைந்தது. தென்பகுதியில் சோழர்களுக்கு ஏற்பட்ட அரசியல் எதிர்ப்பின் ஆணிவேர் இவ்வாறு அகற்றப்பட்டது.

ராஜராஜன் I 988-ல் கேரளனைக் காந்தளூர்ச்சாலைக் கடற்படைப் போரில் தோற்கடிக்கப் படையெடுத்துச் செல்லுகின்ற போது பாண்டிய நாட்டுப் பாதையில் குறுக்கிடப் பாண்டியன் அமரபுயங்கனையும் வெற்றி கொண்டான். சோழரின் இராணுவ ஏகாதிபத்தியத்தின் உயரிய எழுச்சிக்கு உரிய காலம் அது. ஆகவே, வெல்லப்பட்ட நாடுகளைச் சோழர் மயமாக்குகின்ற பொதுவான கொள்கையின்படி பாண்டிய நாடு 'ராஜராஜ மண்டலம்' என்று பெயரிடப்பட்டுச் சோழ அரசாட்சிக்குரிய மாகாணமாக மாற்றப்பட்டது. உதகையில் சிறை வைக்கப்பட்ட தனது தூதனை மீட்க ராஜராஜன் செல்லும்போது பாண்டியனை முதலிலும், பின்பு அவனுடைய வாரிசுகள் ஐவரையும் போரிட்டு அடக்கி, பாண்டியர் நாட்டை முழுவதுமாக அவன் கைக் கொண்டான். இவ்வாறு சோழரின் பிடிப்பு பாண்டிய நாட்டில் நேரடியாகத் தைத்து நின்றது. சுந்தரச் சோழன் என்ற தன் மகனுக்குச் சுந்தர சோழ பாண்டியன் என்ற பட்டம் கொடுத்து, பாண்டியர் பகுதிகளைச் சோழ மத்திய அரசின் சார்பில் ஆளச் செய்தான். விக்கிரமன், சோழ பாண்டியன் பராக்கிரமன் என்ற சோழ பாண்டியர் மூவர் அடுத்தடுத்து பாண்டிய நாட்டை ஆண்டனர். வீரராஜேந்திரன் (1064—1070) காலத்தில் பாண்டியன் வீரகேசரியின் மகனைச் சோழர் படை கொன்றது.

இவ்வாறு பாண்டியரின் போராட்டம் அறுபட்டுப் போகாமல் தழைத்துக்கொண்டே இருந்தது.

குலோத்துங்கன் I (1070—1122) காலத்தில் செம்பொன்மாரி, கோட்டாறு போன்ற போர்களில் பாண்டியர் ஐவரைக் காட்டிற்குத் தோற்றேடச் செய்து தனது இராணுவக் கேந்திரங்களைக் (garrissons) கோட்டாறு, விளிஞம் என்ற இடங்களில் அமைத்துக்கொண்டு பாண்டியரையும், கேரளத்தாரையும் கட்டுப்பாடு செய்தான். 1120—1122-க்குள் சடாவர்மன் ஸ்ரீவல்லபன் என்ற பாண்டியனுடைய அரச பட்டம் சூடும் விழா, ' வண்டமிழ் கூடல் ' என்ற மதுரையில் நடைபெற்றது. இதிலிருந்து பாண்டியரின் தனியரசு மீட்பு துலங்க ஆரம்பித்தது. ஆனல், இத்தகைய மீட்பு இடையூறில்லாமல் நடைபெறவில்லை. இடையூறு பாண்டியர்களாலேயே ஏற்படுத்தப்பட்டது. அரசுரிமைக்காகப் பாண்டியர்களின் உள்நாட்டுப் போர் 1169-லிருந்து தொடங்கி 1177வரை நிகழ்ந்தது. சோழன் ராஜாதிராஜன் II (1173—1178) குலசேகரன் என்ற பங்காளியின் அழைப்பின் பேரில் இதில் பங்கு கொண்டான். மதுரையில் முற்றுகையிடப்பட்டுக் கொலை செய்யப்பட்ட பராக்கிரம பாண்டியனுடைய எதிரி குலசேகரன் சோழர்களால் பாண்டிய மன்னனுக்கப்பட்டான். இக் குலசேகரன் நன்றி மறந்து ஈழத்தாரோடு சேர்ந்துகொண்ட போது அவனுல் கொலை செய்யப்பட்ட பராக்கிரம பாண்டியனுடைய மகன் வீரபாண்டியனைச் சோழர்கள் பாண்டிய மன்னனுக்கினுர்கள்.

சோழன் குலோத்துங்கன் III (1178—1218) காலத்தில் இவ் வீரபாண்டியனும் ஈழத்தார் பக்கம் சாயவே, குலசேகரன் மகன் விக்கிரம பாண்டியன் 1180-ல் சோழரால் மன்னனுக்கப்பட்டான். வீரபாண்டியன் கேரளர் உதவியோடு சோழருடன் மோதிய போது 1189 அளவில் நடந்த நெட்டூர்ப் போரில் தோல்வியுற்றுன்; பின்பு குலோத்துங்கனுடைய நட்பை இறைஞ்சிப் பெற்ற நிலையில் பாண்டிய நாட்டின் ஒரு பகுதிக்கு அரசனுனன். சோழரின் ஆதரவாளனுன விக்கிரம பாண்டியனுடைய மகன் சடாவர்மன் குலசேகர பாண்டியன் 1190-ல் அரச பதவிக்கு வந்தான். இந்த நாளிலிருந்து பாண்டியரின் சக்தி வளர்ந்து நெல்லூர் வரை விரிகின்ற பேரரசாக மலர்ந்தது.[1] இவ்வாறு சோழர்களால் அரசனுக்கப்பட்ட வீரபாண்டியனுடைய பரம்பரைதான் இரண்டாம் பாண்டியப் பேரரசை வளர்த்தது ; இதுவே சோழரை 1279-ல் அறவே அழித்தது.

1 K.A.N. Sastri—' The Pandian Kingdom ' —1929—p. 139

தன் சொந்தப் பெயரிலேயே மெய்க்கீர்த்தி அமைக்கின்ற சுயேச்சை உணர்வுடைய குலசேகரனைத் தண்டிப்பதற்காகவும், சோழ ஆதிக்கத்தைத் திரும்பவும் நிலைநாட்டுவதற்காகவும் குலோத்துங்கன் III மதுரைக்குப் படையெடுத்து வந்தான்; மதுரையில் பாண்டியனுடைய முடிசூடும் மண்டபத்தை இடித்து, கழுதை வைத்து உழுது 'கவடி' என்ற காட்டுச் செடியையும் விதைத்தான்; பாண்டியர் நாட்டைச் சோழ—பாண்டி மண்டலமென்றும், மதுரையம்பதியை 'முடித்தலைகொண்ட சோழபுரம்' என்றும் பெயரிட்டு, தனது போர் வேட்கையைத் தணித்துக் கொண்டான். பாண்டியர்களின் பழிவாங்கும் உணர்ச்சிக்கு இவ்வாறு வித்திடப்பட்டது. 1216-ல் அரச பதவிக்கு வந்த மாறவர்மன் சுந்தர பாண்டியன் (1216—1251) 1216 அளவில் சோழ நாட்டில் படையெடுத்து வந்து சோழரின் தலைநகரம் உட்பட்ட பல நகரங்களின் கட்டடங்களை அழித்து வீராபிஷேகம் பண்ணிக் கொண்டான். சோழன் குலோத்துங்கனுக்குச் சோழ நாட்டைத் திருப்பிக் கொடுத்த காரணத்தால் 'சோணாடு வழங்கியருளிய' என்ற பட்டத்தோடு பாண்டியன் மதுரை மீண்டான்.

ராஜராஜன் III (1218—1256) 12 ஆண்டுக் காலப் பாண்டிய ஆதிக்கத்திற்கு முடிவு கட்ட, கப்பம் கட்டாமல் மறுத்துச் சோழ நாட்டை மீட்பதற்காகப் பாண்டியரோடு போரிடத் துணிந்தான். 1230-ல் ராஜராஜன் அனுப்பிய சோழரின் தூசி, பேரணி என்ற படைகள் தோற்கடிக்கப்பட்டன. சோழனை அடக்கச் சுந்தர பாண்டியன் மீண்டும் ஒரு முறை சோழ நாட்டின்மேல் படையெடுத்து, அதன் தலைநகரை அழிவுக்கு உள்ளாக்கினான். தப்பி ஓடிய ராஜராஜன் கோலார்ப் பகுதி நோக்கிச் செல்கின்றபோது அவனுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட காடவரையன் கோப்பெருஞ் சிங்கனால் சிறை பிடிக்கப்பட்டான். போசள நாட்டு மன்னன் நரசிம்மனுடைய குறுக்கீட்டின் காரணமாக விடுதலை செய்யப்பட்டு, திரும்பவும் சோழ மன்னனாக அமர்த்தப்பட்டான். இந்த இன்னலுக்குப் பின்பு ஆட்சித்திறன் அமையாத இம் மன்னனுக்கு நேர்மாறான முறையில் தன்முனைப்போடு விளங்கிய ராஜேந்திரன் III சோழ நாட்டரசியலைத் தன் கையில் எடுத்துக்கொண்டு பாண்டியனை எதிர்த்தான். 1251-ல் சுந்தரபாண்டியன் இறந்த பின்பு பதவிக்கு வந்த மாறவர்மன் சுந்தர பாண்டியன் II அவ்வளவாகத் திறமையுள்ளவன் அல்லன்.

ராஜராஜனுக்கு இரு பாண்டியர்களின் மகுடங்களை அளித்ததாக விளக்கப்படும் 'இருவர் பாண்டியர் முடித்தலை கொண்டருளிய' என்ற பட்டத்தைப் பெற்ற ராஜேந்திரன் III 1262-ல் சடாவர்மன்

சுந்தர பாண்டியன் என்ற இரண்டாவது பாண்டியப் பேரரசின் தலைசிறந்த மன்னனிடம் தோல்வியுற்று, பாண்டிய மன்னனுக்கு அடங்கிய சோழ மன்னனாகிவிட்டான். 1279-ல் மீண்டும் ஒரு முறை நடந்த போரில் வெற்றி பெற்ற மாறவர்மன் குலசேகரனால் சோழ நாடு பாண்டிய நாட்டோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது. முதலாம் பாண்டியப் பேரரசை (575—966) வீழ்த்தியதால் ஏற்பட்ட அரசியல் நலனை முழுமையான அளவில் பயன்படுத்திய சோழப் பேரரசு (880—1279) 400 ஆண்டுக் கால வாழ்வுக்குப் பின்பு இரண்டாவது பாண்டியப் பேரரசு (1190—1342) கொண்ட வளர்ச்சியால் பாதிக்கப்பட்டு, தன் வலிமை இழந்து, குறுகிக் கொண்டு காலப் போக்கில் பாண்டியப் பேரரசுக்குள் சங்கமம் ஆயிற்று.

# 19. சோழர்—போசளர் அரசியல் உறவுகள்

மைசூரின் துவார சமுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு கர்நாடகத்தில் 1022ஆம் ஆண்டிலிருந்து மேலைச்சாளுக்கியருக்கு அடங்கிய நிலையில் வளர்ச்சி அடைந்த போசளர்கள் (Hoysalas) சோழர்களையும் எதிர்த்தார்கள்; சாளுக்கிய ஆட்சியாளன் விக்கிரமாதித்தன் VI (1076—1126) குலோத்துங்கன் I சோழனுடைய படைகளைக் கோலார்ப் பகுதியில் எதிர்த்தபோது விநயாதித்தன் என்ற போசள மன்னன் அவனுக்குத் துணை நின்றான். சோழர்களிடம் அவனும் தோல்வியுற்றான். வல்லாளன் என்ற போசள மன்னன் போசள நாட்டின் அரசியலைக் கட்டிய பின்பு அவனுடைய தம்பி பிட்டிகா என்ற விஷ்ணுவர்த்தன் (1110—1152) சாளுக்கியரை எதிர்த்து வளர்ந்தான். இவன் 1116-ல் கங்கபாடியைக் குலோத்துங்கனிடமிருந்து கைப்பற்றிக்கொண்டான். 1122-ல் இப் போசளனை விக்கிரமாதித்தன் போரில் தோற்கடித்து அடக்கியபோதும் போசளர்களின் வளர்ச்சி தடைபட்டுப் போகவில்லை. 1126-ல் விக்கிரமாதித்தன் இறந்த பின்பு சாளுக்கியரின் ஆட்சி வலிமை குன்றியது. சாளுக்கியப் பேரரசைப் போசளரும், தேவகிரியின் யாதவர்களும், வாரங்கல்லின் காகேதியரும் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்டனர். இவ்வாறு சோழருக்குப் புதிய அரசியல் எதிரி வடக்கே உருவான நிலை ஏற்பட்டது. போசளர்கள் சாளுக்கியரைப் போலச் சோழர்களை எதிர்த்தபோது கொங்கு நாட்டைக் கவர்ந்துகொண்டார்கள். குலோத்துங்கன் III (1178—1218) கொங்கு நாட்டில் காலூன்றி நின்ற வல்லாளன் II (1173—1220) என்ற போசளனை 1193-ல் எதிர்த்து, கருவூரை மீட்டான்.

1190-ல் பாண்டியரின் இரண்டாவது பேரரசு எழுச்சியுற்ற பின்பு, மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழ நாட்டின் மீது 1205-ல் படையெடுத்தான். போசள மன்னனைத் தனக்கு உதவி செய்யக் குலோத்துங்கன் வேண்டிக்கொண்டபோது வல்லாளன் II தனது மகன் நரசிம்மன் தலைமையில் திருச்சிக்குப் போசளப் படையை அனுப்பி வைத்தான். சோழருக்குப் போசளர்கள் இவ்வாறு துணைக்கு வந்தார்கள். இது கண்ட

பாண்டியன் குலோத்துங்கனுக்குச் சோழ நாட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டுத் தன் நாடு சென்றான். பாண்டியரைப் பகைத்ததால் சோழ நாட்டின் அரசியல் அழிவுக்கு வகை தேடித்தந்த அதே குலோத்துங்கன்தான் சோழரின் அரசியலைக் குழப்பி, அதனை உள்ளூற நலிவுறச் செய்த போசளரின் வருகைக்கும் காரணமானவன். இவ்வாறு சோழருடைய துணையாளராக வந்த போசளரின் அரசியல் செல்வாக்கு சோழ நாட்டில் வேரூன்றி விட்டது. போசள மன்னன் தன்னைச் 'சோழர் பிரதிஷ்டாசாரியன்' என்று அழைத்துக்கொண்டான்.

குலோத்துங்கனுக்குப் பின்பு பதவிக்கு வந்த ராஜராஜன் III (1218—1256) காலத்தில் போசளரின் ஊடுருவல் அளவிலும் வினையிலும் கடுமையாயிற்று. பாண்டியர்களின் பேரரசுப் பார்வையில் சோழநாடு அல்லலுற்றபோது போசளரின் இராணுவ உதவி சோழ அரசியலில் ஓர் அங்கமாகிவிட்டது. இந் நிலையில் போசளரின் இராணுவம் காஞ்சியில் தங்கிவிட்டது. 1218-லிருந்து 12 ஆண்டுகள் பாண்டியருக்கு அடங்கிவிட்ட நிலையில் சோழ நாட்டுக்குரிய கப்பப்பணம் கட்டாமல், ராஜராஜன் 1230-ல் சுந்தர பாண்டியனைப் படையோடு சென்று எதிர்த்தபோது, தோல்வியுற்றான். சோழனுடைய தோல்விக்குரிய காரணங்களில் இப் போசளர்கள் அவனுக்குத் துணை வராமல் போனதையும் குறிக்க வேண்டும். பாண்டியனிடம் தோல்வியுற்ற ராஜராஜன் போசளரை நாடுகின்ற எண்ணத்தோடு கோலார் என்ற குந்தள நாட்டுக்குச் செல்லுகின்ற வழியில், சோழருக்கு முன்னாளில் அடங்கி இருந்த காடவரையத் தலைவன் கோப் பெருஞ்சிங்கன் சோழ மன்னனைத் தோற்கடித்து, சிறைப் பிடித்து, சேந்த மங்கலத்தில் சிறை வைத்தபோது, போசளர்கள் இச் சோழனை மீட்க வந்தார்கள். தமிழகத்தில் இவ்வாறு புகுந்து கொண்ட போசளர்கள் பின்பு வெளியேறவே இல்லை. 1362-ல் வல்லாளன் III என்ற போசளப் பேரரசன் வடக்கே இருந்து வந்த முஸ்லிம் படையெடுப்பாளரிடமிருந்து பெற்ற இடைஞ்சல் காரணமாகத் திருச்சியை அடுத்த கண்ணனூர்க் கொப்பத்தைத் தனது பேரரசின் தலைநகராக்கி, தமிழக அரசனாகத் தன் கன்னடியப் படைத் துணைக்கொண்டு ஆளத்தலைப்பட்டபோது 1333-ல் மதுரையில் தோன்றிய முஸ்லிம் அரசின் படைகளால் கொல்லப்படும் வரை போசளரின் தமிழக ஆதிக்கம் நிலைபெற்றுக் காணப்பட்டது. இத்தகைய அளவில் போசளரின் பிடிப்பு மேலோங்கியதற்கு முன்னோடியான எழுச்சி 1220-லிருந்து 1245வரை நிகழ்ந்தது.

போசளரின் உதவியோடு கோப்பெருஞ்சிங்கனிடம் இருந்து விடுதலை பெற்ற ராஜராஜன் III யாவராலும் புறக்கணிக்கப்பட்டான். கோப்பெருஞ்சிங்கனுக்கு ஆதரவாக வந்த சுந்தர பாண்டியனைப் போசளன் நரசிம்மன் (1220—1238) மகேந்திர மங்கலப் போரில் தோற்கடித்தபோது போசளர்களின் இராணுவச் செல்வாக்கு (military prestige) பெருவளர்ச்சியுற்றுப் போனது. சோழர்களின் காவலர்கள் என்ற தோரணையில் அப் போசளர்கள் சோழநாட்டில் 'வளைய' வந்தார்கள். இதை அடுத்து 1233-லிருந்து 1267வரை போசளர்களுக்குத் தமிழ் நாட்டில் கிடைத்த அரசியல் பிடிப்பை வலுப்படுத்துகின்ற பணியைத் திறனோடு செய்கின்ற கருத்தோடு நரசிம்மனுக்கு அடுத்து வந்த போசள மன்னன் சோமேசுவரன் (1233—1267) தன்னுடைய நாட்டின் நிர்வாகத்தை அமைச்சர்களிடம் ஒப்பு வித்துவிட்டு, தென்பகுதியில் வந்து தங்கிக்கொண்டான். ராஜராஜனைப் புறக்கணித்த சோழ அரசியலின் புதுமுக வெற்றியாளனுக, ஆளுகைத் திறனுள்ள ராஜேந்திரன் III செல்வாக்கு பெற்று, சோழ அரசின் நாயகனுக மாறிய காலத்தில், சோழருக்குப் புதிய தெம்பு ஏற்பட்டது. 1246-ல் தான் யுவராஜா பட்டத்தை இவன் பெற்ற போதிலும் 1239 அளவில் ராஜராஜன் அனுபவித்த தோல்விகளுக்குப் பின்பு சோழ அரசியல் நடத்துகின்ற உண்மையான ஆணையாளனுக (de facto ruler) ராஜேந்திரன் ஆனுன். இவனுடைய வளர்ச்சி சோழநாட்டில் புத்துயிர்ப்பாக மாறிவந்த நிலையைக் கண்டு போசளர்கள் பொருமை கொண்டார்கள்.

சுந்தர பாண்டியன் இறந்த பின்பு மற்ருெரு சுந்தர பாண்டியன் பாண்டிய நாட்டு மன்னனுனுன். இவன் முன்னவனைப்போல ஆற்றலில்லாவன். இவனையும் மற்ருெரு பாண்டியனையும் ராஜேந்திரன் தோற்கடித்து, 'இருவர் பாண்டியர் முடித்தலைக் கொண்டருளியவன்' என்ற பட்டத்திற்குரிய முறையில் ரரஜராஜனுக்கு இரண்டு பாண்டிய மன்னர்களின் மகுடங்களைச் சோழ நாட்டின் புத்துயிர் எழுச்சிக்குரிய காணிக்கையாக வழங்கினுன். இதனுல் போசளர்களின் பொருமை அரசியல் உருவங்கொள்ளத் தொடங்கியது. இதுவரை சோழர்களை ஆதரித்த அவர்கள் பாண்டியர்கள் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். சோழ நாட்டில் இராணுவ நிலைகளை வைத்துக் கொண்ட போசளர்கள் பாண்டியருக்குரிய வலக்கையாகத் துணை சென்றவுடன், சோழர்களின் நிலை ஒரு வகை அரசியல் பேதலிப்புச் சிக்கலுக்குரியதாகக் காணப்பட்டது. போசளர்களின் இந்த மாற்றம் (Volte Face) நிகழாமல் இருந்திருந்தால், சோழர்களின் மீட்சி உறுதி கொண்டு உருவாக்கங்கொண்டிருக்க

வாய்ப்புப் பெற்றிருக்கும். 'பாண்டியர் சூத்ரதாரி' என்ற பட்டங் கொண்டு பாண்டியரின் ஆதரவாளனாக விளங்கிய பரம்பரைப் பகைவனான கோப்பெருஞ்சிங்கன் சோழ நாட்டினுள்ளே மடியில் கட்டிய நச்சரவாகக் காணப்பட்டான். இந்த நிலையில் போசளரும் பாண்டியர் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். ராஜேந்திரன் III இதை ஒரு சவாலாக ஏற்றுச் செயல்பட வேண்டிய சூழ்நிலையை 1251-ல் பாண்டிய மன்னனாகப் பதவி ஏற்ற சடாவர்மன் சுந்தர பாண்டியனுடைய தனிப்பெரும் எழுச்சி அமைந்தது.

சுந்தர பாண்டியனை எதிர்க்கின்ற நிலையில் போசளர்கள் சோழர்கள் பக்கம் சாய்ந்துவிட்டார்கள். போசளன் சோமேசுவரன் தனது பேரரசை வடக்குத் தெற்குப் பகுதிகளாகப் பிரித்து திருச்சிவரை விரிவாகி இருந்த தென்பகுதியைத் தனது இளைய மகன் இராமநாதன் (1254—1295) வசம் ஒப்படைத்தான். 1262-ல் நிகழ்ந்த படையெழுச்சிக்கு முன்பே ராஜேந்திரன் சோழ அரசைப் பாண்டியரின் ஆதிக்கத்திற்கு உட்படுத்திக் கப்பங்கட்டத் தொடங்கிவிட்டான். மேலே சொன்ன படையெழுச்சியில் கோப்பெருஞ்சிங்கனும் தோற்கடிக்கப்பட்டபோது அவனுடைய நாடு பாண்டியனால் திருப்பிக் கொடுக்கப்பட்டது. இவ்வாறு சோழருக்குரிய குல எதிரி அடக்கப்பட்டான். போசள மன்னன் சோமேசுவரனைச் சுந்தர பாண்டியன் போரிட்டுக் கொன்றான். இவ்வாறு சோழரின் மற்றொரு பகைவன் அழிக்கப்பட்டான். நெல்லூர்த் தெலுங்க நாட்டரசின் தலைவன் கண்டகோபாலன் சோழரிடம் நட்புடைமை கொண்டவன்; சோழரின் மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்டிருந்த நிலையில் போசளனை எதிர்த்து நின்றான். காடவராயரும், சாம்புவராயரும் இவனால் அடக்கப்பட்டனர். இந்தச் சேவைகளுக்காகக் காஞ்சியையும் பெற்றிருந்தான். இவனையும் பாண்டியன் போரிட்டுக் கொன்றான். காகேதிய மன்னன் கணபதியும் பாண்டியனிடம் தோற்றோடிய பின்பு பாண்டியப் பேரரசின் வலிமையில் சோழநாடு குன்றிப்போய் விட்டது. 1268-ல் சுந்தர பாண்டியன் இறந்தபின்பு பாண்டிய மன்னன் சோமேசுவரனால் 1279-ல் ராஜேந்திரனும் போசள மன்னன் இராமநாதனும் வெல்லப்பட்டார்கள். இதன் பின்பு சோழ நாடு பாண்டியப் பேரரசுக்குரிய ஒரு பகுதியாக மாறிவிட்டது.

**திறனாய்வு:** சோழர்களைப் பாண்டியர்களிடமிருந்து பாதுகாக்கின்ற அரசியல் பணியைச் செய்ய வந்த போசளர்கள் தமிழகத்தில் தங்களுக்குரிய அரசியல் ஆதாயங்களைத் தேடிக்கொண்டார்கள். திருச்சிவரை விரிந்திருந்த போசள நாட்டையும் காலப்

போக்கில் அவர்கள் உருவாக்கினார்கள். 1205-ல் சோழன் குலோத்துங்கன் III வேண்டிக்கொண்டபடி தமிழகத்திற்கு வந்த இந்தப் போசளர்கள் 1230-க்குமேல் சோழர்களைப் பாதுகாக்கும் அரசியல் மேலோக்கத்தை (Protectorate state) ஏற்படுத்தினார்கள். இதனையடுத்து மகேந்திர மங்கலத்தில் சுந்தர பாண்டியனைப் போசளமன்னன் நரசிம்மன் தோற்கடித்தபோது அவர்களுடைய இராணுவப் பாதுகாப்பு (Protector Umbrella) சோழரைப் பாதுகாக்கின்ற தோரணையில் அமைந்தது. அதுவே, அவர்களுடைய தந்நல அரசியலுக்கு ஆதாரமாக மாறிக்கொண்டது. ராஜராஜன் III தன்முனைப்புடன் சோழ அரசின் மீட்சிக்காகச் செயல்படத் தொடங்கியவுடனேயே அதே போசளர்கள் பாண்டியர்களோடு சேர்ந்துகொண்டார்கள். இவ்வாறு பின்னர் 1251-ல் இரண்டாவது பாண்டியப் பேரரசின் தலைசிறந்த மன்னனான சுந்தர பாண்டியன் எழுச்சியுடன் தன் பேரரசின் வலிமை காட்ட இராணுவ ஆயத்தங்களைச் செய்து வடக்கு நோக்கிப் படை எடுத்தபோது போசளர்கள் ராஜராஜனோடு அணி சேர்ந்துகொண்டார்கள். இவ்வாறு சோழர்களையும் பாண்டியரையும் தங்களுடைய நலனுக்கு உரிய முறையில் மாற்றி மாற்றி ஆதரித்தார்கள்.

தென்னகத்தில் இராணுவ மேம்பாட்டுடன் ஏற்பட்ட பாண்டியப் பேரரசுக்கு உட்பட்டுப் போவதற்கு மனமில்லாத சோழர்கள் இவ்வாறு போசளரைத் துணைக்கழைத்தபோது தமிழகத்தின் பகுதிகள் திருச்சிவரை போசளப் பேரரசுக்கு உட்பட்டுப் போனது. ஆகவே, சோழர்க்கும் பாண்டியர்க்கும் என்றல்லாமல் கன்னடியப் போசளர்களுக்குத் தமிழகத்தின் ஒரு பகுதி அடிமையாகிவிட்டது. அரசியலில் அண்ணாவித்தனம் (Champion) காட்டுகின்ற எந்தப் பேரரசும், தான் உதவிக்குச் சென்ற இடத்தில் தன்னுடைய சொந்த ஆதிக்கத்தைத்தான் காலப்போக்கில் சரிபடுத்திக்கொள்ளும். இது வரலாற்றுச் சார்பான அரசியல் நியதியாகும். இதன்படி போசளர்களின் இராணுவக் குறுக்கீடு காரணமாகச் சோழர்களின் அரசியல் சீர் கெட்டுப்போனது. சோழ மக்களின் வாழ்வியலில் பெரும் நெருக்கடிகூட ஏற்பட்டது. கோவில்களின் சிலைகளைக் கவர்ந்து சென்ற போசளப் படைவீரர்கள், வரிக்கொடுமை இழைத்த சோழ அதிகாரிகளுக்குத் துணைநின்ற போசள இராணுவத்தினர் — என்றளவில் சமுதாய நலிவுகள் மலிந்து காணப்பட்டன. ஆகவே, போசளரின் வருகையால் அரசியல் பூர்வமான முறையில் தங்களுடைய இடர்ப்பாடுகளைச் சோழர்களால் தீர்த்துக்கொள்ள முடியவில்லை. சமூகச் சீரழிவுகளும் நிகழ்ந்தன.

1279-ல் போசளன் இராமநாதனுடன் சோழன் ராஜராஜனும் பாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட பின்பு சோழ நாடு பாண்டிய உரிமை ஆயிற்று. தமிழகப் பகுதியைப் போசளர்கள் சிறிது காலத்திற்கு இழந்த பின்பு மீண்டும் அதைக் கைப்பற்றி 1362 வரை ஆண்டார்கள். இவ்வாறு பாண்டியரை எதிர்க்கத் துணிந்த சோழர்கள் கன்னடியப் போசளர்களை நூறாண்டு காலத்திற்கு மேலாகத் திருச்சி வரை நீண்டு கிடந்த தங்களுடைய தமிழக ஆட்சிப் பகுதிகளுக்கு அதிபதிகளாக ஆக்குகின்ற வரலாற்றுத் தவறை (historical blunder) செய்தார்கள் என்பது தெளிவு. சோழப் பேரரசு 1279-ல் மறைந்த பின்னர் 100 ஆண்டுகளுக்கும் அதே போல 1312-ல் வீழ்ச்சியுற்ற பாண்டியப் பேரரசுக்குப் பிறகு 50 ஆண்டுகளுக்கும் போசளர்கள் தமிழகத்தில் கொடிகட்டி ஆண்டார்கள். சோழருக்கும் பாண்டியருக்கும் என ஏற்பட்டுப்போன வேண்டாத அரசியல் வாரிசுகளாகத் தென்னிந்திய அரசியல் வரலாற்றில் இந்த போசளர்கள் நீடித்து நின்றார்கள் என்பது சிறப்புச் செய்தியாகும்.

# 20. தமிழரின் கடல்வழிப் பயண பாரம்பரியமும் சோழரின் கடலாடுந் திறனும்

## (Maritime Traditions of Tamils and Cholas)

நம் இந்திய நாட்டின் வரலாற்றிலேயே சோழப் பேரரசுதான் நவீன காலத்திய அளவையின் கணிப்புக்கு உகந்த முறையில் கடற்படையினை (navy in the modern sense) வைத்திருந்ததாக ஆக்ஸ்ஃபோர்டு பேராசிரியரான A. L. பாஷாம் சோழரைப் பாராட்டிக் குறிப்பிடுகிறார்.[1] இத்தகைய சிறப்பிற்குரிய சோழர்கள் தங்களுடைய கடற்படையை ஒரே நாளில் கட்டிவிடவில்லை; கடற்படையை உருவாக்கிய பெருஞ்சாதனைக்குரிய பாரம்பரியங்கள் (Traditions) ஏற்கெனவே தமிழகத்தில் பல காலமாகத் தொடர்ந்து பல்கிக் காணப்பட்டன. 'இந்தியப் பெருங்கடலின் வரலாறு' என்ற நூலின் ஆசிரியரான டாயிசன் என்பவர் அப் பெருங்கடல் இந்தியாவின் மூன்று பக்கங்களையும் தழுவி நிற்கின்ற சலுகையைப் பெற்றிருந்தபோதிலும், அப் பெருங்கடலினைத் தன் ஆளுகையின்கீழ்க்கொண்டு வருகின்ற வரலாற்று வளர்ச்சி இந்தியாவுக்கு அமையாமல் போனதுபற்றிக் குறிப்பிடுகிறார். சோழர்களுடைய கடற்படை வளர்ச்சி மேற்சொன்ன ஆசிரியரின் கருத்துப் பதிலுரையாக அமையும். நீண்ட கடற்கரையும், சிந்தனை வளமும், பேரரசுப் பெருமிதமும் உடைய சீனநாடு அதற்கு அண்மையிலுள்ள ஜப்பானையோ, அதையடுத்த பிலிப் பைன்ஸையோ, அதற்கும் அப்பாலுள்ள ஆஸ்திரேலியாவையோ அரசியல் நோக்கத்தோடு சென்றடைந்து அடக்கி ஆள்கின்ற அளவிற்கு அந் நாட்டரசின் மனப்போக்கு அமையவில்லை. அதே போல ஒரே நாடாக இருந்த சீனாவிற்குக்கூடக் கடலோடுந்திறனுக் குரிய பாரம்பரியத்தை வளர்த்துக்கொள்வதற்குரிய வழிவகை இல்லாத நிலை காணப்பட்டபோது அச் சீனாவோடு வாணிகஞ் செய்த சோழப் பேரரசு (சீனா போன்று அளவிற்பெரியதாக அல்லாமல் தென்னிந்தியாவிற்கு மட்டுமென்று அமைந்திருந்த நாடாகும்.) இந்தோனேஷியாவை வென்றடிப்படுத்தி, தர்ம

[1] A.L. Basham—'The Wonder that was India'—1963—p. 75

விஜயத்தை மேற்கொண்டது என்பது அதனுடைய கடற் படையின் சாதனையாகும். இச் சாதனைபற்றிய முழு உண்மையை இந்திய வரலாற்றில் தனியோர் அத்தியாயமாகத் தருவதற்கு இந்திய வரலாற்றாசிரியர்களிடையே ஒருவகை தயக்கம் காணப் படுகிறது என்பது உண்மையாகும். ஆறு இலட்சம் எண்ணிக்கை கொண்ட பெருஞ்சேனையையுடைய அசோகன்கூடக் கலிங்க நாட்டைத் (பிழைப்பட்ட போர்வெறிக் கொள்கையால் பெற்ற நாட்டை) திரும்பவும் கலிங்கருக்குக் கொடுக்கவில்லை. சொந்த நாட்டுக்குள்ளே தர்மவிஜயத்தை நடத்திய அசோகனைவிடக் கடற் படை கொண்டு கீழைநாட்டைக் கவர்ந்து, அதனை இராணுவ முறையில் பிணைப்பில் இருத்த முயற்சிக்காத சோழர்களின் தர்ம விஜயம் அசோகனுடைய தர்மவிஜயத்தைவிடச் சிறந்தது எனலாம்.

சோழர்களின் சாதனை இந்திய வரலாற்றுப் போக்கின் ஒரு பிற்காலத்திய சாதனை என்று டாயிசன் கருதுகிறார். சிந்து சம வெளி நாகரிகத்தில் தொடக்கங்கொண்ட திராவிட நாகரிகத்தின் வளர்ச்சிப் பருவத்தில் ஏற்பட்ட முதிர்ச்சியாகத்தான் அச் சோழரின் கடற்படைச் சாதனை நிகழ்ந்தது என்பதைப் பின்வரு கின்ற ஆய்வுக் குறிப்பிலிருந்து நாம் அறியலாம்:

**1. சிந்துவெளி நாகரிகத்தின் கப்பல்கள் :** வின்சென்ட் ஸ்மித் கணிப்பது போன்று கி.மு. 2500-லிருந்து கி.மு. 1500வரை சிந்துவெளிப் படுகையில் வளர்ச்சியுற்றிருந்த மொகஞ்ச தாரோ, ஹரப்பா கலாசாரத்தின் மக்கள் திராவிடர் என்றளவில் மேற்கத்திய நாடான சுமேரியாவுடன் கடல் வாணிகஞ்செய்கின்ற அளவுக்குக் கடலில் செல்லும் கப்பல்கள் வைத்திருந்தார்கள். இந் நாகரிகம் அழிந்த பின்பு தென்னிந்தியாவில் தொடர்ந்து வந்த திராவிட நாகரிகத்தில் கப்பல் விடுந்திறனில் வளர்ச்சி காணப் பட்டது வியப்புக்குரிய விஷயம். ஏனென்றால், திராவிடர்கள் கடலைக் கடப்பதற்கு அஞ்சியது கிடையாது.[2]

**2. இஸ்ரேலியருடன் தமிழகத்தின் வணிகத் தொடர்பு :** இந்தியாவுக்கும், பாபிலோனுக்கும் கி.மு. ஏழாம், எட்டாம் நூற் றாண்டுகளில் கடல்வழி வணிகம் பெருமளவிற்கு நடந்தேறியது. இவ் வணிகம் திராவிடர்கள் கையில்தான் இருந்தது. ஆரியர்கள் அதில் ஒரு சிறிது பங்கு பெற்றார்கள். அரேபியாவிலும், ஆப் பிரிக்க நாட்டிலும், கிழக்குக் கடற்கரையிலும், சைனாவிலும் இத் திராவிட வணிகர்கள் சென்று தங்கினார்கள் ; பாபிலோனியாவில்

2 V.A. Smith—'Oxford History of India'—1958 —p. 43

அவ்வாறு அவர்கள் தங்கினுர்கள் என்றும் R. K. முகர்ஜீ கூறுகிருர்.[3] ஏழாம் நூற்ருண்டுக்குரியதாகக் கூறப்படும் இக் கடல் வழி வணிகம் 10ஆம் நூற்ருண்டிலே (இஸ்ரேலிய மன்னன் சாலமன் 973—933 B. C. காலத்தில்) தமிழகத்தின் நெல்லை மாவட்ட உவரியோடு நடந்தது. விவிலிய நூலில் கூறப்பட்டுள்ளது போல (ராஜாக்கள் அதிகாரம் X, சங்கீதம் 11, 21) ஒபிர் என்ற உவரியிலிருந்து (நெல்லை மாவட்டம்) சாலமன் ராஜாவுக்குத் தங்கமும், வெள்ளியும், தந்தமும், குரங்குகளும் மயில் தோகையும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பம்பாய்ப் பகுதிக்குரிய துறைமுகமாக ஒபிரை A. L. பாஷாம் குறிப்பிடுகிருர். ஆனல், மேலே சொல்லப்பட்ட ஏற்றுமதிப் பொருள்கள் தமிழகத்தில் பெருமளவுக்குக் காணப்பட்ட காரணம்பற்றி விவிலிய நூலில் குறிப்பிடப்படும் ஒபிர் பட்டணத்தை நெல்லை மாவட்டத்து உவரி என நாம் சொல்லலாம்.

**3. சங்க காலத் தமிழகத்தில் கப்பல் விடுந்திறன் :** இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் கடற்படை கொண்டு அண்மையிலுள்ள தீவினைப் பிடித்தான் என்று பதிற்றுப்பத்தும் (பதிற்றுப் பத்து 11, 12, 20; அகம் 127, 347), சேரன் செங்குட்டுவனுக்குரிய கடற்படை, கடற்சண்டையில் வெற்றி பெற்றதுபற்றிச் சிலம்பும் (சிலப்பதிகாரம் XXVII—11, 119, 121) பேசுகின்றன. கரிகாலன் இலங்கையைக் கடற்படை கொண்டு கவர்ந்ததுபற்றி முன்னர்க் கூறப்பட்டது.[4] அதே கரிகால் சோழன் கடல்வழி வாணிபத்தின் மேம்பாட்டுக்காக ஈழத்திலிருந்து பிடித்துக் கொண்டு வந்த சிங்களப் போர்வீரர்களைக் கொண்டு செயற்கைத் துறைமுகமாகக் காவிரிப்பூம்பட்டினத்தைக் கட்டினன்.[5] சங்கத் தமிழர்கள் போன்று கடற்படை வலிமையை மௌரியப் பேரரசர் கூடப் பெற்றிருக்கவில்லை. இதற்குச் சான்ருக, கடற்படைத் தலைமைக் கழகத்தை (Board of Admirality) அங்கமாகக் கொண்ட மௌரிய இராணுவத்தை அப்படியே வைத்திருந்த அசோகனுடைய மகன் மகேந்திரன் கப்பல்களில் ஈழம் சென்று தனது தர்மவிஜயத்தை நடத்தாமல் மதுரையைக் கேந்திரமாகக் கொண்டு ஈழத்தைக் குறி வைத்துச் செயல்பட்டான் எனச் செய்தி உண்டு.[6]

3 R.K. Mukerjee—'Indian Shipping, Bombay'—1957—p. 62

4 SUPRA Chapter I—Volume I— Part II—p. 4

5 Rajavaliya—'Cordington Short History of Ceylon'—p. 23

6 A.L. Basham—'The Wonder that was India'—p. 228

ஸ்ட்ராபோ என்ற உரோமானிய வரலாற்று ஆசிரியன் குறிப்படுவது போலக் கி. மு. 20-ல் உரோமப் பேரரசன் அகஸ்டஸைக் கிரேக்கத்தின் ஏதென்ஸ் நகரத்தில் பாண்டிய ராஜன் அனுப்பிய வணிகத் தூதர்கள் கடல்வழி சென்று சந்தித்தார்கள். அரிக்காமேட்டில் காணப்பட்ட உரோமானிய நாணயங்களைப் போன்ற அந்நிய நாணயங்கள் அளவுக்கதிகமாக நாட்டில் காணப்படுகின்ற அளவுக்குக் கடல் வாணிகம் வளர்ச்சியுற்றுப் போனதால், அவ்வந்நிய நாணயங்கள் தமிழகத்தின் நாணயங்களோடு செலாவணி பெற்று விளங்கியது.[7]

**4. சாளுக்கிய, பல்லவ சோழர் காலத்திய கடலோடுந்திறனும் கப்பற்படை வலிமையும் :** சங்க காலம் முடிவுற்றதாகக் கூறப்படுகின்ற கி. பி. 3ஆம் நூற்றுண்டிலிருந்து கி. பி. 6ஆம் நூற்றுண்டுவரை தமிழகத்தில் நிலவிய களப்பிரரின் இருண்ட காலத்திற்குப் பிறகு தென்னிந்தியாவில் கடற்படையின் வலிமை மீண்டும் புத்துணர்வுடன் தோற்றமளிக்கிறது. சாளுக்கியமன்னன் புலிகேசி II தன்னுடைய நூறு கப்பல்களைக் கொண்டுபோய்ப் பூரி என்ற தீவைக் கைப்பற்றியதாக ஐஹோலக் கல்வெட்டு[8] கூறுவதிலிருந்து தென்னிந்தியாவின் மேற்குக் கடற்கரையில் வளர்ச்சியுற்ற கடற்படையைப்பற்றி நாம் அறிவது போலக் கிழக்குக் கடற்கரையிலும் அத்தகைய கடற்படை வளர்ச்சியைப் பல்லவ மன்னன் நாசிம்மன் I காலத்தில் நிகழ்ந்த இரண்டு கடற்படையெழுச்சிகளிலிருந்தும் [9] நாம் தெளிவுறலாம்.

**சோழர்களின் கடலாதிக்கம் :** வாணிகந்தான் சோழருக்குரிய கடற்படையை வங்கக்கடல் கடந்து செல்லச் செய்கிறது. ராஜேந்திரன் I காலத்தில் நிகழ்ந்த கடற்படை எழுச்சியானது இந்திய வரலாற்றிலேயே தனிச்சிறப்புக்குரிய இணையிலாத நிகழ்ச்சியாகும் என A. L. பாஷாம் கூறுகிறுர்.[10] ஆனல், டாக்டர். T. V. மகாலிங்கம் பின்வருகின்ற கருத்தினைக் கூறுகிறுர்:[11] சோழருக்குக் கடற்படை என்ற முறையில் தனித்தன்மையோடுகூடிய கப்பல்கள் காணப் பெறவில்லை. சரக்குக் கப்பல்களையே (Merchant Vessels) போர்க்காலங்களிலும் பயன்படுத்திளுர்கள்.

7 A. L. Basham ' The Wonder that was India'— p. 229

8 Epigraphica Indica—VI, p.10

9 South Indian Inscription II—p. 356

10 A. L. Basham — 'The Wonder that was India' — p. 75

11 T. V. Mahalingam—' South Indian Polity' —p. 288

சோழரின் கடற்படையைப் புகழ்ந்தேத்துகின்ற பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியின் கருத்தைச் சொல்லி அதற்கு மாறான மேலே சொல்லப்பட்ட ஆசிரியரின் கருத்தையும் சொல்லி, சோழர்களின் கப்பற்படை கடற்கொள்ளைக்காரர்களிடமிருந்து கடல் வாணிகத்தைப் பாதுகாப்பதற்காக ஏற்பட்ட சாதனமாக விளங்கியது என்று டாயிசன் என்ற ஆசிரியர் கூறுகிறார்.[12] A. L. பாஷாம் கூறுகின்ற கருத்தின்படி சோழரின் கப்பற் படையைத் திறமை மிக்க கப்பற்படையாகவே நாம் ஒப்புக்கொள்ளலாம்.

பண்டைக்கால இந்தியாவில் காணப்பட்ட கப்பல் விடுஞ் சாதனைபற்றிச் சில இந்திய வரலாற்றாசிரியர்கள் அளவுக்கதிகமாகப் புகழ்ந்தேத்துகிறார்கள் என்றும், 'வைகிங்கள்' (Vikings) போன்ற பழங்காலக் கடலோடி மக்களைப் போன்ற இந்தியக் கடலோடிகள் பெருஞ்சாதனைகளை ஆற்றவில்லையென்றும் A. L. பாஷாம் கூறுகிறார்.[13] இவ்வாறு பண்டைக் காலத்தில் அவ்வளவாகச் சிறப்புப் பெற்றிராத கடற்படைத்திறன் சோழர்காலத்தில்தான் மேம்பாடுற்றது என்ற வரலாற்று உண்மையிலிருந்து சோழர்களுக்கு இந்திய நாடு எந்த அளவுக்குக் கடமைப்பட்டுள்ளது என்பது தெரியவரும். கீழைநாடுகளோடு சோழர்கள் கொண்ட கடல் வழித் தொடர்புகளை ஆராய்கின்றபோது கீழ்க்கண்ட உண்மைகள் புலப்படும்:

(அ) இந்தியாவின் கிழக்குக் கடற்கரையின் துறைமுகங்கள் தான் கீழ்த்திசை நாடுகளோடு பெருமளவிற்குத் தொடர்பு கொண்டிருந்தன. குஜராத்திலிருந்தும் கடல்வழித் தொடர்பு கொண்டவர்கள் கீழைநாடுகளுக்குச் சென்றார்கள். கிறிஸ்து சகாப்தத்தின் ஆரம்பத்தில் தங்கத்தைத் தேடி இந்து சமயக் கடலோடிகள் கீழைநாடுகளுக்குச் சென்றார்கள் என்று கோடே கூறுகிறார். கீழைநாடுகளின் இந்தியக் கலாசாரத்தின் விரிவாக்கம்பற்றி ஆராய்ச்சி செய்த அறிஞர் ஃபிரெஞ்சு கோடே மேற் சொன்னவாறு கூறுவதாக டாயிசன் எடுத்துக் கூறுகிறார்.[14] இந்தியக் கடலோடிகள் சென்று இந்தியக் கலாசாரத்தை விரிவாக்கம் செய்ததன் காரணமாக 'அகண்ட இந்தியா' என்றழைக்கப்படுகின்ற சில கீழைநாடுகள் தங்கம் உற்பத்தி செய்ததில் அவ்வளவாகத் திறன் பெற்றிருக்கவில்லையென்றும்,

12. Auguste Toussaint—'The History of Indian Ocean'—1966—p.72, 73

13 A. L. Basham—'The Wonder that was India'—p. 226

14 Auguste Toussaint—'The History of Indian Ocean'—1966—p.67

ஆகவே, சோழர் போன்ற இந்தியர்கள் கீழைநாடுகளில் கொண்ட நாட்டமானது முற்றிலும் பொருளாதார நோக்கமாக அமைய வில்லை என்றும் மற்றோர் ஆராய்ச்சியாளர் வான்லியூர் கூறுவதை டாயிசன்[15] எடுத்துக் காட்டுகிறார். மேற்சொன்ன இரண்டு ஆராய்ச்சிக் குறிப்புகளிலும் உண்மை இருப்பதாக நாம் கூறலாம்.

(ஆ) பொருளாதாரத்தில் நிறைவோடு இருந்த இந்தியாவி லிருந்து தங்கம் தேடி வெளிநாடு செல்ல வேண்டிய அவசிய மில்லாமலிருந்தது; பிறநாடுகளில் காலனிகளை உண்டாக்கித் தன் நாட்டு மக்களைக் குடியேற்றம் செய்து அவர்களைச் சுரண்டி வாழ வேண்டிய அவசியமுமில்லாமலிருந்தது.[16] இந் நிலையில் சோழரின் கடற்படை எழுச்சி தர்மவிஜயமாகவே அமைந் திருந்தது. கீழைநாடுகளில் காலனிகளை நிறுவி, சொந்த நாட்டில் எஞ்சி நின்ற செய்பொருள்களை (surplus manufactured goods) எடுத்துச் சென்று விற்று முதல் ஆக்கக்கூடிய முறையில் சோழ நாட்டில் செய்தொழில்கள் பெரு வளர்ச்சிப் பெறவில்லை. ஆகவே, அவர்களுடைய கடற்படை காலனி ஆதிக்கத்திற்காகப் பாடுபடுகின்ற இராணுவ இயந்திரமாக (military machine) பயன் படுத்தப்படவில்லை என்பது தெளிவாகும்.

கடற்படையைச் சோழர்கள் பெரிதும் மதித்ததைப் 'பொரு கடல்', 'அன்னதானை' என்று கடலின் பரப்பைக் காலாள் படைக்கு ஏற்றிச் சொல்லுவது அந் நாளைய இலக்கிய மரபாக மாறிய செய்தியிலிருந்து அறியலாம்.[17] ராஜேந்திரன் I நிகழ்த்திய கடாரப் படையெழுச்சிக்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு 'கடற் கலிங்கம் எறிந்து' கங்கை நதிப் புரத்துக்குச் சென்ற காலாள் படைக்குத் துணை செய்கின்ற அளவில் கடற்படை வங்கதேசம் செல்லவில்லை. தரைப்படைக்கு உதவியாகக்கடற்படை சென்ற தாகச் சோழ வரலாற்றில் செய்தி காணப்படவில்லை. தரைப் படைக்குரிய (கருணாகரன் போன்ற) தலைவர்களைப் போலக் கடற் படையின் தலைவர்களைப்பற்றிய (Admirals) செய்திகள் காணப் பெறவில்லை.

ராஜேந்திரன் I தன்னுடைய 'கும்பகரி' என்ற யானைகளைக் கப்பலில் ஏற்றி வைத்துக்கொண்டு கடாரப் படையெழுச்சியைக் கடல்கடந்து நடத்தினான் என்று அவனுடைய மெய்க்கீர்த்தி கூறு

15 Ibid — p. 63

16 Ibid — p. 61

17 K.A.N. Sastri—'Cholas'—p. 240

கிறது (213 of 1911). சங்க காலத்திய கப்பல்கள் சுமார் 300 போராக்கள் அல்லது 75 டன் எடை கொண்டன எனப் பிளினி கூறுகிறார்.[18] களப்பிரரின் இருண்ட காலத்தில் தமிழக அரசியல் வாழ்வோடு கப்பல் கட்டும் தொழில் தேக்கமடைந்து தேய்ந்து விட்டது. பதினைந்து பேர்களை மட்டும் சுமந்து செல்கின்ற கப்பல்தான் இந்தோனேஷியாவின் போராப்புதூர்ச் சிற்பங்களில் காணப்பெறுகின்ற கப்பலின் வடிவமைப்பு (engineering design) ஆகும். தமிழர்கள் இவ் வடிவமைப்பை அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். சுக்கான் இல்லாமல் காட்சியளிக்கும் அச் சிற்பங்கள் பல்லவர் காலத்துக்குரியவை என A.L. பாஷாம் கூறு கிறார்.[19] பல்லவருக்கு அடுத்து வந்த சோழர்களின் காலத்தில் யானையைச் சுமக்கின்ற கப்பல்களைக் கட்டியது பெருஞ்சாதனை யாகும்; கிழக்கே இருந்து மேற்காக ஓடுகின்ற நீரோட்டத்தையுங் கடந்து செல்கின்ற[20] வகையில் யானை சுமந்த கப்பல்களை நடத்திச் சென்ற சாதனை இணையற்றதாகும் எனலாம். வணிகக் கப்பல்களைக் காலாள் படையினர் அவசியமானபோது பயன்படுத் தினர் என்று வழங்கப்படும் கருத்தாளர்கள் சோழருக்கு உரிய கப்பற்படையின் ஆற்றலைக் குறைத்து மதிப்பிடவில்லை. ஆப் பிரிக்காவின் கார்த்தேஜ் நகரப் பேரரசின் பெரிய கப்பல்களோடு சாதாரணக் கப்பல்களில் கம்பியினாலான கொடுக்கு உள்ள தொங்கு பாலத்தைப் (draw bridge) பிணைத்துக்கொண்டு முன் னேறிய உரோமானியர்களின் காலாள்படை 'பியூனிக்' போர் களில் வெற்றி பெற்றதை நாம் நினைவிலிருத்த வேண்டும். இந்த முறையில் தரைப்படையின் மற்றொரு பதிப்பாகக் (edition) காணப்பட்டதெனலாம். தரைப்படைத் தலைவர்கள் கப்பற் படைத் தலைமையை ஒப்புக்கொண்டபோது கப்பல்களைக் குதிரைப் படைக்குரிய குதிரைகளாக எண்ணித் தரைப்படையின் யுக்தி களைக்கொண்டு போரிட்டதைப்பற்றிய செய்தி கடற்படைப் புகழ் இங்கிலாந்து வரலாற்றில்கூடக் காணப்படுகிறது.[21] எனவே, சோழர்களின் கப்பற்படையின் வெற்றிக்கு அவர்களுடைய பொறியியல் அறிவோடு காலநிலை பற்றிய பேரறிவும், இணையில் லாத பேராற்றலும் காரணம் எனலாம்.[22] இத்தகைய கடற்

18 A.L. Basham—'The Wonder that was India' —p. 226

19 Ibid—p. 227, 228

20 Auguste Toussaint—'The History of the Indian Ocean'—p. 62

21 G.T. Warner & C. H. K. Marten—'The Groundwork of British History' —p. 401

22 Commander K. Sridharan—'A Maritime History of India'—1965 —Publications Division—Govt. of India—p. 33

படைத் திறனைச் சோழர்கள் குலோத்துங்கன் I 1022-ல் காலமான பின்பு தொடர்ந்து போற்றவில்லை. சோழரோடு போரிட்டுக் கொண்டே சோழருக்கு உட்பட்டிருந்த மதுரைக்குச் சென்றமர்ந்த சிங்கள மன்னன் பராக்கிரம பாகுவின் கடற்படையைத் தடுத்து நிறுத்த சோழர்களின் கப்பற்படைக்குப் போதிய வலிமை காணப் பெறவில்லை. பேரரசு தளர்ச்சியுற்ற பின்பு சோழப் பேரரசர்கள் தங்களுடைய கப்பற்படையைப் பராமரிக்க இயலவில்லை. அதன் விளைவாகத்தான் சோழக் கப்பற்படையின் வலிமை குன்றியது. இதன் விளைவாக, சோழப் பேரரசின் அழிவுக்குக் காரணமான இரண்டாவது பாண்டியப் பேரரசு ஈழத்தாரின் துணைகொண்டு வளர்வதாயிற்று.

# 21. அகண்ட இந்தியா

## (Greater India)

இந்தியக் கலாசாரம் கடல் கடந்து தென்கிழக்காசியாவிலும் நிலை பெற்றது. கிறிஸ்துவ சகாப்தத்தின் தொடக்கக் காலத்திலிருந்து பதினுன்காம் நூற்றுண்டு வரை இத்தகைய கலாசார விரிவாக்கம் இடையருமல் நடைபெற்றது. இந்த விரிவாக்கத்திஞல் கிழக்காசிய நாடுகளின் நாகரிகம் இந்திய மயமாகியது ; ஆனல் செழுமை பெற்றது. இதனை அகண்ட இந்தியா (Greater India) என்று அழைப்பர். இக் கீழைநாடுகளின் வடபுலத்தில் பர்மா (ரமன்ன தேசம்), கம்போடியா (காம்போஜம்), வியட்நாம், (சம்பா) போன்ற நாடுகள் காணப்பட்டன. தெற்கே மலேயா, இந்தோனேஷியாவில் ஸ்ரீவிஜயம், காதிரி போன்ற நாடுகள் காணப்பட்டன. இந் நாடுகளின் அரசியல் வளர்ச்சி பேரரசுகளாக மாறுகின்ற முறையில் அமைந்திருந்தது. இது கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டில் நடைபெற்றது. தென்னிந்தியாவிலிருந்து சாதவாகனர்களின் கலிங்கம் (ஒரிஸ்ஸா) பல்லவர்களின் காஞ்சிப் பகுதிகளின் கலாசாரச் செல்வாக்கு கீழைநாடுகளில் ஏற்கெனவே குடியேறிய போதிலும் நிறைவான வளர்ச்சி அடையவில்லை. காய்க்கின்ற பருவத்தில்—ஒன்பதாம் நூற்றுண்டுக்குமேல்—பேரரசுகள் தோன்றி, அங்கே ஏற்கெனவே கால்பாவி நின்ற இந்தியக் கலாசாரத்தைச்—குறிப்பாகப் பல்லவரின் காஞ்சிமாநகரம் அளித்த[1] சைவமும் பௌத்தமும் விரவி நின்ற கலாசாரச் செறிவாக்கத்தை—செழுமை ஆக்குகின்ற பணியினை விஜயாலயச் சோழர்களின் தொடர்புகள் நிறைவேற்றி வைத்தன. இந்த நிலையில் சோழர்களின் விஜயத்தால் கீழைநாடுகளின் கலாசாரம் பூத்துக் குலுங்கியது (efflorescence). வடக்கே கம்போடியாவில் அங்கர்வாட் உலகப் புகழ்பெற்ற கட்டடக் கலைக் கருவூலங்கள் சோழர்களின் கலாசாரப் பரிமாற்றத்தால் உருவாக்கங்கொண்டன எனலாம். இதனுல்தான் சோழர்கள் கீழைநாடுகளுக்குரிய கலாசாரத் தூதர்கள் (cultural ambassadors) என்றழைக்கப்படுகின்ற தகுதியுடையவரானுர்கள்.

1 G. Coedes—'The Making of South East Asia'—1954—page 53

விஜயாலயச் சோழர்கள் தாம் அரசியலாக்கங்கொண்ட சமயப் போக்கை (politick ng in religion) தமிழகத்தில் நல்ல அறவுணர்வோடு நிலைப்படுத்தினர். இதனைக் கீழைநாடுகளும்— குறிப்பாக வடக்குப் பகுதியில் கம்போடியாவிலிருந்த அங்கர்வாட் என்ற பேரரசும், தெற்கே இந்தோனேஷிய ஸ்ரீவிஜயத்தாரும்— ஆர்வத்தோடு தழுவிக்கொண்டார்கள். இதற்குச் சாதகமான சூழ்நிலை அவர்களுடைய நாடுகளிலும் காணப்பட்டது. இவ்வாறு கீழைநாடுகளுக்கு ஏற்பட்ட இந்தியக் கலாசாரத் தொடர்புகளுக்கு அகண்ட இந்தியாவிற்கு வரலாற்றுப் பூர்வமான முத்தாய்ப்பு வழங்கிய முழுப் பெருமை கடற்படை கொண்ட சோழரையே சாரும் என்பது வரலாறு கண்ட உண்மையாகும். கீழைநாடுகளில் குறிப்பாக பர்மா முதல் வியட்நாம் வரையுள்ள தீபகற்ப அகண்ட இந்தியாவில் பெருமளவிற்கு அகழ்வாராய்ச்சி நிகழ்த்தி, அகண்ட இந்தியாவிற்கு மூலாதாரம் காஞ்சிப் பகுதியே என்ற பேருண்மைகளை எடுத்துச் சொல்லிய ஃபிரெஞ்சு அறிஞர் கோடே பதின்மூன்றும் நூற்றாண்டோடு இந்திய கலாசார உறவுகள் முற்றுப் பெறுகின்றன என்று சொல்லுகிறார். பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே இத்தகைய இந்திய உறவுநிலைக் கலாசாரம் உள்ளூர அழியத்தொடங்கியது என்றும், அதற்கான நோய்க்குண அறிகுறிகளின் சூசக வெளிப்பாடு (premonitory sy ptoms) அப்போதே நிகழ்ந்துகொண்டிருந்தது என்றும் அவர் கருதுகிறார்.[2] இதிலிருந்து அறியப்படும் உண்மை என்ன? ராஜராஜன் I, ராஜேந்திரன் I, குலோத்துங்கன் I போன்ற சோழர்கள் எழுச்சி பெற்றுக் கீழைநாடுகளோடு உறவாடிய நாள்களான பதினோராம் நூற்றாண்டுக்குப் பின்பு அகண்ட இந்தியாவின் மூல பலம் முறியத் தொடங்கியது. ஆகவே, சோழர்களே அகண்ட இந்தியக் கலாசாரத்தின் சீர்மையையும் அதன் பரிபூரணமான வளர்ச்சியையும் நேரில் கண்டார்கள்; அவற்றைச் செழுமையுறச் செய்தார்கள். இத்தகைய காலமறிந்த வரலாற்றுக் கருத்துப் பார்வை (historical and contextual perspective) கொண்டு அகண்ட இந்தியாவைச் சோழர்களின் சாதனையாகக் கணிக்கின்ற ஆர்வம் நம் நாட்டு வரலாற்றாசிரியர்களுக்குள் அவ்வளவாகக் காணப் பெறவில்லை. அகண்ட இந்தியாவைப் பற்றி எழுதுகின்ற மேனாட்டவர்கூடச் சோழர்களின் ஈடுபாட்டினை முழுமையாக எடுத்துக்கூறுவதில்லை. கடற்படை கொண்டு கடாரம் என்ற தென்பாகக் கீழைநாடுகளை வயப்படுத்தி ஒரு நூற்றாண்டு வரை ஆண்ட சோழர்களைப்பற்றி டாய்சன் போன்ற மேனாட்டாசிரியர்கள் பேசுகிறார்கள்.[3] பிரிட்ஜட் போன்ற

2 Coedes—op. cit., p. 133

3 Toussaint—'The History of Indian Ocean'—1966—p. 66

ஆசிரியர்கள் சோழர்களைப்பற்றி அறவே பேசுவதில்லை. கீழை நாடுகளோடு சோழர்கள் கொண்ட உறவுகளை ஆராய்கின்ற போது இந்திய நாகரிகத்தின்—குறிப்பாகச் சோழர்கள் உருவாக்கிய தமிழகத்துக் கலாசாரத்தின்—வீரியமும் வினையறமும் நமக்குத் தெரியவரும்.

**1. சோழரின் கடலோடுந்திறனும் கீழைநாட்டுப் பயணமும் :** சோழர்கள் வங்கக்கடலைச் சோழர்களின் ஏரியாக மாற்றினார்கள்; அந்த அளவிற்கு அவர்களுடைய கப்பல்கள் அக் கடல்மேல் ஆதிக்கம் செலுத்தின. ஆனால் இக் கடலில் சுழன்றடிக்கும் புயல்கள் எப்போதும் காணப்படும்[4] (C' revolving storms—an ever present danger). ஐரோப்பாவின் விஸ்தீரணம் கொண்ட வங்கக் கடலை அடுத்த இந்தியப் பெருங்கடலிலிருந்து உருவாகின்ற பருவக்காற்றின் (monsoon) துணைகொண்டு சோழர்கள் கப்பல்விடுவதில் தங்களுக்குள்ள வல்லமையை வளர்த்துக் கொண்டார்கள். கி. பி. 45-ல்தான் ஐரோப்பியருக்குப் பருவக் காற்றின் தன்மையும் கப்பல் விடுவதற்கு அது செய்யக்கூடிய பேருதவியும் தெரிய வந்தது; ஹிப்பலஸ் என்பவர் இவ்வுண்மையைக் கண்டறிவதற்குப் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தென்னிந்திய திராவிட நாகரிகத்தார்கள் பருவக்காற்றின் உதவியோடு கப்பல் விடுவதில் கடலைப்பற்றிப் புரியத் தொடங்கிய ஆரியர்களைவிடத் திறமை கொண்டிருந்தார்கள். தென்னிந்தியத் தீபகற்பத்தின் கடலோடுந்திறனுக்குரிய ஏக வாரிசுகளாகச் சோழர்கள் விளங்கினார்கள். கரையோரமாகச் செல்லாமல் வங்கக் கடலைக் கிழித்துச் சோழர்களின் நாவாய்கள் 1200 மைல்கள் கடந்து சென்று கெத்தா என்ற மலாசியப் பினாங்கை அடைந்தன. காம்பஸ் என்ற திசைகாட்டுங் கருவி இல்லாத நாள்களில் சோழர்கள் இவ்வாறு வங்கக்கடலின் புயல் சூல் கொண்டு எழும்பிய அலைகளைக் 'காளிங்க நர்த்தனம்' செய்து கீழைநாடு சென்றடைவதற்கு அவர்களுடைய விஞ்ஞான அறிவோடு இணையற்ற வீரமும் உதவிற்று எனலாம். நீரோட்டங்களைத் தெரிந்திருந்த அறிவாற்றுமையின் காரணமாகச் சோழர்கள் யானைகளையும் கப்பல்களில் ஏற்றிச் சென்றார்கள்.

**2. சோழர்கள் கீழ்த்திசை நாடுகளுக்குச் சென்றதற்குரிய வேட்கை :** ஐரோப்பிய முறையில் காலனி நாடுகளை அமைக்க வேண்டி சோழர்கள் கிழக்காசிய நாடுகளுக்குச் செல்லவில்லை; தங்கம் வேண்டிச் செல்லவில்லை. ஏனென்றால், தங்கம் அதிகமாகக் கிடைக்கக்கூடிய பகுதிகள் ஆங்குக் காணப்படவில்லை என்று

[4] K. M. Panikkar— 'Geographical Factors in Indian History'—1955 —p. 60

அறிஞர் வான்லார் (Van Laur) கூறுகிறுர்.[5] முஸ்லிம் அரேபியரும் ஐரோப்பியரும் கிழக்காசியாவிற்குச் சென்றடைவதற்கு முன்பு வந்த இந்திய கடலோடிகள் இந்தோனேஷியாவிற்குக் குறிப்பாக மலேயாவிற்குத் தங்கத்தைத் தேடித்தான் வத்தார்கள் எனக் கோடே கூறுகிறுர். இந்தோனேஷிய ஸ்ரீவிஜயத்தின் மன்ன னுடைய ஒருநாள் வருமானம் கிலோத் தங்கமாகும். நாள் தோறும் தங்கத்திலான செங்கல் கட்டியை நீர்வாளியினுள் சடங்காசாரமாக அம் மன்னர்கள் எறிந்தார்கள். இந்த இரண்டு செய்திகளின் அடிப்படையில் கோடேயின் கருத்து வலிவு பெறுகிறது. ஆனுலும், சோழர்கள் தங்களுடைய வணிகத் திற்காகத்தான் சென்றுர்கள் என்பது வரலாற்று உண்மையாகும். பிற நாட்டை வென்றடிப்படுத்தித்தான் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமோ, வணிகம்மூலம் தங்கம் வெள்ளி கவர்தல் (A mercantilism) என்ற பணப் பொருளா தாரத்தின் தொடக்காலக் கோட்பாடோ சோழர்களிடம் காணப் படவில்லை. முதலையின் வாயைப் போலுள்ள மலாக்கா நீர்ச்சந்திப் பினூடே உள்ள கடல்வழியில் உலகச் சிறப்பு மிக்க காற்றேட் டங்கள் காணப்படுகின்றன.[6] அவற்றைப் பயன்படுத்துகின்ற வழிமுறையைச் சோழர்கள் அறிந்திருந்தார்கள். அவ்வழியே பதுங்கிக் காணப்படும் கடல் கொள்ளைக்காரர்களைவிடக் கொடுமை யான முறையில் நடந்துகொண்ட ஸ்ரீவிஜயத்தாரை அடக்கு வதற்குச் சோழர்களின் கடற்படை 1025-ல் கடாரஞ்சென்றது ; அந் நாடுகளை வென்றது.

**3. கீழைநாடுகளின் வரலாற்றுப் பின்னணியில் சோழர்கள் :** சோழர்கள் கிழக்காசியாவிற்கும் அதன் வழியாகச் சீனத்திற்கும் செல்லுகின்ற பாதையையோ, பயணத்தையோ புதிதாகக் கொள்ளவில்லை. சோழர்களுக்கு முந்திய தமிழகத்தை ஆண்ட பல்லவர்களில் நரசிம்மவர்ம பல்லவன் என்ற ராஜசிம்மனை அரேபியரையும் திபேத்தியரையும் அடக்கி வைக்குமாறு சீனப் பேரரசன் கேட்டுக்கொண்டான். இப் பல்லவன் அடக்கிய திபேத்தியர்கள் திபேத்தியர்கள்தான் என்றுலும், பர்மாவில் குடியேறியவர்களாகக் கொள்ள வேண்டும்.[7]

கி. பி. 2ஆம் நூற்றுண்டில் தொடங்கி 11ஆம் நூற்றுண்டில் முடிவுற்ற காம்போஜ நாட்டைத் தோற்றுவித்த கௌண்டின்யன் என்ற முதல் அரசன் வடபுலத்து இந்திரபிரஸ்த அரசனுன

5 Van Laur—'Indonesian Trade and Society'—The Hague—1955—p.63
6 K. M. Panikkar—op, cit., p. 60
7 T. V. Mahalingam—'Kanchipuram in Early South Indian Polity'—1969

ஆதித்த வமிசனின் மகன் என்று இதுவரை சொல்லப்பட்டு வந்தது. பேராசிரியர் ஜுன்ஃபில்லியோசத்தினுடைய (Prof. Jean Filliozat) கருத்தின்படி இக் கௌண்டின்யன் சங்க காலச் சோழ நாட்டைச் சார்ந்தவன் எனவும் கொள்ளலாம்.[8] ஆவூர் மூலங்கிழார் எழுதிய புறநானூற்றுப் பாடல் (எண் 166; வரிகள் 1—9) சொல்வது போல, விண்ணந்தாயனுடைய மூதாதையர்கள், வழிபாட்டுத் தெய்வமாகிய ஆதிசிவனுக்கு எதிரிகளாக இருந்தவர்களை வீழ்ச்சியுறச் செய்வதில் காட்டிய வீரம் போற்றத் தகுந்தது. இப் புறநானூறு குறிப்பிடுகின்ற கணியன் விண்ணந்தாயன் சோழ நாட்டின் பூஞ்சிற்றூரைச் சார்ந்த அந்தணர்க் குடும்பத்தைச் சேர்ந்தவனுவான்; கௌண்டிய கோத்திரத்தைக் கொண்டவனுதலால், இவனுடைய வழியினர் அப் பெயர் கொண்டு அழைக்கப் பெற்றனர். மேற்கூறப்பட்ட பேராசிரியர் சொல்வது போலக் கௌண்டிய கோத்திரம் வடஇந்தியாவைச் சார்ந்த தாயினும், அக் கோத்திரத்தைச் சார்ந்தோர் தென் இந்தியாவில் குறிப்பாகச் சோழ நாட்டில் சைவத்தை மேம்படுத்துவதற்காகப் பேரார்வத்தோடு செயல்பட்டார்கள். இவ்வாறு இவர்கள் சோழ நாட்டில் சைவத்திற்குத் தொண்டாற்றுகின்ற அதே நாளில்தான் காம்போஜ நாட்டில் கௌண்டின்யன் அந் நாட்டில் ஏற்பட்ட சைவநெறி வளர்ச்சிக்காகப் பெரிதும் முயன்று நின்முன் எனச் சீனக் குறிப்புகள் கூறுவதாகக் கிழக்காசிய நாடுகளில் தங்கி, அதன் வரலாற்றை ஆராய்ந்து பயிற்சிவிக்கும் பிரியன் ஹாரிஸன் என்ற பேராசிரியர் கூறுகிருர்.[9] இது நிகழ்ந்தது கி. பி. 190ஆம் ஆண்டில் கி. பி. 400ஆம் ஆண்டளவில் மற்றுமோர் அந்தணர்குலக் கௌண்டின்யன் அதே இடத்தில் இந்து அரசை உருவாக்கினுன்.[10] ஆனுலும், மௌரியப் பேரரசின் புத்தமதச் சார்புடைமை காரணமாகத் தமிழகத்திற்குக் குடியேறிவிட்ட அந்தணர்கள் சங்கத்துச் சோழ நாட்டின் பூஞ்சிற்றூரில் தங்கி அவ்வூரைத் தாங்கள் பிறந்த மண்ணுகக் கொண்டார்கள். அவர்கள் அங்கிருந்து வெளியேறிக் கீழைநாடான காம்போஜம் சென்றிருக்கலாம் என்று எண்ணுவதற்கு இடமிருக்கிறது. இவ்வாறு கீழைநாடுகளுக்கும் சோழர்களுக்கும் கிறிஸ்து சகாப்தத்தின் ஆரம்ப நாளிலிருந்து தொடர்பு ஏற்பட்டது எனச் சொல்லலாம்.

பல்லவ மன்னன் ராஜசிம்மன் (691—728) சீன அரசின் ஆதிக்கத்தைக் காக்கும் பணிக்குத் துணை போகின்ற நிலையில்

8 'முதல் உலகத் தமிழ் மகாநாட்டு மலர்' I—பக்கம் 27

9 Brian Harrison—'South East Asia'—1954—p. 13

10 Ibid—p. 21

அச் சீனர்களுக்கு எதிரிகளாக இருந்த திபெத்தியர்களோடும் அரேபியர்களோடும் பகைமை பாராட்டினுன். அச் சீனர்களோடு சேர்ந்து போராடப் பல்லவருக்குச் சீனரின் அழைகூவல் வந்த காரணம் என்ன? தென்கிழக்காசியப் பகுதியில் சீனநாட்டினரின் செல்வாக்குக்கு ஊறு விளைவிக்கின்ற வண்ணம் அரேபியர்கள் அரேபிக் கடலையும், வங்கக் கடலையும் கடந்து அப் பகுதிகளில் நடமாட்டம் கொண்டதைத் தடுக்கின்ற முறையில், ராஜசிம்ம பல்லவனின் கடற்படை அந் நாளில் இளமை வேகம் கொண்டு நின்ற, துடிப்புடைய இஸ்லாத்தைச் சேர்ந்த அரேபியர்களைப் போரிட்டுத் தடுத்து நிறுத்தியது. அரேபியாவிலிருந்து கீழை நாடுகளுக்குச் சென்ற அரேபியர்கள் தமிழகத்திற்கு வந்தபோது ஒடுக்கப்பட்டார்கள்.

பல்லவன் நந்திவர்மன் II (826—849) காலத்தில் கீழை நாடான போர்னியோவிலுள்ளதும் டாலமியால் ‘தக்கோலா’ என்றழைக்கப்பட்டதுமான டாகுபாகுவா என்ற இடத்தில் தமிழ் வணிகரின் குடியேற்றம் காணப்பட்டதாக ஒரு குறிப்பு உண்டு. அக் குடியேற்றத்தைப் பாசறையாகவும் மாற்றிக் கீழை நாடுகளோடு வாணிகஞ்செய்த மணிக்கிராமத்தார் என்ற தமிழகக் கடல் வணிகக் குழுவினர் தம் பாதுகாப்பிற்குப் பல்லவ அரசன் நந்திவர்மனைச் சார்ந்து நின்றனர் என்பது வரலாற்றுச் செய்தியாகும்.

**4. விஜயாலய சோழர்களோடு கீழைநாட்டார்களின் தொடர்பு:** கி. பி. 880-லிருந்து பேரரசு, விரிவாக்கம் கொண்ட விஜயாலய சோழர்கள் வங்காளவிரிகுடாவினைச் ‘சோழர் ஏரியாக’ மாற்று கின்ற அளவில் கடற்படைத் திறனும் வினைத்திட்பமும் கொண் டிருந்தார்கள். கரையோரமாகத்தான் மரக்கலம் செல்லுகின்ற நிர்ப்பந்தம் இருந்த அக் காலத்தில் வங்கக் கடலின் குறுக்காக 1000 மைல்களைக் கடந்த நிலையில் கடாரம் சென்றடைந்த சோழர் களின் கடற்படைத் திறன் வியப்புக்குரியது ஆகும். இதோடு கூடத் திசை காட்டும் கருவி தோன்றியிராத அச் சூழ்நிலையில் வங்கக் கடலைக் கடக்கின்றபோது திசைமாறிச் சுழலுகின்ற பருவக் காற்றையும் ‘காளிங்க நர்த்தனம்’ செய்து, கீழைநாடுகளுக்குத் தங்களது கப்பல்களை அச் சோழர்கள் ஏவினுர்கள். நவீன விஞ்ஞான அறிவோ, சாதனங்களோ காணக்கிடைக்காத அக் காலச் சூழ்நிலையில், கீழைநாடுகளுக்கு நினைத்தவுடன் சென்று வருகின்ற கடலாடுந்திறனை வளர்த்துக்கொண்டார்கள் சோழர்கள். சோழ நாட்டோடு கீழைநாடுகள் 985-ல் தொடங்கிய ராஜராஜன் ஆட்சிக் காலத்திலிருந்து 1122-ல் முடிவடைந்த குலோத்துங்கன் I ஆட்சிக் காலம் வரை நெருக்கமான தொடர்புகளைக் கொண

டிருந்தன. அத் தொடர்புகளைப் பின்வருமாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்:

**5. சோழர்கள் கீழைநாடுகளோடு கொண்ட அரசியல் தொடர்புகள் :** 1025-ல் ராஜேந்திர சோழன் அனுப்பிய சோழரின் கடற்படை கடாரம் என்றழைக்கப்பட்ட ஸ்ரீவிஜய நாட்டை வென்றது. காலனி ஆதிக்கத்தை நிறுவுவதற்கான ஏகாதிபத்திய உணர்வுடன் இச் சோழர்கள் கீழைநாடுகளில் தங்களுடைய இராணுவ நடவடிக்கைகளின் வெற்றிக்குப் பின்புங்கூட நடந்து கொள்ளவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். இருந்தாலும்; இவ்வாறு இராணுவ முறையில் அடக்கப்பட்டுப்போன ஸ்ரீவிஜய நாடு சோழர்களுக்குக் கப்பம் அனுப்பி வந்ததாகக் கூறுவோர் உளர். 1068-ல் வீரராஜேந்திர சோழன் சோழரின் கடற்படையை, ஸ்ரீவிஜயநாட்டிலிருந்து வந்த ஓர் அரசனுடைய வேண்டுதலுக்கு ஏற்ப ஸ்ரீவிஜய நாட்டுக்கு அனுப்பி வைத்தான். அப் படை வெற்றியும் பெற்றது. இந்த நிலையில் ஸ்ரீவிஜயப் பேரரசிற்குரிய அரசர்களை உண்டாக்குபவர்கள் (King-Makers) என்ற செல்வாக்கு இச் சோழர்களுக்கு ஏற்பட்டது. வீரராஜேந்திரன் அனுப்பிய படைகளின் தலைவர்களில் ஒருவனாக 1070-ல் குலோத்துங்கன் I என்ற பெயரில் சோழ மன்னனாக வந்த சாளுக்கிய—சோழ இளங்கோவான ராஜேந்திரன் II காணப்பட்டான் என்றும். அவனும் கடாரம் சென்றான் என்றும் வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. இளங்கோப் பருவத்தை இக் கீழைநாடுகளுக்குள் ஏற்பட்ட அரசியல் தகராறுகளைத் தீர்க்கின்ற இராணுவ தீரனாக (political adventurer) இப் பகுதியில் கழித்த குலோத்துங்கன், தீரம் மிக்க ஓர் அரசியல் நிபுணன் என்ற செல்வாக்கோடு சோழ நாட்டுக்குத் திரும்பி வந்தான்; வீரராஜேந்திரனின் மகன் அதிராஜேந்திரனை அரசியல் கொலைக்கு ஆளாக்கி, சோழ அரச பதவியைப் பெற்றான். இது பின்னுளைய வரலாற்றுச் செய்தியாகும்.

**6. பொருளாதாரத் தொடர்புகள் :** சோழருக்கும் சீனருக்கும் ஏற்பட்ட கடல்வாணிகத் தொடர்புகள் கி.பி. 1000-லிருந்து வலுப்பெறத் தொடங்கின. இத்தகைய கடல் வாணிகத்தின் முதிர்ச்சி நிலையைக் குறிக்கின்ற முறையில்தான் சோழ நாட்டினரின் மூன்று வணிகக் குழுக்கள் சீனநாடு சென்றன. ராஜ ராஜனுடைய வணிகக்குழு 1016-லும், ராஜேந்திரன் அனுப்பிய குழுவினர் 1033-லும், குலோத்துங்கன் அனுப்பி வைத்த குழு 1077-லும் கீழைநாடுகளைத் தொட்டுக்கொண்டு சீனம் சென்றடைந்தன. இதன் பின்பு கீழைநாடுகளுக்கும் சோழ நாட்

டுக்கும் ஏற்கெனவே ஏற்பட்டிருந்த பொருளாதாரத் தொடர்புகள் புதிய தெம்புடன் சோழ நாட்டின் பொருளாதார ஆக்கமாகவும், கீழைநாடுகளின் கலாசார வளர்ச்சியாகவும் பரிணமம் கொண்டன. ஏற்கெனவே சீனருக்கும் சோழருக்கும் ஏற்பட்ட கடல் வாணிக சாத்தியக் கூறுகளை ஊறுபடுத்துகின்ற அளவில் ராஜீய முறையிலான தடங்கல்களை ஸ்ரீவிஜயப் பேரரசினர் ஏற்படுத்த முனைந்தபோது அவர்களைத் தண்டிக்கின்ற முறையில் தான் 1025-ல் ராஜேந்திரன் I சோழர் கடற்படையை அனுப்பி வைத்து, அப் பேரரசை அடக்கினன். சயாமிலுள்ள லோபோ டோவா (கி. பி. 1088) என்னுமிடத்தில் சோழ நாட்டு வணிகக் குழு தங்கியிருந்ததுபற்றி அவ்விடத்துக் கல்வெட்டு கூறுகிறது.

7. **சமூக கலாசாரத் தொடர்புகள்:** 1066-ல் ஸ்ரீவிஜயப் பேரரசன் மாற விஜயோத்துங்க வர்மன் தனது தூதர்களை அனுப்பிக் கேட்டுக்கொண்டதற்கு இணங்க, சோழ நாட்டுக் கடல் வாணிபத் துறைமுகப்பட்டினமான நாகப்பட்டினத்தில் பௌத்தக் கோவில் கட்டுவதற்கு ராஜராஜ சோழன் அனுமதி வழங்கினன். ஆனைமங்கலம் என்ற ஊரைச் சுற்றியுள்ள 27 கிராமங்களை முற்றூட்டாகவும் அச் சோழன் அளித்தான். 1068-ல் வீரராஜேந்திரன் கடாரத்திற்கு அனுப்பிய சோழப் படையினருள் ஒருவனுகச் சென்ற குலோத்துங்கன் காம்போஜ நாட்டு மன்னனைச் சந்தித்தபோது, விலையுயர்ந்த கல் ஒன்றைக் காம்போஜ நாட்டு மன்னன் அக் குலோத்துங்கனுக்கு அளித்தான். அதைத் தில்லைச் சிதம்பரம் கோவிலுக்கு எதிர்ப்புறம் இருந்த மண்டபத்துச் சுவரில் குலோத்துங்கன் பதித்து வைத்தான் எனச் சிதம்பரம் கல்வெட்டு கூறுகிறது. அதனைச் சோழ நாட்டுக்கும் கீழைநாடுகளுக்கும் ஏற்பட்டிருந்த கலாசார நல்லிணக்கச் சின்னமாகக் குலோத்துங்கன் போற்றினன். இதே குலோத்துங்கன் ரமன்னதேசம் என்று வழங்கப் பெற்ற பர்மா நாட்டினுடைய மன்னனுன கியான் சித்தா (1084—1112) என்பவனோடு தொடர்பு கொண்டிருந்ததாகப் பர்மிய வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன.

8. **கீழைநாடுகளின் வரலாற்றில் அரசுரிமை:** காம்போடியப் (காம்போஜம்) பகுதிக்கு வடக்கே பூனன் (மலைநாடு) என்ற அரசு இரண்டாம் நூற்றுண்டில் கௌண்டின்யனுல் ஏற்படுத்தப் பட்டபோது அரசர்கள் இந்துக்களாகவும், அவர்களுடைய அமைச்சகத்தார் அந்தணராகவும் இருந்தார்கள். மலைமன்னர்கள் (Kings of Mountain) என்று தங்களை அழைத்துக்கொண்ட இம் மன்னர்கள் இறைமைத் தன்மையைத் தங்களுக்குரியதாக்கிக்

கொண்டார்கள். நான்காம் நூற்றுண்டின் கடைசியில் இதே பூனுனில் மற்றெரு கௌண்டின்யன் வந்து திரும்பவும் ஓர் இந்து அரசைத் தொடங்கி, அதன் அரசர்களை இறைமையாளர் களாக ஆக்கினுன். சைவம் நிலைபெற்ற நிலையில் மன்னர்களின் அரசியல் அந்தஸ்து நிலை நிறுத்தப்பட்டது. பின்பு ஐந்தாம் நூற்றுண்டில் ஏற்கெனவே வளர்ந்து வந்த புத்தமதம் நிறுவப் பட்டுக் காணப்பட்டது. இந்தப் பூனுன் நாட்டுக்கு வடக்கே உள்ள கீமர் இனத்தார் சுமார் கி. பி. 539-ல் வெற்றி பெற்று, கி. பி. 802வரை ஆண்டபோது மன்னர்கள் வமிசங்களைப்பற்றிய பூனுன் நாட்டுக் கோட்பாடுகளை அப்படியே வைத்துக்கொண் டார்கள்.[11] அரேபியத்தடயங்கள் (sources) சொல்வது போல எட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் கீமர் பேரரசு மலாக்கா நீர்ச் சந்திப்புக்குத் தெற்கே உள்ள சைலேந்திரப் பேரரசுக்கு அடிமைப் பட்டது. சைலேந்திரரும் மலைமன்னர் என்று தங்களை அழைத்துக்கொள்வதால், புத்தமதத்தினரானுலும் இவர்களும் இறைமைவழி அரசுரிமையையே கைக்கொண்டார்கள். கி.பி. 10ஆம் நூற்றுண்டில் இச் சைலேந்திரர் ஸ்ரீவிஜயநாட்டாரோடு செய்துகொண்ட மணவினையின் காரணமாக இரு நாட்டாரும் ஒரே நாட்டுடையார் ஆயினர் (BH—29). இப்போது ஏற்பட்ட பேரரசுத் தத்துவத்தின்படி சைலேந்திர மன்னர்கள் வல்லரசுக்குரி யவர்களின் பெருமிதங்கொண்டு ஆட்சி புரியத் தொடங்கினுர்கள். ஆனுல், இவர்களுக்கு வடக்கே எதிர்ப்பும் ஏற்பட்டது. கம்போ டியாவில் ஜெயவர்மன் II என்ற மன்னன் கீமர் நாட்டைச் சைலேந் திரரிடமிருந்து விடுதலை செய்து, தன்னுடைய கங்கர் பேரரசைக் கட்டத் தொடங்கினுன். ஒன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் தோன்றிப் பன்னிரண்டாம் நூற்றுண்டின் முடிவு வரை தீபகற்ப அகண்ட இந்தியாவை ஆண்ட இப் பேரரசன் காலத்தில் மன்னர்களை வழிபாடு செய்கின்ற முறை தீவிரமடைந்தது. பத்தாம் நூற்றுண்டின் கடைசியில் ராஜராஜன் I ஏற்படுத்தத் தொடங்கிய சோழ மன்னரிடையில் காணப்பட்ட இறைமைத் தன்மையில் மதச் சார்பின்மை (secularism) கணிசமாகக் காணப் பட்டது. ஆனுல் கிழக்காசியப் பகுதியில் 'மலைமன்னர்கள்' நடமாடுந்தெய்வங்களாக்கப்பட்டார்கள். எகிப்திய பரோக்கள், உரோமானியப் பேரரசர்கள் தங்களைக் கடவுளராகக் கருதியதைப் போல இவர்களும் (கிறிஸ்து சகாப்தம் முடிந்து ஆயிரம் ஆண்டு களுக்குப் பின்புகூட) தங்களுடைய மன்னர் உரிமைப் பாங்கில் முழுமையான தெய்வத் தன்மையை ஏற்றி அதனை அரசியலுக் குரிய நெறியாக வகைப்படுத்தினுர்கள். மதச் சார்புடைய மேம்

[11] Brian Harrison—op. cit., p. 22

பாடுகளைக் கொண்ட மன்னன் மக்களுக்குரிய அரசியல் தலைவனாகவும் விளங்கிய நிலையில் கோவிலில் அமரத்துவம் பெற்றபோது விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையேயுள்ள நல்லிணக்கத் தொடர்பாக விளங்கியது அவர்களுடைய மன்னருரிமை மக்களால் விமரிசிக்கப்பட முடியாதபடி புனிதத்துவம் பெற்றது. சோழர்கள் கண்ட மன்னருரிமையில் இறைமையுரிமையின் புனிதத்துவம் தீவிரமாக்கப்படவில்லை.

**9. கலாசாரப் பரிவர்த்தனையில் சோழர்கள் :** மிக எளிதாகவும், சீக்கிரமாகவும் இந்தியக் கலாசாரம், குறிப்பாகக் கம்போடியா, வியட்நாம் நாடுகளிலும் தென்கிழக்காசியாவின் எல்லாப் பகுதிகளிலும் பரவியதன் காரணத்தைக் கோடே கூறுகிறார். அவருடைய கருத்துப்படி இந்தியக் கலாசாரம் இந்தியாவுக்கு ஆரியர் வருவதற்கு முன்பு இருந்த கூறுபாடுகளைக் கொண்டிருந்தது. அதாவது அக் கலாசாரம் திராவிடர்க்குரியதாக இருந்தது. மேலும், பருவக் காற்று மண்டலக்கரை சேர்ந்த (monsoon area) ஆசியப் பகுதிகளுக்கு உகந்த கலாசாரப் பகுதிகளை அது பெற்றிருந்தது. இதன் காரணமாகத்தான் இந்தியக் கலாசாரத்தைத் தங்களுக்கு உகந்ததாக ஏற்றுக் கொண்டன.[12] இவ்வாறு பரவிய கலாசாரத்தில் சோழர்களுக்குரிய பங்கு என்ன ? பல்லவர்க்குப் பின்பு சென்றவர்கள் சோழர்கள் ஆவார்கள். ஆகவே, பல்லவர்கள் கீழைதேசங்களில் பரப்பிய தமிழ் நாகரிகத்தைச் சோழர்களும் தங்களுடைய தொடர்களால் உருவகம் செய்தார்கள் ; அதனை முழுமைப் படுத்தினார்கள். சோழரின் உறவுகளால் உண்டான கலாசாரப் பரிவர்த்தனையில் சோழர்க்கு உள்ள பங்கினை வகைப்படுத்திப் பார்ப்போம்.

**10. அரசியல்—கீழைநாடுகள்-சோழர்களுக்கிடையே கருத்து பரிமாற்றம் :** சோழர்கள் தங்களுடைய அரசியலைத் தங்களின் இறைமைக்குரியதாக மாற்ற முனைந்தார்கள். மதுராந்தகன் என்ற இயற்பெயர் கொண்ட சோழ இளவரசன் ராஜஇந்திரன் என்றளவில் ராஜேந்திரன் என்ற பட்டத்தோடு ராஜேந்திரன் I (கி.பி. 1014—1044) ஆனான். கீழைநாடுகளிலுள்ள மன்னர்கள்—குறிப்பாகக் கம்போடியாவிலுள்ளவர்கள்—‘வர்மன்’ என்ற பெயரினைக் கொண்டார்கள்; முதலில் மேருலிங்கம் என்ற கோவிலைக் கட்டினார்கள். பின்பு அதுவே இறந்துபட்ட மன்னர்களுக்குச் சமாதிக் கோவிலாயிற்று. பள்ளிப் படை கட்டிய சோழர்கள் போலக் கம்போடிய மன்னர்கள்

12 Coedes—op. cit., p. 52, 55

தங்களுக்கான சமாதிக் கோவிலைக் கட்டித் தங்களுக்குரிய பெயரைக் கோவிலின் மூலவரை அழைத்தார்கள், அங்கோர்வாட் பேரரசு நிலவிய கம்போடியாவிலிருந்த யசோவர்மன் II என்ற அந்தணர்குல மன்னன் 'ராஜேந்திர வர்மன்' என்ற பெயரினைத் தனக்குச் சூட்டிக்கொண்டு ராஜேந்திரேஸ்வரம் என்ற பள்ளிப் படைக் கோவிலையும் கி.பி. 952-ல் கட்டினான். இக் கோவிலில் அவனுடைய சிலையோடு அவனுடைய பெற்றோரின் சிலைகளும் நிறுவப்பட்டு வழிபடப்பட்டன,

மன்னர்களுக்குரிய பள்ளிப்படை கோவில்கள் கட்டுகின்ற பணி சோழர்களுக்கு இருந்ததற்கு முதல் சான்றாக ஆதித்த சோழனுக்குப் பராந்தகன் I கட்டிய பள்ளிப்படை சமாதிக் கோவிலைக் கூறலாம். கீழைநாடுகளில் பெருமளவிற்கு வழக்கிலிருந்த சமாதிக் கோவில் முறை சோழ நாட்டிலும் அரசியல் உணர்வோடு எதிரொலித்ததைக் காட்டுகிறது எனலாம். இந் நிலையில் மன்னருரிமைக் கோட்பாட்டில் இறைத்தன்மையைக் கலக்கின்ற பெரும்பணியில் சோழர்களைவிடக் கீழைநாட்டு மன்னர்கள் விஞ்சி நின்றார்கள். யுவராஜா முறையைச் சோழ அரசர்கள் கைக்கொண்டிருந்தது போல வடவியட்நாம் பகுதியில் கி.பி. 1258-ல் அத்தகைய முறையில் வழக்கில் இருந்ததாக அறிஞர் கோடே குறிக்கிறார்.[13] கீமர் (கம்போடியா), சம்பா (வியட்நாம்) நாடுகளிலிருந்த மன்னர்கள் சட்டம் உண்டாக்கும் அதிகாரம் (Legislative Power) கொண்டார்கள் அல்லர். இதில் அவர்கள் சோழ அரசர்களுக்கு ஒப்பானவரே; ஒரு மன்னன் இட்ட சட்டத்தை அவனுக்குப்பின் வந்த மன்னன் தனியானதொரு முறையில் அங்கீகரிக்க வேண்டும் என்ற வழக்கமும் கீழைநாடுகளில் இருந்தது.[14] சோழர்களிலும் இவ்வாறு நடந்துகொண்ட அரசர்கள் உண்டு. சான்றாக, ராஜராஜன் I காலத்தில் நாகப்பட்டின புத்தப் பள்ளிக்கு அளிக்கப்பட்ட ஆனைமங்கல கிராமங்கள் நன்கொடையை அவனுடைய மகன் ராஜேந்திரன் I தன் ஆட்சிக் காலத்திலும் அங்கீகாரம் செய்து அதனை நிலைப்படுத்தினான். அரசகுலத்தாருக்கு அரசாங்க உயர் பதவிகள் கொடுப்பதிலும் கீழைநாடுகளுக்கும் சோழ நாட்டுக்கும் ஒற்றுமை காணப்பட்டது. அந்தணரின் துணை கொண்டு அரசாங்கத்தின் துணைநலத்தை உருவாக்க முயற்சி செய்த சோழர்களைப் போல அந்தணரின் பெருந்துணையாலேயே கீழைநாடுகளில் தீபகற்ப நாடுகளில் அரசியலதிகாரம் நிலை நாட்டப்பட்டது. சோழ நாட்டிலிருந்து 'பிரம்மாதிராஜா'க்கள்

13 Coedes—op. cit., p. 123

14 Ibid—p. 224

போன்ற அந்தணர்களைப் போலக் கீழைநாட்டில் அவ்வந்தணர்கள் பெரு மரியாதையோடு நடத்தப்படவில்லை. சோழ மன்னனுக்கு மேலான மரியாதையைக் குலப்பிறப்பினுல் பெற்றிருந்த அந்தணரைப் போலல்லாமல் கம்போடியா, வியட்நாம் நாடுகளிலிருந்த அந்தணர்கள் அந் நாடுகளின் அரசர்களுக்குக் கீழ்மைப் பட்டவர்கள். ஏனென்றால், 'அரசர்கள் அகில உலகத்திற்கும் குரு' என்ருகிய பின்பு எல்லா உலகத்தையும் தன்னுள் அடக்கிய நிலையில்—அவ்வுலகத்திலுள்ள அந்தணரும் சமூக அந்தஸ்தில் கூட அரசருக்குக் கீழ்மைப்பட்டவரே' — இந்தக் கருத்து நிலவியது.[15]

**11. பொருளாதாரத்தில் கீழைநாட்டார் — சோழர் உறவுப் பரிமாற்றம் :** வணிகத்திற்காகத்தான் சோழர்கள் கீழைநாடு சென்ருர்கள். குறிப்பாக, சீனஞ்செல்லுகின்ற வழியில் கீழைநாடுகளோடு அவர்கள் வாணிகஞ்செய்தவர்கள் எனக் கூறலாம். பத்தாம் நூற்ருண்டில் பெரு வளர்ச்சி பெற்ற ஸ்ரீவிஜயத்தார் தங்களுடைய படை பலத்தையும் கடற்படையையும் வளர்த்துக் கொண்டார்கள். பினங்கில் சரக்குகளை இறக்கிப் பின்பு கிழக்கேயுள்ள சயாம் குடாக்கடல் வரை நில மார்க்கமாகச் சரக்குகளை எடுத்துச் சென்று, அதன் பின்பு அச் சரக்கினைக் கப்பலில் ஏற்றிச் சீனத்திற்கும் கிழக்குக் கரை நாடுகளுக்கும் கொண்டு செல்கின்ற வணிக முறை வளர்ந்ததை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை; ஆகவே, அந் நிலப் பகுதியைக் கைப்பற்றினுர்கள். இதே போலத்தான் செங்கடல் வரைக்கும் கொண்டு போகப்பட்ட கிழக்கத்திய நாடுகளின் சரக்குகளைச் சூயஸ் கால்வாய் 1869-ல் வெட்டப்படுவதற்கு முன்பு அரேபியர்கள் மத்தியதரைக் கடல் பகுதிக்கு எடுத்துச் சென்ருர்கள். இந்த வகையில்தான் அவர்களின் கப்பல் விடுந்திறன் வளர்ச்சி பெற்றது. ஸ்ரீவிஜயத்தாரின் வடக்குப் பகுதியை அங்கர் பேரரசு கைப்பற்றிக்கொண்ட பின்பு சோழர்களின் எதிர்ப்பும் அவர்களுக்கு ஏற்பட்டது. சோழர்கள் கடற்படை கொண்டு அவர்களை எதிர்த்தார்கள். தங்கள் வாணிகத்தை அவ்வாறுதான் அவர்கள் வலிமைப்படுத்திஞர்கள். இந்த நிலையில் சோழர்களும், ஸ்ரீவிஜயத்தாரும் நேரடியாக மோதிக் கொண்டனர். இதற்குக் காரணம் வணிக சம்பந்தமானப் பொருளாதார வேட்கைதானென்பது வரலாற்றுச் செய்தியாகும். நாட்டின் பொருளாதார ஆக்கத்தை எல்லா மக்களும் சமமாகப் பங்கிட்டு அனுபவிக்கின்ற முறையில் பங்கீடு முறை கீழைநாடுகளில் அமைந்திருக்கவில்லை. சோழ நாட்டின் பொருளாதார

15 Ibid—p. 221

நிறுவனங்களான வேளாண்மை, வாணிபம் அங்கு வளர்ச்சி யுற்றன. வேளாண்மையில் சிறந்த நிலக்கிழார்களின் தலைவர் களாக அந் நாடுகளின் மன்னர்கள் விளங்கினார்கள். மக்கள் தென்னை ஓலை வீடுகளிலும் மன்னர்கள் பல அடுக்கு மாளிகை களிலும் வாழ்ந்தார்கள்.[16] சோழர்கள் ஆண்டபோது மன்னர்கள் பொன் மாளிகையில் 'வாழ்ந்தார்கள். பொன்மாளிகையில் துஞ்சிய தேவர்' என்று பராந்தகன் II சோழனை அழைப்பர். ஆதனூர்ப் புலைச்சேரி பற்றிய வர்ணனையில் சேக்கிழார் சுரைக்கொடி மற்றும் அதன் தழைகளால் வேயப்பட்ட குடிசைகளில் வாழ்ந்த மக்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். ஸ்ரீவிஜயத்தின் மன்னர்கள் தினந்தோறும் தங்கத்தாலாகிய கட்டி ஒன்றை நீர்நிறை வாவியினுள் சடங்காசார மாக எறிந்தார்கள். சோழர்கள் சிதம்பரம், ஸ்ரீரங்கம் போன்ற கோவில்களுக்குப் பொன் வேய்ந்தார்கள். ஆகவே, மிதமிஞ்சு கின்ற பொருளாதார ஆக்கத்தை இரு புலத்து மன்னர்களும் சமயச் சார்பான வேட்கையைத் தீர்த்துக்கொள்ளப் பயன்படுத்தினார்கள் என்பது தெளிவு. கம்போடியாவைப் பொறுத்தளவில் அந் நாட்டின் வணிக முயற்சிகளைப்பற்றிய குறிப்புகள் கிடைப்பதற் கில்லை. ஆனாலும் இந்திய, சீன துணிகளைப்பற்றிய குறிப்புகள் அகழ்வாராய்ச்சியில் காணப்பட்ட மட்பாண்டங்கள் போன்றவை பிறநாட்டு வாணிகத் தொடர்பினை அறிவிக்கின்றன.[17]

**12. சமுதாயக் கோட்பாடுகளில் சோழரும், கீழைநாட்ட வரும் :** சோழ நாட்டில் வர்ணாசிரமத்தோடு சாதி முறையும் காணப்பட்டது. கீழைநாடுகளில் சாதிமுறை இல்லை. ஆனால், வர்ணாசிரம முறை அமுலிலிருந்தது. சாதி முறையை எதிர்த்த புத்தமதத்தின் செல்வாக்கு இதற்குக் காரணம் எனலாம். மக்களுக்கும் அவர்களின் மேலாண்மையாளருக்கும் மன ஈர்ப்பு முறையில் ஒட்டுறவு (emotional integration) ஏற்படுத்துகின்ற சாதிமுறை அங்கில்லாததால், சாமானிய மக்களிடமிருந்து மன்னர் களும் மற்றைய மேற்குடியினரும் ஒதுங்கியே நின்றார்கள். இவ்வாறு காணப்பட்ட சமுதாயச் சூழ்நிலையில் இந்தியக் கலாசாரம் மேற்குடியினருக்கு உரியதாகத்தான் விளங்கியது.[18] இதற்குக் காரணம் கீழைநாடுகளுடைய இன பேதங்கள்தான் எனச் சொல்லலாம். மலாயாவில் டாட்ரோ-மலாய் (Deutro-Malay) இனமும், வியட்நாம் பகுதிகளில் மலாயோ-பாலினேஷியன் (Malayo-Polyneslan) இனமும், தாய்லாந்து

[16] Ibid—p. 60

[17] Ibid—p. 103

[18] Brian Harrison—op. cit., p. 18

கம்போடியாவில் ஆஸ்த்ரோ-ஆசிய (Austro-Asian) இனமும், பர்மாவின் தென்பகுதியில் மான் (Mon) இனமும், பர்மாவின் வடபகுதியில் திபெத்திய-பர்மிய (Tibeto-Burmian) இனமும் காணப்பெறுகின்றன. இவ்வினங்களை இந்து சமய முறையிலமைந்த அரசர், அவர்தம் துணையாளரான அந்தணர் போன்றவர்களைக் கொண்டு அடக்குகின்றபோது இப் பகுதிகளுக்கு உரிய மேழிச் செல்வத்தைப் பிரதிபலிப்பதாக அவர்கள் தங்களுடைய சமூக அந்தஸ்தை வகைப்படுத்திக்கொண்டார்கள்.[19] ஏனென்றல், மேழிச் செல்வத்திற்குரிய கடவுளராகத் தங்களுடைய தலைவர்களை எண்ணிப் பழக்கப்பட்ட மக்கள் அவர்களாவார்கள். அங்கர் பேரரசு மன்னர்கள் தங்கள் தலைநகர்களில் ஏரிகளை வெட்டியதைப் போலப் பல ஏரிகளை ஏற்படுத்திய சோழர்கள் தங்களை 'வளவன்' என்றழைத்துக்கொண்டதை நினைவிலிருத்த வேண்டும்.

அரசர்களின் மேலாக்கம் ஊறு ஏற்படாமலிருக்க அரசனோடு பிறந்த ஏனைய சகோதரர்களை அங்கயினர்களாகச் செய்வது இங்குள்ள பழக்கம். 'அரசுரிமைப் போட்டிக்கு வருகின்றவர்களை—அரச குமாரர்களை—தலைநகரத்திலிருந்து அப்புறப் படுத்தியோ, கண்காணிப்பிலோ வைத்துப் போட்டியாளராக அவர்கள் மாருமலிருக்கத் தக்க நடவடிக்கைகளைப் பதவியிலிருக்கும் மன்னன் கைக்கொள்ள வேண்டும்' என்ற அர்த்த சாஸ்திரத்தின் கோட்பாடு கீழைநாடுகளில் இவ்வாறு பரவி நின்றதை உய்த்துணரலாம்.

கீழைநாடுகளில் கிறிஸ்து சகாப்தத்தின் முதல் ஐந்து நூற்றுண்டுகளில் இந்து சமயத்தின் சிவ வழிபாடு வளர்ந்திருந்தது. ஐந்தாம், ஆறும் நூற்றுண்டுகளில் மகாயான புத்த மதமும் வேரூன்றியது. பின்பு இவை இரண்டும் இணை சேர்ந்து அரசனுக்குரிய துதிமதமாக (Royal Cult) உருக்கொண்டது. சைவம், மகேஸ்வர சைவம் எனவும், பௌத்தம், லோகேஸ்வர பௌத்தமெனவும் பெயர் கொண்டன. வெளி நாட்டுக்கு அனுப்பி வைக்கத் தகுந்த முறையில் பதப்படுத்தப்பட்ட இந்து சமயமே பௌத்தமாகும் என்ற கருத்தைச் சிலர் கூறுகிருர்கள்.[20] பர்மாவில் முதன் முதலில் பரவிய தேரவத பௌத்தம், மகாயானம், தந்திரமதம் (Tantrism), சிங்கள மதம் என்று பௌத்தம் பல வகையாகக் காணப்பட்டது; ஏனைய கீழைநாடுகளுக்கு 14ஆம் நூற்றுண்டு முடிவடைவதற்கு முன்பு பரவியது. சிங்களத்திலிருந்து பர்மா வந்தது சிங்களப் புத்தமதம். தனி நபர்த்துதியை அது கண்டித்தது. இதன்

19 Coedes—op. cit., p. 219

20 Brain Harrison—op. cit., p 18

பயனுகைக் கலை வளர்ச்சியில் ஒருவகை வறட்சியே (Sterility) ஏற்பட்டுவிட்டது எனலாம்.[21] ஆனால் மன்னர்களை 'நிகழ் கால வாழ்வுப் புத்தர்கள்' என்ற அந்தஸ்துக்கு அது உயர்த்தியே வைத்தது. கீழைநாடுகளின் சமூகச் சிந்தனையில் மன்னர்களின் இறைமைத் தன்மைதான் இது காட்டும். அதே சமயம் கி.பி. 1218-க்குப் பின்பு பிரபுக்கள், அந்தணர், வணிகர், ஆரூடர், மருத்துவர் போன்றவர்களடங்கிய மேற்குடியாளரின் வலிமை அகற்றப்பட்டது. சமூகத்தின் மதிப்பீடுகள் மறுபதிப்பு (Transvaluation of all Values) செய்யப்பட்டன எனக் கோடே கூறுகிறார்.[22]

இவ்வாறு 12ஆம் நூற்றாண்டில் தங்களுடைய பிடிப்பைப் பிரபுக்கள் இழக்கும்வரை சமயத்தின் துணைகொண்டு தங்கள் ஆதிக்கத்தை வழிவழியாகக் காத்து வந்தனர். சில மேற்குடி யாளர்கள், சான்றாக, அரசனுக்குரிய மத போதகரின் (Royal Chaplain) அரச குமாரர்களின் நேரடி ஆசிரியரின் (Tutor) பதவிகள் 'மருமக்கள் தாயம்' போன்று வாரிசுரிமையைப் பெற்றிருந்தன.[23] அந்தணரை நிலவுடைமையாளராக ஆக்கி யதில் வாரிசுரிமை முறையைச் சோழர்கள் ஒப்புக்கொண்டார்கள் என்பதும், மதபோதகர் போன்ற அறிவார்ந்த அருந்தவரின் பதவிகளுக்கு வாரிசு முறையை அவர்கள் கைக்கொள்ளவில்லை என்பதும் சிறப்புச் செய்திகளாகும்.

போரில் சிறைப்பட்டவர்களை அடிமை ஆக்குகின்ற முறையில் சோழர்களைப் பின்பற்றிய கீழைநாட்டார் இறந்தாரை அடக்கஞ் செய்வதில் இடுகாடு, சுடுகாடு, நீர்த்தடாகம் ஆகியவற்றைத் திராவிட நாகரிகத்தினர்கள் என்றளவில் பின்பற்றினர்கள். சோழர்கள் பெருமளவிற்குக் கைக்கொண்டிருந்த சமஸ்கிருத மொழியைக் கீழைநாட்டாரும் பயன்படுத்தினர். இந்தியக் கலாசாரத்திற்கு அடிப்படையாக அமைந்த இந்த சமஸ்கிருத மொழியில் அவர்கள் கொண்ட நாட்டந்தான் எனச் சொல்லலாம். சமஸ்கிருத மொழியைத் தமிழகத்தில் பல்லவரும் சோழரும் கையாண்ட கிரந்த வரி வடிவத்தில் கீழைநாட்டார் தங்களுடைய கல்வெட்டுகளை அமைத்தார்கள்.[24] புதிதாகப் படைக்கின்ற ஆற்றலற்று விளங்கிய இம் மக்கள் இந்தியக் கலாசாரத்தை

21 Coedes—op. cit., p. 132
22 Ibid—p. 133
23 Coedes—op. cit., p. 106
24 Ibid—p. 52

அப்படியே (en bloc) ஏற்றுக்கொண்டார்கள்;[25] சீன தேசத்தாருடைய சட்டமுறையையும் வேளாண்முறையையும் ஏற்றுக்கொண்டார்கள். இந்திய சீன கலாசாரங்களின் மோதுதல்களைச் சமாளிக்கின்ற ஆற்றலோடு இவர்களுடைய நாகரிகம் விளங்கியது என்றளவில் இவர்களுடைய நாடு (தீபகற்பத்தில்) இந்தோசைனு (Indochina) என்றே வழங்கப்பெற்றது நினைவில் இருத்தப்பட வேண்டும். அயோத்தி, மதுரை என்றளவில் இந்தியர்களால் வெளியிடப்பட்ட ஊர்களைக் கொண்ட கீழை நாடுகளில் குறிப்பாகப் பர்மாவில்[26] கோவில்களைக் கட்டுவதில் தங்கம், வெண்கலம் பயன்படுத்தப்பட்டன. குப்தர் காலத்திய சிற்ப அமைதியில் உள்ள புத்தர் சிலைகள் (நின்றசீர்ப் பொலிவுள்ளவை) சம்பாவில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.[27] கி.பி. 5ஆம் நூற்றுண்டிலேயே சம்பா என்ற வியட்நாமில் படையெடுத்து வந்த சீனர்கள் அங்குள்ள கோவில்களின் தங்கத்தால் செய்யப்பட்ட சிலைகளை உருக்கியதில் 100,000 இராத்தல் தங்கம் பெற்றுர்கள்.[28] சோழர்களின் தஞ்சைப் பெரிய கோவில், கங்கைகொண்ட சோழேச்சுவரம் போன்ற பிரம்மாண்டமான (artistic massiveness) கோவில்களைக் கீழைநாட்டார் திராவிடக் கொள்கையில் அமைத்தபோது அங்கர்வாட் (சூரியவர்மன் II மன்னனுல் பன்னிரண்டாம் நூற்றுண்டின் முற்பகுதியில் நிர்மாணிக்கப்பட்டது). பெங்மீலியா (Beng-mealea) போன்றவை மனித நாகரிகத்தின் கலாசாரச் சொத்தாகச் சிற்ப வேலைப்பாடுகளோடு அமைந்தன. சோழர்கள் கோபுரங்களில் படிப்படியாக (Tiers) அமைத்த சிற்பங்கள் கீழே செதுக்கப்பட்டு மேலேற்றி வைக்கப்பட்டன ; அங்கர்வாட் போன்றவற்றில் ஒவ்வொரு தட்டும் கட்டிமுடித்த பின்பு சிற்ப வேலைபாடுகளை அலங்கார முறையில் (decorative style) மிகுந்த கலையுணர்வோடும் அச்சமில்லாத கலைப்பயிற்சியோடும் செதுக்கினுர்கள்.[29]

கீழைநாடுகளில் இந்தியக் கலாசாரம் சோழர்களின் காலத்தில் முதிர்ச்சி அடைந்தது. கீழைநாடுகளின் கலாசாரம் என்று தனிப்பட்ட வடிவாக்கம் ஏதும் ஏற்கெனவே இருந்ததில்லை

25 Ibid · p. 230

26 R. C. Majumdar— 'The Classical Age' (Bharatya Vidhya Bahaun) — 1954 — p. 643

27 K. A. N. Sastri—'Histroy of Srivijaya' Madras—1949, p. 2[illegible]

28 R. C. Majumdar — op. cit., p. 675

29 Coedes –op. cit., p. 105

என்றும், இந்தியக் கலாசாரம் அங்குச் சென்று அமர்ந்தது என்றும், அதனுல் ஏற்பட்ட கலப்பின் காரணமாக இந்தியக் கலாசார மரத்தின் கொம்பு கீழைநாட்டுக்குரிய கலாசார மரத்தின் கொம்போடு பிணைந்து, அதன் பின்பு ஒட்டுக்கன்ருக உருவாகியது தான் ' அகண்ட இந்தியா ' என்ற கலாசாரம் என்றும், குவாரிட்ஸ் வேல்ஸ் போன்ற அறிஞர்கள் கூறுகிருர்கள்.[30] இந்தியக் கலாசாரம் மேல்கோப்பாக வந்தது என்பதை மறுத்து அகண்ட இந்தியா என்பது இந்தியாவில் நேரடியான விரிவாக்கந்தான் என வாலி போசன் (Vallee Powssion), கோடே (Coedes) போன்ற அறிஞர்கள் வாதிடுகின்ருர்கள். இந்தியாவின் வடபுலத்தில் நிலைகொண்டுவிட்ட ஆரியரின் கலாசாரம் அந்தணர் மயமாக்குகின்ற (Brahmanisation) இயக்கத்தை வங்கத்திலும் இந்தியாவின் தெற்கே உள்ள திராவிட நாடுகளிலும் எப்படி பரப்பியதோ அதே போலத்தான் கீழைநாடுகளுக்கும் பரவுமாறு செய்தது என்று கோடே கூறுகிருர்.[31]

தென்னிந்தியாவிலிருந்த வேறுபாடுகளினூடே பரவிய அந்தணர் மயமாதல் என்ற இந்து சமய நாகரிகம் கீழை நாடுகளிலும் பரவியபோது இந்து சமய மேல்கோப்பு (Indian Superstructure) ஏற்பட்டது. தென்னிந்தியாவில் காணப்பட்டதைவிடக் கீழைநாடுகளில் கலாசார வேறுபாடுகள் (a greater variety of cultures) மலிந்து இருந்தன என்று சொல்லலாமல்லவா என சோடே வினவுகிருர்.[32] இந்தக் கருத்தின்படி கீழைநாடுகளும் சோழர்கள் ஆண்ட தமிழ்நாடும் வடபுலத்து நாகரிகத்தைப் பெறுபவர்கள் (Receiving Ends) ஒன்ருகிவிடுகின்றன. அத்தகைய வடபுலத்து நாகரிகத்தின் பரவுமுறைச் செல்வாக்கில் இந்தியாவின் ஒரு பகுதியான தமிழகத்தில் சோழர்களின் தலைமையில் நிகழ்ந்த கலாசார மாற்றங்களின் பாதிப்பின் வேகம் கடல் கடந்து கீழைநாடுகளுக்குச் சோழர்களின் வாயிலாகச் சென்றடைந்தது எனலாம். ஈழத்தையும், மாலத்தீவையும், கிருஷ்ண நதிக்கரை நாட்டையும் தன்னடிப்படுத்த முயற்சி செய்து வெற்றியும் பெற்ற வல்லாட்சியாளச் சோழர்கள் கீழைநாடுகளில் காலனி நாடுகளை அமைக்க வில்லை; ஸ்ரீவிஜய நாட்டை வென்ற கடாரம் கொண்ட சோழனுன ராஜேந்திரன் I அங்கு நேரிற்சென்று போராடி, திண்டிங் (Dinding) கடற்கரைப் பகுதியிலிருந்த கங்கா நகரம், கோகார் ஆற்றின் கிளைநதியின் ஒரு பக்கமிருந்த

30 H. G. Quaritch Wales—' The Making of Greater India'—1951

31 Coedes — op. cit., p. 55

32 Ibid — p. 55

கோட்டை, தற்போது சிங்கப்பூர் அமைந்திருக்கும் நிலப்பகுதி யான தெமாஸெக் (Temasek) போன்றவற்றை வென்றடிப்படுத் தினன் என செஜாரா மலேயூ (Sejarah Malayu) என்ற மலேயா நாட்டு வரலாற்று நூல் கூறுகிறது.[33] சோழர்களுடைய வணிக உரிமையையும் அரசியல் மேலாண்மையையும் ஒப்புக்கொண்ட ஸ்ரீவிஜயத்தாரின் பௌத்த சமயத்தைச் சோழர்கள் நீக்கிவிட வில்லை.[34] தங்களுடைய சைவத்தை ஈழத்தில் செய்தது போல அரசியல் ஆதாயத்திற்காகக்கூட அங்கு நிலைநாட்டவில்லை எனலாம்.

கீழைநாடுகளுக்கெனத் தனிப்பட்ட முறையில் கலாசாரம் ஏதுமில்லை என்று சொன்னாலுங்கூட, அந் நாடுகளின் மக்கள் தங்களுடைய ஆதிகலாசாரத்தின் பிடிப்பை எப்போதுமே விட்டு விடவில்லை. கி பி முதல் நூற்றுண்டு தொடங்கி 12ஆம் நூற்றுண்டு வரை சைவமும் பௌத்தமும் பரவி நின்றதன் காரணமாக இன்றுங்கூட திருவாதிரைக்களி, திருப்பாவைப்பாடல் போன்ற தமிழ்மறைச் சைவநிலை காணப்படுகிறது; மாணிக்கவாசகரின் பாடல்கள் எங்கும் இசைக்கப்படுகின்றன. அரசர்களின் முடி சூட்டு விழாவின்போது அதிகமாக இப் பாடல்கள் பயன்படு கின்றன இந்த நிலை சோழர் காலத்துக்குரிய கலாசாரச் செல் வாக்கு உரியது எனக் கொள்ளல் வேண்டும். 12ஆம் நூற்றுண்டி லிருந்து கீழைநாடுகளில் பரவத் தொடங்கிய சிங்கள பௌத்தத் தால்கூடச் சைவத்திருமறையின் கலாசாரப் பிடிமானங்களை விலக்க முடியவில்லை. இதற்குப் பின்பு வந்த குஜராத்தில் நிலைபெற்ற முஸ்லிம்களின் முயற்சியால் பரப்பப்பட்ட அரசியலதி காரம் நிலைபெற்றபின்புகூடத் தீபகற்பமல்லாத ஏனைய கீழைநாடு களில் முஸ்லிம் சமயத்தின் குர்ஆன் சட்டங்கள்கூட ஏற்கெனவே இருந்த பண்டைய சட்டமுறைகளை விலக்க முடியவில்லை.[35]

**13. திறனாய்வு :** சீனர்கள் கப்பல் விடுந்திறனை வளர்த் திருந்தால் மற்றவர்கள் யாரும் வணிகத்திற்காகக்கூடக் கீழைநாடு களுக்குச் சென்றிருக்க முடியாது; மேனாட்டாரும் அரேபியருங் கூடக் கீழ்த்திசை நாடுகளுக்குத் தங்கள் கடற்படையின் துணை கொண்டு அப் பகுதிகளில் அரசியற்செல்வாக்கை ஏற்படுத்தி யிருக்க முடியாது.[36] இதே விதமான சாதகமான நிலை ஏற்பட்டி

[33] Brian Harrison—op. cit., p. 30, 31

[34] Ibid—p. 31

[35] Toussaint—op. cit., p. 69

[36] Ibid — P. 79

ருந்த காரணத்தால்தான் சோழர்கள் கீழைநாடு செல்ல முடிந்தது. கி. பி. 907வரை பதவியிலிருந்த டாங் (Tang) வமிசம் ஐரோப்பியக் காஸ்பியன் கடலிலிருந்து காண்டன் வரை பேரரசையும், அப் பேரரசு தழுவிய நிலமார்க்கமான வாணிபத்தையும் கொண்டிருந்த நாள்களில் கடல் கடந்த வணிகத்தையும் பிறரிடம் விட்டு இருந்த தால் சோழர்க்கு நன்மையாக அமைந்தது. கப்பல் விடுந் திறனையும் வளர்த்து இந்தியப் பெருங்கடலுக்குள் சீனப்பேரரசு வந்திருந்தால் சோழர்கள் கடற்படை ஒரு பெரும் எதிரியைச் சந்தித்து இருக்க வேண்டியதிருக்கும். ஆனால் அவ்வாறு நிகழ வில்லை. கம்போடியா (காம்போஜம்), வியட்நாம் (சம்பா) போன்ற இடங்களிலும் இந்திய நாகரிகத்தின் தமிழ்ப் பதிப்பாக சைவக் கலாசாரம் சீன நாகரிகத்தை உள்ளடக்கி நிலை நின்றதன் பெருமை சோழர்களைச் சாரும். இந்து சமயத்தின் கலாசாரப் பிணைப்பாக மலேயா, இந்தோனேஷியா மக்களில் பெரும்பாலோர் இஸ்லாத்தியராக இருந்த போதிலும் இராமாயணம் போன்ற இதி காசங்களைக் கலைவுணர்வோடு இன்றுகூடத் தங்கள் நாடுகளின் கலாசார எழுச்சியாக எண்ணி நடத்துகின்ற அருமைப்பாடு சோழர்கள் நூற்றாண்டுகளாக இந் நாடுகளோடு கொண்டிருந்த கலாசாரத் தொடர்புகளின் பயனாகத்தான் ஏற்பட்டிருந்தது என்பது வரலாற்று உண்மையாகும்.

# 22. பூகோள இயல் அரசியலும் சோழப் பேரரசும்

## (Geopolitical Evaluation of Chola Empire)

இந்திய வரலாற்றை அதன் பூகோளத்தைக் கொண்டு கணிக்கின்றபோது தென்னிந்தியாவின் வரலாறு சோழர்களின் எழுச்சி காலத்தில் அமைந்த அரசியல் நிகழ்ச்சிகளுக்குப் புதிய விளக்கத்தைக் கொடுக்கும். இத்தகைய முறையில் இந்திய வரலாற்றை முழுமையான அளவில் எழுத வேண்டிய அவசியம்பற்றி 20 ஆண்டுகளுக்கு முன்பே வரலாற்றறிஞர் K. M. பணிக்கர் குறித்துச் சென்ருர்.[1] இந்திய வரலாற்றுக்குரிய அரசியல் கங்கை நதிப்புறத்துப் புலம், தக்காணம் (Deccan) தென்பகுதியில் தமிழகம் என்ற அளவில் மூன்று நிலைக்கோப்புகளாக (three tiers) காணப்படுகிறது.[2] வடபுலத்தாரும் தென்பகுதியில் பல்லவரும் சோழர்களும் ஆண்ட தமிழகத்தாரும் தக்காணத்தில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்தப் போராடினுர்கள். தக்காணத்தைக் கைப்பற்றுகின்ற முயற்சியில் இரண்டு சாராரும் தோல்வி கண்டனர். பல்லவர்களின் படைகள் தக்காணத்து மேலைச்சாளுக்கியரின் தலைநகரான வாதாபியை வென்றது. ஆனுலும், வாதாபி திரும்பவும் சாளுக்கிய மன்னன் புலிகேசியினுடையதாகிவிட்டது. ஹர்ஷன் புலிகேசியுடன் போராடிப் பெற்ற தோல்வி செறிந்த முதல் அனுபவத்திற்குப் பின்பு நர்மதையைக் கடந்து தெற்கு நோக்கிப் பின்பு வரவே இல்லை.[3] விஜயாலயச் சோழர்கள் பெண்ணையாறு (பல்லவர் பகுதி), காவிரி (சோழர் பகுதி), வைகை, தாமிரபருணி (பாண்டியர் பகுதி) போன்ற ஆறுகளை இணைத்து வேளாண்மைத் தொழிலில் வந்த மேழிச்செல்வத்தால் ஒரு பேரரசினைக் கட்டினுர்கள்; வேளாண்மையோடு தொழிலும் வளர்ச்சிபெற்ற நிலையில் சோழப் பேரரசு தென்னிந்தியத் தீபகற்பத்தின் கடல்பகுதி நாகரித்தின்படி, கடல் கடந்த வணிகத்தையும் கைக்கொண்டார்கள். தக்காணத்து

1 K. M. Panikkar—'Geographical Factors in Indian History'—1955 —p. 19

2 Ibid—p. 31

3 A. L. Basham —'The Wonder that was India'—1963—p. 69

நதிகளான துங்கபத்திரை போன்றவை நீர்மிகக் கொண்டிருந்தாலும், பீடபூமியில் ஓடிய காரணத்தால் விரிவாகப் பிரிந்து வண்டலும் நீரும் வழங்காததால், தக்காணப் பீடபூமியின் வேளாண்மை அவ்வளவாகச் சிறக்கவில்லை. ஆனால், கடின உழைப்பு மக்கள் அங்கே வாழ்ந்தார்கள். கடல் கடந்து செல்கின்ற எண்ணம் அவர்களுக்கு அவ்வளவாக ஏற்பட வேண்டுமானால் கிழக்குக் கடற்கரையிலுள்ள வங்கக் கடலுக்குச் செல்கின்ற இயல்பை ராஷ்டிரகூடரும் கல்யாணிச் சாளுக்கியரும் பெற்றிருந்தார்கள். அவர்களைக் கடல் பக்கம் வரவொட்டாமல் தடுக்கின்ற பெருமுயற்சியில் சோழர்கள் ஈடுபட்டார்கள். மேலைச் சாளுக்கியர்கள் அரபிக்கடலில் ஏற்கெனவே கடற்படை கொண்டிருந்தார்கள். அதோடுகூடக் கோதாவரிக்கும் கிருஷ்ணாவுக்கும் இடையில் கிழக்கு வடிகால் பகுதியில் வேங்கி நாட்டைப் புலிகேசன் தனது தம்பியை அனுப்பி நிறுவினான். இந்தத் தொடர்பை நிரந்தரப்படுத்திக்கொள்ள ராஷ்டிரகூடர் விரும்பவில்லை; ஆகவே, அவர்களிடம் கடற்படையுங் கிடையாது.[4] கடற்படை கொண்ட சோழர்கள் வேங்கியைத் தங்களுக்குரியதாக்கிக்கொண்டார்கள்; வேங்கிக்குச் சென்றமர எண்ணிய கல்யாணிச் சாளுக்கியரோடு அவர்களுடைய நாட்டுக்குள் சென்று போர் செய்து அவர்களைத் தடுத்தார்கள்.

**(1) சோழர் – சாளுக்கியர் போராட்டம்—புவியியல் சார்பான அரசியல் முறையில் ஒரு விளக்கம் (Geopolitical Evaluation of Chalukya – Chola Military Rivalry)** : உள்நாட்டுப் பகுதியில் உள்ள மக்கள் கடற்கரை நோக்கிப் பாய்வதில் தனியார்வங் காட்டுகிறபோது அந் நாடு இதய மையநாடு (Heart Land) என்று வழங்கப்படும் என்றும், கடற்கரைப் பகுதி விளிம்புநாடு (Rim Land) என்று கணிக்கப்பட வேண்டும் என்றும், இதய மைய நாட்டிலுள்ளோர் விளிம்பு நாட்டைக் கைப்பற்றி அடக்குவதற்கான முயற்சியை இடையறாது மேற்கொள்வர் என்றும், இம் முயற்சியே உலகின் வரலாறாகக் கொள்ளப்படலாம் என்றும் மேக்கிண்டர் (MacKinder) என்ற ஆங்கிலவாசிரியர் புவியியல் அரசியல் முறைக் கோட்பாட்டினை முதன்முதலில் 1919-ல் வழங்கினார்.[5] அவர் கருத்துப்படி, கிழக்கு ஐரோப்பா என்ற இதய மைய நாட்டை ஜெர்மனி கட்டுப்படுத்தினால் உலக ஆதிக்கம் அவர்களுக்கு ஏற்படும்.[6] இந்திய உபகண்டத்தின் தென்

4 B. N. Puri—' History of Indian Administration'—Vol. I, 1968—p. 265.

5 Sir Halford MacKinder's book 'Democratic Ideals and Reality' — 1919.

6 Frederick L. Schuman—'New York'—1953—p. 277.

பகுதிக்குரிய அளவில் சோழர்கள் இதய மைய நாட்டினரான சாளுக்கியரைக் கிழக்குக் கடற்கரைப் பக்கம் சென்றடையத் தடுக்கின்ற முறையில் தங்களுடைய வெளிநாட்டுக் கொள்கையை இராணுவ வல்லாதிக்கத்திற்குரியதாக(military aggression)மாற்றி அமைத்தார்கள். ராஜராஜன் I இதைச் செய்தான். அவனுடைய மகன் ராஜேந்திரன் I தந்தையின் காலத்தில் தொடங்கிய வல்லடிப்போர்களைத் தொடர்ந்து நடத்தி, சாளுக்கியரை அவர்கள் நாட்டோடு அடக்கி வைக்கப் பெரு முயற்சி செய்தான். கி. பி. 1007-ல் இரட்டபாடிப் படையெழுச்சியோடு தொடங்கிய சோழரின் சாளுக்கியநாட்டுப் படையெடுப்புகள் 1068வரை ஓயாது நடைபெற்றதற்குக்காரணம்என்ன? சோழர்கள் தங்கள் வீரத்தைக் காட்டுவதற்காக என்று சொல்வது விஞ்ஞானப் பூர்வமான வரலாற்றுச் சிந்தனை ஆகாது. பேரரசு கட்டுகின்ற அரசியல் பேராவல் காரணமாகச் சோழர்கள் அவ்வாறு படையெடுத்துச் சென்றார்கள் என்றால், அத்தனை ஆண்டுகள் வரை தொடர்ந்து ஆதிக்கப் போர்களைத் தானாகவே நடத்தி இராமல் (offensive view) தடுப்பு முறைப் போரினைக் (defensive war) கைக்கொண்டிருக்கலாம். பீடபூமி விட்டுச் சாளுக்கியர் சமவெளிக்கு வரக்கூடாது என்ற புவியியல் அரசியலறக் கோட்பாட்டின் காரணமாக அவர்களோடு தடுப்புப் போரினை (preventive war) அவர்கள் மேற்கொண்டார்கள். சாளுக்கியரோடு சமாதானஞ் செய்கின்ற அளவில் சாளுக்கியரின் வலிமை சோழர்களின் வலிமையைவிடக் குறைந்து காணப்பட்டிருந்தால், ஒருவேளை சோழர்கள் போர்முடிவு செய்து இருக்கலாம். 'சமாதானத்தை நீவிர் விரும்பினால் போருக்கு ஆயத்தமாகுக' என்று பண்டைக் கால உரோமானியர் தம் அரசியலுக்குரிய இராணுவக் கொள்கையைக் கணித்தனர் ('Sivis pacem, para bellum'—'If you wish peace, prepare for war').[7] இக் கொள்கையின்படி, சோழர்கள் சாளுக்கியரைத் தலையெடுக்கவொட்டாமல் பார்த்துக் கொண்டார்கள்; அதன்மூலம் காவிரியின் சமவெளி நோக்கியோ, கிருஷ்ணா நதியின் முகத்துவாரம் நோக்கியோ போகவிடாமல் சாளுக்கியரைத் தடுத்து நிறுத்தி, தங்களுடைய நாட்டின் பாதுகாப்பையும் தென்னிந்திய நாடுகளுக்குள் நிலவ வேண்டிய அரசு வல்லமை சமநிலைக் (Balance of Power) கோட்பாட்டையும் நன்கு பேணிக்கொண்டார்கள்.

இதய மைய நாட்டினரான சாளுக்கியரிடமிருந்து மட்டுமல்லாமல் சோழர்களுக்குக் கடல்வழியாகவும் போட்டியாளர் வந்தனர். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் பெரு வலிமை பெற்ற

[7] Schuman—op. cit., p. 258.

ஸ்ரீவிஜயத்தாரின் கடற்படையைத் தேடிச் சென்று அழிக்க வேண்டிய அவசியத்தைச் சோழன் ராஜேந்திரன் உணர்ந்தான். தூரமும், பூகோளத் தடுப்புகளும் நிலத்துப் பகுதியிலுள்ள பேரரசுகளுக்குத்தான் இடைஞ்சலாக இருக்கும் என்றும், கடற் படை வலிமைகொண்ட பேரரசுக்குத் தூரம் என்பது ஒரு பிரச்சினை யாக அமையாது என்றும் அறிஞர் K. M. பணிக்கர் கூறுகிறார்.[8] கங்கை—கோதாவரி—கிருஷ்ணு—காவிரி—வைகை என்றவளவில் விரிந்து பரந்த நதிதீரத்துப் பேரரசு கட்ட முனைந்து நின்ற அவனுக்குக் கடற்படை கொண்டு தன்னுட்டைத் தாக்க வருகின்ற வலிமை பெற்றுவிட்ட ஸ்ரீவிஜயத்தார் கலிங்கத்தவரையும் வங்கத்தவரையும்விட ஆபத்தானவர்கள் என்ற கருத்துக் கொண்டும், சீனுவுடன் நடந்த வணிகத்தை ஸ்ரீவிஜயத் தாரின் போட்டியிலிருந்து பாதுகாக்க வேண்டிய அவசியத்தை முன்னிட்டும் கடாரப் படையெடுப்பு நிகழ்ந்தது ; கங்கைக்கரை வெற்றிக்குப்பின் கங்கை கொண்ட சோழன் என்ற பெருமையை நடைமுறை வெற்றியாக்கி, வெற்றி பெற்ற கீழைக் கடற்கரை நாடுகளை ஒருங்கிணைவு செய்து அந் நாளைய அரசியல் சம்பிர தாயத்தின்படி மேலாண்மையை (suzerainty) ராஜேந்திரன் நிறுவுவதற்குப் போதிய அவகாசம் வாய்க்காமல் போனதற்குக் கங்கைப் படையெழுச்சியை அடுத்து வந்த கடாரப் படை யெழுச்சியே காரணம் எனலாம். உள்நாட்டுப் பகுதியிலிருந்தும் கடல்கடந்தும் சோழ நாட்டுக்கு வரக்கூடிய அரசியல் எதிர்ப்பினைச் சரியான அரசியற்புலமையோடு கண்டறிந்த பெருமை ராஜேந்திர னுக்கு உரியது என்பதில் ஐயமெதுவுமில்லை. கடல் சார்ந்த வலிமைசேர் நாடு (Thassolacracy) என்றவளவில் வளர்ச்சியுற் றிருந்த ஸ்ரீவிஜயத்தார், ராஜேந்திரன் கடாரத்தைக் கைப்பற்றிய 100 ஆண்டுகள் கழித்து ஈழத்தின்மேல் படையெடுத்து வந்து அங்கு இறங்கினர். சோழர்காலம் 1279-ல் முடியும்வரை இப் படையெழுச்சி நிகழவில்லை என்ற தமிழக வரலாற்றுச் செய்தி ராஜேந்திரனுடைய புவியியல் அரசியற் சிந்தனையின் ஆழத் தையும், அது தன்னை இனங்காட்டி நின்ற கடார வெற்றியையும் சுட்டிக் காட்டும்.

தக்காணத்தை அடக்கி வைத்தால், தமிழகத்தின் தலை விதியை நிர்ணயிக்கலாம் என்ற எண்ணம் சோழர்க்கு ஏற்பட்டது போல வடபுலத்து மன்னர்களுக்கும் பரம்பரையாக ஏற்பட்டது. சமுத்திரகுப்தனுடைய படைகள் கடற்கரை ஓரமாகக் காஞ்சிவரை

8 K. M. Panikkar—op. cit., p. 11.

வந்து, பின்பு தக்காணத்தைத் தொடாது கிழக்குப் பகுதியிலேயே திரும்பிச் சென்றன. தக்காணம் வடபுலத்துக்கும் தென்பகுதிக்கும் இடையே கிடந்த புவியியல் முடிச்சாக விளங்கியது. 1279-ல் சோழர்கள் மறைந்த பின்பு 1294-ல் முஸ்லிம் அரசன் அல்லாவுதீன் தக்காணத்திற்குப் படையெடுத்து வந்தான். அவனுக்குப்பின் வந்த துக்ளக் தக்காண நாடுகளை வல்லடியாகப் பிடித்து அரசியலொற்றுமைப்படுத்தியதால் வந்த நேரடி விளைவாக 1336-ல் விஜயநகரப் பேரரசு சோழர்கள் பாதுகாத்த இந்து சமயத்தின் பாரம்பரியங்களைத் தாங்கி நிறுத்துகின்ற வரலாற்றுக் கடமையோடு தன்னை ஈடுபடுத்தியது. சங்க காலத்திய சோழர் களின் உறையூர் நெசவு ஆடைகளை உரோமானியர் வாங்கிய போது ஏற்பட்ட கடலோடுந்திறனுக்குரிய பாரம்பரியங்கள் அதே நெசவு ஆடைகளைச் சீனவை வாங்கச் செய்கின்ற சோழர்களின் முயற்சியில் காணக்கிடைத்தன. நெசவு ஆடைகளைத் தாங்களே உற்பத்தி செய்த குஜரத்து முஸ்லிம்கள் கீழைநாடுகளான பர்மா முதல் வியட்நாம், இந்தோனேஷியாவரை சென்று அங்குள்ள வாசனைத் திரவியங்களுக்குப் பண்டமாற்று செய்தார்கள். பின்பு ஐரோப்பிய நாடுகளில் குறிப்பாக இத்தாலியில் அத் திரவியங்களை விற்கத் தொடங்கியதால் அந் நாட்டு நகரங்கள் செழிப்புக் கொண்டு ஐரோப்பிய மறுமலர்ச்சிக்குரிய கேந்திரங்களாக மாறின. இஸ்லாத்தின் தெற்கு நோக்கி வந்த பரவுதலை விஜயநகரப் பேரரசு தடுத்து நிறுத்திக்கொண்டிருந்த வேளையில் குஜராத்தியரின் கடல்வழித் தொடர்பின் விளைவாக மலேயாவும் இந்தோனேஷியாவும் முஸ்லிம் நாடுகளாகிவிட்டன. இத்தனை வரலாற்று நிகழ்ச்சிகளும் சோழ நாட்டின் கடல்திறன் மங்கிப்போனதன் விளைவாக ஏற்பட்டவைதாம் என்பது சிறப்புச் செய்தியாகும். 'சோழநாடு சோறுடைத்து' என்பது போலச் சோழரின் வீழ்ச்சியில் உலகமனைத்துக்கும் பொதுவான வரலாறு பின்னிக் கிடப்பதையும் கொண்டு 'சோழநாடு உண்மையிலேயே வரலாறுடைத்து' என நாம் சொல்லலாம்.

இந்திய வரலாற்றை எழுதத் தொடங்குபவர்கள் 'கங்கை நதியிலிருந்து தொடங்குவது சரியன்று' என்றும், 'காவிரியின் படுகையின் வரலாற்றிலிருந்து தொடங்கினுல் நலமாகும்' என்றும் வழங்குகின்ற கருத்தினை வின்செண்ட் ஸ்மித் குறிப்பிடுகிருர் ; இக் கருத்துக்குத் தக்க இந்திய வரலாறு எழுதப்படத் தக்க சமயம் இன்னும் வாய்க்கவில்லை என்ற கருத்தை அவ்வறிஞர் அரை நூற்ருண்டுக்கு முன்பு வழங்கினுர்.[9] விஞ்ஞானத்தின் துணை

[9] V. A. Smith—'The Oxford History of India', 1958—p. 8,

கொண்டு வளர்கின்ற நம் நாட்டு வரலாற்றில் கங்கையைவிடக் காவிரியின் தொன்மை சரியான முறையில் எடுத்தாளப்படுகின்ற போது காவிரியின் மைந்தர்களான சோழர்கள் மேற்குத் தொடர்ச்சி மலை, காவிரிப்படுகை, வங்கக்கடல் போன்ற பூகோள அமைப்புகளைப் பயன்படுத்தி, தமிழ் நாகரிகத்தை வளர்த்த விதம் பூரணமான அழகோடு நிறைவு பெறும்.

# வமிசாவளிப் பட்டியல்கள்

## சங்ககாலச் சோழர்கள்

பெருநற்கிள்ளி I—கி. பி. 125
(நெடுஞ்சேரலாதன் I என்ற சேரனோடு போரிட்டு மாய்ந்தவன்; வேற்படைக்குத் தலைவன்)

|

இளஞ்சேட்சென்னி
('உருவப் பஃறேர் இளையோன்' என்றவளவில் நாட்டை ஆளாதவன்)

|

கரிகாலன்—கி. பி. 150—180
(ஆதன் II என்ற சேரனோடு போரிட்டவன்; காவிரிக் கரையை வலுப்படுத்தியவன்; சோழப் பேரரசை நிறுவியவன்)

|

நெடுமுடிக்கிள்ளி—கி. பி. 180—200
(நேரிவாயிற்போரில் தோற்றுப் பதவி இழந்து சேரன் செங்குட்டுவனின் உதவியுடன் அரசுரிமையைத் தன் தாயாதி நலங்கிள்ளியிடமிருந்து மீட்டவன்; புகார் நகரம் கடல்கோள்பட்டு அழிந்தது. காரியாற்றுப் போரில் மாய்ந்தான்.)

|

இளந்திரையன்
(தொண்டைமான் என்ற விருதுப் பெயருடன் பல்லவ அரச வமிசத்தை நிறுவியவன்)

நலங்கிள்ளி
(நெடுமுடிக்கிள்ளியோடு உள்நாட்டுப் போரை நிகழ்த்தியவன்)

நற்சோணை
(ஆதன் II சேரனை மணந்து சேரன் செங்குட்டுவனையும், இளங்கோவடிகளையும் பெற்றெடுத்தவள்)

பெருநற்கிள்ளி II—கி. பி. 200-க்குப் பின்புள்ள காலம்
('ராஜசூயம் வேட்ட' என்ற சிறப்புமொழி பெற்ற வேதவேள்வி ஆதரவாளன்; நலங்கிள்ளிக்கு இவன் என்ன உறவு என்று அறிவதற்கில்லை.)

|

கோச்செங்கணான்
(பெருநற்கிள்ளிக்கு என்ன உறவு என்று சொல்வதற்கில்லை; ஆலயங்களைக் கட்டிய சைவ சமயச் சார்புச் சோழன்)

|

நல்லியக்கோடன்

(மூலம்—Robert Sewell—HISI—1932, p. 340)

## பிற்காலச் சோழர்கள் — பேரரசு இருந்த காலம் 846 முதல் 1279 வரை
(மொத்தம் 434 ஆண்டுகள்)

1. விஜயாலயன், 846 — 871 (25 ஆண்டுகள்)
2. ஆதித்தன் I, 871 — 907 (36 ,, )
3. பராந்தகன் I, 907 — 955 (48 ,, )

ராஜாதித்தன்

4. கண்டராதித்தன், 955—957 (2)

5. அரிஞ்சயன், 957 (1)

7. மதுராந்தக உத்தமசோழன், 973—985 (12)

6. பராந்தகன் II (சுந்தர சோழன்), 957—973 (16)

ஆதித்தன் II (கரிகாலன்)

8. ராஜராஜன் I, 985 - 1014 (29)

9. ராஜேந்திரன் I 1014—1044 (30)

குந்தவை (விமலாதித்தன் மனைவி)

10. ராஜாதிராஜன் I 1044—1054 (10)

11. ராஜேந்திரன் II 1054—1063 (9)

அம்மங்கை தேவி = 12. வீரராஜேந்திரன் 1063—1069 (6)

13. அதிராஜேந்திரன் 1069—1070 (1)

ராஜராஜ நரேந்திரன்

மதுராந்தகி = 14. குலோத்துங்கன் I
1070—1122 (52)

- ராஜராஜன்
- மும்முடிச் சோழன்
- வீரசோழன்
- 15. விக்கிரம சோழன்
  1122—1135 (13)

16. குலோத்துங்கன் II
1135—1150 (15)

17. ராஜராஜன் II
1150—1173 (23)

18. ராஜாதிராஜன் II
1173—1178 (5)

19. குலோத்துங்கன் III
1178—1218 (40)

20. ராஜராஜன் III
1218—1256 (38)

21. ராஜேந்திரன் III
1256—1279 (23)

## ராஷ்டிரகூடர்கள்

தந்திவர்மன்
- இந்திரன் I
  - கோவிந்தராஜன் I
    - கார்க்கன் I
      - இந்திரன் II
        - 1. தந்திதுர்க்கன், c. 752—756
      - 2. கிருஷ்ணன் I 756—775
        - 3. கோவிந்தன் II 775—780
        - 4. துருவன் 780—792
          - 5. கோவிந்தன் III 792—814
            - 6. அமோகவர்ஷன் I 814—880

7. கிருஷ்ணன் II, 880—915

மகள்

முதல் மனைவி சேடியின் லக்ஷ்மி(கணவன் ஜகதுங்கன்)   2ஆம் மனைவி சேடி கோவிந்தம்மாள்

8. இந்திரன், III—915—927

9. அமோகவர்ஷன் II, 927—930   10. கோவிந்தன் IV 930—934/935

11. அமோகவர்ஷன் III 935—939

12. கிருஷ்ணன் III 939—966   13. கோட்டிகன் 967—972   நிருபமன்

மகன்   14. கார்க்கன் 972—973

15. இந்திரன் IV

## மேலைச் (கல்யாணி) சாளுக்கியர்கள்

1. தைலபன் II, 973—997

2. சத்யாசிரய இரிவபெதங்கா, 997—1008    தசவர்மன்

3. விக்கிரமாதித்தன் V<br>1008—1015    4. அய்யன அக்கதேவி<br>1015    5. ஜெயசிம்மன் II<br>1015—1042

6. சோமேஸ்வரன் I<br>1042—1068<br>(தலைநகர் மாற்றம்<br>மால்கெட்டிலிருந்து கல்யாணிக்கு)

7. சோமேஸ்வரன் II<br>1068—1076    8. விக்கிரமாதித்தன் VI<br>1076—1126    ஜெயசிம்மன் III

ஜெயகர்ணன்    9. சோமேஸ்வரன் III<br>1126—1138

10. பெரம ஜகதேகமல்லன் II<br>1138—1155    11. தைலபன் III<br>1155—1163    12. ஜகதேகமல்லன் III<br>1163—1183

13. சோமேஸ்வரன் IV<br>1184—1200

## போசளர் (1022—1342)

1. நிருபகாமன் (1022—1047)
2. விநயாதித்தியன் (1047—1098)
3. எறியங்கன் (1063—1100)

4. வல்லாளன் I (1100—1110)
5. விஷ்ணுவர்த்தனன் (1110—1152) உதயாதித்யன்
6. நரசிம்மன் I (1152—1173)
7. வல்லாளன் II (1173—1220)
8. நரசிம்மன் II (1220—1238)
9. சோமேஸ்வரன் (1233—1267)

10. நரசிம்மன் III (1254—1292)
11. வல்லாளன் III (1291—1342)
12. வல்லாளன் IV

இராமநாதன் (1254—1295)
விஸ்வநாதன் (1295—1300)

## முதல் பாண்டியப் பேரரசு

1. பாண்டியன் கடுங்கோன் (575—600)
2. மாறவர்மன் அவனிசூளாமணி (600—625)
3. செழியன் சேந்தன் ஜெயந்தவர்மன், (625—640)
4. மாறவர்மன் அரிகேசரி (640—670)
5. கோச்சடையன் ரணதீரன் (670—710)
6. மாறவர்மன் ராஜசிம்மன் I (710—765)
7. நெடுஞ்சடையன் பராந்தகன் (765—790)
8. ராஜசிம்ம பாண்டியன் (790—792)
9. வரகுண மகராசன் I (792—835)
10. சீமாறன் சீவல்லபன் (835—862)
11. வரகுணவர்மன் II (862—880) 12. பராந்தக பாண்டியன் (880—900)
13. ராஜசிம்ம பாண்டியன் II (900—920)
14. சோழர்களின் இடைக்கால ஆட்சி (920—946)
15. வீரபாண்டியன் (946—966)

